## முதலாவது,
## அருச்சுனன் சோகவத்தியாயம்.

[ஸ்ரீ வியாசபகவான் இருக்கு முதலிய நான்குவேதங்களை விபா
கஞ்செய்து அவற்றிலுள்ள ஐதரேய முதலிய அனேக சாகைகளில்
ஒவ்வொரு சாகைகளைப் பைலர், வைசம்பாயனர் முதலிய மாணுக்கர்
வாயிலாக விருத்தியாகும்படிசெய்து அவ்வேதார்த்தங்கள் அத்தியந்
தங்கூட மாகையால் அவற்றை யறிவதிற் சாமர்த்தியமில்லாத அதி
காரிகளின்மீது கருணைகூர்ந்து அவர்களைத் தருமாதிகளான சர்வ
புருஷார்த்தங்களையும் அடைவித்தற்பொருட்டு அந்தத் தருமாதிக
ளான சர்வபுருஷார்த்தங்களின் சாதனங்களையு முபதேசிப்பதான
லட்சஞ் சுலோகத்தோடு கூடின ஒரு பாரதமென்னும் பெயரினை
யுடைய இதிகாசத்தை யருளிச்செய்தனர்; அந்தப்பாரதமென்னு நாம
முடைய இதிகாசத்தின் மத்தியில் நட்சத்திரமாலையின் மத்தியிற்
சந்திரமண்டல மிருந்தாற்போல விருக்கும்படி அத்வைத ரூபமான
அமிர்தவருஷம் பொழிகின்ற எழுநூறு சுலோக ரூபமாய்க் கீதை
யென்றும், உபநிஷத்தென்றும் பெயரினையுடைய பிரமவித்தையை
ஸ்தாபனஞ் செய்தனர். பதினெட்டத்தியாய ரூபமான இந்தக் கீதை
யும் அவ்வாறத்தியாய ரூபமான மூன்று ஷட்கங்களால் முறையே கர்
மம், உபாசனை, ஞானமென்னும் மூன்று காண்டங்களாம். பிரதம
ஷட்க ரூபமான கர்மகாண்டத்தில் கர்மம், கர்மத்தின்றியாகம்
இவைகளின் நிரூபணமார்க்கமாக அனேகப் பிரகாரமான யுத்திக
ளால் துவம்பதார்த்தரூபமான கூடஸ்த சுத்தான்மாவை நிரூபணஞ்
செய்தனர். இரண்டாம் ஷட்கரூபமான உபாசனகாண்டத்தில் பக
வற் பக்தி நிஷ்டையின் வர்ணன ரூபமார்க்கமாகத் தற்பதார்த்த
ரூபமான பரமான்மாவை நிரூபணஞ்செய்தனர். மூன்றும் ஷட்கரூப
மான ஞானகாண்டத்தில் அந்தச் சோதித தத்துவம் பதார்த்தங்
களின் அபேதரூபமான மகாவாக்கியார்த்த நிரூபணஞ் செய்தனர்.
பதினெட்டத்தியாயங்களிற் பூர்வ பூர்வாத்தியாயங்களோடு உத்த
ரோத்தராத்தியாயங்கட்குள்ள சம்பந்தம் அவ்வவ்வத்தியாயங்கள் நிரூ
பணஞ் செய்யுங்காலையிற் சொல்லப்படும்.]

[திருதராஷ்டிரர் யுத்தத்திற் சந்தேகமுடையாய்த் தனக்கிதஞ்
செய்பவரான சஞ்சயரோடு வினவுகின்றார்.]

புண்ணிய பூமி யென்று புகழ்குரு பூமி தன்னி
னண்ணிய பின்னை நண்ணு தவர்களு நமரு மாங்குக்
கண்ணிய தெதனை யென்று கண்ணிலா வரசன் கேட்பத்
தண்ணிய வினிய சொல்லாற் சஞ்சய னுரைக்க லுற்றான்.

(இ-ள்.) (சஞ்சயரே) புண்ணிய பூமி என்று புகழ்=(வாசஞ்
செய்வது மாத்திரத்தாற் றருமத்தையும், தருமத்தின் பலத்தையு
மடையப்பண்ணுவதால்) தருமக்ஷேத்திரமென்று (சுருதியாதிகளில்)
ஸ்துதியாநின்ற—குருபூமிதன்னில்=குருக்ஷேத்திரத்தில்—நண்ணு
தவர்களும்=சத்துருக்களாகிய பாண்டுராஜாவின் புத்திரரும்,—நம
ரும்=நமது புத்திரரான துரியோதனுதியரும்—நண்ணிய பின்னை=
(யுத்தஞ்செய்வதில் இச்சையுடையவர்களாய் ஒன்ருய்க்) கூடின பின்
னர்—ஆங்கு=அவ்விடத்தில்—எதனைக் கண்ணியது என்று=என்ன
காரியத்தைக் கருதிச்செய்தனரென்று—கண் இலா அரசன் கேட்ப
=திருதராஷ்டிரர் கேட்க—தண்ணிய இனிய சொல்லால்=குளிர்ச்சி
யாயும், பிரியமாயுமுள்ள தனது வசனத்தால்—சஞ்சயன் உரைக்க
லுற்றான்=சஞ்சயர் சொல்லத்தொடங்கினார்,—எ - று.

உத்தமபூமி ரூபமான க்ஷேத்திரம் நெல்முதலிய அந்நங்களினுற்
பத்திக்கும், அவற்றின் விருத்திக்குங் காரணமாவதுபோலத் தரு
மத்தினுற்பத்திக்கும், அதன் விருத்திக்குங் காரணமாவதால், 'புண்
ணியபூமி' என்றும், குருதேசத்தினுள்ளே இருத்தலால் 'குரு
பூமி' என்றுங் கூறினர். யுத்தஞ்செய்வதில் இச்சையுடையவர்களா
ய்ச் சென்ற பாண்டு புத்திரரும், எனது புத்திரரும் எவ்வாறு யுத்
தஞ்செய்தனரென்று கேளாமல், 'கண்ணிய தெதனை' என்று கேட்
டதும், குருக்ஷேத்திரத்திற்குத் தருமக்ஷேத்திரமென்று விசேஷ
ணந் தந்ததும் பாண்டவர் பூர்வமே தர்மாத்மர்களாகையால் இரண்டு
பட்சத்திலு முளதாகும் இம்சையினுற் சனியாநின்ற அதர்மத்திற்
குப் பயந்தவர்களாய் யுத்தத்தினின்றும் நிவிர்த்தி யடைவர்களாகில்
நமது புத்திரர்க்கு அவசியமாக இராச்சியங் கிடைத்துவிடும்; அல்
லது, பூர்வஞ் சுபாவமாகவே பாபாத்மர்களாகிய நமது புத்திரர்க்குத்
தர்மக்ஷேத்திர ரூபமான குருக்ஷேத்திரத்தின் பிரபாவத்தால் அந்தக்
கரண சுத்தியுளதாய் அதனுற் பச்சாத்தாபமடைந்து பூர்வங்கபடமா
கக் கொண்டுள்ள இராச்சியத்தைப் பாண்டவரிடத்திற் கொடுத்து
விடுவர்களாகில் யுத்தமில்லாமலே நாசத்தை யடைந்தவராவரென்
னுங் கருத்தால் என்பது பெறப்படுகின்றது. (க)

[சஞ்சயர் விடைகூறல்.]

போர்முக மாகி நின்ற புல்லலர் படையைப் பார்த்துக்
கார்முக வுழுவ னுய கலைமறை யவனை நோக்கி
வார்முர சதிருந் தானை வாளர வுயர்த்த தோன்ற
லேர்முகின் முழக்க மென்ன வின்னண மியம்பு மன்றே.

(இ-ள்.) (திருதராஷ்டிரரே! யுத்தத்தி னாரம்பகாலத்தில்) போர் முகம் ஆகி நின்ற = திருஷ்டத்துய்மன் முதலிய சூரவீர புருஷர்களால் வியூகஞ் செய்யப்பட்டு) யுத்தமுகமாய் நிற்கின்ற — புல்லலர் படையைப் பார்த்து = தனது சத்துருக்களாகிய பாண்டவருடைய சேனைகளை (நேத்திரங்களாற் பிரத்தியட்சமாகப்) பார்த்து — (பின்) கார்முகம் உழவன் ஆய = வில்யுத்தத்தில் வீரனாகிய — கலை மறையவனை நோக்கி = துரோணாசாரியனைப் பார்த்து — வார் முரசு அதிரும் தானை = வாரால் (வரிந்து கட்டிய) முரசு முதலிய வாத்தியங்கள் முழங்காநின்ற சேனைகளையும், — வாள் அரவு உயர்த்த தோன்றல் = சர்ப்பக்கொடியையுமுடைய துரியோதனராஜன் — ஏர் முகில் முழக்கம் என்ன = அழகிய மேககெர்ச்சிதம்போல — இன்னணம் இயம்பும் = மேற்சொல்லப்போகின்ற இந்தப் பிரகாரஞ் சொல்லுவானாயினன், எ-று.

ஆன்று, ஏ - அசைநிலைகள். (உ)

[துரோணாசாரியனைச் சமீபித்துத் துரியோதனன் சொன்ன வசனத்தை இனிச் சொல்லுகின்றார்.]

[வேறு.]

வீமனையும் விசையனையு நிகர்தருபோர் வில்லாள
ரேர்மருவு சிலையபிம னுள்ளிட்டா ரெனப்பலருந்
தார்மருவு தலைவர்களாய்த் தலைப்பெய்த தானையினை
மாமருவு பெருந்தேரோய் பாரொன்று மறித்துரைப்பான்.

(இ-ள்.) போர் = யுத்தத்தில் — வீமனையும் விசையனையும் நிகர் தரு = வீமனையும், அருச்சுனனையுஞ் சமானமாகச் சொல்லப்பட்ட — வில்லாளர் = வில்லையுடைய (யியுதானனும், விராடனும், துருபதனும், திருஷ்டகேதுவும், சேகிதானனும், காசிராஜாவும், புருஜித்தும், குந்திபோஜனும், சைப்பியன் முதலிய) இராஜாக்களும், — ஏர் மருவு சிலை அபிமன் உள்ளிட்டார் எனப் பலரும் = அழகு பொருந்தியவில்லையுடைய அபிமன்னுள்ளிட்டவரொன்று சொல்லப்பட்ட * மகாரதரான அனேகவரசரும் — தார் மருவு தலைவர்கள் ஆய் = வெற்றிமாலை

* ஒருவனாகவே தனுசையுடைய பதினாயிரஞ் சூரவீரர்களோடு யுத்தஞ்செய்பவனும், சஸ்திர சாஸ்திரத்தில் அத்தியந்தங் குசலனும் ஆகிய புருஷனை மகாரதியென்பர். ஒருவனாகவே அளவிறந்த சூரவீரர்களோடு யுத்தஞ்செய்பவனும், சஸ்திர சாஸ்திரத்தில் அத்தியந்தங் குசலனும் ஆகிய புருஷனை அதிரதனென்பர். ஒரு சூரவீரனோடே யுத்தஞ்செய்பவனை ரதனென்பர்; அந்த ரதனினுங் குறைந்த பலமுடையவனை அர்த்தரதனென்பர்.



யையணிந்த படைத்தலைவர்களாய் — தலைப்பெய்த தானையினை = ஏகமாய்த் திரண்டுள்ள (பாண்டவர்களுடைய) சேனைகளை — மா மருவு பெரும் தேரோய் = குதிரைகள் பூட்டப்பட்ட மகத்தான இரதத்தையுடைய ஆசாரியரே — பார் என்று = (நீர்கண்ணுற்) பாருமென்று சொல்லி — மறித்து உரைப்பான் = பின்னுஞ்சொல்லுவானாயினான், எ-று.

[தனது சேனையிலுள்ள சூரவீரர்களைத் துரியோதனன் எண்ணிக் கூறுகின்றான்.]

[வேறு.]

கங்கை யாள்பெறு காதல னும்புக
ழங்கர் கோனென தாருயிர்த் தோழனு
நங்கள் வாழ்துணை நம்பியு நீயுமற்
றிங்கு வாழ்சயத் திரதன் கிருபனும்.

(இ-ள்.) கங்கையாள் பெறு காதலனும் = கங்கா புத்திரரான பீஷ்மரும், — புகழ் = (யாவரும்) புகழாநின்ற — அங்கர்கோன் எனது ஆர் உயிர்த்தோழனும் = அங்கதேசத்ததிபதியும், எனது பிராண சினேகிதனுமான கர்ணனும், — நங்கள் வாழ் துணை நம்பியும் = நமது செல்வத் துணைவனான அசுவத்தாமனும், — நீயும் = துரோணாசாரியரான நீரும், — இங்கு வாழ் = இங்கு வாழ்கின்ற — சயத்திரதன் கிருபனும் = சயத்திரதனும், கிருபாசாரியரும், — எ-று. மற்று - அசைநிலை. (௩)

இது * குளகம்.

[இதுவுமது.]

அன்றி யேயு மரசர னேகரால்
வென்றி யேதிரு வல்லது வேண்டல
ரொன்றி யேத மெமக்குறு மேலுயிர்
பொன்றி யேயது போக்குதன் மேற்கொண்டார்.

(இ-ள்.) அன்றியேயும் = (நீவிர்) அல்லாமலேயும் — அரசர் அனேகர் = அனேகவரசர் — வென்றியே திரு அல்லது வேண்டலர் = (எனக்குச்) சயமுளதாதலையே செல்வமாகவிரும்பி யிருக்கின்றனரல்லாமல் மற்றொன்றை விரும்புகிலர். [இதற்குக்காரணங்கூறுகின்றான்.] ஒன்று ஏதம் எமக்கு உறுமேல் = ஒருதோஷமானது எமக்குப் பொரு

* குளகம் - பலபாட்டொருவினைகொள்ளும்.

ந்துமாயின்—உயிர் பொன்றியே=தமது ஜீவனத்தைப் பொன்றுவித்தே—அது போக்குதல் மேல் கொண்டார்=அதைப் போக்குதலைத் தானே முக்கியமாக அபிப்பிராயப்பட் டிருக்கின்றார்கள்,—எ-று.

ஆல்-அசைநிலை.

'பொன்றி' என்றது, பிறவினை தன்வினையாய்வந்த வழுவமைதி.
(௬)

[இதுவுமது.]

எய்து மெங்கள் பிதாமக னேவலாற்
கைகொள் கின்ற கடற்படை கண்ணுறில்
வெய்ய வீமன் வியப்பொடு காத்திடு
மைவர் தம்படைக் காற்றவற் றாகுமோ.

(இ-ள்.) எய்தும்=(சேனாபதியாக)வந்த—எங்கள் பிதாமகன்=எமது பாட்டனாரான பீஷ்மாசாரியர்—ஏவலால் கைகொள்கின்ற=(தமது) பிரேரணையினால் இரட்சிக்கப்பட்டிருக்கின்ற—கடல் படை கண்ணுறில்—(எமது)சேனாசமுத்திரமானது பார்க்குங்கால்—வெய்ய வீமன்=கொடிய(யுத்தத்தைச்செய்யும்)வீமசேனனால்—வியப்பொடு காத்திடும்=(யாவரும்) அதிசயிக்கும்படி இரட்சிக்கப்பட்ட—ஐவர் தம் படைக்கு=பாண்டவருடைய சேனைக்கு—ஆற்ற அற்றாகுமோ=ஆற்றத்தக்கதாமோ,—எ-று.

தனது சேனை பதினோரக்குரோணி யாகலின் 'கடற்படை' என்றான். தனது சேனை பதினோரக்குரோணியாக விருக்க ஏழக்குரோணியாகிய பாண்டவசேனைக்கு 'ஆற்றவற்றாகுமோ' என்றிவ்வாறான வாக்குத் துரியோதனனுக் குதித்தது சர்வாந்தரியாமியாகிய பகவானது பிரேரணையினாலேயே என்க. (௮)

[இதனால் நீவிரெவரும் இப்போது இது செய்மினென்னும் துரியோதனனது வெகுமான வார்த்தையைக் கேட்ட பீஷ்மர் செய்த உச்சாகத்தைக் கூறுகின்றார்.]

மேல்வ குத்திவர்க் காமின் விரைந்தெனு
மேல்வை யிற்றிறல் யாதவர் சூழ்ந்திடுங்
கால்வ ளைத்த சிலைக்கங்கை யாண்மகன்
வால்வ ளைத்திர டன்னையும் வாய்வைத்தான்.



(இ-ள்.) மேல் வகுத்து=(நமது சேனாபதியான பீஷ்மபிதாமகர் யுத்தத்தின் அத்தியந்தாபினிவேசத்தால் முன்பின் பக்கங்களைப் பாராததலால்) இனி (எவ்வெத்திசையில் எவ்வெச்சேனைகள் நிற்க வேண்டுமோ அவ்வத்திசையில் அவ்வச்சேனைகளை) விபாகஞ்செய்து (நிறுத்தி நீங்களும் எவ்வெத்தானங்களில் எவ்வெவர் நிற்கவேண்டுமோ அவ்வத்தானங்களில் அவ்வவர் பிரியாமற் சாக்கிரதையாக நின்று)—விரைந்து இவர்க் காமின் எனும் எல்லையில்=சீக்கிரமாக இந்தப் பீஷ்மபிதாமகரை இரட்சித்துக்கொள்ளுங்களென்று துரியோதனன் சொல்லும்பொழுதில்—திறல் யாதவர் சூழ்ந்திடும்=வலியுடைய யாதவர்களாலும், (மற்றைப் படைகளாலும், படைத்தலைவர்களாலும் அரணாகச்) சூழப்பட்ட—கால் வளைத்த சிலை கங்கையாள் மகன=கடை வளைக்கப்பட்ட வில்லையுடைய கங்காபுத்திரரான பீஷ்மபிதாமகர்—திரள் வால் வளை தன்னையும்=(சிம்மநாதஞ் செய்து) திரண்ட வெண்சங்கத்தையும் — வாய்வைத்தான்=வாயில்வைத்தாராகி,—எ-று.

இது குளகம்.

'இவர்க்காமின்' என்று சொன்னது அவர் இரட்சிக்கப்படில் நாமும் இரட்சிக்கப்படுவே மென்னுங் கருத்தால். (௭)

[இதுவுமது.]

வஞ்சர் செய்த வினைமற லிக்குண
வெஞ்ச மம்விளைத் தென்னவும் வேந்தர்கோ
னெஞ்ச முண்மகிழ் வெய்தவு நேரலா
ரஞ்ச வுங்கனன் றார்த்தன ரார்க்கவே.

(இ-ள்.) வஞ்சர் செய்த வினை=வஞ்சகர்களான துரியோதனாதியர் (பாண்டவர்க்குச்) செய்த வஞ்சகத்தொழிலே—மறலிக்கு உண=நமனுக்கு (அவருயிர் உணவாக அவன்) உண்ணும்படி—வெஞ்சமம் விளைத்தது என்னவும்=கொடியயுத்தத்தை விளைத்ததென்று யாவருஞ் சொல்லவும்,—வேந்தர்கோன் நெஞ்சம் உள் மகிழ்வு எய்தவும்=மகாராஜனான துரியோதனனது மனமானது உள்ளே தற்கால சந்தோஷத்தை யடையவும், நேரலார் அஞ்சவும்=சத்துருக்களாயினோர் பீதியடையவும்—கனன்று ஆர்த்தனன்=சினந்து தொனித்தனர்; — ஆர்க்கவே = (பீஷ்மபிதாமகர் சிம்மநாதஞ்செய்து) சங்கத்தொனிசெய்ய,—எ-று. ஏ-ஈற்றசை. இது குளகம்.

விளைத்தது எனவும் எனற்பாலது, 'விளைத்தென்னவும்' என மருவியது. இரண்டு செய்யுளுங் குளகம்; ஆகலின், வாய்வைத்து ஆர்த்தனன் என மேலைச் செய்யுளோடும் ஒட்டுக. (அ)

[அந்தச் சேனாபதியாகிய பீஷ்மருடைய பிரவிர்த்தியின் பின்னர்த் துரியோதனனுடைய சேனைகளின் பிரவிர்த்தியையும், பாண்டவசேனைகளின் பிரவிர்த்தியையுஞ் சஞ்சயர் நிருபணஞ்செய்கின்றார்.]

[வேறு.]

ஆர்த்தன வளைக ளெங்கு மதிர்ந்தன பல்லி யங்கள்
போர்த்திரட் படைநின் றார்ப்பப் புவனமீ ரேழும் பூத்த
தீர்த்தனுந் தனது சங்கைச் செங்கையால் வாங்கிக் கொண்டு
கார்த்திரண் முழக்க மென்னக் கடல்கிளர்ந் தார்த்த தென்ன.

(இ-ள்.) (அந்தத் துரியோதனனுடைய சேனைகளில்) எங்கும் வளைகள் ஆர்த்தன=எவ்விடத்தும்(அனேக)சங்கங்கள் முழங்கின;—பல்லியங்கள் அதிர்ந்தன = (அனேக) வாச்சியங்கள் முழங்கின,—போர்த்திரள் படை நின்று ஆர்ப்ப=(இந்தப்பிரகாரம்) போர்முகமாகத்திரண்ட துரியோதனனுடைய சேனைகள் (அனேக சங்கங்களையும், பேரிமுதலான அனேக வாச்சியங்களையும்) நின்றுமுழக்க—புவனம் ஈரேழும் பூத்த=பதினாலுலகங்களையும் பெற்ற தீர்த்தனும்= ஸ்ரீ கிருஷ்ணபகவானும்—தனது சங்கை=(பாஞ்சஜந்யமென்னுந்) தனது திவ்வியசங்கத்தை—செம் கையால் வாங்கிக்கொண்டு=செந்தாமரைமலர்போன்ற திருக்கையிலெடுத்துக்கொண்டு—கார்த்திரள் முழக்கம் என்ன=சப்தமேகங்களுந் திரண்டு முழங்கினாற்போலவும், கடல் கிளர்ந்து ஆர்த்தது என்ன=சப்த சமுத்திரங்களும் பொங்கியெழுந்து முழங்கினாற் போலவும்,—எ-று. இதுவுங் குளகம். (கூ)

[வேறு.]

வைய மனைத்தையும் வாரிமுன் வைக்குஞ்
செய்ய திருப்பவ ளத்திடை வைத்தா
னைவ ரெனக்குயி ராதலி னாலே
யுய்வ துமக்கிலை யென்பதை யொத்த.

(இ-ள்.) வையம் அனைத்தையும்=பூமிமுழுதையும்—வாரிமுன் வைக்கும் = அள்ளி முற்காலத்து உண்ணுகிற்கும்—செய்ய திருப்பவளத்திடை வைத்தான்=சிவந்த பவளம்போன்ற திருவதரத்தில் வைத்துமுழக்கினார்;—[அந்தத்தொனியானது எப்படியிருந்ததென்னிற் சொல்லுகிறார்.] ஐவர் எனக்கு உயிர் ஆதலினாலே=பாண்டவர் எனக்குப் பிராணனாதலினாலே—உமக்கு உய்வது இலை என்பதை ஒத்த = (துரியோதனாதியரே) உமக்கு (இந்த யுத்தத்திற் றப்பி)ப் பிழைத்த லுளதாதலில்லை யென்று (அண்டகடாகமறியச்) சொன்னதை ஒத்திருந்தது,—எ-று.

ஒத்தது எனற்பாலது 'ஒத்த' என ஈறு குறைந்தது. (க0)

[இதுவுமது.]

[வேறு.]

தருமனடல் வீமனருச் சுனனகுல சகதேவன்
றிருமருவு விசயம்ப வுண்டரந்தே வதத்தமெழின்
மருவுறுசு கோடமணி புட்பகமென் றிடுமிவற்றி
னுருமனைய குரலெதிர்ந்தார் செவிபுதைப்ப வூதினர்.

(இ-ள்.) (ஸ்ரீ பகவான் சங்கத்தொனி பண்ணினபின்னர்) தருமன் = தருமனும்,—அடல் வீமன்=வலியுடைய வீமனும்,—அருச்சுனன் = அருச்சுனனும்,—நகுல சகதேவன்=நகுலனும், சகதேவனும்,—(முறையே) திரு மருவு விசயம்=மேன்மை பொருந்திய அனந்தவிஜயம்,—பவுண்டரம் தேவதத்தம்=பௌண்டரம், தேவதத்தம்,—எழில் மருவுறு சுகோடம்=அழகு பொருந்துகின்ற சுகோடம்,—மணிபுட்பகம் என்றிடும் = மணிபுட்பகமென்று நாமமிடப்பெற்ற—இவற்றின்=இச்சங்கங்களின்—உரும் அனைய குரல்=இடியை ஒப்பான தொனியை—எதிர்ந்தார் செவி புதைப்ப = சத்துருக்களின் காது செவிடுபடும்படி—ஊதினர்=தொனித்தனர்,—எ-று. (கக)

[இதுவுமது.]

[வேறு.]

ஒன்றலாதுபல வூதினார்கள்பல ருதும்வால்வளையி னோசைபோய், நின்ற கௌரவர்க ணெஞ்சையூடுருவி யஞ்சவானினு நிரம்பிமேல், வென்றி சேரமர்தொ டங்கும்வேலையினில் வெள்ளைமாநட வுதேரின்மே, னின்ற போர்விசய னென்று மாயனெதிர் நில்லலாமையொடு சொல்லுவான்.

(இ-ள்.) பலர்=காசிராஜா, மகாரதியான சிகண்டி, திருஷ்டத்துய்மன்முதலிய அனேகவரசரும்—ஒன்று அலாது=ஒன்றல்லாமல்

—பல ஊதினார்கள்=பல(சங்கங்களை வேறுவேறாகத்)தொனித்தனர்கள்.—ஊதும் வால் வளையின் ஓசை போய்=(அவர்கள்) தொனியாநிற்கும் வெண் சங்கங்களின் ஸ்ரேணிகளானவை சென்று—நின்ற கௌரவர்கள் நெஞ்சை ஊடுருவி = (யுத்தபூமியில் எதிரே) நின்ற குருகுலவேந்தர்களுடைய இருதயங்களைப் பேதித்து—அஞ்ச=அவர்கள்) அஞ்சும்படி—வானினும் நிரம்பி=ஆகாயத்திலும், பிருதுவியிலும் பிரதித்தொனி ரூபசப்தத்தாற்) பூரணமாய்—மேல் வென்றி சேர் அமர் தொடங்கும் வேலையினில்=பின் வெற்றியைப் பொருந்தும்படியான யுத்தத்தை ஆரம்பிக்குஞ் சமயத்தில்—வெள்ளை மா நடவு தேரின்மேல்=சுவேதாசுவங்களைப் பூட்டி நடத்தப்பட்ட இரதத்தின்மீது—போர் நின்ற விசயன்=(காண்டீபமென்னுந்தனுசைக் கையிலெடுத்துக்கொண்டு) யுத்தசன்னத்தனாய் நின்ற அருச்சுனன்—ஒன்று = ஒரு வசனத்தை—மாயன் எதிர்=ஸ்ரீ பகவான் எதிரே—நில்லலாமையோடு சொல்லுவான் = தளர்ச்சியுடனே சொல்லத் தொடங்கினான்,—எ - று. (௧௨)

[அருச்சுனன் வசனத்தை நிரூபணஞ் செய்கின்றார்.]

யாவர் போர்கருதி யெய்தினார்களெதி ரெய்திநின்றவிவர்
தங்களில், யாவ ரோடமர் தொடங்கலாமென வறிந்துகொள்
ளுமள வியாவையுங், காவல் பேணியவை தந்துபின்னவை
கரந்துகொண் டருள்செய் கண்ணனே, மேவ நீகடவு மாக்
கொடேரினை நிறுத்துவாயென விளம்பினான்.

(இ - ள்.) யாவர் போர் கருதி எய்தினார்கள்=(பீஷ்மதுரோணாதியான வீரருள்ளே) யாவர் எம்மோடு யுத்தஞ்செய்ய விரும்பி (இந்தரணபூமியில்) வந்தடைந்திருக்கின்றனர்;—எதிர் எய்தி நின்ற இவர்தங்களில்=எதிரே (இந்தரணபூமியில்) வந்தடைந்து நிற்கின்ற இவ்வீரர்களுள்ளே—யாவரோடு அமர் தொடங்கல் ஆம் என = (நாம்) எவர்களோடு யுத்தஞ்செய்ய ஆரம்பிக்கலாமென்று—அறிந்து கொள்ளும் அளவு=(எவ்வளவு காலபரியந்தத்தில் நான் நன்றாக) அறிந்துகொள்ளுவேனோ அவ்வளவுகாலபரியந்தம்—யாவையும்=எல்லாவுலகங்களையும்—தந்து=சிருஷ்டித்து—அவை காவல் பேணி=அவ்வுலகங்களை இரட்சித்து—பின் அவை கரந்து கொண்டருள்செய் கண்ணனே=பின் அவ்வுலகங்களைச் சம்மரித்துக்கொள்ளாநிற்கும் ஸ்ரீ-க



வானே—மேவ நீ கடவும் மாக்கொள் தேரினை = யான் விரும்ப(க்கருணையினால்) நீர் நடத்தும் அசுவங்களைப்பூண்டிருக்கின்ற எனது ரதத்தை—நிறுத்துவாய் என விளம்பினான்=(இரண்டு சேனைகளின் மத்தியில்) நிறுத்தக்கடவீரென்று அருச்சுனன் கூறினான்,—எ-று.

'யாவையுங், காவல் பேணியவை தந்துபின்னவை கரந்துகொண்டருள்செய் கண்ணனே, தேரினை நிறுத்துவாய்' என்று அருச்சுனன் ஸ்துதி பூர்வமாக ஆக்ஞாபித்தது, சுவாமியாகிய நம்மைக் கீழான சாரதித்தனத்தில் வைத்துப் பிரேரிப்பிக்கின்றனனெனத் திருவுளத்து முனிவுறா தருள்செய்தற் பொருட்டென்க. (௧௩)

[அதன்பின்னர் என்ன நிகழ்ந்ததென்னுந் திருதராஷ்டிரர் வினாவுக்குச் சஞ்சயர் கூறுகின்றார்.]

விளம்பு மவ்வளவின் மேகவண்ணனுமவ் வெள்ளைமாநடவு
தேரினைக், களங்கொ ளும்பரிசு நின்றதானைநடு வேகடாவியிது
காணெனா, வளங்கொள் கங்கைமக னாதியாகமுடி மன்னரி
யாவரையு முன்னுறாத், துளங்கு கின்றமொழி யோடுநெஞ்சி
னொடும் வல்லவாறுசில சொல்லினான்.

(இ - ள்) (திருதராஷ்டிரரே) விளம்பும் அவ்வளவில்=(இந்தப்படி அருச்சுனன்) பிரார்த்தித்தவுடனே—மேகவண்ணனும் = கார்வண்ணனான ஸ்ரீ பகவானும்—அவ்வெள்ளை மா நடவு தேரினை = சுவேதாசுவங்கள் பூட்டி நடத்தாநிற்கும் (அவ்வருச்சுனனது) இரதத்தை—களம் கொளும்பரிசு நின்ற தானை நடுவே கடாவி=போர்க்களமானது கொள்ளும்படி நின்ற இரண்டுசேனைகளின் மத்தியிற்செலுத்தி (பீஷ்மதுரோணர் முதலான அரசரெதிரே நிறுத்தி)—இது காண் எனா=(ஒன்றாய்த் திரண்டுள்ள) இந்தக் கௌரவசேனையை அருச்சுனா நீபாரென்றருளிச்செய்ய—வளம்கொள் கங்கைமகன் ஆதி ஆக=பெருமை பொருந்திய பீஷ்மர் முதலாக—முடி மன்னர் யாவரையும்=கிரீடத்தையுடைய (பந்துக்களான) அரசர்களெவரையும்—முன் உறா=(அருச்சுனன்) எதிரே (நன்றாகக்) கண்டு (கிருபையோடு கூடினவனாய்)—துளங்குகின்ற மொழியோடும் நெஞ்சினொடும்=தழுதழுத்தவசனத்தோடும், (கலங்குகின்ற) மனத்தோடும்—வல்ல ஆறு சில சொல்லினான் = தனது சக்தியளவில் (இனிச் சொல்லப்போகின்ற) சில வசனங்களை (ஸ்ரீ பகவான் எதிரே) சொன்னான்,—எ-று.

[இதுவுமது.]

[வேறு.]

தாவிலருந் தந்தையருந் தந்தையர்தந் தந்தையரு
மேவியுடன் பிறந்தாரு மெய்ஞ்ஞான மளித்தாரு
மாவியென நட்டாரு மான்றோரு மமர்க்களத்தே
மேவியவெம் பொருட்டாக வீடுவான் றொடங்கினர்.

(இ - ள்.) தாவில் அரும் தந்தையரும்=(பூரிசிரவனுதியரான) வருத்தமற்ற அரியபிதாக்களும்,—தந்தையர்தம் தந்தையரும்=பீஷ்மர், சௌமதத்தர் முதலிய பாட்டன்மாரும்,—மேவி உடன்பிறந்தாரும் = துரியோதனன் முதலிய சகோதரரும்,—மெய்ஞ்ஞானம் அளித்தாரும்=துரோணன், கிருபன் முதலிய ஆசாரியரும்,—ஆவி என நட்டாரும்=பிராணனைப்போலுஞ் சினேகிதரான அசுவத்தாமா, சயத்திரதன் முதலினரும்,- ஆன்றோரும்=அறிவுடையர்களான கிருதவர்மா, பகதத்தன்முதலிய சுகிருதுகளும், மற்றும் உபகாரஞ்செய்பவர்களான * மாதாமகன் முதலியபெரியோரும்—அமர்க்களத்தே=இந்த யுத்தபூமியில்—மேவிய எம் பொருட்டு ஆக=இராச்சியத்தை விரும்பிப் போர்புரிய) வந்த எமது காரணமாக—வீடுவான் தொடங்கினர் = (தமது) பிராணன்களை விடத்தொடங்கினர்,—எ-று.

[இதுவுமது.]

[வேறு.]

தீதறு சிறுவர்மற் றவர்கள் சேய்களு
மாதுல ரிவர்களோ மாய்கின் றாரெனக்
காதல்செய் திடரினாற் கலக்க முற்றவன்
மாதவ னெதிர்சில மறித்துங் கூறுவான்.

(இ - ள்.) தீது அறு சிறுவர் = குற்றமற்ற லட்சுமணன் முதலான புத்திரரும்,—மற்று அவர்கள் சேய்களும்=பின்னும் பௌத்திரரும்,—மாதுலர் = சல்லியன், சகுனிமுதலிய மாமன்மார்களும் (ஆகிய)—இவர்களோ மாய்கின்றார் என=இப்படிப்பட்ட பந்துக்களோ மாயப்போகின்றன ரென்று—காதல் செய்து=(அவர்களிடத்துக்) கிருபைசெய்து—இடரினால்=(அதனாலுளதாகுஞ்) சோகத்தி

* மாதாமகன்=மாதாவின்பிதா.



னால்—கலக்கம் உற்றவன்=மோகத்தையடைந்த அருச்சுனன்—மாதவன் எதிர்=ஸ்ரீ பகவான் எதிரே—சில மறித்தும் கூறுவான்=சில வார்த்தைகளை மீட்டுஞ் சொல்லுவானாயினான்,—எ - று. (கசு)

[அருச்சுனன் சோகத்தால் தன்னிடத் துளதாகுஞ் சின்னங்களை ஸ்ரீ பகவானிடத்திற் கூறுகின்றான்.]

[வேறு.]

வாயே யன்றி முகமலரா மனமொன் றுணர மாட்டாது
தீயே யென்ன வுடல்வெதும்புஞ் செவ்வே நிற்க மாட்டுகி
வேயே தருதிண் காண்டீப வில்லு நழுவி விழாநின்ற [லேன்
தாயே யனையாய் போர்நின்ற தமரைக்காணுந்தொறுமன்னே.

(இ - ள்.) தாயே அனையாய்=தாயையொப்பான ஸ்ரீ பகவானே—போர் நின்ற=யுத்தத்தில் (இச்சையோடுகூடி இந்த ரணபூமியில்) நிற்கின்ற—தமரைக் காணுந்தொறும்=பீஷ்மர் முதலிய எனது) உறவினரைப் பார்க்குந்தோறும்—வாயே அன்றி=வாக்கானது (செவ்வையாக வசனிக்க) வாராததுந்தவிர—முகம் மலரா=முகமானது மலர்ச்சியடையாமல் (வாடுகின்றது,)—மனம் ஒன்று உணர மாட்டாது=மனமானது ஒன்றை யறியமாட்டாமற் * சுழலுகின்றது,—தீயே என்ன உடல் வெதும்பும்=நெருப்பேயென்று சொல்லும்படிக்குச் சரீரமானது வெப்பமுற்றுவாடுகிறது,—செவ்வே நிற்க மாட்டுகிலேன் செவ்வையாக நிற்கச் சமர்த்த னாகிறேனில்லை,—வேயே தரு=மூங்கிலாலே செய்யப்பட்ட—திண் காண்டீப வில்லும்=திடமான காண்டீபமென்னுந் தனுசும்—நழுவி விழாநின்ற=(எனது அஸ்தத்தினின்றும்) நழுவிக் கீழே விழுகின்றது,—எ-று.

மன், ஏ - அசைநிலைகள்.

விழாநின்றது எனற்பாலது ஈறு குறைந்தது. 'தாயே யனையாய்' என்னுஞ் சம்போதனை, நீர் பந்துஜனங்களைக் கண்டு சோக மோகங்களை யடையாதிருப்பதுபோல உமது பக்தனான என்னையும் சோகமோக ரகிதனாகப் பண்ணவேண்டுமென்னுங் குறிப்பு. (கஎ)

* மனத்தின் சுழற்சி=மூர்ச்சைக்குப் பூர்வாவஸ்தை.

[இங்ஙனம் தான் பரவசமாதற்கு மற்றொரு காரணமுங் கூறுகின்றான்.]

ஓத லாகா நிமித்தங்க ளொன்றே யல்ல பலவுளவாங் [ஞு
காத லாரைக் கொன்றுபெறும் பயனே வொன்றுங் காணே
ஞுத லாலிவ் வென்றியுட னரசி னுரிமை யானதனை [யால்.
யேய்த லாவ தென்கின்ற தியாதின் பொருட்டோ வியம்பா

(இ-ள்.) ஓதல் ஆகா நிமித்தங்கள்=(சொற்பகாலத்திற் றுன்பமடைவதைச் சூசனை பண்ணுகிற்கும்) விபரீத நிமித்தங்கள்—ஒன்றே அல்ல பல உள ஆம்=ஒன்றுதானே யல்ல (இடது நேத்திரந் துடிப்பது முதலிய) பலவுளவாக அனுபவிக்கின்றேன்.—[சர்மப்பிரவிர்த்திக்குக் காரணமாகிய ஞானத்தைப் பிரதிபந்தஞ் செய்யாநிற்குஞ் சோகத்தைப் பூர்வம், "வாயேயன்றி முகமலரா" என்பன முதலிய லிங்கவாயிலாக நிருபணஞ்செய்து இனிச் சோகத்தினு லுளதாகும் விபரீதப் பிரவிர்த்திக்குக் காரணரூபமான விபரீத புத்தியை நிருபணஞ் செய்கின்றான்.] (ஸ்ரீ பகவானே இந்த யுத்தத்தில்) காதலாரைக் கொன்று=(பீஷ்மர்முதலிய) பந்தஜனங்களைச் சம்மரித்து—பெறும் பயனே=அடையாநின்ற பிரயோஜனமோ—நான் ஒன்றும் காணேன்=யாதொன்றுங் கண்டிலேன்.—[யுத்தத்திற் பந்துஜனங்களைச் சம்மரிப்பதனுல் விஜயம், இராச்சியம், விஷயசுகம் ஆகிய திருஷ்டமான பிரயோஜனங்கள் உனக்குளவாமேயென்னும் ஸ்ரீ பகவான் சங்கைக்கு அருச்சுனன் சொல்லுகின்றான்.] ஆதலால்=(பந்துவதத்தால் பிரயோஜனங் காணப்படாமையின் விஜய முதலியவற்றில் எனக்கு இச்சையோ இல்லை;) ஆதலினுல்,—இவ்வென்றியுடன்=இச்சத்துரு ஜயத்துடனே கூட—அரசின் உரிமையானதனை=அரசாட்சியை—எய்தல் ஆவது என்கின்றது=(யுத்தத்தால் நீ) அடைதல் (பிரயோஜனமாக உனக்கு) உளதாமென்று நீர் சொல்லுகின்றது—யாதின் பொருட்டோ = யாதுநிமித்தமோ — இயம்பாய் = (அதனை) அருளிச்செய்வீராக, எ - று.

ஆல் - அசைநிலை. (கஅ)

[விருத்தரான மாதா, பிதா முதலிய சம்பந்திகளின் பாணபோஷணத்தின் பொருட்டுப் புருஷன் அதர்மத்தைச் செய்யினும் அது தோஷத்தின் பொருட்டாகாதென்று மனுபகவான்கூறியிருப்பதால் உனக்கு இராச்சியாதிகளின் இச்சையில்லையாயினும் உனது சம்பந்திகளின்பொருட்டு நீயுத்தத்திற் பிரவிர்த்திக்க வேண்டுமென்னும் ஸ்ரீ பகவான் சங்கைக்கு அருச்சுனன் கூறுகின்றான்.]



அரசவ் வரசால் வரும்போக மதனு லின்ப மெய்து
மென,வுனாசெய் பொருள்கள் யாவர்சிலர் பொருட்டா லுலக
ருழந்தடைவர், வரைசெய் புயனே மற்றவர்தம் பொருளுந்
தங்கள் வாழ்நாளு, நிரைசெய் தொருவ ரொருவரின்முன்
னிற்க வந்து நின்றாரால்.

(இ - ள்.) வரைசெய் புயனே = மலையையொப்பான புஜத்தையுடைய ஸ்ரீ பகவானே—அரசு = இராச்சியம்,—அவ்வரசால் வரும் போகம்=அவ்விராச்சியத்தால் வரும்போக ஏதுவான விஷயம்,—அதனுல் எய்தும் இன்பம் என உரைசெய் பொருள்கள்=அவ்விஷயத்தா லடையப்படுஞ் சுகமென்று சொல்லப்படும் பொருள்களை—யாவர் சிலர் பொருட்டு=யாவர் சிலரின் (பாணபோஷண) நிமித்தமாக—உலகர்=உலகிலுள்ளோர்—உழந்து அடைவர்=பிரயாசமுற்றடையாநிற்பரோ—மற்றவர் = மற்றவர்களே—தம் பொருளும் = தமது தனங்களிலும்,—தங்கள் வாழ்நாளும் = தமது ஜீவனத்திலும்—நிற்க வந்து=(ஆசையைப்) பரித்தியாகஞ்செய்துவந்து—நிரை செய்து=வரிசையாக—ஒருவர் ஒருவரின் முன் நின்றார்=ஒருவரொருவர் முன்னே நின்றனர்,—எ-று. ஆல், ஆல்-அசைநிலைகள்.

'யாவர் சிலர்' என்றது ஆசாரியர், பிதா, பிதாமகர், புத்திரர் பௌத்திரர் முதலியோரை. (கக)

[இதுவுமது.]

ஆனபொருளீ தாதலினு லவரைக் கொன்று லருள்சேரா,
தின மன்றி யெங்களுக்கோ ரின்ப மெங்கு மில்லையாற்,
கூன வரிவிற் கொண்டென்னைக் கொலினு மவரை யான்கோ
றல், வானம்பெறினு மாட்டேனுன் மண்ணின் பொருட்டால்
வல்லேனே.

(இ - ள்.) ஆன பொருள் ஈது ஆதலினுல்=(பந்துஜனங்களோடு யுத்தஞ்செய்வதால்) உளதாவதான பிரயோஜனமானது இதுவேயாதலால்—அருள் சேராது=கிருபையோடு கூடாமல்—அவரைக் கொன்றால் = அப்பீஷ்ம துரோணாதியரைக் கொல்லில்—எங்களுக்கு=எமக்கு—ஈனம் அன்றி=தோஷமுளதாதலே யன்றி—ஓர் இன்பம்=ஓர் சுகமானது—எங்கும் இல்லை=எவ்விடத்தும் உளதாதலில்லை.—[கிருபையினுல் நீபீஷ்மதுரோணாதியரைக் கொல்லாவிடினும் பீஷ்மர் துரோணாதியர் இராச்சியலோபத்தால் உங்களை அவசியங் கொல்லா

நிற்பர்; ஆதலால், நீயே இவர்களைக் கொன்று இராச்சியத்தை யனுபவிக்கக்கடவாயென்னும் ஸ்ரீ பகவான் சங்கைக்கு அருச்சுனன் கூறுகின்றான்.] கூன வரி வில் கொண்டு=வளைவாகவரிந்து கட்டிய வில்லைக்கொண்டு—என்னைக் கொலினும்=(பீஷ்மதுரோணாதியர் இராச்சியலோபத்தால்) என்னைக்கொன்றாலும்—அவரை யான்=அப்பீஷ்மதுரோணாதியரை நான்—வானம் பெறினும்=சுவர்க்க (மத்தியபாதாளமென்னும் மூ)வுலகை அரசாளப்பெறினும்—கோறல் மாட்டேன்=கொல்லுதல்செய்யமாட்டேன்;—நான்=இப்படிப்பட்டயான்—மண்ணின் பொருட்டால் = பிருதுவி மாத்திரத்தின் (அரசாட்சியின்) பொருட்டினால் — வல்லேனோ = கொல்லவல்லேனோ? (அல்லன்,) எ-று. (௨௦)

ஆல்-அசைநிலை.

[அருச்சுனா! நீ ஆசாரியர் முதலாயினோரைக் கொல்லுவதில் தோஷமுளதாமென்றெண்ணிடில் அவர்களைக் கொல்லாமல்விட்டு அரக்குமாளிகையில் தீக்கொளுத்தினது முதலானவற்றால் வெகுவிதமான தாருண துக்கங்களை உங்கட்குக் கொடுத்த துரியோதனாதியரைக் கொன்றதால் தோஷமென்னை யென்னும் ஸ்ரீ பகவான் சங்கைக்கு அருச்சுனன் கூறுகின்றான்.]

கொற்றவர்தங் குலங்கெடுத்தால் வருகின்ற குற்றமுமெய்
யுற்றவர்தந் திறம்பிழைத்தா லுறுகின்ற வுயர்பழியு
மற்றவர்க ளறியாது மறந்திடுக மறந்தாலுங்
குற்றமென வறிந்தநான் குறிக்கொள்ளா தொழிவேனோ.

(இ - ள்.) கொற்றவர்=அரசரானோர்—தம்குலம் கெடுத்தால்=தமது குலமானது நாசமாகும்படி பண்ணினால் — வருகின்ற குற்றமும்=வந்தடையாநின்ற தோஷத்தையும்,—மெய் உற்றவர்தம் திறம் பிழைத்தால்=மெய்மையான மித்திரரிடத்துத் துரோகம் பண்ணினதால்—உறுகின்ற உயர் பழியும்=அடைகின்ற மிகுந்த பாதகத்தையும்—மற்று அவர்கள்=*ஆததாயிகளான துரியோதனாதியர்—அறியாது மறந்தாலும் மறந்திடுக=விசாரித்தறியாமல் மறந்தாலு மறக்கக்கடவர்—குற்றம் என அறிந்த நான்=(குலக்ஷயமும், மித்திரதுரோகமுங்) குற்றமென்று விசாரித்தறிந்த யான்—குறிக்கொள்ளாது ஒழிவேனோ=மனத்தின்கட் கொள்ளா தொழிவனோ,—எ-று.

ஆததாயிகளைக்கண்டமாத்திரத்திற் கொல்லலாமென்றுசாஸ்திர வசனமிருந்தாலும் அங்ஙனங்கூறுகிற்பது அர்த்தசாஸ்திரம்; அதைப் பார்க்கிலும் பிரபலமான தர்மசாஸ்திரத்தில் பிராணிமாத்திரத்திற்கு இம்சையை நிஷேதித்திருப்பதால் பந்துஜனங்களாகிய துரியோதனாதியரைக் கொல்லலாகாதென்பது அருச்சுனன் கருத்து. (௨௧)

[யுத்தம் பண்ணலாகாதென்று பூர்வந் தான் சொல்லிய பொருளைத் திடப்படுத்துதற்பொருட்டு யுத்தத்தால்வரும் அனர்த்த பரம்பரையை இனி வர்ணிக்கின்றான்.]

குலங்கெடவே வருகின்ற குலதருமங் கேடுறுமந்
நலங்கெடவே குலம்பாவ நண்ணுமது நண்ணவே
யிலங்கிழையார் நெறிதிரிவ ரிவர்கணெறி திரியவே
தலங்குலவு குலமெல்லாந் தலைதடுமா றாகுமால்.

(இ - ள்.) குலம் கெடவே=குலமானது நாசமாகவே—வருகின்ற=(பரம்பரையாகவனுஷ்டித்து) வருகின்ற—குல தருமம் கேடு உறும்=குலத்தின் சர்வதர்மங்களும் நாசத்தை யடையாநிற்கும்;—அந்நலம் கெடவே=அந்தத்தர்மமானது நாசமாகவே—குலம் பாவம் நண்ணும்=(சிட்சிக்கத்தக்கவிருத்த புருஷரில்லாமையினால் சேஷமாயிருந்த ஸ்திரீ, பாலராதிரூபமான) குலத்தை (அனாசாரரூபமான) அதர்மமானதுவந்து (தனது) வசம்பண்ணிக்கொள்ளும்;—அது நண்ணவே = அதர்மமானதுவந்து (தனது) வசம்பண்ணவே—இலங்கு இழையார் நெறிதிரிவர்=விளங்காநின்ற ஆபரணத்தையுடைய குலஸ்திரீகளெவரும் வியபிசாரிகளாவர்; — இவர்கள் நெறி திரியவே=இவர்கள் வியபிசாரிகளாகவே—தலம் குலவு குலம் எல்லாம்=உலகிற்பொருந்துகின்ற குலமுழுதும்—தலை தடுமாறு ஆதும் = (ஒழுங்குதவறி) வருணசங்கரமாம்,—எ-று. ஆல் அசைநிலை.

வியபிசாரிகளான ஸ்திரீகளிடத்தில் வருணசங்கரபுத்திரர் உற்பன்னமாவர் என்றபடி. (௨௨)

[இதுவுமது.]

தடுமாற்ற மக்குலத்தே சார்ந்தவர்க்குஞ் சாராதே
கெடுமாற்ற நினைந்தவர்க்கும் கெடாநிரயங் கிடைப்பிக்கும்
படுமாற்ற மென்னுரைக்கேன் பண்டிறந்தோர் களுந்தமக்கொ
றிடுமாற்ற லவர்கள்பெறா திருணரகத் திழிவர்களால். [ன்

* அக்கினியிடுபவன், விஷமிடுபவன், சஸ்திரபாணியாய்க் கொல்லவந்தவன், பரதனத்தை அபகரிப்பவன், பாருடைய பூமியை அபகரிப்பவன், பாருடைய ஸ்திரீயை அபகரிப்பவன் இவ்வறுவரும் ஆததாயிகளென்று சொல்லப்படுவர்.

(இ-ள்.) தமோற்றம்=வருணசங்கரமானது—அக்குலத்தே சார்ந்தவர்க்கும்=அந்தக்குலத்திற் பொருந்தினவருக்கும், — சாராது=பொருந்தாமல்—கெடும் ஆற்றல் நினைந்தவர்க்கும்=(குலங்) கெடும்படியான செயலைக் கருதிச் செய்தோர்க்கும்—கெடா நிரயம் கிடைப்பிக்கும்=கெடாத நரகத்தை யடைவிக்கும்; — படும் மாற்றம்=(மேலும் அவ்வருணசங்கரத்தால்) உளவாகாநிற்குந் துன்பங்களை—என் உரைக்கேன்=என்னென்று(வரையறுத்துக்)கூறவேன்.—பண்டு இறந்தோர்களும்=பூர்வமே இறந்து (சுவர்க்கத்தை யடைந்து)ள்ள (இவரது)பிதிரரும்—தமக்கு ஒன்றிடும் ஆற்றல் அவர்கள் பெறுது=தமக்குப் பொருந்தாநிற்கும் பிண்டக்கிரியை, சலக்கிரியைகளைச் செய்யாநிற்கும் புத்திரரைப்(பின்னர்ப்)பெறுமையின்—இருள் நரகத்து இழிவர்கள்=(சுவர்க்கத்தினின்றும்) இருண்டநரகங்களில் வீழாநிற்பர்,—எ - று. ஆல், ஏ - அசைநிலைகள். (௨௩)

[இதுவுமது.]

[வேறு.]

வாரா நின்ற குலமயங்கப் பண்ணி ஞர்க்கு மற்றதனைச்
சாரா நின்ற குலத்திற்குந் தருமந் தளர்ந்து சாயுமாற்
சாரா நின்ற சாதிகுல தருமந் தளர்ந்து சாயவே
பேரா நிரய மெய்துமெனப் பெரியோ ரெல்லாம் பேசுவரால்.

(இ - ள்.) வாராநின்ற குலம்=(பரம்பரையாய்) வாராநின்ற குலமானது—மயங்கப் பண்ணிஞர்க்கும்=சங்கரமாகும்படி பண்ணின குலநாசகருக்கும்,—மற்று அதனைச் சாராநின்ற குலத்திற்கும் = சங்கரத்தைப் பொருந்தி நிற்கின்ற குலத்திலுள்ளவருக்கும் — தருமம் தளர்ந்து சாயும் = தர்மமானது குறைந்து கெடும்;— சாராநின்ற=(சுருதி, ஸ்மிருதி மூலமாயும், பரம்பரையாயும்) அடைந்திருக்கிற—சாதிகுலதருமம் = ஜாதிதர்மம், குலதர்மங்கள் — தளர்ந்து சாயவே=குறைந்துகெடவே—(இவர்க்கு) பேரா நிரயம் எய்தும் என = மீளாத நரகமானது பொருந்துமென்று—பெரியோர் எல்லாம் பேசுவர்=பெரியோர் யாவருங் கூறுவர்,—எ - று.

ஆல், ஆல் - அசைநிலைகள். (௨௪)



[குணதோஷங்களை யறிபவனாக விருந்தும் இப்படிப்பட்ட யுத்தஞ்செய்ய நிச்சயித்ததால் தன்னை நிந்திப்பவனாய் அருச்சுனன் இப்போது கூறுகின்றான்.]

மின்னே யனைய செல்வத்தை வேண்டித் தங்கண் மெய்யுயிரைக், கொன்னே கழிக்க நின்றவரைக் கொல்லத் துணிந்த கொடுவினையே, னென்னே கொடிய பெரும்பாவ மெய்த நினைந்தேன் யானுமிவர், முன்னே படைவிட் டமர்துறந்து நின்று லிவர்கண் முனிவாரோ.

(இ - ள்.) மின்னே அனைய = (தோன்றியழியாநின்ற) மின்னையே யொப்பான—செல்வத்தை வேண்டி = இராச்சிய சுகத்தை யிச்சித்து—தங்கள் மெய் உயிரை=தமது சரீரவாயுவை—கொன்னே=வீணாகவே—கழிக்க நின்றவரை=போக்கும்பொருட்டு வந்து நிற்கின்ற (எனது பந்து ஜனங்களாகிய) துரியோதனாதியரை—கொல்லத் துணிந்த=கொல்லும்படி நிச்சயித்த—கொடுவினையேன் = கொடும்பாவியாகிய யான்—என்னே = மகா ஆச்சரியம்—கொடிய பெரும்பாவம் எய்த நினைந்தேன் = கொடுமையான பெரும் பாவத்தை யடையும்படி கருதினேன்.—யானும்=நானும்—இவர் முன்னே = (ஆயுதபாணிகளான) இத்துரியோதனாதியரெதிரே—படைவிட்டு=(ஆயுதங்களை யெடாதொழித்து—அமர் துறந்து= *பிரதீகாரயுத்தஞ் செய்யாதவனாய்—நின்றால்=நிற்கில்—இவர்கள்=இத் துரியோதனாதிகள்—முனிவாரோ = துவேஷத்துடனே (என்னைக்) கொல்லுவரோ? (கொல்லார்.)—எ-று. (௨௫)

[இதுவுமது.]

[வேறு.]

கொல்லினு மெனக்கிது பொறுக்கைகுண மென்றே
கல்லினிகர் தோள்விடலை கண்ணனெதிர் கூறி
வில்லினுட னேபகழி சோரவிழி சோரச்
செல்லுபணி யாழியணி தேர்மிசை யிருந்தான்.

(இ-ள்) சொல்லினும்=(அப்படிக்கன்றிக்) கொன்றாயினும்—எனக்கு=(குணதோஷங்களை விசாரித்தறியாநின்ற) எனக்கு—இது

* பிரதீகாரம்=அடிக்கும் புருஷனை எதிர்த்தடித்தல்.

பொறுக்கையே=இக்கொலையைச் சகித்துக்கொள்ளுதலே—குணம்=க்ஷேமதரமாம்;—[இனிச் சஞ்சயர் திருதராஷ்டிரரைக் குறித்துக் கூறுகின்றார்.] என்று=என்றிந்தப்பிரகாரம்—கல்லின் நிகர் தோள் விடலை=மலையையொப்பான புஜங்களையுடைய ஆண்மகனான அருச்சுனன்—கண்ணன் எதிர் கூறி=ஸ்ரீ பகவான் எதிரே (தனது அபிப்பிராயத்தைச்) சொல்லி—வில்லின் உடனே பகழி சோர=வில்லோடு கூடப் பாணமானது நழுவிவிழவும்,—விழி சோர=கண்களில் நீரரும்பவும்—செல்லும் மணி ஆழி அணி=ஓடாநின்ற மணிகளையுடைய உருளைகள்பூண்ட—தேர்மிசை இருந்தான்=இரதத்தின்மீதிருந்தனன்,—எ-று.

ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. (உக)

முதலாவது

## சோகவத்தியாயம்

முற்றிற்று.

---

ஆகப் பாயிரமுள்படத் திருவிருத்தம்-௩௦.

---

## உ-வது, சாங்கியயோகவத்தியாயம்.

[அகிம்சையும், பிட்சாசனமுமே பரமதர்மமாமென்னும் புத்தியினால் யுத்தத்தினின்றும் அருச்சுனன் பராமுகமாயினனெனப் பூர்வஞ் சஞ்சயர் முகத்தாற்கேட்ட திருதராஷ்டிரர் நமது புத்திரர்க்கே இராச்சிய நிலைத்துவிடுமென்றெண்ணிச் சந்தோஷமெழப்பெற்றதைச் சஞ்சயரறிந்து அத்திருதராஷ்டிரருடைய துராசையை நிவர்த்திப்பிப்பவராய்ப் பின்னிகழ்ந்ததைக் கூறுகின்றார்.]

இவ்வண்ண மறிவொதுங்க வெழுகின்ற விரக்கத்தாற்
செய்வண்ண மறியாது திகைத்திருந்த தேர்விசய
னுய்வண்ண மதுநாடி யொருவண்ண முலகோதுங்
கைவண்ண மலருடைய கார்வண்ணன் கட்டுரைப்பான்.

(இ-ள்.) (திருதராஷ்டிரரே) இவ்வண்ணம் அறிவு ஒதுங்கப் பூர்வாத்தியாயத்திற்சொல்லியபிரகாரம்கிருத்தியாகிருத்திய விவேகமானது விலகும்படி—எழுகின்ற இரக்கத்தால்=(பீஷ்மதுரோணாதியர்விஷயமாக)உண்டாகின்ற சிநேகரூபமான கிருபையினால்—செய் வண்ணம் அறியாது=(தான்) செய்யும்படியான கிருத்தியத்தையறியாமல்—திகைத்துத் தேர் இருந்த விசயன்=(கண்ணீர்சுரப்பச்) சோகத்தையடைந்து தேரிலிருந்த அருச்சுனனானவன்—உய் வண்ணம் அது நாடி=(அச்சோக மோகங்கள் நீங்கி) ஈடேறும்படியான அனேகயுக்திகளைத் திருவுளத்தில்நாடி—ஒருவண்ணம் உலகு ஓதும்=சச்சிதானந்த அகண்டைகரசமாக உயர்ந்தோர்களாற் றுதிசெய்யாநிற்கும்—மலர்வண்ணம் கை உடைய கார்வண்ணன்=செந்தாமரைமலர்போலுந் திருக்கரங்களையுடைய மேகவண்ணரான ஸ்ரீ கிருஷ்ணபகவான்—கட்டுரைப்பான்=உறுதிப்படவருளிச்செய்வாராயினார்,—எ-று. (க)

[ஸ்ரீ பகவான் அருச்சுனனைப் பார்த்து அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

ஆயா தவர்க்கு மலிகட்கு மடுப்ப தழியாப் பழியுனது,
தேயா வறிவைத் தேய்ப்பதறச் சிறுமை களிலே சிறுமை
யது, சாயா நரகத் திடைசாய்ப்ப துன்போல் பவர்க்குத் தகுதி
யன்றீ, தேயா நிலத்தே யுனையையா வெவ்வா றடைந்த தென
வறியேன்.

(இ-ள்.) ஐயா=அருச்சுனா—ஈது=இந்த மோகமானது—ஆயாதவர்க்கும்=அவிவேகிகளுக்கும்,—அலிகட்கும்=பேடிகளுக்கும்—அடுப்பது=கிட்டுவது,—அழியாப் பழி=கெடாததுர்க்கீர்த்தியைத் (தருவது,)—உனது தேயா அறிவைத் தேய்ப்பது=உன்னுடைய குறையாத (கிருத்தியாகிருத்திய) விவேகஞானத்தைக்குறைப்பது,—சிறுமைகளிலே அறச்சிறுமையது=துன்பத்தைப் பயக்கத்தக்கவைகளுள்ளே மிகவுந் துன்பத்தைப் பயக்கத்தக்கது,—சாயா நரகத்திடை சாய்ப்பது=கெடாத நரகத்திற்றள்ளத் தக்கது,—உன்போல்பவர்க்குத் தகுதி அன்று—உன்னைப்போன்ற க்ஷத்திரியருள்ளே சிறந்த புருஷர்க்குக் கூடாதது;—தேயா நிலத்தே=பொருந்தக்கூடாததான இந்த யுத்தபூமியிலே—உனை அடைந்தது=உன்னை (இம்மோகமானது பொருந்தினது—எவ்வாறு என அறியேன்=எந்த வழியினாலென்று (யான்) அறிகிலேன்,—எ-று.

யுத்த ரூபமான சுதர்மத்தின் நிவிர்த்தி ரூபமான இம்மோகமானது உன்னைமோட்சத்தின் இச்சாரூபமான எதுவினாலடைந்ததோ!

அல்லது, சுவர்க்கத்தின் இச்சாரூபமான ஏதுவினா லடைந்ததோ! அல்லது, கீர்த்தியின் இச்சாரூபமான ஏதுவினாலடைந்ததோ! அல்லது, மற்றை ஏதுவினால் அடைந்ததோவென்பார், 'எவ்வாறடைந்தது' என்றார். 'அறியேன்' என்றது, அருச்சுனனது மோகத்தைப் பற்றித் திருவுள்ளத்தின்கண்ணெழும் வருத்தத்தாலென்க. (௨)

[இதுவுமது.]

ஒவ்வாதீ தொழிந்தமர்மே லொருப்படுகென் றுருக்கரிய
செவ்வாயன் திருமொழியத் தேர்விசயன் செப்புவான்
மெய்வாயி னொடுமனத்தான் மிகப்போற்றற் குரியாரை
யெவ்வாறு கொலைபுரிவே னென்றிவ்வா றியம்பினான்.

(இ-ள்.) ஈது ஒவ்வாது=(துச்சமான) இவ்வதைரியமானது (சாட்சாத்மகேசுரனோடுங்கூட யுத்தஞ் செய்த மகாப்பிரபாவமுடைய அருச்சுனா உனக்குக்) கூடாது;—ஒழிந்து = (அதைப்) பரித்தியாகஞ் செய்து (எழுந்து)—அமர் மேல்=(சுதர்மரூபமான) யுத்தத்தில்—ஒருப்படுக என்று = சாவதானனாகக்கடவாயென்று—கரிய உரு செவ்வாயன் திரு மொழிய=கரியவுருவத்தையும், சிவந்த வாயையுமுடைய ஸ்ரீ பகவான் நன்கருள—தேர் விசயன் செப்புவான்=இரதத்தையுடைய அருச்சுனனானவன் (தனது அபிப்பிராயத்தை இனிக்) கூறுகின்றான்.—மெய் வாயினொடு மனத்தால்=மனம், வாக்கு, காயமென்னு முக்கரணங்களால்—மிகப் போற்றற்கு உரியாரை=(புஷ்பம், சந்தனம், அட்சதைமுதலிய திரவியங்களைக்கொண்டு) மிகவும் பூஜை செய்தற்கு யோக்கியரான பீஷ்மதுரோணாதியரை—எவ்வாறு கொலைபுரிவேன் என்று—(தீட்சணமான ஆயுதங்களைக்கொண்டு இந்த யுத்தத்தில்) எப்படிக் கொல்லுவேனென்று—இவ்வாறு இயம்பினான்=இந்தப்பிரகாரங் கூறினான்,—எ-று.

ஒருப்படுக எனற்பாலது, ஈறுதொக்கது. (௩)

[ஆனால் நீ எப்படிச் சீவிப்பாயென்னின்? அதற்குக் கூறுகின்றான்.]

மாற்றலர்க ளென்றிவரைக் கொன்றுபெறும் பெருவாழ்வி
லேற்றமுரைத் தியான்பிறர்பா லிரந்துண்கை யினிதன்றோ
கூற்றவர்க ளுயிருண்டா லவர்குருதி யாற்குழைத்த
சோற்றையுணல் போன்மன்றோ யான்பின்னைத் துய்ப்பதெலாம்.



(இ-ள்.) மாற்றலர்கள் என்று=சத்துருக்களென்றுகருதி—இவரைக்கொன்று=(மகானுபாவரான) இப்பீஷ்ம துரோணாதியரைச்சம்மரித்து—பெறும் பெருவாழ்வில்=அடையாநிற்கும் பெரிய இராச்சிய வாழ்வைப் பார்க்கிலும்—ஏற்றம் உரைத்து=(இவர்களது) பிரபாவத்தைச் சொல்விக்கொண்டு—யான் பிறர்பால் = நான் அன்னியரிடத்தில்—இரந்து உண்கை=இரந்து(பிட்சாந்நத்தைப்) போஜனஞ்செய்தல்—இனிது அன்றோ = சிரேஷ்டமல்லவா? — (இப்படிக் கல்லாமல்) கூற்று அவர்கள் உயிர் உண்டால்=(இந்தயுத்தத்தில்) காலனானவன் அவர்களுயிரை யுண்ணும்படிக்கு யான் செய்வேனானால்—அவர் குருதியால்=அவர்களது உதிரத்தால்—குழைத்த=சமைத்த—சோற்றை=அந்நத்தை—உணல்போலும் அன்றோ=புசிப்பது போலுமல்லவா—பின்னை=பின்னர்—யான் துய்ப்பது எலாம்=நான் புசியாநிற்கும் போகமனைத்தும்,—எ-று.

மகானுபாவர்=கல்வி, கேள்வி, தவம், ஒழுக்கங்களிற் சிறந்தோர். (௪)

[க்ஷத்திரியனுக்குச் சுதர்மமாவதால் யுத்தமே உனக்குச் * சிரேயசைப் பயக்கத்தக்கதென்னும் ஸ்ரீ பகவான் சங்கைக்கு அருச்சுனன் கூறுகின்றான்.]

தவர்கொள்படை விடுகையோ தவிர்கையோ தருவதுமற்
றவர்களெனை வெல்வரோ யான்வெல்வ னோவறியே
னிவர்கள்சில ரிறந்தக்கா லதனாலே யென்னுயிர்போ
மவர்களமர் தொடங்குகவென் றடல்குறித்து நின்றாரால்.

(இ-ள்.) தவர் சொள் படை விடுகையோ = (எனக்குச் சுதர்மமாவதால்) வில்லிற்பூட்டிய பாணத்தைப் பிரயோகஞ் (செய்துபீஷ்ம துரோணாதியரோடு யுத்தஞ்)செய்வதோ!—தவிர்கையோ=அல்லது, யுத்தஞ் செய்வதை விடுத்து (இம்சையில்லாமையால்) பிட்சையேற்றுண்ணுதலோ!—தருவது = எனக்குரியது.—மற்று அவர்கள்=பீஷ்மதுரோணாதியர்—எனை வெல்வரோ=என்னை யுத்தத்திற் சயிப்பரோ!—யான் வெல்வனோ=யான் அவரை யுத்தத்திற்சயிப்பனோ!—அறியேன்=அறிந்திலேன்.—இவர்கள் சிலர் இறந்தக்கால்=இவர்களில் யாவர் சிலர் மரணமாயின்—அதனாலே=அவர்கள் மரணத்தினாலே—என் உயிர்போம்=எனது பிராணன் (ஜீவியாமல் இறந்து) போகுமோ—அவர்கள் = அந்தப் பீஷ்ம துரோணாதியரோ — அமர்

* சிரேயசு=தர்மம், அல்லது மோட்சம்.

தொடங்குக என்ற=யுத்தத்தை ஆரம்பிப்பாயாக வென்று—அடல் குறித்து நின்றார்=வெற்றியைக் கருதிக்கொண்டு எதிரே நிற்கின்றனர்,—எ - று. (௫)

ஆல்-அசைநிலை. இது குளகம்.

[இதுவுமது.]

ஆதலா லறிவாய விழியினைமற் றாங்கவர்பாற்
காதலா மிருண்மறைப்ப நெறியெங்குங் காணேனு
ணுதலா லெனக்குறுவ தறிகிலே னுரைத்தருள்வாய்
சாதலா னதும்பிறப்பு மில்லாத தனிமுதலே.

(இ-ள்.) ஆதலால்=ஆதலினால்,— அறிவு ஆய விழியினை=(எனது) புத்தியாகிய கண்ணினை—அவர்பால்=பீஷ்மதுரோணாதியரிடத்துள்ள—* காதல் ஆம் இருள் மறைப்ப—ஆசையாகிய இருளானது மறைக்க—நெறிஎங்கும் நான் காணேன்=உய்யுநெறியை எவ்விடத்தும்யான் கண்டிலேன்;—ஆதலால்=அக்காரணத்தினால்,—எனக்கு உறுவது அறிகிலேன்=எனக்குப் பொருந்தாநிற்கும் பரம புருஷார்த்தரூபமான சிரேயசை அறிந்திலேன்;—உரைத்தருள்வாய்=(அதனை) உபதேசித்தருள்வீராக:—சாதலானதும் பிறப்பும்=மரணமும், ஜநநமும்—இல்லாத தனிமுதலே =(ஓர்போதும்) இல்லாத ஒப்பற்ற கடவுளே,—எ - று. மற்று, ஆங்கு—அசைநிலைகள். (௬)

[புத்திரனாகவும், மாணாக்கனாகவுமில்லாத புருஷனுக்குப் பிரமவித்தையை உபதேசிக்கக்கூடாதென்று சுருதியிருத்தலின், உனக்கு எப்படி உபதேசிப்பேனென்னும் ஸ்ரீ பகவானது சங்கையைப்பற்றி அருச்சுனன் கூறுகின்றான்.]

[வேறு.]

உஞ்சேபோகு நெறிவாளா வுரைப்ப னேனென் றுளங் கருதிற், றஞ்சேயென்றுன் சரண் புகுந்தேன்! றண்டிற் பணிந் தேன் றாமரைக்கண், மஞ்சேயுன்றன் மாணாக்க னாயுன் பாத மலர்புனைந்தே, னஞ்சேலென்றிங் கடியேன்செய் வினைக ளேவி யருள் புரிவாய். (௭)

* 'காதல்' என்றது, பீஷ்ம துரோணாதியரைச் சம்மரித்து எப்படிச் சீவிப்பேனென்னுஞ் சிந்தையை.



(இ - ள்.) தாமரைக் கண் மஞ்சே=செந்தாமரை மலர்போலுங் கண்களையுடைய மேகவண்ணனான ஸ்ரீசுவாமி—உஞ்சுபோகும் நெறி =(சம்சார துக்கத்தினின்றும் நீ) பிழைத்துச் செல்லும் வழியை—வாளா=(நீ மாணாக்கனாய்க்) கேளாமல்—உரைப்பனோ என்று உளம் கருதில்=உபதேசஞ்செய்வனோவென்று திருவுள்ளத்திற் கருதுவீராகில்—தஞ்சே என்று=(எனக்குத்) துணை நீரேயென்று (நம்பி)—உன் சரண் புகுந்தேன்=உம்மைச்சரணடைந்தேன்,—தண்டில் பணிந்தேன்=தண்டம்போல(ப்பூமியில் வீழ்ந்து உம்மை)நமஸ்கரிக்கிறேன்,—உன்றன் மாணாக்கன் ஆய்=உமது சீடனாய்—உன் பாதமலர் புனைந்தேன்=உமது பாததாமரையைச் சிரசிற்றரிக்கிறேன்—அஞ்சேல் என்று = (அருச்சுனா நீ) அஞ்சற்கவென்று—இங்கு அடியேன் செய் வினைகள் ஏவி=இங்கே யான் செய்யத்தக்க தொழில்களில் என்னைச் செலுத்தி—அருள்புரிவாய்=அனுக்கிரகித்தருள்வீராக,—எ - று.

தஞ்சமெனற்பாலதனைத் தஞ்சென்றது கடைக்குறை. ஏகாரம் தேற்றப்பொருளினின்றது. (௭)

[நீயே விசாரஞ்செய்து யாதுசெய்ய யோக்கியமாமோ அதனைச் செய்தியென்னின்? அதற்குக் கூறுகின்றான்.]

மண்ணாளும் பெருஞ்செல்வ மன்றியே மாயாத
விண்ணாடு பெற்றிடினு மென்னுடைய மெய்யுணர்வு
நண்ணாம லடுதுயர நலியாமற் காப்பதனைக்
கண்ணாவிங் கெவ்விடத்துங் காண்கிலே னெனக்கலுழ்ந்தான்.

(இ - ள்.) மண் ஆளும் பெரும்செல்வம் அன்றியே=பூமண்டல முழுதும் அரசாட்சிசெய்யும் பெரிய ஐசுவரியத்தை(யடையினும் அதுவும்) அன்றி—மாயாத விண் நாடு பெற்றிடினும்=(சொற்பகாலத்திற்)கெடாத இந்திரன்முதல் இரணியகர்ப்பபரியந்தமான சர்வதேவதைகளின் ஐசுவரியங்களையடையினும்—என்னுடைய மெய் உணர்வு =எனது சரீரேந்திரியங்களை—அடு துயரம் = வருத்தாநிற்கும் (இந்தச்) சோகமானது—நண்ணாமல்=(ஒருகாலத்தும) பொருந்தாமலும்,—நலியாமல்=(பொருந்தினும்) வருத்தாமலும்—காப்பதனை=காக்கத்தக்கவுபாயத்தை—கண்ணா=ஸ்ரீ கண்ணபிரானே—இங்குஎவ்விடத்தும் காண்கிலேன்=இங்கே எவ்வுலகங்களினுங்கண்டிலேன்—எனக் கலுழ்ந்தான்=என்றழுது மௌனமாகவிருந்தான்,—எ - று.

இதன்றுற்பரியம்; இந்தவுலகத்து விஷயபோகங்களிலும், சுவர்க்கமுதலியவுலகங்களின் விஷயபோகங்களிலும் சுருதிப்பிரமாணத்தினாலும், யுக்திரூபானுமானப் பிரமாணத்தினாலும் அநித்தியத்தன்மையே பெறப்படுதலின், அவ்வநித்தியபோகங்களால் சோகநிவிர்த்தி கூடாதென்பது. சுருதி:—“பண்ணிய தொழிற்கு பயன்கள் யாவையு, மண்ணிடை நகர்ந்திட மாளு மாறுபோற், புண்ணிய வினைதரும் போகம் யாவையும், விண்ணிடை யிருந்தனு பவித்து மீளுமால்” என்பது. இகலோக பரலோகங்களிலுள்ள சர்வபதார்த்தங்களும் அநித்தியமாகைக்கு யோக்கியமாம்; காரியமாவதால். எது எது காரியமோ! அது அது அநித்தியமேயாம்; பிரசித்தமான கடாதி பதார்த்தங்கள்போலவென்பது அனுமான ரூபயுக்தியென்க. (௮)

[அதன் பின்னிகழ்ந்ததைச் சஞ்சயர் சொல்லுகிறார்.]

நெய்மார்பிற் சொரிவதென நெடுங்கண்க ணீர்சோர
விம்மாநின் றவன்காதல் வெந்தீயால் வேவாமே
கைம்மாறொன் றின்றியுயிர் காப்பதே கடன்பூண்ட
வம்மாயன் றிருவாய்மை யருண்மாரி யாலவிப்பான்.

(இ-ள்) நெய் மார்பில் சொரிவது என=நெய்யை மார்பிலோட விடுவது போல—நெடும் கண்கள் நீர் சோர = நெடியகண்களினின்றும் நீரானதுவிழ—விம்மாநின்றவன்=அழாநின்ற அருச்சுனன்—காதல் வெம் தீயால் = (பீஷ்மதுரோணாதியரைப்பற்றித் தனதந்தக்கரணத்தினின்றும்எழாநின்ற) ஆசையாகியகொடியவக்கினியினால்—வேவாமே=வெந்தழியாமல்—கைம்மாறு ஒன்றுஇன்றி=(யாதொரு) பிரதியுபகாரத்தையும் அபேட்சியாமல்—உயிர் காப்பதே=உயிர்களை யிரட்சிப்பதுவே—கடன் பூண்ட=(தனக்குக்)கடனாகக் கொண்டருளிய—அம்மாயன் = அந்தக் கிருஷ்ணபகவான்—திரு வாய்மை = (தமது) திருவாக்காகிய—அருள் மாரியால் = கிருபா வருஷத்தினால்—அவிப்பான்=(அதனைத்) தணித்தற்பொருட்டு,—எ - று.

இது குளகம். (௯)

[இதுவுமது.]

[வேறு.]

மின்னை யனைய திருநகைகொண் டருளி விரைத்தா மரை நாறும், பொன்னை யணியுந் திருமார்பன் போகாத் துயர் போம் பரிசெண்ணி, முன்னைமறைக ளெடுத்துரைத்து முடியும்பொருளாய் முதற்பொருளாந், தன்னையுள்ள பரிசவற்குத் தானே சாற்றத் தொடங்கினான்.

(இ - ள்.) மின்னை அனைய திருநகைகொண்டருளி = மின்னையொப்பான மந்தகாசஞ்செய்து—விரைத் தாமரை நாறும் = வாசனை பொருந்திய தாமரைப்பூவிலெழுந்தருளிய—பொன்னை அணியும் திருமார்பன்=இலக்குமியைத் தரித்திருக்கும் அழகிய மார்பினையுடைய அந்தப்பகவான்—போகாத் துயர் = (மற்றோருபாயங்களாலும்) நீங்காத சோகமானது—போம்பரிசு எண்ணி = நீங்கும்படியான உபாயத்தைத்(திருவுளத்தின்கண்ணே)நாடி—முன்னை மறைகள் எடுத்து உரைத்து முடியும் பொருள் ஆய் = பழையவேதங்களெல்லாமெடுத்துச்சொல்லி முடிந்த பொருளாகி—முதல் பொருள் ஆம் தன்னை= (உலகுக்கு) முதற்பொருளாயுள்ள (பரமான்மாவாகிய) தன்னை—உள்ள பரிசு=உள்ளபடியே—அவற்கு= (சோகத்தையடைந்துள்ள) அருச்சுனனுக்கு—தானே சாற்றத் தொடங்கினான் = தானே உபதேசிக்க வாரம்பித்தனன்,—எ - று.

‘அவிப்பான், தன்னைத் தானே சாற்றத்தொடங்கினான்’ என்று முற்கவியோ டன்னுவயித்துக்கொள்க. நமது யோகமாயா வைபவத்தால் இவனுக்குண்டாகிய இம்மோகத்தை ஒழிப்பிப்பதெளிதென்று கருதி மகிழ்ந்ததை, ‘திருநகைகொண்டருளி’ என்றும், பரமார்த்த வஸ்துவை அறியாமையினா லுண்டான சோகமானது பரமார்த்த வஸ்து விவேகஞானத்தினாலேயே நீக்கற்பாலதாமெனத் திருவுளத்தூடு தேர்ந்ததை, ‘போகாத்துயர்போம் பரிசெண்ணி’ என்றுங் கூறினார். (௧௦)

[அநான்மாவான தேகாதிப்பிரபஞ்சத்தினின்றும் வேறுபிரித்துப் பிரத்தியகான்மாவை யறிவித்தற்பொருட்டுப் பீஷ்மர்முதலாயினோர் சோகத்திற்கு விஷயபூதரன்றென்று ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

சாவதிலை யாவர்களு நிற்கவது தானே
மாய்வனெ நீகருது மாரதர்க ளெல்லாந்
தேய்வரிய தீவினைசெய் யாதமையி னாலே
வீவதன்முன் வானுலக மேவுவர்கண் மேன்மேல்.

(இ - ள்.) (அருச்சுனா) யாவர்களும் சாவது இலை=எவரும் (ஒருவராலும், ஒன்றாலும்) மாணமாவதேயில்லை;--அதுநிற்க=(மேலதனை விரித்துக்கூறுதும்) அதுநிற்க (இப்போதுவேறொன்றுகேள்;)—மாய்வர் என = (யுத்தத்தில்) மாணமாவரொன்று—நீ கருதும் மாரதர்கள் எல்லாம்=நீ மதியாநிற்கும் மகாரதரான பீஷ்ம துரோணாதியரெவரும்—தேய்வு அரிய=கெடுதற்கரிய—தீவினை செய்யாதமையினாலே =பாவவினைகளைச் செய்யாமல் பண்ணியவினைகளைச் செய்துவந்தமையினாலே—வீவதன் முன்=(யுத்தத்தில்)மாணமாவதற்கு முன்னே—வான் உலகம் மேல் மேல் மேவுவர்கள் = சுவர்க்கத்தை மேன்மேலுமடையாநிற்பர்,—எ-று. தான், ஏ-அசைநிலைகள். (௧௧)

[இதுவுமது.]

அன்னவர்கள் சோகிதரெனவழுத லாலும்
பன்னவரி யோர்கண்முறை யேபகர்த லாலு
மன்னமய லேறியுண் மயங்கினைகொல் வாயா
தின்னதொழி லானதை மறந்திடிவை யுங்கேள்.

(இ - ள்.) அன்னவர்கள் = துக்கப்படத்தக்கவராகாத பீஷ்ம துரோணாதியரை—சோகிதர் என அழுதலாலும்=துக்கப்படத்தக்கவரென்று(நீகருதி) இரங்குவதனாலும்,—பன்ன அரியோர்கள் முறையே=சொல்லுதற்கரியபண்டிதர்கள் வசனிக்கும் ஒழுங்கின்படியே—பகர்தலாலும்=வசனித்தலாலும்—மன்ன=அருச்சுனா—மயல் ஏறி=பிராந்தியதிகரித்து—உள் மயங்கினைகொல்=(இரஜதமில்லாதசுத்தியின்கண்ணே இரஜதத்துவபுத்தியுள்ளவன்போல)உள்ளம்மயங்கினையோ!—வாயாது=(புத்திமானான உனக்குக்) கூடாது (ஆதலால்,)—இன்னதொழிலானதை மறந்திடு=இந்தச்சோகரூபமான தொழிலை மறந்து—இவையும் கேள்=(இனி எம்மால் கூறப்படும்) இவ்வசனங்களையுங் கேட்பாய்,—எ - று.

சோகப்படத்தகாதவர்களைப்பற்றிச் சோகப்படுவதால், ‘மயலேறியுண்மயங்கினைகொல்’ என்றும், பண்டிதர்களைப்போல முன்னே அனேக வார்த்தைகளை வசனித்தலால், ‘வாயாதின்ன தொழிலானதை மறந்திடு’ என்றும், வார்த்தை மாத்திரத்தால் பண்டிதர்போல விளங்குகின்றனையல்லாமல் அவர்களது நிலையை யடைந்திலை; அதனைக் கூறுதுங் கேட்டியென்பார், ‘இவையுங்கேள்’ என்றுங் கூறினார். (௧௨)



[பண்டிதர்களது நிலையைக் கூறுகின்றார்.]

மாயுமவ ராலுமுயிர் வாழுமவ ராலு
மாயுமறி வோர்களழி யாமையறி யாயோ
நீயுமிவர் தாமுநிகழ் நானுநெறி தேரி
லேயும்வகை யாலுலகி லென்றுமுள மேகாண்.

(இ - ள்.) மாயும் அவராலும்=மரித்துப்போன பந்துஜனங்களாலும்,—உயிர் வாழும் அவராலும்=சீவித்திருக்கும் பந்துஜனங்களாலும்—ஆயும் அறிவோர்கள்= (ஆன்மாநான்மாக்களை) ஆராய்ந்தறிந்திருக்கும் அறிவுடையோர்கள் — அழியாமை அறியாயோ=சோகமடையாதிருக்குந்தன்மையை (அருச்சுனா நீ) அறிந்திலைகொல்லோ? (இப்படிப்பட்ட*பண்டிதர்களது நிச்சயத்தை அறிந்து சோகத்தை விடுதியென்பது கருத்து.)—[ஸ்தூலசரீரத்தினின்றும் ஆன்மாவை வேறுபிரித்தற்பொருட்டு முன்னர் ஆன்மாவின்கண் நித்தியத்துவஞ் சாதிக்கின்றார்.] நீயும்=அருச்சுனா நீயும்,—இவர்தாமும் = பீஷ்ம துரோணாதியரான இவ்வரசர்களும்,—நிகழ் நானும்=விளங்காநின்ற (ஈசுரனான) நானும்=நெறி தேரில்=சுருதி, யுக்தி, அனுபவவாயில்களாலாராயின்,—ஏயும் வகையால்=(இதற்குப் பூர்வம் ஒருகாலுமிலமென்றாகாமற்) பொருந்துந் தன்மையினால்—உலகில் = உலகின்கண்—என்றும் உளமே=சரீரவிநாசத்தின் பின்னர்ப் பவிஷியகாலத்தும் (நித்தியமாகிய ஆன்மசொரூபமாக) உள்ளோம்,—எ-று.

ஏ-ஈற்றசை. காண்-முன்னிலை அசைச்சொல்.

நாமெவரும் சரீரோற்பத்திக்குப் பூர்வகாலத்தில் இலமென்றாகிலேமென்றதால், ஆன்மாவின்கண்ணே பிராகபாவத்தின் அப்பிரதியோகித்தன்மைகாண்பித்தனர். சரீரவிநாசத்தின்பின்னர்ப் பவிஷியகாலத்தும்நாமெவரும்உளமென்றதால்,ஆன்மாவின்கண்ணேபிரத்துவம்சாபாவத்தின்அப்பிரதியோகித்தன்மைகாண்பித்தனர்;இங்ஙனங்கூறியவாற்றால், பூதபவிஷியவர்த்தமானமென்னுங் காலத்திரயத்துமுள்ளது யாது அது நித்தியம்; இந்நித்தியலட்சணம் ஆன்மாவின்கண்ணே பொருந்தும்; தூலதேகத்தின்கட்பொருந்தாது; ஆதலால்

---

* “கண்டனவெல் லாம்பொய்யென் றுள்ளத்தி லனைத்தினும்வெங்காதனீத்த, பண்டிதரா முழுதுணர்ந்த பெரியோரா யீராதுபாச மாயை” என்று வசிட்டாலுங் கூறப்பட்டிருக்கிறது.

ஆன்மாவே நித்தியமாகலின், ஆன்மா ஸ்தூலசரீரத்தைப் பார்க்கிலும் விலட்சணமென்றே பெறப்படுகின்றது. (௧௩)

[பூர்வதேகத்தைவிட்டு நூதனதேகத்தையடையும் ஆன்மாவுக்கு விகாரித்துவஞ் சித்தமாகலின், நித்தியத்துவம் எங்ஙனங் கூடுமென்னும் அருச்சுனன் சங்கைக்கு அதுகூடுமென்று திருஷ்டாந்தபூர்வகமாக ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

பொன்றுவ துடம்பதனு ணின்றபொருள் பொன்று
தென்றுமொ ரியற்கையொடு நிற்குமியல் பைக்கேண்
முன்றொடர் மகப்பருவம் விட்டிளமை மூப்போ
டொன்றுமுட லாயினு முயிர்க்கியல்ப தன்றால்.

(இ-ள்.) பொன்றுவது உடம்பு=மரணமாகின்றது தேகந்தான்; அதன் உள்நின்ற பொருள்=அத்தேகத்தினுள்ளே (சாட்சியாய்) நிற்கின்ற ஆன்மா—பொன்றாது=மரணமாகாது:—என்றும் ஓர் இயற்கையொடு நிற்கும்=எப்போதும் (அவிக்கிரியமான) ஒரேசுபாவத்துடனேநிற்கின்ற—இயல்பைக்கேள்=(அப்படிப்பட்ட ஆன்மாவின்) சுபாவத்தை (அருச்சுனா) கேள்;—உடல்=(வர்த்தமான) தேகமானது—முன் தொடர் மகப்பருவம் விட்டு=முன்னேதானடைந்த சைசவாவஸ்தையை யொழித்து—இளமை மூப்போடு=(பின்) யௌவனம், வயோதிகமென்னும் அவஸ்தைகளோடு—ஒன்றும் ஆயினும்=பொருந்துமானாலும்—உயிர்க்கு=(தேகாபிமானியான) சீவனுக்கு—இயல்பது அன்று=(அன்னியோன்னியம் விலட்சணங்களான அவ்வவஸ்தைகள்) சுபாவமன்று,—எ-று. ஆல்-அசைநிலை. (௧௪)

அன்னவகை யாலுரு வழிந்துவரு மாங்கே
யென்னுருவ மாமறி விறந்துபிற வாதாற்
பின்னதறி வானுட லழிந்துபிரி போதுந்
தன்னதென வேதுமொர் சலிப்பதறி யானால்.

(இ-ள்.) அன்னவகை=அப்படியே—உரு=பூர்வதேகமானது அழிந்து வரும் ஆங்கே=நாசமாய் (லிங்கதேகவாயிலால் அன்னியதேகமானது) உளதாகும் அவ்விடத்தே—என் உருவம் ஆம் அறிவு=(பரமான்மாவாகிய) எனது உருவமான ஆன்மா—இறந்துபிறவாது=நாசமடைந்து ஜநநமாகாது; (ஆதலின், நித்தியமாம்;)—அது அறிவான்=(சுருதி, யுக்தி, அனுபவங்களால்) அவ்வான்மாவின் நித்தியத்வ



த்தை அறிந்ததீரன்—பின்=பின்னர்—உடல் அழிந்து பிரிபோதும்=தேகமானது அழிந்தொழியுங்காலத்தும்—தன்னது என ஏதும் ஓர் சலிப்பது அறியான்=தன்னதென்று சிறிதுமொருதுன்பத்தையடையான்,—எ-று. ஆல் மூன்றும் அசைநிலைகள். (௧௫)

[ஆனால், சீதோஷ்ண சுகதுக்காதிகளை ஆன்மா பொருந்துவதெதனாலென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

இவ்வகைய தாகிலழல் சீதமிட ரின்பஞ்
செய்வகை யிலாவறிவு சேர்குவதெ னென்னின்
மெய்வகையி னாலிவை விளைந்துதர மேய
வைவகையி னாயபுல னும்பொறியு மையா.

(இ-ள்.) இவ்வகையது ஆகில்=இப்படியாமாகில்—அழல் சீதம் இடர் இன்பம்=உஷ்ணம், சீதம், துக்கம், சுகம் (என்னுமிவைகளை)—செய்வகை இலா அறிவு=நிஷ்கிரியமான ஆன்மா—சேர்குவது என் என்னில்=(நான்சுகி, நான்துக்கியென்று) அடையாநிற்பது யாதினாலென்று கேட்பாயாகில்—ஐயா=அருச்சுனா—மெய்வகையினால்=உண்மையாக (நாடிடில்)—ஐவகையின் ஆய=ஐந்துகூறுபாட்டினையுடையனவாகிய—புலனும் பொறியும்=சுரோத்திராதி இந்திரியங்களும், சப்தாதிவிஷயங்களும்—விளைந்து தர=(பரஸ்பரம் விஷயவிஷயீபாவ) சம்பந்தமாய் (த்தம்மோடு சம்பந்தித்த அந்தக்கரணத்திற்கு)க் கொடுக்க—இவை மேய=(அந்தக்கரண தர்மங்களான) சீதோஷ்ண சுகதுக்காதிகள் (அந்தக்கரணத்தோடு தாதான்மியாத்தியாசத்தால் ஆன்மாவின்கண்ணே) பொருந்தின,—எ-று. ()

அநான்மாவான அந்தக்கரண தர்மங்களாகிய சுகதுக்காதிகளை இவை அநித்தியமென்னும் புத்தியினால் சகித்துக்கொள்ளவேண்டுமென்று இப்போதருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

சீதமழன் முதலவற்றின் செயல்கேட்கி லநித்தியமாய்ப்
போதலொடு வருவனவா யிருக்குமவை பொறுநீயு
மாதலிலென் பயனென்னி லவைபொறுத்த பெரியோனை
யேதமவை நிலைகலக்கா வவன்வீடே யெய்துமால்.

(இ-ள்.) சீதம் அழல் முதலவற்றின் செயல் கேட்கில்—சீதோஷ்ணசுகதுக்கங்களின் றன்மைகளை (அருச்சுனா நீ) கேட்பாயாகில்—அநித்தியம் ஆய்—அஸ்திரமாய்,—போதலொடு வருவன ஆய் இருக்கும்—நாசோற்பவங்களையுடையனவாயுள்ளன;—அவை நீயும் பொறு—அவைகளை (ச்*சகித்துக்கொள்ளுதல் ஞானாதிகாரியினிலக்கணமாதலின், அதிகாரியாகிய) நீயும் சகித்துக்கொள்ளுவாய்;—ஆதலில் பயன்என்னென்னில்—க்ஷணிகமென்னும்புத்தியால் சுகதுக்காதிகளைச் சகித்தலால் (உளதாகும்) பிரயோஜனமானதென்னையென்று கேட்பாயாகில்—அவை பொறுத்த பெரியோனை—அச்சுகதுக்காதிகளைச் சகித்ததீரனை—ஏதம் அவை—தோஷங்களையுடையனவான அச்சுகதுக்காதிகள்— நிலை கலக்கா — தன் நிலையினின்றுங் கலங்கும்படி செய்யாவாம்.—அவன்—(இக்காரணத்தால் விட்சேபரகிதனான) அவ்வதிகாரி—வீடே எய்தும்—வீடேயடைவன்,—எ-று.

ஏகாரம்-பிரிநிலை. ஆல்-அசைநிலை.

மேலைச்செய்யு ளிரண்டின் றாற்பரியம்; இந்திரியங்களும், விஷயங்களும் சீதோஷ்ணாதிகளைக் கொடுக்கும் வாயிலாக அந்தக்கரணத்தையே சுகதுக்கங்க ளடையும்படி பண்ணுகின்றனவல்லாமல் நித்தியமான ஆன்மாவைச் சுகதுக்கங்களடையும்படிபண்ணவில்லை; எதனாலெனின்? நித்தியமான ஆன்மா நிர்க்குணன், நிர்விகாரி என்னுஞ் சுருதியினால். ஆனால் நான்சுகி, நான்துக்கியென்று ஆன்மாவின்கண் சுகதுக்கங்கள் பிரதீதியாகின்றனவேயென்னின்? ஸ்படிகத்தில் செவ்வரத்தம்பூவி னிறம்போல அந்தக்கரணவுபாதிவசத்தால் அவ்வந்தக்கரணதர்மங்களான சுகதுக்கங்கள் ஆன்மாவின்கண்ணே பிரதீதியாகின்றன. தனது தர்மத்தை அன்னியவஸ்துவிலுள்ளதாகத் தோற்றுவிப்பது யாது அது உபாதியெனப்படும். யாதொரு தர்மமானது உபாதியினாற்பண்ணப்படுகிறதோ அது அசத்தியமேயாம். அந்தக்கரணத்தின்கண்ணே சுகதுக்கங்களை விளைவிப்பவைகளானபுலனும், பொறியும் ¶ நியதசுபாவ முடையனவல்ல; பின்னையோ, அநியதசுபாவ முடையனவாம்; எதனாலென்னின்? ஓர்போது சுகத்தை விளைவிப்பனவான சீதோஷ்ணாதிகள் மற்றோர்போது துக்கத்தையும் விளைவிப்பனவா மாதலால் புலனும், பொறியும் அநியதசுபாவ முடையன

* சகித்தல் - சுகம் வந்தபோது சந்தோஷமும், துக்கம் வந்தபோது விதனமும் அடையாதிருத்தல்.

¶ நியதம் — ஒரு நிச்சித சுபாவமுடைமை.



வா`; இவ்வாறான புலனும், பொறியும் விகாரமற்ற ஆன்மாவான என்னைக கிஞ்சின்மாத்திரமும் ஆனி செய்யமாட்டாவென்னும் வி்வகத்தால் அவைகளைச் சகிப்பாயென்பதாம். (௧௭)

[ஆன்மாபிரதீதியாவதுபோல அநான்மாவான ஜகத்தும் பிரதீதியாவதால் ஆன்மாவைப்போல அநான்மாவாகிய ஜகத்தும் ஏன் சத்தியமாகாது: அநான்மாவான ஜகம்போல ஆன்மாவும் ஏன் அசத்தியமாகாதென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீபகவான் அவ்விரண்டன்கணுள்ள விசேஷணத் தன்மைகளை வர்ணிக்கத் தொடங்கி முன்னர்த் திருஷ்டாந்தத்தில் அவ்விரண்டன் றன்மைகளை வர்ணிக்கின்றார். அல்லது, அதிதுக்கத்தோடு கூடிய சீதோஷ்ணாதிகளை எப்படிச் சகிக்கக்கூடும்: மிகவுங் கிலேசத்தோடு கூடி அவைகளைச் சகிக்கில் ஓர்போது ஆன்மா நாசமாய்விடுமென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் சத்தசத்துக்களின் சுபாவங்களை யருளிச்செய்யத்தொடங்கி முன்னர்த் திருஷ்டாந்தத்தில் அவைகளின் சுபாவங்களை யருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

மண்ணினுப விகாரமுமம் மண்ணேயந்த மண்ணொழித்துப்
பண்ணினாரும் பிறரில்லை பண்ணப்பட்ட பலபொருள்க
ளெண்ணினாகு வதன்முன்பு மிறந்தபொழுது நிகழ்விடத்துங்
கண்ணினாடி மண்ணொழியக் கண்டாருளரோ கட்டுரைப்பாய்.

(இ - ள்.) மண்ணின் ஆய விகாரமும்—மண்ணினாலுளவாகிய கடசராவாதி விகாரங்களனைத்தும்—அம்மண்ணே — (காரணமான) அம்மண் மாத்திரமாம்;—[எதனாலெனின் ?] அந்த மண் ஒழித்து — (காரணமான) அம்மண்ணைத் தவிர்த்து—பண்ணினாரும் பிறர் இல்லை — (கடமுதலிய விகாரங்களைப்) பண்ணினவரும் அன்னியரில்லை;—பண்ணப்பட்ட பலபொருள்கள் — (மண்ணினாற்) பண்ணப்பட்ட (கடமுதலிய) அநேக விகாரங்களையும்—எண்ணின்—ஆலோசிக்குமிடத்து—ஆகுவதன் முன்பும்—உண்டாதற்கு முன்னும்,—இறந்தபொழுதும்—நாசமான பின்னும்,—நிகழ்வு இடத்தும் — மத்தியிற் பிரதீதியாகுமிடத்தும்—கண்ணின் நாடி—கண்ணினால் நாடி—மண் ஒழியக் கண்டார் உளரோ—மண்ணைத்தவிரக் கண்டவருண்டோ—கட்டுரைப்பாய் — உறுதியாகச் சொல்லுதி,—எ - று.

இந்திரனுஞ் செய்யச் சமர்த்தனாகா னென்பார் "பண்ணினாரும் பிறரில்லை" என்றார். (௧௮)

[தார்ஷ்டாந்தத்தில் சத்தசத்தின் விவேகம் இப்போதருளிச் செய்கின்றார்]

[வேறு.]

வையாரயி லுழவாவதன் வகையேயிதன் வகைகேண்
மெய்யானது நசியாதித னுடன்வேறென விரவும்
பொய்யானது நிகழாதிவை புலனாகிய பொருளே
யையாவெனை யறிவாரிவை யறிவார்பிற ரறியார்.

(இ - ள்.) வை ஆர் அயில் உழவ = கூர்மை பொருந்திய வேலையுடைய வீரா — அதன் வகையே = அத்திருஷ்டாந்தப்படியே — இதன் வகை கேள் = தார்ஷ்டாந்தத்தில் சத்தசத்தின் றன்மைகளைக் கேட்பாய். — மெய்யானது நசியாது = சத்தான ஆன்ம வஸ்துவானது (ஓர் காலத்தும், ஓர் தேசத்தும், ஓரவஸ்தையிலும்) அசத்தாகாது. — இதனுடன் = இந்த ஆன்மவஸ்துவோடு — வேறு என விரவும் = அன்னியமென்று சொல்லும்படிக்கு(ச் சீதோஷ்ண சுகதுக்காதி தர்மங்களை)ப் பொருந்துகின்ற — பொய்யானது நிகழாது — அசத்தான தேகாதிப் பிரபஞ்சமானது காலத்திரயத்துஞ் சத்தியமாகாது; — இவையே புலன் ஆகிய பொருள் = சத்தசத்துக்களின் இப்படிப்பட்ட விவேகமே ஞானசப்த வாச்சியமாம்; — ஐயா = அருச்சுனா — எனை அறிவார் இவை அறிவார் = (பரமான்மாவான) என்னை அறிந்தவர்களே இம்மரியாதையை (ச் சுருதி, ஸ்மிருதி, யுக்திகளால்) அறிவார்கள்: — பிறர் அறியார் = அன்னியரறியார்கள், — எ-று. ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது.

'மெய்யானது நசியாதித னுடன்வேறென விரவும், பொய்யானது நிகழாது' என்பதன் கருத்து; — சடத்வமும், கடத்வத்தின் அபாவமும் ஒன்றற்கொன்று விரோதிகளாதலின், ஓரதிகரணத்தில் ஓர்போதும் பொருந்தாமைபோல அபரிச்சின்னத்வ ரூபசத்துவமும், பரிச்சின்னத்வரூப அசத்துவமும் ஒன்றற்கொன்று விரோதிகளாதலின், ஓரதிகரணத்தில் ஓர்போதும் பொருந்துவனவல்லவென்பதாம். சத்தாகிய வஸ்து யாது? அது சர்வகாலத்தும் சத்தேயாம்: ஓர்போதும் அசத்தாகாது. அசத்தாகிய வஸ்து யாது? அது சர்வகாலத்தும் அசத்தேயாம்: ஓர்போதும் சத்தாகாதென்னும் நியமரூபமான மரியாதையை வஸ்துவின் எதார்த்த சொரூபத்தை யறிந்த ஞானிகளே அறிவர்: * குதர்க்கிகளான நையாயிக ரறியாரென்பார், "எனை யறிவா ரிவையறிவார் பிறரறியார்" என்று கூறினர். (கக)

---

* சுருதி, ஸ்மிருதிகளோடு விருத்தமான தர்க்கத்துக்குக் குதர்க்கமென்று பெயர்.



[அவிநாசியான சத்தின் சொரூபத்தைச் சாமான்யமாக வர்ணித்து இனி விசேஷமாக வர்ணிக்கின்றார்.]

யானாம்வகை யதுகேளெழு மொலியேமுத லியவும்
வானாதியில் வருபூதமும் வருநாள்வரு மிடமா
யானாதெழு மறிவியாவையு மறிகாரண மதுவாய்ப்
போநாளொடு வருநாள்வழி புணராததொர் பொருளே.

(இ - ள்.) யான் ஆம் வகையது கேள் = ஆன்மா உள்ள தன்மையை (அருச்சுனா) கேள். — எழும் ஒலியே முதலியவும் = (கற்பிதங்களாய்) எழுகின்ற சப்தஸ்பரிசரூபரசகந்தங்களும், — வான் ஆதியில் வரு பூதமும் = ஆகாசாதிக்கிரமத்தினா லுண்டாகின்ற பூதமுதலியவும் — வரும் நாள் வரும் இடம் ஆய் = உண்டாகுங்காலையில் உண்டாதற்கிடமான சத்தாயும், — ஆனாது எழும் அறிவு யாவையும் = நீங்காது (அவைகளைப்பற்றி) எழுகின்ற அந்தக்கரணத்தின் விருத்திஞானங்கண் முழுதையும் — அறி காரணமது ஆய் = அறியாநிற்கும் ஸ்புரணரூபகாரணமாயும், — போம் நாளொடு வரும் நாள் வழி = போங்காலத்துடனே வருங்காலமாகிய வழியை — புணராதது ஓர் பொருளே = அடையாததுமான ஏகவஸ்துவா யிருப்பதே (ஆன்மாவின் றன்மையாம்), — எ-று.

பூர்வஞ் சொன்ன தேசகாலவஸ்து பரிச்சேதரகிதமான சத்வஸ்துவானது ஞானரூபஸ்புரணத்தோடு பின்னமென்னின்? கடாதி பதார்த்தங்களைப்போலச் சடமாமென்றுவருஞ்சங்கையைத் தொலைத்தற்பொருட்டு, 'எழுமொலியே முதலியவும், வானாதியில் வருபூதமும் வருநாள்வரு மிடமாய்' என்றொழியாது, "ஆனாதெழு மறிவியாவையு மறிகாரண மதுவாய்" என்றார். சத்வஸ்துவோடு ஞானரூபஸ்புரணமானது அபின்னமென்னின்? எம்மிடத்துக் கடஞானம் நாசமாயிற்று, படஞானம் உற்பன்னமாயிற்றென்னும் பிரதீதி சகலர்க்கு முளதாதலின், ஞானரூபஸ்புரணத்திற்கு உற்பத்தியும், நாசமும் சித்திக்கின்றன; அவை சித்திக்கவே, ஸ்புரணரூபமான சத்வஸ்து தேசகாலவஸ்து பரிச்சேதரகிதமென்னல் பயனில்கூற்றாமென்னுஞ் சங்கையைப் போக்கும்பொருட்டு அந்தக்கரண விருத்திரூபவுபாதியின் உற்பத்தி, நாசங்களினாலேயே விருத்தியுபகித சத்ரூபஸ்புரணத்தின்கண் உற்பத்தி, நாசங்கள் பிரதீதியாகின்றன வல்லாமல் விருத்தியுபகித சத்ரூபஸ்புரணத்தின்கண் உற்பத்தி, நாசங்கள் வாஸ்தவ

மாக இல்லையென்டார், 'போநாளொடு வருநாள்வழி புணராததொர் பொருளே' என்றார். (உО)

[இதுவுமது.]

அழியாதமெய் யஃதியாதெனி லவிகாரதை யுருவா
யொழியாநிறை வொடுநீடிய தெனதியானென வுணரா
வழியாமதி யியல்பாலிது சிலமாறுகொள் குவதாய்
மொழியாரவி யயமாமிதை முயல்வாற்கொல வலரார்.

(இ-ள்) அழியாத மெய் அஃது யாது எனில்=(தேசகால வஸ்துக்களாற் பண்ணப்பட்ட) பரிச்சின்னரகிதமான சத்வஸ்துவானது இன்னும் எப்படிப்பட்டதென்று நீ கேட்கில்,—அவிகாரதை உரு ஆய்=விகாரமற்றஸ்புரணரூபமாய்—ஒழியா நிறைவொடு நீடியது=(கடாதிகளில் ஆகாசம்போலத் தன்னிற் கற்பிதமான சகல பிரபஞ்சங்களிலும்) நீங்காத நிறைவோடு வியாபித்திருப்பது.—எனது யான் என =(அசத்தான தேகாதிகளை இவை) என்னுடையவெனவும், யானெனவும்—உணரா வழி ஆம் மதி இயல்பால்=அறியா நெறியாகிய ஞான சுபாவத்தால்—இது=இவ்வான்ம வஸ்துவை—சில மாறுகொள்குவது ஆய் மொழியார்=(யாம் கூறினதற்குச்) சில விபரீத சுபாவ முடையதாகப் பெரியோர் கூறார்; (பின்னையோ, யாம் கூறியவண்ணமே கூறுவர்.)—அவியயம் ஆம் இதை=நாசரகிதமான இவ்வான்மாவை—முயல்வால் = தமது பிரயத்தனத்தால்—கொல வலர் ஆர்=கொல்லும்படியான சமர்த்தர் யாவர்?—எ-று.

கொலவலர் என்றவை இடைக்குறைகள். (உக)

[உற்பத்தி, விநாசங்களாகிய தர்மங்களோடு கூடிய தேகாதி அநான்மவர்க்கங்களின் அநித்தியத்தன்மையைக் காண்பிக்கின்றார்]

இல்லாமையி னியல்கேளெழு கழுதாழியி னிடையே
யல்லாதெழு புனல்போலறி வுறவேயழி குவதா
லெல்லாவகை யினுமாய்வதிவ் வுருவேயறி வதுதான்
கொல்லாதழி கொலையானது குறுகாதத னெறிகேள்.

(இ-ள்.) (அருச்சுனா)இல்லாமையின் இயல் கேள்=சீதோஷ்ண சுகதுக்காதிதுவந்துவங்களையுடைய இத்தேகாதிப்பிரபஞ்சரூபமான) அசத்தி னிலக்கணத்தை நீ கேட்பாய்.—எழு கழுது ஆழியின் இடையே=(சூரியனது உஷ்ணகிரணத்தால் ஊஷரபூமியில்) எழும்பேய்த்தேரொன்னுங்கானலினிடத்தே—அல்லாது எழு புனல் போல்=(சத்தும், அசத்தும்) அல்லாமலுண்டாகின்ற பிராதிபாசிகஜலம்போல= அறிவுறவே அழிகுவதால்=நன்றாகப்பார்க்கவே ஒழிந்துபோவதால் (* பாதமாவதாலென்றபடி)—எல்லா வகையினும் மாய்வது இவ்வுருவே=† சர்வவிதங்களாலும் நாசமடையாநிற்பது இத்தேகந்தான்.—[பீஷ்மாதியருடைய மரணத்தினாலுளதாகுஞ்சோகம் எப்படி அகாரணமோ அப்படியே இவர்களை மரணமடையப்பண்ணுவிக்கிற கர்த்தாவாக நானாகிறேனென்றெண்ணுகிற துக்கமும் அகாரணமென்று சொல்லுகிறார்.] அறிவதுதான்=ஸ்புரணரூபமான ஆன்மாவோ—கொல்லாது=ஒன்றைக்கொல்லுகிற கர்த்தாவுமாகாது,—அழி கொலையானது குறுகாது=ஒன்றாற்கொல்லப்படுகிறவிஷயமுமாகாது;—அதன் நெறி கேள் = அவ்வான்மாவின் றன்மையை இன்னுங் கேட்பாய்.—எ-று.

'அறிவுறவே யழிகுவதால்' என்றிங்கே கூறினதுபோலவே, "உண்டான சிருட்டிதா னன்றாய்ப் பார்க்கி லொழிந்துபோம்" என்று வாசிட்டத்துங் கூறியிருப்பது காண்க. 'கொல்லாதழி கொலையானது குறுகாது' என்றிங்கே கூறினதுபோலவே பிரமகீதையிலும், "கொன்றிடுதலுங் கொலையுறுந்தொழிலு மில்லான்" என்று கூறியிருக்கிறது; இது கடவல்லிசுருதியின்பொருளென்க. (உஉ)

[ஆன்மாவுக்கு நாசமின்றென்பதைச் சட்பாவவிகாரங்களின் றென்று கூறும்வாயிலால் வற்புறுத்துகின்றார்.]

[வேறு.]

ஊறுபட வொன்றினுளே பிறத்தல்பிறந் துளவாதல்
வேறுபட வளர்தல்வளர்ந் தயலொன்றாய் விளைந்தமைதன்
மாறுபடத் தேய்தலற மாய்தலென வருகின்ற
வாறியல்பு முடம்பன்றி யறிவுடையா வாதலினால்.

(இ-ள்.) ஊறு பட=(அநேகவிதமான) இடையூறுகளைப்பொருந்த—ஒன்றின் உளே பிறத்தல்=ஒருதாரத்திலே ஜநநமாதல்,—பிறந்து உளவாதல்=உற்பன்னமாகியிருத்தல்,—வேறுபடவளர்தல்= (அதற்கு) வேறாக விருத்தியாதல்,—வளர்ந்து அயல் ஒன்றாய் விளைந்து அமைதல்=விருத்தியாய் (அதற்கு) வேறான ஒரு விகாரமாகப் பரிணமமாதல்,—மாறுபடத் தேய்தல்=(அதற்கு) மாறாக இளைத்தல்,

* பாதம் என்றது, மித்தையென்னு நிச்சயத்தை.

† சர்வவிதம் என்றது, அக்கினி வியாதியாதிகளை.

அறமாய்தல் என வருகின்ற=பிசவும் விநாசமாதல் என்று சொல்லும்படி வாராநின்ற—ஆறு இயல்பும் = ஷட்பாவ விகாரங்களும்—உடம்பு அன்றி அறிவு அடையா=சரீரத்தையடையுமல்லாமல் ஸ்புரணரூபமான ஆன்மாவை யடையாவாம்;—ஆதலினால்=அக்காரணத்தினால்,—எ - று.

'ஆதலினால்' என்பது பிற்கவியோ டன்னுவயம். (உரு)

[பூர்வம் உஉ-ம் செய்யுளில், 'அறிவதுதான், கொல்லாதழி கொலையானது குறுகாது' என்று பிரதிக்ஞை செய்தவிரண்டில் 'கொலையானது குறுகாது' என்று பிரதிக்ஞை செய்ததை முற்செய்யுளில் விஸ்தாரமாக நன்கருளிச்செய்து இப்போது 'அறிவதுதான், கொல்லாது' என்று பிரதிக்ஞை செய்ததை நன்கருளிச்செய்பவராய் ஸ்ரீ பகவான் பூர்வப்பிரசங்கத்தை உபசம்மாரம் பண்ணுகின்றார்.]

[வேறு.]

நில்லாவுடற்கே நின்றேயு நித்தியமாகி யதுநாச, மில்லா
ததுபொய்ப் பிறப்பிறப்பொன் றறியாததுமற் றதுவறிந்
தோர், கொல்லார்கொலையே வனுஞ்செய்யார் குலமேலிட்டுக்
குலமறைக, ளெல்லாம்விதித்த தொழிலினையு மியம்பிற்றெ
ன்றே யிதுதெளிநீ.

(இ - ள்.) (இவ்வான்மாவானது) நில்லா உடற்கே நின்றேயும்=அநித்தியமான தேகத்தின்கண்ணேயிருந்தும்—நித்தியம் ஆகியது=சர்வத்திர வியாபக வஸ்துவாயிருப்பது:—நாசம் இல்லாதது= [வா] பாதரகித சத்தியவஸ்துவாயிருப்பது;—[இதில் ஏதுவையருளிச்செய்கின்றார்.] பொய்ப் பிறப்பு இறப்பு ஒன்று அறியாதது=மித்தையான ஜநநமரணங்களுள் ஒன்றையும் அறியாதது;—மற்று அது அறிந்தோர்=அத்தன்மையான ஆன்மாவை(க்குருசாஸ்திரோபதேசங்களால்)சாட்சாத்கரித்த ஞானிகள்—கொல்லார்கொலை ஏவலும்செய்யார்=ஒருவனைக்கொல்லுகிறகர்த்தாவும்,கொல்லுவிக்கிறபிரோககர்த்தாவுமாகார்.—[ஆனால், யுத்தமுதலிய கர்மங்களை விதிக்குஞ் சுருதிகளின் றாற்பரிய மென்னைகொலோவெனின்? அதற்குக் கூறுகின்றார்.] குலமறைகள் எல்லாம்=அவனவன் ஜாதி தர்மங்களை விதிக்குஞ்சுருதிகளெல்லாம்—விதித்த தொழிலினையும்=(அவனவனுக்கு) விதித்த கர்மங்களையும்—குலம்மேலிட்டு=(அவனவன்)குலத்தின்மீதுவைத்து—இயம்பிற்று என்றே=அவித்துவானுக்குச் சித்தசுத்தியின்பொருட்டு) விதித்தன (அல்லாமல் ஆன்மாவின்மீது வைத்து ஆன்ம சாட்சாத்காரமுடைய வித்துவானுக்கு விதித்தில) வென்றே—நீ இது தெளி=(அருச்சுனா) நீ இப்படிப்பட்ட சுருதியின் றாற்பரியார்த்தத்தைத் தெளிதி,—எ - று.



சுருதியின் றாற்பரியமறியாது மயங்குதலின், 'தெளி' என்றார். ()

[ஆன்மா பரமார்த்தமாக விகார ரகிதனானாலும் புராதன தேகத்தைவிட்டு நூதனதேகத்தை யடையும் விகாரித்வம் உண்மையால் அவிக்கிரியத்வம் எங்ஙனங் கூடுங்கொலெனும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

வேறு.

பீறிய போர்வையைப் பெயர்த்துப் பின்னரோ
வேறியல் போர்வையை விரும்பு வாரென
ஊறிய வுடம்பினி லுதித்த வுண்மைதான்
மாறியோ ருடம்பினை மருவு மன்னவனே.

(இ - ள்.) பீறிய போர்வையைப் பெயர்த்து=சிதிலமானவஸ்திரத்தைப் பரித்தியாகஞ்செய்து—பின்னரோ வேறு இயல் போர்வையை விரும்புவார் என=பின் உடனே நூதனவஸ்திரத்தைவிரும்பித் தரிப்பவர்களைப்போல—ஊறிய உடம்பினில்=வயதுசென்ற தேகத்தில்—உதித்த உண்மைதான்=விளங்குவதான ஆன்மாவும்—மாறி ஓர் உடம்பினை=ஜீர்ணமான அத்தேகத்தைப் பரித்தியாகஞ்செய்து மற்றொரு நூதனமான தேகத்தை—மன்னனே மருவும்=அருச்சுனா பொருந்தும்,—எ - று.

ஜீர்ணவஸ்திரத்தை விடுத்து நூதன வஸ்திரத்தைக் கிரகிக்கும் புருஷன் விகாரமற்று ஏகரூபனாயிருப்பதுபோலத் தேகியும் புராதன தேகத்தைவிடும்போதும், நூதனதேகத்தையடையும்போதும் அவிக்கிரியனாகவேயுளனென்பதாம். (உ௬)

[அக்கினியினால் வீடானது வெந்தபோது அவ்வீட்டின்கண்ணுள்ளபுருஷனும் வெந்துபோவதுபோல இத்தூலதேகம்நாசமாகும்போது அதன்கண்ணுள்ள ஆன்மாவும் நாசமாய் விடுமென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீபகவான் உத்தரமருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

உருப்பான்மை மற்றதனுக் கொருநாளு மின்மையாற்
செருப்பால்வெம் படைக்கலங்கள் சேதிக்க மாட்டாவா

னெருப்பால்வெந் தழியாது நீரானெக் கொழுகாது
மருத்தாலுஞ் சலியாது மற்றதன்றன் வகைகேளாய்.

(இ-ள்) மற்று அதனுக்கு=(இத்தேகத்தின்கண்)வேருய்ஸ்புரணரூபமாயுள்ள ஆன்மாவிற்கு—உருப்பான்மை=*ஆகாரத்தன்மையானது—ஒருநாளும் இன்மையால்=ஓர்காலத்துமில்லாதமையினுல்-செருப்பால் வெம் படைக்கலங்கள்=யுத்தத்திற்(பிருதிவியின்விகாரரூபமான)கொடியஆயுதவிசேஷங்கள்—சேதிக்க மாட்டா ஆல்=(ஸ்தூலதேகத்தைச் சேதிப்பதுபோல ஆன்மாவைச்)சேதியாவாம்:—செருப்பால் வெந்துஅழியாது=அக்கினியினுல் (சரீரம்போல அவ்வான்மா)வெந்துபஸ்மமாகாது:—நீரால் நெக்கு ஒழுகாது=அப்புவினுல்(நனைக்கப்பட்டு)இளகியோடாது:—மருத்தாலும் சலியாது=வாயுவினுலுமசையாது; (வற்ருதென்றபடி.)—மற்று அதன்றன் வகைகேளாய்=(பிருதிவியாதி பூதங்களால் நாசமாகாமைக்குக் காரணமாக)வேறேயும்அவ்வான்மாவின்றன்மையைக்கூற (அருச்சுனு)கேள்,—எ-று.

[“சாவதிலெ யாவர்களும்” என்பதுதொடங்கிக் கூறிப்போந்ததை உபசம்மரிக்கின்ருர்.]

[வேறு.]

எல்லாப்பொருட்கும் பழையதனை யெங்குந்தானு யிருப்பதனை
நில்லாத்தன்மை யில்லதனை நித்தியத்துவத்தை நிலைபேற்றை
யல்லாப்புலன்கள் பதினுலு மறியாவறிவை யறியாதே [டோ.
யில்லாப்பொருள்போ லழியுமென விரங்குகின்ற தென்கொண்

(இ-ள்.)எல்லாப் பொருட்கும் பழையதனை=சகலமான பொருட்குப்புராதனமானதும்,—(அதனுல்)எங்கும்தான்ஆய்இருப்பதனை=சர்வத்திலுந்தானுகவியாபித்திருப்பதும்,(சர்வகதமென்றபடி.)—அதனுல்) நில்லாத் தன்மை இல்லதனை = ஸ்திரசுபாவமுடையதும்,—(அதனுல்) நித்தியத்துவத்தை=நாசமற்றதன்மையதும்,—(அதனுல்) நிலைபேற்றை=நிச்சலமானதும்,— அல்லாப் புலன்கள் பதினுலும்=அநான்மாவான இந்திரியங்கள்பதினுன்கும்—அறியாஅறிவை-கோசரிக்கக்கூடா (மையின் அவ்வியக்)த சேதனமும் (ஆகிய இவ்வான்மாவை)—அறியாதே =(உள்ளபடி) அறியாமல்—இல்லாப் பொருள் போல்=அபாவரூபமானதேகாதி பதார்த்தங்களைப்போல—அழியும்

* ஆகாரம்-அவயவக்கூட்டம்.



என இரங்குகின்றது=அழிந்துபோமென்று கருதி (நீ) வருந்துகின்றது—என் கொண்டோ=யாது பிரமாணங்கொண்டோ (யாம் அறியேம்,)—எ-று.

ஜநநமரணங்களில்லாத ஆன்மாவை நன்கறிந்து சோக மோகத்தைப் பரித்தியாகம் பண்ணுதியென்பது கருத்து. (உஎ)

[ஆன்மாவுக்குச் சநநமரணங்களின்மையின், ஆன்மாவின் நிமித்தம் சோகமடைதல் உசிதமன்றென்று கூறி நிறுத்தி இனித் தேகத்தின் ஜன்மநாசத்தோடுகூட ஆன்மாவுக்கும் ஜன்மநாச முளவாமென்றங்கீகரிக்கினும் சோகமடைதல் உசிதமன்றென்று ஸ்ரீபகவான் அருளிச்செய்கின்ருர்.]

[வேறு.]

வீவ ரெனக்கொடு மெய்தளர் வாயேல்
யாவர் பிறப்பவர் யாவர்க ளேனுஞ்
சாவர் பெயர்த்துமவ் வாறு சனிப்பர்
காவ லிதற்குள தோகட னேகாண்.

(இ-ள்.) வீவர் எனக்கொடு=(அருச்சுனு பீஷ்மதுரோணுதியர் முன்சொன்னவண்ணமாகவில்லாமல் தேகம் ஜநநமாகின்றபோது ஜநநமாகின்றவர்களெனவும், அது மரணமாகின்றபோது) மரணமாகின்றவர்களெனவுங் கருதிக்கொண்டு—மெய் தளர்வாயேல்=(நீ) சோகமடைவாயாகில் (அதுவும் உனக்கு உசிதமன்று);—[ஏனெனின்? அதற்கேது கூறுகின்ருர்] யாவர் பிறப்பவர்=எவர் ஜநநமாவரோ—யாவர்களேனும்=அவர் எத்தன்மையர்களாயினும்—சாவர்=(பிராரப்தகர்மக்ஷயத்தில் நிச்சயமாக) மரணமாவர்;—பெயர்த்தும்=(மரணமானவர் பூர்வதேகத்திற்செய்த கர்மவசத்தால்) மீண்டும்—அவ்வாறு சனிப்பர்=அப்படியே (அவசியம்) ஜநநமாவர்.—காவல் இதற்கு உளதோ=பரிகாரம் இதற்குண்டோ?—கடனே காண்=முறைமையே, கண்டாய் (அருச்சுனு)—எ-று.

அவசியம் வரத்தக்கனவான ஜநநமரண விஷயத்தில் பண்டிதனு நீ சோகமடைதலுசிதமன்றென்பதாம். (உஅ)

[பூர்வப்பிரசங்கத்தில் சர்வப்பிரகாரத்திலும் ஆன்மா சோகத்துக்கு விஷயமன்றென்று நிரூபிக்கப்பட்டது. இனி ஆன்மா சோகத்துக்கு விஷயமாகாவிடினும் பூதங்களின் சமுதாயரூபமான பீஷ்ம

தரோணாதியரின் சரீரங்களைப்பற்றி நான் சோகமடைகிறேனென்னும் அருச்சுனன் சங்கையை ஸ்ரீபகவான் நிவிர்த்திசெய்கின்றார்.]

செறிந்ததிவ் வாறிவ ரென்பதுந் தேராய்
பிறிந்திவர் போமிட மும்பெரி தோரா
யறிந்தது நீநடு வேசில நாளே
யெறிந்திடு வேலவர் பாலிட ரென்னோ.

(இ - ள்.) (அருச்சுனா) இவர்=இந்தப்பீஷ்ம துரோணாதியர்—செறிந்தது இவ்வாறு என்பதும் தேராய்=உண்டாவதற்கு முன்னே இருந்தது இந்தப்பிரகார மென்பதையும் (நீ) அறியாய்:—இவர்=இவர்கள்—பிறிந்து போம் இடமும் பெரிது ஓராய்=(சரீரங்களினின்றும்) மரணமாகிச் சென்றடையாநிற்கும் ஸ்தானத்தையும் நன்கறியாய்:—நீ அறிந்தது நடுவே சில நாளே=நீ (இவர்களை) அறிந்தது (ஜநநத்திற்கும், மரணத்திற்கும்) மத்தியிலே (வியக்தமான) சில காலமே;—(முன்னும், பின்னும் உபாதான காரணமான அவ்வியக்தத்தை யடைந்திருந்தனர். முன்னும், பின்னும் இல்லாத பதார்த்தங்கள் மத்தியினும் இல்லை; ஆகலால்) வேலவர்பால்=ஆயுதங்களையுடைய இப்படிப்பட்ட பீஷ்மதுரோணாதியரிடத்து — இடர் என்னோ=(விருதாவாக உனக்குத்) துன்பமேனோ?—எறிந்திடு=அதனை விடுதி,—எ-று.

ஜநநமாதற்கு முன்னும், மரணமான பின்னும் அவ்வியக்தமென்னும் மாயையை யடைந்திருந்து மத்தியிற் சொப்பன பதார்த்தம், இந்திரஜாலம், இரச்சுசர்ப்பாதிகள்போலப் பிரதீதியாவதால் அத்தியந்த துச்சமான சரீரங்களை யுத்தேசித்துச் சோகமடைதல் உனக்கு உசிதமன்றுமென்பது கருத்து. (உகூ)

[ஆனால், வித்துவான்களும் உலகில் என் சோகமடைகின்றனரென்னுஞ் சங்கைக்கு ஆன்மாவை யறியாமையினாலென்னும் பரிகாரத்தை வைத்துக்கொண்டு ஆன்மாவை யறியும் பிரயாசத்தன்மையை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்]

[வேறு]

ஒருவனென் றுங் கண்டறியா ததுகண்டாற்போ லுணர்ந்
திருக்கு, மொருவனென் றுரைத்தறியா ததனையுரைத்
தாற்போ லுரைக்கு,மொருவனென் றுங் கேட்டறியா ததனைக்
கேட்டாற் போலுவக்கு, மொருவனென் றுங் கேட்டாலு
மறியானிந்த வுண்மையினை,



(இ-ள்.) ஒருவன்=ஓரதிகாரியானவன்—இந்தஉண்மையினை=இவ்வான்மாவை—என்றும் கண்டு அறியாதது கண்டாற்போல்=(சாஸ்திராசாரியோபதேசத்தால்) ஆச்சரியம்போல—உணர்ந்து இருக்கும்=பார்க்கிறான்.—ஒருவன்=வேறொருவன்—(இவ்வான்மாவை) என்றும் உரைத்து அறியாததனை உரைத்தாற்போல் உரைக்கும்=ஆச்சரியம்போல மற்றொருவனுக்குபதேசிக்கிறான்.—ஒருவன்=மற்றொருவன் —(இவ்வான்மாவை) என்றும் கேட்டு அறியாததனைக் கேட்டாற்போல் உவக்கும்=ஆச்சரியம்போலக்கேட்டு மகிழ்ச்சியடைகிறான்.—ஒருவன்=மற்றொருவன்—(இவ்வான்மாவை) என்றும்=எப்போதும்—கேட்டாலும் அறியான்=கேட்டும், (சொல்லியும், கண்டும்) நன்றாக அறிகிலன்,—எ-று.

இந்நால்வரும் அசம்பாவனை, விபரீதபாவனையென்னும் பிரதிபந்தங்களாலும், பூதபவிஷ்யவர்த்தமானப்பிரதிபந்தங்களாலும் ஆன்மாவை நன்கறிந்திலரென்பதாம். (௩௰)

[பெரும்பாலும் ஆன்மாவையறிவது கடினமென்பதைச் சங்கிரகமாக வுபதேசித்து நீ பிரதிபந்தரகிதனாய் ஆன்மாவைச் சாட்சாத்கரித்துச் சோகத்தை விடுதியென் றருளிச்செய்கின்றார்]

திதனையெவரு மறியாத பொருளைத்தெரிந்து கொண்டுநீ
யிதனாலிவரையான்கொன்றேனென்பதொழிவாயின்னுங்கேள்
விதநாலாய மறைமொழியும் வேந்தர்தருமம் வாளமரென்
பதனாலமரா தொடங்கதனை யறநன்றெனநீ யையுறேல்.

(இ-ள்.) திதன் ஆய்=(சர்வப்பிராணிகளுடைய) தேகங்கள் சம்மரிக்கப்பட்டாலும் நித்தியஞானானந்தசுபாவமுடைய ஆன்மா சம்மரிக்கப்படாதென்னும்) உறுதியுடையவனாய் — எவரும் அறியாத பொருளை=முன்சொல்லிய நால்வரும் (பிரதிபந்தங்களால் உள்ளபடி) அறியாத அவ்வான்மாவை—நீ தெரிந்து கொண்டு=பிரதிபந்தங்களொன்றுமில்லாமல்)சாட்சாத்கரித்துக்கொண்டு—இதனால்=இவ்வான்மானுபூதி வலியினால்—இவரை=இந்தப்பீஷ்மதுரோணாதியரை—யான் கொன்றேன் என்பது ஒழிவாய்=நான் சம்மரித்தேனென்னும்(அபிமானரூபமான)சோகத்தைவிட்டுவிடுவாய்.—[இனிச் சுதர்மவிஷய தைரியத்தை உபதேசிக்கின்றார்] இன்னும் கேள்=(நீ சோகமடையாதிருத்தற்கு) மேலுங் கேட்பாய்—விதம் நால் ஆய மறை மொழியும்=நான்கு கூறுபாடான வேதவாக்கியங்களும்—வேந்தர் தருமம்=க்ஷத்திரிய தர்மமானது—வாள் அமர் என்பதனால்=

ாள் முதலிய ஆயுதங்களைக்கொண்டு (நியாயமாகச் செய்யும்) யுத்தமென்று கூறுவதால்—நீ அமரோ அற நன்று என=(அருச்சுனா) நீ யுத்தந்தானே (க்ஷத்திரியனான நினக்கு) மிகவும் மோட்சசாதனமென்று கருதி—அதனைத் தொடங்கு=அதனை ஆரம்பிப்பாய்;—ஐயுறேல்=(அதில்) தர்மமோ, அதர்மமோவென்று ஐயுறவடையாதே,—எ-று. (௩௪)

[சுதர்மமானயுத்தம் அவசியஞ்செய்யவேண்டுமென்பதுதோன்ற அதனையும், அதனை யடையாநிற்பவரையும் புகழ்ந்து கூறுகின்றார்.]

[வேறு]

செய்தி யின்றியத் தேவர்கள் வானுல
கெய்த நின்ற விதுபெறு கின்றவர்
வைதி கந்தரு மாதவ மேற்கொடு
மெய்தி ருந்திய வேந்தர்க ளல்லரோ.

(இ-ள்.) செய்தி இன்றி=பிரயத்தனமில்லாமலே—அத்தேவர்கள்வான் உலகு=தேவர்கள் வசிக்கும்படியான சுவர்க்கத்தை—எய்த நின்ற இது=அடைய (ச்சாதனமாக) நிற்கின்ற இப்படிப்பட்ட யுத்தத்தை—பெறுகின்றவர்=அடைகின்றவர்கள் (யாவரெனின்?) வைதிகம் தரும்=வேத மார்க்கத்தாலுளதாகும்—மாதவம் மேல் கொடு=பெரியதவத்தினை மேலாகக்கொண்டு—மெய் திருந்திய=உண்மையையறிந்த—வேந்தர்கள் அல்லரோ=அரசர்களல்லவா,—எ-று. (௩௨)

[அது செய்யாவிடில் வருந்தோஷங்களை அருளிச்செய்கின்றார்.]

ஆவ தான வமர்தொடங் காயெனிற்
போவ தான புகழுந் தருமமும்
பாவ மாம்பழி யாமிப் பழியினிற்
சாவ தானது வேதலை யல்லவோ.

(இ-ள்.) ஆவது ஆன அமர் தொடங்காய் எனில்=(பாக்கியசாலிகளாகிய அரசர்களால்) அடையத்தக்க தர்மரூபமான யுத்தத்தைச் செய்யாயாகில்—தருமமும் புகழும் போவதான=சுதர்மமும், கீர்த்தியும்போய்—பாவம் ஆம்=பாவமே (உனக்கு) உளதாகும்.—(கேவலம் தர்மமும், கீர்த்தியும் போவதுமாத்திரமன்று; மேலும்) பழி ஆம் (தைரியமில்லாதவனாய் அருச்சுனன் யுத்தத்தினின்றும் நீங்கினானென்று சகலபிராணிகளாலுஞ் உனக்குச்சாசுவதமான) அவகீர்த்தியுமுள



தாகும்; இப்பழியினில்=(தர்மான்மா, சூரன் என்பனமுதலிய குண ங்களால் பூஜிக்கப்பட்ட உனக்கு யுத்தத்தை விடுவதாலுளதாகும்) அவகீர்த்தியைப் பார்க்கிலும்—சாவதானதுவே தலை அல்லவோ= மாணமாகிறதே பெருமையல்லவா?—எ-று.

மாண துக்கத்தைப் பார்க்கிலும் அவகீர்த்தியினாலுளதாகுந் துக்கம் அதிகமாமென்பது கருத்து. (௩௩)

[இதுவுமது.]

அன்றி யும்முனை யஞ்சினை யென்பரா
னின்றி யையந்து நிலத்துமுன் னீசெய்த
வென்றி யும்பழி யாய்நிற்கு மேவல
ரொன்றி யம்பிலின் னுங்கிதன் மேலுண்டோ.

(இ-ள்.) அன்றியும்=பின்னும்—உனை அஞ்சினை என்பர்= (அருச்சுனா) உன்னை (மகாரதரான துரியோதனாதியர்,) கர்ணன் முதலானோர்க்குப்பயந்து (யுத்தத்தினின்றும்) நீங்கினையென்று கூறு வர்.—நிலத்து இயைந்து நின்று=பூமியின்கண்ணே (தர்மம், பராக்கிர மம், சௌரிய முதலிய அனேக குணங்களோடு) கூடிநின்று—முன் நீசெய்த வென்றியும்=முன்னே நீ செய்த வெற்றியும்—பழி ஆய் நிற் கும்=(அவரால்) பழிக்கத்தக்கதாய் (இலேசாய்) நிற்கும்.—மேவலர்= சத்துருக்கள்—ஒன்று இயம்பில்=(சொல்லக்கூடாததான) ஒரு வா ர்த்தையைச்சொல்லில்—இதன்மேல் இன்னுங்கு உண்டோ=இதற் கதிகமான துன்பமானது வேறேயுண்டோ? (இல்லை.)—எ-று.

ஆல் - அசைநிலை, (௩௪)

[இந்த யுத்தத்தில் பீஷ்ம துரோணாதியரைக் கொல்லின் மத் தியஸ்த புருஷர் நிந்திப்பர்: யுத்தத்தினின்றும் நிவிர்த்தியடையில் துரியோதனாதியரான சத்துருக்கள் நிந்திப்பர்; ஆதலால், இந்த யுத்தத்தைச் செய்யும்பட்சத்திலும், செய்யாதொழியும்பட்சத்திலும் நிந்தையினாற் சமானமாகவே துக்கமானது உளதாகுமென்னும் அருச் சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் வெற்றியினாலும், தோல்வியினாலும் உனக்கு நிச்சயமாக இலாபமே உளதாம் ஆதலால், யுத்தஞ் செய் வதே நன்றென்று அதில் உச்சாகப்படுத்துகின்றார்.]

இன்று வாளமர் தன்னி லெதிர்ந்துநீ
பொன்றில் வானவர் போற்றவிண் காக்குவை

வென்றி சேரிலிவ் வேந்த ரெலாந்தொழ
நின்று ஞால மளிக்குவை நீயரோ.

(இ-ள்.) நீ=(அருச்சுன) நீ—இன்று வாள் அமர்தன்னில் எதிர்ந்து=இப்போது வாள்முதலிய படைக்கலங்களைக்கொண்டு செய்யும் இந்த யுத்தத்தில் (கர்ணன் முதலிய அரசரை) எதிர்த்து—பொன்றில்=(அவர்களால்) மரணமடைவாயாகில்—வானவர்போற்ற=தேவர்கள் வணங்க—விண் சாக்குவை=விண்ணுலகத்தை அரசாள்வாய்.—வென்றிசேரில்=(கர்ணன்முதலான அரசரைக்கொன்று நீ) ஜயத்தையடைவாயாகில்—இவ்வேந்தர் எலாம் தொழ நின்று=இவ்வரசர்களனைவரும் (உன்னை) வணங்க மகாராஜனாயிருந்து—ஞாலம் நீ அளிக்குவை=மண்ணுலகத்தை நீ அரசாள்வாய்; (இக்காரணங்களால் யுத்தத்தின்பொருட் டெழுந்து நிற்பாய்.) எ-று. அரோ - அசைநிலை.

இங்ஙனங் கூறினதனால் இவ்வத்தியாயத்தின் ஐந்தாஞ் செய்யுளில் 'அவர்களை வெல்வரோ யான்வெல்வனோ வறியேன்' என்னும் அருச்சுனன் வசனத்தை மறுத்தனனென்க. (ருரு)

[பூர்வாத்தியாயத்தி னீற்றில், 'என்னே கொடிய பெரும்பாவஞ் செய்த நினைந்தேன்' என்று தர்மத்தில் அதர்மத்வ புத்தியால் பீதியடைந்து சொல்லிய அருச்சுனனை நீ இங்ஙனஞ் செய்தியேல் உன்னைப் பாவந் தொடாதென்று அவனது தர்மமான யுத்தத்தை ஸ்ரீ பகவான் அனுவாதஞ் செய்கின்றார்.]

துற்ற வின்பமுந் துன்பமுந் தோல்வியும்
வெற்றி யும்மிழ வும்மிகு பேறுமென்
றுற்ற வின்னவைக் கொத்த மனத்தனாய்க்
கொற்ற வாசமர் செய்குற்ற மில்லையால்.

(இ-ள்.) துற்ற இன்பமும் துன்பமும்=நிறைந்தசுகமும், துக்கமும்,—(இவைக்கேதுவான) மிகு பேறும் இழவும் = மிக்க இலாபமும், நஷ்டமும்,—(இவைக்கேதுவான) வெற்றியும் தோல்வியும்என்று உற்ற=ஜயமும், பராஜயமுமென்று கூறுகின்ற—இன்னவைக்கு=இவைகளில்—ஒத்த மனத்தன் ஆய்=சமத்துவமான அந்தக்கரணத்தை யுடைத்தானவனாய்—கொற்றவா = வெற்றியையுடைய அருச்சுன—சமர்செய்=யுத்தத்தைச் (சதர்மமென்னும் புத்தியோடு கூடிச்) செய்வாய்:—குற்றம் இல்லை = பாவமானது (உனக்கு) உளதாதலில்லை.—எ-று.

ஆல் - அசைநிலை. 'இன்னவைக்கு' வேற்றுமைமயக்கம்.



சுகதுக்க முதலியவற்றில் இராகத்துவேஷங்க ளில்லாமையே சமத்துவமாம். 'கொற்றவா சமர்செய்' என்று ஸ்ரீ பகவான் ஆன்ம ஞானத்தின் உபதேசப் பிரசங்கத்தில் யுத்தரூபமான தர்மத்தை விதித்தது கூடாதென்னின்? அங்ஙனம் விதித்தது விதியாமாயிற் கூடாது; அஃதனுவாதமாதலின், கூடும். விதியோ அப்பிராப்தமான பொருளை யுணர்த்துதலாம்; இங்ஙனம் உணர்த்தாமல் தானே அந்நத்தைப் போஜனஞ் செய்யப்புக்க ஒருவன் அதில் தோஷாரோபணஞ்செய்து அதினின்றும் மீளத்தொடங்கிடில் அவனை மற்றொரு தர்மான்மாவான புருஷன் அஃது தோஷமன்றென் றுணர்த்துவது போல முன்னே தர்மமென்று தானே பிரவிர்த்தித்த யுத்தத்தில் தோஷாரோபணஞ்செய்து அதினின்றும் மீளத்தொடங்கிய அருச்சுனனை அஃது நினக்குத் தோஷமன்று: சுதர்மமாமென் றுணர்த்துதலின், அனுவாதமாம் என்றறிக. (ருசு)

[அருளிச்செய்துவந்த ஞானயோகத்தை முடித்து அதற்குச் சாதனமான கர்மயோகத்தை இனித் துதிக்கின்றார்.]

[வேறு.]

கதுவிய பொருண்ஞானங் கரையறு முரையாலே
பொதுவுறு வகைநீயும் புலனறி வகையானு
யெதுவொரு வினையாலே யிருவினை களும்வீடு
மதுதனை யறிவார்வீ டணைபவ ரதுகேளாய்.

(இ-ள்) கதுவிய பொருள் ஞானம் = (சம்சார சமுத்திரத்திற்குப் புணையாகப் பெரியோர் நீங்காது) பற்றிய பரமான்மவஸ்து (விஷயமான) ஞானத்தை—கரை அறும் உரையாலே=('சாவதிலை யாவர்களும்' என்பது முதலிய) அளவிறந்த எனது வாக்கியங்களாலே—பொது உறு வகை நீயும் = சாமான்யமாகப் பொருந்தும்படி (அருச்சுன) நீயும்—புலன் அறிவகை ஆனாய்=புத்தியின்கண் அறியுந் தன்மையனானாய்.—எது ஒரு வினையாலே=யாதொரு (ஈசுரார்ப்பணரூப) கர்மானுஷ்டான (விஷயமான புத்தியினாலே—இரு வினைகளும் வீடும் = (கர்மபந்தமென்னும் புண்ணியபாவரூபமான) இருவகை வினைகளும் (தம்மைப் பற்றாமல்) விட்டுப்போமோ—அதுதனை அறிவார் = அப்படிப்பட்ட கர்மயோக புத்தியை அறிந்தனுஷ்டியாநிற்பவர்—வீடு அணைபவர்=மோட்சமடையத் தகுதியுடையாராவர்;—அது கேளாய்=அதனை (இனி) க் கேட்பாய்.—எ-று.

* சாங்கிய புத்தியை யுபதேசித்தும் சித்ததோஷத்தால் பிரம சாட்சாத்கார புத்தி உனக்குண்டாகாமையினால் அச்சித்ததோஷம் நீங்கிப் பிரமசாட்சாத்கார முண்டாதற்பொருட்டு உனக்கு நிஷ்காம கர்மயோகமே அனுஷ்டானஞ்செய்ய யோக்கியமாம்; ஆகலால், அதனை விஸ்தாரமாக அருளிச்செய்கிறேன் நீ சாவதானனாய்க் கேளென்பார், 'எதுவொரு வினையாலே யிருவினை களும்வீடு, மதுதனை யறிவார்வீ டணைபவ ரதுகேளாய்' என்றார். (௫௭)

[கிருஷியாதிகளிற்போலக் கர்மங்களில் ஓர்போது விக்கினபா குள்ளியத்தால் பயன்கள் நியமமாக வுளவாகாமையினாலும், மந்திர ஜபமுதலியவற்றிற்போல † அங்கவைகுண்ணியத்தால் தோஷங்கள் உளவாதலினானும் கர்மபந்தம் எப்படி விடுபடுமென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் உத்தர மருளிச்செய்கின்றார்.]

அரிதெனு மறிஞோர்தஞ் செயலது வழிவாகா
விரிதரு மிடையூறும் வினைகளு மிடைகூடா
தெரிபொருள் சிறிதேனும் பெருமய றெறுமானா
லுரியதிவ் வுலகோர்பா லதுவல துளதோதான்.

(இ-ள்.) அரிது எனும் = (உலகில்) துர்லபமென்னும்—அறிஞோர்தம் செயல் அது = விவேகிகளின் நிஷ்காம கர்மயோகத்தின் பயனானது—அழிவு ஆகா =(காமிய கர்மங்களின்பயனான சுவர்க்காதி போல ஓர்போதும்) நாசமடையாது:—விரிதரும் இடையூறும் வினைகளும்=விரிவான விக்கினங்களும், பாவவினைகளும்—இடைகூடா= மத்தியிற் பொருந்தாவாம்.—தெரி பொருள்=அறிந்தனுஷ்டியாநிற்கும் (ஈசுராராதன ரூபமான) நிஷ்காம கர்மமானது—சிறிதேனும்= சொற்பமானாலும்—பெரு மயல்=மகத்தான (ஜநநமரண ரூபசம்சார) பயமானது—தெறும் ஆனால் = (அதனாற்) கெடுமானால்—இவ்வுலகோர்பால் உரியது=உலகிலுள்ள விவேகிகள் தம்மிடத்து உரியதாகக் கொள்ளற்பாலது—அது அலது உளதோதான் = அந்நிஷ்காம கர்மமேயன்றி வேறேயுண்டோ? (இல்லை).—எ-று.

தான் - அசைநிலை. 'அழிவாகா' ஈறுதொக்கது.

---

* பரமான்மாவின் வாஸ்தவ சொரூபத்தைப் பிரதிபாதனஞ் செய்யும் உபநிஷதரூபமான சாஸ்திரத்துக்குச் சாங்கியமென்று பெயர்; அவ்வுபநிஷதத்தால் பிரதிபாதனஞ்செய்யும் வஸ்துவுக்கும் சாங்கியமென்று பெயர்.

† அங்கவைகுண்ணியம் = பிராமணபோஜனம், தர்ப்பணாதிகளின் குறைவு.



நிஷ்காமகர்மயோகத்தின்பயன் பாவக்ஷயரூபமான சித்தசுத்தியாதலின் சுவர்க்காதிகள்போல நாசமடையாதென்பார், 'அரிதெனு மறிஞோர்தஞ் செயலது வழிவாகா' எனவும், ஈசுரனை உத்தேசித்துச் செய்வதனாலே அங்கவைகுண்ணியம் உளவாகாமையின், 'விரிதரு மிடையூறும் வினைகளு மிடைகூடா' எனவும், காமியகர்மம்போலச் சொற்ப அங்கவைகுண்ணியத்தால் நிஷ்பலமாகாதென்பார், "தெரி பொருள் சிறிதேனும் பெருமயறெறும்' எனவுங் கூறினர். (௫௮)

[சகாமம், நிஷ்காமமென்னும் இருவகைக் கர்மங்களுள்ளே நிஷ்காம கர்மமே மோட்ச சாதனமாமெனத் தெரிவித்தற்பொருட்டு அவைகளை யனுஷ்டிக்கும் அதிகாரிகளின் நிச்சயங்களை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

தெளிபவ ருணர்வொன்றே தெளிவில ருணர்வோதிற்
றளிர்நிகர் பலவாகுந் தருபய னதுமேவு
மொளிமறை நெறிமேலா வுணர்பொரு ளெனவோது
மளியவர் தெளியாதா ரவையல தறியாரால்.

(இ-ள்.) தெளிபவர் உணர்வு=(ஈசுராராதனரூபமான கர்மங்களை யனுஷ்டிக்கும்) விவேகிகளின் (நிச்சயான்மகமான) புத்தி—ஒன்றே = (பரமேசுர பக்தியினாலேயே அவசியங் கடைத்தேறவேமென்றிப்படி) ஏகாகாரமாம்.—தெளிவுஇலர் உணர்வு ஓதில்=(ஈசுராராதனத்திற்பகிர்முகரான) அவிவேகிகளின்புத்தியைச்சொல்லில்,—தளிர் நிகர் பல ஆகும்=விருட்சத்தின்பர்ணங்களைப்போல (ச்சுவர்க்க பசு, புத்திராதி மனோரதங்களால்) அனேகாகாரமாம்.—[சகாம புருஷரும் கஷ்டரூபமான சகல காமங்களையுந் தியாகஞ்செய்து ஏகரூபமான புத்தியை எனடையவில்லை யென்னின்? அதற் கருளிச்செய்கின்றார்.] தருபயன் அது மேவும்=(அனுஷ்டிப்பவர்க்குப்) பயவாநிற்குஞ் சுவர்க்காதிப் பயன்களை விரும்பி யுபதேசிக்கும்—ஒளிமறை நெறி=பிரகாசம்பொருந்தியகர்மகாண்டச்சுருதிவாக்கியங்களையே—மேல் ஆ உணர்பொருள் என ஓதும்=உத்கிருஷ்டமாக அறியத்தக்க பொருளென்றுசொல்லுகின்ற—அளியவர்=(அர்த்தவாதத்திற்) பிரீதியுள்ளவர்கள்—தெளியாதார்=(வேதவாக்கிய தாற்பரியக்) ஞானமின்மையர்;—அவை அலது அறியார்=அச்சுவர்க்காதிப் பயன்களையன்றி (ப்பரமபுருஷார்த்தமான கைவல்லியசுகத்தை) அறியார்கள்.—எ-று.

ஆல்-அசைநிலை. மேலா என்றது, ஈறுதொக்கது.

தூரத்தில் ரமணீயமாகத் தோற்றும் நிர்க்கந்த புஷ்பங்களை யுடைய பலாச விருட்சம்போல அவிசாரத்தினாலே ரமணீயமாகத் தோற்றுங் கர்மகாண்ட ரூபமான வாக்கியங்களை யென்பார், 'ஒளி மறைநெறி' என்றார். (௪௯)

[இதுவுமது.]

புண்ணிய வுலகத்தே பொருண்முடி வெனவைப்பார்
மண்ணியல் பிறவிக்கே வரும்வழி நெறிநிற்பார்
பண்ணிய வினைகட்கே பயனினை பவர்தம்பா
னுண்ணிய பொருள்செப்பார் நுணுகிய வறிவுற்றோர்.

(இ-ள்.) புண்ணிய உலகத்தே பொருள் = சுவர்க்கத்திலுள்ள ஊர்வசி, நந்தனவனம், அமிர்தமுதலிய பொருள்களை—முடிவு என வைப்பார்=உத்தமமான புருஷார்த்தமென்று (மனத்தில்) வைப்பவரும்,—மண் இயல் பிறவிக்கே=(சுவர்க்கப்பயனை யனுபவித்தபின்) மண்ணுலகின் பகுதியான ஜநநங்களில்—வரும்வழி நெறி நிற்பார்= வருதற்குக் காரணமான மார்க்கத்தில் நிற்பவரும்,—பண்ணியவினை கட்கே=தாம்செய்த கர்மங்களுக்கு—பயன் நினைபவர்தம்பால்=பயன் களைக் கருதுகின்றவரும் ஆகிய பகிர்முக புருஷர்க்கு—நுண்ணிய பொருள் செப்பார்=சூட்சுமமான சாங்கியபுத்தியை, அல்லது யோக புத்தியை உபதேசியார்—நுணுகிய அறிவுற்றோர்=சூட்சுமமான ஆன்மஞானமுடைய பெரியோர்.—எ-று.

கர்மபலன்களில் ஆசக்தியுடைய பகிர்முக புருஷர்க்கு விவேக ஞான முளதாகாதென்பது கருத்து. (௫௦)

[வேதாப்பியாசமுடைய பகிர்முக புருஷர்க்கு ஏன் விவேக புத்தி உளதாகாதென்னுஞ் சங்கைக்கு ஸ்ரீ பகவான் உத்தரமருளிச் செய்கின்றார்.]

நவைதரு குணமுப்பா னணுகிய பயனுற்றோர்
சுவைதெரி குணம்வைப்பார் தொழின்மறை நெறியுற்றே
கவைதரு குணமுற்றோர் கருமம திடமிற்றா
மவைகெட வருமப்பா லறிவின னெனநிற்பாய்.

(இ-ள்.) (அருச்சுனா) தொழில்மறை நெறி உற்று=கர்மகாண்ட மயமான சுருதியின்வழியை யாசிரயித்து—சுவையே தெரிகுணம் வைப்பார்=சுவர்க்க சுகமாத்திரத்தையே அறியும் இராஜோகுண ரூப மான இச்சையை வைத்திருக்கும்(அவிவேகிகளாகிய)புருஷர்—நவை தரு குணம் முப்பால் நணுகிய பயன் உற்றோர்=(அனேகவித)குற்ற ங்களைத்தரும் புண்ணிய பாவ மிசிரமென்னுங் கர்மங்கண் மூன்றின் சம்பந்தமான சம்சாரப் பயன்களை (அவசியம்) அடைந்தவராவர்.—கவைதரு=(சீதோஷ்ண சுகதுக்காதி)துவந்துவங்களைத்தரப்பட்ட—குணம் உற்றோர்=இராஜோகுண ரூபமான பலேச்சையைப் பொருந் தினவர்களின்—கருமமதிடம் இற்றாம்=கர்மத்தின்கண்ணே இப்படி ப்பட்ட பயனேயுளதாம். (இங்ஙனங் கூறியவாற்றால் விவேகஞான த்துக் கவகாசமில்லை யென்பது கருத்து.)—[ஆயின், சம்சார நாசக மான விவேகஞான மடைதற் கென்னையோ வுபாயமெனின்?] நீ பலேச்சை யில்லாதவனாவாய்; [அஃதில்லாமற் போதற்கென்னையோ வுபாயமெனின்? சீதோஷ்ணாதி விருத்த தர்மங்களைச் சகிக்கிறவனா வாய்; [அவைகளைச் சகித்தற் கென்னையோவுபாயமெனின்?] சர்வதா சத்துவகுணத்தை யாசிரயிக்கிறவனாவாய்; அப்படியே யோகக்ஷேமங் களைக் கருதாதவனாய், அப்பிரமத்தனாவாய். இவ்வாறான மூலசுலோக த்தின் உத்தரார்த்தங்களை மொழிபெயர்த்தோர், 'அவைகெட வரு மப்பா லறிவின னெனநிற்பாய்' எனச் செய்யுளின் நான்காம் பாதத் திற் றொகுத்துக்கூறினர்; அப்பதங்கள் வெளியா யிருத்தலின், பொருளுரைத்திலேம்.—எ-று.



ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. யோகக்ஷேமம் = பூர்வங் கிடையாதவஸ்து கிடைப்பதுயோகம். கிடைத்தவஸ்துவின் பரிபால னம்க்ஷேமம். அப்பிரமத்தம்=மனமானது விஷயபாவசமாகாமை. ()

[ஸ்ரீ பகவானே சுவர்க்கமுதலிய பலன்களை விஷயமாகவுடைய சர்வகாமங்களையும் பரித்தியாகஞ்செய்து கர்மங்களைச்செய்கிறவனான நான் அவ்வக்கர்மங்களா லடைதற்குரியனவான சுவர்க்கமுதலிய சர் வானந்தங்களையும் அடையாதவனாவேனென்னும் அருச்சுனன் சங் கைக்கு ஸ்ரீ பகவான் பிரமானந்த மடையப்படின் அச்சர்வானந்தங் களும் அடையப்படுவனவாமென்று உத்தரமருளிச்செய்கின்றார்.]

குளமுத லியவற்றே குளிமுத லியதுய்ப்பா
னளவறு புனல்பெற்றா லவைகொள லருமைத்தோ
வளமறு கருமத்தால் வருசிறு சுவைவற்றா
வுளமகிழ் பிரமத்தே யுளகொள லெளிமைத்தால்.

(இ-ள்.) குளம் முதலியவற்றே = (சொற்பஜலமுள்ள) வாவி, கூப,தடாகாதிகளிலே—குளிமுதலியதுய்ப்பான்=ஸ்நானசமனபான திருப பிரயோஜனங்களை யனுபவிப்பவன்—அளவு அறு புனல் பெற் றால்=சர்வ திக்குகளிலும் நிறைந்திருக்கின்ற ஜலத்தையுடைய மகா

தடாகத்தை யடைந்தால்—அவை கொளல்=(அந்தச் சொற்ப ஜலமுள்ள வாவிமுதலியவற்றிற் பெறுநிற்கும்) அவ்வளவு பிரயோஜனங்களையும் பெறுதல்—அருமைத்தோ = அருமையோ?—(அதுபோல) வளம் அறு கருமத்தால்=வேதோக்தமான காமியகர்மங்களால்—வருசிறுசுவை=உளவாகாநிற்கும் பிரமலோக பரியந்தமுள்ள விஷயஜன்னியமான ஆனந்தங்கள் (எவ்வளவோ அவ்வளவும்)—வற்று=வாடாமல்—உளம் மகிழ்=(சகல பிராணிகளின்) உள்ளமும் (தனதானந்தலேசத்தால்)சந்தோஷிபாநிற்கின்ற—பிரமத்தே=பிரமானந்தத்தின்கண்ணே—உளகொளல்=உள்ளனவாகப்(பிரமநிஷ்டன்)பெறுதல்—எளிமைத்து=(அருமையன்று) எளிமையே.—எ-று. ஆல்-அசைநிலை.

மகாதடாகம்=சுத்தோதக சமுத்திரம். 'வற்றுவுளமகிழ்' என்றது, சர்வப் பிராணிகளும் பிரமானந்தத்தின் லேசமாத்திரத்தால் இன்புறுகின்றன வென்னுஞ் சுருதியின்பொருள். (சஉ)

[அந்தக்கரண சுத்தியின்பொருட்டு நிஷ்காமகர்மத்திலேயே உனக்கு அதிகாரமிருத்தலால் அதனையே நீ அனுஷ்டிக்க வேண்டுமென்னுங் கருத்தால் அதனிலக்கணம் ஸ்ரீபகவான் அருளிச்செய்கின்றார்.]

அறிவினை யறிகிற்பா யகிலமு மடைவுற்றே
பிறிபொழு தினிலொத்தே பெருவினை தனினிற்பாய்
நெறிதரு மறிவொட்டா வகைவினை தனினிற்பார்
சிறியவரொனை மிக்கோர் தெளிபவர் செயலைக்கேள்.

(இ-ள்.) அறிவினை அறிகிற்பாய்=புத்தியோகமென்னும் நிஷ்காமகர்ம (இலக்கண)த்தை (அருச்சுனா நீ) அறிவாய்;—அகிலமும் அடைவுற்றே பிறி பொழுதினில் = சகலமான சம்சாரபலன்களும் (உன்னை)அடைந்து நீங்குங்காலையில்—ஒத்தே=சமமானமனமுடையனாகவே—பெருவினைதனில் நிற்பாய்=பெரிதான (உனது) கர்மத்தில்நிற்பாய்; (இங்ஙனம் பிராப்தி,அப்பிராப்திகளில் மனமானது சமமாயிருக்கையேகர்மயோகமாம்.)—[காமியகர்மத்தைநிந்திக்கின்றார்.] நெறி தரும் = (மோட்சத்திற்குச் சாதனமான ஆன்மஞானத்தைச் சித்தசுத்தி)வாயிலால் தருகின்ற—அறிவு ஒட்டாவகை=புத்தியோகமானதுவெகுதூரமாய் விலகும்படிக்கு—வினைதனில்நிற்பார்=(பலேச்சையோடுகூடிக்) கர்மத்தில் நிற்பவர்—சிறியவர்=கிருபணராம்.—மிக்கோர் = நிஷ்காம கர்மமுடையராய்—எனை= (பரமான்மாவான என்னை—தெளிபவர்செயலைக் கேள்=சாட்சாத்கரிப்பவாதுசெய்கையை அருச்சுனா கேள்.—எ-று.



ந.கூ-ம் செய்யுளின் முதற்பாதத்திற் கூறிய புத்தியின்வழியே செய்யாநிற்குங் கர்மயோகத்திற்குப் புத்தியோகமென்றுபெயர். பிராப்தி. அப்பிராப்திகளில் சந்தோஷ விஷாதங்களை அடையாதிருத்தலையே இங்கே சமமெனப்பட்டது. கிருபணர்-நிக்ருஷ்டர். (சரு)

[புத்தியோகத்தின் சிரேஷ்டத்தன்மையை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

விடலரும் வகையிற்றும் வினைப்பய னதுவிட்டே
கடவிய வினைமுட்டா வகைசெய்து கழிவுற்றோ
னுடலொடிவ் வுலகத்தே யுளனென நிகழ்பெற்றே
யிடரினை யறவிட்டா னெனையறி வகைபெற்றான்.

(இ-ள்.) விடல் அரும்வகை இற்றும்=விடுதற்கரியதன்மையினையுடையவான—வினைப் பயனது விட்டே=நித்தியாதி கர்மங்களின் பயனைப் பரித்தியாகஞ்செய்து—கடவிய வினை=(அவனவனுக்குத் தகுதியாகச் சாஸ்திரங்களில்) விதித்த கர்மங்களை—முட்டாவகை செய்து=பிராப்தி,அப்பிராப்திகளில் சந்தோஷவிஷாதங்களையடையாதபடி. செய்து — கழிவுற்றோன் = (சித்தசுத்தி, ஞானப்பிராப்திகளின்வாயிலாகப் புண்ணிய பாவங்களினின்றும்)விடுபட்டவனாய்—உடலொடு இவ்வுலகத்தே உளன் என நிகழ்பெற்றே=தேகத்தோடுகூடி இவ்வுலகின்கண்ணே உளனென்று சொல்லும்படிக்குச் சீவித்திருந்தே—இடரினை அறவிட்டான் எனை அறிவகை பெற்றான் = ஜன்மபந்த நிர்முக்தனாய் (விஷ்ணுபதமென்னும் சர்வ உபத்திரவங்களும் இறந்த மோட்சரூபனான) என்னை அறிந்தபடியே அடைந்தவனாவன்.—எ-று.

'விடலரும்' என்றது, கர்மத்தின் விசேஷணம். (சசு)

[நிஷ்காமகர்மானுஷ்டான வாயிலால் மோட்சமடையுங் கிரமம் இப்போது ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

தருபய னதுவிட்டே தரும்வினை செயலுற்றா
லருமய லறுமற்றா லறிவுறு மறிவுற்றா
லிருவினை விடும்விட்டா லிழுவொடு பெறுதற்பா
லொருமனம் வருமத்தா லெனையுணர் வுணர்வப்பால்.

(இ-ள்.) தரு பயனது விட்டே=(கர்மங்கள்) தரப்பட்ட (சுவர்க்க முதலிய) பலன்களில் இச்சையைப் பரித்தியாகஞ்செய்து—தரும் வினை செயலுற்றால் = செய்யத்தக்கவைகளான நித்தியாதி கர்மங்

சலை (ஈசுரார்ப்பணபுத்தியோடுகூடிச்) செய்யில்—அருமையல் அறும்=
அரிய பாவங்களற்றுச் சித்தமானது சுத்தமாம்;—அற்றால்=பாவங்க
ளற்றுச் சித்தமானது சுத்தமானால்—அறிவு உறும்=(அந்தச் சுத்த
மான சித்தத்தில் நித்தியாநித்திய) விவேகமானது பொருந்தும்;—
அறிவு உற்றால்=(அந்நித்தியாநித்திய) விவேகமானது பொருந்தினால்
—இருவினை விடும்=புண்ணியபாவங்களில் விருப்பறும்;—விட்டால்=
(புண்ணிய பாவங்களில்) விருப்பறில்,—இழவொடு பெறுதற்பால் ஒரு
மனம் வரும்=அலாப, இலாபங்களில் சமசித்தமானது உளதாம்;—
அத்தால்=அதனால்—எனை உணர் உணர்வு = ஆன்மாநான்மவிவே
சம் உளதாம்;—அப்பால்=ஆன்மாநான்மவிவேகம் உளதானபின்,—
எ-று.

இது குளகம்.

(௪௫)

[இதுவுமது.]

பேதைமை யடைகுற்றே பிறிதுறு மனமற்றே
யேதமி றெளிவுற்றா னியாதொரு பொழுதப்போ
தோதலொ டுலகத்தோ ருரைகளி னுளம்விட்டா
னாதலி னெனைமெய்ப்பா டடைதரு நெறியைக்கேள்.

(இ-ள்) பேதைமை அடைகுற்றே பிறிது உறும் மனம் அற்றே
=அவிவேகத்தை யடைந்து (அவ்வவிவேகவசத்தால்) அன்னியமான
தேகாதிகளில்இஃதியான், இஃதென்னதென் னும்அபிமானம்பொருந்
தும் மனமானது ஒழிந்து—யாதொருபொழுது=யாதொருகாலத்
தில்—ஏதம் இல் தெளிவு உற்றான்=அத்தியந்தம் அந்தக்காணசுத்
தியை யடைந்தனனோ— அப்போது=அந்தக்காலத்தில்—ஓதலொடு
=(இனிக்கேட்கவேண்டுவதும்,முன்கேட்டதுமான) வைதிகசப்தங்
களிலும்,— உலகத்தோர் உரைகளின் = லௌகிகசப்தங்களிலும்—
உளம் விட்டான்=வைராக்கிய முடையவனுவன்;—ஆதலின்=(அத்
தியான்ம சாஸ்திரத்திற்கு வேறான லௌகிக, வைதிக சப்தங்களால்
முன் விட்சேபமடைந்திருந்த புருஷனானவன் அவைகளால் பயனின்
றென்று அவைகளில்) வைராக்கியமடைந்ததனால்—எனை=(பிரத்திய
கபின்னபரமான்மாவான) என்னை —மெய்ப்பாடு=உள்ளவண்ணமே—
அடைதரும்=அடையாநிற்பன்;—நெறியைக் கேள்=அந்த வழியை
(அருச்சுனா நீ இனி)க் கேள்.—எ-று.

'ஓதல்' என்றது ஆகுபெயர்.

(௪௬)

[விவேக வைராக்கியங்கள் சித்தித்திருந்தாலும் தத்துவஞானம்
அடையுங்காலத்தை இப்போது ஸ்ரீபகவான் காண்பிக்கின்றார்.]



[வேறு.]

தலைநின்ற பொருளைய மின்றியே சலியாதே
நிலைநின்றா னியாதொருபோ தப்போதே நெறிநின்றான்
கலைநின்ற மெய்ஞ்ஞான யோகங்கண் ணுறுமென்னச்
சிலைநின்ற தோள்விசய னிவ்வண்ணஞ் செப்பினான்.

(இ-ள்.) தலை நின்ற பொருள்=(எல்லாப்பொருட்கும்) ஆதியாய்
நிற்கின்ற பரமான்மாவின்கண்ணே—ஐயம் இன்றியே=சந்தேக மில்
லாமலும்,—சலியாதே=விபர்யயமில்லாமலும்— யாதொருபோது=
யாதொருகாலத்தில்—நிலைநின்றான் = ஸ்திதமாகநின்றனனோ— அப்
போதே=அந்தக்காலத்திலே—நெறி நின்றான்=இந்நெறியினின்ற
யோகியானவன்—கலை நின்ற மெய்ஞ்ஞான யோகம் = சாஸ்திரங்க
ளிற் கூறியுள்ள தத்துவஞானமென்னும் யோகத்தின்பயனை—கண்
ணுறும் என்ன=அநுபவியாநிற்பனென்று ஸ்ரீ பகவான் அருளிச்
செய்ய—சிலை நின்ற தோள் விசயன்=தனுசுபொருந்திய புயத்தினை
யுடைய அருச்சுனன்—இவ்வண்ணம் செப்பினான்=இந்தப்பிரகாரம்
வினாவினான்.—எ-று.

'யோகம்' என்றது பிரமான்ம ஐக்கியமெனினும் பொருந்தும்.()

[முற்செய்யுளி லருளிச்செய்த ஆன்மதத்துவஞானியின் இலக்
கணமறிய இச்சைகொண்ணி அருச்சுனன் வினாவுகின்றான்.]

[வேறு.]

இவ்வகை யவனை நின்றோ ரெவ்வகை யுரைப்பா ரந்தச்
செய்வகையிலாதோன்செய்யுஞ்செயல்களென்செப்புமாறென்
மெய்வகையருள்செய்கென்ன வின்னையேமுதலாக்கொண்ட
வைவகைப் பொருளு மீன்ற வவனிவை யருளிச் செய்வான்.

(இ-ள்.) இவ்வகை அவனை = முன்சொன்ன சமாதியின்கண்
ணுள்ளஸ்திதப்பிரக்ஞனை—நின்றோர்=மற்றையர்—எவ்வகை உரைப்
பார் = எப்படிப்பட்ட இலக்கண முடையவனாகக் கூறுவர்? (இஃது
முதல்வினா.)—அந்தச்செய்வகைஇலாதோன்=அந்தக்கிருதகிருத்திய
னான ஸ்திதப்பிரக்ஞன்—செய்யும் செயல்கள் என்=(சமாதியினின்று
மெழுந்தபோது) செய்யாநிற்குஞ் செய்கைகளென்னை?(சமாதியினின்
றும் வெளிப்பட்ட சித்தத்தை நிக்கிரகஞ்செய்யும்பொருட்டு நேத்திர
முதலிய வாகியேந்திரிய நிக்கிரகம் எவ்வாறு செய்வன்? இஃதிரண்
டாம் வினா. வாகியேந்திரிய நிக்கிரகம் இல்லாதகாலத்தில் எவ்வாறு

விஷயங்களையடைவன்? இஃது மூன்றாம் வினா; இவ்விரண்டு வினாக்களையுஞ் சேர்த்து மொழிபெயர்த்தோர், 'செய்யுஞ் செயல்களென்' என்று பன்மையாகக் கூறினர்.)—செப்பும் ஆறு என்=ஸ்துதியிலும், நிந்தையிலும் உளவாகின்ற சந்தோஷ த்வேஷபூர்வகமான வசனங்களில் எவ்வாறு உரையாடுவேன்? (இஃது நான்காம் வினா.)—மெய்வகை=உள்ளபடியே—அருள்செய்க என்ன = அருளிச்செய்வீராகவென்று அருச்சுனன் வினவ—விண்ணையே முதலாக் கொண்ட ஐவகைப் பொருளும் ஈன்ற அவன்=ஆகாசத்தையே ஆதியாகவுடைய ஐந்து கூறுபாடான பூதங்களையும், (தனுவண்டபுவனபோகங்களையுஞ்) சிருஷ்டித்தருளிய அந்தக்கிருஷ்ணசுவாமியானவர்—இவைஅருளிச்செய்வான்=இவ்வினாக்களின் பயன்களை அனுக்கிரகிப்பார்.—எ-று.(௪அ)

[சாதகராயினோர் எவற்றை ஞானநிமித்தம் பிரயத்தனபூர்வகமாகச்சாதிக்கின்றனரோ அவைகளே சாத்தியர்க்குச் சுபாவசித்தவிலக்கணமாம்; ஆதலால்,சாத்தியரிலக்கணங்கூறினதன்பின்னர்ஞானத்தின் அந்தரங்க சாதனங்களை அத்தியாய முடியும் பரியந்தங் கூறத்தொடங்கி முன்னர் மூன்றுவினாக்கட்கு உத்தரம் ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்]

அறிவினிற் றன்னா லின்புற் றனைத்தவா வினையு நீக்கி
வெறிதரு வெகுளி காம மயக்கநீத் தின்ப துன்பம் [துப்
வறிதெழு பொழுதில் வாட்ட மகிழ்ச்சியென் றிவையு மாய்த்
பொறிதரு புகழுந் தீங்கும் போற்றல்போற் றுமை போக்கி.

(இ-ள்.) (அருச்சுனா! சமாதியின்கண்ணுள்ள அந்தப் புருஷன்) அனைத்து அவாவினையும் நீக்கி=(தனது மனத்தின்கண்ணுள்ள) சர்வகாமங்களையும் பரித்தியாகஞ்செய்து—அறிவினில் தன்னால் இன்புற்று=ஆன்மாவின்கண் ஆன்மாவினாலேயே திருப்தியடைந்து—வெறிதரு வெகுளி காமம் மயக்கம் நீத்து = மயக்கத்தைத் தருவனவான குரோதம், இராகம், பய(மென்னும் இவைகளை) நீக்கி—இன்ப துன்பம்=சுகதுக்கங்கள்—வறிது எழுபொழுதில்=மித்தையாகத் தோன்றுங்காலத்தில் — மகிழ்ச்சி வாட்டம் என்ற இவையும் மாய்த்து = (அவற்றால் முறையே உளவாகாநிற்கும்) சந்தோஷகிலேசங்களென்கின்ற இவைகளையுங் கெடுத்து—பொறி தரு புகழும் தீங்கும்=பழவினை தரப்பட்ட ஸ்துதியிலும், நிந்தையிலும்—போற்றல் போற்றுமை போக்கி=(முறையே எழாநிற்கும்) விருப்பும், வெறுப்பும் ஒழித்து, எ-று. இது குளகம்.

(௪௯)



[இதுவுமது.]

ஆமைதன் னுறுப்போரைந்துந் தன்னுளே யடக்குமாபோற்
றீமைசெய் புலன்களைந்துந் தன்னுளே செறியச்சேர்த்தி
வாய்மையு ணிகழுமின்னே வழுத்தவும் படுகின்றானாற் [லாம்.
றாய்மைசெய் தெவையுநாளுஞ் சொல்லுவ தவன்றன்சொல்

(இ-ள்.) ஆமை=கூர்மமானது—தன் உறுப்பு ஓர் ஐந்தும்=தனது சிரசுமுதலிய அவயவங்கள் ஐந்தனையும்—தன் உளே அடக்குமாபோல் = தனது சரீரத்தின்கண்ணே ஒடுக்கிக்கொள்ளுந் தன்மைபோல—தீமைசெய் புலன்கள் ஐந்தும்=துன்பத்தைப் பயவாநிற்குஞ் சுரோத்திராதி இந்திரியங்கள் ஐந்தனையும்—தன் உளே செறியச் சேர்த்தி=(சப்தாதி விஷயங்களினின்றும்) தனதுள்ளே சங்கோசமாகும்படி பண்ணி—வாய்மையுள் நிகழும்=ஆன்மாவின்கண் ஒளிராநிற்பன்.—இன்னே வழுத்தவும் படுகின்றான்=இப்படிப்பட்ட இலக்கண முடையவனாக (அறிஞரால்) சொல்லவும் படுகின்றான்.—எவையும் தூய்மைசெய்து = அனுகூலப் பிரதிகூலங்களான பதார்த்தங்களனைத்திலும் விருப்பு, வெறுப்பின்றி—நாளும் சொல்லுவது = எப்பொழுதும் அவைகளை உதாசீனமாக வசனிப்பதே—அவன்றன்சொல் ஆம்=ஸ்திதப்பிரக்ஞனுடைய வசனப்பிரகாரமாம்,—எ-று. ஆல்-அசைநிலை.

இரண்டு செய்யுளும் ஒருதொடர்.

மாலை, சந்தனமுதலிய விஷயங்களை வேண்டாது கேவலம் ஞானமாத்திரத்தினால் ஆன்மாவின்கண் ரமித்தலின், 'தன்னாலின்புற்று' என்றார். ஸ்திதப்பிரக்ஞன் காலபேதத்தால் சமாகிதனென்றும், உத்திதனென்றும் இருவகையாயிருப்பன்; அவ்விருவகையில் தனது மனத்தின்கண்ணுள்ள சர்வகாமங்களையும் பரித்தியாகஞ்செய்து ஆன்மாராமனாக இருப்பதே சமாகிதஸ்திதப் பிரக்ஞனிலக்கணம். சுகதுக்கங்களிற் கலங்காத மனமுடையனாய் இராகம், பயம், குரோதங்கள் இன்றி நிரந்தரம் ஆன்மானுசந்தானபரனாக விருப்பதே உத்திதஸ்திதப்பிரக்ஞனிலக்கணம்; இவ்விரண்டும், "இவ்வகையவனை நின்றோ ரெவ்வகையுரைப்பார்" என்னும் வினாவுக்குத்தரம். அனுகூலப் பிரதிகூல விஷயங்களில் விருப்பு, வெறுப்பின்றி அவற்றை உதாசீனமாக வசனிப்பதே ஸ்திதப்பிரக்ஞனது வசனப்பிரகாரம்; இஃது, 'செப்புமாறென்' என்னும் வினாவுக்குத்தரம்; இதனை, ௪அ-ம் செய்யுளில் செய்யுள் நடைக்கியைய நான்காம் வினா

வென்று கூறினேம். மூலசுலோகத்திற்கியைய இதனை, இரண்டாம் வினாவென்றே கொள்ளல்வேண்டும். மூலசுலோகத்தில் நான்காம் வினா ஸ்திதப்பிரக்ஞன் எப்படிச் சஞ்சரிப்பனென்பது; இதற்கு விடை இனி, ௫௪-ம் செய்யுண்முதல், ௯-செய்யுட்களா லருளிச்செய்யப்படும்; ஆண்டறிக. இந்திரிய நிக்கிரகமாகாவிடின், மனமானது நிச்சலபாவம் பொருந்தாதென்று அவைகளை வசஞ்செய்துகொண்டு ஆன்மாராமனாகவிருப்பதே அவனது இருப்பு; இஃது எப்படியிருப்பனென்னும் வினாவுக்குத்தரம்; இங்ஙனம் வகுத்து விடைகூறிய வடநூற்பொருளை, 'வாய்மையு ணிகழுமின்னே வழுத்தவும் படுகின்றானற், றூய்மைசெய் தெவையு நாளுஞ் சொல்லுவ தவன்றன்சொல்லாம்.' என்று தொகுத்துக் கிஞ்சித் விகற்பமாக மொழிபெயர்த்த ஆசிரியர் கூறினரென்றறிக. (௫௦)

[சப்தாதி விஷயங்களினின்றும் சுரோத்திராதி இந்திரியங்களின் நிவிர்த்தி ஸ்திதப்பிரக்ஞைக் கேதுவாமென்றால் ரோகம், உபவாசாதி நிமித்தங்களால் மூடபுருஷரின் சுரோத்திராதி இந்திரியங்கட்கும் சப்தாதி விஷயங்களினின்று நிவிர்த்தி காணப்படுகிறது; படவே, இவர்களும் ஸ்திதப்பிரக்ஞராதல் வேண்டுமென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

குறையுமாப் பிணிப்புற்றாலுங்கொண்டவிப் புலன்களெண்ணி
லறைகட லனையநெஞ்சத் தவாவரு னறிவினில்லான்
மறைமொழி பலவுமோதி யடக்குவான் மனத்தைவாங்கிப்[ய்.
பொறைகெடப் புலன்களைந்தும் பொறியிலே புகட்டுங்கண்டா

(இ-ள்.) அறிவில் நில்லான்=ஆன்மாவின்கண்ணே ஸ்திதிபெறாத பகிர்முகனான அஞ்ஞானியானவன்—கொண்ட இப்புலன்கள்=(தான்கருவியாகக்) கொண்ட சுரோத்திரமுதலிய இந்திரியங்களை—குறையுமா=(தவசுமுதலிய நிமித்தங்களால்) நிரோதமாகும்படி—பிணிப்புற்றாலும்=தகைந்தாலும்—எண்ணில் அறை கடல் அனைய நெஞ்சத்து அவா அரான்=அளவிறந்த திரையையுடைய கடல்போலும் சித்தத்தின்கண்ணுள்ள விஷய இராகம் நிவிர்த்தியாகாமலே விஷயநிவிர்த்தி யடைகிறான். (விஷயானுபவ நிவிர்த்தியானாலும் விஷயாபிலாஷை நிவிர்த்தியாகாதென்பது கருத்து.)—(விஷய இராகமும் பரமான்மாவைச் சாட்சாத்கரித்திருக்கிற ஸ்திதப்பிரக்ஞனுக்கே நிவிர்த்தியாமென்பதெஞ்சிநின்றது; இங்ஙனங் கூறியவாற்றால் பரமான்மாவின் சாட்சாத்காரத்தாலல்லாமல் இராகத்தோடுகூட விஷயநிவிர்த்தி கூடாததலால் அதிகாரியானோன் இராகத்தோடு



கூட விஷயநிவிர்த்தி செய்யத்தக்க ஞானரூபமான பிரக்ஞையின் ஸ்திரத்தன்மையை அவசியம் சம்பாதித்தல் வேண்டுமென்பது பெறப்படுகின்றது.) [பிரக்ஞையின் ஸ்திரத்தன்மையில் வாகியேந்திரிய நிக்கிரகமும், மனோநிக்கிரகமும் அசாதாரண காரணமாம்; அவை செய்யாவிடில் பிரக்ஞையானது நாசமாமென்னும் பொருளை அருளிச்செய்தற்பொருட்டு முன்னர் வாகியேந்திரிய நிக்கிரகஞ் செய்யாவிடத்து வருந் தோஷத்தை யருளிச்செய்கின்றார்.] மறை மொழி பலவும் ஓதி=(குருவினிடத்தில்) சுருதி வாக்கியங்கள் பலவும் படித்து—அடக்குவான் மனத்தை வாங்கி=(தம்மை) நிக்கிரகிக்கும் பிரயத்தனமுடைய விவேகியின் மனத்தையும் (பலாத்காரமாக) இழுத்து—பொறை கெட=(அவனது) தைரியங்கெடும்படி—புலன்கள் ஐந்தும்=சுரோத்திராதி இந்திரியங்கள் ஐந்தும்—பொறியிலே புகட்டும் கண்டாய்=சப்தாதி விஷயங்களிலே புகுவிக்குங்கண்டாய்(அருச்சுனா).—எ-று.

(௫௧)

[வாகியேந்திரிய நிக்கிரகஞ் செய்தாலும் அந்தரிந்திரியமான மனோநிக்கிரகஞ் செய்யாவிடில் வரும் அனர்த்தபரம்பரையை இரண்டு செய்யுட்களால் ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

ஆதலாற் புலன்களைந்து மடக்கரி தடங்காதாகிற்
றீதிலாக் கருத்துந்தீய வவற்றிலே செல்லுஞ்சென்றாற்
காதலாற் புகைந்துவெய்ய காமமாய்க் கொளுந்திக்காம
மேய்தலா காமைதீய வெகுளியா யெரியுமன்றே.

(இ-ள்.) ஆதலால் = (முன்சொன்ன) காரணத்தால்,—புலன்கள் ஐந்தும் அடக்க அரிது=சுரோத்திரமுதலிய இந்திரியங்கள் ஐந்தையும் (சர்வான்மாவான வாசுதேவனே நான் அன்னியனல்லனென்னும் நிரந்தர தீர்க்க காலானுஷ்டான சாமர்த்தியத்தினாலும், விஷயங்களில் தோஷதரிசனாப்பியாச சாமர்த்தியத்தினாலு மல்லாமல்) வசம்பண்ணக்கூடாது.—தீது இலாக் கருத்தும் அடங்காது ஆகில்=(வாகியேந்திரியங்க ளடங்கியும்,) குற்றமற்ற அந்தரிந்திரியமானமனமும் அடங்காதானால்—தீய அவற்றிலே செல்லும்=தீமையான சப்தாதி விஷயங்களிலே (இவைசுகசாதனமென்று) செல்லும்;—சென்றால் = (அங்ஙனம்) சென்றதானால்,—காதலால் புகைந்து = (அவ்விஷயங்களிற் பிரீதியுளதாய்) அவ்விஷயப்பிரீதியினால் (அது) புகைந்து—வெய்யகாமம் ஆய்க்கொளுந்தி=விஷயபரவச ரூபமாய்ப்பற்றி—காமம் எய்தல் ஆகாமை = அந்தக்காமித்த பதார்த்தம் தனக்கடையாமற் (போகும்படி ஒருவனால் விகாதம் பண்ணப்படில்)—தீய

வெகுளிஆய் எரியும்=கொடிய குரோதரூபமாய் (ப் பெருந்தரு தான் பெற்றதீயால் வேதல்போல்) வேகும்.—எ-று. அன்று, ஏ-அசை நிலைகள்.

காதல்=இது நமக்குச் சுகசாதனமென்னுஞ் சோபனுத்தியாச ரூபப்பிரீதிவிசேஷம். காமம்=இவ்விஷயம் நமக்கு எப்போதடையப் படுமென்னுந் திருஷ்ணை; அல்லது, விஷயபாவசம். சங்கம், காமம், குரோதமென்னும் இவை ஒன்றற்கொன்று மேன்மேல் தக்கம் பயத்தலின், 'புகைந்து பற்றியெரியும்' என்றார். காதலெனினும், சங்கமெனினும் ஒக்கும். (௬௨)

[இருவுமது.]

எரிநிகர் வெகுளிபொங்க மயக்கம்வந் தெய்துமெய்தத்
தெரிபவை சிதையுமுள்ளந் தெரிந்தவை சிதைந்தபோதே
யுரியதன் னுணர்வுமாயு முணர்வுமாய்ந் தொழிந்தவாறே
யரியவென் றறிஞர்பேசு மனைத்துமாய்ந் தொழியுமன்றே.

(இ-ள்.) எரி நிகர் வெகுளி பொங்க=தீயையொப்பான குரோதம் அதிகரிக்க—மயக்கம் வந்து எய்தும் = (காரியாகாரிய விவேகாபாவமான) மோகமானது வந்துபொருந்தும்;—எய்த = அம்மோகமானது) வந்து பொருந்தவே,—தெரிபவை சிதையும் = குரு சாஸ்திரங்களால் அறிந்த அர்த்தங்களின் அனுசந்தான ரூபஸ்மிருதிகளானவை கெடும்;—உள்ளம் தெரிந்தவை சிதைந்தபோதே = உள்ளத்தில் குருசாஸ்திரங்களாலறிந்த அர்த்தங்களின் அனுசந்தானரூபஸ்மிருதிகளானவை கெட்டபொழுதே—உரிய தன் உணர்வு மாயும்=முக்தியடைதற்குரிய (அத்துவிதான்மாகார மனோவிருத்திரூபமான) புத்தியானதுகெடும்;—உணர்வு மாய்ந்து ஒழிந்த ஆறே= அந்தப் புத்தியானது கெட்டொழிந்தவழியே—அரிய என்று=அடைதற்கரியனவென்று—அறிஞர்பேசும்=அறிஞர்புகழாநிற்கும்—அனைத்தும்மாய்ந்துஒழியும்=சர்வபுருஷார்த்தங்களும் அடையப்படாவாம். —எ-று. அன்று, ஏ-அசைநிலைகள். (௬௩)

[முற்செய்யுட்களில் வாகியேந்திரிய நிக்கிரகஞ்செய்தும் மனோநிக்கிரகஞ் செய்யாவிடில் வருந்தோஷங்களை யருளிச்செய்து இப்போது மனோநிக்கிரகஞ்செய்து வாகியேந்திரிய நிக்கிரகமாகாவிடினும் முன்சொன்ன தோஷங்கள் அடையப்படாவென்னும்பொருளை அருளிச்செய்பவராய் ஸ்ரீ பகவான் எப்படிச் சஞ்சரிப்பன் என்னும் நான்காம்வினவிற்குத்தரம் கூ-செய்யுட்களால்அருளிச்செய்கின்றார்.]



வேண்டல்வேண் டாமையின்றி மிகைசெலாப் புலன்களாலே
மாண்டபோ கங்கடுய்ப்பான் மனங்கலங் குறான்மற்றத்தா
லீண்டிய தெளிவுண்டாமாற் றெளியவே யெல்லையின்றிப்
பூண்டநோய் நீங்குநீங்கப் புலனிலை நிற்குமன்றே.

(இ-ள்.) வேண்டல்வேண்டாமைஇன்றி=(ஒன்றில்) விருப்பும், (ஒன்றில்)வெறுப்புமில்லாமல்—மிகைசெலாப் புலன்களாலே=(தனது)வசமாகச்செல்லுஞ்சுரோத்திராதி இந்திரியங்களினாலே—மாண்ட போகங்கள் துய்ப்பான்=சாஸ்திரவிகிதமான போகங்களையனுபவியாநிற்கும் (சுவாதீனசித்தமுடைய) புருஷன்—அத்தால் மனம் கலங்குறான்=அப்போகங்களால் மனங்கலங்கான். (௬உ-௬௩-ம் செய்யுட்களிற் சொல்லிய அனர்த்தங்களையடையானென்றபடி.)—(பின்னையோ) ஈண்டிய தெளிவு உண்டாம்=(மனத்தின்கண்ணே பிரமான்மசாட்சாத்காரத்திற்குயோக்கியமான) மிக்கதெளிவே உளதாம்;—தெளியவே= (மனமானதுமிக்க) சொச்சதன்மையடையவே,—எல்லை இன்றிப் பூண்ட நோய் நீங்கும்=அஞ்ஞானகாரியமான சர்வதுக்கங்களும் நாசமாம்;—நீங்க= அவை நாசமாகவே,—புலன் நிலை நிற்கும்=(பிரமான்மாவின் அபேதவிஷயமான) புத்தி ஸ்திரமாம்.—எ-று. மற்று, ஆல், அன்று, ஏ-அசைநிலைகள். (௬௪)

[மேலைச் செய்யுளில் அந்வயமுகமாக வருளிச்செய்த பொருளை இனி வ்யதிரேகமுகமாக வற்புறுத்துகின்றார்.]

அடுத்தலைப் புலன்செயாதார்க் கறிவில்லை யறிவின்றாக
விடுத்தமெய் யுணர்வின்றாமான் மெய்யுணர் வில்லையாகிற்
றொடுத்தபின் சித்தசாந்தி தோன்றிடா ததுதோன்றாதே
லெடுத்தநல் லின்பந்தானு மில்லையே யிசைக்கவேண்டா.

(இ - ள்.) ஐம்புலன் அடுத்தல் செயாதார்க்கு=பஞ்சேந்திரியங்களை நிக்கிரகஞ்செய்யாதவர்க்கு—அறிவுஇல்லை=(சாஸ்திராசாரியோபதேசங்களால்) ஆன்மவிஷயமான புத்தி உளதாவதில்லை;—அறிவு இன்றுஆக=ஆன்மவிஷயமானபுத்தி இல்லையாகவே,—விடுத்தமெய் உணர்வு இன்று ஆம்=விஜாதீயவிருத்தியொழிந்தசஜாதீயவிருத்திப் பிரவாகரூபமான ஆன்மத்தியானம் உளதாவதில்லை;—மெய் உணர்வு இல்லையாகில்=ஆன்மத்தியானம் இல்லையானால்,—பின் தொடுத்த= பின்னர்த் (தாம்) தொடங்கிய—சித்தசாந்தி தோன்றிடாது=(சாட்சாத்காரரூபமான) சித்தசாந்தியானது உளதாதலில்லை;—அதுதான்

ருதேல்=அச்சித்தசாந்தி உண்டாகாதேல்,—எடுத்த நல் இன்பந்தானும் இல்லையே=(சித்தசாந்திக்குப்பயனுகச் சாஸ்திரங்களில்) எடுத்துக் கூறுகிற்கும் மோட்சானந்தசுகமும் உளதாவதில்லை;—இசைக்க வேண்டா=(இது சாஸ்திரங்களிற் பிரசித்தமாவதால்) நாம் சொல்ல வேண்டா.—எ-று. ஆல்-அசைநிலை. (ருரு)

[“ஐம்புலனடுத்தல் செயாதார்க்கறிவில்லை” என்று முற்செய்யுளிற் கூறியதற்கு ஏதுவை ஸ்ரீபகவான் அருளிச்செய்கின்றார்.]

அறுசெல் பொருள்கடுய்க்கு மைம்புல னுக்கும்பின்னே
காலொடர் நெஞ்சமந்தப் புலன்றனைக் கலக்குமாங்கே
யூறிய கடலுளோடு கலத்தினை யுடன்செல்காற்றே
வேறுசெய் தறைந்துமாய்த்து வீழ்த்துமா போலவேயாம்.

(இ-ள்.) பொருள்கள் துய்க்கும் ஆறு செல்=(தத்தம்) விஷயங்கள் [illegible] வழிகளில் (தாம் வேண்டியவண்ணம்) சஞ்சரியாநிற்கின்ற—ஐம்புலனுக்கும் பின்னே=ஐந்திந்திரியங்கட்கும் பின்னே—கால் தொடர் நெஞ்சம்=(புருஷனால் நியமிக்கப்படாமல் அவை சென்றவழியே அவைக்கு) அனுகூலமாகச் செல்கின்ற மனமானது—அந்தப் புலன்றனைக் கலக்கும்=சாதகபுருஷனுடைய ஆன்மவிஷயமான புத்தியைநாசஞ்செய்து அவனைவிட்சேபமடையப் பண்ணும்;—[இஃதெதுபோலென்னில்?] ஊறிய கடலுள் ஓடு கலத்தினை=நீர்நிரம்பிய சமுத்திரத்தில் ஓடுகின்ற கப்பலை—உடன் செல் [illegible] காற்றே=அதனோடு (அதற்கனுகூலமாகச்) செல்கின்ற வாயுவே—வேறு செய்து அறைந்து மாய்த்து=பிரதிகூலமாய் அடித்துடைத்து—வீழ்த்துமா போலவே ஆம்=(அக்கடலின்கண் [illegible]ண) அமிழ்த்துந் தன்மை போலவேயாம்.—எ-று. ஆங்கு, ஏ-அ[illegible]சநிலைகள்.

இங்ஙனங் கூறியவாற்றால், இந்தி[illegible]நிக்கிரகமுள்ள புருஷனுடையபிரக்ஞையானது ஸ்திரமாமெ[illegible]பது பெறப்படுகின்றது. (ருசு)

[இப்போது ஸ்திதப்பிரக்ஞ[illegible]டைய சர்வேந்திரியங்களின் நிக்கிரகம் சுபாவமாகவே சித்தித்[illegible]ருக்கிறதென்னும் பொருளை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்[illegible].]

யாதொரு பொ[illegible]ளையெல்லா வுயிர்களு மிருள்போற்காணு
வோதரு ஞ[illegible]யத்தை யுளங்கையிற் கனிபோற்காணும்
யாதொரு[illegible]பொருளையெல்லா வுயிர்களு மென்றுங்காணுங்
காதலி[illegible] ஞானியத்தைக் கண்ணினுற் றெரியக்காணுன்.



(இ-ள்.) யாதொரு பொருளை=யாதொரு ஆன்மவிஷயமான புத்தியை—எல்லா உயிர்களும்=சர்வப்பிராணிகளும்—இருள்போல் காணு=இரவுபோன்றறியாவோ—ஓது அரு ஞானி=சொல்லுதற்கரிய(இந்திரியநிக்கிரகமுடைய)ஞானியானவன்—அத்தை=அவ்வான்மவிஷயமான புத்தியை—உளங்கையில் கனிபோல் காணும்=கரதலாமலகம்போற் கண்டுகொண்டிருப்பன்.—யாதொருபொருளை=யாதொரு சப்தாதிவிஷயமானபுத்தியை—எல்லா உயிர்களும்=சர்வப்பிராணிகளும்—என்றும் காணும்=எப்பொழுதுங் காணுநிற்குமோ—காதல் இல்ஞானி=விஷய ஆசையொழிந்தஞானியானவன்—அத்தைக் கண்ணினுல் தெரியக் காணுன்=அந்தச்சப்தாதிவிஷய புத்தியைக் கண்ணினுல்தோன்றப் பாரான்.—எ-று.

‘இருள்’ என்றது, ஆகுபெயர்.

எப்போதும் பிரகாசரூபமான ஆதித்தமண்டலம் கூகைகட்கு அந்தகாரமாவதுபோல நித்தியசித்தமாய், அகண்டப்பிரகாசமான ஆன்மவஸ்து தேகான்மபுத்தியையுடைய அவிவேகிகட்குவிஷயமாகாமையினுல் ‘இருள்போற்காணு’ என்றும், தேகாதிகட்கு விலட்சணனுய், ஆன்மாராமனுன ஞானநிஷ்டன் பிரத்தியகபின்னபரமான்மாவை அபரோட்சமாய் அனுபவித்திருத்தலால், ‘அத்தையுளங்கையிற் கனிபோற்காணும்’ என்றும், துவிதப்பிராந்திக்கு மூலமான அவித்தையை விவேகஞானத்தினுற் போக்கி அத்துவிதான்மவஸ்துவைச்சாட்சாத்கரித்திருக்கிற ஞானிக்குச் சகத்தனைத்தும் அன்னியமாகப் பிரதீதியாகாமல் “ஆன்மாவே யீதனைத்தும்” என்னுஞ் சுருதிப்படி ஆன்மாவாகவே பிரதீதியாவதால், ‘காதலின்ஞானியத்தைக் கண்ணினுற் றெரியக்காணுன்’ என்றுங் கூறினுர். இப்படியே வாசிட்டத்தும், “சீவனுயிருந்தகாணுஞ்சிற்பாதத்துவத்தே, மேவியநனவையுற்றோர் வெம்பவமோகமார்க்கத், தோவலில்சுழுத்தியுற்றோர்” என்று கூறியிருப்பது காண்க. (ருஎ)

[ஸ்திதப்பிரக்ஞனுக்கு இந்திரியங்களின் நிக்கிரகம் சுபாவமாக வேசித்தித்திருப்பதுபோல விட்சேபங்களின் சாந்தியும் அவனுக்குச் சுபாவமாகவே சித்தித்திருக்கிறதென்னும் பொருளை ஸ்ரீ பகவான் திருஷ்டாந்தத்தோடுகூட நிரூபணஞ் செய்கின்றார்.]

நீரினு னிறைந்துநின்ற கடலிலே நெறிமேற்கொண்டு
நீரினு னிறைந்தவாறு வீழ்ந்ததா னிறைவுறாது.

தேரினா யதுபோலாசை செறிந்தவர் திறமேநோக்கிச்
சாருமா லாகிலத்தா லவர்களுஞ் சலித்தல் செய்யார்.

(இ-ள்.) நீரினால் நிறைந்து நின்ற=(நாநாவிதநதிச்) சலங்களாற் பூரணமாய்த் (தனது மரியாதை கடவாமல்) நிற்கின்ற—கடலிலே=சமுத்திரத்தின்கண்ணே — நீரினால் நிறைந்த ஆறு=ஜலத்தினாற் சம்பூர்ணமாயுள்ள (கங்கை, யமுனை முதலிய) நதிகள்—நெறி மேல் கொண்டு=நாநாவழிகளால் வந்து—வீழ்ந்ததால் நிறைவு உறாது=பிரவேசித்ததால் (அந்தச் சமுத்திரமானது) சிறிதும்பெருகி விகாரமடையாது;—அதுபோல் = அத்தன்மைபோல—ஆசை = சப்தாதி விஷயங்கண்(முழுதும்)—செறிந்தவர் திறமே நோக்கி=நிறைந்து நிர்விகாரரூபமாயுள்ள ஸ்திதப்பிரக்ஞரின் சந்நிதியைநாடி—சாரும் ஆகில்=(பிராரப்த கர்மவசத்தால்) வந்தடையுமாயின் — அத்தால் அவர்களும் சலித்தல் செய்யார்=அவ்விஷயங்களால் அவர்களும் விகாரமடையார்கள்—தேரினாய்=இரதத்தையுடைய அருச்சுனா.— எ-று.

ஆல்-அசைநிலை. 'ஆசை' என்பது ஆகுபெயர்.

விஷயபராமுகரான ஞானநிஷ்டர் சாந்தியடைவர், விஷயபோகங்களில்ஆசையுடையோர் அடையார்என்பவை, எஞ்சிநின்றன. இங்ஙனங் கூறியவாற்றால், குருசாஸ்திரங்களின் உபதேசத்தால்ஆன்மசாட்சாத்காரம் எவருக்கடையப்படுமோ அவருக்கே பலரூபமான வித்துவத்சந்நியாசமும், சர்வவிட்சேபநிவிர்த்திரூபமான சீவன்முக்தியும், விஷயபோகங்கள் அடையப்படினும் நிர்விகாரத்தன்மையும் உளவாமென்பது பெறப்படுகின்றது. (௫௮)

[யாதொருகாரணத்தால் விஷயங்களின் இச்சையுடைய புருஷர் சாந்தியடையாரோ அக்காரணத்தால், அடையப்படினும் அவ்விஷயங்களை விவேகமுடையவன் பரித்தியாகஞ் செய்யவேண்டுமென்னும் பொருளை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

யானென தென்பதின்றி யெவ்வகைப் பொருளும் விட்டான்
றானெனச் சரிக்கின்றான்யா ரவனையே யடையுஞ் சாந்தி
யீனம தடையாரித்தை யடைந்தவ ரிறக்கு மப்போ
தேனுமீ தடைவாரென்னை யெய்துவார் பிறவி யெய்தார்.

(இ-ள்.) யான் எனது என்பது இன்றி=(சரீரேந்திரியாதிசங்காதங்களில்) ஆன்மாபிமானமும், (சரீரநிர்வாகத்தின் பொருட்டுப் பிராரப்தகர்மவசத்தால் அடையப்பட்டகந்தை, கௌபீனமுதலியவற்



றில்) மமதாபிமானமும் இல்லாமல்—எவ்வகைப் பொருளும் விட்டான்=எவ்வகைப்பட்ட பதார்த்தங்களையும் பரித்தியாகஞ்செய்து—தான் எனச் சரிக்கின்றான் யார் = (பிரத்தியகபின்ன பரமான்மாவான) தான் ஒருவனே உளனென்னும் உண்முக முடையவனாக (ப்பிராரப்த வசத்தால் போகங்களைப் புசித்துத் தனது இச்சை எங்கேயோ அங்கே)சஞ்சரிக்கின்றவன் யாவன்—அவனையே=(ஸ்திதப்பிரக்ஞனான) அப்பிரம நிஷ்டனையே — சாந்தி அடையும்=சர்வ சம்சாரதுக்கநிவிர்த்திரூபமான மோட்சமானதடையாநிற்கும். [சொல்லிவந்த ஞானநிஷ்டையை ஸ்துதித்து உபசம்மாரம் பண்ணுகிறார்.] இத்தை அடைந்தவர் ஈனமது அடையார்=(பிரமநிஷ்டாரூபமான) இந்த ஸ்திதியை (ச்சொல்லிய கிரமமாக) அடைந்த புருஷர் (மீண்டும்) சம்சாரமோகத்தை அடையார்கள்.—இறக்கும்அப்போதேனும்=தேகாவசான சமயத்திலாயினும்—ஈது அடைவார்=(பிரமஞானரூபமான) இந்த ஸ்திதியை அடையாநிற்பவர்—என்னை எய்துவார்=(பிரமநிர்வாணரூபமான) என்னை அடையாநிற்பர்:—பிறவி எய்தார்=சம்சாரத்தை அடையமாட்டார்கள்.—எ-று.

இங்ஙனங் கூறியவாற்றால், வாலியவயதிற்றானே சர்வ கர்மங்களையும் பரித்தியாகஞ்செய்து தேகம் உள்ளவளவும் வேதாந்த விசாரஞ் செய்துகொண் டிருப்பவன் மோட்சமடைவனென்று சொல்லவேண்டுவ தென்னையென்னும் கைமுதிகந்நியாயஞ் சூசிப்பித்தனர். இவ்வத்தியாயத்தில் ஆன்மஞானத்திற்குப் பரம்பராசாதனமான நிஷ்காமகர்மமும், நிஷ்காம கர்மத்துக்கு அந்தக்கரணசுத்திரூபமான பயனும், அவ்வந்தக்கரண சுத்திக்கு ஞானநிஷ்டாரூபமான பயனும், அருளிச்செய்யப்பட்டனவென்றறிக. (௫௯)

[மொழிபெயர்த்த ஆசிரியர் ஸ்ரீ பகவானை வியந்து துதிக்கின்றார்.]

[வேறு.]

பின்னை யோவிவ் வுலக மெலாம்பெற்ற
வன்னை யோதிரு மார்பத் தணைத்தவன்
முன்னை யோர்புகழ் வேத முடிவையோ
தன்னை யோவுள்ள வாறெலாஞ் சாற்றினான்.

(இ-ள்.) பின்னையோ=இலக்குமியையோ,—இவ்வுலகம் எலாம் பெற்ற அன்னையோ = இவ்வுயிர்களையெல்லாம் ஈன்றருளிய பூமிதேவியையோ—திருமார்பத்து அணைத்தவன்=திருமார்பிலணைத்த ஸ்ரீபகவான்—முன்னையோர் புகழ் வேத முடிவையோ=பழைய ரிஷி

களால் புகழ்கின்ற வேதத்தின் முடிவான அசங்கசிதான்மாவையோ,-
தன்னையோ = (சச்சிதானந்த கனபரமான்மாவான) தன்னையோ—
உள்ளவாறு எலாம் சாற்றினான் = உள்ளவண்ணமே முழுதும் உப
தேசித்தருளினர்.—எ-று.

இப்படிப்பட்ட பெருங்கருணையை எங்ஙனம் ஸ்துதிப்பே
மென்பதாம்.
(கூ0)

இரண்டாவது
## சாங்கியயோகவத்தியாயம்
முற்றிற்று.

—

ஆக-அத்தியாயம் உ-க்கு திருவிருத்தம்-கூ0.

---

## ௩-வது, கர்மயோகவத்தியாயம்.

[மொழிபெயர்த்த ஆசிரியர் பூர்வோத்தர வத்தியாய சம்பந்தத்
தைத் தொகுத்துக் கூறுகின்றார்.]

அலையிலே கடல்கிடந்து மருமறைக ளானவற்றின்
றலையிலே யிருக்குமவன் றேரிலே நின்றருளிக்
கலையிலே பொருளெடுத்துக் காட்டவுமெய் காணுதே
சிலையிலே தோள்விசய னிவ்வண்ணஞ் செப்புவான்.

(இ-ள்.) அலையிலே கடல் கிடந்தும்=அலையையுடைய திருப்பாற்
கடலின்கண் அறிதுயிலமர்ந்தும் — அரு மறைகளானவற்றின் தலை
யிலே இருக்கும் அவன்=அரிய வேதங்களின் சிரசின்கண்ணே வீற்
றிருக்கும் ஸ்ரீபகவான்—தேரிலே நின்றருளி=(அருச்சுனன்) தேரி
ன்மீதெழுந்தருளி—கலையிலே பொருள் எடுத்துக் காட்டவும்=சுரு
திகளிலுள்ள (அரிய) பொருள்களை யெடுத்தறிவித்தும்—மெய்கா
ணுதே=(பகவானது உபதேசார்த்த) தாற்பரியத்தை யறியாமலே—
சிலையிலே தோள்விசயன்=வில்லைத்தரித்த புயத்தையுடைய அருச்
சுனன்—இவ்வண்ணம் செப்புவான் = இந்தப்படிக் கூறுவானாயி
னான்.—எ-று. ஏகாரங்கள், அசைநிலைகள்.

'அலையில், சிலையில்' என்றவை, வேற்றுமைமயக்கம். (க)

[முன்னத்தியாயத்தில், "சாவதிலையாவர்களும்" என்பது முத
லியவாக்கியங்களால்முன்னர் மோட்சசாதனமாகத் தேகான்மவிவேக



புத்தி யருளிச்செய்து அதன்பின்னர், "எதுவொருவினையாலே யிரு
வினைகளும்வீடு, மதுதனையறிவார்வீ டணைபவாதுகேளாய்" என்பது
முதலிய வாக்கியங்களால் கர்மயோகபுத்தியும் அருளிச்செய்யப்பட்
டது; இவ்விரண்டில்இன்னதுமுக்கியம்,இன்னதுகௌணமென்னும்
அபிப்பிராயமறியப்படவில்லை. அதன்மத்தியில்ஞானியானவன் கர்மங்
களை விட்டவனாய், இந்திரியநிக்கிரகனாய், நிரகங்காரனாய் இருத்தல்
வேண்டும்; இந்தப் பிரமநிஷ்டையிற் கணநேரமாவது ஸ்திதிபெற்ற
வன் பிரமரூபமான கைவல்லியத்தையடைவனேயன்றிச்சம்சாரமோக
த்தை யடையானென்று வெகுமான பூர்வகமாக உபசம்மரித்ததால்
ஞானம்,கர்மம் என்னும் இரண்டில் ஞானமே முக்கியமென்பது பக
வானது அபிமதமாமென்று கருதி அருச்சுனன் கூறுகின்றான்.]

[வேறு.]

நன்றேவினையின் ஞானமென வுரைத்தாய்மீள வினைநல்ல [ன்
தென்றேயுரையா நின்றனைநா னிவற்றிலெதுநன்றெனவறியே
குன்றேயனையா யுனையடைந்தேற் குற்றதுயர்நீக்கிடுவதனை [ன்.
யொன்றேயாக வுரைத்தருள வேண்டுமென்றா னவனுரைப்பா

(இ-ள்.) வினையின் ஞானம் நன்றே என உரைத்தாய்=நிஷ்கா
மகர்மத்தைப்பார்க்கிலும் ஞானமானது சிரேஷ்டமென்றே அருளிச்
செய்தீர்:—மீள வினை நல்லது என்றே உரையாநின்றனை=மீண்டும்
கர்மமானது சிரேஷ்டமென்றே அருளிச்செய்கின்றீர்;—நான் இவற்
றில் எது நன்று என அறியேன்=நான் இவ்விரண்டில் இன்னது
முக்கியம், இன்னதுகௌணமென்றறிகிலேன்:—குன்றே அனையாய்
=மலையைப்போலும் அளத்தற்கரிய கிருபையையுடைய சுவாமி—
உனை அடைந்தேற்கு=உம்மைச்சரணடைந்த எனக்கு—உற்ற துயர்
நீக்கிடுவதனை=பொருந்திய சோகத்தை யொழிவிக்குஞ் சாதனத்தை
—ஒன்றே ஆக உரைத்தருள வேண்டும் என்றான்=ஒன்றாகவே நிச்ச
யித் துபதேசித்தல் வேண்டுமென்று அருச்சுனன் வினாவினான்;—
அவன் உரைப்பான்=(அதற்கு)அப்பகவான் அருளிச்செய்கின்றார்.—
எ-று.

'வினையின்ஞான நன்றேயென வுரைத்தாய்' அஃதுமக் கபிமத
மானால், 'விதநா+நன்றென' என்றருளிச்செய்து கோரமான
யுத்தத்தில் என்னை ஏன் அடிக்கடி பிரவிர்த்திப்பிக்கிறீரென்பான்,
'மீள வினைநல்ல, தென்றேயுரையா நின்றனை' என்றான். ஓரிடத்தில்

கர்மநிஷ்டையை ஸ்துதிக்கின்றீர், ஓரிடத்தில் ஞானநிஷ்டையை ஸ்துதிக்கின்றீர்; இதனால் எனது புத்தியின்கண்ணுள்ள மோகத்தை ஒழிவிக்கப்புகுந்த பெருங்கருணைக் கடலான நீர் மோகத்தையடையப் பண்ணுவிக்கிறவர்போலப் பிரமாதத்தையுடைய எனக்குத் தோற்றுகிறீர்; சரணாகதனான என்னை அங்ஙனம் பண்ணலாமா? ஓர் புருஷனுக்கு ஓர் காலத்திலே தம்மில்விருத்தங்களான இருத்தலும் நடத்தலுங் கூடாமைபோல ஓரதிகாரிபுருஷன் ஓர் காலத்திலே தம்மில் விருத்தங்களான கர்மநிஷ்டையும், ஞானநிஷ்டையுமாகிய இரண்டனையும் அனுஷ்டானஞ் செய்வதிற் சமர்த்தனாகானே; ஆதலால், கர்மநிஷ்டை, ஞானநிஷ்டை என்னுமிரண்டனுள் எனது அதிகாரத்திற்குத்,தக்கவொன்றனை நிச்சயித்தருளவேண்டுமென்பது கருத்து.()

[ஸ்ரீ பகவான் அருச்சுனன் வினாவின்படி
உத்தரமருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

ஆதியி லுலகினை யாக்கி யன்றுநா
னோதிய பொருளிவை யிரண்டு முண்மையே
தீதிய லவாவறுன் செயலை மாற்றுவான்
மீதியல் வினையுறான் வீடு மேவிடான்.

(இ-ள்.) ஆதியில்=சிருஷ்டியாதியிலே—உலகினை ஆக்கி=(பிராமண, க்ஷத்திரிய,வைசியரென்னும்) பிராணிகளைச் சிருஷ்டித்து—அன்று=அப்போது—நான்=(சாஸ்திரார்த்த சம்பிரதாயகர்த்தாவும், சர்வக்ஞனுமாகிய) யான்—ஓதிய பொருள் இவை இரண்டும் உண்மையே=உபதேசித்தருளியஞானநிஷ்டை,கர்மநிஷ்டைஎன்னுமிரண்டும் உண்மைதான்.—[மண், தண்டம், சக்கரம், குலாலன் முதலிய காரணங்கள் இல்லையானால் கடரூபமானகாரியோற்பத்தி உளதாகாததுபோல நிஷ்காமகர்மரூபமானகாரணம்இல்லையாயின்,ஞானரூபமானகாரியோற்பத்தி உளதாகாதென்னும்பொருளை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.] செயலை மாற்றுவான்=நித்திய நைமித்திக கர்மங்களை நிஷ்காமனாய்ச் செய்யாதபுருஷன்—தீது இயல்அவா அறான்=தீமைபொருந்தியஆசையறான் (அந்தக்கரணசுத்தியடையானென்றபடி.)-[சந்நியாசத்தினாலேயேமுக்திஅடையப்படுமென்றசுருதி கூறுவதால் கர்மத்தாற்பிரயோஜனமென்னையென்னுஞ் சங்கைக்குச் சொல்லுகிறார்.] மீது இயல் வினை உறான்=மேலான இயல்புடைய நிஷ்காமகர்மங்களையனுஷ்டியாதொழித்த அசுத்தாந்தக்கரணமுடையசந்நியாசியானவன்—வீடு மேவிடான் = (சந்நியாச மாத்திரத்தால்) மோட்ச மடையான்.—எ-று.



'உண்மையே' என்றதன் கருத்து; ஆன்மாநான்ம விவேகமுடைய புருஷர்க்கு ஞானநிஷ்டையும், மலினாந்தக்கரணமுடைய புருஷர்க்குக் கர்மநிஷ்டையும் முக்கியமாதலாலென்பது. நிஷ்காம கர்மானுஷ்டானமன்றிச் சித்தசுத்தி உளதாதலில்லை; சித்தசுத்தியன்றி ஞானம் உளதாதலில்லை; ஞானம் வினா மோட்சம் உளதாதலில்லை; ஆதலால், 'மீதியல் வினையுறான் வீடு மேவிடான்' என்றார். (௩)

[சர்வ கர்மங்களிலும் ஆசக்தி விடுவதுமாத்திரமான கர்ம சந்நியாசங் கூடுமெல்லாமல் சொரூபமாகச் சர்வகர்மங்களின் தியாகம் கூடாதென்று ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

ஒருவரு மொருபொழு தினுமோர் காலமு
மிருவகை வினைசெயா தவர்க ளில்லையா
லருமய லவாவறான் வினை யடக்குவான்
பருவர லொடுபொய்யே பாவிப் பானரோ.

(இ-ள்.) ஒருவரும் = (ஞானி, அஞ்ஞானிகளில்) ஒருவரும்—ஒருபொழுதினும்=ஓரவஸ்தையிலும்—ஓர் காலமும் = ஒரு க்ஷணமாத்திரமும்—இருவகை வினை செயாதவர்கள் இல்லை = புண்ணிய பாவமென்னும் இருவித வினைகளைச் செய்யாதவர்களாக இல்லை.—(சுதந்தரமின்மையாய்ப் பூர்வஜன்ம வாசனையினாற் சனியாநின்ற இராகத்துவேஷாதிகளினால் சகலரும் கர்மங்களிற் பிரவிர்த்திக்கின்றனரென்பது கருத்து.) [ஆதலால், கர்மத்தியாகம் பண்ணின அஞ்ஞானியை நிந்திக்கின்றார்.] அரு மயல் அவா அறான்=விடுதற்கரிய மலினமான ஆசையறாதஅந்தக்கரணமுடையவனாய்—வினை அடக்குவான்=(வாக்கு, பாணி, பாதமுதலிய) கர்மேந்திரியங்களை நிக்கிரகிப்பவன்—பருவரலொடு=துன்பத்தோடுகூட—பொய்யே பாவிப்பான்=சப்தாதி விஷயங்களையே (மனத்தினால்) ஸ்மரித்துக்கொண்டிருப்பன்; (இவன் மித்தியாசாரனென்று சொல்லப்படுவன் என்பதெஞ்சிநின்றது.)—எ-று.

ஆல், அரோ-அசைநிலைகள். பின்னைய 'வினை' ஆகுபெயர்.

'பருவரல்' என்றது, கபடாசாரமுடையவனென்று விவேகிகளால் நிந்திக்கப்படுவதனாலும், மனன தியானங்களில் உள்ளபடி செல்லாமையினாலும் உளதாகுந் துன்பத்தை. (௪)

[ஆதலால், இவ்வாறு கர்மங்களை நீ செய்யின் முக்தியடைவா யெனல்.]

புலனவை பொறிவழி போக்கு மாற்றியே
பலனற வினைகளென் பொருட்டுப் பண்ணுவாய்
நலனுறு மவ்வினை நாச மின்றியே
சலமுறு பிறவியுந் தவிர்க்குந் தன்மைகேள்.

(இ-ள்.) புலனவை = சுரோத்திராதி ஞானேந்திரியங்கள்—பொறிவழி போக்கு மாற்றியே=சப்தாதி விஷயங்களிற் செல்வதை (மனத்தினால்). தகைந்து—பலன் அற = பலேச்சையின்றி—வினைகள்=நித்திய நைமித்திகாதி கர்மங்களை—என் பொருட்டுப் பண்ணுவாய்=(பரமேசுரனை) எனது பிரீதியின் பொருட்டு (க் கர்மேந்திரியங்களினாற்) செய்வாய்;—நலன் உறும் அவ்வினை=நன்மை மிக்க அந்த நித்தியாதி கர்மங்கள்—நாசம் இன்றியே = (காமிய கர்மங்களைப்போல) நாசமாகாமல் நின்றே—சலம் உறு பிறவியும் தவிர்க்கும்=(சித்தசுத்தியைத் தருவதுந் தவிர ஞானவாயிலால்) சலனம் பொருந்திய ஜன்ம பந்தத்தையும் ஒழிக்கும்;—தன்மை கேள் = அந்தத்தன்மையை நீ கேட்பாய்.—எ-று.

ஏகாரம் முன்னையது, ஈற்றசை. பின்னையது, தேற்றப்பொருளில் வந்தது. (ரு)

[பிரஜாபதி வசனத்தினாலும்கர்மஞ்செய்வதேசிரேஷ்டமென்று மூன்று செய்யுட்களால் ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

தேவர்களை மகிழ்விக்குஞ் செயலோடே தெரிந்திந்த
மூவகைய வுலகையுமுன் படைத்தமுத லவன்மொழிவான்
மேவரிய சுரர்பூசை யிதுநீங்கள் வேண்டியன
யாவையுமே தருமின்னு மிதுகேட்பீ ரெனவிசைப்பான்.

(இ-ள்.) முன்=சிருஷ்டியாதியில்—தெரிந்து=(ஜாதி, குலம், தர்ம முதலியவற்றை) உணர்ந்து—தேவர்களை மகிழ்விக்கும் செயலோடே=இந்திராதி தேவர்களைச் சந்தோஷிப்பிக்கும் எக்ஞாதி கர்மங்களோடு கூடவே—இந்த மூவகைய உலகையும் = (பிரம, க்ஷத்திரிய, வைசிய என்னும்) இம்மூன்று கூறுபாடுடைய ஜனங்களையும்—படைத்த முதலவன்=சிருஷ்டித்த பிரமாவானவர்—மொழி வான்=(அவர்களைப்பார்த்து இந்தப் பிரகாரஞ்) சொன்னார்;—மேவ அரிய சுரர் பூசை இது = பொருந்துதற்கரிய தேவாராதனம் இவ் வெக்ஞங்களாம்;—நீங்கள் வேண்டியன யாவையுமே தரும்=நீங்கள் வாஞ்சித்த பலன்கள் முழுதுந் தரும்:—இன்னும் = மேலும்—இது கேட்பீர் என=இதனைக் கேட்கக்கடவீர்களென்று—இசைப்பான்= சொன்னார்.—எ-று.

'உலகு' என்றது, ஆகுபெயர்.

எக்ஞம் என்றது, நித்தியகர்மங்களின் உபலட்சணம். இங்கே காமிய கர்மத்தைத் துதித்தல் அசங்கதமானாலும் கர்மங்களொன்றையுஞ் செய்யாமலிருப்பதைப் பார்க்கிலும் காமிய கர்மங்களைச் செய்வதே உத்தமமாவதால் தோஷம் இன்றெனக. (சு)

[எக்ஞாதி ரூபமான தர்மங்கள் இஷ்டங்களை எப்படிக் கொடுக்குமென்னுஞ் சங்கைக்குப் பிரஜாபதி அருளிச்செய்கின்றார்.]

செயல்வகையா னீங்களவர் திறம்போற்று மாங்கவரும்
புயல்வகையா லுங்களையே புரம்போற்றிப் புரந்தருள்வ
ரியல்வகையா னதுபிழையீ ரெனிலிரண்டு திறத்திரு
முயல்வகையானலனடைவீ ரெனநிலத்தோர்க்குரைத்தனனால்.

(இ-ள்.) நீங்கள் = (ஜனங்களே அதிகாரிகளாகிய) நீங்கள்—செயல் வகையால் = இந்த எக்ஞாதிரூபதர்மங்களால்—அவர் திறம் போற்றும்=இந்திராதி தேவதைகளின் * திறத்தை விருத்தியடையப் பண்ணுங்கள்;—ஆங்கு அவரும்=அதுபோலவே அவ்விந்திராதி தேவதைகளும்—புயல் வகையால்=மேகத்தின் வருஷ ஜல முதலியவற்றால் (அந்நோற்பத்தி வாயிலாக)—உங்களையே புரம் போற்றி= உங்களை உடலை விருத்தியடையப்பண்ணி — புரந்து அருள்வர்= பாதுகாத்திரட்சிப்பர்;— இயல் வகையானது பிழையீர் எனில் = இந்தப்பிரகாரம் பரஸ்பரம் சந்தோஷிப்பித்து நடக்கும் விதமானது தவறாது நடந்துவருவீராகில்—இரண்டு திறத்தீரும்=இரண்டு பட்சத்தவரும்—முயல் வகையால்=(இந்தப்படி) முயலுந்திறத்தினால்—நலன் அடைவீர் என=(கிரமமாக) மோட்சத்தை, அல்லது சுவர்க்கத்தை அடையக்கடவீரென்று—நிலத்தோர்க்கு உரைத்தனன் = பூவுலகிலுள்ள பிரஜைகளுக்கு உபதேசித்தார்.—எ-று.

ஏ, ஆல் - அசைநிலைகள். (எ)

* திறம்=வலி அல்லது கூறுபாடெனினுமாம்.

[பின்னும் கர்மம் பண்ணாதவனுக்குறுந்தோஷத்தைப்
பிரஜாபதி அருளிச்செய்கின்றார்.]

மற்றவர்தந் ததுகொண்டு மறித்தவரைப் பேணாதார்
கற்றவர்முன் பழித்துரைத்த கள்வரினுங் கடைப்பட்டார்
பெற்றதுகொண் டவர்ப்பேணிப் பிழைத்ததுகொண் டுண்ணா
துற்றதுதன் பொருட்டாக வுண்பான்றீ துண்கின்றான். [தே

(இ-ள்.) மற்றவர் தந்தது கொண்டு = எக்ஞத்தால் சந்தோஷமடைந்த தேவதைகள் தந்த அந்நம், பசு, சுவர்ண முதலிய நாநாவித போகங்களைக்கொண்டு—மறித்து அவரைப் பேணாதார் = மீண்டத் தேவதைகளைப் பூஜியாமல் தமது சரீரேந்திரியாதிகளின் புஷ்டி நிமித்தம் புஜிப்பவர்—கற்றவர் முன் பழித்து உரைத்த கள்வரினும் கடைப்பட்டார் = பெரியோர் முன்னே பழித்துக்கூறிய கள்ளரைப் பார்க்கிலும் கடைப்பட்ட செய்ந்நன்றி கொன்றவராம்.— [எக்ஞமுதலான தர்மங்களைப் பண்ணாமையினால் பிரத்தியவாயமும் அடையப்படுமென் றருளிச்செய்கின்றார்.] பெற்றது கொண்டு = (தேவர்களாற் பெற்ற) அந்நாதிகளைக்கொண்டு—அவர்ப் பேணி=அவர்களைப் பூஜித்து—பிழைத்ததுகொண்டு உண்ணாதே=அதற்குமேல் மிஞ்சின அமிர்தமயமான அந்நாதிகளைக்கொண்டு தான் புஜியாமல் — உற்றது=(தேவதைகளால் தான்) அடைந்த அந்நாதிகளை—தன் பொருட்டு ஆக=தனது உதரம் பருத்திப்பொதிபோலப் பருக்கும் பொருட்டாக—உண்பான் = (பாகஞ்செய்து) உண்பவன்—தீது உண்கின்றான் = (பஞ்சசூனை முதலிய) பாவங்களையே போஜனம் பண்ணுகின்றான்.—எ-று.

தன் உதரநிமித்தம் பாகம்பண்ணும் அந்நம் பாவான்மாவான அவனது திருஷ்டிக்கு அந்நமாகத் தோற்றினும் சாஸ்திர திருஷ்டியினாலும், தேவதைகளின் திருஷ்டியினாலும் அவ்வந்நம் பாவரூபமே என்க.

'தன் பொருட்டாக வுண்பான்றீ துண்கின்றான்' என்றதனாலேயே, பஞ்ச யக்ஞங்களைச்செய்து சேஷமாயுள்ள அமிர்தமயமான அந்நத்தைப் புஜியாநிற்குங் கருமாதிகாரியான சிஷ்டபுருஷன் பஞ்சசூநாதி பாவங்களில்நின்றும் விடுபடுவனென்பது பெறப்படுதலின்; மொழிபெயர்த்தோர் கூறாதொழிந்தனர்.

பஞ்ச யக்ஞமாவன ; ரிஷியக்ஞம், தேவயக்ஞம், பூதயக்ஞம், மநுஷியயக்ஞம், பிதிர்யக்ஞம் இவைகளாம்; வேதங்களைப் படனபாடனஞ் செய்தலும், சந்தியோபாசனஞ் செய்தலும் ரிஷியக்ஞம்: அக்கினிஹோத்திர முதலியவற்றைச் செய்தல் தேவயக்ஞம்: பலி, வைசுவதேவங்களைச் செய்தல் பூதயக்ஞம்: மனையகத்துவந்த அதிதியை அந்நாதிகளாற் சந்தோஷிப்பித்தல் மநுஷியயக்ஞம் : சிராத்தம், தர்ப்பணங்களைச் செய்தல் பிதிர்யக்ஞம்.



பஞ்சசூனை என்றது, நெற்குத்தல், திரிகை அம்மிகளில் அரிசி முதலானவை அரைத்தல், அலகிடுதல், அடுப்பில் தீ மூட்டல், பாண்டங்களிற் சலம்வைத்தல் என்னும் இவ்வைந்து ஸ்தானங்களாலுளவாகும் ஜீவஹிம்சையால் வரும் பாவங்களை. (அ)

[பிரஜாபதி வாக்கியத்தால் எக்ஞமுதலிய கர்மங்கள் செய்ய வேண்டுவதுந் தவிர சம்சார சக்கரத்தின் பிரவிர்த்திக் கேதுவாவதாலும் அந்த எக்ஞமுதலிய கர்மங்கள் செய்யத்தக்கனவா மென்னும் பொருளை ஸ்ரீ பகவான் அருச்சுனனுக்கு இரண்டு செய்யுட்களால் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

உளவாமுயி ருணவாலுண வுயர்மாரியி னுளவாம்
வளவான்மழை யுயர்வானவர் மகிழ்வால்வரு மதுதா
னிளவாளரி யனையாயிசை தொழிலால்வரு மிதைமீ
தளவாமறை தருமாமறை யறிவாலதி லுறுமால்.

(இ-ள்.) இள வாள் அரி அனையாய்=இளமையான ஒளிபொருந்திய சிம்மத்தை யொப்பான அருச்சுனா—உணவால் =(போஜனம் பண்ணப்பட்டுச் சுக்கில, சோணிதரூபமாகப் பரிணமிக்கும்) அந்நத்தினால்—உயிர் உள ஆம்=பிராணிகளின் சரீரங்கள் உண்டாவனவாம்;—உணவு=நெல் முதலிய அந்நங்கள்—உயர் மாரியின் உள ஆம்=உயர்வான மழைபெய்தலால் உளவாகும்;—வள வான் மழை=மாட்சிமை பொருந்திய மேகவருஷமானது—உயர் வானவர் மகிழ்வால் வரும்=உயர்வான தேவதைகளின் சந்தோஷத்தால் உண்டாகும்;—அதுதான்=தேவதைகளின் சந்தோஷமும்—இசை தொழிலால் வரும்=பொருந்தாநின்ற அக்கினிஹோத்திர முதலிய கர்மங்களால் உளதாம்;—இதை=இவ்வக்கினிஹோத்திர முதலிய கர்மங்களை—மீது அளவு ஆம் மறை தரும் = பிரமாணங்களெவற்றினும் மேலான பிரமாணமாகிய வேதந்தானே சனிப்பிக்கும்;—மா மறை=பெருமை பொருந்திய வேதமானது—அறிவால் அதில் உறும்=(சர்

வார்த்தப் பிரசாரசமாவதால் சர்வகதமானாலும் தனது) தாற்பரியத்தால் சதா தர்மரூபமான அவ்வெக்ஞத்திலிருக்கின்றது.—எ-று.
ஆல் அசை நிலை. 'உயிர்' என்றது, ஆகுபெயர். (௯)

[இங்ஙனம் வேத முதலியவற்றின் உற்பத்தியாகுக; அப்படிச் சொன்னதால் ஈண்டுப் பிரசங்கத்தில் என்ன பலஞ்சித்தித்ததென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

இதனால்வினை களிலேவிளை வனயாவையு மிங்ஙன்
றிதனால்வரும் வினையாழியி னெறிசேரலர் திரிவார்
மதனாறிய புலனேமகிழ் விடமாகவு முடையா
ரதனாலவ ரவமேகழி பவராமென வறிநீ.

(இ - ள்.) இதனால்=உணவால் உயிர், உணவு உயர்மாரியின், மாரி வானவர் மகிழ்வால், வானவர் மகிழ்வு தொழிலால் வரும் என்றிங்ஙனஞ் சொல்லிய வாற்றால்,—வினைகளிலே யாவையும் விளைவன = கர்மங்களில் நின்றே அனைத்தும் உண்டாகின்றன;—இங்ஙன்=இந்தப்படி—திதனால் வரும்=(எப்போதும்) நிலையான ஈசுரனால் நியமிக்கப்பட்டு வருகின்ற—வினை ஆழியின் நெறி=கர்மரூபமான சக்கரத்தின் வழியை—சேரலர் திரிவார்=அனுசரியாதவர்களாய்ச் சஞ்சரிப்பவர் (அவரது ஆக்ஞாரூபமான வேதநெறியை அனுசரியாததுந் தவிர)—மதன் நாறிய புலனே=(வந்துறுபோது மாத்திரம்) ரமணியமாகத் தோற்றும் இந்திரியங்களின் விஷயங்களையே—மகிழ்வு இடம் ஆகவும் உடையார் = சந்தோஷித்தற் கிடமாகவுமுடையர்; (* இந்திரியாராமராயுள ரென்றபடி.)—அதனால் = அக்காரணத்தினால்,—அவர் = (பாவஜீவனமுடைய) அவர் — அவமே கழிபவர் ஆம் என அறி நீ=வியர்த்தமாகவே ஜீவிப்பவர்களென்று அருச்சுனா நீ அறிதி.—எ-று. ஆம்-அசைநிலை (௧௦)

[ஆன்மரதியான ஜீவன்முக்தன் கிருதகிருத்தியனாதலால், ஜகச்சக்கரத்திற்கேதுபூதமான கர்மங்களையநுஷ்டியாதிருந்தாலும் பிரத்தியவாயத்தை யடையானென்னும் பொருளை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

* இந்திரியாராமர்=இந்திரியங்களால் விஷயங்களிற் சதா கிரீடிப்பவர்.



[வேறு.]

கண்ணிற்கருதரு மறிவைக்கருதியவ் வறிவேமிகவரு களிகூர்வோ, னெண்ணிற்றொழிறரு பயனுற்றிடும்வகை யிசையானாதலில் வினையாவும், பண்ணிற் பெறுவதோர் பயனுண்டோவவை பண்ணாதுறுவதோர் பழியுண்டோ, மண்ணிற் பிறரிவ னிவையுற்றிலனென மதியாரவைசெய விதியாரால்.

(இ - ள்.) கண்ணில் கருத அரும் = (சமதமாதி சாதனாகித) புத்தியினாற் சாட்சாத்கரித்தற்கரிய — அறிவைக் கருதி = ஆன்மாவைப் பரமான்மாவாகச் சாட்சாத்கரித்து—அவ்வறிவே மிக வரு களி கூர்வோன் = பரமானந்தரூபமான அவ்வான்மாவின்கண்ணேயே பூரணமா யெழாநிற்கும் (ரதி, திருப்தி,) சந்தோஷங்களைக் குறைவற வடைகின்றவனான பிரமநிஷ்டன்—எண்ணில் தொழில் தரு பயன்=அளவிறந்த கர்மங்களால் வரப்பட்ட பயன்களை—உற்றிடும் வகை இசையான் = அடையும்படி சம்மதியான்; (இச்சியானென்றபடி.)—ஆதலில்=அக்காரணத்தால்,—வினை யாவும் = (நித்திய நைமித்திகாதி) கர்மங்களனைத்தையும்—பண்ணில் பெறுவது ஓர் பயன் உண்டோ=அவன் செய்ததனால் அடையப்படுவதான ஓர் பயனுண்டா?—அவை பண்ணாது உறுவது ஓர் பழி உண்டோ=அந்நித்திய நைமித்திகாதி கர்மங்களை அவன் செய்யாததனால் அடையப்படுவதான ஓர் பிரத்தியவாயமுண்டா? (இல்லை,)—மண்ணில்=இவ்வுலகில்—பிறர்=அன்னியர்—இவன் இவை உற்றிலன் என மதியார்=இப்பிரமநிஷ்டன் இந்நற்கர்மங்களைச் செய்திலனென்றெண்ணவு மாட்டார்கள்:—அவை செய விதியார் = அந்நித்தியாதி கர்மங்களைப் பிரமநிஷ்டன் செய்யும்படி அவனுக்கு விதிக்கவுமாட்டார்கள்; (அவன் கிருதகிர்த்தியனாகலின்.)—எ-று.

ஆல்-அசைநிலை.

ரதி, திருப்தி, சந்தோஷங்கள்=மோதப் பிரமோதானந்தங்கள் போல அவாந்தரபேதங்கள்; ஆதலால், மொழிபெயர்த்தோர் இம்மூன்றனையும், 'களி' என்றார். (௧௧)

[யானும் உள்ளபடியே தத்துவஞானத்தை யாசிரயித்துக் கர்மங்களை விட்டுவிடுகிறேனென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

ஆதலா னீயும் பலத்தின்மே லவாவற் றடுத்தகா ரியஞ் செய்வா யவற்றாற், றீதிலா வீடே சேரலா முன்னஞ் சேர்ந் தவ ரனேகர்பின் றெரியிற், காதலா லரசன் சனகனே முத லோர் கருமமோ டொழுகியே யன்றோ, போதரா யுலகம் புக்கதே மற்றும் புரிதிநீ யுலகிதன் பொருட்டால்.

(இ-ள்.) ஆதலால்=அக்காரணத்தினால்,— நீயும்=(அஞ்ஞானியாகிய) நீயும்—பலத்தின்மேல் அவா அற்று=பலத்தின்மீது ஆசையொழிந்து — அடுத்த காரியம் செய்வாய் = விகிதமான நித்திய நைமித்திக கர்மங்களைச் (சிரத்தாபூர்வகமாக நிரந்தரஞ்) செய்யக் கடவாய்;—அவற்றால்=இங்ஙனம் நித்திய நைமித்திக கர்மங்களைச் செய்வதால்,— தீது இலா வீடே சேரல் ஆம்=(அந்தக்கரண சுத்தியோடு ஆன்மஞானவாயிலால்) குற்றமற்ற மோட்சத்தையே அடையலாம்.—[இவ்வர்த்தத்தில் சதாசாரமே பிரமாணமென் றருளிச்செய்கின்றார்.] முன்னம் சேர்ந்தவர் அனேகர்=பூர்வகாலத்தில் (நித்திய நைமித்திக கர்மங்களைச் செய்தே) முக்திபடைந்தோர் அனேகர்.—பின் தெரியில்=இப்போது அவர்களை யாவரென்று நீ தெரியவிரும்பிடில் கேள்;—அரசன் சனகனே முதலோர்,=அரசனாகிய ஜனகன், அஜாதசத்துரு, பகீரதன்முதலினோர்—காதலால்=சிரத்தையினால்—கருமமோடு ஒழுகியே அன்றோ=(சுருதி ஸ்மிருதிகளிற் சொன்ன) கர்மானுஷ்டானங்களோடுகூடி நடந்தேயல்லவா—போதராய் உலகம் புக்கது = (அந்தக்கரண சுத்திவாயிலால்) ஞானநிஷ்டராய் மோட்சவுலகிற் புக்கது.—[அருச்சுனா உன்னை முழுதும் ஞானியாக நீ மதித்திடினும் கர்மஞ் செய்வதே உனக்கு நலமென்று கூறுகின்றார்.] மற்றும் = மேலும் உன்னை ஞானியென நீ எண்ணினும்,— உலகிதன்பொருட்டால்=இவ்வுலகசங்கிரக நிமித்தமாக—நீபுரிதி= நீ நித்திய நைமித்திக கர்மங்களைச் செய்க. (மறந்துந் தியாகம் பண்ணற்க.)—எ-று. ஏகாரம் எண்ணுப்பொருளது.

உலகைத் தத்தந் தருமங்களிற் சேர்ப்பிப்பதும், அதர்மங்களில் நின்று மீட்பிப்பதும் உலகசங்கிரகமாம். (௧௨)

[யான் கர்மம் பண்ணுகிறதானது எப்படி லோகசங்கிரகமாகுமென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் உத்தரமருளிச்செய்கின்றார்.]



பெரியவர் பயின்ற படியலாற் பயிலார் பின்புளோ ரொன் பதன் றாகி, லுரியவிவ் வுலக மூன்றினு மெனக்குச் செய்ய வேண் டுவதுமொன் றுண்டோ, வரியவை யென்னா லுறுதவு முறுதற் பாலவு மியாவையிங் கையா, பரியவிவ் வுலக மகிழ்வு டன் வினைதான் பண்ணுதற் கென்னையும் பாராய்.

(இ-ள்.) பெரியவர்=(அரசன் முதலான) சிரேஷ்ட புருஷர்—பயின்றபடி அலால்=அனுசரித்து வந்ததை அனுசரித்து வருவதல்லாமல் — பின்புளோர்=அவரது ஆணையில் நடப்பவர்—பயிலார்= வேறொன்றை யனுசரியார்கள்; (ஆதலால், சர்வவுலகத்தும் பிரதானனா நீ உலகை இரட்சித்தற்பொருட்டு அவசியமாகச் சுபகர்மஞ் செய்யவேண்டு மென்பது கருத்து.)—[பெரியோர் உலக மரியாதையை நிலைநிறுத்தும்பொருட்டு விகிதகர்மஞ் செய்யவேண்டு மென்பதில் என்னையே திருஷ்டாந்தமாகக் காண்டியென் றருளிச்செய்கின்றார் ] என்பது அன்று ஆகில்=என்று கூறினது உண்மையன்றானால்,—உரிய இவ்வுலகம் மூன்றினும் = எனதாட்சிக் குரியவைகளான சுவர்க்க மத்திய பாதாளமென்னும் இந்தவுலகங்கள் மூன்றிலும்—எனக்கு = (அவ்வுலகங்களுக்குச் சுவாமியாகிய) எனக்கு— செய்யவேண்டுவதும் ஒன்றுஉண்டோ=கர்த்தவ்வியமான கர்மமானதும் ஒன்றுண்டா? (இல்லை.)—[இதில் ஏதுவை யருளிச்செய்கின்றார்.] இங்கு = இம்மூவுலகிலும்—அரியவை = அரியவைகளாய்— என்னால் உறுதவும்=என்னால் அடையத்தகாதனவும், — உறுதற்பாலவும் = அடையத்தக்கனவுமாக—யாவை = எவையுமில்லை;— (அப்படியானாலும்) ஐயா = அருச்சுனா—பரிய இவ்வுலகம் = பெரிதான இவ்வுலகமானது—மகிழ்வுடன் வினைதான் பண்ணுதற்கு= சிரத்தையோடு கூடிச் சுபகர்மங்களைச்செய்து உய்தற் பொருட்டு (நான் சுபகர்மங்களிற் பிரசித்தமாக விருக்கின்றேன்.)—என்னையும் பாராய்=(சுபகர்மங்களில் ஆலசியமில்லாமற் பிரவிர்த்தித்திருக்கின்ற) என்னையும் திருஷ்டாந்தமாகப்பார்.—எ-று. (௧௩)

[தான் கர்மஞ்செய்யாவிடில் வருந்தோஷத்தை யருளிச்செய்கின்றார்.]

என்செய றவிரி லியான்செயா வினைகளியாவருஞ்செயா ரதனாலே, மன்செய்த குலங்கண் மயங்கிமாய்ந் திடுவர் மற்றவர் மற்றதற் காகப், பின்செய லறியா தவாவொடு முயலும் பேதையைப் போற்பிறர் பொருட்டா, லுன்செயல் களைச் செய் யவைசெய்வார் தம்மி லுணர்வைவே றாக்கலு மொழிவாய்.

(இ-ள்.) என் செயல் தவிரில் = (சர்வ தர்ம பரிபாலகனான) எனது (அவதாரசரீரத்திற்குசிதமான) சுபகர்மங்களை (யான்) செய்யாதொழியில்—யான் செயா வினைகள் = யான் அனுஷ்டியாத சுபகர்மங்களை—யாவரும் செயார் = கர்மாதிகாரிகளான சகலமனுடரும் சர்வப்பிரகாரத்தாலும் அனுஷ்டியார்கள்; — அதனாலே = அக்காரணத்தினாலே, — மன் செய்த குலங்கள் மயங்கி = நிலைபெற (என்னால்) செய்த வருணங்கள் சங்கரமாய்—மற்றவர் மாய்ந்திடுவர். அம்மனுடரும் நாசமாய் விடுவர்.—மற்று அதற்கு ஆக = அப்படி உலகங் கெடாதிருத்தற் பொருட்டு (நான் சுபகர்மங்களில் நிற்கின்றேன் என்பது எஞ்சி நின்றது.)— [என்னைப்போல அனேக ஜனங்களுள்ளே பிரதானனாதலால், ஆன்ம ஞானியான நீயும் இந்த வுலகின்மீது கருணைகூர்ந்து சுபகர்மங்களைச் செய்யவேண்டுமென்று சொல்லுகிறார்.] பின் செயல் அறியாது = மேல்விளைவதை யறியாமல் — அவாவொடு முயலும் = அபினிவேசத்தோடு கூடிச்சுபகர்மங்களை யனுஷ்டியாநிற்கும் —பேதையைப்போல் = அஞ்ஞானியைப்போல — பிறர் பொருட்டால் = லோகசங்கிரக நிமித்தமாக—உன்செயல்களைச் செய் = உனது சற்கர்மங்களை (அருச்சுனா) செய்தி. — [அஞ்ஞானிகளுக்குக் கிருபையினால் தத்துவஞானோபதேசம் பண்ணலாகாதோ வென்னுஞ் சங்கைக்கு அது கூடாதென்று சொல்லுகின்றார்.] அவை செய்வார் தம்மின் = (கர்த்திருத்துவாபிமானத்தோடும், சுவர்க்காதிபலேச்சையோடுங்கூடி) எக்ஞாதி கர்மங்களை யனுஷ்டியாநிற்கும் அஞ்ஞானிகளுடைய—உணர்வை வேறுக்கலும் ஒழிவாய் = புத்தியை (அசங்கான்ம ஞானோபதேசத்தாற் சுபகர்மங்களில்நின்றும்) சலிக்கும்படி பண்ணுவதுந் தவிர்ப்பாய்.—எ-று.

'அவைசெய்வார் தம்மி னுணர்வைவே றுக்கலு மொழிவாய்' என்பதன் கருத்து; அசுத்தாந்தக்கரணமுடைய அனதிகாரிகட்கு அசங்கான்ம ஞானமுபதேசிக்கில் சுபகர்மங்களிலுள்ள சிரத்தை நீங்கிவிடுவதனாலும், அசுத்தாந்தக்கரணத்தில் ஆன்மஞான முண்டாகாமையினாலும் போகமோட்சங்க ளிரண்டையும் இழந்துவிடுவார்கள்; ஆதலால், ஆன்மஞானியானோன் தானும் சுபகர்மங்களைச் செய்துகொண்டு அவர்களையும் சுபகர்மங்களிலே சேர்ப்பிக்கவேண்டுமென்பது. (கச)

[இவ்வாறு ஞானியும் கர்மம்பண்ணவேண்டுமானால் ஞானிக்கும், அஞ்ஞானிக்கும் விசேஷமென்னையோவென்னுஞ் சங்கைக்கு அவ்விருவருக்குமுள்ள விசேஷங்களை யருளிச்செய்கின்றார்.]



மெய்வகை தனக்கும் புலன்கட்கு முள்ள வேறுபாட்டினைமிக வறிந்தோ, னைவகை யியற்கைப் புலன்களே பொறியுற் றழுந்துகின் றனவென வசங்கா, னிவ்வகை யறியா தவனிரு வினையுமியான்செய்தே னெனவிளைத் தெங்கு, முய்வகை யிதுநீ யுணர்ந்துனக் கடுத்த வினைசெயென் றுரைத்துமீண் டுரைப்பான்.

(இ-ள்.) தனக்கும் புலன்கட்கும் = ஆன்மாவுக்கும், சட்சு முதலிய இந்திரியங்களுக்கும்—மெய்வகை உள்ள = எதார்த்தமாகவுள்ள—வேறுபாட்டினை = விபாகங்களை—மிக அறிந்தோன் = நன்றாக அறிந்த ஞானியானவன்—ஐவகை இயற்கைப் புலன்களே = ஐந்து கூறுபாடான சுபாவமுடைய சட்சு முதலிய இந்திரியங்களே — பொறி உற்று அழுந்துகின்றன என = உருவமுதலிய விஷயங்களிற் பிரவிர்த்தித்து வருந்துகின்றன (அசங்கசிதான்மாவான யான் பிரவிர்த்திக்கவில்லை) என்றறிந்து—அசங்கான் = (கர்மங்களில் கர்த்திருத்துவாபிமான முறான்;—இவ்வகை அறியாதவன் = இந்தப்படி அறியாத அஞ்ஞானியானவன்—இருவினையும் = (லௌகிக வைதிகமென்னும்) இருவகைக்கர்மங்களையும்—யான் செய்தேன் என = யானே செய்தனனென் றெண்ணி—இளைத்து எங்கும் = மனமெலிந்து வருந்துகிறபன்.—[ஞானியும் கர்மம்பண்ணவேண்டுவது உசிதமாவதால் கர்மாதிகாரியாகியநீ அவசியம் கர்மம்பண்ணவேண்டுமென் றருளிச்செய்கின்றார்.] உய்வகை = உய்யும்படிக்கு—இது நீ உணர்ந்து = சொல்லிவந்த இந்த ரீதியை நீ அறிந்து—உனக்கு அடுத்த = உனக்குச் சுதர்மமான—வினை செய் என்று = யுத்தத்தை (ஈசுரனான என்னிடத்தர்ப்பித்து மமத்துவாபிமானமும், பலேச்சையு மில்லாதவனாய்ச் சோகாகிதனாய்ச்) செய்தி யென்று—உரைத்து = அருளிச்செய்து—மீண்டு உரைப்பான் = மேலும் அருளிச்செய்கின்றார்.—எ-று.

தனக்கும், புலன்கட்குமுள்ள வேறுபாடாவன; ஆன்மா சாட்சி, சேதனன், நிர்விகாரி; புலன்கள் சாட்சியம், ஜடம், விகாரி என்னும் இவை. (கரு)

[இவ்வாறு கர்மமனுஷ்டிப்பதால் வரும் நன்மையும், அனுஷ்டியாமையால் வருந்தீங்கையும் ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

என்பாற் பொருமை யினைத்தவிர்ந் தென் கருத்தா யுள்ள வினையிதனை, யன்பாற் பயில்வா ரியாவர்சில ரவர்கள் வினைக

ளறவிட்டா, ரென்பாற் பொருமை யானுரைத்த விதனை யிகழ்
கிற்பார்களவர், வன்பார்த் தரையி லெழுமரம்போன்மாய்ந்தா
ரறிவு மாய்ந்தாரே.

(இ - ள்.) யாவர் சிலர்=எவர்கள் சிலர்—என்பால்=(பரமகுரு
வென்னும் வாசுதேவனாகிய) என்னிடத்தில்—பொருமையினைத்
தவிர்ந்து=(துக்கத்தைக் கொடுக்கத் தக்கதான கர்மத்தில்பிரவிர்த்
திப்பிக்கிறானென்னும்) அசூயையையொழித்து—என்கருத்தாய்உள்ள
வினை இதனை=எனது அபிப்பிராயமாயுள்ள இந்நற்கர்மத்தை—அன்
பால் பயில்வார்=சிரத்தையோடு நித்தியம் அனுஷ்டியாநிற்பரோ—
அவர்கள்—வினைகள் அற விட்டார்=புண்ணியபாவரூபமானகர்மங்
களைமுழுதும் விட்டவரே.—என்பால் பொருமையான்=என்னிடத்
தசூயையினால்—உரைத்த இதனை=(யான்) முன்னமருளிச்செய்த
இம்மதத்தை — இகழ்கிற்பார்கள் அவர்=(அனுசரியாமல் அனேக
வித தோஷங்களை ஆரோபணஞ் செய்து) நிந்தியாநிற்கும் துஷ்ட
சித்தத்தையுடைய அவர்கள்—வன் பார்த்தரையில் எழும் மரம் போ
ல்=கீழேவலிமையான பாருள்ள பூமியிலுண்டாகிய விருட்சம்போல
—மாய்ந்து=(சர்வ புருஷார்த்தங்களினின்றும்) பிரஷ்டராய்—ஆர்
அறிவு மாய்ந்தாரே=(சகுண நிர்க்குண விஷயங்களான) சர்வஞான
ங்களும் இறந்தவர்களே (என்று அருச்சுனா நீ அறிதி.)—எ-று. (௧௬)

[சர்வப்பிராணிகளும் அசூயையினால் உம்முடைய மதத்தை அங்
கீகரியாததற்கும், சர்வபுருஷார்த்தசாதனங்களிலும் பிரதிகூலபுத்தி
பண்ணுதற்குங்காரணம் என்னையோவென்னும் அருச்சுனன் சங்கை
க்கு ஸ்ரீ பகவான் உத்தர மருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

பண்டு செய்பகு திப்படி யேவினை
கொண்டு நின்றிடிற் கோவித ரும்பிற
ருண்டு கொன்னல மென்றுணர் கிற்பரோ
கண்டு நின்றவென் கற்பனையா லரோ.

(இ - ள்.) கோவிதரும்=பிரமத்தை, அல்லது குணதோஷங்
களை அறிந்தோர்களும்—பண்டு செய்=பூர்வ ஜநநங்களிற் செய்த—
பகுதிப்படியே=பிரகிருதியின் அனுசாரமாகவே—வினை கொண்டு
நின்றிடில்=(வரும்) சேஷ்டைகளைப்பற்றி நிற்பாரானால்,—பிறர்=அஞ்



ஞானிகளாகிய மூடபுருஷர்—கண்டு நின்ற=சர்வக்ஞனாய் நிற்கின்ற
—என் கற்பனையால்=(பரமேச்சுரனான) எனது நிக்கிரகத்தால்—
நலம் உண்டு என்று=உபகாரமுண்டென்று—உணர்கிற்பரோ=அறி
வரோ! (ஆகலின், எனது ஆக்ஞையானது என்னசெய்யும்.)—எ-று.

கொல், அரோ-அசைநிலைகள்.

பூர்வ ஜன்மங்களிலுள்ள தர்மம், அதர்மம், ஞானம், இச்சை
முதலியவற்றின் சம்ஸ்காரம் இந்தச் சன்மத்தில் அபிவியக்தமாவதற்
குப் பிரகிருதி யென்று பெயர்.

பாவகர்மங்களால் நரகம் உளதாமென்பதை யறிந்தும் துர்வாசனை
யின் பிரபலத்தன்மையினால் அப்பாவகர்மங்களிலேயே பிரவிர்த்
திப்பவர்கள் பரமேசுரனான எனது ஆக்ஞையை உல்லங்கனம் பண்
ணுகிற்கும் அன்னியதோஷத்திற்கு ஓர்போதும் அஞ்சமாட்டார்களெ
ன்பது கருத்து. (௧௭)

[பிரபலமான வாசனையின் அனுசாரமான கர்மங்களில் சகலரும்
பிரவிர்த்திப்பார்களானால் விதிநிஷேத சாஸ்திரம் வியர்த்தமாமே
யென்னுஞ் சங்கைக்கு ஸ்ரீ பகவான் உத்தர மருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

அஞ்சுபுல னவைதொடரு மஞ்சுபொறி யவையாம்
வெஞ்சுரனி லுலறியுயிர் வெம்பியழி வுறுவோ
ருஞ்சுபுகு நெறிதகைய வொன்றுபகை யுளகே
ளெஞ்சுதலி லின்பமிட ரென்பவவை யிகழ்நீ.

(இ-ள்.) அஞ்சு புலனவை தொடரும்=சுரோத்திரமுதலிய பஞ்
சேந்திரியங்களானவை தொடராநிற்கும்—அஞ்சு பொறியவை ஆம்=
சப்தமுதலிய பஞ்ச விஷயங்களாகிய—வெம் சுரனில் = கொடிய
பாலைநிலத்தில்—உலறி உயிர் வெம்பி=உலர்ந்து உயிரானது வெ
தும்பி—அழிவு உறுவோர் = துன்பப்படாநின்ற முமுட்சுக்களாகிய
பிராணிகள்—உஞ்சு புகும் ஒன்று நெறி தகைய=பிழைத்துப்போ
தற்குக்காரணமான ஒருஞானமார்க்கத்தை(க்கள்ளரைப்போல)த்தகை
ந்து நாநாவித துன்பங்களைச்செய்ய—பகை உள கேள் = விரோதி
கள் நியமமாக வுள்ளன; அவைகளைக் கேள்.—எஞ்சுதல் இல்=
(நாளுக்குநாள்) விருத்தியடையாநிற்கும்—இன்பம் இடர் என்ப=
இராகத்துவேஷங்களென்பனவாம்;—அவை நீ இகழ் = அவைகளை

அருச்சுனா நீ ஒழித்திடுதி.—எ - று. 'இன்பமிடர்' என்பன ஆகு பெயர்.

இதன் றாற்பரியம்; ஜன்மாந்தர சம்ஸ்காரமென்னும் பிரகிருதியானது தனது வலியினால் விஷய ஸ்மரணை வழியாக இராகத் துவேஷங்களை வெளிப்படுத்திப் புருஷனை வேகமுள்ள பிரவாகம்போல அனர்த்தத்திற் பிரவிர்த்திப்பிக்கிறது: சாஸ்திரமோ அவ்வனர்த்தப் பிரவிர்த்திக்கு முன்னரே விஷயங்களில் இராகத்துவேஷங்களின் பிரதிபந்தகமான பகவதாராதனத்திற் பிரவிர்த்திப்பிக்கிறது. ஆதலால், பிரவாகத்தில் வீழ்தற்கு முன்னரே ஒடங்கிடைக்கப்பெற்ற புருஷனைப்போலச் சாஸ்திர வழியாகப் புருஷனானவன் அவ்வனர்த்தத்தினின்றும் விடுபடுவன்; இதனால்,இயல்பாயடையப்பட்ட கர்மங்களைத் தியாகஞ்செய்து தர்மத்தில் அவசியம் பிரவிர்த்திக்க வேண்டுமென்பது. (௧௮)

[இம்சை முதலானவைகளோடு கூடினதாயும், அரசர்க்குச் சுதர்ம்மமாயும், சாஸ்திரத்திற் சொன்னபிரகாரஞ் செய்யக்கூடாததாயுமிருக்கிற யுத்தமுதலான கர்மங்களைப் பார்க்கிலும் இம்சையில்லாத பிட்சாடன முதலான யதிதர்ம மனுஷ்டிப்பது சுலபமாதலால், சுதர்மத்தை விடுத்துப் பாதர்மத்திற் புகுதும்படிக்கு இச்சை நண்ணிய அருச்சுனனைப்பார்த்து ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

தடுத்ததொழில் செய்வது தகாதது தனக்கே
யடுத்ததொழில் செய்துகெடு மேனுமழ கையா
விடுத்தகரு மம்பெரிது செய்வதனின் மேலோர்
தொடுத்தகரு மஞ்சிறிது செய்கைதொழி லென்றான்.

(இ-ள்.) ஐயா=அருச்சுனா—தடுத்த தொழில் செய்வது தகாதது=(தனதாசிரமத்திற்குசிதமல்லவென்று) நிஷேதித்த கர்மங்களையனுஷ்டிப்பது கூடாதது:—தனக்கே அடுத்த தொழில்=தனதாசிரமத்திற்கே உசிதமான யுத்தமுதலிய கர்மங்களை—செய்து கெடுமேனும் அழகு=அனுஷ்டித்து மரணமடைவனாயினும் அத்தியந்தஞ் சிரேஷ்டமாம்;—(இக்காரணத்தால்,) மேலோர்=(உன்போன்ற) அரசர் முதலாயினோர்—விடுத்த கருமம் பெரிது செய்வதனின் =(தமக்கு) விலக்கிய கர்மங்களைச் (சாங்கோபாங்கமாகச்) செய்வதைப்பார்க்கிலும்—தொடுத்த கருமம்=(சாஸ்திரங்களால்) விதிக்கப்பட்ட கர்மங்களை—சிறிது செய்கை = கொஞ்சமாகிலும் அனுஷ்டித்தலே—



தொழில் என்றான்=தர்மமென்றருளிச்செய்தனர் ஸ்ரீ பகவான்.—எ - று.

விலக்கிய தொழில் நரகாதி அச்சத்தைப் பயத்தலின் 'தகாதது' என்றும், விதித்ததொழில் சுவர்க்க முதலிய பயன்களைப் பயத்தலின், 'அடுத்ததொழிலழகு' என்றுங் கூறினர். (௧௯)

[முன்னமே கூறப்பட்டிருக்கினும் நிச்சயிக்கக்கூடாமலிருக்கிற சம்சாரமூலத்தை நன்றாக வறியவேண்டுமென்னும் இச்சை நண்ணின அருச்சுனன் ஸ்ரீ பகவானைப்பார்த்து வினாவுகின்றனன்.]

[வேறு.]

மாய னிவைநின் றுரைசெய்ய விசயன் மறித்துங் கூறு
வான், றீய வினைசெய் யாதவரைத் திகைப்பச் செய்து திறலா
லே, யேய பணிகொள் வாரைப்போ லியற்று விப்பான் யா
ரென்றான், பாயல் பரவை யாக்கொண்ட பழையோ னிவ்வா
றெனப்பணிப்பான்.

(இ-ள்.) மாயன்=ஸ்ரீ பகவான்—இவை =('அஞ்சுபொறியவையாம், வெஞ்சுரனி லுஞ்சுபுகு நெறிதகைய பகையுளகே, ளெஞ்சுதலின்பமிட ரென்பவவையிகழ் நீ' என்பது முதலிய) இவ்வாக்கியங்களை—நின்று உரை செய்ய=(இரதத்தில்) நின்று அருளிச்செய்ய—விசயன் மறித்தும் கூறுவான்=அருச்சுனன் மீண்டும் வினாவுகின்றான்.—திறலாலே=பலாத்காரத்தினாலே—ஏய பணி கொள்வாரைப் போல்=தமக்கு வேண்டுங் காரியங்களைப் பரதந்திரரான சேவகரைக் கொண்டு செய்துகொள்ளாநிற்கும் அரசரைப்போல—தீய வினை செய்யாதவரை=(உம்முடைய மதத்திற்கு விரோதியான) பாவகர்மமானது (சர்வானர்த்தங்கட்கும் மூலபூதமாவதால்; அது) செய்யேமென்றிருப்பவரை—திகைப்பச் செய்து=திகைக்கும்படி பண்ணி—இயற்றுவிப்பான் யார் என்றான்=செய்விப்பவன் யாவன் ? என்றருச்சுனன் வினாவினன்;—பாயல் பரவையாக் கொண்ட பழையோன்=தமக்குப் பாயலானது திருப்பாற்கடலாகக் கொண்டருளிய புராதனரான ஸ்ரீ பகவான்—இவ்வாறு எனப் பணிப்பான்=(அந்த எதுவானது) இத்தன்மையதென் றருளிச்செய்கின்றார்.—எ-று. (௨௦)

[அருச்சுனனால் வினவப்பட்ட எதுவை ஸ்ரீ பகவான் அருளிச் செய்கின்றார்.]

[வேறு]

தீம னந்தனி லேசென னஞ்செயக்
காம மென்னுங்கைப் பாய்வளர் கின்றது
வேம யங்கொள் வெகுளியென் கின்றது
நாம மற்றத னன்னல மின்னுங்கேள்.

(இ-ள்.) (அருச்சுனா உன்னால் வினாவப்பட்ட அக்காரணமானது) தீ மனந்தனிலே செனனம் செய் அக்காமம் என்னும்=தீமையான ரஜோகுணரூப அந்தக்கரணத்திலேநின்றும் உற்பன்னமாகாநிற்கும் அந்தக்காமமென்றே சொல்லப்படும். — [குரோதமும் பிராணிகளை அனர்த்தத்திற் பிரவிர்த்திப்பித்தலால் கேவலம் காமத்தின்கண்ணேயே பிரவர்த்தகத்தன்மை கூடாதென்னும் அருச்சுனன் சங்கைக்குக் கூறுகின்றார்.] கைப்பு ஆய் வளர்கின்றது=(ஓர் துஷ்டபுருஷனானவன் தன்னைப் பூரணமாகவொட்டாமல் விரோதம் பண்ணும்போது இந்தக் காமமானது) வெறுப்பாய்ப் பரிணமிக்கின்றது தான்—வேம் மயம் கொள் வெகுளி என்கின்றது=(யாவரும் தீயினாற்போல) வேகாநின்ற உருவினையுடைய குரோதமென்று சொல்லப்படுகிறது;—(ஆதலால்) மற்ற தன் நாமம் = காமத்திற்கே குரோதமென்று பெயராம்;— மற்றதன்) நல் நலம்=அந்தக்காமத்தாலுளதாகும் நல்ல நன்மையை—இன்னும் கேள் = மேலுங் கேட்பாய்.—எ - று.

இங்கே தீமையை, 'நன்னலம்' என்றது, அது செய்யுங் கொடுமைபற்றியென்க. (௨௧)

[காமத்தின் கொடுமையை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

எவ்வ கைப்பய னுந்தின வல்லதை
யெவ்வ கைப்பெரும் பாவமு மீவதை
யெவ்வ கைப்பொருட் கும்பகை யாவதை
யிவ்வ கைத்தெனக் கூறுவ னின்னுங்கேள்.

(இ-ள்.) எவ்வகைப் பயனும் தின வல்லது=அனேகப் பிரகாரமான மகாபோகங்களையும் புஜிக்கவல்லது;—(இதனால்,) எவ்வகைப் பெரும் பாவமும் ஈவது=எவ்வகைப்பட்ட மகாபாவங்களையுங் கொடுக்கத்தக்க வுக்கிரமுடையது.—(ஆதலால்,) எவ்வகைப் பொருட்கும் பகை ஆவது=எவ்வகைப்பட்ட பிராணிகளுக்குஞ் சத்துருவாக இருக்கின்றது;—(இப்படிப்பட்ட காமத்தை) இன்னும் = மேலும் — இவ்வகைத்து என = இவ்விதமான தன்மையுடையதென்று—கூறுவன் கேள்=கூறுகின்றேன் கேட்பாய்.—எ-று. ஐகாரமூன்றும் இரண்டனுருபு.—

போகங்களால் திருப்தியடையாமையின், 'எவ்வகைப் பயனுந் தினவல்லது' என்றும், இக்காமத்தினால் பிரேரணை செய்யப்பட்ட புருஷனானவன் பாவகர்மத்தால் துக்க ரூபமான பயனடையாநிற்பதை யறிந்தும் மீட்டும் அப்பாவ கர்மங்களையே செய்வதால், 'எவ்வகைப் பெரும்பாவமுமீவது' என்றும் கூறினார். 'எவ்வகைப் பயனுந் தினவல்லது' என்றதால், உலகில் சத்துருவை வசம்பண்ணத்தக்க சாம, தான, பேத, தண்டம் என்னும் சதுர்வித வுபாயங்களுள்ளே தானவுபாயத்தினாலும், 'எவ்வகைப் பெரும்பாவமுமீவது' என்றதால், சாமம், பேதம் என்னும் இரண்டுபாயங்களாலும் காமரூபமான சத்துரு வசமாகாதென்பது பெறப்படுகின்றது. (௨௨)

[இப்போது விசேஷரூபமாகக் காமத்தின் சத்துருத்தன்மையை ஸ்ரீ பகவான் தரிசிப்பிக்கின்றார்]

நெருப்பை முற்றிய தூமமு நீடொளித்
தருப்ப ணத்தை மறைத்தன மாசும்போ
லுருப் படைத்தன வுள்ளுணர் வியாவையும்
விருப்ப முற்றவெங் காமம் விழுங்குமால்.

(இ-ள்.) நெருப்பை=அக்கினியை—முற்றிய தூமமும்=சூழ்ந்த (அப்பிரகாச ரூபமாகிய) புகையும்,—நீடு ஒளி=மிக்கபிரகாசமான—தருப்பணத்தை = கண்ணாடியை—மாசும்=மலமும் — மறைத்தன போல்=மறைத்தாற்போல—உருப் படைத்தன=உடலில் (தேகியினால்) அடைந்திருப்பனவான—உள் உணர்வு யாவையும்=அந்தக்கரணத்தின் விருத்திரூபமான விவேகவிஞ்ஞானங்கண் முழுதையும்—விருப்பம் உற்ற=விஷயப்பிரீதியினால் அதிகரித்த—வெம் காமம் விழுங்கும்=கொடியகாமமானது மறைக்கும்.—எ-று. ஆல்-அசைநிலை. ()

[காமத்தின் அதிஷ்டானங்களை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

காத லாற்றவிக் காமம் புலன்களே
வாயி லாப்புகுந் துள்ள மயக்குவ
தாத லாற்புல னைந்து மடக்கியே
யேதி லாங்கடுங் காம மிறுக்குவாய்.

(இ-ள்.) காதல் ஆற்ற—விஷயப்பிரீதியினால்அதிகரித்த—இக்காமம்=இந்தக்காமமானது—புலன்களே வாயிலாப் புகுந்து=இந்திரியம், மனம், புத்தி என்னும் இவைகளே வழியாக உள்ளே புகுந்து—உள்ளம் மயக்குவது=ஞானங்களை மறைத்துத் (தேகாபிமானியை நாநாப்பிரகாரமான) மோகங்களையடையும்படி பண்ணுகிறது;—ஆதலால்=அக்காரணத்தினால்,—புலன் ஐந்தும் அடக்கியே=(காமத்தினாற் பண்ணப்பட்ட மோகத்திற்கு முன்னரே) இந்திரியங்கள் ஐந்தையும் (வசஞ்செய்து அதனநந்தரம் மனம், புத்திகளையும்) வசஞ்செய்தே—வதில் ஆம் கடும் காமம் இறுக்குவாய்=முன்சொன்ன இம்மூன்றன்வாயிலா லுளதாகாநிற்குங் கொடியகாமத்தை நாசஞ்செய்வாய்.—எ-று.

இங்கே 'உள்ளம்' என்றது சீவனை. (௨௪)

[காமத்தை நாசம்பண்ணும்பொருட்டு இந்திரியங்களை வசம்பண்ணவேண்டுமென்று பூர்வமருளிச் செய்யப்பட்டது; அவ்விந்திரியங்கள் வசமானாலும் தேகேந்திரியாதிகட்கு வேறான ஆன்மஞானத்தினாலல்லாமல் காமத்தை ஜயிக்கக்கூடாததலால், ஆன்மாவைத் தேகேந்திரியாதிகளினும் வேறாக ஸ்ரீ பகவான் தரிசிப்பிக்கின்றார்.]

ஆற்று மிவ்வுடம் பிற்பர மைம்புலன்
மாற்று மைம்புல னிற்பர மாமனம்
போற்றும் புத்தி யதிற்பரம் புத்தியிற்
றோற்று கின்றது காண்பது தொல்பரம்.

(இ-ள்.) ஆற்றும்=(கர்மவசத்தாற்பஞ்சீகிருதபஞ்சமகா பூதங்களாற்) செய்யும்—இவ்வுடம்பில்=இத்தூலதேகத்தைப்பார்க்கிலும்—ஐம்புலன் பரம்=சுரோத்திராதிபஞ்சஞானேந்திரியங்கள் (சூட்சுமமாயும், பிரகாசமாயும், வியாபகமாயும், உள்ளாயும் இருத்தலால்) மேலாம்; (மேலும் இவ்வாறே அறிக.)—மாற்றும் ஐம்புலனில்=நிக்கிரகிக்கத்தக்கவைகளான பஞ்சஞானேந்திரியங்களைப் பார்க்கிலும்—மாமனம் பரம்=(அவைகளை விஷயங்களிற் பிரேரிப்பிக்குஞ் சங்கற்பவிகற்பான்மகமான) மகத்தாகிய மனமானது மேலாம்;—அதில் போற்றும் புத்தி பரம்=மனத்தைப்பார்க்கிலும் அதனைக் காக்கத்தக்க நிச்சயரூபமான புத்தியானது மேலாம்.—புத்தியில்=புத்தியைப்பார்க்கிலும்—தோற்றுகின்றது காண்பது=திருசியமான தேகேந்திரியமனோபுத்திகளைச் சாட்சியா யிருந்தறியும் பரமான்மாவே—தொல்பரம்=தொன்மையான பரமாம்.—எ-று.



'தொன்மை' என்னுஞ்சொல், புத்திக்குச் சாட்சியான பரமான்மாவைப்பார்க்கிலும் பரமானது வேறொன்றுமின்றென்பதைக்குறிப்பித்துநின்றது. இந்தப்படி பிரமகீதையில், "இந்தமெய்ப்பரம் புருடனிற் பரம்பிறி தில்லைமே லிவனேயாம்" என்று கூறியிருப்பது காண்க. (௨௫)

[இந்திரியாதிகளின் சமாதான பூர்வமாக ஆன்மஞானத்தால் காமஜயமடைதி யென்று ஸ்ரீ பகவான் உபசம்மரிக்கின்றார்.]

[வேறு.]

மேலாயுள்ள விப்பொருளை மெய்யாயறிந்து பொய்மாய
மாலாய்மயங்கு மனத்தினையு மடக்கியந்த மனங்கலக்குங்
காலாயுள்ள காமத்தைக் கரப்பாயென்று கட்டுரைத்தான்
சேலாயுலக முறுபுனலோர் செலுவின்புரையே செலுத்தினோன்.

(இ-ள்.) மேல் ஆய் உள்ள இப்பொருளை=(இந்தப்பிரகாரம் புத்தியினும்) பரமாயுள்ள ஆன்மாவை—மெய் ஆய் அறிந்து=சமுசயமின்றிச் சாட்சாத்கரித்து—பொய் மாய=ஜநநமரணாதி அனர்த்தங்கள் மாயும்படி—மால் ஆய் மயங்கும் மனத்தினையும்=நாநாவிதமோகங்களையுடையதாய்க் கலங்காநிற்குமனத்தையும்—அடக்கி=(ஆன்மாபுத்தியினும் பரமென்னும் நிச்சயரூபமான புத்தியினால்) ஸ்திரமாக்கி—அந்த மனம் கலக்கும் கால் ஆய் உள்ள=அந்த மனத்தைக் கலக்குங்காற்றாயுள்ள—காமத்தை=காமரூபமான சத்துருவை—கரப்பாய் என்று=நாசம் பண்ணுதி (அருச்சுனா) என்று—கட்டுரைத்தான்=அருளிச்செய்தனர்;—சேல் ஆய்=மச்சாவதாரமாய்—உலகம் உறுபுனல்=உலகத்தை மூடியெழுந்த சத்தசமுத்திரங்களையும்—ஓர் செலுவின் புரையே செலுத்தினோன்=தமது தெய்வவுதரத்தொரு சிறிய செலுவின் புரையிலே புகவிடுத்தடக்கிய ஸ்ரீ பகவான்.—எ-று.

இவ்வத்தியாயத்தில் ஞானநிஷ்டைக்கு உபாயரூபமான நிஷ்காம கர்மநிஷ்டை பிரதானரூபமாகவும், பலரூபமான ஞானநிஷ்டை கௌணரூபமாகவும் அருளிச்செய்யப்பட்டதென்றறிக. (௨௬)

மூன்றாவது
* கர்மயோகவத்தியாயம்
முற்றிற்று.

---

ஆக அத்தியாயம் ௩-க்குத் திருவிருத்தம்-௧௪௬.

* இதனைத் தேவபூஜையத்தியாய மென்றுங் கூறுவர்.

## ச-வது, * சம்பிரதாயவத்தியாயம்.

[பூர்வாத்தியாயங்களிரண்டினாலுஞ் சொல்லப்பட்டனவாயும், சகலவேதார்த்த சாரபூதங்களாயும், பிரவிர்த்தி, நிவிர்த்தி, அதிகாரிகளின் விஷயங்களாயுமுள்ள கர்மயோகம், ஞானயோகமென்னும் இரண்டனையும் விஸ்தாரமாக வருளிச்செய்யவேண்டுமென்று கருதி இவ்வத்தியாயத்தில் சம்பிரதாயக்கிரமமாக ஞானயோகத்தை ஸ்ரீ பகவான் ஸ்துதிக்கின்றார்.]

[மொழிபெயர்த்த வாசிரியர் மேலத்தியாயந் தொடங்க அடியிடுகின்றார்.]

நற்றவ நிகழ்தரு கரும ஞானமு
மற்றம தறவுனக் கறியக் கூறினேன்
மற்றவை களின்வர லாறுங் கேளெனக்
குற்றமி லாழியங் கையன் கூறுவான்.

(இ-ள்.) நல் தவ=நல்லதவத்தையுடைய அருச்சுனா—நிகழ்தரு கருமம் ஞானமும்=(பிரவிர்த்தி, நிவிர்த்தி அதிகாரிகளால்) அனுஷ்டிக்கப்பட்ட கர்மயோகம், ஞானயோகமென்னும் இரண்டனையும்—அற்றமது அற = குறைவற—உனக்கு அறியக் கூறினேன் = உனக்கறிந்தனுஷ்டிக்கும்படி (மேலை அத்தியாயங்களிரண்டினாலும்) உபதேசித்தேன்;—மற்று அவைகளின்வரலாறும் கேள்என=இனி அவ்விரண்டின் (குருசிஷ்யபாரம்பரிய) கதியுங்கேட்கக்கடவாயென்று—குற்றம் இல் ஆழி அம் கையன் கூறுவான்=குற்றமற்ற சக்கராயுதத்தையேந்திய திருக்கரத்தினையுடைய ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.—எ-று. (க)

[ஸ்ரீ பகவான் அருளிச்செய்கிறார்.]

எவமற முன்பியா னிரவிக் கோதினே
னவன்மனு வரசனுக் கறியக் கூறினா
னுவகையோ டவனிக்கு வாகுக் கோதினான்
றவமுய லரசரீ தறியுந் தன்மையோர்.

(இ-ள்) ஈது=பூர்வாத்தியாயங்களிரண்டினாலும் அருளிச்செய்த யோகங்களிரண்டினையும்—முன்பு=சிருஷ்டியின் ஆதிகாலத்தில்—

* வடநூலில், ஞானவிபாகயோகமென்று பெயர்.



யான் = (சர்வஜகத்தையும் பரிபாலனம் பண்ணும் வாசுதேவனான) நான்—இரவிக்கு=சூரியனுக்கு — எவ்வம் அற ஓதினேன்=(அவனது) துன்பமற உபதேசித்தேன்; — அவன்=அந்தச் சூரியனானவன்—மனு அரசனுக்கு அறியக் கூறினான்=தனது புத்திரனான வைவஸ்வதமனுவுக்கு அறியும்படி உபதேசித்தான்;—அவன் = அம்மனுவரசன்—இக்குவாகுக்கு=தனது புத்திரனான இட்சுவாகுக்கு—உவகையோடு ஓதினான் = சந்தோஷத்துடனே உபதேசித்தான்;—தவம் முயல் அரசர்=மற்றும் தவத்தை முயலாநிற்கும் (நிமி, ஜனகன், அஜாதசத்துரு, கைகேயன்முதலிய) ராஜரிஷிகளும்—அறியும் தன்மையோர்=(குருசிஷ்ய பரம்பரையாக) அறிந்தனுஷ்டிக்குந் தன்மையராயினர் (முன்னம்.)—எ-று.

எவ்வம் என்றது, இடைகுறைந்து 'எவம்' என்றாயிற்று. 'மனுவரசன்' எனுமொழிக்கு வைவஸ்வதமனுவென்று பொருள் கூறினது இக்காலையிலுள்ள வைவஸ்வதமனுவந்தரவபிப்பிராயத்தினாலென்றறிக.

இங்ஙனங் கூறியவாற்றால், இந்த ஞானயோகமானது பூர்வமேயுளதன்று, இன்னகாலத்திலேயே உளதானதென்னுங் கிருத்திரிமசங்கைக்கு விஷயமாகாதென்பது பெறப்படுகின்றது. (உ)

கருதரும் வகைநிகழ் காலஞ் சேறலா
மருவரும் வகையதாய் மறைந்த வாய்மையை
யிருவினை கெடவரு மியோக நீர்மையை
யொருவரு மறிவரி தாய வுண்மையை.

(இ-ள்.) கருத அரும் வகை—இவ்வளவென்று வரையறுத்து மதிக்கக்கூடாதபடி—நிகழ் காலம் சேறலால்=செல்கின்ற காலமோ அனேகஞ்சென்றதால்,—மருவ அரும் வகையதாய் மறைந்த=ஒருவராலும் அடைதற்கரிய தன்மையதாய் விச்சின்னமடைந்த — வாய்மையை = மெய்மையாயும், — ஒருவரும் அறிவு அரிது ஆய உண்மையை = யாவரானும் உணர்தற்கரிதாகிய இரகசியமாயும்,—இருவினை கெடவரும்=புண்ணியபாவமென்னும் இருவினைகளுஞ் சேஷமறக்கெடும்படி பெரியோர் ஆசரித்துவருவதால், உத்தமமாயுமுள்ள—யோக நீர்மையை=ஞானநிஷ்டையை,—எ-று. இது குளகம். (௩)

[வேறு.]

நல்ல காதல்செய் நண்பனு மாயெனை
யல்ல தியாவு மறியலை யாதலாற்
சொல்லன் மேயின னென்றனன் றாயவன்
மெல்ல வேறு விசயன் விளம்புவான்.

(இ - ள்.) காதல் செய் நல்ல நண்பனும் ஆய்=(என்னிடத்து) அன்புசெய்கின்ற சிறந்த சிநேகிதனுகியும், எனை அல்லது=என்னை யல்லாமல்—யாவும் அறியலை=(பொன், போகம், புகழ், வலி, ஊர், மனை, காணி, அன்னை, சுற்றம், துணைமுதலிய) அனைத்தையும் வேறே அறியாத பக்தனுகியு மிருக்கின்றனை; — ஆதலால்=அக்காரணத்தினுல், — சொல்லல் மேயினன் = உனக்கு உபதேசிக்கத் தொடங்கினேன்—என்றனன் தூயவன்=என்றருளிச்செய்தனர் பரிசுத்தரான ஸ்ரீ பகவான்.—மெல்ல வேறு = மிருதுவாக வேறொன்றை—விசயன் விளம்புவான்=அருச்சுனன் வினவுகின்றுன்.—எ-று.

'மறைந்தயோக நீர்மையைச் சொல்லன் மேயினன்' எனவொட்டுக. அனுதியான வேதத்தை மூலமாக வுடையதாதலால் புராதனமென்பார், 'வாய்மை' என்றுர். (௪)

[ஸ்ரீ பகவானிடத்தில் மூடப்பிராணிகட்கு இவன் ஈசுரனல்லனென்றுண்டாகும் விபரீத புத்தியைப் போக்குவித்தற் பொருட்டு அருச்சுனன் வினவுதல்.]

ஞானமாமிது நல்லவர் கேட்டிடப்
போனகாலமும் யான்புகன் றேனென்று
யானதாகிலு மவ்வுடம் பன்றிது
தானதாம்வகை நீயறி தக்கதோ.

(இ-ள்.) ஞானம் ஆம் இது = ஞானயோகமான இதனை—நல்லவர் கேட்டிட=நல்லோர்கள் பரம்பரையாகக் கேட்டனுஷ்டித்துவர—போன காலமும்=சென்ற சிருஷ்டியின் ஆதிகாலத்தும்—யான் புகன்றேன் என்றுய்=நான் சூரியனுக்கு உபதேசித்தேனென்றருளிச்செய்தீர்;—ஆனது ஆகிலும்=அப்படி உபதேசித்திருந்தாலும்—இதுதான் அவ்வுடம்பு அன்று=(வசுதேவன்றிருமனையில் அவதரித்திருக்கின்ற) இத்தேகமானது சர்க்காதியில் சூரியனுக்கு உபதேசித்த



அத்தேகமல்லவே;—(ஆதலால்,) அது ஆம் வகை நீஅறிதக்கதோ= சர்க்காதியில் அத்தேகத்திலுளதான அனுபவம் எங்களைப்போல மனுடதேகமுடையமாய், அசர்வக்ஞராயுள்ள நீர் ஸ்மரணஞ்செய்யக் கூடுவதோ? (கூடாதே.)—எ-று. (௫)

[இவ்வாசுதேவன் அநீசுரன், அசர்வக்ஞன் என மூர்க்கர்க்கு உளதாகுஞ் சங்கையைப் பரிகரிப்பவராய் ஸ்ரீ பகவான் அருச்சனன் வினவுக்கு விடையருளிச்செய்கின்றுர்.]

[வேறு.]

சொல்லார் விசய னிதுமொழியத் துளபமுடியோன் சொல்லுவான், பல்லாயிரங்கா ளுடம்பெனக்கு முனக்கு நடுவு பரிந்தொழிந்த, தெல்லா மறிவன் யானீய தேதுமறியா யிதுவன்றோ, வில்லார் தோளாய் நமக்குள்ள வேறுபாடு விளம்புங்கால்.

(இ-ள்.) சொல் ஆர் விசயன் இது மொழிய = புகழ்நிறைந்த அருச்சுனன் இவ்வாறு வினவ—துளபமுடியோன் சொல்லுவான்= துளபமாலையணிந்த முடியுடைய ஸ்ரீபகவான் இவ்வாறு உத்தரமருளிச் செய்கின்றுர்.—எனக்கும் உனக்கும் = வாசுதேவனுன எனக்கும், அருச்சுனனுன உனக்கும்—நடுவு=சர்க்காதிக்கும், இதற்கும் மத்தியில்—பரிந்து ஒழிந்தது உடம்பு=(முறையே லீலாமாத்திரத்தாலும், புண்ணியபாவ கர்மவசத்தாலும்) உண்டாயொழிந்தவைகளான ஜநநங்கள்—பல் ஆயிரம்=அனேகமாயிரமாம்;—யான் எல்லாம் அறிவன்= (சர்வக்ஞனும், சர்வசக்தி சம்பன்னனும், ஈசுரனுமுள்ள) யான் அந்த ஜநநங்களனைத்தையும் அறிவேன்:—நீ=(ஆவிருத ஞானசக்தியுடைய அஞ்ஞானியாகிய) நீ—அது எதும் அறியாய்=அந்த ஜநநங்களைச் சிறிதுமறியாய்;—வில் ஆர் தோளாய்=தனுசுபொருந்திய புயத்தினையுடைய அருச்சுன—இது அன்றோ = இதுவேயல்லவா—விளம்புங்கால் = சொல்லுமிடத்து—நமக்கு உள்ள வேறுபாடு=நம்மிருவர்க்கும் பரஸ்பரமுள்ள பேதமானது.—எ-று. காண்-அசைநிலை.

[நித்திய முக்தராய் ஜநநவேதுக்களான புண்ணிய பாவங்களில்லாத உமக்குச் சிலர்களைப்போலச் சென்ற அனேகமான ஜநநங்கள் எப்படிக்கூடுமென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் உத்தரமருளிச்செய்கின்றுர்.]

[வேறு.]

சாவாது பிறவாது தனிமுதலா யிருந்தநா
னாவாவிவ் வுலகுபடு மழிதுயர்தீர்ப் பதற்காக
மேவாது நின்றேயென் மாயையினான் மெய்யேபோ
லோவாது பிறந்திடுவே னுகந்தோறு முகந்தோறும்.

(இ-ள்.) சாவாது பிறவாது = மரணமாகாமலும், ஜநநமாகாமலும்—தனிமுதல் ஆய் இருந்த நான்=(பிரமாதி ஸ்தம்ப பரியந்தமான சர்வப்பிராணிகளுக்கும்) ஈசுரனாகியிருந்த நான்—இவ்வுலகு படும்=(தர்மத்திற்கு ஹானியும், அதர்மத்திற்கு விருத்தியும் வந்து) சாதுக்கள் படுகின்ற—அழி துயர் தீர்ப்பதற்கு ஆக=கொடியதுன்பத்தை நிவிர்த்தித்துத்துஷ்டரைச் சம்மரித்துத் தர்மத்தை ஸ்தாபித்தற்பொருட்டு—மேவாது நின்றே = (பரமார்த்தமாக ஜநநமடையாமல்) இருந்த வண்ணமிருந்தே—என் மாயையினால்=எனது (திரிகுணான்மிகையான) மாயாவசத்தினால் — மெய்யேபோல் = தேகமுடையவன்போல—ஓவாது உகந்தோறும் உகந்தோறும் பிறந்திடுவேன்=ஒழியாமல் யுகந்தோறும், யுகந்தோறும் சத்துவமூர்த்தியாய் அவதரிப்பேன்.—எ-று.

ஏகாரம், ஈற்றசை. 'ஆவா' என்பது இரக்கத்தால் வந்தது. (எ)

[பூர்வம் அருளிச்செய்த தமது ஜன்ம கர்மங்களை யறிந்ததனால் வரும்பயனை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

இவ்வகையென் செயலதனை யறிந்திந்த விடும்பையினின்
றுய்வகைய நெறிபெற்றுங் குயர்ந்தாரை யுரைப்பரிதால்
மெய்வகைய திதுவென்ன வேண்டியவர் வேண்டியன
வவ்வகைய தெய்வமுமா யளிப்பேனும் யானேகாண்.

(இ-ள்.) இவ்வகை = இந்தப்படி திவ்வியமான — என் செயலதனை=எனது ஜநநத்தையும், கர்மத்தையும் — அறிந்து=(லோகானுக்கிரகார்த்தமென்றுள்ளபடியே) அறிந்து — உய்வகைய நெறி பெற்று = தாம் பிழைத்தற்கேதுவான ஞானமாகிய தவத்தினை யடைந்து—இந்த இடும்பையில் நின்று=இராகம், பயம், குரோத முதலிய துன்பமயமான சம்சாரத்தினின்றும் — உயர்ந்தாரை = முக்தியடைந்தோரை = உரைப்ப அரிது=(இவ்வளவென்று வரையறுத்துச்)சொல்லமுடியாது.—[இந்தப்பிரகாரம் நிஷ்காம புருஷரை



முக்தியடையும்படி பண்ணிச் சகாம புருஷரை முக்தியடையும்படி பண்ணாமையால் உம்மிடத்துப் பட்சபாதம் உண்டென்னுஞ் சங்கைக்கு அருளிச்செய்கின்றார்.] (தம்மால் விழையும்பயன் சீக்கிரமடையப்படுவதால்,) மெய் வகையது=மெய்மையான தன்மையுடையது—இது என்ன=இந்தத் தெய்வந்தானென்று—வேண்டியவர்=(இந்திராதி தெய்வங்களுள்ளே ஒவ்வொரு தெய்வத்தை) விரும்பிச் சேவியா நிற்கும் சகாமபுருஷர்—வேண்டியன=விரும்பின (தனமுதலிய துச்சமான) அவ்வப்பயன்களை—அவ்வகைய தெய்வமும் ஆய்=அவரவர் உபாசித்த அவ்வத்தெய்வ ரூபமுமாகி—அளிப்பேனும் = கொடுப்பவனும்—யானே காண்=(வாசுதேவனான) நானே கண்டாய் (அருச்சுனா.)—எ-று. ஆங்கு, ஆல்-அசைநிலைகள்.

'அளிப்பேனும்' என்னும் உம்மை இறந்தது தழீஇயதாகலின், நிஷ்காமபுருஷர்க்கு ஞானவாயிலால் முக்திரூபமாகிய பயனைக் கொடுப்பதுமன்றி என்னும் பொருள் கொள்ளற்பாலதாம்; கொள்ளவே, அவரவர் பாவனையின்படி என்றால் அவ்வப்பயன்களை யடைதலால் என்னிடத்துப் பட்சபாதம் இல்லையென்பது கருத்து. இப்படியே வாசிட்டத்தும், "ஒருவருக்குநா னொன்றுநல்கல முணர்வின்வண்ணமே யுயிர்களெய்துமால்" என்று கூறியிருப்பது காண்க. (அ)

[நான்கு வருணங்களுக்குங் கர்த்தாவும், வேதத்தின் வழியாகப் பிராமணாதி வருணங்களுக்கு உத்தமாதமமான கர்மங்களை யருளிச்செய்தவரும் நீரேயாதலால், உம்மிடத்துப் பட்சபாதம் இல்லையென்பது பொருந்துமாறெங்ஙனே யெனின்? அதற்கு ஸ்ரீ பகவான் உத்தர மருளிச்செய்கின்றார்.]

செயலாலுங் குணத்தாலுஞ் செலநாலு குலமாக
வியலான்முன் படைத்தேனா னிப்பொழுதுங் காப்பேனான்
மயலாய வினைப்பயனின் மனம்வையேன் மற்றதனா
லயலாயே யிருக்குமெனக் கவையறிவா ரெனையனையார்.

(இ-ள்.) நான்=(பரமேசுரனான)நான்—முன்=சிருஷ்டியின் ஆதி காலத்தில்—குணத்தாலும் செயலாலும் செல = சத்துவாதி குண விபாகங்களோடும், சமதமாதி கர்மவிபாகங்களோடுங் கூடியொழுகும்படி—நாலு குலம் ஆக=(பிராமணாதி) நான்கு வருணங்களாக—இயலால்=மாயையினால்—படைத்தேன்=சிருஷ்டி செய்தேன்—இப்பொ

ழுதும் நான் காப்பேன்=இப்போதும்,(இனிமேலும்) நானே இரட்சிப்பேன்.—(குணவிபாகம், கர்மவிபாகங்களாற் சிருஷ்டித்தேன் என்றதால், தன்னிடத்துப் பக்ஷபாத மின்றென்பது சொல்லாமலே சித்தித்தது.) [நான்கு வருணங்களுக்கும் நீர் கர்த்தாவானால் கர்மபலன்களை யனுபவிக்கும் எம்மோடொத்தவரானீர்; ஆகவே, கர்த்திருத்வ, போக்திருத்வ முதலியவையற்ற ஈசுரனாக எப்படியாவீரென்னுஞ் சங்கைக்கு உத்தரமருளிச்செய்கின்றார்.] (நான் * ஆப்தகாமனாதலால்;) மயல் ஆய வினைப் பயனில் = மயக்கத்துக்கேதுவாகிய கர்மபலன்களில்—மனம் வையேன் = இச்சை வையேன்;—அதனால் = அக்காரணத்தினால்,—அவை எனக்கு அயலாயே இருக்கும்=அச்சிருஷ்டியாதி கர்மங்கள் (என்னோடு சம்பந்தியாமல்) எனக்கு அன்னியமாகவே யிருக்கும்; (இவ்வாறு கர்மங்களைச் செய்கிறவனானாலும் ஈசுரனாகிய நான் வாஸ்தவமாக அகர்த்தாவாகவே உளனென்பது கருத்து.)—[இந்தப்பிரகாரம் ஈசுரனாகிய நீர் இருந்ததனால், எமக்குப் பிரயோஜனம் என்னை யென்னின்? அதற்குக் கூறுகின்றார்.] எனை அறிவார்=(இந்தப்பிரகாரம்) என்னை அறிபவரும்—அனையார்=நான் எப்படியோ அப்படியே கர்மபந்தத்தினின்றும் விடுபடுவர்.—எ-று. மற்று - அசைநிலை.

சத்துவகுணப் பிரதானன் பிராமணன்; அவனுக்குச் சமதமாதி கர்மங்கள். சத்துவமிசிர ரஜோகுணப்பிரதானன் க்ஷத்திரியன்; அவனுக்குச் சௌரிய முதலானவை கர்மங்கள். தமோமிசிர ரஜோகுணப் பிரதானன் வைசியன்; அவனுக்குக் கிருஷியாதி கர்மங்கள். இரஜோமிசிர தமோகுணப்பிரதானன் சூத்திரன்; அவனுக்கு முதல் மூவருணத்தினரை வழிபடலாதி கர்மங்கள்; இவையே குணவிபாகம், கர்மவிபாகமாம் என்க. (கூ)

[பூர்வம் அனேக மகான்கள் ஆன்மாவை அகர்த்தா, அபோக்தாவாகவறிந்து கர்மங்களைச் செய்துவந்தனர்; அவ்வாறு நீயும் கர்மங்களைச் செய்வாயாகவென்று ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

உய்யும்படிமுன் னுணர்ந்தவர்க ளுணர்ந்தவினைமே லொருப்படுநீ, செய்யுங்கருமஞ் செய்யாமை தீயகரும மென்றிவற்றின், மெய்யும்பொய்யு மறிவருமை யறியவேண்டும் பொருளுமிவை, யெய்யுஞ்சிலைக்கை யுரவோயிங் கிவற்றின் செயலை யியம்பக்கேள்.

(இ-ள்.) உய்யும்படி=தாம் பிழைக்கும்படி—முன்=பூர்வயுகம் யுகாந்தரங்களில்—உணர்ந்தவர்கள்=சகலமும் அறிந்த முமுட்சுக்களான ஜனகன் முதலியோர்—உணர்ந்த வினைமேல் = (அகங்காரமின்றிச் செய்யுங் கர்மங்கள் பந்தத்திற் கேதுவாகாவென்று) அறிந்தநுஷ்டித்த வருணாச்சிரம கர்மங்களில்—நீ ஒருப்படு=அருச்சுனா நீயும் (அஞ்ஞானியானால் சித்தசுத்தியின்பொருட்டு,அல்லது ஞானியானால் லோக சங்கிரகப்பொருட்டு) ஒரே எண்ணமுடையவனாய்ச் செல்லுவாய்.—[கர்மமும், ஞானிகளோடு கூடியறிந்தே செய்யவேண்டுமல்லாமல் உலக பாம்பரை மாத்திரத்தாற் செய்யலாகாதென்னும் பொருளை இப்போதருளிச்செய்கின்றார்.] (யாது கர்மம், யாது அகர்மம் என்னும் பொருளில் வித்துவான்களும் மோகத்தையடைந்துளர் ஆதலால்;) செய்யும் கருமம் = செய்யாநின்ற கர்மம்—செய்யாமை= அகர்மம்—தீய கருமம்=விகர்மம் (நிஷேதகர்மமென்றுபொருள்.)—என்ற இவற்றின்=என்று கூறுகின்ற இவைகளின்—மெய்யும் பொய்யும்=மெய்ம்மையான சொரூபம் இங்ஙனமாமென்பதும், இங்ஙனமாகாவென்பதும்—அறிவு அருமை=அறிவது (எளிமையன்று) அருமையாம்;—அறியவேண்டும் பொருளும் இவை=(முமுட்சுக்களால்) அறியத்தக்க பொருள்களும் கர்மாகர்ம விகர்மங்களே.—(ஆதலால்,) எய்யும் சிலைக்கை உரவோய்=(பாணங்களைப்) பிரயோகம் பண்ணுந் தனுசு பொருந்திய கையையும், வலியையுமுடைய அருச்சுனா—இவற்றின் செயலை இயம்பக் கேள்=கர்மாகர்மங்களின் றன்மைகளை அருளிச்செய்யக்கேள்.—எ-று. (கO)

[முன் பிரதிக்ஞைசெய்தவற்றுள், விகர்மமானது நிஷித்தகர்மமென்பது பிரசித்தமாதலால் அதனை யொழித்து கர்ம, அகர்மங்களின் வாஸ்தவ சொரூபத்தைத் திருஷ்டாந்தமுகமாக ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

ஓடுகின்ற புனலாற்றி னோடத்துடனே யோடுவான்
மாடுநின்ற மரமோடத் தானின்றாற்போல் வரச்செய்தே
நீடுநின்ற மரங்களிவை நிற்குமியற்கைத்தன்மைத்தின் [போல்.
கோடுகின்றேன் யானேயென் றுணர்வுமிக்கோ னுணர்ந்தாற்

* சர்வான்ம திருஷ்டியினால் எவன் சர்வபதார்த்தங்களையுமடைந்தனன் அவன் ஆப்தகாமன்.

(இ-ள்.) ஓடுகின்ற புனல் ஆற்றின்=ஓடாநின்ற புனலையுடைய நதியில்—ஓடத்துடனே ஓடுவான்=ஓடுகின்றவோடத்துடனே ஓடுகின்றபுருஷனானவன்—மாடு நின்ற மாம் ஓட=அந்நதிதீரங்களில் (சமனரூபக்கிரியை தம்மிடத்தில்லாமல்) நிற்கின்ற விருட்சங்களோட—தான் நின்றால் போல்=தான் ஓடாமனிற்கின்றாற்போல—வரச்செய்தே = தோற்றரவாகக்கண்டும்—நீடு நின்ற மரங்கள் இவை = (இருதீரங்களிலு நீண்டுநிற்கின்ற இவ்விருட்சங்கள்—நிற்கும் இயற்கைத் தன்மைத்து=(கமனரூபக்கர்மமில்லாமல்) நிற்கின்ற இயற்கையான தன்மையுடையன;—இங்கு=நதியில்—யானே ஓடுகின்றேன் என்று = நானே (ஓடத்தோடுகூட) ஓடுகின்றேனென்று — உணர்வுமிக்கோன் உணர்ந்தால்போல்=அறிவுமிக்கபருவமுடையபுருஷன் அறிந்தாற்போல,—எ-று. இது குளகம். (கக)

செயன்மேனின்ற வறிவிடையே செயலின்மையுமச்செயல்செய்யா, வியன்மேனின்ற புலன்களிலேயெல்லாவினையுமியல்வதுவு, மயன்மேலின்றி யறிந்தானியா ரவனேயெல்லாமறிந்தோனு, முயன்மேனின்ற யோகியுநல் வினைகளெல்லாமொழிந்தோனும்.

(இ-ள்.) செயல் மேல் நின்ற=(யான்செய்கின்றேனென்னுந்தர் மாத்தியாசரூபப்பிரதீதியின்வலியால் ஆரோபிக்கப்பட்ட ஆரோபவசத்தால் தேகேந்திரியாதிகளின் விகித, நிஷித்தவியாபாரரூபமான) கர்மங்களினிற்கின்ற—அறிவிடையே= (அசங்கமான) ஆன்மாவின் கண்ணே—செயல் இன்மையும்=(வாஸ்தவமாகக்) கர்மங்களின் அபாவத்தையும்,—அச்செயல் செய்யா இயல் மேல் நின்ற புலன்களிலே= (யான் சும்மாவிருக்கின்றேன், கிஞ்சித்துங் கர்மங்களைச் செய்திலேனென்னும் அத்தியாசரூபப்பிரதீதியின்வலியால் தேகேந்திரியாதிகளில் கர்மங்களின் அபாவம் ஆரோபிக்கப்படுகின்றது; இப்படி ஆரோபிக்கப்பட்ட வியாபாரங்களின் உபாமத்தன்மைரூபமான) அகர்மத்தினிற்கின்ற தேகேந்திரியாதிகளில் — எல்லா வினையும் இயல்வதுவும்=(வாஸ்தவமாக விகித, நிஷித்தமான) சமஸ்தகர்மங்களும் பொருந்தாநிற்பதையும்—மயல் மேல் இன்றி = அவிவேகமானது இனி ஓர்போதும்பொருந்தாமல் ஒழிந்துபோகும்படி—அறிந்தான் யார் அவனே—விசாரித்தறிந்தவன் யாவன் அவனே—எல்லாம் அறிந்தோனும்=(மனுடருள்ளே கர்மாகர்மங்கள்) முழுதுமறிந்தபுத்திமானும், —உயல் மேல் நின்ற யோகியும்=ஒழிதலினிற்கின்றயோகியும்,—நல்வினைகள்எல்லாம்ஒழிந்தோனும்=கிருதகிருத்தியனுமாம்.—எ-று. ()



["செயன்மேனின்ற வறிவிடையே" என்னும் முற்செய்யுளாலருளிச்செய்யப்பட்ட சுருதியின் றாற்பரியார்த்தத்தை இதுமுதல் ஆறு செய்யுட்களால் வெளிப்படையாக ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

ஆவ தென்பது மாசையு மற்றன
மேவ ஞானவெந் தீயிடை வெந்தன
யாவர் தந்தொழி லவ்வகை யோர்களே
சாவ தும்பிறப் புந்தவிர்ந் தார்கடாம்.

(இ-ள்.) யாவர்தம் தொழில்=எவருடைய சர்வகர்மங்களும்—ஆவது என்பதும்=(இக்கர்மமானது நம்மால்) அநுஷ்டிக்கப்படுகிறதென்னுங் கர்த்திருத்வாபிமான ரூபமாகிய சங்கற்பமும்;—ஆசையும் =(சுவர்க்காதிபலன்களின்) காமமும் (ஆகியவிரண்டும்)—அற்றன =விடுபட்டனவாகி—மேவ = ஒருமிக்க—ஞான வெம் தீயிடை= ஞானமாகிய கடுந் தீயினால்—வெந்தன=தகிக்கப்பட்டனவோ—அவ்வகையோர்களே=அப்படிப்பட்ட சுபகர்மங்களையுடைய ஞானிகளே —சாவதும் பிறப்பும் தவிர்ந்தார்கள் தாம்=சம்சாரமுக்தராம்.—எ-று.

ஓகாரம் தொக்கிநின்றது. 'யாவர்தந்தொழில், ஆவதென்பது மாசையுமற்றன' என்றதால், கர்மத்தில் அகர்மத்தைப் பார்க்கும் ஞானிகளின் சர்வகர்மங்களும் கேவலம் லோகசங்கிரகப்பொருட்டும், சரீரத்தின் ஜீவனமாத்திரப்பொருட்டுமே பிராரப்த கர்மவசத்தால் வெறுஞ்சேஷ்டாரூபமாயுள்ளனவென்பது பெறப்படுகின்றது. (கஙு)

[இதுவுமது.]

எண்ணு மின்றி யிகபரம் யானிவை
பண்ணு கின்றன னென்னுமிப் பான்மையோ
னுண்ணு மேல்வினை யுண்டென வோர்கிலா
னண்ணு கின்ற வினைநலி வுண்ணுமோ.

(இ - ள்.) எண்ணும்=(அவிவேகிகளாற்) கருதும்—இகபரம்= இகபரபலாசங்கமும்,—யான்=கர்மாசங்கமும்—இன்றி=பரித்தியாகஞ்செய்து—இவை=இந்நித்திய நைமித்திக கர்மங்களை—பண்ணு

கின்றனன் என்னும்=செய்கின்றானென்று பெரியோர்களாற் கூறப்படும்—இப்பான்மையோன் = இந்தத் தன்மையினையுடைய ஞானியானவன்—உண்ணும் மேல்வினை=பின்னனுபவியாநிற்குங் கர்மங்கள்—உண்டு என ஓர்கிலான்=(தனக்கு)உண்டென்று மறந்து மறியான்.—நண்ணுகின்ற வினை—(பிராரப்தவசத்தால் அவன்) செய்கின்றகர்மங்கள்—நலிவுண்ணுமோ=(அவனை) வருத்துமோ? (வருத்தா.)—எ-று.

'இகபரம்' என்பன ஆகுபெயர். பலாசங்கம் = போகத்தின் அபிலாஷை. கர்மாசங்கம்=கர்மங்களில் யான் செய்கிறேனென்னும் கர்த்திருத்வாபிமானம். பரமானந்த சொரூபலாபத்தாற் பலாசங்கமும் அத்துவிதானந்த தரிசனத்தாற் கர்மாசங்கமும்இல்லாமையின், ஞானியானவன் உலக திருஷ்டியினால் கர்மங்களிற் பிரவிர்த்தித்திருந்தாலும் தனது பரமார்த்த திருஷ்டியினால் கிஞ்சித்துங் கர்மங்களைச் செய்திலனென்பது கருத்து. (க௪)

[இதுவுமது.]

அடங்குகின்ற புலன்களொ டாசைபோய்
மடங்குகின்ற மனத்தின னானவ
னுடம்பிதன்பொருட் டாலுள தாமெனத்
தொடங்குகின்ற வினைதொடக் குண்ணுமோ.

(இ-ள்.) ஆசை போய்=(சுவர்க்காதி பலன்களின்) திருஷ்ணையானது நீங்கி — அடங்குகின்ற புலன்களோடு=(பிரத்தியாகாரத்தால்) ஒடுங்குகின்ற இந்திரியங்களோடுகூட—மடங்குகின்ற மனத்தினன் ஆனவன் = நிரோதமாகின்ற சித்தத்தினையுடைய சந்நியாசியானவன்—உடம்பு இதன் பொருட்டால் உளது ஆம் என=சரீரஸ்திதியானது இக்காரணங்களா லுளதாமென்று—தொடங்குகின்ற வினை=தொடங்காநிற்கும் (பிக்ஷாடனம், கந்தை, கௌபீனாதி கிரகணரூபமான காயிக, வாசிக, மானசகர்மங்கள்—தொடக்குண்ணுமோ=(அவனைப்) பந்திக்கமாட்டுமோ? (மாட்டா.)—எ-று. (க௫)

[முற்செய்யுளில் சரீரஸ்திதி மாத்திரத்தில் உபயோகமான கர்மங்களின் கர்த்தவ்வியம் அருளிச்செய்யப்பட்டது; அதில் நியமமருளிச்செய்கின்றார்.]

பெற்றதேகொ டமைந்துமுன் பேறிழ
வுற்றபோதிலொத் தொன்று மொருவர்பாற்



செற்றமேது மிலாதவன் செய்வினை
குற்றமோவவற் றின்றிறங் கூறக்கேள்.

(இ-ள்.) பெற்றதே கொடு அமைந்து=* யதிரிச்சையினால் வந்தடைந்த அன்னம், வஸ்திர முதலிய பதார்த்தங்களைக்கொண்டு சந்தோஷித்து—முன் பேறு இழவு உற்றபோதில் ஒத்து=எதிரே லாப நஷ்டங்கள் வந்தடைந்தபோது சமானமாய்—ஒன்றும் ஒருவர் பால்=ஒருவிதத்தினாலும் ஒருவரிடத்தும்—செற்றம் ஏதும் இலாதவன்=மச்சரமானது சிறிதும் இல்லாத சந்நியாசியானவன்—செய்வினை=செய்யாநிற்கும் பிக்ஷாடனாதி கர்மங்கள்—குற்றமோ=(அவனுக்குப்) பந்தமாகுமோ? (ஆகா.)—அவற்றின் திறம் = அக்கர்மங்களின் றன்மையை—கூறக்கேள்=இனிக் கூறக்கேட்பாய்.—எ-று.

[பிக்ஷாடனாதி கர்மங்களால் துறவறத்திலுள்ள ஞானி பந்தமடையானென் றருளிச்செய்ததால், இல்லறத்திலுள்ள ஞானிகளாற் செய்யப்பட்ட எக்ஞாதி கர்மங்கள் அவசியம் பந்தவேதுவேயாமென்று அருச்சுனனுக்குளதாகுஞ் சங்கையை நிவிர்த்தி செய்யும்பொருட்டு முன்-க௪-ம் செய்யுளில் அருளிச்செய்த பொருளை ஸ்ரீ பகவான் இப்போது வெளிப்படையாக வருளிச்செய்கின்றார்.]

விட்டு முற்றும் வினைகள் வினைப்பயத்
திட்ட மற்றிறை தன்னி லெழுங்கருத்
தொட்ட நின்றவ னியாகப் பொருட்டுறப்
பட்ட கன்மம் பலத்துடன் மாயுமால்.

(இ-ள்.) வினைகள் முற்றும் விட்டு=கர்மங்கண்முழுதிலும் கர்த்திருத்வாபிமானம் விடுத்து—வினைப்பயத்து இட்டம் அற்று=கர்மபலன்களில் ஆசையொழிந்து—இறைதன்னில் = (ஞானரூபமான) பரமான்மாவில்—எழும் கருத்து=எழுகின்ற சித்தமானது—ஒட்ட நின்றவன்=நிலைபெற நின்ற ஞானியாகிய புருஷன்—யாகப்பொருட்டு=(வேதவிகிதமான) எக்ஞ (முதலியவற்றைச் † சம்ரட்சணஞ் செய்தற்) பொருட்டு, (அல்லது எக்ஞசப்தவாச்சியனான) விஷ்ணுவின் (பிரீதியின்) பொருட்டு—உறப்பட்ட கன்மம்=செய்யப்பட்ட (எக்ஞமுதலிய) கர்மங்கள்—பலத்துடன் மாயும் = பலத்தோடுகூட நாசமாய்விடும்.—எ-று. ஆல்-அசைநிலை. (க௭)

* யதிரிச்சை=வேண்டாதிருக்கத் தாமே வந்தடைவன. † சம்ரட்சணம்=எக்ஞ முதலியவற்றில் உலகைப் பிரவிர்த்திப்பித்தல்.

[அனுபவித்தாலல்லாமல் சுபாசுபகர்மங்கள் நூறுகோடி கற்பங்களாலும் நாசமாகாவென்று ஸ்மிருதியிற் கூறப்பட்டிருப்பதால் ஞானிக்குப் பலத்தோடுகூடக் கர்மங்கள் நாசமாய் விடுமென்று முன்னே அருளிச்செய்தது எப்படிக் கூடுமென்னும் அருச்சுனன் சங்கைக்குக் கிரியாகாரகபலரூபமான பிரபஞ்ச முழுதும் பிரமமாத்திரமல்லாமல் அன்னியமில்லையென்று பார்க்கும் பிரமஞானிக்குச் சகல கர்மங்களும் நாசமாய்விடும்; இதிற் சிறிதுஞ் சந்தேகமின்றென்னும் உபகிஷதார்த்தத்தை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

பிரம மானோர் பிரம நெருப்பிடைப்
பிரம மாகிய மந்திரந் தன்னினாற்
பிரம மாய சருவுடன் பெய்தபின்
பிரம மேயடை வாருளர் பின்னுங்கேள்.

(இ - ள்.) பிரமமானோர்=(எசுனைத்தும் பிரமமே யென்றறிந்து அந்தப்) பிரமமே தாமான பிரமவித்துக்கள்—பிரம நெருப்பிடை= பிரமரூபமான அக்கினியில்—பிரமம் ஆகிய மந்திரந்தன்னினால்= பிரமரூபமாகிய மந்திரத்தால்—பிரமம் ஆய சருவுடன்=பிரமரூபமாகிய அந்நத்தோடுகூட(நெய்முதலிய அவிசை)—பெய்த பின்=(பிரமரூபமாகிய கர்த்தாவினால்) ஆகுதிசெய்தபின்—பிரமமே அடைவார்= பிரமகர்மசமாதியினால் பரமானந்தசொரூப (அத்துவிதீய) பிரமத்தையேயடைவர்: (வேறொரு பயனையடையார்.)—உளர் பின்னும் கேள்= (வேறேயும்) எக்ஞஞ்செய்பவருளர்; மேலும்(அவர்களைக்)கேட்பாய்—எ-று.

பிரமகர்மசமாதி என்றது, பிரமரூபமானகர்மத்தில் சித்தத்தின் ஏகாக்கிரத்தை. நெருப்பு - பிரமம், மந்திரம் - பிரமம், சரு - பிரமம் என்று அபேதஞ்சொன்னது சுத்தியிற்றோன்றும் ரஜதம் சுத்திதான், அன்னியமில்லை யென்பதுபோல வாதசமானாதிகரணத்தா லென்றறிக.

கர்த்தா, கர்மம், கரணம், சம்பிரதானம், அதிகரணம் என்னும் ஐந்து காரகங்களினால் எக்ஞ முதலிய கிரியைகள் சித்தமாம்; இந்திராதி தேவதைகளை யுத்தேசித்து நெய் முதலிய திரவியங்களைத் தியாகஞ் செய்வது யாகம்; அந்த யாகமே தியாகஞ் செய்தற்குரிய நெய் முதலிய திரவியங்களை அக்கினியிற் சொரிவதால் ஓமமெனப்படும். உத்தேசித்த இந்திராதி தேவதைகளோ சம்பிரதான காரக



மாம். தியாகஞ் செய்தற்குரிய நெய் முதலியவை கர்மமாம். அக்கினியில் நெய் முதலிய அவிகளைப் பெய்வதில் அவ்வவிகளின் றூரகமாவதால், ஜுஹூ முதலியவை காரணமாம்; மந்திர முதலியவுங் காரணமேயாம். தேவதைகளை யுத்தேசித்து நெய் முதலிய திரவியங்களைத் தியாகம்பண்ணுவதும் அந்தத்திரவியங்களை அக்கினியிற் பெய்வதுங் கிரியையாம். முன்னே தியாகரூபக்கிரியையில் எஜமானனே கர்த்தா: பெய்யுங்கிரியையில் எஜமானனால் தட்சிணைகொடுத்து ஸ்தாபனஞ் செய்யப்பட்டுள்ள அத்வரியுகர்த்தாவாம். ஆகவநீயாதி அக்கினி அவிசொரிவதற்கு அதிகரணமாம்; இந்தப்பிரகாரம் தேசகாலாதிகளும் சகல கிரியைகளையுங் குறித்துச் சாதாரண வதிகரணமாம் என்றறிக.

இந்தப்பிரகாரம் எவ்வளவோ கிரியாகாரகவியாபாரங்களுள்ளன; அந்தச்சர்வவியவகாரங்களும் பிரமத்தின் அஞ்ஞானத்தினாற் கற்பிதங்களாகலின், எப்படி இரச்சுவின் அஞ்ஞானத்தினாற்கற்பிதங்களான சர்ப்பம், தண்டம், மாலைமுதலியவை அக்கற்பித சர்ப்பாதிகளின் இரச்சுரூபாதிஷ்டான ஞானத்தினாற் பாதமாய்விடுமோ அப்படி அதிஷ்டான பிரமசாட்சாத்காரத்தினால் கிரியாகாரகமுதலிய சர்வவியவகாரங்களும் பாதமாகிவிடும். ஆதலால், ஞானியினிடத்துக் கிரியாகாரக முதலிய வியவகாராபாசங்கள் பிரதீதியானாலும் தப்தபடம்போல யாதாமொருபயனையும் உர்பத்திபண்ணுவதிற் சமர்த்தமாகா வென்னும்பொருளை ஸ்ரீ பகவான் அருளிச்செய்ததுந்தவிரப் பிரமதிருஷ்டியே சர்வஎக்ஞரூபமுமாமென அதனை ஸ்துதித்தனவொன்றுமறிக. ()

[மேலைச் செய்யுளில் எக்ஞரூபமாக வருளிச்செய்த ஞானத்தின் பொருட்டே சகல எக்ஞங்களுஞ் செய்யப்படுவேதால், அதுவே சர்வ எக்ஞங்களினுஞ் சிரேஷ்டமாமென்று அதனைத் துதித்தற்பொருட்டு அதிகாரி பேதத்தால் ஞானோற்பத்திக்கு உபாயங்களான சர்வ எக்ஞங்களையும் இனி ஆறுசெய்யுட்களால் அருளிச்செய்கின்றார்.]

அறிவ தாகிய வங்கியி லேகொள
வறிவை யேசில ராகுதி பண்ணுவார்
செறிவ தாஞ்சமத் தீயிடை யேசில
ரறிவ தாய புலன்களை யீவர்கள்.

(இ-ள்.) சிலர்=(பிரமத்தையறிந்த) சிலசந்நியாசிகள்—அறிவது ஆகிய அக்கியிலே கொள= (சத்தியக்ஞான வநந்தானந்தமாய்ச் சர்வ

விசேஷணங்களுமற்ற தற்பதார்த்த) பிரமரூபமான அக்கினியில் அபேதமாக—அறிவையே=(துவம்பதார்த்தமான) பிரத்தியகான்மாவையே—அருதி பண்ணுவார்=ஓமஞ்செய்வர். (துவம்பதார்த்தரூபமான பிரத்தியகான்மாவைப் பிரமரூபமாகக் காண்பரென்பது கருத்து.)—சிலர்=சிலயோகிகள்—செறிவது ஆம் சமத் தீயிடையே=(தமது பிரயத்தனத்தாற்) பொருந்துவதாகிய சமரூபமான அக்கினியிலே—எறிவது ஆய புலன்களை=நிவிர்த்திக்கத்தக்கனவான சுரோத்திர முதலிய ஞானேந்திரியங்களை — ஈவர்கள்=ஓமஞ் செய்வர்கள்.—எ-று.

இங்கே 'சமம்' என்றது, பிரத்தியாகாரத்தை. இயமம், நியமம், ஆசனம், பிராணயாமம் இந்நான்கனையும் பெற்றுக் கேவலம் பிரத்தியாகாரபாராயணரான சில அதிகாரி புருஷர் சுரோத்திர முதலிய பஞ்ச ஞானேந்திரியங்களையும் தத்தம் சப்த முதலிய விஷயங்களினின்றும் நிவிர்த்திசெய்து சமரூபமான அக்கினியில் ஓமஞ்செய்வர். ஓர் வஸ்துவை விஷயம் பண்ணுகிற்குந் தாரணை, தியானம், சமாதி என்னும் இவை மூன்றும் சம்யமமென்று பதஞ்சலி பகவானாற் கூறப்பட்டிருக்கின்றன; அவற்றுள், இருதயகமல முதலிய ஸ்தானங்களில் சிரகால பரியந்தம் மனத்தைத் தாரணஞ்செய்வது தாரணை; இந்தப்பிரகாரம் ஓர் தானத்தில் தாரணஞ்செய்த சித்தத்திற்கு உத்தரோத்தரம் விஜாதீய விருத்திகளாற் பண்ணைப்பட்ட வியவதானத்தோடு கூடிய பகவதாகாரமான சஜாதீய விருத்திப்பிரவாகமே தியானம். சித்தத்திற்கு விஜாதீய விருத்தி வியவதானமின்றிக் கேவலம் பகவதாகாரமான சஜாதீய விருத்திப்பிரவாகம் உளதாதலே சமாதி; அந்தச் சமாதியும் சித்தத்தின் பூமிகளின் பேதத்தால் இருவகைத்தாம்; ஒன்று சம்பிரக்ஞாத சமாதி: மற்றொன்று அசம்பிரக்ஞாத சமாதி. க்ஷிப்தம், மூடம், விக்ஷிப்தம், ஏகாக்கிரம், நிருத்தம் என்னும் ஐந்துபூமிகை சித்தத்திற்கு உளவாம். [அவஸ்தா விசேஷத்திற்குப் பூமிகை யென்று பெயர்.] க-இராகத்துவேஷாதிகளின் வசத்தால் விஷயங்களில் அத்தியந்தம் அபினிவேசமுடைய சித்தம் க்ஷிப்தமெனப்படும். உ - நித்திரை, ஆலசியாதிகளால் கவரப்பட்டுள்ள சித்தம் மூடமெனப்படும். ௩ - யாதொரு சித்தம் எப்போதும் விஷயங்களில் ஆசையுடையதாயிருந்தும் ஓர்போது தெய்வயோகத்தால் தியானநிஷ்டையுமுடையதாமோ அந்தச் சித்தமானது க்ஷிப்தத்தைப் பார்க்கினுஞ் சிரேஷ்டமாவதால் விக்ஷிப்தமெனப்படும். ச-க்ஷிப்த சித்தத்தி



லும் மூடசித்தத்திலுஞ் சமாதி உண்டென்னுஞ் சங்கையே உளதாதலில்லை. விக்ஷிப்தசித்தத்திலோவெனின்? ஓர்போது சமாதியுமுளதாம். ஆயினும் விக்ஷேபத்தின் பிரதானத்தன்மையால் அச்சமாதி யோகபட்சத்திற் சேராது; பின்னையோ பெருங்காற்றால் விக்ஷிப்தமான தீபமானது தானே நாசமாய்விடுவதுபோல அந்த ஓர்போது சமாதியும் தானே நாசத்தை யடையாநிற்கும்; அந்தச் சித்தத்தில் ஓர் வஸ்துவை விஷயம் பண்ணுகிற்குந் தாராவாகிக விருத்திகளின் யாதொரு சாமர்த்தியம் உண்டோ அதற்கு ஏகாக்கிரமென்று பெயர். ரு-சத்துவகுணத்தின் வளர்ச்சியினால் தமோகுணத்தாற் செய்யப்பட்ட ஆலசியாதி ரூபமானலயத்தின் அபாவமானது உளதாய் ஆன்மாகாரவிருத்தி உளதாம்; அவ்வான்மாகாரவிருத்தி இரஜோகுணத்தாற் பண்ணப்பட்ட சஞ்சலத்தன்மை ரூபமான விக்ஷேபத்தின் அபாவத்தால் ஒரேவஸ்து விஷயமாகவுளதாம்; இவ்வாறு சுத்தசத்துவ குணமேயாகி அச்சித்தமானது ஏகாக்கிரமாம்; அவ்வேகாக்கிரமான சித்தத்தின்கண்ணே சம்பிரக்ஞாத சமாதி உளதாம்; அந்தச் சம்பிரக்ஞாத சமாதியின்கண்ணே தியேயாகாரவிருத்தி தோற்றாவாம்; எப்போது அந்தத் தியேயாகார விருத்தியும் நிரோதத்தை யடையாநிற்குமோ அப்போது அந்தச் சித்தமானது நிருத்தமெனப்படும்; அந்த நிருத்த சித்தத்தின்கண்ணே அசம்பிரக்ஞாத சமாதி உளதாம். இவ்வாறான தாரணை, தியானம், சமாதி என்னும் இம்மூன்றுஞ் சித்தித்தற்பொருட்டுச் சுரோத்திர முதலிய இந்திரியங்களைப் பிரத்தியாகாரஞ் செய்யவேண்டும்; அதன் பின்னர், விக்ஷேபத்தின் அபாவத்தால் சித்தமானது தாரணை முதலியவற்றைச் சம்பாதியாநிற்கும். ஆதலால், சர்வேந்திரியங்களாலும் ஜனிப்பவைகளான விருத்திகளின் நிரோதத்தை எக்ஞரூபமாக வர்ணிக்கப்பட்டதென்றறிக. ()

[சமாதியினின்றுமெழுந்தபோது இராகத்துவேஷ ரகிதமாய்ச் சாஸ்திரவிகிதமான விஷயங்களைப் புஜித்தலும் ஓர் எக்ஞந்தானென்னும் பொருளை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

உந்தி யப்பொறி யைந்தையு மொக்கவே
யிந்தி யத்தழல் வாயிடு வார்சிலர்
நந்தி யத்தொழி லியாவையு ஞானநெய்
சிந்தி யோகவெந் தீயிடு வார்சிலர்.

(இ-ள்) (அருச்சுனா) சிலர்=(சமாதியினின்றுமெழுந்த) சில யோகிகள்—உந்தியப்பொறி ஐந்தையும்=(சாஸ்திரத்தின்) அவிருத்த

மான சப்தாதி விஷயங்கள் ஐந்தனையும் — ஒக்கவே = இராகத்துவேஷமில்லாமலே—இந்தியத்தழல்வாய்இடுவார்=சுரோத்திரமுதலிய இந்திரிய ரூபங்களான அக்கினிகளில் ஓமஞ் செய்வர்.—[முன்னே பத்தொன்பதாஞ் செய்யுளின் பிற்பாதியிலும், இவ்விருபதாஞ் செய்யுளின் முற்பாதியிலும் பாதஞ்சலமதானுசாரமாக லயபூர்வகமான சமாதியையும், அதினின்றும் * வியுத்தானமாகுந் தசையையும் இருவித எக்ஞங்களாக வருளிச்செய்து இப்போது பிரமவாதிகளின் மதானுசாரமாகச் சர்வசாதனங்களின் பலரூபமாவதும்,காரணநாசத்தால் வியுத்தான மாகாததுமான நிரோத பூர்வக சமாதியை எக்ஞாந்தரமாக ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.] சிலர் = (வேறேயுஞ்) சிலவதிகாரிகள்—தொழில் யாவையும் = (வாகியாந்தரங்களான சர்வேந்திரியங்களின்) றொழில்களையும், பிராணாபானன் முதலிய சர்வ வாயுக்களின் றொழில்களையும்—ஞான நெய் சிந்தி = † விவேகவிக்ஞானமாகிய நெய்யைச் சொரிந்து—நந்திய=அதனாற் சுவாலிக்கின்ற—யோக வெம் தீ=(ஆன்மாவின்கண்ணே தாரணை, தியான, சமாதி ரூபமென்னும்) யோகமாகிய அக்கினியில்—இடுவார் = ஆகுதி செய்வர்.—எ-று.

லயபூர்வக சமாதி, வாதபூர்வக சமாதி எனச் சமாதி இருவகைத்து; அவற்றுள் வியஷ்டி ஸ்தூலதேகமுதல் மாயைபரியந்தம் ஒன்றிலொன்றுண்டான பிரகாரமே யொடுக்கி மாயாரூபமான காரணமும் ஜடரூபமாகலின், சைதன்னிய ரூபமான பிரமத்தில் அத்தியஸ்தமாம்; ஆதலால், அச்சைதன்னிய ரூபமான பிரமத்தினும் அம்மாயா ரூபமான காரணம் பின்னமில்லையென் றிவ்வாறு நிரந்தரஞ் சிந்தித்துக் காரியகாரணங்களான சர்வப்பிரபஞ்சமும் உளதாக விருந்தும் சைதன்னியப் பிரமமாத்திரம் விஷயமாயுள்ள சமாதி யாது அஃது லயபூர்வக சமாதியெனப்படும்; அதில் அதிகாரிக்குத் தத்துவமசியாதி வேதாந்த வாக்கியங்களின் அர்த்தஞானமோ இல்லை. ஆதலால், காரியத்தோடுகூட அவித்தையானது நாசமாகவில்லை; பின்னையோ அவ்வவித்தை லயசிந்தனகாலத்து முள்ளதே; இதனால் அவ்வவித்தியாரூபமான காரணத்தினின்று மீண்டும் சம்சாரரூபமான காரியம் உற்பத்தியாம். ஆதலால், லயபூர்வகமான சமாதி சுழுத்திபோல ஸபீஜ சமாதியே: முக்கியமான நிர்பீஜ சமாதியன்று. முக்கியமான நிர்பீஜவாத பூர்வகசமாதியைத்தானே ஈண்டு ஸ்ரீ பகவான் அருளிச்செய்தனர் எனக. (௨0)

* வியுத்தானம்=விசேஷமாக எழுதல்.

† விவேகவிக்ஞானம்=மகாவாக்கிய விசாரத்தால் ஜநியாநின்ற பரமான்ம ஐக்கிய சாட்சாத்காரம்.



[பூர்வம் இரண்டு செய்யுட்களால் ஸ்ரீ பகவான் நான்குவித எக்ஞங்களை யருளிச்செய்து இதில் ஐந்துவிதமான எக்ஞங்களை யருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

தேடிய பொருள்களாலுஞ் செயலுறு தவங்களாலு
நாடிய யோகத்தாலு நவின்மறை ஞானத்தாலுங்
கூடிய பரிசால்வேள்வி குலாவுவ ரனேகரிங்குப்
பாடிய விவர்களன்றி யிவர்சிலர் பரிசுங்கேளாய்.

(இ - ள்.) தேடிய பொருள்களாலும் = தாம் சம்பாதித்த திரவியங்களாலும்,—செயல் உறு தவங்களாலும்=தாம் செய்யாநிற்குந் தவசுகளாலும்,—நாடிய யோகத்தாலும்=தாம் விரும்பிய யோகத்தினாலும்;—நவில் மறை ஞானத்தாலும் = இருக்கு முதலிய வேதாத்தியயனத்தினாலும், அவற்றின் அர்த்தஞானத்தினாலும்—கூடிய பரிசால்=(தமது சக்தி, புத்திக்கு) இயன்றவிதத்தால்—வேள்வி குலாவுவர் அனேகர் = எக்ஞஞ் செய்யாநிற்பவர் அனேகருளர்.—இங்குப் பாடிய இவர்கள் அன்றி=இங்கே சொல்லிய இவ்வைவரல்லாமல்—இவர் சிலர் பரிசும் கேளாய்=இனிக் கூறப்படுபவர்களான சிலர் எக்ஞத்தையுங் கேட்பாய்.—எ-று.

‘தேடியபொருள்களால், வேள்வி குலாவுவர்’ என்று கூறினது பூர்த்தம், தத்தம் என்னும் பெயருடைய ஸ்மார்த்தகர்மஞ் செய்பவரை. வாவி, கூவ, தடாகாதிகளைச் செய்வதும், சிவ, விஷ்ணுவாதி தேவாலயங்களைச் செய்வதும், பசியினாற் பீடையுற்ற பிராணிகளுக்கு அந்நப்பிரதானஞ் செய்வதும், ஜனங்கள் நிவாசஞ் செய்யும்பொருட்டுத் தர்மசாலை செய்வதுமாகிய இவை முதலிய சர்வ கர்மங்களும் பூர்த்தமெனப்படும். சரணாகதமான பிராணிகளை இரட்சித்தலும், ஓர் பிராணியையும் இம்சியாமையுமாகிய இவை முதலிய சர்வ கர்மங்களும் தத்தமெனப்படும். ‘தவங்கள்’ = கிருச்சிரசாந்திராயணாதிகள். ‘யோகம்’=சித்தவிருத்திநிரோதரூபமான அஷ்டாங்கயோகம்; இவ்வஷ்டாங்க யோகங்களுள்ளே பிரத்தியாகாரத்தின்சொரூபம், “செறிவதாஞ் சமத்தியிடையே சிலவொறிவதாய புலன்களையீவர்கள்’ என்று ௪௬-ம் செய்யுளின் பிற்பாதியிற் கூறப்பட்டமையினானும், தாரணை, தியானம், சமாதி என்னும் இம்மூன்றன் சொரூபமோ, “நந்தியத் தொழிலியாவையு ஞானநெய்,சிந்தியோகவெந்தீயிடுவார் சிலர்” என்று

உ0-ம் செய்யுளின் பிற்பாதியிற் கூறப்பட்டமையினாலும், பிராணா யாமத்தின் சொரூபம் இனிவரும் உஉ-ம் செய்யுளாற் கூறப்படுவதனாலும் இங்கே 'யோகம்' என்றது, இயம, நியம, ஆசனங்களை. இயம, நியமாதிகளின் சொரூப மறியவேண்டியிடில் ஈசுரகீதையில் யோகாத்தியாயத்திற் காண்க. (உக)

[இனிப் பிராணாயாமரூப எக்ஞத்தை அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

மிகமேனின்ற பிராணனையங் கபானனிடையே புகவிட்டங்
ககமேநின்ற வபானனையப் பிராணனிடையா குதிபண்ணி
யிகமேயிரண்டு மியக்கமற விருப்பார்சிலர்மற் றிவர்கண்டாய்
சகமேற்பிராணா யாமத்தின் றலைநின்றவரோ சாற்றுங்கால்.

(இ-ள்.) சிலர்=சிலவதிகாரிகள்—மிக மேல் நின்ற பிராணனை =மிகவும் ஊர்த்துவவிருத்தியாக வோடிக்கொண்டிருக்கின்ற பிராணவாயுவை—அபானனிடையே புகவிட்டு=அபானவாயுவிலே பூரகப்பிராணாயாமவாயிலாயிழுத்து ஓமஞ்செய்து—அகமே நின்ற அபானனை = அதோவிருத்தியாக வோடிக்கொண்டிருக்கின்ற அபான வாயுவை—அப்பிராணனிடை ஆகுதி பண்ணி=அந்தப் பிராணனிடத்தே ஓமஞ்செய்து — இகமே = இத்தேகத்தின்கண்ணே—இரண்டும்=பிராணாபானன்களிரண்டும்—இயக்கம் அற இருப்பார்=(ஊர்த்துவாதோகமனங்கள்) ஒடுங்கும்படி இருப்பார்கள்;—இவர் கண்டாய்=இவரோ கண்டாய்—சகம் மேல் = உலகின்கண்ணே—பிராணாயாமத்தின் தலைநின்றவர் = பிராணாயாமதத்பரராம் — சாற்றுங்கால்=சொல்லுமிடத்து.—எ-று.

அங்கு இரண்டும் ஆங்கென்னும் அசைநிலைகளின் மருஉ-மற்றும். அசைநிலை. ஏகாரம்-ஈற்றசை. 'பிராணனை அபானனிடை புகவிட்டு' என்றது, பூரகப்பிராணாயாமம். 'அபானனைப் பிராணனிடை யாகுதி பண்ணி' என்றது, இரேசகப்பிராணாயாமம். 'இரண்டு மியக்கமற' என்றது, கும்பகப்பிராணாயாமம் என்க. (உஉ)

[சஉ-ம் செய்யுள் தொடுத்துக் கூறிப்போந்த தசவித எக்ஞங்களைச் செய்யாநிற்பவர்க்கு உளதாகும் பலனை இப்போது அருளிச்செய்கின்றார்.]

[வேறு]

இன்னவர்க ளியாவர்களு மியாகமறி வாரோ
யன்னவர்க ளேயறனி றீமையி னகன்றோர்



சொன்னபரி சாலிவை தொடங்கமுடி யாதார்க்
கென்னபரி சாலுமிக மில்லைபர முண்டோ.

(இ-ள்.) இன்னவர்கள் யாவர்களும் = இங்கே சொல்லிவந்த இவரனைவரும்—யாகம் அறிவாரோ—எக்ஞரூபக்கிரியைகளை அறிந்தவர்களேயாவர்;—அன்னவர்களே அறனில் = அவர்களே புண்ணிய ரூபங்களான எக்ஞங்களினால்—தீமையின் அகன்றோர்=பாவங்களினின்றும் விடுபட்டவராவர்.—[அவற்றைச் செய்யாமையினால் வருந் தோஷ மருளிச்செய்கின்றார்.] சொன்ன பரிசால்=இங்கே சொல்லி வந்த பிரகாரமாக—இவை தொடங்க முடியாதார்க்கு=இவ்வெக்ஞங்களைச் செய்யமுடியாதோர்க்கு—என்ன பரிசாலும் இகம் இல்லை= எவ்வாற்றானும் அற்பசுகமுடையமநுடலோகமே உளதாவதில்லை:— பரம் உண்டோ = (மகாபுண்ணிய கர்மங்களாலடையப்படும்) பரலோகசுகம் எங்ஙனுளதாம்; (ஆகலின், இவை சர்வதா செய்யத்தக்கனவாம்.)—எ-று. (உ௩)

[பகவானே! இவ்வெக்ஞங்கள் கேவலம் உமது கற்பனையினாலருளிச்செய்யப்பட்டனவல்லாமல் வேறொரு பிரமாணம் இல்லையென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் உத்தர மருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

இப்படி யுரைத்தவிந்த யாகங்க ளியாவு முன்னஞ்
செப்பிய பிரமத்தின்கட் சனித்தன செய்யுங் காலை
யொப்பரி தாயபுத்தி கருமத்தி னாகா துள்ளத்
தப்படி யறிந்துநீயும் பாவத்தி னகல நிற்பாய்.

(இ-ள்.) இப்படி உரைத்த = இவ்வாறு (நம்மால்) அருளிச்செய்யப்பட்ட—இந்த யாகங்கள் யாவும் = இவ்வெக்ஞங்களனைத்தும்— முன்னம் பிரமத்தின்கண் செப்பிய=அநாதியே வேதத்தின் மத்தியில் விஸ்தீரணமாகப் பிரதிபாதிக்கப்பட்டுள்ளன (வல்லாமல் நம்மால் சற்பித்துச் சொல்லப்பட்டனவல்ல; அங்ஙனமாயினும்)—செய்யுங் காலை=செய்யும்போது—சனித்தன=(காயிக, வாசிக, மானசகர்மங்களாலேயே) உற்பன்னமாயின (வல்லாமல் ஆன்மாவினாலல்ல.)— ஒப்பு அரிது ஆய புத்தி = (ஆன்மா கர்மங்கட்ககோசரமாதலின்,) இணையற்ற ஆன்ம விஷயமான புத்தியானது—கருமத்தின் ஆகாது =கர்மங்களால் உளதாகாது;—உள்ளத்து அப்படி அறிந்து = உள்

ளத்தின்கண் அவ்வாறறிந்து—நீயும்=அருச்சுன நீயும் (ஞானநிஷ்டனாய்)—பாவத்தின் அகல நிற்பாய் = பாவரூபமான சம்சாரத்தினின்றும் முக்தனாவாய்.—எ-று. (உச)

[பூர்வப்பிரசங்கத்தில் ஸ்ரீ பகவானால் சர்வ யக்ஞங்களையும் சமானமாகவே அருளிச்செய்யப்பட்டமையின் கர்ம யக்ஞம், ஞான யக்ஞமென்னும் இருவகை யக்ஞங்களுஞ் சமானமேயாமென் றருச்சுனனுக்கெழாநிற்குஞ் சங்கையை நிவிர்த்தித்தற்பொருட்டு ஞானயக்ஞத்தின் சிரேஷ்டத்துவத்தை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

தொன்மை யாகமுன் சொன்ன துறைக்கெலா
நன்மை யாமிகப் பாலது ஞானமே
பின்ம யாலறுத் தாங்கது பேணிடுந்
தன்மை யாதெனி லாங்கதுஞ் சாற்றுவாம்.

(இ-ள்.) தொன்மை ஆக = அநாதியே வேதத்திற் பிரதிபாதிக்கப்பட்டுள்ளனவாக — முன் சொன்ன துறைக்கு எலாம் = முன்னே நம்மாலருளிச்செய்யப்பட்ட (ஞானசூனியமான) திரவியமயயக்ஞமுதலிய யக்ஞங்களுக்கெல்லாம்—மிக நன்மை ஆம் பாலது =அத்தியந்தஞ் சிரேஷ்டமான இயல்பினையுடையது—ஞானமே= ஞானயக்ஞமே: (எதனாலெனின்? அக்கினிஹோத்திரம், ஜ்யோதிஷ்டோமமுதலிய சிரௌதகர்மங்களும், உபாசனைமுதலிய ஸ்மார்த்த கர்மங்களுமாகிய சர்வகர்மங்களும் பாவரூபப் பிரதிபந்த நிவிர்த்தி வாயிலாக ஆன்மஞானத்தின்கண்ணேயே பரியவசானத்தையடைவதால் என்க.)—பின் = (ஞானயக்ஞமே சர்வ யக்ஞங்களிலுஞ் சிரேஷ்டமாமென்றறிந்த) பின்னர்—மயால் அறுத்து=(ஞானசூனியமான சர்வ யக்ஞங்களிலுமுளதாகும்) இச்சையையொழித்து—அது பேணிடுந்தன்மை யாது எனில் = அந்த ஞானத்தையடையத்தக்க வுபாயமானது எதென்று கேட்பாயாகில்—அதும் சாற்றுவாம்= அவ்வுபாயத்தையும் இனி யருளிச்செய்வாம்.—எ-று.

ஆங்கு இரண்டும் அசைநிலைகள். மயல் என்றது, தொடைநோக்கி, 'மயால்' என நீண்டுநின்றது. (உரு)

[ஆன்மஞானவுபாய மருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

விழியாமென வறிவாலறி வுறுவார்விழி வசமே
வழிபாடுசெய் தவர்சேவடி மலர்சூடிட வவரே
யொழியாதெவர் களுமியாவையு மொருநீயென திடையென்
றழியாவகை யதுவாவதொ ரறிவேயரு ளுவரால்.

(இ-ள்.) விழி ஆம் என=(இவன் எனது) கண்மணியாமென்று (உன்மீதருள் சுரக்கும்படி)—அறிவால் அறிவு உறவார் விழிவசமே= சாஸ்திரஞானத்தோடு பிரமத்தை யறிந்திருப்பவரான ஆசாரியாது கருத்தின்படியே—வழிபாடு செய்து=சேவைசெய்து (அவரைச் சந்தோஷிப்பித்து குருவே நானார்? எனக்குச் சம்சாரம் எப்படி வந்தது? எவ்வுபாயத்தால் இச்சம்சாரத்தினின்றும் முக்தனாவேன் என்று பிரசினஞ்செய்து)—அவர் சேவடி மலர் சூடிட=அவருடைய செந்தாமரைமலர்போலும் திருவடியை உனது முடியின்மீது சூடிக்கொள்ள —அவர்=அந்தப் பிரமநிஷ்டரும்—ஒழியாது எவர்களும் யாவையும் = தவிராமற் சராசரப்பிரபஞ்ச முழுதையும் — ஒரு நீ=பிரத்தியகான்மாவாய்த் துவம்பதலட்சியார்த்தனான நீ—எனதிடை என்று= என்னிடத் தபேதமென்றறிந்து (பின்னை வாசுதேவனாய்த் தற்பதலட்சியார்த்தனான என்னிடத்து உன்னை அபேதமாக வறிவையோ)— அழியாவகையது ஆவது ஓர் அறிவு=(பிதா, புத்திரர்முதலிய பந்துவதத்தால் ஓர்போதுஞ்) சோகமடையாதிருக்குந் தன்மையானது உளதாதற்குக் காரணமான அப்படிப்பட்ட அபேத ஞானத்தை— அருளுவர் = உனக்குபதேசிப்பார்கள்.—எ-று.

ஏகாரங்கள், ஆல்-அசைகள்.

பிரசினமென்பது எஞ்சிநின்றது. சேவை = ஆத்தம், அங்கம், தானம், சற்பாவம் என்னும் இவை; உ-ம் "குருபரனுக்கவனெஞ்சகம்போ லனுகூலத்தனாய்க், காசாணுதியி னேவல்செய்தே தினங்கட்கிமைபோ, லுரியமனைமுதலியாவையுங் காத்துண்மையா யொருதற்பா மிவனேயெனக் காண்பான் சற்சீடன் பகர்ந்திடினே" என வரும். (உசா)

[ஆன்மஞானத்தின் பரமமான மகான்மிய மருளிச்செய்கின்றார்.]

அதனால்வரு பயன்யாதெனி லழிபாதக முதலாய்
விதநாடரும் வினையாழியி னிடையேவிழு குறுவார்
திதனாகிய வறிவாகிய சிதையாமித வையினா
லிதனும்வகை கனாசேருவ தெங்ஙனேயெனி லதுகேள்.

(இ-ள்.) அதனால் வரு பயன் யாது எனில்=அவ்வபேதஞானத்தாலுளதாகும் பிரயோஜனம் என்னையென்று அருச்சுன நீ கேட்பா

யாகில்—ஊழி பாதகர் முதல் ஆய்=அத்தியந்தப்பாதகமுதலியவரு மாய்—விதம் நாட அரும் வினை ஆழியினிடையே=அனேகவித மான தீவினை, நல்வினை என்னுங் கடலின்கண்ணே—விழுகுறுவார் =வீழ்ந்துகிடப்பவரும்—திடன் ஆகிய அறிவு ஆகிய சிதையா மிதவை யினால்=திடஞானமாகிய கெடாததெப்பத்தினால்—இதன் ஆம் வகை=ஆயாசமில்லாதபடி—கரை சேருவர்=அவ்வினைக்கடலினி ன்றுங் கரையேறுவர்;—எங்ஙனே எனில் அது கேள்=(ஆயினும் வினை நசிக்குமாறு) எங்ஙனமென்று நீ கேட்பாயாகில் அதற்குச் சமாதானம் இனிக்கூறுதுங் கேள்.—எ-று. (உஎ)

[ஆன்மஞானரூபமான தெப்பத்தினால் புண்ணிய பாவரூப மான சமுத்திரத்தைக் கடந்திடினும் புண்ணியபாவரூபமான கர் மங்கள் நாசமாகாவென்னுஞ் சங்கையைப்பற்றி ஆன்மஞானத்தால் கர்மங்களனைத்தும் நாசமாமென்பதில் மற்றொரு திருஷ்டாந்த மரு ளிச்செய்கின்றார்.]

எறியாவெரி வருகானிடை யெரியாதன வெவைதா
மறியாவறி வுடையோர்களு மறிவாரது விதுபோற்
குறியால்வரு குணஞானமெ யனலேகொள விடுமேற்
பொறியால்வரு வினையானவை பொடியாமிதொர் பொருளே.

(இ-ள்.) எரி எறியா வருகானிடை=அக்கினியானது சுவாலித் தெரித்துக்கொண்டுவருங் காட்டினிடத்தே—எரியாதன எவை= வெந்துநீறாகாத விருட்சங்கள் யாவை?—அறியா அறிவுடையோர் களும் அறிவார் அது=சூழவிப்பருவத்தினருங்கூட அறியாநிற்ப ரதனை;—இதுபோல்=இத்திருஷ்டாந்தம்போல—குறியால் வரு குணம் மெய் ஞானம் அனல் கொள விடுமேல்=(தம்மை யாமாவொன் றுள்ளே நாடுகின்ற) விசாரத்தால் ஜனியாநின்ற சற்குணங்களை யுடைய தத்துவஞானமாகிய அக்கினியானது பிரதிபந்தரகிதமாயெழு ந்து வியாபித்திடுமாகில்—பொறியால் வரு வினையானவை=(நாம் கர்த்தாவென்னும்) பிராந்திஞானத்தா லுளவாகும் புண்ணியபாவ ரூபங்களான கர்மேந்தனங்களனைத்தும்—பொடி ஆம்=வெந்துநீறாய் விடும்;—இது ஓர் பொருளே=(ஞானக்கினிக்குக்) கர்மேந்தனங்கள் ஓர் பொருளா? (ஓர்பொருளன்று.)—எ-று. தாம், ஏ-அசைநிலைகள்.

இங்ஙனங் கூறியவாற்றால், சம்சாரதசைக்கண் தவம், தானம், விரதம், ஓமமுதலியவற்றுள்ளே ஞானத்திற்கொப்பானதும், பவித் திரமானதும் இன்றென்பது பெறப்படுகின்றது. (உஅ)



[ஆன்மஞானத்திற்குப் பூர்வம் உசு-ம் செய்யுளிற் சொல்லிய வுபாயத்தைப்பார்க்கிலும் அத்தியந்தஞ் சமீபமான வுபாயத்தை இப் போது ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

தீதற் பாலாம் வினைபுரி வோருஞ் சிலநாளி
லேதற் பாலா மறிவறி தக்கோ ரியாரென்னி
னோதற் பாலார் பாலுமிவ் வுண்மைப் பொருட்பாலுங்
காதற் பாலா ரைம்புலன் வென்றோ ரிவர்கண்டாய்.

(இ-ள்.) தீது அல் பால் ஆம் வினை புரிவோரும்=தீயவென்னும் படிக்கல்லாத (பிக்ஷாடனம், குருசேவை, சிரவணாதி) இயற்கையினை யுடையனவான நல்வினைகளைச் செய்யாநிற்பவருள்ளும்—சிலநாளில்= (வருஷம், திங்களாலன்றிச்) சிலநாட்களில்—தன்பால் ஆம் அறிவு =தம்மிடத்துள்ள பிரத்தியக்ரூபமாகிய பிரமத்தை—அறி தக்கோர் =அறியாநிற்கும் அறிவுடையோர்—யார் என்னின்=எத்தன்மைய ரென்று நீ கேட்கில்—ஓதல் பாலார்பாலும்=(சாஸ்திரார்த்தங்களை) உபதேசியாநிற்குங் குருவினிடத்தும்—இவ்வுண்மைப் பொருட் பாலும்=(அவரால் உபதேசிக்கப்பட்ட) சாஸ்திரார்த்தங்களி னிட த்தும்—காதல் பாலார்=ஆஸ்திகபுத்தியுடையரும்,—ஐம்புலன் வென்றோர்=ஜிதேந்திரியரும் (ஆகிய)—இவர் கண்டாய்=இவரே கண்டாய் அருச்சுனா.—எ-று.

இரண்டாமடியின் முதலிலுள்ள ஏகாரம் அசைநிலை; பிரிநிலை யெனினுமாம். 'புரிவோர்' ஏழாம் வேற்றுமைத்தொகை. 'தற்பா லார்' என்பது, பன்மையில் ஒருமைவந்த வழுவமைதி. (உக)

[தத்துவஞானத்திற்கு அதிகாரிகளை யருளிச்செய்து அதற்கு விபரீதமான அநதிகாரிகளை ஸ்ரீ பகவான் இப்போதருளிச்செய்கின் றார்.]

சொல்லரு ஞானப் பொருடெரி யாதொது சொன்னாலு
மல்லவி தாமென் றையுறு வாரங் கன்பில்லா
ரில்லவ ராவா ரிகபர மில்லா ரிவர்கண்டாய்
தொல்லறி வாலே யையுற வற்றோர் துறவுற்றோர்.

(இ-ள்.) சொல் அரு ஞானப்பொருள் தெரியார்=(குருவினாலும், சாஸ்திரத்தினாலும்) உபதேசிக்கப்பட்ட அரிய ஞானார்த்தங்களை யறிந்துகொள்ளமாட்டாத அஞ்ஞானமுடையரும்,—எது சொன்ன

லும் இது அல்ல ஆம் என்று ஐயுறுவார்=(லௌகிக, வைதிகமாகிய அர்த்தங்களுள்ளே) எவ்வகைப்பட்ட அர்த்தங்களை உபதேசித்திடி னும் இவ்வர்த்தமானது இந்தப்பிரகாரந்தானோ? அல்லது, வேறொரு பிரகாரமோ என்று சமுசயமுடையரும்,—அங்கு அன்பு இல்லார்= குருவினாலும், சாஸ்திரத்தினாலும் உபதேசிக்கப்பட்ட அர்த்தங் களில் (இவ்வர்த்தமானது இந்தப்பிரகாரமல்லவென்னும் விபர்யய ரூபமான) நாஸ்திகபுத்தியுடையரும் (ஆகிய இம்மூவரும்)—இல்ல வர் ஆவார் = புருஷார்த்தத்தைப் பெறாமல் நஷ்டமாய்விடுவர்;— இவர்=(இம்மூவர்களுள்ளே சமுசயான்மரான) இவர்—இகபரம் இல் லார்=(இகலோகசுகத்திற் கேதுவான தனசம்பாதன முதலியவற் றினும், பரலோகசுகத்திற்கேதுவான புண்ணியமுதலியவற்றினுஞ் சமுசயத்தினால் ஒன்றுஞ் செய்யாமையின்) இகபர சௌக்கியங்களை யுடையராகார்: (ஆதலால், சமுசயான்மர் சகலரினும் அத்தியந்தம் பாவிகளாம்.)— [இந்தப்படி சர்வானர்த்தங்கட்கு மூலபூதமான சமு சயத்தை நிவிர்த்திசெய்யும்பொருட்டு ஆன்மநிச்சயரூபமான உபா யத்தை யருளிச்செய்பவராய் ஸ்ரீ பகவான் இரண்டத்தியாயங்களா லருளிப்போந்த கர்ம ஞானமயமான இருவிதப் பிரமநிஷ்டைகளை உபசம்மரிக்கின்றார்.] தொல் அறிவாலே ஐயுறவு அற்றோர்=(சம த்துவபுத்திரூபயோகத்தினாலே பகவானிடத்துக் கர்மங்களை யர்ப் பணஞ் செய்தவரும், அப்படியே) ஆன்மஞானத்தினாலே சமுசயங் களைச்சேதித்தவரும் (ஆகிய பிரமாதமின்மையான புருஷர்)—துறவு உற்றோர்=சர்வகர்மங்களையுந் துறந்தவராம்.—எ-று. கண்டாய்-முன் னிலையசை.

சமத்துவபுத்திரூப யோகத்தினாலே பகவானிடத்துக் கர்மங் களை யர்ப்பணஞ்செய்தவர் என்பதெஞ்சிநின்றது. கர்மங்களானவை தேவாதிரூப இஷ்டசரீரங்களையும், பசுவாதிரூப அநிஷ்டசரீரங் களையும், மநுஷியரூபமிசிரசரீரங்களையும் ஆரம்பஞ்செய்யா வென் பார், ‘துறவுற்றோர்’ என்றார்.

(௩௰)

[ஆன்மஞானத்தாற் சமுசயநஷ்டயான வித்துவானை லௌகிக, வைதிகமான கர்மங்கள் பந்தப்படுத்தாமையின் அருச்சுனா நீயும் ஆன்மஞானத்தாற் சமுசயத்தைச் சேதித்துச் சுதர்மத்தின்கண்ணே தற்பரனாவாயென்னும் பொருளை ஸ்ரீபகவான் இப்போதருளிச்செய் கின்றார்.]



[வேறு]

அறியா மையிலே பிறந்துன்ற னகத்தே வளர்ந்த வை யுறவை, நெறியா லுன்றன் ஞானமெனும் வாளால் வெட்டி யறநீக்கிக், குறியா லுன்றன் வினைவிளைத்துக் கொள்வா யென்று கூறினா,னுறியார் வெண்ணெய் தொட்டுண்டிவ் வுலகு முண்ட திருவாயன்.

(இ-ள்.) அறியாமையிலே பிறந்து=(அவிவேகரூபமான) அஞ் ஞானத்தினின்று முற்பன்னமாய்—உன்றன் அகத்தே வளர்ந்த ஐயு றவை=உனது புத்திரூபமான இருதயத்தின்கண்ணே வளர்ந்துள்ள (சர்வானர்த்தங்கட்கு மூலபூதமான) சமுசயத்தை — நெறியால்= (சேதிப்பது உனக்கு) முறைமையாதலால் — உன்றன் ஞானம் எனும் வாளால்=(சோகமோகாதி தோஷங்களை யரிவதான) உனது தேகான்மவிவேகஞானமாகிய கட்கத்தால் — வெட்டி அற நீக்கி= (அதனைச்) சேதித்து முழுதும் ஒழித்து — குறியால் = (சுதர்ம மென்னுங்) கருத்தால் — உன்றன் வினை விளைத்துக் கொள்வாய் என்று கூறினான்=உனது (யுத்தரூபமான) கர்மயோகத்தை (எழு ந்து) செய்துகொள்ளுதியென்றருளினான்—உறி ஆர் வெண்ணெய் தொட்டு உண்டு=(கோபியரின் திருமனையில்) உறியிலுள்ள நவ நீதத்தைத்தொட்டுத் திருவமுதுசெய்து—இவ்வுலகம் உண்ட திரு வாயான்=இவ்வுலகத்தையுந் திருவமுதுசெய்தருளிய ஸ்ரீ பகவான். —எ-று.

(௩௧)

நான்காவது

சம்பிரதாய வத்தியாயம்

முற்றிற்று.

---

ஆக அத்தியாயம் ௪-க்குத் திருவிருத்தம்-௧௪௭.

---

## ௫-வது, * ஞானகர்ம வத்தியாயம்.

[பூர்வம் ௩-ர், ௪-ம் அத்தியாயங்களால் கர்மம், ஞானம் இவ் விரண்டும் நிரூபிக்கப்பட்டன. இனி ௫-ம், ௬-ம் அத்தியாயங்களால் கர்மமும், கர்மத்தியாகரூபமான சந்நியாசமும் நிரூபணஞ்செய்யப்படும்.

---

* வடநூலிற் சந்நியாச யோகமென்று பெயர்.

பூர்வம் ௪-ம் அத்தியாயத்தில் ஞானக்கினி சர்வகர்மேந்தனங்களையுந் தகிக்கும்; அதுவே முக்கியமான பாவனமாமென்று கர்மத்தியாகமும், சர்வப்பிரதிபந்தகமான சமுசயத்தையொழித்து உனது சுதர்மரூபமான யுத்தத்தைச் செய்யென்று கர்மாநுஷ்டானமும் ஸ்ரீ பகவானால் உபதேசிக்கப்பட்டமையின் ஸ்திதி, கதிகள்போலப் பரஸ்பரம் விரோத தர்மங்களை யுடையனவான அவைகளை ஏககாலத்தில் ஓர் புருஷனால் அநுஷ்டிப்பது அசக்கியமென்று கருதி இவ்வத்தியாயத்தில் அவ்விரண்டினுள்ளே முக்கியமாக யான் அநுஷ்டிக்கவேண்டியதொன்றை அருளிச்செய்யவேண்டுமென்று அருச்சுனன் வினாவியதற்கு ஸ்ரீ பகவான் விரக்ததசை, அவிரக்ததசை யென்னுங் காலபேதத்தால் ஓர் முமுட்சுப்புருஷனே இரண்டும் முக்கியமாக வநுஷ்டிக்கவேண்டுமென் றருளிச்செய்கின்றார்.]

[மொழிபெயர்த்த வாசிரியர் இனி அத்தியாயம் ஆரம்பித்தற் கடியிடுகின்றார்.]

பூத்தருளி யொருமலராற் புவனமவை யீரேழுங்
காத்தருளி விளையாடிக் கடைசாரங் கண்வளருந்
தீர்த்தன் மறை முறைமொழிந்த திருவாக்குத் தெரியாதே
பார்த்தனவ னெதிர்நின்று சிலவிங்ஙன் பகர்வுற்றான்.

(இ-ள்.) ஒருமலரால் = (தனது) ஒப்பற்ற வுந்தியந்தாமரையினால்—புவனமவை ஈரேழும் = சதுர்த்தச புவனங்களையும்—பூத்தருளி = சிருஷ்டித்தருளி—காத்தருளி விளையாடி = (அவைகளை) இரட்சித்து விநோதித்து—கடைசாரம் கண்வளரும் = (அவைகளின்) அந்தத்தில் (ஆலிலையில்) அறிதுயிலமரா நிற்கும்—தீர்த்தன் = ஸ்ரீ கிருஷ்ணபகவான்—மறை முறை மொழிந்த = சுருதியின் கிரமப்படி (பூர்வாத்தியாயத்தில்) அருளிச்செய்த—திருவாக்குத் தெரியாதே = திருவாக்கின் றாற்பரியத்தை யறியாமலே—பார்த்தன் = அருச்சுனனானவன்—அவன் எதிர் நின்று = அந்தப்பகவான் எதிரேநின்று—இங்ஙன் = இந்தப்பிரகாரம்—சில பகர்வுற்றான் = சிலவற்றை விண்ணப்பஞ்செய்தான்.—எ-று. (௧)

[அருச்சுனன் விண்ணப்பம்.]

[வேறு]

கருமநன் றெனவுமெதிர் கழறுகின்றனை துறவை
யருமருந் தெனமொழிதி யவையிரண் டினுமமல
வொருமையென் றுயரகல வுரைசெய்கென் றனன்விசய
னிருமையின் பரிசுமிது வெனவியம் பிடுமிறைவன்.



(இ-ள்.) அமல = நிராவரண சுபாவமுடைய ஸ்ரீ பகவானே—எதிர் கருமம் நன்று எனவும் கழறுகின்றனை = நேரே கர்மாநுஷ்டானமானது சிரேஷ்டமென்று முபதேசிக்கின்றீர்;—துறவை அருமருந்து என மொழிதி = கர்மசந்நியாசத்தை அரியவமுதமென்று முபதேசிக்கின்றீர்; (இங்ஙன முபதேசிப்பதால் அடிக்கடி என்னைச் சமுசயத்திற் றள்ளுகின்றவர்போலாகிறீர்; அப்படிச் செய்யாமல்)—அவை இரண்டினும் = கர்மாநுஷ்டானம், கர்மசந்நியாசமென்னும் அவ்விரண்டனுள்ளும்—ஒருமை = (அத்தியந்தஞ் சிரேஷ்டமென்று நீர் நிச்சயித்திருப்பதான) ஒன்றை—என் துயர் அகல = எனது சம்சார துக்கங்கள் ஒழிந்துபோகும்படி—உரைசெய்க என்றனன் விசயன் = உபதேசித்தருள்வீராகவென்று வினாவினன் அருச்சுனன்;—இருமையின் பரிசும் = (அதற்குக் கர்மாநுஷ்டானம், கர்மசந்நியாசங்கள்) இரண்டன் றன்மைகளும்—இது என இயம்பிடும் இறைவன் = இத்தன்மையவென இனி அருளிச்செய்கின்றனர் ஸ்ரீ பகவான்.—எ-று.

'செய்கென்றனன்' என்பதில், வியங்கோள் விகுதி அகரம் தொகுத்தல் விகாரம். 'அமல' என்னுஞ் சம்போதனையினால், பகவானது சுபாவ சித்த சர்வக்ஞத்வத்தைக் குறிப்பித்தனன். (௨)

[இங்ஙனம் அருச்சுனன் வினாவைக்கேட்ட ஸ்ரீ பகவான் அதற்கு உத்தரமருளிச்செய்கின்றார்.]

துறவுநன் றருவினைசெய் தொழிலுநன் றவைதுணியி
லுறவுநன் றருவினைகள் விடலிலங் கவைமுயல்கை
பெறலினின் பழுமிழுவி லிடருமொன் றிலர்பெரிது
துறவுநின் றவாபிறர்க டியரினின் றிடுதொழிலர்.

(இ-ள்.) துறவும் நன்று = (சாஸ்திரத்தின் விதிபூர்வகமாகச் செய்யுஞ் சர்வகர்மங்களின் தியாகரூபமான) சந்நியாசமுஞ் சிரேஷ்டந்தான்;—அருவினை செய்தொழிலும் நன்று = அரிய கர்மாநுஷ்டானரூபமான கர்மயோகமுஞ் சிரேஷ்டந்தான்;—அவை துணியில் = அவைகளைச் சீர்தூக்கில்—அருவினைகள் விடலில் = (அந்தக்கரணசுத்தியில்லாத அநதிகாரிசெய்யுங்) கர்மசந்நியாசத்தைப் பார்க்கிலும்—அவை முயல்கை = கர்மாநுஷ்டானரூபமான கர்மயோகமே—அற

வும் நன்று=அத்தியந்தஞ் சிரேஷ்டமாம்.—(ஆன்மஞானத்தின் அதிகாரத்தன்மையைச் சித்தசுத்திவாயிலாற் பயத்தலின் என்க.) [இனி அதிகாரிக்கு நிஷ்காமகர்மயோகத்திற் பிரவிர்த்தி யுண்டாகும்பொருட்டு அதனைத் துதிக்கின்றார்.] பெறலில் இன்பமும் = லாபத்தில் இச்சையும்,—இழவில் இடரும்=நஷ்டத்தில் துவேஷமும்—ஒன்றிலர்=அடையாத நிஷ்காம கர்மயோகிகள்—பெரிது துறவு நின்றவர்=பெரும்பாலுங் கர்மசந்நியாசத்தினிற்பவராம்.—பிறர்கள் = கர்மங்களைத் தியாகஞ்செய்தும் சுகதுக்கங்களிலும், சுகதுக்க ஏதுக்களிலும் இராகத்துவேஷங்களையுடையோர்—துயரில் நின்றிடு தொழிலர்=துன்பமயமான பந்தத்தினிற்குந் தொழிலுடையரே.—எ-று.

அங்கு என்பது ஆங்கென்னும் அசைநிலையின்மரூ. 'இன்பம் இடர்' என்பவை ஆகுபெயர். இந்தப்படியே வாசிட்டத்தில், "தூலமனந் தொழில்விடினுஞ் செய்ததாம் வாதனையே துன்றுமாகில்" என்று கூறியிருப்பது காண்க. (௫)

[சந்நியாசம், கர்மயோகமென்னும் இரண்டும் அவஸ்தாபேதத்தால் அடையப்படுவனவாயிருத்தலின் அவற்றுள், யாது சிரேஷ்டமென்னுஞ் சங்கை அஞ்ஞானிக்குளதாவதல்லது, ஞானிக்குளதாகா தென்று ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

பெருமையொன் றியதுறவு கருமமென் றிருமையினு
மருமையொன் றினையடைஞ ரவையிரண் டையுமுடைய
ரிருமையென் றறியுமவ ரிவையறிந் திலரியல்பி
னொருமையென் றுணருமவ ரிவையுணர்ந் தவருணரில்.

(இ-ள்.) பெருமை ஒன்றிய=(விரக்ததசை, அவிரக்ததசையையுடைய அதிகாரிகளா லநுஷ்டிக்கும்படியான) மாட்சிமைபொருந்திய—துறவுகருமம் என்றஇருமையினும்=கர்மசந்நியாசம், கர்மாநுஷ்டானமென்று கூறப்படுகிற விரண்டினுள்ளும்—அருமை ஒன்றினை அடைஞர்=அருமையாகிய (தமததிகாரத்தை யநுசரித்துச் சாஸ்திரத்தின் விதிபூர்வகமாக) ஒன்றினையடைந்தோர்—அவை இரண்டையும் உடையர் = (ஆன்மஞானோற்பத்திவாயிலால்) அவை இரண்டினது ஒரே மோட்சரூபமான பயனையுடையவராவர்.—இருமை என்று அறியுமவர்=அவ்விரண்டிற்கும் பயன் வேறுவேறென் றறியாநிற்பவர்—இயல்பின் இவை அறிந்திலர் = இயல்பாக இவ்விரண்டனையும் அறிந்தவரல்லர்.—ஒருமை என்று உணருமவர்—(இவ்விரண்டிற்கும்



பயன்) ஒன்றேயென்றறிந்தவர்—இவை உணர்ந்தவர் உணரில்=* சாங்கியம், யோகமென்னும் இவ்விரண்டனையும் இயல்பாக வறிந்தோராம்: அறியுமிடத்து.—எ-று. (௬)

[ஞானநிஷ்டைக் கேதுவாகலின் சந்நியாசமோ அவசியமாகச் செய்தற்குரியதே; ஆதலால், சுத்தாந்தக்கரணமுடைய புருஷன் ஞானநிஷ்டை யடைதற்பொருட்டுச் சந்நியாசஞ் செய்துகொள்ளுவதுபோல அசுத்தாந்தக்கரணமுடைய புருஷனும் ஞானநிஷ்டையடைதற்பொருட்டு முன்னர்ச் சந்நியாசமே செய்துகொள்ள வேண்டுவதென்னும் அருச்சுனனது சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

வினைமுயன் றிடவதனில் விளைதருந் துறவதுகொ
டெனையடைந் திடுவரெவர் களுமிவண் செயலைவிட
நினைவருந் தகையபொரு ணெறியறிந் திடுதலரி
தனையதந் தொழில்புரியு மவரடைந் திடுவரறி.

(இ-ள்.) வினை முயன்றிட =(முன்னர் அந்தக்கரண சுத்திக்குக் காரணமாகிய) நிஷ்காமகர்மயோகத்தை யநுஷ்டித்துவா—அதனில் விளைதரும் துறவது கொடு=அதனால் (அந்தக்கரணசுத்தி உளதாய்ப் பின்னர்) உளதாகுஞ் சந்நியாசங்கொண்டு — எவர்களும் எனை அடைந்திடுவர்=யாவரும் (பிரத்தியகபின்ன பரமான்மாவான) என்னை (ச்சீக்கிரம்) அடைவார்கள்;—இவண் செயலை விட=இச்சமசாரதசைக்கண் நிஷ்காமகர்மயோகத்தைத் தவிர—நினைவு அரும் தகைய பொருள்=நினைத்தற்கரிய பெருமையுடைய பொருளானது—நெறி அறிந்திடுதல் அரிது = (என்னையடைதற்கு) வழியாக வேறேயுளதென் றறியும்படிக்கில்லை.—(ஆகலின்,) அனைய தம் தொழில் புரியுமவர்=அப்படிப்பட்ட தமது நிஷ்காமகர்மயோகத்தை (முன்னர்ச் சித்தசுத்தியின்பொருட்டு) அநுஷ்டியாநிற்பவரோ—அடைந்திடுவர் அறி=(என்னை) அடைந்திடுவரென்று (அருச்சுன நீ) அறிதி —எ-று.

* சாங்கியம்=சமுசய விபரீதபாவரகிதமான யாதொரு எதார்த்த ஆன்மாகாரவிருத்தியுண்டோ அதற்குச் சங்கியாவென்றுபெயர்; அவ்வான்மாகாரபுத்திரூபமான சங்கியாவை யடையும்படி பண்ணுநிற்பது யாது அதற்குச் சாங்கியமென்று பெயர்; இப்படிப்பட்டது ஆன்மஞானத்திற்கந்தரங்க சாதனமாகலின், சந்நியாசமாம்.

இங்ஙனங்கூறியவாற்றால் கர்மயோகம், கர்மசந்நியாசங்களிரண்டிற்கும் பயனொன்றேயாயினும் அசுத்தாந்தக்கரணமுடைய புருஷனாற் செய்யப்பட்ட சந்நியாசத்தினும் கர்மயோகம் அத்தியந்தஞ் சிரேஷ்டமாமென்பது ஈண்டுப்பெறப்படுகின்றது. இங்கே கூறினது போலவே இரண்டா மத்தியாயத்திலும், ௩௮-வது செய்யுளில், 'தெரிபொருள் சிறிதேனும் பெருமய றெறுமாறு, லுரியதிவ் வுலகோர்பா லதுவல துளதோதான்' என்று ஸ்ரீ பகவானாற் கூறப்பட்டிருக்கின்றது. இப்படியே வாசிட்டத்தும், "புறப்பேறு களைவேண்டி யியற்றுகின்ற புண்ணியத்தைப் புவியிலுள்ளோர், சிறப்பான நல்லறிவு மிகவேண்டு மென்றுமுதற் செய்யிற்பேறும்" எனவும், "வரமானபதம்வேண்டிற் றன்மனத்தி னாசைமுதன் மாற்றல்வேண்டு, மூரமான புவியையுழுத வுழுதன்றோ விளைபயன்க ளுறுகின்றாரோ" எனவுங் கூறியிருப்பது காண்க. (௫)

["கர்மங்களாற் பந்தமடைகின்றன ஜந்துக்கள்" என்பது முதலிய வசனங்களால் கர்மங்கட்குப் பந்தத்திற்கேதுவே கூறப்படுதலின், கர்மயோகத்தோடுகூடின புருஷன் பரமான்மாவான என்னையடைவனென்னும் உமது வசனம் அசங்கதமாமென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் உத்தரமருளிச்செய்கின்றார்.]

கவைதருங் குணமுமிகு களிதரும் புலனுமெனு
மிவைகடந் தவர்களெனை யறிவினன் றிசையுமவர்
நவைதருந் தொழில்செயினு நலிவதெங் கவனையவை
யவைகடந் தவர்கள்வினை யவைதுறந் தடைகுவதென்.

(இ-ள்.) (ஆதியில் நித்தியநைமித்திககர்மாநுஷ்டானத்தால்) கவைதரும் குணமும்=பிரிவாகிய ரஜ, தமகுணமான அந்தக்கரணமும்,—மிகு களி தரும் புலனும் எனும்=பெரும்பாலும் மயக்கத்தைத் தருவனவான வாகியேந்திரியங்களுமென்று கூறப்பட்ட—இவை கடந்தவர்கள்=இவைகளைச் சயித்தவரும்,—எனை அறிவில் நன்று இசையுமவர்=(சர்வான்மாவாகிய) என்னைத்தமது புத்தியின்கண்ணே நன்றாகச் சாட்சாத்கரித்தவரும் (ஆகிய ஞானிகள்)—நவைதரும் தொழில்செயினும்=(அன்னியர்க்கு இகழத்தக்க)பந்தத்தைக்கொடுப்பவைகளான கர்மங்களைப் (பரதிருஷ்டியினாற்)செய்யினும்—அவை அவனை நலிவது எங்கு=அக்கர்மங்கள் அவர்களை யாண்டும் பந்தப்படுத்தாவாம்.—அவை கடந்தவர்கள்=முன்சொன்ன சர்வேந்



திரியங்களையும் ஜயித்த ஞானிகள்—வினையவை துறந்து=விகிதகர்மங்களைச் சந்நியாசஞ்செய்து—அடைகுவது என்=வேறே அடையாநிற்கும் பயன் என்னை?—எ-று.

குணம் என்றது, ஆகுபெயர். நான்காம்பாதம் மொழிபெயர்த்தவாசிரியர் கருத்து. (௬)

[பூர்வஞ்சொல்லிப்போந்த பொருளை இப்போது வெளிப்படையாக ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

காணுங்கேட்கு முறுமோக்குங் காலானடக்குங்கண்வளரும்,
பேணுந்துறக்கு மூச்சுவிடும் பேசும்விழிக்குஞ் சிம்பிளிக்கும்,
பூணுமின்னும் பலவெனினும் புலன்சேர்பொறியின் புணர்ப்பென்றே,
தூணுங்கிரியு மெனவொன்றுந் துளங்கான் விளங்குந் துணிவுடையோன்.

(இ-ள்.) காணும்=(கண்களால் உருவங்களைப்) பார்ப்பான்,—கேட்கும்=(செவிகளால் சப்தங்களைக்) கேட்பான்,—உறும்=(துவக்கினால் சீதோஷ்ணாதிகளைப்)பரிசிப்பான்.—மோக்கும்=(மூக்கால் கந்தங்களை) மணப்பான்,—காலால் நடக்கும்=பாதங்களால் கமனாகமனஞ்செய்வான்,—கண் வளரும்=நித்திரைசெய்வான்,—பேணும்=(ஒன்றைவேண்டுமென்று) விரும்புவான்,—துறக்கும்=(ஒன்றைவேண்டாமென்று) வெறுப்பான்,—மூச்சுவிடும்=சுவாசம் விடுவான்,—பேசும்=(வாக்கால்) வசனிப்பான்,—விழிக்கும்=(கண்களைத்) திறப்பான்,—சிம்பிளிக்கும்=(கண்களை) மூடுவான்,—பூணும் = (ஆடைமுதலியவற்றாற்சரீரத்தை)அலங்கரிப்பான்;—இன்னும்பல எனினும்=இன்னும் அனேக வியாபாரங்களைச் செய்யினும்—புலன் சேர் பொறியின் புணர்ப்பு என்றே=இந்திரியாதிகள் தாம்தாம்பிரவிர்த்தித்தற்குரிய விஷயங்களில் பிரவிர்த்தியாநின்ற பிரவிர்த்தியென்றே—விளங்கும் துணிவு உடையோன்=அறியும் நிச்சயமுள்ள ஞானியானவன்—தூணும் கிரியும் என=ஸ்தம்பத்தைப்போன்றும், பருவதத்தைப்போன்றும்—ஒன்றும் துளங்கான்=ஒன்றிலுமசையான்.—எ-று.

'காணுங்கேட்குமுறுமோக்கும்' என்பன ஞானேந்திரிய வியாபாரம். 'காலானடக்கும்பேசும்' என்பன கர்மேந்திரிய வியாபாரம். 'கண்வளரும் பேணுந்துறக்கும்' என்பன புத்தியின் வியாபாரம்.

'மூச்சுவிடும் விழிக்குஞ் சிம்பிளிக்கும்' என்பன வாயுக்களின் வியாபாரம்; இந்தப்பிரகாரம் ஞானியானவன் சர்வவியாபாரங்களிலும் ஆன்மாவை அகர்த்தாவாகவே பார்க்கின்றனன்; இக்காரணத்தால் அந்த ஞானியானவன் சர்வேந்திரியங்களாலுஞ் சர்வவியாபாரங்களையுஞ் செய்கிறவனாலும் அவ்வியாபாரங்களாற் பந்தத்தை ஓர்போதும் அடையமாட்டான் என்றறிக. (எ)

[ஞானியானவன் கர்த்திருத்துவாபிமானமில்லாமையால் கர்மங்களைச் செய்தும் அவைகளோடு சம்பந்தப்படானென்று நீர் பூர்வமருளிச்செய்தமையால் அஞ்ஞானியானவன் கர்த்திருத்துவாபிமானவசத்தால் அக்கர்மங்களோடு அவசியஞ் சம்பந்தப்படுவனென்பது பெறப்படுகின்றது; ஆதலால், கர்மங்களிற் பிரவிர்த்தித்த அஞ்ஞானிக்குச் சந்நியாச பூர்வகமான ஞானநிஷ்டை எவ்வாறு பெறப்படுமென்னும் அருச்சுனன் சங்கையைப்பற்றி ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

யாரொவ்வினையு மென்பொருட்டாலியற்றிப்பயனையிகழ்வரவர்
சேரும்வினைக ளவற்றோடுஞ் சேராரெய்துந் திறமுரைக்கிற்
சாரவுடனே பிறந்திருந்துந் தண்டாமரையின் றகையிலையு
நீருமெனலா யிருப்பரதி னின்றோர்க்கொன்று நிகழாதால்.

(இ-ள்.) யார் எவ்வினையும் என் பொருட்டால் இயற்றி=எவர்கள் (லௌகிக, வைதிகமான) சர்வகர்மங்களையும் எனது சந்தோஷத்தின்பொருட்டாகச்செய்து—பயனை இகழ்வர் அவர் = சுவர்க்கமுதலிய பலேச்சையைப் பரித்தியாகஞ் செய்வார்களோ அவர்கள்—சேரும் வினைகளவற்றோடும் சேரார் = (தாம்) செய்யாநிற்கும் அக்கர்மங்களில் ஒன்றோடுஞ் சம்பந்தப்படார்கள்;—எய்தும் திறம் உரைக்கில்= (இவ்வாறு அவர்கள்) பொருந்துந்தன்மையைச் சொல்லில் — சார உடனே பிறந்திருந்தும் = கூடவே பொருந்த வுண்டாயிருந்தும்—தண் தாமரையின் தகை இலையும்=தண்ணிய தாமரையின் பெரிய இலையும்;—நீரும் எனல் ஆய் இருப்பர் = உதகமும்போலக் கர்மங்களோடு நிர்லேபராயிருப்பர்;—அதில் நின்றோர்க்கு=அக்கமல பத்திரோதகம்போல நிற்பவர்க்கு—ஒன்றும் நிகழாது=(நிஷ்காமகர்மங்களுள்ளே) யாதொன்றும் பந்தத்திற்கேதுவாகாது; (பின்னையோ அந்தக்கரணசுத்திக்கே ஏதுவாம்.)—எ-று.

ஆல்-அசைநிலை. 'இகழ்வர்' என்றதில் ஓகாரம் தொக்கது. (அ)



[நிஷ்காமகர்மமானது பந்தத்திற்கேதுவாகாதென்றருளிச்செய்து அதற்கு மோட்ச ஏதுத்வஞ் சதாசாரத்தாற் றெரிவிக்கின்றார்.]

[வேறு.]

உடனுய புலனாலு மனனாலு முடம்பாலு
நடமாகு மெனமுயல்வார் நாடோறு முயன்றாலும்
விடமாகு மவ்வினையே வீடாகும் வினைப்பயனைக்
கடனாகு மெனமுயல்வா ரதனாலே கட்டுண்பார்.

(இ-ள்.) உடன் ஆய புலனாலும் = தன்னுடன்கூட இருப்பனவான இந்திரியங்களாலும்,—மனனாலும் = மனத்தினாலும்,—உடம்பாலும்=சரீரத்தாலும்—நடம் ஆகும் என முயல்வார்=(முறையே சிரவணாதி, தியானாதி,ஸ்நானாதிகர்மங்களைக் கர்மயோகிகள் மமதையும், பலசங்கமும் விடுத்துச் சித்தசுத்தியின்பொருட்டுக் கரணங்களின்) வியாபாரமாமென்று செய்யாநிற்பர்.—[ஓர் கர்மத்தினாற்றானே சிலர் முக்தராவர், சிலர் பெத்தராவரொன்னும் விஷமத்தன்மையில் ஏதுவென்னையோவென்னின்? அதற்கருளிச்செய்கின்றார்.] நாள்தோறும் முயன்றாலும் = (சொல்லியவண்ணம் இவர்கள் கர்மங்களைத்) தினந்தோறு முயலினும்—விடம் ஆகும் அவ்வினையே வீடு ஆகும்= விஷத்தைப்போலும் சம்சார துக்கத்தைக் கொடுத்தற்குக் காரணமாகின்ற அக்கர்மங்களே சாந்திரூபமான மோட்சத்தைக்கொடுத்தற்குக் காரணமாம்.—வினைப் பயனை = கர்மங்களின் பயன்களை — கடன் ஆகும் என முயல்வார் = நமக்கடையக்கடவனவாமென்றிச்சித்து (அக்கர்மங்களில்) முயலும் பகிர்முகபுருஷர் — அதனாலே கட்டுண்பார்=அக்காமிய கர்மங்களாலே அவசியம் பந்தப்படுவர்.—எ-று. (கூ)

[அசுத்த சித்தமுடைய புருஷர்க்குக் கேவலஞ் சந்நியாசத்தினும் கர்மயோகமே சிரேஷ்டமாமென்று விஸ்தாரமாக இதுகாறு மருளிச்செய்து இனிச் சுத்தசித்தமுடைய புருஷர்க்குச் சர்வகர்மங்களின் சந்நியாசமே சிரேஷ்டமாமென்னும் பொருளை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

அன்பவினை யாகுபயன் விட்டமைதி யாலே
யொன்பதுபொய் வாசலமை யூரதனி னுள்ளே
யின்பவுரு வாயினி திருப்பனியல் பாலே
முன்பயில்வ தாம்வினைசெ யான்முயல்வி யானல்.

(இ-ள்.) அன்ப=(என்னிடத்திற்) பக்தனான அருச்சுனனே கேள்;—(தேகத்தின் வேறான ஆன்மாவை நன்றாகத் தரிசித்துள்ள புருஷன்) அமைதியாலே=அடங்கிய மனத்தினாலே—வினை ஆகு பயன் விட்டு=சர்வகர்மங்களையும், அவற்றால் உளவாகும் பயன்களையும் பரித்தியாகஞ்செய்து—ஒன்பது வாசல் அமை=நவத்துவாரங்கள் பொருந்திய—பொய் ஊர் அதனின் உள்ளே=மாயாபுரமென்னும் இத்தேகத்தின்கண்ணே—இன்ப உரு ஆய்=சுகரூபமாய்—இனிது இருப்பன்=தாபத்திரயரகிதனாயிருப்பன்.—இயல்பாலே=பிராரப்தவசத்தாலே—முன் பயில்வது ஆம் வினை=எதிரே வந்தடைவனவான கர்மங்களை—செயான் முயல்வியான்=செய்பவனும், செய்விப்பவனுமாக ஆகான்.—எ-று. ஆல்-அசைநிலை.

செய்பவனெனினும், கர்த்திருவெனினும் ஒக்கும். செய்விப்பவனெனினும், காரயிதிருவெனினும் ஒக்கும். (௰)

[பகவானே தேவதத்தனிடத்து வாஸ்தவமாகவுள்ள கமனரூபக்கிரியையானது அவனது ஸ்திதிகாலத்து நிகழாததுபோல ஆன்மாவிடத்து வாஸ்தவமாகவுள்ள கர்த்திருத்வ, காரயிதிருத்வங்கள் சந்நியாசகாலத்தில் அவ்வான்மாவின்கண் நிகழ்வதில்லையென்பது உமது வாக்கியத்தின் தாற்பரியமா? அல்லது, ஆகாசத்தின்கண் தலம், நீலாதிகள் வாஸ்தவமாக இல்லாததுபோல ஆன்மாவின்கண்ணுங் கர்த்திருத்வ, காரயிதிருத்வங்கள் வாஸ்தவமாக இல்லையென்பதே உமது வாக்கியத்தின் தாற்பரியமா என்னும் அருச்சுனன் சங்கையை நிவிர்த்திசெய்தற்பொருட்டு ஸ்ரீ பகவான் அந்தியகோடியை அங்கீகாரஞ்செய்து அருளிச்செய்கின்றார்.]

இவ்வகைய வாயசெய லியாவுமியல் பேகா
ணவ்வகைய மாயையத னாலறிவு றாதே
செய்வகையன் யானெனது செய்கையிது வென்றே
பொய்வகையி னாலழிவ தேபுல னிலாதார்.

(இ-ள்.) (அருச்சுனா! பிரபுவென்னும் ஆன்மதேவனானவன் தேகாதிகளுடைய கர்த்திருத்துவத்தையும், கர்மங்களையும், கர்மபலன்களோடு சம்பந்தத்தையும் உண்டுபண்ணவில்லை.) இவ்வகைய ஆய செயல் யாவும்=இப்படிப்பட்ட கூறுபாடுடையனவான செயல்களனைத்துமாக — இயல்பே காண் = அஞ்ஞானரூபமான மாயையே (விரிகின்றது) கண்டாய்;—அவ்வகைய மாயையதனால் = அத்தன்மையான மாயையினால்—அறிவுறாதே = (வாஸ்தவமாக அகர்த்தா அபோக்தாவாய்ப் பரமானந்த அத்விதீயமான ஆன்மசொரூபத்தை) அறியாமலே—யான் செய்வகையன்=நான் (இக்கர்மங்களைச்செய்யாநிற்குங்) கர்த்தா,—இது எனது செய்கை என்றே = இக்கர்மங்கள் என்னுடைய செய்கைகளாமென்று — புலன் இலாதார் = விவேகசூனியர் — பொய்வகையினாலே = பொய்மையாகவே — அழிவது= மோகமடையாநிற்பது.—எ-று, ஏகாரம் பிரித்துக்கூட்டப்பட்டது. ()

[ஆனால், ஜநநமரணரூபமான சம்சாரநிவிர்த்தி எவ்வாறுளதாமென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]



[வேறு.]

அறிவினா லறிகிலா தவையெலா மழியவே
செறிவினா ரறிவுவா னிரவிபோ றிகழுமா
னெறியினா லதனிலே நிலையுமா யதனிலோர்
பிறிதிலா வகையினார் பிறவியா னதுவிலார்.

(இ-ள்.) அறிவினால்=(ஆன்மவிஷயமான) விவேகஞானத்தினால்—அறிகிலாது அவை எலாம் அழியவே=(சகலரும் மோகமடையாநிற்கும்) ஆவரணரூபாம்சமான அஞ்ஞானங்கள் முழுவதும் நாசமாகவே—செறிவின் ஆர் அறிவு = பரிபூரண சுபாவமுடைய பிரமசைதந்நியமானது—வான் இரவிபோல் திகழும் = ஆகாயத்திற் சூரியோதயமாத்திரத்தால் அந்தகாரமுழுதும் நிவிர்த்தியாய்க் கடமுதலிய பதார்த்தங்கள் விளங்குவனபோல விளங்காநிற்கும்;—நெறியினால்=இந்தவழியினால்—அதனிலே நிலையும் ஆய்=அப்பரப்பிரமத்தின்கண்ணேயே நிஷ்டையுமாய்—அதனில்=அப்பரப்பிரமத்தில்—ஓர் பிறிது இலாவகையினார்=ஓர் சிறிதும் நாம் வேறென்னும் புத்தி இல்லாமல் அதுவே நமது ஆன்மாவென்னும் புத்தியுடையர் யாவர் அவர் — பிறவியானது இலார் = மீண்டும் ஜநநமில்லாதவரே (கண்டாய் அருச்சுனா.)—எ-று. ஆல்-அசைநிலை. (௧௨)

[மேலைச்செய்யுளில் ஆன்மஞானத்திற்கு விதேககைவல்லியரூபபலமருளிச்செய்து இனி அவ்வான்ம ஞானத்திற்குச் சீவன்முக்தி ரூபமான பயனை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

நன்றே ஞான வருமறையோ னன்று யநா யிறைச்சிதனைத், தின்றே யுழலு மவனியானை யாவென் றிந்தத் திறத்

தெல்லா, மன்றே யென்னு தாமென்னு தறிவாய்நின்ற வெனை யெங்கு, மொன்றே யாகக் காண்பானிவ் வுடம்போ டிருந்தே யுடம்பறுப்பான்.

(இ - ள்.) நன்றே ஞான அருமறையோன்=நல்லவித்தை, விநயங்களையுடைய பிராமணன்,—யானை=ஆனை,—ஆ=பசு,—நல் நாய்=நல்லசுவானம்,—அந்நாய் இறைச்சிதனைத் தின்றே உழலுமவன் என்ற=அந்நாய் மாமிசத்தைப் புஜித்துழலாநிற்குஞ் சண்டாளன் என்று சொல்லப்படுகின்ற—இந்தத்திறத்து எல்லாம்=இக்கூறுபாடுடையனவான சாத்துவிக, இராஜத, தாமதப்பிராணிகளிலெல்லாம்—அன்றே என்னுது ஆம் என்னுது=ஒன்றில் இலன், ஒன்றில் உளன் என்று பாராமல்—எங்கும் அறிவு ஆய் நின்ற எனை=எவ்விடத்தும் அஸ்திபாதிப்பிரியமாய்நின்ற என்னை—ஒன்றே ஆகக் காண்பான்=சமமாகவே பார்க்கும் ஞானவான்—இவ்வுடம்போடு இருந்தே=இத்தேகத்தோடு கூடிச் சீவிப்பவனாயிருந்தே—உடம்பு அறுப்பான்=(நிர்த்தோஷனாய்) ஜநநமரணங்களைச் சயித்தவனாகின்றான்.—எ-று.

'இந்தத் திறத்தெல்லா மெனையொன்றேயாகக் காண்பான்' என ஒட்டுக. விநயம் நிரகங்காரத்தன்மை. 'உடம்போடிருந்தே யுடம்பறுப்பான்' என்று கூறினது, உத்தமமத்திமாதமங்களான பொருள்களிற் சமதிருஷ்டிக்குக் கௌதமரால் தோஷங்கூறப்பட்டிருத்தலின் சமதிருஷ்டியுடையோன் எப்படி ஞானியாவனென்னுஞ் சங்கையை அஃதஞ்ஞதசையைப்பற்றிப் போந்ததேயல்லாமல் ஞானதசையைப்பற்றிப் போந்ததல்லவென நிவிர்த்திப்பித்தற்பொருட்டென்க. (கரு)

[விஷயப்பிரீதிரூபமான பிரதிபந்தத்தால் ஒருவர்க்கும் பிரமஞானஞ் சித்தியாதென்னுஞ் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

இகமேநிகழும் புலன்விளைந்த வின்பமெல்லா மறவிகந்துள், ளகமேவிளையும் பேரின்ப மடைந்தார்க்கென்று மழியாதாம், புகமேய்கின்ற புலன்பொறிகள் புணர்ந்தவின்பம் போமென்றுந், தகமேலிடரா மெனவுமவை தக்கோரொன்றுஞ் சாராரால்.



(இ - ள்) இகமே நிகழும்=பாகியமான சப்தாதிவிஷயங்களிற் செல்லாநின்ற—புலன்=இந்திரியங்களால்—விளைந்த=உண்டான—இன்பம் எல்லாம்=விஷயவின்பங்களனைத்தும்—உள் அற இகந்து=அந்தக்கரணத்தினின்றும் அத்தியந்தம் பரித்தியாகஞ்செய்து—அகமே விளையும் பேர் இன்பம்=(அத்தியந்தம் விரக்தியுடைய தமது) அந்தக்கரணத்தின்கண்ணே உளதாகும் உபசமரூபமான அந்தச் சுகத்தை—அடைந்தார்க்கு=அநுபவியாநிற்கும் விரக்த புருஷர்க்கே—என்றும் அழியாது ஆம்=அட்சயமான பிரமசுகமான தடையப்படும்.—[விஷயப்பிரீதியும் அவிவேகிகட் குளதாவதன்றி விவேகிகட்குளதாகாதென்னும் பொருளைக் கூறுகின்றார்.] புகமேய்கின்ற=(மனத்திலே) புகுதும்படிக்கு அநுபவியாநின்ற—புலன் பொறிகள் புணர்ந்த இன்பம்=இந்திரிய விஷயங்களின் சம்பந்தத்தாலுளவாகுஞ் சுகங்கள்—போம் என்றும்=(*ஆதி) † அந்த முடையனவென்றும்,—தக=(அச்சுகங்களுக்குத்) தக்கபடி—மேல் இடர் ஆம் எனவும்=பின்னர்த்துன்பங்கள் உளவாமென்றும்—அவை=அவ்விஷய சுகங்களை—தக்கோர் என்றும் சாரார்=விவேகிகளானோர் எப்போதும் பொருந்திராமியார்கள்.—எ-று.

ஆல் - அசை. அத்தியந்தம் விரக்தியுடைய அந்தக்கரணத்தின் கண்ணே உபசமரூபமான சுகம் உளதாகுமென்று இங்கே கூறினது போலவே வாசிட்டத்தில், "பற்றின்றித் தனியிருக்கு மனத்தைப் போற் பனிமதியும் பதுமத்தோனும், பொற்றிரள்சே ரிந்திரனுஞ் சுகமடையார்' என்று கூறியிருப்பது காண்க. (கச)

[பரமபுருஷார்த்தமான முக்திக்குக் காமக்குரோதங்களால் உளவாகாநிற்கும் க்ஷோபங்களே பிரதிபந்தங்களாம்; ஆதலால், அவைகளைச் சகித்தவன் யாவன் அவனே முக்திக்குரியவனாவனென்று இப்போது ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

உடம்புட னேயுள னாகி யிருந்தே
விடம்புனா காம வெகுளியின் வேகாச்
சடம்பொறை யாமை தவிர்த்தவ னேநல்
லிடம்புகு ஞானியு மின்புறு வானும்.

---

*விஷயேந்திரியங்களின் சையோகத்திற்கு ஆதியென்றுபெயர்.
† அவைகளின் வியோகத்துக்கு அந்தமென்றுபெயர்.

(இ-ள்.) உடம்புடனே உளன் ஆகி இருந்தே=சரீரத்துடனே கூடிச்சீவிப்பவனுய், அல்லது சாமர்த்தியமுள்ளு யிருந்தே—விடம் புரை=விஷத்தையொப்பான—காம வெகுளியின் வேகா = காமக்குரோதங்களால் (உற்பன்னமாகாநிற்கும் வேகங்களால்) வேகாமல்—சடம் பொறையாமை=சரீரநேத்திராதிகளின் க்ஷோபரூபங்களான காமக்குரோதங்களின் வேகங்களை—தவிர்த்தவனே=சகித்த தீரன் எவன் அவனே—நல்விடம் புகும் ஞானியும் இன்பு உறுவானும் = பிரமத்தின்கட்புகும் ஞானியும், ஞானத்தின்பயனுன மோட்சசுகம் பெறுதற்குரியனுமாம்.—எ-று.

சடப்பொறையாமை எனற்பாலது, சந்தநோக்கி மெலித்தல் விகாரம்பெற்றது. இஷ்டவிஷயங்களைக் காணினும், கேட்பினும், நினைக்கினும், அவைகளைப்பற்றி அந்தக்கரணத்தின்கண் எழாநிற்குந்திருஷ்ணையே காமம்; அதனுலுண்டாகின்ற உரோமாஞ்சலி, முகவிகாசமுதலிய கலக்கங்களே காமஜந்யமானவேகம். பிரதிகூலபதார்த்தங்களைக் காணினும், கேட்பினும், நினைக்கினும் அவைகளைப்பற்றி அந்தக்கரணத்தின்கண் ணெழாநிற்குந் துவேஷமே வெகுளியென்னுங்குரோதம்; அதனுலுண்டாகின்ற சரீரநடுக்கம், வியர்வை, பற்கடி, பெருமூச்சு, குரூரப்பார்வைமுதலிய கலக்கங்களே குரோத ஜந்யமான வேகமாம். மரணமானதன் பின்னர்ச் சரீரத்தின்கண் மாலை, சந்தனங்களைப் புனைவதனுலும், பூசுவதனுலும் இச்சையும், அதனைச் சிதையில்வைத்துக் கொளுத்துவதாற் குரோதமும் உளவாகாமை போலச் சீவித்திருக்கும்போதே அவைகளைச் சயிக்கவேண்டுமென்பார், 'உடம்புடனே யுளனுகியிருந்தே' என்ருர். (௨௫)

[இவ்வதிகாரியானவன் கேவலங் காமக்குரோத வேகங்களைச் சகித்தன்மாத்திரத்தினுலேயே மோட்சத்தை யடையான்; பின்னையோ அதனினும் அதிகமான கிஞ்சித்கர்த்தவ்வியம் உண்டென்னும் பொருளை இப்போது ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்ருர்.]

மெய்யறி வேவிளை யின்பம தாக
மெய்யறி வேவிளை யாடிட மாக
மெய்யறி வேயொளி யாகவு மேயோர்
மெய்யறி வேபெறு மின்பம் விடாதார்.

(இ-ள்.) மெய் அறிவே விளை இன்பமது ஆக = அந்தரான்மாவையே (தமக்குள்ளே) விளையும் ஆனந்தமாகவும்;—மெய் அறிவே



விளையாடு இடம் ஆக=அந்தரான்மாவையே (தமக்கு) விநோதிக்கும் ஸ்தானமாகவும்,—மெய் அறிவே ஒளி ஆகவும்=அந்தரான்மாவையே (தமக்குத்) திருஷ்டியாகவும்—மேயோர்=அநுபவியாநிற்கும் யோகிகள்—மெய் அறிவே = அந்தரான்மாவே (ஆகி) — பெறும் இன்பம் விடாதார்=சித்தமாயிருக்கும் பிரமபூதமான ஆனந்தத்தை யடையாநிற்பர்.—எ-று. (௨௬)

[இனி ஆருமத்தியாயத்தில் விஸ்தாரமாக வருளிச்செய்யப்படும் பிரமஞானத்திற் கந்தரங்கமான தியானயோகத்தை இப்போது இரண்டு செய்யுட்களாற் சங்கிரகமாக வருளிச்செய்கின்ருர்.]

காவல்செய் தைந்து புலன்க ளிரண்டு
மேவ விரும்புரு வத்திடை விட்டிட்
டாவகை நின்ற வபான பிராண
னேவலி னின்றி யியக்க மறுத்தே.

(இ-ள்.) ஐந்து புலன் காவல் செய்து=சுரோத்திரமுதலிய ஐந்திரியங்களையு (ஞ்சப்தாதி விஷயங்களினின்று)ந்தகைந்து—கண் இரண்டும் = (தமது) கண்களிரண்டின் திருஷ்டியையும்—மேவ = பொருந்த—இரும் புருவத்திடை = பெரிய இரண்டு புருவங்களின் மத்தியில்—விட்டிட்டு = வைத்து—ஆம் வகை நின்ற அபான பிராணன்=அதோமுகம், ஊர்த்துவமுகமாய் ஓடிக்கொண்டிருந்த அபானனையும், பிராணனையும்—ஏவலின்=அப்பியாசவலியினுல்—இன்றி இயக்கம் அறுத்து=இயங்காமற் கும்பித்து—எ-று. ஏ-அசைநிலை. இது குளகம். (௨௭)

[இதுவுமது.]

அஞ்சு பொறித்திற னுசை யடக்கா
நெஞ்சு பயத்தொடு கோபமு நீக்கா
வெஞ்சு திறத்தலில் யோகிகள் காணு
முஞ்சு பிறப்பிடர் யாவு முதிர்ப்பார்.

(இ-ள்.) அஞ்சு பொறித் திறன் ஆசை அடக்கா=ஐந்து கூறுபாடான விஷயங்களின் இச்சைகளை யடக்கி,—நெஞ்சு பயத்தொடு கோபமும் நீக்கா=மனத்தையும், பயத்தையும், குரோதத்தையு நீக்கி—எஞ்சு திறத்தல் இல் யோகிகள் = (ஆகாராதிகள் ஒருகாற்) குறைந்து, ஒருகான் மிகுதலில்லாமற் சமமாகக்கொண்டு பழகும் யோகிகளே—உஞ்சு = (யோகாரூடராய்) உய்ந்து—பிறப்பு இடர் யாவும் உதிர்ப்பார்=முக்தராவர்.—எ-று. காண், உம்-அசைநிலைகள். (௨௮)

[இவ்வாறான யோகத்தோடு கூடிய அதிகாரி எதனை யறிந்து முக்தியடைவனென்னுஞ் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

சாதிபுரியுந்தொழில்களுக்குந் தக்கோர்செய்யுந்தவங்களுக்குந்
தீதிலுலக மேழினுக்குஞ் சேருமிடமா யுள்ளவெனை
யோதிமுடியும் பரிசேமெய் யுணர்ந்தார்பிறவா ரெனவுரைத்தா
னாதிமுடிவொன் றின்றியே யடையத்தானே யாய்நின்றான்.

(இ-ள்.) சாதி புரியும் தொழில்களுக்கும்=பிராமணாதி ஜாதியபிமானமுடையாரற் செய்யாநிற்கும் ஜ்யோதிஷ்டோமாதி எக்ஞங்களுக்கும்,—தக்கோர் செய்யும் தீது இல் தவங்களுக்கும்=அறிவுடையோரற் செய்யுங் குற்றமற்ற(கிருச்சிரசாந்தராயணாதி) தபசுகளுக்கும்,—உலகம் எழினுக்கும்=எழுலகங்களுக்கும்—சேரும் இடம் ஆய் உள்ள எனை=பொருந்துந்தானமா(ய்ச் சச்சிதானந்தமாய் ஏகரசமாய்ச் சர்வான்மனா)யுள்ள(நாராயணனான)என்னை—ஓதி முடியும் பரிசே=(வேதங்களெல்லாஞ்) சொல்லி முடிந்தபடியே—மெய் உணர்ந்தார்=உள்ளபடி (பிரத்தியக்ஷரூபமாக) அறிந்தவர்—பிறவார் என உரைத்தான்=மீண்டு ஜனியாரென்றருளினான்:—ஆதி முடிவு ஒன்று இன்றியே=ஆதிமத்தியாந்தங்களொன்றுந் தனக்கில்லாமலே—அடையத் தானே ஆய்நின்றான்=சர்வமுந் தானேயாய்நின்ற ஸ்ரீ பகவான்.—எ-று. ()

ஐந்தாவது

## ஞானகர்மவத்தியாயம்

முற்றிற்று.

---

ஆக அத்தியாயம் ௫-க்குத் திருவிருத்தம்-௧௬௬.

---

## ௬-வது * யோகவத்தியாயம்.

[ஐந்தாமத்தியாயத்தினந்தத்தில் மூன்று செய்யுட்களாலருளிச்செய்த யோகசூத்திரங்களை விஸ்தாரமாக வியாக்கியானித்தருளும்பொருட்டு இவ்வாறாமத்தியாயம் ஸ்ரீ பகவானால் ஆரம்பிக்கப்படுகின்றது.]

* வடநூலில் அத்தியாத்மயோகமென்று பெயர்.



[மொழிபெயர்த்தவாசிரியர் மேலத்தியாய மாரம்பித்தற்கடியிடல்.]

யோக மனத்தவர் யோக மதற்கே
யேக முதற்பொரு ளாகி யிருந்தே
நாக பணத்திடை யேநட மாடும்
மேக மவற்கிவை மீள விரிப்பான்.

(இ-ள்.) யோகமனத்தவர்=விருத்திநிரோதமுடைய தவத்தினரது—யோகமதற்கே=யோகத்தின்கண்ணே—ஏகம் முதல் பொருள் ஆகி இருந்தே=ஐக்கியமான ஆதிவஸ்துவாகியிருந்தே—நாக பணத்திடை=காளிங்கனென்னுஞ் சர்ப்பத்தின் படமகுடத்தின்கண்—நடம் ஆடும் மேகம்=நடனஞ்செய்யு மேகவண்ணரான ஸ்ரீபகவான்—அவற்கு=(பூர்வம் ஐந்தாமத்தியாயத்தினீற்றில்மூன்று செய்யுட்களா லருளிச்செய்த யோகசூத்திரங்களைக் கேட்டதாற் சந்தேகமெழப்பெற்ற) அவ்வருச்சுனனுக்கு—இவை=இந்தயோகசூத்திரங்களை—மீள விரிப்பான்=மீட்டும் விரித்து இவ்வாறாமத்தியாயத்தில் அருளிச்செய்வாராயினர்.—எ-று. ஏகாரம் ஈற்றசை.

'ஏகமுதற்பொருள்' என்றது, பாரமார்த்திகரூபம். 'நாகபணத்திடையே நடமாடுமேகம்' என்றது, சோபாதிகரூபம். 'ஏகம்' என்னும் விசேஷணந் தந்தது ஜீவேசுரபேதம் அவித்தை, மாயைகளாலுளதாதலின் அவைகளின் நாசகமாகும் அநுபூதிரூபமான யோகத்தின்கண்ணே அந்தப்பேதம் இன்மையைக் குறிப்பித்தற்பொருட்டென்க. சந்தேகம், இனிக் கூறப்படும் அவதாரிகையுட்காண்க. (௧)

[பூர்வாத்தியாயத்தில் ஸ்ரீ பகவான் சர்வ கர்மங்களின்றியாகத்தால் யோகம் விதித்தனர்; இதனால் சர்வகர்மங்களும் விடற்பாலனவாமாதலால் சந்நியாசத்தினும், அப்படியே யோகத்தினும் அத்தியந்தநிகிருஷ்டமாமென அருச்சுனனுக்கு உளதாகுஞ் சங்கையைப்பற்றி இரண்டு செய்யுட்களால் மீட்டும் அக்கருமயோகத்தை அவனை யுத்தரூபகர்மத்திற் பிரவிர்த்திப்பித்தற்பொருட்டுத் துதிக்கின்றார்.]

செய்த வினைப்பயன் விட்டிவை தீரா
தெய்த வியற்றி யிருப்பவ னேகா
ணுய்ய நினைத்திடு யோகியன் ஞானி
வெய்ய தழற்பொலி வேள்விசெய் வாரில்.

(இ-ள்.) (அருச்சுனா) செய்த வினைப்பயன் விட்டு=(தான்) செய்யாநிற்குங் கர்மங்களின் பயனை இச்சியாதொழித்து—இவை தீரா

எய்த இயற்றி இருப்பவனே காண் = இக்கர்மங்களை விடாமற் சிரத்தாபூர்வகமாகச் செய்துநிற்பவனே கண்டாய்—உய்ய நினைத்திடு நல்யோகி ஞானி=(தான்) கடைத்தேறக் கருதிய நல்லயோகியும், சந்நியாசியுமாம்;—வெய்ய தழல் பொலி வேள்வி செய்வாரில் = வெந்தீயினற் சிறந்த வேள்வி செய்யாநிற்பவருள்,—எ-று.

'வினை' என்றது, சாஸ்திரங்களால் கர்த்தவ்வியமாக விதிக்கப்பட்ட அக்கினிஹோத்திரமுதலிய நித்தியநைமித்திககர்மங்களை. 'பயன்' = சுவர்க்கமுதலியவை. 'வேள்வி' = யாகம். சந்நியாசமென்பது, தியாகம். யோகமென்பது, சித்தத்தின்கண் ணுள்ள விட்சேபத்தின் அபாவம்; இவ்வாறன சந்நியாசம், யோகம் இவ்விரண்டும் நிஷ்காமபுருஷனிடத்துள்ளன: பலத்தின் தியாகமுடையவனும், பலத்தின் * திருஷ்ணுரூபமான விட்சேபத்தின் அபாவமுடையவனுமாகலின். நிஷ்காமபுருஷன் அக்கினியின்மையனும், கிரியை இன்மையனுமல்லனுயினும் சகாமபுருஷனை நோக்கச் சந்நியாசியும், யோகியுமாமென்பார், 'வெய்ய தழற்பொலி வேள்விசெய் வாரில்' என்றார்.

இங்ஙனம் நிஷ்காமபுருஷனை ஸ்துதித்தது கௌணீவிருத்தியாலென்றறிக. (௨)

[சிம்மந்தேவதத்தன் என்னும்வசனத்தில் பசுரூபமான சிம்மத்தின் வேறன மநுடரூபமானதேவதத்தனிடத்து அச்சிம்மத்தின் சமானமான சூரத்தன்மை, குரூரத்தன்மைமுதலிய குணங்களைக்கொண்டு சிம்மசப்தம் வியவகாரம்பண்ணப்படுவதுபோலச் சந்நியாசமல்லாததன்கண் சந்நியாசசப்தமும், யோகமல்லாததன்கண் யோகசப்தமும் வியவகாரம் பண்ணப்படுவதற்கு நிமித்தரூபமான யாதொரு சமான குணமுண்டோ அக்குணத்தை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

> மேவின யாவையும் வீடுத லில்லார்
> யாவர்க ளேனுநல் யோகிக ளாகா
> ராவர்க ளாகி லவாவற லேகா
> ணேவலி லாதநல் யோகமு மையா.

(இ-ள்.) ஐயா=அருச்சுன — மேவின யாவையும்=(தம்மிடத்துப்) பொருந்தின † பலசங்கற்பங்களனைத்தையும் — வீடுதல் இல்லார்=தியாகஞ்செய்யாதோர்—யாவர்களேனும்=எவர்களானாலும்—

* திருஷ்ணை=கிடையாதவற்றில் அபிலாஷை. † பலம்=பயன்.



நல் யோகிகள் ஆகார்=நல்ல யோகிகளாகமாட்டார்கள்;— ஆவர்கள் ஆகில்=(அவர்) யோகிகளாவார்களானல்,—அவா அறலே காண்=பலத்தோடுகூடச் சர்வகர்மங்களின் சந்நியாசமே கண்டாய்—ஏவல் இலாத நல் யோகமும்=ஒழிதற்பாலதல்லாத (சுருதியிற்கூறிய) நல்ல யோக இலக்கணமும்: (ஆகலின், பலசங்கற்பத்தியாகமுடைய அவர் யோகிகளே.)—எ-று.

இங்ஙனங் கூறியவாற்றல், சர்வயோகிகளும் பலசங்கற்பத்தியாகமுடையரேயாகலின் பலத்தின் தியாகரூபசமானதர்மத்தினுலும், திருஷ்ணுரூப சித்தவிருத்திநிரோதத்தின் சமானத்தன்மையினுலும் கௌணீவிருத்தியால் கருமியாகியபுருஷனே சந்நியாசியும், யோகியுமாமென்பது பெறப்படுகின்றது.

தாற்பரியம்;— சந்நியாசி சப்தத்திற்கு முக்கியார்த்தம் பலத்தோடுகூடச் சர்வ கர்மங்களின்தியாகியாம்; ஆகவே, அதில் சுவர்க்காதி பலன்களின்தியாகம் இருப்பதுபோல நிஷ்காமகர்மமுடைய புருஷனிடத்தும் அச்சுவர்க்காதி பலன்களின்தியாக மிருக்கின்றது; ஆகலின், அச்சந்நியாசி சப்தம் கௌணீவிருத்தியால் அக்கர்மமுடைய புருஷனிடத்து வியவகாரம் பண்ணப்படுகிறது. அப்படியே யோகி என்னுஞ் சப்தத்திற்கு முக்கியார்த்தம் சர்வ சித்தவிருத்திகளின் நிரோதமுடையனும்; ஆகவே, அவனிடத்துப் பலத்தின் திருஷ்ணுரூபமான சித்தவிருத்தியின் நிரோதம் இருப்பதுபோல நிஷ்காமகர்மமுடைய புருஷனிடத்தும் அந்தப்பலத்தின் திருஷ்ணுரூபமான சித்தவிருத்தியின் நிரோதம் இருக்கின்றது; ஆகலின், அந்த யோகியென்னுஞ் சப்தமுங் கௌணீவிருத்தியால் அக்கர்மமுடைய புருஷனிடத்து வியவகாரம் பண்ணப்படுகிறது என்பதாம்.

இப்பொருளானது யோகசூத்திரங்களால் வெளிப்படையாகக் கூறப்பட்டிருக்கின்றது; அஃதெங்ஙனமெனில்? சித்தத்தின் சர்வ விருத்திகளினுடைய நிரோதத்திற்கு யோகமென்றுபெயர்; அந்தச் சித்தத்தின் விருத்திகள் பிரமாணம், விபர்யயம், விகற்பம், நித்திரை, ஸ்மிருதி என ஐவகைத்தாம்; அவற்றுள், (௧) பிரமாவுக்குக் காரணம் யாது? அதைப்பிரமாணமென்பர்; அந்தப்பிரமாணமும் பிரத்தியக்ஷம், அநுமானம், சப்தம், உபமானம், அர்த்தாபத்தி, அநுபலப்தி என அறுவகைத்தாம்; இவற்றுள், பிரத்தியட்சம், அநுமானம், ஆகமம் என மூன்று பிரமாணம் யோகசாஸ்திரமுடையோர் அங்கீகரித்தனர். ஏனைய பிரமாணங்களோவெனின்? இம்மூன்றனுள் * அந்தர்ப்பாவ

* அந்தர்ப்பாவம்=அடக்கம்.

மாமென்பர். நையாயிகர் பிரத்தியட்சமுதலிய பிரமாவுக்குக் கரண மாவதால் இந்திரியாதிகளையே பிரத்தியட்சமுதலிய பிரமாணரூப மாகக் கூறுவர். யோகசாஸ்திரத்தில் இந்திரியமுதலியவற்றால் உண் டாகாநிற்குஞ் சித்தத்தின் விருத்திகளையே பிரத்தியட்சமுதலிய பிரமாணரூபமாகவும், அவ்விருத்திகளில் யாதொரு சேதனத்தின் பிரதிபிம்பமுண்டோ அந்தப் பிரதிபிம்பத்தைப் பிரத்தியட்சமுத லிய பிரமாரூபமாகவும் கூறப்பட்டிருத்தலின் பிரத்தியட்சமுத லிய பிரமாணங்கள் சித்தத்தின் விருத்திகளாம். (உ) மித்தியாஞான த்திற்கு விபர்யயமென்று பெயர்; அந்த விபர்யயமும் அவித்தை, அஸ் மிதை, இராகம், துவேஷம், அபினிவேசமென்னும் பேதத்தால் ஐவ கைத்தாம். (ந) சப்தசிரவணத்தின் அனந்தரமுண்டாவதும், அர்த்த ரூப வஸ்துவோடு கூடாததுமான சித்தத்தின்விருத்தி விசேஷத் திற்கு விகற்பமென்று பெயர்; இங்ஙனங் கூறியது வந்தியாபுத்தி ரன், நரசிருங்கமுதலிய பொருள்களை விஷயமாகவுடைய விருத்தி களை. (ச) பிரமாணம், விபர்யயம், விகற்பம், ஸ்மிருதி என்னும் இந் நால்வகை விருத்திகளின் அபாவத்திற்குக்காரணரூபமான யாதொரு தமோகுணம் உண்டோ அத்தமோகுணத்தை விஷயமாகவுடைய விருத்திவிசேஷத்திற்கு நித்திரையென்றுபெயர்.(ரு) பூர்வாநுபவஜந் நிய சம்ஸ்காரமாத்திரத்தால் யாதொருஞான முண்டாகின்றதோ அதற்கு ஸ்மிருதியென்று பெயர். அந்த ஸ்மிருதி சர்வவிருத்திக ளாலு முண்டாவதால் அதைப் பதஞ்சலிபகவான் சர்வவிருத்திக ளின் அந்தத்திற் கூறினர். இலச்சைமுதலிய அநேகப்பிரகாரமான விருத்திகளுண்டாகின்றனவாயினும்அவையனைத்தும் பிரமாணமுத லிய ஐவகை விருத்திகளிலேயே அந்தர்ப்பாவமாம்; இவ்வாறான சர்வ விருத்திகளின் நிரோதமே யோகமென்றும்,சமாதியென்றுஞ் சொல் லப்படும். கர்மபலன்களின் யாதொரு சங்கற்பம் உண்டோ அச்சங் கற்பமும் ஐந்து பிரகாரமான விபர்யயத்தில் இராகமெனப் பெயரிய மூன்றாவதான விபர்யயவிசேஷமாம்; அந்த இராகரூபபலசங்கற்பத் தின் நிரோதமாத்திரத்தையே இங்கே கௌணீவிருத்தியால் யோக மென்றும், சந்நியாசமென்றுங் கூறப்பட்டது; ஆகலின், கிஞ்சின் மாத்திரமும் இங்கே விரோதமாகாதென்றறிக. (௫)

[ஸ்ரீ பகவான் கர்மயோகஞ் சிரேஷ்டமென்று விதித்ததாலும் சுருதியும் சீவித்திருக்கும்பரியந்தங் கர்மஞ் செய்யத்தக்கதென்று விதித்திருப்பதாலும் இவ்வதிகாரி புருஷனுக்குக் கர்மயோகமே



சீவித்திருக்கும்வரை செய்யயோக்கியமாமென்று அருச்சுனனுக்கெ ழுஞ் சங்கையை ஒழிவித்தற்பொருட்டு அக்கர்மயோகத்தின் அவ தியை அருளிச்செய்கின்றார்.]

உய்வகை யோக மொருப்படு வார்க்குக்
கைவரு மாசெயல் காரண மேகாண்
மெய்வகை யோகம் விளைந்தபின் மெய்யே
செய்வன வானவை தீமைய வேயாம்.

(இ-ள்) உய்வகை = (தாம் யோகாரூடராய்) உய்யும்படிக்கு— யோகம் ஒருப்படுவார்க்கு = யோகத்தில் ஒருமனப்படும் (இச்சை யுடைய) முனிவர்கட்கு—கைவருமா=(அந்தயோகம்) கைவசமாகும் படி—செயலே=(நிஷ்காமமாகச்செய்யும் நித்தியநைமித்திக) கர்மங் களே—காரணம் காண்=சாதனமாகுங் கண்டாய்;—மெய் வகை= உள்ளபடி—யோகம் விளைந்த பின்=யோகபூமி உதித்ததன்பின் னர், (ஞானநிஷ்டைக்குச் சந்நியாசமேசாதனமாவதல்லாமல்)—மெய் யே=உண்மையாகவே—செய்வனவானவை=நித்தியநைமித்திக கர் மங்கள்—தீமையவே ஆம்=விக்கினங்களேயாம்.—எ-று.

ஏகாரம் பிரித்துக்கூட்டப்பட்டது அதிகாரிபுருஷனுக்கு நிஷ் காமகர்மங்களால் அந்தக்கரணசுத்திவாயிலாக வைராக்கியமுளதான பின் சிரவண, மனன, நிதித்தியாசனவாயிலாக ஞானநிஷ்டை யடை தற்பொருட்டுச் சர்வகர்மங்களின் தியாகரூபமான சந்நியாசமே கார ணமாமென்றுகூறப்படுகிறதென்பார், 'யோகம்விளைந்தபின்மெய்யே, செய்வன வானவை தீமைய வேயாம்' என்றார்.

சீவித்திருக்கும்வரை கர்மம் கர்த்தவ்வியமென்று சுருதி கூறி னது வைராக்கியஹீனபுருஷனுக்கன்றி வைராக்கியமுடைய புரு ஷனுக்கன்றென்பதாம். (௬)

[எந்தயோகாரூடாவஸ்தையை அடைந்தவனாய் இவ்வதிகாரி புருஷன் சர்வகர்மங்களையுந்தியாகம்பண்ணுதற்கு அதிகாரியாவனோ அந்த யோகாரூடாவஸ்தையை இவ்வதிகாரிபுருஷன் எந்தக்காலத் தடைந்தவனாவனென்றெழும் அருச்சுனன் சங்கையைப்பற்றி ஸ்ரீபக வான் அந்தக்காலத்தை அருளிச்செய்கின்றார்.]

புன்மைய வான பொறித்திற னோடும்
பன்மைய வான வினைப்பய னோடு
மன்மைய னவ னப்பொழு தையா
தன்மையின் யோக மதிற்றலை நின்றான்.

(இ-ள்.) ஐயா=அருச்சுனா—புன்மைய ஆன பொறித் திறனோடும்= அற்பத்தன்மை யுடையனவாகிய சப்தாதிவிஷயச்கூறுபாடுகளோடும்,—பன்மைய ஆன வினைப் பயனோடும் = நாநாவிதங்களாகிய கர்மபலன்களோடும்—அன்மையனானவன் = (ஆசக்திரூபமான சங்கற்ப) ரகிதனான இவ்வதிகாரிபுருஷன் — அப்பொழுது = அப்போது—தன்மையின்=இச்சுபாவத்தால்—யோகமதில்தலைநின்றான் =(சமாதிரூபமான) யோகத்தின்கண் ஆரூடனாயினன்.—எ-று.

கர்மம்=நித்தியநைமித்திகாதி. 'பொறித்திறனோடும், வினைப்பயனோடு, மன்மையனானவன்' என்றது, சப்தாதி விஷயங்களிலும், அப்படியே கர்மங்களிலும் மித்தியாத்வபுத்தியினாலும், அகர்த்தா, அபோக்தாவாய், அத்விதீயபரமானந்த சொரூபமான ஆன்மதரிசனத்தினாலும் என்க.

சப்தாதி விஷயங்களிலும், கர்மங்களிலும் அபினிவேசரூபமான ஆசக்தியும், அதற்குக் காரணரூபமான சங்கற்பமுமே யோகாரூடத் தன்மைக்குப் பிரதிபந்தகமாதலின் அவை அபாவமாகும்பொழுது இவ்வதிகாரிபுருஷன் யோகாரூடனாவனென்பதாம். (ரு)

[எவ்வதிகாரிபுருஷன் யாதொருபொழுது இங்ஙனம் யோகாரூடனாவனோ அவ்வதிகாரிபுருஷன் அப்பொழுது தனதான்மாவை ஆன்மாவாலேயே இச்சம்சாரத்தினின்றுங் கடைத்தேறப் பண்ணுகிறான்; ஆதலால், இவ்வதிகாரிபுருஷன் யோகாரூடனாய்த் தனதான்மாவை இச்சம்சாரத்தினின்றும் அவசியங்கடைத்தேற்றப் பண்ண வேண்டுமென்று ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

தானல தியாவர்தன் மேன்மைசெய் தக்கார்
தானல தியாவர்தன் கீழ்மை சமைப்பார்
தானல தியாவர்தன் மெய்ப்பகை யாவார்
தானல தியாவர் தனக்குற வாவார்.

(இ-ள்.) (அருச்சுனா) தான் அலது = ஆன்மாவல்லாமல்—யாவர்=(வேறே) யாவர்—தன் மேன்மை செய்தக்கார் = ஆன்மாவுக்கு மேன்மைசெய்யத்தக்கவர்:—தான் அலது = ஆன்மாவல்லாமல்—யாவர்=(வேறே) யாவர்—தன் கீழ்மை சமைப்பார் = ஆன்மாவுக்குக் கீழ்மை செய்யத்தக்கவர்:(வேறேஒருவருமிலர்.)—[இதற்குக்காரணங் கூறுகின்றார்.] தான் அலது=ஆன்மாவல்லாமல்=யாவர்=(வேறே) யாவர்—தன் மெய்ப் பகை ஆவார்=ஆன்மாவுக்கு உண்மையாகச் சத்துருவாவார்:—தான் அலது=ஆன்மாவல்லாமல்—யாவர்=(வேறே) யாவர் — தனக்கு உறவு ஆவார் = ஆன்மாவுக்குப் பந்துவாவார்: (வேறே ஒருவருமிலர்.)—எ-று.



'மேன்மை' என்றது, சம்சாரசமுத்திரத்தினின்றுந் தன்னை உத்தாரம் பண்ணுவதை. 'கீழ்மை' என்றது, சம்சார சமுத்திரத்தில் தன்னை மூழ்குவிப்பதை. விஷயங்களிலுள்ள ஆசைகளை யொழித்து யோகாரூடத்தன்மையைச் சம்பாதிப்பதே சீவான்மாவைச் சம்சாரத்தினின்றும் உத்தாரணம் பண்ணுவது; இதற்கு மாறாக விஷயங்களில் ஆசையடைவதே தனது ஆன்மாவைச் சம்சாரத்தின் மூழ்குவிப்பது.

சீவான்மா தானே தனக்குச் சத்துருவும், பந்துவுமாமென்பதாம்.

[எவ்வாறான ஆன்மா தனக்குப் பந்துவாம், எவ்வாறான ஆன்மா தனக்குச் சத்துருவாமென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் பந்துவாகிய ஆன்மா, சத்துருவாகிய ஆன்மா இவர்களின் இலக்கணமருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

இறவா வகைதன் னுள்ளத்தை யடக்கு மவனே தனக்கென்று, முறவா யுள்ளா னல்லாதார் தமக்கே பகையா யொழுகுவார், துறவா தொழுகுந் துவந்துவங்க டுறந்தொன் றினையே தொடர்ந்தவர்பான், மறவா தெழுந்த மெய்யறிவிம் மாயை மறைக்க மறையாதால்.

(இ-ள்.) இறவா வகை=ஜனித்து, மரித்துத் தான் வருந்தா வண்ணம்—தன் உள்ளத்தை = தனது தேகேந்திரியாதிரூபமான * சங்காதத்தை—அடக்கும் அவனே = (கேவலம் விவேகத்தோடு கூடிய சுத்தமனத்தினாலேயே தன்)வசமாகப் பண்ணினவன் யாவன் அவனே—தனக்கு என்றும் உறவு ஆய் உள்ளான்=தனக்குத்தானே எப்போதும் பந்துவாயுள்ளோன்;—அல்லாதார் = தேகேந்திரியாதிரூபசங்காதத்தை (விவேகத்தோடுகூடிய மனத்தினால்) தமது வசம் பண்ணாதோர்—தமக்கே பகை ஆய் ஒழுகுவார் = தமக்குத்தாமே (புறச்சத்துருவைப்போலச்) சத்துருவாகிச் சஞ்சரிப்பவராம்.—[மூன் சொன்னதைத்தானே வெளிப்படையாக அருளிச்செய்கின்றார்.] துறவாது ஒழுகும்=யாவருந் துறவாதடையும்—துவந்துவங்கள் துற

* சங்காதம்=கூட்டம்.

ந்து=துவந்துவங்களை நீத்து—ஒன்றினையே மறவாது தொடர்ந்தவர்பால்=பரமான்மா ஒன்றையே நிரந்தரம் நாடாநிற்பவரிடத்து—எழுந்த மெய் அறிவு=உதயமாகிய சொப்பிரகாச ஞானசுபாவமான ஆன்மா—இம்மாயை மறைக்க மறையாது=துவந்துவரூபமான மாயையானது மறைக்க அதனால் மறைபடாது.—எ-று. ஆல்-அசைநிலை.

'துவந்துவம்' என்றது, சித்தத்தை விட்சேபப்படுத்தாநிற்குஞ் சீதோஷ்ணம், சுகதுக்கம், மானாவமான முதலியவற்றை. சீதோஷ்ண முதலியவையடைந்தவிடத்துச் சமத்துவபுத்தியினாற் சுரோத்திர முதலிய சர்வேந்திரியங்களையும் யாவர் வசம்பண்ணினரோ, அப்படியே சர்வத்திலுஞ் சமபுத்தியினால் இராகத்துவேஷமுதலிய விகாரமற்றிருக்கின்றனரோ அவர்க்குச் சொப்பிரகாச ஞானசுபாவமான ஆன்மா சமாதிக்கு விஷயமாமென்பார், 'துவந்துவங்க டுறந் தொன்றினையே தொடர்ந்தவர்பான், மறவாதெழுந்த மெய்யறிவிம் மாயைமறைக்க மறையாது' என்றார்.

இஃதியோகாரூடத்தன்மை எனக்கொள்க. (எ)

[இதுவுமது.]

பாடும் பனுவல் பலவோதி யவற்றா லறியும் பயனுணர்ந்து, நீடும் புலன்க ளவைவென்று நிலையிற் கலக்கற் கரியானா, யோடும் பொன்னு மொருபொருள்போ லொக்கப் பார்க்கு மவனேயிங், காடும் பெரிய மாயக்கூத் தாடா ததுகண் டமர்ந்திருப்பான்.

(இ-ள்.) பாடும் பனுவல் பல ஓதி=(குருமுகமாகக்) கற்கத்தக்க நூல்கள் பலகற்று—அவற்றால் அறியும் பயன் உணர்ந்து=அந்நூல்களாலறியத்தக்க பயனை அபரோட்சமாகவறிந்து—நீடும் புலன்களவை வென்று=(விஷயங்களில்)நீளாநிற்கும் இந்திரியங்களை ஜயித்து—நிலையில் கலக்கற்கு அரியான் ஆய்=(விஷயங்கள் தன் சமீபத்தையடைந்தும், விஷயங்களைப் புசிக்கத் தனக்குச் சாமர்த்தியமிருந்தும் அவைகளாற்றனது சொரூப) ஸ்திதியினின்றும் பேதித்தற்கரியவனாய்—ஓடும் பொன்னும் = ஓட்டையும், பொன்னையும்—ஒரு பொருள்போல் = ஒருபதார்த்தம்போல—ஒக்கப் பார்க்கும் அவனே = சமமாகப் பார்க்கும் யோகியே—இங்கு ஆடும் பெரிய மாயக் கூத்து ஆடாது=இச்சம்சாரதசைக்கண் யாவரும் நடிக்கும் பெரிய மாயா



நடனந் தான் செய்யாமல்—அதுகண்டு அமர்ந்து இருப்பான்=தான் அம்மாயாநடனங்கண்டு நிச்சலனாயிருப்பான்.—எ-று.

யோகாரூடனெறுன் சொல்லப்படுவனென்பார், 'இங்காடும் பெரிய மாயக்கூத் தாடாததுகண் டமர்ந்திருப்பான்' என்றார். (அ)

[சத்துரு, மித்திரன்முதலியோரிடத்துச் சமபுத்தியுடையோன் யாவன் அவன் சர்வயோகிகளினுஞ் சிரேஷ்டனென்று ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

கைம்மா றில்லா தனசெய்வான் காதற் றோழன் கடும்பகைஞன், விம்மா தெவர்க்கு மொத்திருப்பான் வேண்டப் படுவான் வேண்டாதா, னம்மா மறைநூ னெறிபுரிவா னாகா தனவாக் கிடுவானென், றிம்மா னுடவ ரனைவருக்கு மொப்பான் யோகி யெனப்படுவான்.

(இ-ள்.) கைம்மாறு இல்லாதன செய்வான் = பிரதியுபகாரம் அபேட்சியாமல் உபகாரங்களைச் செய்யுஞ் சுகிருதனும்,—காதல் தோழன்=அன்புள்ள மித்திரனும்,—கடும் பகைஞன்=கொடிய சத்துருவும்,—விம்மாது எவர்க்கும் ஒத்திருப்பான்=கலங்காமல் யாவரிடத்துஞ் சமமாயிருக்கும் மத்தியஸ்தனும், — வேண்டப்படுவான் = பந்துவும்,—வேண்டாதான் = த்வேஷியும்,— அம் மா மறை நூல் நெறி புரிவான்=அழகிய பெருமைபொருந்திய வேதசாஸ்திரவிகிதமான சுபகர்மங்களை யநுஷ்டியாநிற்குஞ் சாதுவும்,—ஆகாதன ஆக்கிடுவான் என்ற=வேதசாஸ்திர நிஷித்தமான அசுபகர்மங்களைச் செய்யாநிற்கும் பாவியும் என்று சொல்லப்பட்ட—இம்மானுடவர் அனைவருக்கும்=இம்மாநுடரனைவரிடத்தும்—ஒப்பான்=சமசித்தனாயிருப்பவன் (யாவன் அவனே)—யோகி எனப்படுவோன் = யோகியென்று சொல்லப்படுவன்.—எ-று.

பிரதியுபகாரத்தை யபேட்சியாமலும், பூர்வசினேகத்தாலில்லாமலும், பூர்வசம்பந்தத்தாலில்லாமலும் உபகாரஞ் செய்பவன் சுகிருத்து. பூர்வசினேகத்தை யபேட்சித்தே உபகாரஞ் செய்பவன் மித்திரன். தான் செய்த அபகாரத்தை நாடாமற் கேவலந் தனது குரூரசுபாவத்தாலேயே அபகாரஞ் செய்பவன் சத்துரு. பரஸ்பரம் விவாதஞ்செய்யாநிற்கு மிருவர்க்கும் இதத்தை யிச்சிப்பவன் மத்தியஸ்தன். அற்பசம்பந்தத்தால் உபகாரஞ் செய்பவன் பந்து. தன்னாற்செய்யப்பட்ட அபகாரத்தை நாடியே அபகாரஞ் செய்பவன் த்வேஷி. சம

சித்தமென்பது, இராகத்துவேஷமில்லாத புத்தி. சுகிருத்துமுதி
லிய சகலரிடத்துஞ் சமபுத்தியுடைய புருஷன் யாவரினும் உத்கிருஷ்
டனுமென்பார், 'இம்மானுடவ ரனைவருக்கு மொப்பான் யோகி
யெனப்படுவான்' என்றார். (க)

[முன் யோகாரூட னிலக்கணங்கூறி இனி அவனுடைய அங்க
ரூபமான யோகத்தை இச்செய்யுள்தொடங்கி, "இடானது தானின்
பந்தான்" என்னுஞ் செய்யுள்வரையும் ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்
றார்.]

தலையா மிந்த யோகத்தைத் தலைநின் றொழுகுந் தன்மை
கே, ளுலையா வாசை யறமாற்றி யொன் றுந் தனக்கென் றொழு
காதே, மலையார் முழைஞ்சே முதலாக யோகங் களுக்கு வகுத்
துரைத்த, நிலையா வையினு மொன்றினில்வந் தியாது நலியா
விடத்ததிலே.

(இ-ள்.) தலை ஆம் இந்த யோகத்தை=(யோகங்களெல்லாவற்
றினும்) தலைமையாகிய இந்த யோகத்தை—தலைநின்று ஒழுகும் தன்
மைகேள்=(அதில்)ஆரூடனாய்நின்று முயலுந்தன்மையை (அருச்சுனா)
கேட்பாய்;— உலையா ஆசை அற மாற்றி = கெடாத ஆசைகளை
(த்தோஷதிருஷ்டிபூர்வகமாக) முற்றுமொழித்து—ஒன்றும் தனக்கு
என்று ஒழுகாதே = (யோகசித்தியிற் பிரதிபந்தஞ் செய்யாநிற்கும்
பதார்த்தங்களில்) ஒன்றும் (ஒருவரிடத்திற் சென்று) தனக்கென்
றிரவாமல்—மலை ஆர் முழைஞ்சு முதல் ஆக யோகங்களுக்கு வகுத்து
உரைத்த = பருப்பதங்களிலுள்ள குகைமுதலாக யோகசித்திக்கு
(நூல்களில்)வகுத்துக் கூறிய—நிலை யாவையினும்=தானங்களெவற்
றினும்—ஒன்றினில் வந்து = (சுபாவமாகவாவது, சம்ஸ்காரத்தினு
லாவது சுத்தமாயுள்ள) ஓர் தானத்தில் வந்து—யாதும் நலியா இடத்
ததில் = (யோகசித்திக்குப் பிரதிபந்தமாக) யாதொரு பிராணியும்
வருத்தத்தக்கதாயில்லாத அத்தானத்தில்,—எ-று. ஏகாரங்கள் ஈற்ற
சைகள். இது குளகம்.

யாதொன்றும் நலியாவிடத்தில் முன்சொல்லியவண்ணமிருந்து
அந்தக்கரணத்தைச் சமாதி கூடும்படி செய்யவேண்டுமென்பது கரு
த்து. (க0)

[யோகசித்தியின்பொருட்டு முன்னர் ஆசனநியமம் அவசியம்
வேண்டுமாகலின் அவ்வாசனநியமத்தை ஸ்ரீ பகவான் அருளிச்செய்
கின்றார்.]



ஒக்கும் வகையாற் குசைபரப்பி யதன்மே லுழையின்
றோல்படுத்துத், தக்க துகிலை யதன்மேலே விரித்துத் தானங்
கதிலிருந்து, மிக்க மனனை யறவொருக்கி வேறு செய்யும் வினை
களுடன் றொக்க புலன்களவையடக்கி யுணர்வு தூய்தா வதன்
பொருட்டால்.

(இ-ள்.) ஒக்கும் வகையால் குசை பரப்பி=சமமாகும்படி தருப்
பையைப் பரப்பி (அத்தியந்த முயராமலும், அத்தியந்தந் தாழாமலுங்
குசைபரப்பி யென்றபடி)—அதன் மேல் உழையின் தோல் படுத்து=
அதன்மீது மிருதுவான மான்றோலை (அல்லது, புலித்தோலை) விரி
த்து—அதன் மேலே தக்க துகிலை விரித்து = மான்றோல்முதலிய
வற்றின்மீது மிருதுவான வஸ்திரத்தை விரித்துத் (தானே நிச்சல
மான ஆசனத்தை இவ்வாறு ஸ்தாபனஞ் செய்யத்தக்கதென்ப
தெஞ்சிநின்றது.) — [இவ்வாறு ஆசனத்தை ஸ்தாபனஞ்செய்த
யோகாப்பியாசபுருஷன் யாதுகாரியஞ் செய்யத்தக்கதெனிற் சொல்
லுகின்றார்.] தான் அங்கு அதில் இருந்து = தான் அச்சுத்தமான
தேசத்தில் ஸ்தாபித்த அவ்வாசனத்தின்மீதேயிருந்து—வேறு செய்
யும் வினைகளுடன் தொக்க புலன்களவை அடக்கி=வேறுவேறாகச்
செய்யாநிற்குங் கிரியைகளோடு கூடிய சுரோத்திரமுதலிய இந்திரி
யங்களை நிக்கிரகித்து—மிக்க மனனை அற ஒருக்கி=அதிக விட்சேப
முடைய மனத்தையும் அவ்விட்சேப மறும்படி ஏகாக்கிரமாக்கி—
உணர்வு தூய்து ஆவதன்பொருட்டு=அந்தக்கரண சுத்தியின்பொரு
ட்டு (ச்சமாதி விஷயமான அப்பியாசஞ் செய்யத்தக்கதென்னும் இம்
மூலசுலோகார்த்தம் எஞ்சிநின்றது.)—எ-று. ஆல்-அசைநிலை. இது
வுங் குளகம்.

ஆசனம் அத்தியந்த முயர்ந்திருக்கில் ஓர்காற் பரவசத்தினாற்
கீழே வீழவும், அத்தியந்தந் தாழ்ந்திருக்கிற் சீதோஷ்ணமும், மழைச்
சலம் பிரவேசித்தலும், கல்முதலியவை உறுத்தலுமாகிய இவை
தியானத்திற் கிடையூறாக நேரிடுமாதலால், 'ஒக்கும் வகையாற்
குசைபரப்பி' என்றார். 'குசைபரப்பி யுழையின்றோல் படுத்துத்,
தக்கதுகிலை விரித்துத் தானங்கதிலிருந்து' என்பதால், ஏவலனால்
ஆசனமிடப்பெறின் ஒரோர்காலைத் தியானத்திற் கிடையூறான சித்த
சஞ்சல முண்டாகுமென்பது பெறப்படுகின்றது. வஸ்திரம் தாரித்
திரிய துக்கத்தைத்தரும், தாருவும், கல்லும் ரோகத்தைத்தரும் என

னும் ஸ்மிருதி வசனத்தால், வஸ்திரத்தை நிஷேதித்திருத்தல் கேவலங் கிரகஸ்த விஷயமேயல்லாமற் சந்நியாசிவிஷய மன்றென்க. * க்ஷிப்தம் † மூடம் ‡ விக்ஷிப்தமென்னும் மூன்று பூமிகளைப் பரித்தியாகஞ்செய்து அநான்மாகாரவிருத்திகள் இடையே வந்து கலவாத சஜாதீயமான பிரமாகாரவிருத்தியின் ஸ்திதி மனத்தின் ஏகாக்கிரம். அந்தக்கரணத்தின்கண் சர்வவிட்சேபங்களி னிவிர்த்தியினாற் பண்ணப்பட்ட அத்தியந்தசூட்சுமத்தன்மையாற் பொருந்தாநிற்கும் பிரமசாட்சாத்காரத்தின் யோக்கியத்தன்மையே இங்கே அந்தக்கரணசுத்தி என்றறிக. (௧௧)

[மேலைச் செய்யுட்களால் யோகாப்பியாசத்தின்பொருட்டு வாகியாசனஞ்சொல்லி இப்போது அந்த யோகாப்பியாசபுருஷன் அவ்வாகியாசனத்திலிருந்து இவ்வாறு தனது சரீரதாரணஞ் செய்யத்தக்கதென்று ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

தலையுங் கழுத்து முடம்புமிவை செவ்வே தளரா தேயிருக்கு, நிலையி லிருந்து கண்களைத்தன் மூக்கி னுதிமே லேநிறுத்தி, யலையுங் கடல்போற் காமமுமெய்ப் பயமுந் தன்னை விட்டகல, வலையு மனமுள் ளடங்கவெனை யுணர்ந்தே யிருக்கு மது யோகம்.

(இ - ள்) (அருச்சுனா! யோகாப்பியாசமுடையபுருஷன் திடப்பிரயத்தனமுடையவனாய்த்) தலையும் கழுத்தும் உடம்பும் இவை=சிரமும், கழுத்தும், உடம்புமாகிய இம்மூன்றும் — செவ்வே தளராதே இருக்கும் நிலையில் இருந்து=(தண்டம்போலுஞ்) சமமாய் அசையாதிருக்கும் அந்நிலையிலிருந்து—கண்களைத் தன் மூக்கின் நுதிமேலே நிறுத்தி=நேத்திரங்கள் தனது நாசிநுனியைப் பார்ப்பதாக அதன்மேலே அவைகளை நிறுத்தி (த் திக்குகளையும் பாராதவனாய்)—[பின்னும்,] (அவ்வப்பியாசியானபுருஷன் இராகத்துவேஷாதிரகிதனாய்) அலையும் கடல்போல் காமமும்=அலையாநிற்குஞ் சமுத்திரம்போன்ற

* க்ஷிப்தம்=உலகவாசனை, தேகவாசனை, சாஸ்திரவாசனை முதலிய இரஜோகுணபரிணாமமாகிய திடமான அநான்மவாசனை.

† மூடம்=நித்திரை, ஆலசியமுதலிய தமோகுண பரிணாமம்.

‡ விக்ஷிப்தம்=தியானத்திற் பிரவிர்த்தித்த சித்தத்திற்கு ஓர்பொழுதுளதாகும் வாகியப்பிரவிர்த்தி.



சஞ்சலரூபமான ஆசையும்,—மெய்ப் பயமும்=மெய்யான அச்சமும்—தன்னை விட்டு அகல = தன்னைவிட்டு நீங்கவும்—உலையும் மனம்—உள் அடங்க=அலையாநின்ற மனமானது உள்ளே நிக்கிரகமாகவுஞ் செய்து—எனை=(பரமேசுரனை) என்னை—உணர்ந்து இருக்குமதுவே யோகம்=(பரமபுருஷார்த்தரூபனாக) அறிந்து (என்னிடத்துச் சித்தமுடையவனாக) இருக்குமதுவே யோகமாம்.—எ-று. ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது.

இது சம்பிரக்ஞாத சமாதி. 'தலையுங் கழுத்து முடம்பு மிவை செவ்வே'' என்றது, வலப்புறம், இடப்புறம், பின் புறங்களிலுள்ள யாதொருவஸ்துவையும் பாராமலும், தீண்டாமலு மிருத்தற்கென்க; அங்ஙனமிருப்பினுங் கொதுகு, எறும்புமுதலிய பிராணிகளால் உபத்திரவம் ஓர்போதுறிற் சரீரமசையாமலிருத்தற்பொருட்டு, 'தளராதே' என்னும் விசேஷணம். 'கண்களைத் தன் மூக்கினுதிமேலே நிறுத்தி' என்றது; நேத்திரத்தினால் உருவமுதலிய விஷயங்களைக் கவரற்கவென்னும் நியமத்தின்பொருட்டு. கண்களைத் தன் மூக்கினுதிமேலே நிறுத்தின் மனமும் அதனுகாரத்தால் அம்மூக்கினுதிமேலே ஸ்திதியடையும்; அதனாற் சித்தத்திற்குப் பிரமத்தின்கண்ணே ஸ்திதிகூடாது; பிரமத்தின்கண்ணே சித்தத்திற்கு யாதொரு ஸ்திதியுண்டோ அதற்கே சமாதியென்று பெயர்; ஆதலால், பகவானுக்கஃதபிப்பிராயமன்று; மற்றியாதபிப்பிராயமெனின்? உருவமுதலியவற்றைக் கவரலாகாதென்பதாம். அப்படியே சுரோத்திரமுதலிய இந்திரியங்களின் வியாபாரமும் யோகத்திற்குப் பிரதிபந்தமாவதாற் சப்தமுதலிய விஷயங்களையுங் கவர்தலாகாதென்பதுமாம். பிரமசரியமாகிய குருசேவை, பிட்சையுண்டல்முதலிய பிரமசாரியின் விரதத்திலிருந்தென்பார், 'காமந்தன்னை விட்டகல' என்றும், சர்வகர்மங்களையுந் தியாகம்பண்ணுவது நமக்கு யுக்தமோ! யுக்தமல்லவோ என்றிவ்வாறு கர்மங்களின் றியாகத்தி லுளதாகுஞ் சங்கைக்குப் பயமென்று பெயர்; அச்சங்கைரூபமான பயத்தைச் சாஸ்திரத்தின் றிடநிச்சயத்தால் நிவிர்த்தித்தென்பார், 'பயந்தன்னை விட்டகல' என்றுங் கூறினர். 'மெய்ப்பயம்' என்றது, பிறர்க்குளதாகவேண்டுவது உசிதமாகலினென்க. 'மனமுள்ளடங்க' என்றது, மனத்துக்கு விஷயாகாரவிருத்தி சூனியமாதலை.

விஷயாசக்தனான இராகமுடைய புருஷன் தனது சித்தத்தில் நிரந்தரம் ஸ்திரீயைச் சிந்திக்கிறவனாயிருந்தும் அவளைப் பாத்துவரூப

மாகவும், ஆராதிக்கத்தக்கவளாகவுங் கவராமல் மகாராஜாவை யல்லது, யாதானுமொரு தெய்வத்தைப் பரத்துவரூபமாகவும், ஆராதிக்கத்தக்கதாகவுங் கவரானின்றனன். இவ்வதிகாரிபுருஷனே ஒரு பரமேசுரனான என்னிடத்தே சித்தமுடையவனாய் என்னையே ஆராதிக்கத்தக்க சொரூபமாகவுங் கருதுகின்றனனென்பது பாஷியார்த்தம்.

[அதிகாரியாயினோர்க்குச் சமாதிரூபமான யோகத்தின்கண்ணே ஊக்கமுண்டாக்குவித்தற்பொருட்டு ஸம்பிரக்ஞாதசமாதிரூபயோகத்தின் பலத்தை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

எண்டிகழும் யோகத்தை யிப்பரிசே யெப்பொழுதுங்
கொண்டுபயில் வார்கடைக்கா லென்னையே கூடுவரா
லுண்டியினின் மிகுவாருண் டுறப்பார்மிக் குறங்கிடுவார்
கண்டுயிலை யறத்துறப்பா ரவர்க்கிதுகை வாராதால்.

(இ-ள்.) எண் திகழும் யோகத்தை = (அப்பியாச வைராக்கியங்களின்) வலியினால் விளங்காநிற்கும் ஸம்பிரக்ஞாத சமாதியை— இப்பரிசே கொண்டு பூர்வஞ்சொன்ன நியமப்பிரகாரமாகவே கொண்டு—எப்பொழுதும்=நிரந்தரமும்— பயில்வார்=அப்பியாசியாநிற்பவர்—கடைக்கால்=முடிவில்(சித்தநிரோதமானவிடத்தென்றபடி)— என்னையே = (பரமநிர்வாணசொரூபமான) என்னையே—கூடுவர் = அடையாநிற்பர். — (சித்தநிரோதமானவிடம் ஸம்பிரக்ஞாதசமாதியின் பயனான அஸம்பிரக்ஞாதசமாதியென்றறிக.) [யோகாப்பியாசமுடைய புருஷர்க்கு ஆஹாராதிநியமங் கூறுகின்றார்.] உண்டியினின் மிகுவார்= உணவின்கண் மிக விருப்பமுடையவராய் அதனை மிகுந்துண்ணாநிற்பவரும்,—ஊண் துறப்பார்=உணவினை அத்தியந்த முண்ணாதொழிப்பவரும்,—மிக்கு உறங்கிடுவார்=மிகுந்து நித்திரை செய்பவரும்,—கண் துயிலை அறத் துறப்பார்=நித்திரையை அத்தியந்த மொழிப்பவரும், (ஆகிய)—அவர்க்கு=அவர்கட்கு—இது கைவாராது = இந்த யோகமானது சித்தியாது.—எ-று. ஆல் இரண்டும் அசைநிலைகள்.

உண்ட அதிக அன்னம் அசீரணமாய் ரசமுதலிய தாதுக்களின் விஷமவாயிலாக நாநாவிதமான சுரம், சூலைமுதலிய வியாதிகளையுண்டுபண்ணும்; அந்த வியாதிகளாற் பீடிதமான புருஷரால் யோகாப்பியாசஞ் செய்யக்கூடாது. அத்தியந்தம் அன்னத்தை யுண்ணாதொழிப்பவருக்கும், அத்தியந்தம் அற்ப அன்னமுண்பவருக்கும் அந்த



யோகம் சித்தியாது; எதனாலெனின்? அன்னத்தை யுண்ணாதொழிப்பதாலும், அத்தியந்தம் அற்பமாக வுண்பதாலுஞ் சரீரம் ரசமுதலிய தாதுக்களால் இரட்சிக்கப்படமாட்டாது; அதனால் அச்சரீரம் யாதானுமொரு காரியஞ் செய்வதிலுஞ் சமர்த்தமாகாது. அப்படியே பசியினாற் பீடிதமான புருஷனுடைய விருத்தியும் ஏகாக்கிரமாகாது; இப்படிப்பட்ட அசமர்த்த சரீரத்தால் யோகாப்பியாசஞ் சித்தியாது. அத்தியந்தம் நித்திரை யோகத்துக்குப் பிரதிபந்தமாவதால் அத்தியந்தம் நித்திரையுடைய புருஷனுக்கும், அத்தியந்தம் விழித்திருப்பதால் யோகாப்பியாச காலத்தில் அவசியமாக நித்திரை வந்து பொருந்தும் ஆதலால் உறங்காமல் அத்தியந்தம் விழித்தேயிருப்பவனுக்கும் அந்த யோகம் சித்தியாதென்க. (கசு.)

[மேலைச்செய்யுளில் ஆஹாராதிகளினியமமின்றிய புருஷனுக்கு யோகம் அடையப்படாதென்று வியதிரேகமாக அவ்வாஹாராதிகளினியமத்தில் யோகத்திற்குக் காரணத்தன்மை கூறி இப்போது அவ்வாஹாராதிகளை நியமமாகவுடைய புருஷனுக்கு அந்த யோகம் அவசியமடையப்படுமென்பதை அன்வயமாகவும் அவ்வாஹாராதிகளினியமத்தில் யோகத்தின் காரணத்தன்மையை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

துயிலு முணவுஞ் செய்தொழிலு மிகாமே குறைந்து
தோன்றாமே, பயிலு மவனே யோகத்தைத் தன்பாற் படுக்கும்
பான்மையா, னயிலும் பொறிவிட் டவ்வறிவு தன்பா லடங்கு
மப்பொழுது, குயிலு மியோகந் தலைநின்றா னென்றுங் கவ
லைக் கூறலாம்.

(இ-ள்.) துயிலும் உணவும் செய் தொழிலும் = நித்திரையும், ஆஹாரமும், தான் செய்யாநிற்குங் கமனாகமனரூபவியவகாரமும், மந்திரஜபம், வேதாந்தபாடமுதலிய கர்மங்களிற் பிரவிர்த்தியும் (ஆகிய இவை)—மிகாமே = (நியமத்துக்கு) அதிகப்படாமலும்,—குறைந்து தோன்றாமே=(நியமத்துக்குக்) குறைந்துண்டாகாமலுங் (கொண்டு) —பயிலுமவனே=அப்பியாசிப்பவனே—யோகத்தை=(சர்வ துக்கங்களையும் நாசம்பண்ணத்தக்கதான) சமாதியோகத்தை — தன்பால் படுக்கும் பான்மையான்=தன்னிடத் தகப்படுத்துந் தன்மையுடையனாம்.—(யோகாப்பியாசமுடைய புருஷன் தனது உதரத்தின் இரண்டு பாகங்களை அன்னத்தினாலும், மூன்றாம் பாகத்தைச் சலத்தினா

லும் பூரணமாக்கிப் பிராணவாயு சுகமாகச் சஞ்சரித்தற்பொருட்டு நான்காம் பாகத்தைச் சும்மாவைத்தல் வேண்டுமென்பது ஆஹார நியமம். சூரியாஸ்தமனந்தொடங்கி உதயகாலபரியந்தமான இரவைச் சமானமாக மூன்றுபாகஞ்செய்து அம்மூன்றுபாகத்துக்குள்ளே பிரதமபாகத்திலும், அந்தியபாகத்திலும் விழித்திருந்து மத்தியபாகத்தில் நித்திரைசெய்யவேண்டுமென்பது நித்திரையினியமம். யோசனை பரிமாணத்திற்கதிகம் நடக்கலாகாது: யோசனை பரிமாணத்திற்குள்ளேயே நடக்கவேண்டுமென்பது கமனுகமன ரூபவியவகார நியமம். வாக்காதி இந்திரியங்களின் சபலத்தன்மையைவிடுவதே ஜபமுதலிய கர்மங்களிற் பிரவிர்த்தியினியமமாம் என்க.) [முன் பிரசங்கத்தால் ஏகாக்கிரபூமியில் ஸம்பிரக்ஞாதசமாதியையருளிச்செய்து இப்போது நிரோதபூமியில் அஸம்பிரக்ஞாதசமாதியை யருளிச்செய்யும்பொருட்டுத் தொடங்குகின்றார்.] (யாதொருபொழுது) அயிலும் பொறி விட்டு = அநுபவிப்பவைகளான இகலோக பரலோக விஷயங்களிலுள்ள ஆசைகளை யொழித்து—அவ்வறிவு = அவ்வந்தக்கரணரூபமான சித்தமானது — தன்பால் அடங்கும் = பிரத்தியக்சைதந்நிய சொரூப ஆன்மாவின்கண்ணே நிருத்தமாமோ—அப்பொழுது = அந்தச்சமயத்தில் — குயிலும் யோகம் தலைநின்றான் என்று = இங்கே சொல்லாநின்ற சமாதியோகத்தில் ஆரூடனாயினனென்று—அவனைக் கூறல் ஆம் = அவனைச் சொல்லலாம்.—எ-று. ஆங்கு-அசைநிலை.

இங்ஙனங் கூறியவாற்றால், தோஷதிருஷ்டி பூர்வகமான பரவைராக்கியத்தில் அஸம்பிரக்ஞாதசமாதியின் சாதனரூபத்தன்மை சொல்லப்பட்டது. (கஎ)

[இப்போது சமாதியின்கண் நிரோதமானசித்தத்திற்கு உபமானமருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

இப்பரிசு பயில்கின்ற யோகிகா லிலாவிடத்து
மெய்ப்பரிசு நடுங்காத விளக்குப்போல் விளங்குமா
லெப்பொழுதாங் கவனுணர்வு வுண்மையிலே சென்றிசையு
மப்பொழுது பரமானந் தத்தினையு மடையுமால்.

(இ-ள்) இப்பரிசு பயில்கின்ற யோகி = (நிரோதபூமியின்கண்ணே அஸம்பிரக்ஞாதசமாதிரூபயோகத்தை) மேற்கூறியபிரகாரம் அநுஷ்டியாநின்ற யோகியின் (அந்தக்கரணமானது) — கால் இலா இடத்து = நிவாதஸ்தலத்தில்—மெய்ப் பரிசு நடுங்காத விளக்குப்போல் = உள்ளபடி அசையாதிருக்குந் தீபம்போல—விளங்கும் = (நிச்சலமாய்ச் சத்துவகுணத்தினதிகத்தன்மையாற்) பிரகாசியாநிற்கும்.— [இவ்வாறு சாமான்யரூபமாகச் சமாதியினையருளிச்செய்து இனி அவ்வஸம்பிரக்ஞாதநிரோதசமாதியை விஸ்தாரமாக நிரூபணஞ்செய்யத் தொடங்குகின்றார்.] எப்பொழுது = யாதொருபொழுது — அவன் உணர்வு = (நிரந்தரஞ் சிரத்தாபூர்வகமாக) யோகாப்பியாசஞ்செய்பவனுடைய சித்தமானது—இவ்வுண்மையிலே = சொப்பிரகாச சொரூபமான ஆன்மாவின்கண்ணே—சென்று இசையும் = சென்று உபசமமடையுமோ—அப்பொழுது = அந்தச்சமயத்தில்—பரமானந்தத்தினையும் அடையும் = (சுத்தமான அந்தக்கரணத்தினால் பிரத்தியக்சைதந்நியமான ஆன்மசாட்சாத்காரஞ் செய்தவனாய் அவ்வான்மாவின்கண்ணே) பரமமான சந்தோஷத்தையு மடையாநிற்பன்.—எ-று. ஆங்கு, ஆல், ஆல் அசைகள்.

சர்வவிருத்திகளின் நிரோதரூபமான அந்தக்கரணத்தின் பரிணாமத்தையே யோகசப்தத்திற் கர்த்தமாக அறியத்தக்கது. 'பரமானந்தத்தினையு மடையும்' என்றதனால், ஆன்மாவின் வேறான தேகேந்திரியாதி ரூபசங்காதங்களிலும், அச்சங்காதங்களின் போக்கியமான பதார்த்தங்களிலுஞ் சந்தோஷ மடையானென்பது அர்த்தாபத்தியினாற் பெறப்படுகின்றது. இதற்குப் பிரமாணம்-சுருதி; பிரமாமுதற்றம்பபரியந்தமான சர்வப்பிராணிகட்கும் ஆநந்தத்தைக் கொடுக்கும் யாதொரு பரமான்மாவான தேவனுண்டோ அத்தேவனைச் சாட்சாத்காரஞ்செய்து அந்த வித்துவானாகிய புருஷன் நான் கிருதார்த்தனாயினனென்றிவ்வாறானசந்தோஷத்தை யடைகின்றனனென்பது.

[மேலைச் செய்யுளில் யோகி பிரத்தியகான்மாவின்கண்ணே பரமாநந்த மடைவனெனக் கூறப்பட்டது. இப்போது அவ்வர்த்தசித்தியின்பொருட்டு ஏதுவையருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

யாதொன் றிந்தப் புலனறியா வளவி லின்பமா யிருக்கும்,
யாதொன் றினைச்சென் றடைந்தோர்கள் பின்னை யதனி னிரண்டாகார், யாதொன் றினைப்பெற் றவரிதனின் மிக்க தொப்பதுண்டென்னார், யாதொன் றிந்த வறிவுக்கே யறிவாய் நிற்கு மதினின்றோர்.

(இ-ள்.) யாதொன்று=யாதொரு சுகமானது—இந்தப் புலன் அறியா = இந்நேத்திரமுதலிய இந்திரியங்கட்கு விஷயமாகாததாய்—அளவு இல் இன்பம் ஆய் இருக்கும் = * திரிவிதபரிச்சேதரகித மான நிரதிசயபிரமரூபமாயிருக்குமோ,—யாதொன்றினை=யாதொரு சுகத்தை—சென்று அடைந்தோர்கள்=(யோகாப்பியாசவாயிலாகச்) சென்றடைந்தவர்கள்—பின்னை=பின்னர்—அதனின் இரண்டாகார் =அதினின்றுஞ் சலியார்களோ,—யாதொன்றினைப் பெற்றவர்=யாதொரு அவஸ்தாவிசேஷத்தை யடைந்தோர்கள்—இதனின் மிக்கது ஒப்பது உண்டு என்னார்=இதனினும் அதிகமானதும், சமானமானது மான லாபம் வேறொன்றுண்டென்று கருதார்களோ,—யாதொன்று இந்த அறிவுக்கே அறிவு ஆய் நிற்கும் = யாதொரு சுகமானது (இராசததாமதரூபமலத்தினின்றும் விடுபட்ட கேவலஞ்சத்துவப்பிரதான மான) இப்புத்திக்கே கவரும்படியான விஷயமாய்நிற்குமோ—அதில் நின்றோர்=அதன்கண்ணே ஸ்திதியுற்றோர்,—எ-று. இது குளகம். ()

[இதுவுமது.]

[வேறு.]

வஞ்சர் வேல்கொடு மார்பி னெறியினு
மெஞ்ச வேதழன் மூடி யெரியினு
நஞ்சி னாரழ னாக நலியினு
மஞ்சி டாரது வானந்த மாவதே.

(இ-ள்.) வஞ்சர்=வஞ்சகராயினோர் — வேல் கொடு=வேலைக் கொண்டு—மார்பின் எறியினும்=மார்பின்கண் ஊடுருவவீசிடினும்—எஞ்ச = (தாம்) குறைவை யடையும்படி—தழல் மூடி எரியினும்= தீயானது (தம்மைச்) சூழ்ந்தெரிந்ததாயினும்,—ஆர் அழல் நஞ்சின் நாகம் நலியினும்=நிறைந்த தீப்போலும் விஷமுடைய நாகமானது வருத்தினும் (தீண்டினுமென்றபடி)—அஞ்சிடார்=அஞ்சார்கள்; (சலனமுறாரென்றபடி)—அது ஆனந்தம் ஆவதே = சித்தத்தின் சர்வவிருத்திகளின்நிரோதரூபமான அச்சமாதியின்கண்ணே தாமடைந்துள்ள பிரத்தியகபின்னபிரமமானது நிரதிசயாநந்தரூபமாம் ஆகலின்.—எ-அ. ஏ-இரண்டும் அசைநிலைகள்.

நிரதிசயாநந்தரூபமாகலின், 'அதினின்றோர், அஞ்சிடார்' என மேலைச்செய்யுளோடு ஒட்டுக. 'வேல்' என்றது, இங்கே கைவேல், சூலம் நேமிமுதலிய ஆயுதங்களை. மகத்தான துக்கங்களாலுஞ் சலியா னென்னும் மூலசுலோகார்த்தத்தை இங்ஙனம்விரித்துக்கூறினர். 'இந்தப்புலனறியா' என்னும் விசேஷணத்தால், பிரமசுகம் விஷயஜன்ய சுகத்தினும் வேறென்பதைக் குறிப்பித்தனர். 'யாதொன் றிந்த வறிவுக்கே யறிவாய்நிற்கும்' என்னும் விசேஷணத்தால், பிரமசுகமானது சுழுத்திச்சுகத்தினும் வேறென்பதைக் குறிப்பித்தனர். எதனாலெனின்? சுழுத்தியவஸ்தையிற் புத்திலயமாகலின், சுழுத்திச்சுகம்புத்தியினாற் கவர்தற்பாலதன்று. சமாதியின்கண்ணே அப்புத்தி சர்வ விருத்திகளினின்றும் விடுபட்டதாயிருத்தலின் அச்சமாதியில் அப்பிரமசுகம் புத்தியினாற் கவர்தற்பாலதாம் ஆதலின் என்க; இவ்வார்த்தை கௌடபாதாசாரியாரானும், சுருதியினானுங் கூறப்பட்டிருப்பதுமன்றி வாசிட்டத்தும், "புந்திப்பார்வைக் கெட்டுவதாய்ப் புகலாபத் தெல்லாமிறந்த, விந்தப்பொருளை மோகத்தாலெய்தாதவர்சீ சீயிழிந்தோர்" என்று கூறப்பட்டிருப்பதுகாண்க.

இங்ஙனங்கூறிய சமாதி திடசமாதி என்றறிக. (௧௭)

[எவ்வுபாயத்தால் அந்தயோகம், அப்பியாசிக்கத்தக்கதென்று அருச்சுனனுக்கெழுந்துள்ள சிஞ்ஞாசையைப்பற்றி ஸ்ரீ பகவான் அவ்வுபாய மருளிச்செய்கின்றார் ]

போக மாய்த்துப் புலன்களைப் போக்கறுத்
தாக மாமெய் யறிவிடை யேயந்த
வேக மாய மனத்தினை மெல்லவே
யேக மாக விருத்திக லாதுநீ.

(இ-ள்.) (அருச்சுனா) போகம் மாய்த்து=(சங்கற்பத்தினாற் சநியாநின்ற) சர்வகாமங்களையும் (வாசனைகளோடுகூடப்) பரித்தியாகஞ் செய்து—(அப்படியே) புலன்களைப் போக்கு அறுத்து = (மனத்தினாலேயே) இந்திரிய சமூகங்களை (விஷயங்களிற்) செல்லுதலிற்றவிர்த்து—ஆகம் ஆம் மெய் அறிவிடையே=நிஜரூபமான பிரத்தியகான்மாவின்கண்ணே—அந்த மனத்தினை = அம்மனத்தை—வேகம் மாய =வேகங்கெட—இகலாது=(உன்னைப்) பகையாமல்—மெல்லவே= பூமிகாஜயக்கிரமமாகவே—ஏகம் ஆக=ஐக்கியமாக—நீ இருத்து=நீ நிரோதம்பண்ணுவாய்.—எ-று.

போகத்துக்கேதுவாகிய காமத்தை இங்கே ஆகுபெயரால், 'போகம்' என்றனர். 'மெய்யறிவிடையே, மனத்தினை மெல்லவே, யேக

* திரிவிதபரிச்சேதமாவன=தேசபரிச்சேதம், காலபரிச்சேதம், வஸ்துபரிச்சேதங்களென்னும் இவை.

மாக விருத்து' எனவொட்டுக. விளைவிலடைவோமென்று கருதி வதை யொழித்தென்பார், 'வேகமாய' என்றும், சாஸ்திரத்திற் சொன்ன வுபாயமல்லாத வழிகளால் அஃதுன்வசமாய் நிரோதமாகா தாகலின் அங்ஙனஞ்செய்யாதென்பார், 'இகலாது' என்றுங்கூறினார்.

இகலோக, பரலோகங்களிலுள்ள விஷயங்கள் அனர்த்தத்துக் கேதுவாதலால் அத்தியந்தந்தீயவாம்; இப்படிப்பட்ட தீயவிஷயங் களிலுள்ள யாதொரு அசோபனத்தன்மையுண்டோ அதனைப் பாரா மல் அவ்விஷயங்களிடத்து இவை மிகவும் ரமணியமா மென்றிவ்வா றுண்டாகுஞ் சோபனத்தன்மையின் அத்தியாசத்திற்குச் சங்கற்ப மென்றுபெயர்; அச்சங்கற்பத்தால் இவ்விஷயம் நமக்குக்கிடைக்குமா வென் றிவ்வாறுண்டாகும் விஷயாபிலாஷை காமமாம். அத்தியான்ம சாஸ்திரவிசாரத்தால் விஷயங்களிடத்து இவை தீயவையென் றுண் டாகும் நிச்சயத்தால் நல்லவையென்னும் அத்தியாசம் நாசமாம்; அன் பின் மாலை, சந்தனம், வனிதைமுதலான திருஷ்ட விஷயங்களிலும், அமிர்தபானம், அப்சரமுதலிய அதிருஷ்ட விஷயங்களிலுமுள்ள சர்வகாமங்களையும் நாயருந்திக் கக்கிய சோற்றைப்போலச் சூட்சும வாசனையோடுகூடப் பரித்தியாகஞ்செய்து காமத்தின் வழியாகவே விஷயங்களிற் பிரவிர்த்தித்திருந்த நேத்திரமுதலிய இந்திரிய சமூ கங்களை உருவமுதலிய சர்வவிஷயங்களினின்றும் நிவிர்த்தித்துப் பூமிகையின் ஜயக்கிரமத்தாற் றனதுமனத்தை நிரோதித்தல்வேண்டு மென்பது கருத்து.

அப்பூமிகையின் ஜயக்கிரமம், "வாக்கது மனத்திடை வைக்கு மம் மனம், போக்கிடும் புந்தியுட் புந்திமானிலே, யாக்கிடு மந்தமா னிவையனைத்தினுந், தாக்கறுஞ் சாந்தமாந் தன்னிற் சாந்தமாம்" என்னும் பிரமகீதையின் செய்யுளாலறிக. (கஅ)

[இருவுமது.]

வாங்கி யைம்பொறி நின்ற மனத்தினை
நீங்கிடா வகை நின்னு ளிருத்தியே
தீங்கி யாவையுஞ் சிந்தை செயாமையாம்
பாங்கி யாததுவே பயில் வாயரோ.

(இ-ள்.) ஐம்பொறி நின்ற மனத்தினை வாங்கி = (நேத்திரமுத லிய இந்திரியவாயில்களாற் புறம்போந்து) உருவமுதலிய பஞ்சவிஷ யங்களிற் சஞ்சரித்துநிற்கின்ற மனத்தை (விஷயத்தின் ஷேஷதிரு



ஷ்டிமுதலிய வைராக்கியத்தின் ஏதுவாதிய வுபாயங்களால் உள்ளே) இழுத்து—நீங்கிடா வகை=லயரூபமான நித்திரையடையாதபடி— நின்னுள் இருத்தியே=(சர்வவுபாதிகளினின்றும் விடுபட்ட) பிரத்தி யகான்மாவின்கண்ணே நிரோதமாகப்பண்ணி — தீங்கு யாவையும் சிந்தை செயாமை ஆம்=(சமாதிக்கு யாதாமொரு சிந்தனையும்) விக் கினமாகலின், யாதானும் ஓர் அநான்மபதார்த்தத்தையாவது, அல் லது பிரத்தியகான்மாவையாவது கொஞ்சமும் விருத்திக்கு விஷய மாக்காமையாகிய—பாங்கு யாது = தன்மையினையுடைய அப்பியாச மெதுவோ—அதுவே பயில்வாய்=அவ்வுபாயத்தையே பழகுவாய்.— எ-று. அரோ-அசைநிலை.

'யாவையுஞ் சிந்தை செயாமையாம்' என்றதற்கு, அஸம்பிரக் ஞாதசமாதிகாலத்தில் அநான்மாகாரவிருத்தி உற்பன்னமாயின் அச் சமாதியினின்றும் வெளிப்பட்டதாம். ஆன்மாகாரவிருத்தி உற்பன்ன மாயின் அது ஸம்பிரக்ஞாதசமாதியேயாம்; அஸம்பிரக்ஞாதசமாதி இன்றாய்விடும்; ஆகலின், அஸம்பிரக்ஞாதசமாதியை ஸ்திரத்துவஞ் செய்தற்பொருட்டு யோகியாகிய புருஷன் ஆன்மாகார விருத்தியை அல்லது, அநான்மாகாரவிருத்தியை உண்டுபண்ணலாகாதென்பது கருத்து.

'போகமாய்த்து' என்னுஞ் செய்யுளாலும், 'வாங்கியைம்பொறி' என்னுஞ் செய்யுளாலும் ஸ்ரீ பகவானால் அருளிச்செய்த அர்த்தம் ஸ்ரீ கௌடபாதாசாரியராலும் அருளிச்செய்யப்பட்டிருக்கின்றது; அஃதெங்ஙனமெனின்? காமம், போகமென்னும் இரண்டின்கண் விட் சிப்தமான மனத்தை யோகியாகிய புருஷன் வைராக்கியம், அப்பியா சம் என்னும் உபாயங்களால் பிரத்தியகான்மாவின்கண்ணே நிருத்த மாகச்செய்க; இனி இதனையே விரித்தருளிச்செய்கின்றார். சப்தாதி விஷயங்களின் அவஸ்தை இருவகைத்தாம்: ஒன்று சிந்தியமானம். மற்றொன்று [ஹ-] புஜ்யமானமாம். சப்தாதிவிஷயங்களைச் சிந்திப் பது சிந்தியமானவஸ்தையென்றுபெயர். அச்சப்தாதிவிஷயங்களைப் போகிப்பதற்குப் புஜ்யமானவஸ்தையென்றுபெயர்; அவ்விரண்டவஸ் தைகளும் மனத்தின் விட்சேபத்திற்கே ஏதுக்களாம்; ஆகலின், வைராக்கிய அப்பியாசரூபவுபாயங்களால் மனத்தின் விட்சேபங்களை நிவிர்த்திசெய்க, வைராக்கியவுபாயமாவது;— அவித்தையினாற் பண் ணப்பட்ட சர்வதொய்தப்பிரபஞ்சமும் பரிச்சின்னமாகலின் துக்க ரூபமேயென்றிவ்வாறு நிரந்தரஞ் சிந்திப்பதாம். அப்பியாசவுபாயமா

வது;—சர்வசகத்தும் ஜநநாகிதமான பிரமமே: பிரமத்தினும் வேறே
வஸ்துவாக அற்பமுமில்லை என்றிவ்வாறு குருசாஸ்திரங்களின் உப
தேசத்தினநந்தரம் விசாரித்து அத்துவிதீயப்பிரமத்தினும் விபரீத
மான இத்தொய்தத்தைக் காணுமையாம்; இவ்வாருன வைராக்கிய
பாவனை, தத்துவதரிசனமென்னும் இரண்டுபொயங்களால் விஷயங்
களினின்றும் நிவிர்த்தித்த சித்தமானது ஓர்போது நாடோறும் லய
மடைந்துவந்த அப்பியாசவசத்தால் லயத்தினபிமுகமாம்; லயபாவத்
தை அடைவது எதனிடம் அதற்கு லயமென்று பெயர்; இப்படிப்பட்
டது சுழுத்தியாம்; அச்சுழுத்திருபமான லயத்தில் இம்மனமானது
சுப்ரசந்நமாம் ; [சர்வ ஆயாசங்களினின்றும் விடுபட்டதாமென்று
பொருள்.] இப்படிப்பட்ட சுப்ரசந்நமனத்தையும் யோகியாகிய புரு
ஷன் நிக்கிரகஞ் செய்க: சங்கை;—சுழுத்தியின்கண் மனமானது
சர்வவிட்சேபரூப ஆயாசங்களினின்றும் விடுபடுமாயின் எதன்பொரு
ட்டு அதை நிக்கிரகித்தல் வேண்டுமெனின்? அதற்குக் கூறுகின்றூர்.
எப்படிக்காமமானது விஷயகோசரமான பிரமாணமுதலிய விருத்தி
களை யுண்டுபண்ணிச் சமாதிக்கு விரோதியாமோ அப்படி லயமும்
நித்திராரூபவிருத்தியை யுண்டுபண்ணிச் சமாதிக்குவிரோதியேயாம்.
சர்வவிருத்திகளி னிரோதமே சமாதியென்று சொல்லப்படுகிறதாத
லால் காமமுதலியவற்ருற் பண்ணப்படுவதான விட்சேபத்தினின்
றும் எப்படி அம்மனம் நிரோதஞ்செய்ய யோக்கியமோ அப்படிப் பரி
சிரமமுதலியவற்ருற் பண்ணப்பட்ட லயத்தினின்றும் அம்மனம்
நிரோதிக்க யோக்கியமாம்; ஆகலின், நித்திரையின் சேஷம், அதிக
போஜனம், அதிப்பரிசிரமமுதலிய லயத்தின் காரணங்களை நிரோ
தஞ்செய்து வெளிப்படும் பிரயத்தனத்தால் அச்சித்தத்தை லயத்தி
னின்றுஞ் சாக்கிரமடையப்பண்ணுக; இவ்வாறு லயத்தினின்றுஞ்
சாக்கிரமடையப்பண்ணிய சித்தமானது ஓர்போது நாடோறும் பழகி
வந்த சாக்கிரத்தின் அப்பியாசவசத்தால் மீண்டுங் காமபோகங்களில்
விட்சிப்தமடையின் பூர்வஞ்சொன்ன வைராக்கிய பாவனையினுலும்,
தத்துவ சாட்சாத்காரத்தினுலும் அச்சித்தத்தை நிருத்தஞ்செய்க;
இவ்வாறடிக்கடி லயவிட்சேபமென்னும் இரண்டு தோஷங்களினின்
றும் நீக்கப்பட்ட சித்தமானது பிரமரூபமான சமபாவத்தையடை
யாமல் மத்தியில் ஸ்தப்தமாய்விடும்; அந்த ஸ்தப்த பாவத்தைக் கஷாய
தோஷமென்பர்; அக்கஷாயமென்னுந்தோஷம் பிரபலமான வாசனு
ரூபமாகிய இராகத்தின்வசத்தா லடையப்படும்; அக்கஷாயதோஷத்



தோடுகூடிய சித்தத்தை யோகியானவன் சமாகிதசித்தத்தால் விவே
கித்தறிக; அறிந்தபின்னர் இந்த நமது சித்தமானது இப்போது சமாதி
யடையவில்லையென்று நிச்சயித்து லயவிட்சேப தோஷங்களினின்
றுஞ் சித்தத்தை நிவிர்த்தித்ததுபோலக் கஷாயதோஷத்தினின்
றும் நிவிர்த்திசெய்க. அதன்பின் லயவிட்சேபகஷாய தோஷங்களி
னின்றும் விடுபட்டசித்தமானது சமரூபமான பிரமத்தையே அடை
யாநிற்கும்; அச்சமரூபமான பிரமத்தையடைந்த சித்தத்தை யோகி
யானவன் கஷாயமென்ருவது, லயமென்ருவது பிராந்திகொண்டு
சலிப்பிக்கலாகாது: பின்னையோ தைரியத்தோடுகூடிய புத்தியினுல்
லயகஷாயங்களினும் வேறென்று அச்சமரூபப்பிரமத்தின் பிராப்தியி
லேயே அத்தியந்தம் பிரயத்தனத்தால் அச்சித்தத்தை ஸ்தாபனஞ்
செய்க. அன்றியும், அந்நிரோதசமாதி எப்படியும் பரமசுகத்தின்
* அபிவியஞ்சகமாம்; அப்படியாணுலும் யோகியானவன் அந்நிரோத
சமாதியின்கண் அச்சுகத்தை ¶ ஆஸ்வாதம் பண்ணலாகாது; இதற்
குப்பொருள்: இவ்வளவுகாலபரியந்தம் நான் சுகியாயிருந்தேனென்
றிவ்வாறு சுகத்தின் ஆஸ்வாதரூபவிருத்தியை யோகி உண்டுபண்ண
லாகாதென்பது; உண்டுபண்ணில், அவ்வஸம்பிரக்ஞாதசமாதிக்குப்
பங்கமாம். அன்றியும், பிரக்ஞையினுல் யாதொருசுகம்பிரதீதியாகுமோ
அது அவித்தையினுற்கற்பிதமாதலால்மித்தையேயென்னும்பாவனையி
னுல் யோகியானவன் சவிகற்ப சுகாகாரவிருத்திருபமாகிய பிரக்ஞை
யோடு கூடாமல் அதைப் பரித்தியாகஞ் செய்யவேண்டும். சகலவிரு
த்திகளினின்றும் விடுபட்ட சித்தத்தால் யாதொரு சொரூபசுகம்
அநுபவமாமோ அவ்வநுபவத்தை யோகியானவன் பரித்தியாகஞ்
செய்யலாகாது. யாதொருகாலத்திற் சித்தமானது லயம், கஷாயம்,
விட்சேபம், சுகாஸ்வாதமென்னும் இந்நான்கு தோஷங்களினின்றும்
விடுபடுமோ அக்காலத்தில் அச்சித்தமானது சமரூபமான பிரமத்தை
யடையாநிற்குமென்று கௌடபாதாசாரியரால் அருளிச்செய்யப்பட்
டிருக்கிறது.

இவ்வாருன யோகத்தைச் சாட்சாத் சுருதியுமருளிச்செய்தது.
சுருதியின் பொருள்;—யாதொருகாலத்தில் மனத்தோடுகூட ஞா
னேந்திரியங்களைந்தும் நிரோதத்தையடையுமோ, அப்படியே புத்தி
யும் யாதொரு சேஷ்டையுஞ் செய்யாதோ அந்தஸ்திரமான இந்திரி

* அபிவியஞ்சகம்=பிரகாசகம்.

¶ ஆஸ்வாதம்=அநுபவம்.

யங்களின் ஞானத்தை யோகசாஸ்திரமறிந்தோர் பரமகதியென்றும், யோகமென்றுங் கூறுவர். அந்தக்காலத்தில் பிரயத்தனமின்றியே சித்தமானது பிரமாகாரத்தன்மையை யடையாநிற்குமென்பது; இம் மூலபூதமான சுருதியை யங்கீகரித்துப் பதஞ்சலி பகவானும் யோக மானது சித்தவிருத்திநிரோதமென்று சூத்திரமருளிச்செய்தனர். இங்கே பகவானுஞ் சுருதி, சூத்திரங்களி னநுசாரமாகவே அருளிச் செய்தனரென்றறிக. (௧௬)

[இவ்வாறன யோகாப்பியாச வலியால் யோகியின் மனமானது பிரதியகான்மாவின்கண்ணே நிரோதமடைந்ததால் அவனுக்குள தாகும்பயனை இப்போது அருளிச்செய்கின்றார்.]

தேறு நெஞ்சின னாய்த்தன் செயலலால்
வேறு கண்டறி யாமெய் யறிவின
லூறி லிந்த வுடம்புடன் வேறுபெற்
றேறி நின்றவ னேயின்ப மெய்துவான்.

(இ-ள்.) தேறும் நெஞ்சினன் ஆய்=தெளிந்த சித்தத்தையுடை யவனாய்—தன் செயல் அலால் வேறு கண்டு அறியா மெய் அறிவி னால்=(சர்வஜகத்தும் பிரமரூபமேயென்னும்) தனதுசெயல் மாத்திர மன்றி வேறொன்றைக் கற்பித்தறியாத தத்துவஞானத்தினால்— ஊறு இல்=இடையூறு ஒன்றுமில்லாமல்—இந்த உடம்புடன் வேறு பெற்று=இவ்வுடம்பினுடனே இதற்கு விலட்சணமான பிரமத்தை யடைந்து—ஏறி நின்றவனே=(ஞானபூமியின் முடிவில்) ஆரூடனாய் நிற்குஞ் சீவன்முக்தனே—இன்பம் எய்துவான்= (பிரமபூதமான) நிரதிசயாநந்தமடைவன்.—எ-று.

விட்சேபவேதுவான இராஜோகுணமும், லயவேதுவானதமோ குணமுங் கழன்றதாற் சர்வவிருத்திகளுமொழிந்து நிருத்தமாய்ச் சம்ஸ்காரமாத்திரமாக அவசேஷித்த மனத்தினனாகி யென்பார், 'தேறநெஞ்சினனாய்' என்றார். 'தன்செயலலால் வேறுகண்டறியா' என்பது, மெய்யுணர்வின் விசேஷணம். மெய்யுணர்வின் செயலாவது அகந்தை, மமதைரூபச் செருக்ககற்றிச் சித்தமான சிவபாவைக்கியந் தோற்றுவிப்பதும், சர்வஜகத்தும் பிரமமாத்திரமெனத் தோற்றுவிப் பதுமாம். 'வேறு' என்றது, அகம்விருத்திவிஷயமான பஞ்சகோசங்க ளையும், இதம்விருத்தி விஷயமான ஆகாசாதிகளையும். 'ஊறு' என் றது, லயம் விட்சேபமுதலிய பிரதிபந்தங்களை. (௨௦)



[முன்சொன்ன யோகியின் ஆநந்தத்தை வெளிப்படையாக நிரு பணஞ்செய்கின்றார்.]

[வேறு.]

இழியா திந்த யோகத்தை யென்றுந் தலைநின் றவனென்று
மழியா வின்பத் தினையின்பத் தாலே யடையு மதுநிற்க [ளே
வொழியா வெல்லா வுயிர்களுந்தன் னுள்ளே காணு மவற்றுள்
கழியா தெங்குந் தானின்ற பரிசுந் தெரியக் காணுமால்.

(இ-ள்.) இழியாது=(அடிக்கடி பிரதிபந்த முதிப்பதால் மன மானது சலித்துத் தானேறிய யோகத்தினின்றும்) இறங்கிவிடா மல்—இந்த யோகத்தை=“போகமாய்த்துப் புலன்களைப்போக்கறு த்து” என்பதுமுதலிய வாக்கியங்களால் பூர்வம் அருளிச்செய்த யோகத்தை—என்றும் = சர்வதா—தலைநின்றவன் = தலைமையாக (அநுஷ்டித்து) நிற்பவன்—என்றும் அழியா இன்பத்தினை=எப்பொ ழுதுங் கெடாத பிராமாநந்தத்தை—இன்பத்தாலே அடையும்=அநா யாசமாகவே அநுபவியாநிற்பன்.—('இழியாது' என்றதால், சிட்டுக் குருவி தர்ப்பைநுனிபோலுந் தனது மூக்கினாற் சமுத்திர சலத்தைத் துளிதுளியாகக் கவர்ந்து கரையில்விட்டு அதுவற்றிப் பாழாகும்படி பண்ணுவாமென்று தான்கொண்டதைரியம்போலும் தைரியத்தோடு கூடியென்பது பெறப்படுகின்றது. இன்பத்திற்கு, 'என்றுமழியா' என்னும் விசேஷணந்தந்தது ஐந்தியமான விஷய சுகத்தினும் வேறு படுத்தற்பொருட்டு; இப்படிப்பட்ட நிரதிசய பிரமாநந்தத்தை யோகி சர்வவிருத்திகளுமிறந்த சித்தத்தால் லய, விட்சேபங்களினும் விலட் சணமாக அநுபவியாநிற்பன். விட்சேபம் இருக்குமாயின் விருத்தி அவசியமுண்டாம். லயம் உண்டாமாயின் மனமானது சொரூபமா கவே அசத்தாம்; ஆதலால் லய, விட்சேபங்களினும் விலட்சணமாகச் சர்வவிருத்திகளினின்றும் விடுபட்ட சூட்சுமமான மனத்தினால் கேவ லம் அஸம்பிரக்ஞாதசமாதியிலேயே சுகாநுபவம் யோகிக்குளதாமெ ன்க. 'இன்பத்தாலே' என்னுமொழியால் பிரதிபந்தமான அந்தராயங் களினிவிர்த்தியருளிச்செய்தனர்; வியாதி, ஸ்தியானம், சமுசயம், பிர மாதம், ஆலசியம், அவிரதி, பிராந்திதரிசனம், அலப்தபூமிகத்வம், அநவஸ்திதத்வம் இவ்வொன்பது பிரகாரமான சித்தவிட்சேபங்கள் அந்தராயமெனப்படும். யோகத்தினின்றும் பகிர்முகமாக்குவது சித்த விட்சேபமெனப்படும்; அச்சித்தவிட்சேபமே யோகத்திற்கு விரோதி யாவதால் அந்தராய மெனப்படும். அவைகளிலும் சமுசயம், பிர

ந்தி தரிசனமென்னும் இவ்விரண்டும் விருத்திநிரோதரூபயோகத்திற்கு நேரே விரோதிகளாம். வியாதிமுதலிய மற்றை நிமித்தங்களோ சர்வதாவிருத்தியின் * சஹசரிதமாவதால் அவ்விருத்திக்கேவிரோதிகளாம். க - வாத, பித்தமுதலிய தாதுக்களின் விஷயத்தன்மை நிமித்தத்தால் உளதாகாநிற்குஞ் சுரமுதலிய விகாரங்கள் வியாதி. உ-யோகசாஸ்திரம் அறிந்தோர் பயில்வித்தும் சீடனிடத்து ஆசன முதலிய கர்மங்களின் அயோக்கியத்தன்மை ஸ்தியானம். ந - இந்த யோகமானது நமக்குச் சித்தமாகும்படி செய்ய யோக்கியமோ! அல்லவோ என்றிவ்வாறு பாவாபாவரூப இருவித விஷயமுடைய ஞானம் சமுசயம். சு-சமாதியின் சாதனங்களை யநுஷ்டிக்கும்படியான சாமர்த்தியமிருந்தும் அநுஷ்டியாதிருத்தல் பிரமாதம்; மற்றோர் விஷயத்திற் பிரவிர்த்திப்பதால் யோகசாதனங்களிலுள்ள உதாசீனத்தன்மை பிரமாதமென்று பொருள்; ரு - இவ்வுதாசீனத்தன்மை இல்லாதிருந்தும் கபமுதலிய தாதுக்களின் விருத்தியினாலும், தமோகுணத்தின் விருத்தியினாலும் சரீரத்தின்கண்ணும், சித்தத்தின்கண்ணும் உளதாகுங் குருத்துவத்திற்கு ஆலசியமென்று பெயர்; இவ்வாலசியம் வியாதிரூபமாகப் பிரசித்தமில்லையாயினும் யோகத்தின்கட் பிரவிர்த்திக்கு விரோதியேயாம். சு - யாதானும் ஒரு விஷயவிசேஷத்தில் சித்தத்திற்கு நிரந்தரம் அபிலாஷை அவிரதியாம். எ-யோகத்திற்குச் சாதனமல்லாதவற்றில் சாதனத்வபுத்தியும், யோகசாதனங்களிடத்து யோகசாதனமல்லவென்னும் புத்தியும் பிராந்திதரிசனமாம். அ - சமாதியின் ஏகாக்கிரத்தன்மையாகிய பூமிகையின் அலாபத்திற்கு அலப்தபூமிகத்வமென்றுபெயர். இதற்கு க்ஷிப்தம், மூடம், விக்ஷிப்தங்களின் பிராப்தியென்று பொருள். கூ-அச்சமாதிபூமியடையப்படினும் தனது பிரயத்தனக்குறைவினால் சித்தத்திற்கு அப்பூமியில் ஸ்திதியடையாமை அநவஸ்திதத்வமாம்; இவ்வொன்பது பிரகாரமான சித்தவிட்சேபங்களை யோகமலமென்றும், யோகப்பிரதிபட்சமென்றும், யோகாந்தராயமென்றுங் கூறுவர்.) [இவ்வாறான நிரோத சமாதியினால் துவம்பதத்தின் லட்சியார்த்தரூபமும், தற்பதத்தின் லட்சியார்த்தரூபமுமான சுத்தசேதனத்தின் சாட்சாத்காரம் உண்டானதன்பின்னர் அந்தலட்சிய சேதனங்களின் ஏகத்தன்மையை விஷயமாகவுடையதும், தத்வமசியாதி வேதாந்த வாக்கியங்களால் ஜநிியமாவதுமான நிருவிகற்பசாட்சாத்காரரூப அந்தக்கர

* சஹசரிதம்=கூடவிருப்பது.



ணத்தின் விருத்தி உண்டாகாநிற்கும்; இதனை வேதமறிந்த பெரியோர் பிரமவித்தையென்பர்; அத்தத்வசாட்சாத்காரப் பிரமவித்தையினால் அவித்தை, அதன் காரியமான பிரபஞ்சம் இவைகளை நிவிர்த்தித்து இவ்வதிகாரி புருஷன் அபரிச்சின்ன பிரமரூபமான சுகத்தையநுபவியாநிற்பனென்னும் இச்சர்வார்த்தங்களையும் ஸ்ரீ பகவான் பிரதிபாதனஞ் செய்யத்தொடங்கி முன்னர் துவம்பதத்தின் லட்சியார்த்தத்தை நிரூபணஞ் செய்கின்றார்.] அது நிற்க—ஒழியா எல்லா உயிர்களும் = ஒன்றுந்தவிராமற்சர்வபூதங்களையும் — தன் உள்ளே காணும்=ஆன்மாவிடத்திருப்பதாகப் பார்ப்பன்;—அவற்றுள்ளே= அச்சர்வபூதங்களினுள்ளே—ஒழியாது எங்கும்=நீங்காமலெங்கும்— தான் நின்ற பரிசும்=தான் நிற்கின்ற தன்மையையும்—தெரியக்காணும்=அபரோட்சமாகப் பார்ப்பான்.—எ-று. ஆல்-அசைநிலை.

சாட்சியாகிய ஆன்மாவின்கண் அத்தியாசமாயிருக்குஞ் சாட்சியரூபமான சர்வபூதங்களையும் அச்சாட்சியாகிய ஆன்மாவின்கண்ணே கற்பிதரூபமாகச் சாட்சாத்கரிப்பன். ஸ்தாவரஜங்கம ரூபமான சர்வபூதங்களிலும் சாட்சியாகிய ஆன்மாவைச் சாட்சியமான அவற்றிற்குப் பிருதக்காகவே சாட்சாத்கரிப்பனென்பது கருத்து. (உக)

[இப்போது சுத்ததற்பதார்த்தத்தை நிரூபணஞ் செய்கின்றார்.]

**யாவ** னொருவ னென்னையெல்லா வுயிர்களிடையு மென்னிடையே, மேவ வெல்லா வுயிர்களையும் வேறு காதே மெய் காண்பான், றேவர் பகைமுன் செகுத்தோனே யவன் யாதே னுஞ் செய்திடினு, மாவ வவனு கின்றேன்யா னதுநீ யேது மையுறேல்.

(இ-ள்.) தேவர் பகை முன் செகுத்தோனே=தேவர்களின் சத்துருக்களாகிய அசுரர்களை முன்னே அழித்த அருச்சுனா—யாவன் ஒருவன்=எந்த யோகியானவன்—என்னை = (தத்துவமஸிவாக்கியத்தில் தற்பதார்த்தரூபனான) என்னை — எல்லா உயிர்களிடையும் =சர்வபூதங்களிடத்தும்—என்னிடையே=(பரமேசுரனான) என்னிடத்தே—மேவ எல்லா உயிர்களையும்=பொருந்தச் சர்வபூதங்களையும்—வேறுகாதே மெய் காண்பான்=அபேதமாகவேசமுசய விபரீதமில்லாமற் பார்ப்பனோ—அவன்=அந்தயோகிபுருஷன்—யாதேனும் செய்திடினும் = எவ்வகைப்பட்ட வியவகாரங்களைச் செய்யினும்— யான் அவன் ஆகின்றேன்=(சர்வபூதங்களிலுமுள்ள) தற்பதார்த்தரூபனான நான் துவம்பதார்த்தரூபனான அவனாகவாகிறேன்;— அது

நீ எதும் ஐயுறேல்=அவ்விஷயத்தில் அருச்சுனு நீ சிறிதுஞ் சந்தேக முறுதொழிதி.—எ-று.

'ஆவ' என்பது, ஆவா என்னும் வியப்புச்சொல்; இது ஞான நிஷ்டையின் மகிமையை நாடிவந்ததென்றறிக. பரமேசுரனுன என்னைச் சர்வப்பிரபஞ்சத்திலுஞ் சத்தாஸ்புரணரூபமாகவும், என்னிடத்து ஆரோபிதமான சர்வப்பிரபஞ்சத்தையும் அதிஷ்டானரூபனுன எனக்கு அந்நியமில்லாமலும் அபரோட்சமாக யோகி அறிவனென்பார், 'யாவனெருவ னென்னையெல்லா வுயிர்களிடையு மென்னிடையே, மேவவெல்லா வுயிர்களையும் வேருகாதே மெய்காண்பான்' என்ருர். 'அவனுகின்றேன் யான்' என்றது, முன்சொன்ன சுத்ததத்துவம் பதார்த்தங்களின் அபேதரூபமான தத்துவமஸிவாக்கியார்த்தமென்க. நிஷித்தகர்மங்களிற் பிரவிர்த்திப்பிக்கத்தக்கவைகளான இராகத்துவேஷங்கள் ஞானியினிடத்தில்லாமையால் அவனுக்கு நிஷித்தகர்மங்களிற் பிரவிர்த்திகூடாதேனும் நிஷித்த கர்மங்களிற் பிரவிர்த்தி அவனுக்கங்கீகரித்து ஆன்மஞானத்தைத் துதித்தற்பொருட்டு, 'அவன் யாதேனுஞ் செய்திடினும்' என்று ஸ்ரீ பகவான் அருளிச்செய்தனரொன்றறிக. (உஉ)

[பிரமநிஷ்டர்களுள்ளே சர்வபூததயாபரனுன பிரமநிஷ்டனே சிரோஷ்டனென் றருளிச்செய்கின்ருர்.]

இடரா னதுதா னின்பந்தான் யாவர்க் கேனு மாயிடுமேற்
படரா நின்ற வவைதானு முறுவான் பரம யோகியென்பான்
சுடரா நின்ற வடிவேலோய் துணிநீ யென்று துழாயலங்க
லடரா நின்ற நெடுமுடியோ னருளிச் செய்ய வவனுரைப்பான்.

(இ-ள்) இடரானதுதான்=துக்கமாதல்,—இன்பந்தான்=(அல்லது) சுகமாதல்—யாவர்க்கேனும் ஆயிடுமேல்=யார்க்கேனும் வருமானுல்—படராநின்ற அவை=அந்நியர்க்குவாராநின்ற அச்சுகதுக்கங்களை—தானும் உறுவான் பரமயோகி என்பான்=(தன்னிடத்திற்போலத்) தானும்அடையாநிற்பவன்யாவன் அவன் மேலானயோகியென்று சொல்லப்படுவான்;—சுடராநின்ற வடி வேலோய்=ஒளிராநின்ற கூர்மைபொருந்திய வேலையுடைய அருச்சுனு — நீ துணி என்று=நீ நிச்சயிப்பாயென்று—துழாய் அலங்கல் அடராநின்ற நெடுமுடியோன் அருளிச்செய்ய=துளபமாலை நெருங்கியுள்ள நீண்டமுடியையுடைய ஸ்ரீ பகவான் உபதேசிக்க—அவன் உரைப்பான்=அதுகேட்ட அருச்சுனன் வினவுவான்.—எ-று.



'தானுமுறுவான்' என்றது, சர்வான்மதரிசனத்தாலென்க. இப்படியே வாசிட்டத்தும், "சுகமுற்ருேர் பாலிருக்கிற் சுகமேசேர்வன் றுயருற்ருேர் பாலிருக்கிற் றுயரோசேர்வன், சகமுற்று நட்பாலே ஞாலாலே தவறுறநோ யற்ருவி தழைத்துவாழ்ந்தேன்" என்று ஸ்ரீ புசுண்டர் அருளிச்செய்திருப்பதுகாண்க. (உங)

[பூர்வம் ஸ்ரீ பகவானுல் விஸ்தாரமாக அருளிச்செய்யப்பட்ட மனோநிரோதரூபமான யோகத்தை நிஷேதிப்பவனுய் அருச்சுனன் வினவுகின்ருன்.]

எல்லா வுயிரு மொன்ருகப் பார்ப்ப தியோக மெனவுரைத்தாய், மல்லார் தோளா யிதற்குநிலை காணேன் மனமா கின்ற விது, நில்லா வியற்கைத் தாய்ப்புலனைக் கலக்கு மதனை நிலைநிறுத்த, லொல்லா தெனவுங் காற்றடக்கற் கொக்கு மெனவு முணர்கின்றேன்.

(இ-ள்.) மல் ஆர் தோளாய்=வலிபொருந்தியபுயத்தையுடைய ஸ்ரீ பகவானே—எல்லா உயிரும் ஒன்ருகப் பார்ப்பது=சர்வபூதங்களையுஞ்சமமாகப்பார்ப்பது—யோகம் என உரைத்தாய்=யோகமொன்றருளிச்செய்தீர்; — இதற்கு நிலை காணேன்=இந்தயோகத்திற்கு ஸ்திரமானஸ்திதியை என்னிடத்துக் கண்டிலேன்.—[ஏனெனின்? அதற்கேதுகூறுகின்ருன்.] மனம் ஆகின்ற இது=மனமென்றுசொல்லப்படுகிற இது—நில்லா இயற்கைத்து ஆய்=சஞ்சலசுபாவமுடையதாய்—புலனைக் கலக்கும்=சரீரேந்திரியங்களைக் கலங்கப்பண்ணுகிறது;—அதனை நிலைநிறுத்தல்=அம்மனத்தை(ஓர் க்ஷணமாத்திரமும்) ஸ்திரமாகநிறுத்துதல்—ஒல்லாது எனவும்=ஏலாதெனவும்,—காற்று அடக்கற்கு ஒக்கும் எனவும்=வாயுவை நிறுத்துதற்குச் சமானமாகுமெனவும்—உணர்கின்றேன்=கருதுகின்றேன்.—எ-று.

'நிலை' தீர்க்ககாலபரியந்தமான இருப்பு. 'கலக்குவது' பரவசமாகப் பண்ணுவது. 'ஒல்லாது' என்றது, மனமானது யாதானும் ஓர் விஷயத்தில் பிரவிர்த்திக்கின் அதினின்றும் நிவிர்த்திக்கக் கூடாத பலவானுதலானும், அநேக ஜநநங்களின் அநேகமாயிரம் விஷயவாதனைகளோடு கூடியிருத்தலால் நாகபாசம்போலும் பேதிக்கக் கூடாமையினுனும் என்க; இப்படியே வாசிட்டத்திலும், "கடுமன

வன் பேய்களவிற் கொடிதாகும் மலைகளினுங், சடத்தற்கொண்ணு நெடுவயிரத் தினும்வலிது கடல்பருகி மேருவினை நேரேபேர்த்துச், சுடுகனலை விழுங்குகினு நிறத்தரிது புலன்முழுதுந் தோன்றுமூலங், கெடுமுலகீ துண்டெனிலுண் டிலதாகி விலதிதனைக் கெடுத்தல் வேண்டும்'' என்று ஸ்ரீ ரகுநந்தனரால் அருளிச்செய்யப்பட்டிருப்பது காண்க.

(௨௪)

[மேலைச் செய்யுளில் அருச்சுனனாற் செய்த ஆட்சேபத்தை நிவிர்த்திசெய்பவராய் ஸ்ரீ பகவான் கூறுகின்றார்.]

இவ்வகை விசையன் கூற மாயவ னியம்பு கின்றா
னைவகைப் புலனு நெஞ்சு மடக்குகை யரிதா னாலு
முய்வகை யோக மியாவு முயற்சியி னாலு மொவ்வா
வைவகைப் புலன்செ யின்ப மனைத்தையும் வெறுத்த லானும்.

(இ-ள்.) இவ்வகை விசையன் கூற=இவ்வாறு அருச்சுனன் ஆட்சேபிக்க—மாயவன் இயம்புகின்றான்=ஸ்ரீ பகவான் அதற்குச் சமாதான மருளிச்செய்கின்றார்.—ஐவகைப்புலனும் நெஞ்சும் = ஐந்து கூறுபாடான இந்திரியங்களையும், அந்தக்கரணத்தையும்—அடக்குகை=நிக்கிரகிக்குந்தன்மை—அரிது ஆனாலும்=அரியதென்பது சமுசயமில்லையாயினும்—உய்வகை=(ஒருவன்) தான் கடைத்தேறும்படிக்கு (ச்செய்யும்)—யோகம் யாவும் முயற்சியினாலும்=யோகத்தின் சர்வாப்பியாசங்களினாலும்,—ஒவ்வா=ஒவ்வாத—ஐவகைப் புலன்செய்=ஐந்து கூறுபாடுடைய இந்திரியங்களாலுண்டாக்காநிற்கும்—இன்பம் அனைத்தையும் வெறுத்தலானும் = கண்ட கேட்ட விஷய சுகங்களனைத்தையும் வேண்டாதொழிக்கும் வைராக்கியத்தினாலும்—எ-று.

இது குளகம்.

(௨௫)

[இதுவுமது.]

[வேறு]

வெய்ய நெஞ்ச மடங்கிடும் வேறிதற்
கைய மில்லையென் றேயறி யாதலாற்
பைய வேகர ணம்பதி னொன்கையுங்
கைக டந்தவர் யோகமுங் கைகண்டார்.

(இ-ள்.) வெய்ய நெஞ்சம் அடங்கிடும் = கொடிய அந்தக்கரணமானது (இந்திரியங்களோடு கூட) நிரோதமாம்;—இதற்கு வேறு ஐயம் இல்லை என்றே அறி=(முன்சொன்ன அப்பியாச வைராக்கியங்களால் அந்தக்கரணம் நிரோதமாமென்னும்) இவ்விஷயத்தில் வேறொரு சந்தேகமில்லையென்றேயறி.—ஆதலால் = ஆதலினால் பையவே=பூமிகையின் ஜயக்கிரமமாகவே—கரணம் பதினொன்கையும் கை கடந்தவர்=கரணங்கள் பதினொன்கையும் (தமது) வசமாகப்பண்ணினவர் யாவர் அவர்—யோகமும் கைகண்டார்=யோகமுஞ்சித்தியாகப் பெற்றவராம்.—எ-று.



தன்னை வசமாக்காதவனுக்கு வெகுவிததாபஞ்செய்தலின், 'வெய்யநெஞ்சம்' என்றார். ௨௫-ம் செய்யுளின் முற்பாதியில் ஹடநிக்கிரகங் கூடாதென்றும், பிற்பாதியில் கிரமநிக்கிரகங்கூடுமென்றும் ஸ்ரீ பகவான் அருளிச்செய்தனர்; அதற்கபிப்பிராயம்: சுரோத்திராதி, வாக்காதி இந்திரியங்களின் கோளகைகள்போல மனத்தின் கோளகையென்னும் இருதயகமலம் நிரோதஞ்செய்யக்கூடாமையின் அம்மனத்தைக்கிரமமாகவே நிக்கிரகஞ்செய்யவேண்டுமென்பதாம். இப்படியே "ஊகநன்மை யாலல்லது வெலப்படா துள்ளம், வேகமத்தமா வங்குசத் தலால்வெலப் படுமோ, வேகபோதத்தை யறிதனல் லவருட னெய்தல், சோகவாதனை விடலுயிர் தோன்றுரு தொடுக்கல்" எ-ம், "உரைசெய்நால் வகையுநெஞ்சை யொடுக்குமூ கங்களாகும், புரையிலா விவற்றுக்குள்ள மொடுங்குதல் புயன்மழைக்குத், தரையுறு தாளிபோலாஞ் சாற்றுமூ கங்களன்றி, விரைவினெஞ் சடர்ப்பார்தீபம் விட்டிருளிருளாற்றீர்ப்பார்" எ-ம் ஸ்ரீ வசிட்டபகவானாலும் அருளிச்செய்யப்பட்டிருக்கின்றது; இவரால் அருளிச்செய்யப்பட்ட அத்தியான்மவித்தை, சாதுசங்கம், வாசனாக்ஷயம், பிராணசலனநிரோதம் என்னும் நான்குபாயங்களும் ஸ்ரீபகவானால் அருளிச்செய்யப்பட்ட அப்பியாசம், வைராக்கியம் என்னும் இரண்டுபாயங்களுள்ளே அந்தர்ப்பாவமாம். அபர வைராக்கியம், பரவைராக்கியம் என வைராக்கியம் இருவகைத்து; அவற்றுள், அபரவைராக்கியமாவது;—யதமானம், வியதிரேகம், ஏகேந்திரியம், வசீகாரம் என நால்வகைத்தாம்; இவற்றுள் யதமானவைராக்கியம், இந்தச்சகத்தில் எது சாரம், எது அசாரம் எனக் குருசாஸ்திரங்களால் நிச்சயிப்பேனென்னும் உத்தியோகமாம். வியதிரேக வைராக்கியம், தனது சித்தத்தின்கண் பூர்வமுள்ள தோஷங்களுள்ளே அப்பியாசித்த விவேகத்தால் இவ்வளவு தோஷம் நீங்கிற்று, இவ்வளவு தோஷம் மீந்திருக்கிறதென்று பகுத்தறிவதாம். ஏகேந்திரிய வைராக்கியம், சித்தத்தில் தூலமான ஆசையிருந்தும் துக்கமென்று நிச்சயித்து விஷயங்களிற் பிரவிர்த்தியாதிருத்தலாம்.

வசீகாரவைராக்கியம், ஆசை தூலமாக எழாமல் அந்தக்கரணத்தில் சம்ஸ்காரமாத்திரமாக இருப்பதாம். சம்ஸ்காரமாத்திரமான ஆசையும் ஆன்மசாட்சாத்காரத்தின்பின்னர் நீங்கிவிடுவதே பரவைராக்கியமாம். வசீகாரவைராக்கியம் ஸம்பிரக்ஞாதசமாதிக்கு அந்தரங்கசாதனம்: அஸம்பிரக்ஞாத சமாதிக்குப் பகிரங்கசாதனமாம் ; அவ்வஸம்பிரக்ஞாதசமாதிக்குப் பரவைராக்கியமே அந்தரங்கசாதனமாகும் என்றறிக. (உசு)

[யோகப்பிரஷ்டனுக்கு உறும்பலனையறிய அருச்சுனன் வினவுதல்.]

என்று கூற விசைய னியம்புவா
னின்று யோகத் திலேநெடு நாளெலாம்
பொன்றுங் காலத் தயர்ந்துயிர் போயினாற்
சென்று நற்கதி யேயன்று சேருமோ.

(இ-ள்.) என்று கூற = (அந்தக்கரணத்தை வசம்பண்ணாதோர்க்கு யோகம் அரியதேனும் அதை வசம்பண்ணினோர்க்கு எளிது) என்று (ஸ்ரீ பகவான்) அருளிச்செய்ய—விசையன் இயம்புவான்=அருச்சுனன் வினவுவான்;—நெடு நாள் எலாம் = ஜீவிதகால முழுவதும்—யோகத்திலே நின்று=ஞானபூமியின் (அப்பியாசத்திற் சிரத்தையோடுகூடி) நின்று—பொன்றும் காலத்து = மரணமாகுஞ் சமயத்தில்—அயர்ந்து உயிர்போயினால்=(ஞானத்தை)மறந்து உயிரானது நீங்கின்—அன்று சென்று=அப்போது (அவன்) சென்று—நல் கதி சேருமோ=நற்கதியடைவனோ? (அல்லது, துர்க்கதியடைவனோ?)—எ-று. ஏ-அசைநிலை. இது குளகம்.

யோகத்தினின்றுஞ் சலித்தமனமுடையவனுயென்பார், 'அயர்ந்து' என்றார். (உஎ)

[இப்போது பூர்வம் வினவிய சமுசயத்தின்பீஜத்தை வெளிப்படையாக நிருபணஞ் செய்கின்றான்.]

யோக மேவ வினைக ளொருவினான்
மோக மேவலின் யோக முடிந்தில
னேக மேயிரு பாலும் விடாநிற்க
மேக மேயென வீய்ந்து கழியுமோ.

(இ-ள்.) யோகம் மேவ=ஞானசித்தியின் பொருட்டு—வினைகள் ஒருவினான் = (பரலோகசாதனங்களான) கர்மோபாசனைகளினின்றும் நீங்கினன்:—மோகம் மேவலின்=மூட முடைமையின்—



யோகம் முடிந்திலன் = யோகசித்தியடைந்திலன்;—ஏகமே=சுவகதாதிபேதமிறந்துள்ள ஸ்ரீ சுவாமி — இருபாலும் விடாநிற்க=இப்படிப்பட்ட வுபயபிரஷ்டனான புருஷன்—மேகமே என—(வாயுவினால் பூர்வமேகத்தினின்றும் பிரிக்கப்பட்ட) மேகமானது பூர்வமேகத்தினின்றும் பிரஷ்டமாய் உத்தரமேகத்தை யடையாமையின் மழைபெய்யும் யோக்கியமற்றதாய் மத்தியிலே நாசமடைவதுபோல—வீய்ந்து கழியுமோ=நாசமாய் ஒழிவனோ?—எ-று. இதுவும் குளகம்.

'மோகம்' என்றது, பிரமத்தோடு ஆன்மாவினது ஐக்கியம் அறியாமையை. (உஅ)

[பூர்வம் வினவிய சமுசயத்தை நிவிர்த்திப்பித்தற்பொருட்டு அந்தர்யாமியாகிய கிருஷ்ணபகவானைக்குறித்து அருச்சுனன் பிரார்த்திக்கின்றான்.]

[வேறு.]

மைய லிதுவென் மனத்தினின் மற்றிந்த
வைய மறுக்கவல் லாரில்லை நீயின்றி
யுய்ய விதனை யுரையென்ன யோகத்தின்
மெய்ய னிதனை விரிய வுரைக்கின்றான்.

(இ-ள்) என் மனத்தினில் மையல் இது=எனது மனத்தின் கண்ணுள்ள மயக்கரூபமான சமுசயம் இதுவே;—இந்த ஐயம் அறுக்க வல்லார்=இச்சமுசயத்தைச் சேதிக்கத்தக்கசமர்த்தர்—நீ அன்றி மற்று இல்லை=தேவரீரன்றிப் பிறிதொருவருமில்லை;—(இக்காரணத்தால்) உய்ய=யான் கடைத்தேற—இதனை உரை என்ன=இச்சமுசயத்தின் உத்தரத்தை அருள்வீராகவென்றருச்சுனன் கேட்க—யோகத்தின் மெய்யன்=யோகத்தின் உண்மையை அறிந்த சர்வக்ஞராகிய ஸ்ரீ பகவான்—இதனை = இச்சமுசயத்தின் உத்தரத்தை—விரிய உரைக்கின்றான்=விரிவாக அருளிச்செய்கின்றார்.—எ-று.

'நீயன்றி' என்றதன் கருத்து; பரமகுருவும், சர்வக்ஞரும், சர்வசாஸ்திரங்களின் கர்த்தாவும், பரமகிருபாலுவும் நீரேயென்பதாம். ()

[மேலைச் செய்யுட்களால் அருச்சுனன் வினவிய சங்கையை நிவிர்த்திசெய்யும்பொருட்டு ஸ்ரீ பகவான் உத்தரமருளிச்செய்கின்றார்.]

பொய்மை யடையாப் புலனுடை மாந்தர்க்
கிம்மை யிடையு மறுமை யுலகத்தும்
வெம்மை யடைகிலர் மெய்ம்மைவிடா தொன்றுஞ்
செம்மை தெளியினுஞ் செப்புதுங் கேளாய்.

(இ - ள்.) (அருச்சுனா) பொய்மை அடையா—பொய்மையயடையாத—புலனுடை மாந்தர்கள்=அறிவினையுடையயோகப்பிரஷ்டர்—இம்மையிடையும் மறுமை உலகத்தும்=இகலோகத்தும், பரலோகத்தும்=வெம்மை அடைகிலர்=விநாசமடையார்கள்.—[இதற்குக்காரணங் கூறுகின்றார்.] என்றும் மெய்மை விடார்=எப்போதும் மெய்யைவிடாதுடையர் (ஆதலால்.)—செம்மை தெளி=செம்மையாக (இதனைத்) தெளிவாய்;—இன்னும் செப்புதும் கேளாய்=மேலுங் கூறுதுங் கேட்பாய்—எ-று.

'பொய்மை' என்றது. பொய்யான சம்சாரத்திற்குக் காரணங்களான வினைகளை. 'மெய்மை' என்றது, சத்தியமான பிரமத்தையடைதற்குக் காரணங்களான சிரவணாதிகளை. இகலோகத்தில் விநாசம், துர்க்கீர்த்தி: பரலோகத்தில் விநாசம், நரகப்பிராப்தி. 'மையலிதுவென் மனத்தினின் மற்றிந்த, வைய மறுக்கவல் லாரில்லை நீயன்றி' என்று மேலைச்செய்யுளில் அருச்சுனன் வினவினதால், 'செம்மை தெளியின்னுஞ் செப்புதுங் கேளாய்' என்றார். யோகசித்தியின் பொருட்டுப் பரலோகசாதனங்களான கர்மங்களை விட்டிருப்பினும் பெரும்பயனான பிரமவிசாரத்திற் சதா இருத்தலின், 'வெம்மையடைகிலர்' என்றார். பிரமவிசாரம் பெரும்பயன் என்பதற்கு ஸ்மிருதி;

ஸ்நாதம் தேந ஸமஸ்த தீர்த்த ஸலிலே ஸர்வாபி தத்தாவ
நிர் யஜ்ஞாநாஞ்ச க்ருதம் ஸஹஸ்ரமகிலா தேவாஶ்ச ஸம்பூஜி
தா:। ஸம்ஸாராச்ச ஸமுத்த்ருதா: ஸ்வபிதரஸ் த்ரைலோக்ய
பூஜ்யோப்யஸௌ யஸ்ய ப்ரஹ்மவிசாரணே க்ஷணமபி
ஸ்தைர்யம் மந: ப்ராப்நுயாத் ||

(இ - ள்.) எந்தப் புருஷனுடைய மனமானது பிரமவிசாரணையில் ஒரு க்ஷணப்பொழுதேனும் ஸ்திரமாயிருக்குமோ அந்தப்புருஷனானவன் சகல புண்ணியதீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்தவன். அவனே எல்லாப் பூமிகளையுந் தானஞ்செய்தவன். அவனே ஆயிரம் எக்ஞஞ்செய்தவன். அவனே பிரமாதிதேவர்களைப் பூஜித்தவன். அவனுடைய பிதிர்க்கள் சம்சாரத்தினின்றும் உத்தரிக்கப்பட்டார்கள். இவன் மூன்றுலோகங்களிலும்பூஜிக்கத்தக்கவன்.—எ-று. (ரு0)

[சுபகாரியஞ்செய்யும் யோகப்பிரஷ்டன் இரண்டுலோகங்களிலும் நாசமடையானாயின் வேறே என்ன பயனையடைவான் என்றருச்



சுனனுக்கெழுஞ் சிஞ்ஞாசையைப்பற்றி ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

யோக முடியா திடையே யிறந்தவன்
யாக வினைபல செய்தாங் கிசைந்திடுஞ்
சோகமி னாடெய்தித் துன்பந் தொடராதே
போக நுகர்ந்துபல் காலங்கள் போயபின்.

(இ-ள்.) யோகம் முடியாது இடையே இறந்தவன்=(தான் ஆரம்பித்த) யோகமானது நிறைவேறாமல் மத்தியிலே மரணமானவன்—யாக வினை பல செய்து இசைந்திடும்=(உபாசனையோடு கூட) அசுவமேதமுதலிய அநேக கர்மங்களைச் செய்து (புண்ணியவான்களால்) அடையப்படும்—சோகம் இல் நாடு எய்தி=பிரமலோகத்தை (அர்ச்சிராதி மார்க்கத்தால்) அடைந்து—ஆங்கு=அங்கே—துன்பம் தொடராதே = துன்பந் தொடராமல்—போகம் நுகர்ந்து=போகங்களநுபவித்து—பல் காலங்கள் போயபின்=பிரமாவின் ஆயுள்பரிமாண சம்வத்சரபரியந்தம் நிவாசஞ்செய்து அதன் அநந்தரம்;—எ-று.

இது குளகம். (ருக)

[இதுவுமது.]

சிறந்த வரசர் திருக்குலத் தாத
லறந்தரு யோகிக டங்குலத் தாதல்
பிறந்து பெறுவதெல் லாமெய்திப் பின்னு
மறந்த வியோக மகிழ்வுட னெய்தும்.

(இ-ள்.) சிறந்த அரசர் திருக்குலத்தாதல்=(செல்வம், குணம், சுத்தம்இவைகள்)சிறந்த அரசர்களின் திருக்குலத்திலாவது,—அறம் தரு=அறந்தரப்பட்ட—யோகிகள்தம் குலத்தாதல் = பிரமவித்தையுடைய தரித்திராகிய பிராமணரின்குலத்திலாவது—பிறந்து=ஜநித்து—பெறுவது எல்லாம் எய்தி=அதில் அடையத்தக்கன அனைத்தையுமடைந்து—பின்னும் = பின்னரும்—மறந்த யோகம்=(கீழ்ப்போன ஜநநங்களில் அநுஷ்டித்து மரணகாலத்தில்) மறந்த யோகத்தை—மகிழ்வுடன் எய்தும்=வருத்தமில்லாமலே அடைவன், எ-று.

இச்செய்யுளில் முதற்சொன்ன யோகப்பிரஷ்டன் பூர்வம் அநுபவித்துள்ள போகவாசனையால் விஷயங்களின் இச்சையுடையவனெனவும், பின்சொன்ன யோகப்பிரஷ்டன் வைராக்கிய பாவனையின் திடத்துவத்தால் விஷயங்களின் இச்சை விடுபட்டவனெனவு

மறிக; இவன் மரணத்தின்பின் பிரமலோகத்தையடையாமலே பிரம வித்தை யுடையரும், யோகாப்பியாசமுடையருமாகிய தரித்திர பிராமண குலத்தில் ஜநநமடைவன் : இராஜகுலத்தில் ஜநநமடையான். இவ்வுலகில் பவித்திரரும், ஸ்ரீமான்களுமாகிய இராஜாக்களின் கிரகத்தில் யோகப் பிரஷ்டனுக்குச் சநநமானது அநேக சுகிர்தங்களாலுளதாம்; ஆதலால், அந்தச் சநநம் துர்லபமாம். பவித்திரரும், பிரமவித்தை யுடையருமாகிய தரித்திர பிராமணகுலத்திலுளதாகும் ஜநநம் பிரமாதத்திற்கு ஏதுபூதமான தனமுதலிய பதார்த்தங்களை யடையாமையின் அந்தத் துர்லப ஜநநத்தினும் அத்தியந்தந் துர்லபமாம்; ஆகலின், இந்தச்சநநம் துர்லபதரமென்பார், 'அறந்தரு யோகிகடங்குலத்து' என்றார். மொழிபெயர்த்த வாசிரியர், 'பிறந்து பெறுவதெல் லாமெய்தி, மறந்த வியோக மகிழ்வுட னெய்தும்' என்றது, முன்சொன்ன இருவித சநநங்களுந் துர்லபமென்பதில் எதிரூறினது. 'மறந்த வியோக மகிழ்வுட னெய்தும்' என்றதன் றாற்பரியம், பூர்வசநநத்தில் அநுஷ்டித்து மரணகாலத்தில் மறந்த யோக பூமிகளை அதிகப் பிரயத்தனமில்லாமலடைந்து மேற்பூமிகளையடைய அதிகப் பிரயத்தனஞ்செய்வன் என்பது. இங்கே அருச்சுனன் வினவினதுபோலவே வாசிட்டத்தும் ஸ்ரீராமச்சந்திரரால் "இவண முயர்பூ மியிலொன்றை யிரண்டை மூன்றும் வேறொன்றை, கவர்வுற் றடைந்தோ னுயிர்மாய்ந்தாற் கலந்து மேவுங் கதியேது" என வினவப்பட்டிருக்கிறது; ஆதலால் நான்கு, ஐந்து, ஆறு, எழு என்னும் நான்கு பூமிகளிலே கிஞ்சித்மாத்திரமுஞ் சங்கையில்லை, முதலாவது, இரண்டாவது, மூன்றாவது என்னுஞ் சாதன பூமிகளில் ஏறிய புருஷர் சர்வகர்மங்களையும் பரித்தியாகஞ் செய்தனர்: ஆன்ம ஞானமடைந்திலர்; ஆதலால், அவரைப்பற்றிச் சங்கைசெய்யக்கூடும்; இக்காரணத்தால் ஸ்ரீ ராமச்சந்திரர் சாதனரூபமான மூன்று பூமிகளைப்பற்றியே சங்கை செய்தனர்.

இச்சங்கைக்கு, "யோகபூமி யம்சம்விடா துறலாற்பழைய தீவினைபோ, மாகவிமான மதற்பின்பு வந்துகொடுபோய் வானவர்வாழ், நாகமுதலா முயர்பதியினன் மேருவின்சூழ் பொழின்முழையிற், போகமடவா ரொடுங்கூடிப் புணர்ந்துசிந்தை களிகூர்வன்' எ-ம், "அருந்துபோக மாய்தலினு ளளவில்பண்டை யிருவினையுர், பொருந்தமாயுமப்போது புவியிற்பிறப்ப ரியோகிகடாங், திருந்துசெல்வங் குணஞ்சுத்தஞ் சிறந்த நல்லோர் மனைப்பிறந்து, வருந்திமுன்னம்



பழகுதலால் வழுவாயோக நெறிநிற்பர்" எ-ம் ஸ்ரீ வசிஷ்டபகவான் உத்தரமருளிச்செய்திருப்பதுங் காண்க. (நஉ)

[பிரமஞானிகளாயுள்ள பிராமணகுலத்தில் ஜநிபாநிற்கும் புருஷனுக்கு மத்தியில் மறைப்புக்குக் காரணங்களான போகங்களின்மையால் பூர்வசம்ஸ்காரத்தால் மீண்டும் சர்வகர்மங்களின் சந்நியாசபூர்வகமாகச் சிரவணாதி ஞானசாதனங்கூடலாம். ஸ்ரீமான்களும், மகாராஜாக்களுமாகிய சக்கரவர்த்திகளின் குலத்திற்சநித்த யோகப்பிரஷ்டனுக்குப்போகவாசனைகளின் பிரபலத்தன்மையினாலும், பிரமாதத்திற்குக் காரணங்களாகிய தனமுதலியவை கிடைத்திருத்தலானும் பூர்வமுள்ள ஞானசம்ஸ்காரத்தின் *உற்போதமும், சர்வகர்மங்களின் சந்நியாசத்தில் க்ஷத்திரியராஜாவாதலால் யோக்கியமின்மையின் ஞானசாதனங்களின் லாபமும் எவ்வாறுளவாமென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் உத்தரமருளிச்செய்கின்றார்.]

கொண்டு பயிலுங் குணமில னாகினு
முண்டு தெளிவென் றுணர்ந்த வியோகந்தான்
பண்டு பயின்ற பயிற்சியி னன்றனைத்
தண்டுத லின்றிமுன் றானே தலைப்படும்.

(இ-ள்.) கொண்டு பயிலும் குணம் இலனாகிலும்=உபகாரணங்களைக்கொண்டு பழகுங்குணமில்லாதவனாயினும் (பாவசனாயினுமென்றபடி)—தெளிவு உண்டு என்று உணர்ந்த யோகந்தான்=பிரமான்ம ஐக்கியஞானமானது உளதாமென்று (குருவினாலும், சாஸ்திரத்தினாலும்) அறிந்து அப்பியாசித்த பூர்வயோகாப்பியாசமானது—பண்டு பயின்ற பயிற்சியினன்தனை=பூர்வம் பழகிய பழக்கமுடைய யோகப்பிரஷ்டனை—தண்டுதல் இன்றி=விலகுதலில்லாமல்—முன்=(இந்தச்சநநத்தில் அவன்றொடங்கு) முன்னே—தானே தலைப்படும்=(உறங்கி விழித்தோனைப்போலத்) தானே இழுக்கத்தொடங்கும்.—எ-று.

பூர்வஜநநத்திற் சம்பாதித்த ஞானசம்ஸ்காரத்திற்குப் பூர்வாப்பியாசமென்று பெயர்; அப்பூர்வாப்பியாசமானது இந்த ஜநநத்தில் மோட்சசாதனத்தின்பொருட்டுப் பிரயத்தனஞ்செய்யாதவனாயிருப்பினும் அந்த யோகப்பிரஷ்டனைப் போகவாசனையினின்றும் மீட்

* உற்போதம்=பிரகாசம்.

டுத் தன்வசம்பண்ணுகிற்கும்; எதனாலெனின்? போகவாசனை அவ
ஸ்துவிஷயமாகலான் வெகுகாலாப்பியாசத்தாலுளதேனும் வஸ்து
விஷயமாகலான் அற்பகாலாப்பியாசமாயுள்ள ஞானவாசனை பிரபல
மாம்; ஆகவே இச்செய்யுளின் பொருளுக்கு அருச்சுனனாகிய நீயே
இலக்கியமாமென்பது கருத்து. (௩௩)

[சிஞ்ஞாசையுடைய யோகப்பிரஷ்டன் அடையும் பயனை இப்
போது அருளிச்செய்கின்றார்.]

அனைய வியோகத்தை யாற்றுவ னென்று
நினையு மவனு நெறிபிற ழாமல்
வினைகள் பலசெய்து வேள்வி முடித்தா
னணையுங் கதிமேற் கதிபெறு வானால்.

(இ - ள்.) அனையயோகத்தை=(போகவாசனைகளைப்பார்க்கிலும
பிரபலமான சாமர்த்தியமுடைய) அப்படிப்பட்ட யோகபூமிகளை—
ஆற்றுவன் என்று நினையும் அவனும்=அப்பியாசிப்பேனென்று நினை
யாநிற்கும் யோகப்பிரஷ்டனும்—நெறி பிறழாமல்=சுருதிநெறிக்கு
வேறுபடாமல்—வினைகள் பல செய்து=கர்மங்கள் அநேகஞ்செய்து
—வேள்வி முடித்தான்=வேள்விமுடித்தவன்—அணையும் கதிமேல்
கதி=அடையாநிற்குங் கதிக்கு மேலான கதியை — பெறுவான்=
அடையாநிற்பன்.—எ-று. ஆல்-அசைநிலை.

கர்மகாண்டரூபமான வேதத்தைக் கடந்துநிற்பனென்பார்,
'வினைகள் பலசெய்து வேள்வி முடித்தா, னணையுங் கதிமேற் கதி
பெறுவான்' என்றார்; இப்படிச் சொன்னதனால், ஞானிக்குங் கர்ம
பரித்தியாகங் கூடாதென்னும் ஞானகர்மங்களின் சமுச்சயவாதம்
கண்டனமாயிற்றென்க. (௩௪)

[இவ்வாறு முதற்பூமியில் மரணமானவனும் போகங்களைப் புஜி
த்து மகாராஜாக்களின் குலத்திற் சனித்து அல்லது, போகங்களைப்
புஜியாமல் பிரமநிஷ்டர்களான பிராமணகுலத்திற் சனித்துக் கர்
மாதிகாரத்தைப் பரித்தியாகஞ்செய்து ஞானாதிகாரத்தை யடைவ
னானால் இரண்டாம் பூமி அல்லது, மூன்றாம் பூமிகளில் மரணமாய்
உத்தமலோகங்களில் நானாபோகங்களைப் புஜித்துப் பின் மகாராஜாக்
களின்குலத்திற்சனித்து அல்லது, உத்தமலோகங்களில் போகங்களைப்
புஜியாமலே பிரமவித்தையுடைய பிராமணர்களின் குலத்திற்சனித்
துக் கர்மாதிகாரத்தைப் பரித்தியாகஞ்செய்து கேவலம் ஞானத்தி



ற்கே அதிகாரியாய் ஞானசாதனங்களான சிரவணாதிகளைச் சம்பா
தித்து அவற்றின் ஞானரூபமான பலத்தினால் சம்சாரபந்தத்தினின்
றும் முக்தனாவனென்பதிற் சொல்லவேண்டுவதென்னையென்னுங்
கைமுதிகந்நியாயத்தால் சித்தமானபொருளை இப்போது ஸ்ரீபகவான்
அருளிச்செய்கின்றார்.]

நீடு மனநிலை நின்றில னாயினு
மோடும் வகையால் விடாதே யுழன்றவன்
பாடும் பவங்கள் பலகடந் தாயினும்
வீடும் பெறுமின்னும் வேறுஞ் சிலகேளாய்.

(இ-ள்.) நீடும் மனம்=(விஷயங்களில்) நீளும் மனமானது—நிலை
நின்றிலனாயினும்=நிலையாகநிற்கப் பெறாதவனானாலும்—ஓடும் வகை
யால்=அஃதோடாநிற்கும் ஏதுக்களால்—விடாதே உழன்றவன்=
(அதனை) ஓடவிடாமல் அதிகப்பிரயத்தனஞ்செய்யும் யோகியானவன்
(பூர்வஜநநத்திற்செய்த பிரயத்தனத்தைப் பார்க்கிலும் அதிகப்பிர
யத்தனஞ்செய்யும் யோகி என்றபடி.)—பாடும் பல பவங்கள் கடந்
தாயினும்=சிரவணாதிசெய்யும் அநேகஜநநங்களைக்கடந்தேனும் (பூர்
வம் எடுத்த அநேகஜநநங்களின் ஞானசம்ஸ்காரத்தின் பிரபாவத்தா
லும், அவற்றின் புண்ணியகர்மங்களின் பிரபாவத்தாலுமடைந்த அந்
தியஜநநத்தில் என்றபடி.)—வீடும் பெறும் = (சிரவணாதிசாதனங்
களின் பரிபாகத்தால் பிரமான்ம ஐக்கிய சாட்சாத்காரமடைந்து புன
ராவிர்த்தியில்லாத) பரமுக்தியையுமடைவன்—இன்னும்=மேலும்—
வேறும் சில கேளாய்=வேறேயுஞ் சில(கூறுதுங்) கேட்பாய்.—எ-று.

[அருச்சுனனுக்கு முன்சொன்ன யோகத்தை விதித்தற்பொரு
ட்டு அவனுக்கு மிகவுஞ் சிரத்தையுண்டாகும்படி அதனை ஸ்ரீ பக
வான் ஸ்துதிக்கின்றார்.]

எல்லாத் தவமு மியற்றிநின் றோனினு
மெல்லாக் கலைகளுங் கற்றுணர்ந் தோனினுஞ்
செல்லாக் கருமமெல் லாஞ்செய் தவனினு
நல்லான் வலியோகி நீயிது நண்ணுவாய்.

(இ-ள்.) எல்லாத் தவமும் இயற்றி நின்றோனினும்=கிருச்சிரசாந்
திராயணமுதலிய தவங்கள் முழுவதுஞ்செய்துநின்றவனினும்,—எல்
லாக் கலைகளும் கற்று உணர்ந்தோனினும்=சாஸ்திரங்கள்முழுவதுங்

கற்றுணர்ந்த பரோட்சஞானியினும்,—செல்லாக் கருமம் எல்லாம் செய்தவனினும்=(அநுபவியாமல்) நீங்காத (யாகமுதலிய) கர்மங்கள் முழுவதுஞ்செய்தவனினும்—வலியோகி நல்லான்=(தத்துவஞானத் தோடுகூட வாசனுட்சய, மனோநாச) சாமர்த்தியமுடைய யோகி அதிகன் (என்று எனக்குச் சம்மதம் ஆதலால்,)—நீ இது நண்ணுவாய் =(யோகப்பிரஷ்டனுகிய) நீ இப்படிப்பட்ட யோகத்தை (அதிகப்பிர யத்தனத்தால்) அடையக்கடவாய்.—எ-று. (௩௬)

[இப்போது ஞானயோகியைப் புகழ்ந்து இவ்வத்தியாயத்தை ஸ்ரீ பகவான் உபசம்மாரம்பண்ணுகின்ருர்.]

[வேறு.]

இருவகைய வினையறுக்கு மியோகிகளெல் லார்களினு
மருவரிய மனத்தினையு மன்பையுமென் பால்வைக்கு
மொருவனுமே யானுவக்கப் படுகின்ரு னெனவுரைத்தா
னருவெனவன் றுருவெனமுன் பாராலு மறிவரியான்.

(இ-ள்.) இருவகைய வினை அறக்கும்=புண்ணியபாவமென்னும் இரண்டுகூறுபாடுடையவினைகளைச் சேதிக்கும்—யோகிகள் எல்லார்க ளினும்=அடயோகிமுதலிய யோகிகள் அனைவரினும்—மனத்தினை யும் அன்பையும்=அந்தக்கரணத்தையும், சிரத்தையையும்—மருவு அரிய என்பால் வைக்கும்=பொருந்துதற்கரிய(பரமேசுரனுன) என் னிடத்து வைக்கும்—ஒருவனுமே = ஒரு ஞானயோகியுமே—யான் உவக்கப்படுகின்ருன் என உரைத்தான்—என்னுல் சந்தோஷிக்கப்படு கிருனென்றருளிச்செய்தனர்;—அரு என அன்று உருஎன=(சிற்கன மாயிருத்தலின்) அருவமென்ருதல், அல்லது (இந்திரியங்கட்கு விஷயமாகாமையின்) உருவமென்ருதல்—முன்பு ஆராலும் அறிவு அரியான் =(தான் உபதேசிக்கு) முன்னே எவராலும் அறிதற்கரிய ஸ்ரீ பகவான்.—எ-று.

சிரத்தாவானுய் அந்தக்கரணத்தால் எனது சகுணரூபத்தை, அல்லது நிர்க்குணரூபத்தை நிரந்தரஞ் சிந்திக்குமென்பார், 'மனத் தினையுமன்பையு மென்பால்வைக்கும்' எ-ம், இவன் ஒருவனுமே அத் தியந்தஞ் சிரேஷ்டனென்று எனக்குச் சம்மதமென்பார், 'ஒருவ னுமே யானுவக்கப்படுகின்ருன்' எ-ம் கூறினர்.

யோசாப்பியாசகிலேசஞ்சமானமாயினும் என்னிடத்துப் பக்தி யில்லாத யோகிகளைப்பார்க்கிலும் என்னிடத்துப் பக்தியுடையவன் அத்தியந்தஞ் சிரேஷ்டனென்று தாற்பரியம்.



இவ்வாறத்தியாயங்களும் பிரதமஷட்கரூபகர்மகாண்டமென வும், துவம்பதார்த்தத்தின் நிரூபணமெனவுங்கூறுவர். 'மனத்தினையு மன்பையுமென் பால்வைக்கும்' என்னும் இவ்வசனத்தால் சூசிப் பித்த பக்தியோகத்தையும், அந்தப் பக்தியோகத்துக்கு விஷயமான தற்பதார்த்தரூபனுகிய பகவான் வாசுதேவனையும் நிரூபணஞ்செய் யும்பொருட்டு இனி ஆறத்தியாயரூபமான உபாசனுகாண்டம் ஆரம் பிக்கப்படும். (௩௭)

ஆருவது,

## யோகவத்தியாயம்.

முற்றிற்று.

ஆக அத்தியாயம் ௬-க்குத் திருவிருத்தம் - ௨0௬.

## எ-வது, * மாயாரூபவத்தியாயம்.

[சர்வகர்மங்களின் சந்நியாசரூபமான சாதனம் பிரதானமாக வுள்ள பிரதமஷட்கத்தால் ஸ்ரீ பகவானுனவர் யோகத்தோடுகூட துவம்பதத்தின் லட்சியரூபமான ஞேயவஸ்துவைப் பிரதிபாதனஞ் செய்தனர். இப்போது தியானிக்கத்தக்கதான பிரமத்தின் பிரதிபா தனமே பிரதானமாகவுள்ள இம்மத்தியமமான துதீயஷட்கத்தால் தற்பதார்த்தரூபமான பரமான்மாவைப் பிரதிபாதனஞ்செய்கிருர்; இந்தத் துதீயஷட்கத்திலும், "இருவகைய வினையறுக்கு மியோகிக ளெல் லார்களினு, மருவரிய மனத்தினையு மன்பையுமென் பால் வைக்கு, மொருவனுமே யானுவக்கப் படுகின்ருன்" என்னுஞ் செய்யு ளால், முன்னே அருளிச்செய்த பகவத்சேவையை வியாக்கியானித் தற்பொருட்டு இவ்வேழாமத்தியாயம் ஆரம்பிக்கின்ருர். இங்கே பகவானுடைய சொரூபம் எவ்வாறு சேவிக்கத்தக்கது? அப்பகவானு டைய சொரூபத்தில் மனமானது எவ்வாறு நிலைபெறும் என்னும் இவ்விருவகைவினுக்களும் அருச்சுனன் வினவத்தக்கனவாயிருந்தும் வினவிலன். அங்ஙனம் அவன் வினவாதிருந்தும் பரமகிருபாலுவா கிய ஸ்ரீ பகவான் அவ்விருவகை வினுக்களுக்கும் உத்தரமருளிச் செய்கின்ருர்.]

---

* வடநூலில், ஞானயோகமென்றுபெயர்.

உய்யவன்பிறைடு மென்னையேபடையு மியோகமே பயி
ஓம்யோகிதா, னையமின்றியெனை யேயறிந்திடும தையநீயுமறி
வாயென, வையமுண்டுமறை நீர்மையுண்டிடையர் மாதரு
ண்டிட மலர்ந்திடுஞ், செய்யதண்பவள வாய்திறந்துதிரு மாது
கேள்வனிவை செப்புவான்.

(இ-ள்.) உய்யஅன்பிறைடும்=(தான்)உய்யும்படிக்கன்போடும்—
என்னையே அடையும்= (பரமேசுரனை) என்னையே சரண்புகும்—
யோகமே பயிலும் யோகிதான்=(ஆருமத்தியாயத்திற் சொல்லியபடி
மனோநிரோதரூபமான) யோகத்தைத்தானே பழகாநிற்கும் யோகியா
னவன்—ஐயம் இன்றி=சமுசயமில்லாமல்—எனையே அறிந்திடும்=
(* சர்வவிபூதிசம்பன்னனை) என்னை (எப்பிரகாரம்) அறிவனோ—
அது = அப்பிரகாரத்தை —ஐய நீயும் அறிவாய் என = அருச்சுனா
நீயும் சாவதானனாய்க்கேட்கக்கடவாயென்று—வையம் உண்டு=பூமி
யையுண்டு—மறை நீர்மை உண்டு=வேதவாக்கியங்களையு முண்டு—
இடையர் மாதர் உண்டிட — கோபிகாஸ்திரீகள் முத்தமுண்ணும்
படி—மலர்ந்திடும்=மந்தகாசஞ்செய்யாநிற்கும்—செய்ய தண் பவள
வாய் திறந்து=சிவந்தகுளிர்ச்சிபொருந்திய பவளம்போன்றதிருவாய்
மலர்ந்து—திருமாது கேள்வன்—இலக்குமிக்குக் கணவனான ஸ்ரீ பக
வான்—இவை செப்புவான்=இவை அருளிச்செய்கின்றார்.—எ-று.

தோஷமுடையன அன்மையின் வேதவாக்கியங்களை, 'நீர்மை'
என்றார். 'மறைநீர்மையுண்டு' என்றது, சப்தபுரியிறென்றான அவ
ந்திபுரியில் வேதாத்தியயனஞ் செய்ததை. (க)

[மேலைச்செய்யுளில், ''எனையேயறிந்திடும்'' என்று ஸ்ரீ பகவான்
அருளிச்செய்த அவ்வசனத்தால் பகவத்விஷயமான ஞானம்பரோட்ச
மேயாமென்று அருச்சுனன்கொள்ளுஞ் சங்கையை நிவிர்த்திசெய்
பவராய் ஸ்ரீ பகவான் கேட்பவனை அந்த ஞானத்தின் அபிமுகமாக்கும்
பொருட்டு அதனைத் துதிக்கின்றார்.]

மாயுமாயைமறை யாதநெஞ்சினிடை மற்றெனுண்மை
யினை வாய்மையா, லேயுமாறுற வறிந்துளோர்களறி யாததொ
ன்றுமிலை யென்னினும், மாயுமானுட ரனேகர்பாலொருவ

* சர்வவிபூதி=பலம், சக்தி, ஐசுவரியமுதலியவை.



னென்னையாயுமனம் வைத்துளா, னாயுமானுட ரனேகர்பாலொ
ருவ னேயறிந்துமுடி வானையா.

(இ-ள்.) மாயும் மாயை மறையாத=(நன்றாக விசாரித்துப்பார்க்
கில்) அபாவமாய்விடும் மாயையினால் மறைக்கப்படாத — நெஞ்சினி
டை=மனத்தின்கண்ணே—மற்று என் உண்மையினை=(மாயாகிருத
சதுர்ப்புஜமூர்த்திக்கு) வேறாய் அத்துவிதியமாய்ப் பரிபூரணமான
எனது சொரூபத்தை—வாய்மையால்=மெய்ம்மையாக—ஏயும் ஆறு
உற அறிந்துளோர்கள்=பொருந்தும் வழியாக அறிந்திருப்பவர்கள்—
அறியாதது ஒன்றும் இலை=(இவ்வியவகாரபூமியில்) அறியாத பதார்
த்தம் யாதொன்றுமில்லை.—[இப்படிப்பட்ட பெரும்பேற்றைப் பயவா
நிற்கும் எனது சொருபஞானமானது எனது அநுக்கிரகத்தாலல்லா
மல் அத்தியந்தந் துர்லபமாமென்று அதன் அரியதன்மையை யருளிச்
செய்கின்றார்.] என்னினும்=என்று சொல்லினும்—மாயும் மானுடர்
அனேகர்பால்=(மின்னைப்போலுந்தோன்றி)மாய்ந்துபோகும் அநேக
மாயிரம் மநுடருள்ளே—ஒருவன் = ஒருமநுடனே — என்னை ஆயும்
மனம் வைத்துளான் = என்னை ஆராயும்படியான மனம் வைத்திருப்
பவனாவன்; (பிரயத்தனம் பண்ணுவனென்றபடி)—ஆயும் மானுடர்
அனேகர்பால்=(என்னை) ஆராயும் அதிகாரிகளாகிய அநேகமாயிரம்
மநுடருள்ளே—ஐயா=அருச்சுனா—ஒருவனே அறிந்து முடிவான்=
ஓர்மநுடனே (பரமேசுரனான என்னை வாஸ்தவசொரூபமாக) அறி
ந்து கிருதார்த்தனாவன்.—எ-று.

'மாயைமறையாத நெஞ்சு' சிரவணமனனாதிகளால் பரிபாக
மானசித்தம். 'வாய்மையால்' என்றது அசம்பாவனை, விபரீதபாவனை
ரூபமான பிரதிபந்தமின்றி யென்பதனையும், 'ஏயுமாறுற' என்றது,
கர்த்திரு, கர்மபாவங்கழன்றென்பதனையுங் குறிப்பித்துநின்றன.
'மற்றெனுண்மையினைவாய்மையா, லேயுமாறுற வறிந்துளோர்களறி
யாததொன்றுமிலை' என்று ஸ்ரீ பகவான் அருளிச்செய்ததுபோலப்
பிரமகீதையிலும், ''எப்பொருள்களுக்குந் தோற்றமுநிலையுமிறுதியுந்
தன்கணேயாகி, யொப்பிடவொன்று மின்றியேயென்று முள்ளதா
யுணர்விறந்த, வப்பொருணோ யறிந்தபோதெல்லாப் பொருள்
களுமறிந்ததாமந்த,மெய்ப்பொருடானே யெப்பொருள்களுமாய்விளங்
கலால் வேறிலாமையினால்'' என்று கூறியிருப்பது காண்க. (உ)

[இந்தப்பிரகாரம் ஆன்மஞானத்தைத் துதித்துக் கேட்பவனை
அதில் அபிமுகமாக்கி இப்போது சர்வான்மரூப ஏதுவினால் ஆன்மா

வின் பரிபூரணத்வத்தை யருளிச்செய்யும்பொருட்டு முன்னே பிரகிருதித்துவயங்களை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார். அல்லது, 'மற்றெனுண்மையினை வாய்மையா, லேயுமாறுற வறிந்துளோர்களறியாததொன்றுமிலை' என்னும் இவ்வசனத்தால் ஸ்ரீ பகவான் ஓர் பிரமஞானத்தால் சர்வப்பிரபஞ்ச ஞானத்தின் பிரதிக்ஞைசெய்தனர்; அந்தப் பிரதிக்ஞை பிரமத்திற்குச் சர்வஜகத்தின் காரணத்தன்மை அங்கீகரிக்கினல்லது சித்தியாது. உலகத்தில் ஒருமண்ணுருவமான உபாதான காரணத்தின் ஞானத்தினாலேயே அம்மண்ணின் காரியரூபமான கடசராவாதிகளின் சர்வஞானமும் உளவாகின்றன: காரணத்தின் ஞானத்தாலல்லாமல் காரியங்களின்ஞானம் உளதாகாது; ஆகலின், முன்செய்த பிரதிக்ஞையை யுக்திவலியால் நன்றாகப் பிரதிபாதனஞ் செய்யும்பொருட்டு ஸ்ரீ பகவான் அந்த ஞானசொரூபமான பிரமத்தினின்றும் ஜடாஜடரூபங்களாகிய சர்வப்பிரபஞ்சத்தினுற்பத்தியை இரண்டு செய்யுட்களால் அருளிச்செய்கின்றார்.]

மண்ணுநீருமெரி தீயும்வாயுவுமவ் வானினோடுமன புத்தியு, மெண்ணுநீர்மைகளில் யானெனும்பதமு மென்னுமெட்டுமிவை யன்றியே, பண்ணுநீர்மைகளின் மேலதாயுலகி லியாவையுங்கொடு பரித்துடற், கண்ணுநீடுயிரு மாகியென்னுடைய மாயைநிற்பதுகை வேலினோய்.

(இ-ள்.) மண்ணும் நீரும் எரி தீயும் வாயுவும் அவ்வானினோடு மன புத்தியும் = பிருதிவியும், ஜலமும், எரியாநின்றதேயுவும், வாயுவும், ஆகாசமும், மனமும், புத்தியும்,—எண்ணும் நீர்மைகளில் = சருதாகிற்குந் தேகேந்திரியாதிகுணங்களில்—யான் எனும் பதமும் என்னும் எட்டும் = நானென்றபிமானம்பண்ணும் அகங்காரமும் என்று சொல்லும் இவ்வெட்டும்,—இவை அன்றி = இவ்வெண்வகைப்பேதங்களையுடையதா யிருப்பதுமன்றி — பண்ணும் நீர்மைகளின் மேலதாய் = ஒன்றை மற்றொன்றானது செய்யாநிற்கு நீர்மையினையுடைய இவ்வெண்வகையான அபரப்பிரகிருதியினும் விலட்சணமாய்,—உலகில் யாவையும் கொடுபரித்து = உலகின்கண்ணுள்ள அனைத்தையும் தான் எடுத்துத்தரித்து—உடற்கண்ணும் = தேகத்தின்கண்ணும், நீடு உயிரும் ஆகி = நிலைத்த சீவரூபமுமாய்—என்னுடைய மாயை நிற்பது = (தற்பதார்த்தரூபனான) எனது மாயைதான் நிற்பது:—கை வேலினோய் = கைவிடா வேலையுடைய அருச்சுனா.—எ-று.



'உயிரும்' என்றதின் உம்மை இறந்தது தழீஇயது. சாங்கியமதநூலோர் பஞ்சதன்மாத்திரை, அகங்காரம், மகதத்துவம், அவ்வியத்தம் என்னும் இவ்வெட்டினையும் பிரகிருதியென்பர். மகாபூதமைந்து, கருமேந்திரியமைந்து, ஞானேந்திரியமைந்து, மனமொன்று இப்பதினாறினையும் விகாரமென்பர்; இவ்வெண்வகைப் பிரகிருதிகளையும், பதினாறு விகாரங்களையுஞ்சேர்த்து இருபத்துநான்கு தத்துவமென்று சொல்லுவர். "மண்" முதலியவைந்து சப்தங்களால் லட்சணாவிருத்தியினால் பிருதுவிமுதலிய பஞ்சமகாபூதங்களின் சூட்சுமாவஸ்தைரூபமான கந்தமுதலிய பஞ்சதன்மாத்திரைகள் கொள்ளற்பாலனவாம். 'மனம்' என்னுஞ் சப்தத்தால் லட்சணாவிருத்தியினால் மனத்தின் காரணரூபமான அகங்காரங் கொள்ளற்பாலதாம்; எதனாலெனின்? முன்னே கந்தமுதலிய பஞ்சதன்மாத்திரைகளைச் சொல்லிப் பின் அத்தன்மாத்திரைகளினுற்பத்தி அகங்காரத்தினாலேயே சொல்லப்படுகிறது ஆதலால், தன்மாத்திரைகளின் சமீபத்தன்மையினால் இங்கே மனசப்தத்தால் அகங்காரத்தைக் கொள்ளலே உசிதமாம். 'புத்தி' என்னுஞ் சப்தம் அவ்வகங்காரத்தின் காரணரூபமான மகதத்துவத்தைச் சக்திரூப முக்கியவிருத்தியினாலேயே உணர்த்துகின்றது. 'அகங்கார' சப்தத்திற்கு லட்சணாவிருத்தியினால் சர்வவாசனைகளோடுகூடிய அவித்தியாரூபமான அவ்வியத்தங்கொள்ளற்பாலதாம்; எதனாலெனின்? பிரவர்த்தகத்வ முதலிய அசாதாரணதர்மம் அகங்காரம், அவ்வியத்தமென்னும் இவ்விரண்டினிடத்துஞ் சமானமாகவே உளது ஆதலால், அகங்கார சப்தத்தால் அவ்வியத்தத்தைக்கொள்ளலே உசிதமாம். சாட்சியாகிய ஆன்மாவினால் விளங்கப்படுவதால் அபரோட்சமாயும், பரமேசுரனுடைய சத்திரூபமாயும், அநிர்வசநீய சுபாவமுடையதாயும், திரிகுணாத்மகமாயும் மாயாரூபமான பிரகிருதியுள்ளது; அம்மாயாரூபமான பிரகிருதி பஞ்சதன்மாத்திரை, அகங்காரம், மகதத்துவம், அவ்வியத்தம் என்னும் இவ்வெண்வகையான பேதங்களை யடைந்திருக்கிறது; அவ்வெண்வகையான பிரகிருதியின் கண்ணே ஜடப்பிரபஞ்ச முழுவதும் அந்தர்ப்பூதமாம். முன்னே சொன்ன அசேதனவர்க்கரூபமான க்ஷேத்திரமென்னும்பெயருடைய எண்வகையான பிரகிருதி அபரை; அவ்வபரை ஜடமாகலானும், பரார்த்தமாகலானும், சம்சாரபந்தரூபமாகலானும் நிகிருஷ்டமேயாம். அசேதனவர்க்கரூபமாயும், க்ஷேத்திரரூபமாயுமுள்ள அபரையென்னும் பிரகிருதியினும் விலட்சணமாய்த் தற்பதார்த்தரூபனாகியஎனது

ஆன்மரூபமான க்ஷேத்திரக்ஞனென்னும் விசுத்தப்பிரகிருதியானது சர்வத்தினும் உத்கிருஷ்டமாவதால் பரையென்னும் பிரகிருதியாம். சர்வசங்காதங்களிலும் பிரவிஷ்டமாய் க்ஷேத்திரக்ஞனென்னும் பெயருடைய சீவரூபமான பரையென்னும் பிரகிருதியினாலேயே இத்தேகேந்திரியாதிகளான ஜடஜகத்துக்கள் தாரணஞ் செய்யப்பட் டிருக்கின்றன வென்றறிக. (௩)

[மேலைச் செய்யுளால் அபரை, பரை என்னும் இருவகைப் பிரகிருதிகளை யருளிச்செய்து இப்போது அவ்விருவகைப் பிரகிருதிகளில் காரியலிங்கமான அநுமானப்பிரமாணத்தைக் காண்பிப்பவராய் ஸ்ரீபகவான் தனக்கு அப்பிரகிருதிவாயிலாகச் சர்வஜகத்தின் உற்பத்திமுதலியவற்றின் காரணத்தன்மை யருளிச்செய்கின்றார்.]

கண்ணினாற்றெரிய லுற்றுணர்ந்திடி விரண்டினாலும்
வரு காரியம், மண்ணினிற்ப நடப்பவென்றபொருள் யாவுமற்
றவிரு பான்மையே, நண்ணிநிற்பதுல காதலாலுலகி னாசவுற்
பவமு நானலா, தெண்ணின் மற்றறிவ தில்லையெப்பொருளு
மென்னினன்னியம தில்லையால்.

(இ-ள்) மண்ணில்=மண்ணுலகமுதலியவற்றில்—நிற்ப நடப்ப என்ற பொருள் யாவும் = அசேதனம், சேதனம் என்று சொல்லப்படுகின்ற பொருள்கண் முழுவதும்—இவ்விரண்டினாலும் வரு காரியம்=முன்சொன்ன இருவகைப் பிரகிருதிகளாலும் வருகின்ற காரியங்களாம்(என்றிவ்வாறு)—கண்ணினால் தெரியலுற்று உணர்ந்திடு=உனதறிவினாலாராய்ந்து நிச்சயிப்பாய்.—உலகு நண்ணி நிற்பது=பிரபஞ்சமானது (தனக்குக் காரணரூபமாகச்) சார்ந்து நிற்பது—மற்ற இருபான்மையே=(ஒன்றற்கொன்று) வேறு சுபாவமுடைய இருவகைப்பிரகிருதிகளையே;—ஆதலால்=அக்காரணத்தினால்,—உலகின் நாச உற்பவமும் நான் அலாது=பிரபஞ்சத்தின் நாசத்திற்கும், உற்பத்திக்கும் (மாயோபாதிகனான) நானே (முன்சொன்ன பிரகிருதி வாயிலாகக் காரணம்) அல்லாமல்—எண்ணின் மற்று அறிவது இல்லை=ஆராயின், சுதந்தர காரணாந்தரம் கிஞ்சித்துமில்லை—எப்பொருளும்=(மாயைமுதலிய) எவ்வகைப்பட்ட பொருள்களும்—என்னின் அன்னியமாது இல்லை=(மாயைக்கதிஷ்டானரூபனான) என்னினும் வேறாய்(ப்பரமார்த்தசத்தியமாக) இல்லை.—எ-று. ஆல்-அசை.

'நாசம், உற்பவம்' என்பன நான்காம் வேற்றுமைத்தொகை. 'நிற்ப நடப்ப வென்ற பொருள்யாவும், இவிரண்டினாலும் வருகாரி யம்' என்றதன்றாற்பரியம்: உலகத்தில் காரியகாரணங்கட்குச் சமான சுபாவமே காணப்படுதலின், சர்வகாரியப்பிரபஞ்சமுஞ் சேதனாசேதனரூபமாயிருக்கும் ஏதுவினால் பிரகிருதிரூபமான காரணத்தையும் சேதனாசேதனரூபமாக அநுமானஞ் செய்யத்தக்கதென்பதாம். (௪)



[ஸ்திதிக்கும் பரமேசுரனான நானே ஏதுவாமென் றருளிச்செய்கின்றார்.]

வேதமாகி நிகழ்யானலாதுலகி லென்னின்வேறென விளங்கிடும், பூதமானவை பொறுக்கவேறுபொறை யாளரில்லை
யெதுபோலெனி, லோதுமாமணி யனேகமூடுருவு கோவை
நூலினொரு பான்மைபோன்ம், பேதமானபொருடோறுநான்
மருவி நின்றவாறுநனி பேசுகேன்.

(இ-ள்.) வேதம் ஆகி நிகழ் யான் அலாது=(சத்தாய்,) ஸ்புரணமாய் விளங்காநின்ற (காரணரூபனான) யானேயல்லாமல்—உலகில்=உலகின்கண்—(வியவகாரதிருஷ்டியினால்) என்னின் வேறு என = என்னினும் அந்நியமென்று சொல்லும்படி—விளங்கிடும் பூதமானவை பொறுக்க=விளங்காநிற்கும் பூதங்களைத் தாங்க—வேறு பொறையாளர் இல்லை=வேறே தாங்குநரில்லை; (யானே அவைகளில் அநுசூதனாயிருந்து அவைகளைத் தாங்குகின்றேன்;)—எதுபோல் எனில் = இஃதெதுபோலென்னின்?—ஓதும் மா மணி அனேகம் ஊடுருவு=சொல்லாநின்ற பெருமைபொருந்திய மணிகள் அநேகங்களை யூடுருவிய—கோவை நூலின் ஒருபான்மை போன்ம்=கோவையான நூலினது ஒருதன்மைபோலாம்.—பேதம் ஆன பொருள்தோறும்=(இங்ஙனம்) ஒன்றற்கொன்று வேறான பதார்த்தங்களிலெல்லாம்—நான் மருவி நின்ற ஆறு=நான் அநுசூதனாய் நின்று அவைகளைத் தரிக்குந்தன்மையை—நனி பேசுகேன்=விஸ்தாரமாக இனிக் கூறுவேன்.—எ-று. (௫)

[பகவானே சந்திரன்முதலியவை பிரபைமுதலியவற்றின்கண்ணே கோக்கப்பட்டிருக்கை காணப்படுதலின் பரமேசுரனான என்னிடத்தே இச்சர்வஜகத்துங் கோக்கப்பட்டிருக்கிறதென்னும் உம்முடையவசனம் எப்படிச் சங்கதமாமென்னும் அருச்சுனன் சங்கைக்குப் பரமேசுரனான நானே பிரபைமுதலியரூபமாகவிருத்தலின் பிரபைமுதலியவற்றில் சந்திரன்முதலியவை கோக்கப்பட்டிருப்பது என்னிடத்தே கோக்கப்பட்டிருப்பதாமென்று ஸ்ரீ பகவான் மூன்றுசெய்யுட்களால் உத்தரமருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

திரியுமிரு கதிரினிடைத் திகழொளிநான் திருமறையி
னரியமுத லெழுத்ததுநா னடவர்பா லாண்மையுநான்
விரிபுனலிற் சுவையதுநான் மேதினியில் வாசமுநா
னெரியில்வரு வெம்மையுநா னுகாசத் தெழுமொலிநான்.

(இ-ள்.) திரியும் இரு கதிரினிடை = ஆகாயத்திற் சஞ்சரியா நிற்குஞ் சந்திராதித்தியரிடத்து—திகழ் ஒளி நான்=விளங்குகின்ற பிரபை நானுகிறேன்.—திருமறையின்=அழகிய வேதத்தின்கண்—அரிய முதல் எழுத்ததும் நான்=அருமையாகிய பிரணவமும் நானுகின்றேன்.—ஆடவர்பால்=சர்வபுருஷரிடத்தும்—ஆண்மையும் நான்=புருஷத்வரூபமான பௌருஷமும் நானுகின்றேன்.—விரி புனலில் = பரவியஜலத்தில்—சுவையதும் நான் = இரதமும் நானுகின்றேன்.—மேதினியில்=பிருதுவியில்—வாசமும் நான் = கந்தமும் நானுகின்றேன்.—எரியில் வரு வெம்மையும் நான் = அக்கினியிற் றோன்றுகின்ற உஷ்ணமும் நானுகின்றேன்.—ஆகாசத்து எழும் ஒலி நான் = ஆகாயத்தின்கண்ணெழுகின்ற சப்தமும் நானுகின்றேன்.—எ-று.

'திரியுமிருகதிரினிடைத் திகழொளிநான்' என்றதற்குச் சந்திரசூரியரிடத்திற் பிரகாசரூபனுன என்னிடத்தே அச்சந்திரசூரியர் கோக்கப்பட்டிருக்கிறார்களென்று தாற்பரியம். ஏனையவற்றிலும் இவ்வாறே கண்டுகொள்க. சுவை, வாசம், வெம்மை, சப்தம் என்று கூறியவை தன்மாத்திரையெனக்கொள்க. இனம்பற்றி வாயுவும் இங்கே கொள்ளத்தக்கதாம். (சு)

[இதுவுமது.]

ஆன்றவறி வுடையோர்பா லறிவுநா னடங்கினர்பால்
வான்றவநான் வளர்நன்மை பூண்டார்பால் வண்புகழ்நான்
றோன்றுமிகு திறலோர்பாற் காமமுறுத் தொல்வலிநா
னூன்றுபொரு ளனைத்தினுக்கு முயிராகி யுள்ளேனுன்.

(இ-ள்.) ஆன்ற அறிவுடையோர்பால்=மாட்சிமைபொருந்திய புத்தியுடைய புருஷரிடத்து—அறிவு நான் = யாதொரு புத்தியுண்டோ அந்தப்புத்தி நானுகின்றேன்.—அடங்கினர்பால் வான் தவம் நான்=(மனம்) அடங்கிய வானப்பிரஸ்தர்முதலிய தவத்தினரிடத்துள்ள (சீதோஷ்ணம், பசிதாகமுதலிய துவந்துவங்களைச் சகிக்குஞ்



சாமர்த்திய ரூபமாகிய) மேலான தவம் நானுகின்றேன்.—வளர் நன்மை பூண்டார்பால் வண் புகழ் நான் = வளராநின்ற புகழ்பொருந்தினேரிடத்து மெய்ம்மையான புகழ் நானுகின்றேன்.—தோன்றும் மிகு திறலோர்பால்=விளங்காநிற்கும் மிக்கவலியுடையோரிடத்து—காமம் உருத் தொல் வலி நான்=காம (ராகங்களை) அடையாத தொன்மையான சாமர்த்தியரூபம் நானுகின்றேன்.—ஊன்று பொருள் அனைத்தினுக்கும்=நிலையான தாவரஜங்கமரூபமான சர்வப்பிராணிகளிடத்தும்—உயிர் ஆகி நான் உள்ளேன்=ஆயுள்ரூபமான சீவனமாகி நானே இருக்கின்றேன்.—எ-று.

தத்துவாதத்துவங்களின் விவேகசாமர்த்தியத்திற்கு இங்கே புத்தியென்று பெயராகலின் அதனையுடையோரை, 'ஆன்றவறிவுடையோர்' என்றார். 'தவம்' வாகியாந்தரபேதத்தால் இருவகைத்து; அவற்றுள், சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மை உட்டவம்: சிங்குவை, உபஸ்தமுதலிய இந்திரியங்களின் நிக்கிரகம் வெளித்தவம் என்றறிக. இங்கே 'நன்மை' என்றது புகழை; அந்நியரான சத்துருக்களைச் சயிக்கும்படியான சாமர்த்தியத்திற்கு, 'புகழ்' என்று பெயர். 'தோன்று மிகுதிறலோர்' என்றது, சம்சாரத்தினின்றும் பராமுகமான சாத்துவிகபலமுடைய புருஷரை. கிடையாத விஷயங்களைக் கிடைக்கப்பண்ணுங்காரணமில்லாதிருந்தும் இவ்விஷயங்கள் நமக்குக் கிடைக்கவேண்டுமென்னும் சித்தத்தின் விருத்திவிசேஷத்திற்கு, 'காமம்' என்று பெயர். கிடைத்தவிஷயங்களை நாசம்பண்ணும்படியான காரணம் நேரிட்டிருந்தும் இவ்விஷயம் நாசமடையாதிருக்கவேண்டுமென்னும் சித்தத்தின் விருத்தி விசேஷத்திற்கு இராகமென்று பெயர். "காமராகவிவர்ஜிதம்" என மூலசுலோகத்திருத்தலின் இராகம் வருவித்தாம். பண்டேசுருதியாதிகளாற்கூறப்பட்டிருத்தலின், 'தொல்வலி' என்றார். (எ)

[அருச்சுன இவ்வாறு வெகுபதார்த்தங்களை யெண்ணுவதால் என்ன பிரயோஜனம்; இச்சர்வஜகத்தும் என்னிடத்தே யுண்டாய், என்னிடத்தே கோக்கப்பட்டிருக்கிறதென்னும் இவ்வர்த்தத்தை இப்போது ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

மூன்றுகுண வகையாகி முடிகின்ற பொருண்முழுதுந் [வு
தோன்றுவது மென்னிடையே யெனைத்தொடர்ந்தே நிற்பது
மான்றவமற் றவற்றினிடை யான்றோன்றே னவற்றினுக்குச்
சான்றெனநிற் பேனல்லா லவைசார்ந்து வாழேனுன்.

(இ - ள்.) மூன்று குண வகை ஆகி=(தத்தம் கர்மவ்சத்தால் ஜநியாநின்ற) சாத்துவிகபாவம், இராஜஸபாவம், தாமதபாவங்களை யுடையனவாய்—முடிகின்ற பொருள் முழுதும்=(தோன்றி) அழிகின்ற பிராணிகள் முழுவதும்—தோன்றுவதும் என்னிடையே= உண்டாவதும் பரமேசுரனான என்னிடத்தே—எனைத் தொடர்ந்தே நிற்பதுவும் = என்னைப்பற்றியே இருப்பதும் (என அறி.)—ஆன்றவ=அறிவு மிகுந்த அருச்சுனா—அவற்றினிடை = அக்கற்பித பதார்த்தங்களில்—யான் தோன்றேன்=பரமேசுரனான நான் உற்பந்நமாகேன்;—அவற்றினுக்கு = அச்சடபதார்த்தங்களுக்கு — சான்றென நிற்பேன் அல்லால் = சாட்சியாக நிற்பேனல்லாமல்—அவை சார்ந்து நான் வாழேன்=அக்கற்பித பதார்த்தங்களை ஆதாரமாகவடைந்து (ஆதேயரூபமாக) யான் சீவியேன்.—எ-று. மற்று-அசை நிலை.

சமதமமுதலியவை சாத்துவிகபாவம். சந்தோஷம், கர்வமுதலியவை இராஜஸபாவம். சோகமோக முதலியவை தாமதபாவம். பரமேசுரனான எனது சத்தாஸ்பூர்த்தியையடைந்து சர்வபதார்த்தங்களும் எனததீனமாக இருக்கின்றனவல்லாமல் அவற்றின் அதீனமாக யான் இலனேனென்பதாம். (அ)

[இப்படிப்பட்ட பரமேசுரரான உம்மை என்னகாரணத்தினால் உலகம் அறியவில்லையென்னின்? அதற்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

மைக்குணங்களெனமுனம்யான் வகுத்துநினக்குரைத்திட்ட
விக்குணங்கண் மூன்றாலு மயக்கப்பட் டறிவிழந்து
தொக்கிணங்கு கின்றவுயி ரிவையெல்லாஞ் சுடர்வேலோ
யக்குணங்கள் கடந்தவெனை யறியுமோ வறியாவால்.

(இ - ள்) மைக் குணங்கள் என = இருள்போல மயக்கத்தக்க குணங்களென்று—யான் முனம் வகுத்து நினக்கு உரைத்திட்ட= நான் முன்வகுத்து உனக்குக்கூறிய—இக்குணங்கள் மூன்றாலும்= இந்தச்சத்துவாதி குணங்கள் மூன்றினாலும்—மயக்கப்பட்டு=மோகிக்கப்பட்டு—அறிவு இழந்து=(இன்னது நித்தியம், இன்னது அநித்தியம் என்னும்) விவேகமிழந்து—தொக்கு இணங்குகின்ற உயிர் இவை எல்லாம்=உடல்களிற்றொதான்மியமாகப் பொருந்தியிருக்கின்ற இப்பிராணிகள் முழுவதும்—சுடர் வேலோய்=ஒளிராநின்ற வேலையுடைய அருச்சுனா—அக்குணங்கள் கடந்த எனை=அம்முக்குணங்களைக் கடந்த (வனாயும், ஷட்பாவவிகாரரகிதனாயும், சொப்பிரகாசனாயுமுள்ள பரமேசுரனை) என்னை—அறியுமோ=அறியுமா?—அறியா=அறியமாட்டாவாம்.—எ-று. ஆல்-அசைநிலை. (௯)



[பகவானே பூர்வஞ்சொன்ன அநாதிசித்தமானமாயையின்சத்துவாதிகுணங்களோடு சம்பந்தமான இப்பிராணிகட்குச் சுதந்தரத்தன்மையில்லாமையால் அத்திரிகுணாத்மகமான மாயையை நிவிர்த்திசெய்யுஞ் சாமர்த்தியங் கூடுமோவென்னுமென்னும் அருச்சுனன் சங்கைக்கு அந்நியவுபாயங்களால் மாயாநிவிர்த்தி கூடாதாயினும் ஓர்பகவத்சரணத்வத்தா லடையாநிற்குந் தத்துவஞானத்தால் மாயாநிவிர்த்தி கூடுமென்று ஸ்ரீ பகவான் உத்தரமருளிச்செய்கின்றார்.]

இவ்வகைய குணமூன்றி னியற்கைத்தா யாராலுஞ்
செய்வகைய தல்லாவென் மாயையினாற் றிகைப்பொழிந்திங்
குய்வகைய தரிதெவர்க்கு மென்னையே யெப்பொழுது
மெய்வகையோ டடைகின்ற மனமிலரேல் வேல்வேந்தே.

(இ-ள்.) வேல் வேந்தே=வேலையுடைய அரசனே—இவ்வகைய குணம் மூன்றின் இயற்கைத்து ஆய்=இத்தன்மையவான முக்குணங்களின் சுபாவத்தையுடைத்தானதாய்—யாராலும் செய் வகையது அல்லா = யாவராலுஞ் செய்யுந்தன்மையதல்லாத—என் மாயையினால் திகைப்பு ஒழிந்து=என்னுடைய மாயையினால் மயக்கும் மயக்கமொழிந்து—இங்கு உய்வகையது எவர்க்கும் அரிது=இச்சம்சாரதசைக்கண் பிழைக்குந் தன்மையானது யாவர்க்குமரியது;—என்னையே=(சர்வத்திற்கும் அதிஷ்டானமான) என்னைத்தானே—எப்பொழுதும்=எக்காலமும்—மெய் வகையோடு = மெய்யன்போடும்—அடைகின்ற மனம் இலரேல் = உபாசிக்கின்ற மனமிலராயின்.—எ - று.

'என்னையே யெப்பொழுது, மெய்வகையோ டடைகின்ற மனமிலரே, லென் மாயையினாற் றிகைப்பொழிந்திங், குய்வகையதெவர்க்குமரிது' எனவொட்டுக. முப்புரிசேர்ந்த கயிறானது அத்தியந்தந் திடமாய்ப் புருஷனைப் பந்தித்தற் கேதுவாதல்போலத் திரிகுணாத்மிகையான மாயையும் அத்தியந்தந்திடமாய்ச் சீவனைப் பந்தித்தற் கேதுவாகவுளதென்னும் பொருளை உணர்த்தும்பொருட்டே ஸ்ரீ பகவான் மாயைக்கு, 'இவ்வகைய குணமூன்றி னியற்கைத்தாய்' என்

னும் விசேஷணம் அருளிச்செய்தனர். 'யாராலுஞ், செய்வகைய தல்லா' என்றதற்குச் சொப்பிரகாச சொரூபமான தேவசம்பந்தியானவென்று பொருள். சிவேசுரவிபாகமில்லாத சுத்த சைதந்நியமாத்திரமான தேவனது ஆசிரயரூபமாகவும், விஷயரூபமாகவும் யாதொரு மாயை கற்பனை செய்யப்படுகிறதோ அந்தமாயைக்குத் தேவசம்பந்தியென்றுபெயர். சீவன், ஈசுரன், ஜகத்துமுதலிய விபாகமில்லாத சுத்த சைதந்நியத்தின்கண்ணே அத்தியஸ்தமான அநாதிரூபமாகிய அவித்தை சத்துவகுணத்தின் பிரதானத்தன்மையினால் அத்தியந்தஞ் சொச்சமாம்;இப்படிச் சொச்சமான அவித்தை சொச்சமான தர்ப்பணம் முகத்தினுபாசத்தைக் கிரகணஞ்செய்வதுபோலச் சைதந்நியத்தினுபாசத்தைச் கிரகணஞ்செய்கிறது. தர்ப்பணரூபமான வுபாதியின் பசுமைமுதலிய தோஷங்கள் முகரூபமான விம்பத்தைப் பரிசியாததுபோல அவித்தைரூபமான வுபாதியின்றோஷங்கள் சம்பந்தியாமையின் பரமேசுரனே விம்பஸ்தானியாம். தர்ப்பணத்திலுள்ள பிரதிவிம்பம் அத்தர்ப்பணத்தின் பசுமைமுதலிய தோஷங்களோடு சம்பந்தமாவதுபோல அவித்தியாரூபமான வுபாதியின் றோஷத்தோடு சம்பந்தமாவதால் சீவான்மா பிரதிவிம்பஸ்தானியாம். விம்பரூபமான ஈசுரனாலேயே சீவர்கட்குப் போகத்தின்பொருட்டு ஆகாசாதிக்கிரமமாகச் சரீரம், இந்திரியமுதலியவைகளின் சங்காதங்களும், அச்சங்காதங்களின் போக்கியரூபமான சம்பூர்ணப் பிரபஞ்சங்களும் உண்டாகின்றனவென்று கற்பனைசெய்யப்படுகின்றது; அங்கே விம்பப் பிரதிவிம்பங்களிரண்டிலும் சுத்தமுகமானது அநுகதமாயிருப்பதுபோல ஈசுரன், சீவனென்னும் இரண்டிலும் அநுகதமாக மாயாவுபகித சைதந்நியமுளது; அச்சைதந்நியம் சாட்சியென்று சொல்லப்படுகிறது; அச்சாட்சி சைதந்நியமே தன்னிடத் தத்தியஸ்தமான மாயையையும், மாயாகாரியமான சர்வப்பிரபஞ்சங்களையும் பிரகாசிப்பிக்கிறது; ஆதலால், அச்சாட்சியாகிய சைதந்நியாபிப்பிராயங்கொண்டு அவித்தியாரூபமான மாயையைத் தேவசம்பந்தியென்றும், விம்பரூபமான ஈசுராபிப்பிராயங்கொண்டு மாயையை, 'என்மாயை' என்றும் ஸ்ரீ பகவான் அருளிச்செய்தனர். பிரதிவிம்பரூபனான சீவன் எதுபரியந்தம் விம்பரூபமான ஈசுரனோடுகூடத் தனது ஐக்கியத்தையறியவில்லையோ அதுபரியந்தம் சலப்பிரதிவிம்ப சூரியன் ஜலத்தின் சலனமுதலான விகாரங்களையடைவதுபோல அவித்தியாரூபமான வுபாதியின் அநேகமாயிரவிகாரங்களை அநுபவியாநிற்பதை, 'மாயையினாற்றிகைப்பு' என்றார். விம்பரூபமான ஈசுரன் அநந்தசக்தியுடையவன், அவித்தியாரூபமான மாயையின்நியந்தா, சர்வப்பிரபஞ்சத்தையுமறிபவன், சர்வசுபாசுபகர்மபலப்பிரதாதா, பரிபூரணாநந்தகனமூர்த்தி, பக்தஜனங்களை உத்தாரஞ் செய்தற்பொருட்டு, அநேக அவதாரங்களைத் தரிப்பவன், சகலர்க்கும் பரமகுரு என்றிவ்வாறு விம்பபூத பரமேசுரனைப் பிரதிவிம்பரூபனான சீவன் சர்வகர்மங்களையுஞ் சமர்ப்பணஞ்செய்து ஆராதனஞ்செய்யும்போது அவ்விம்பத்தின்கண் சமர்ப்பணஞ்செய்த குணங்கள் பிரதிவிம்பத்தினிடத்தே பாரமாவதால் இச்சீவன் சர்வபுருஷார்த்தங்களையுமடைகின்றனன்: இந்தவார்த்தை பிரகலாதருங் கூறியிருக்கின்றனர்; அஃதெங்ஙனமெனின்? தர்ப்பணத்திற் பிரதிவிம்பிதமுகத்தில் எப்போது திலகமுதலிய ரூபமான சிறப்பினபேட்சையுண்டாகிறதோ அப்போது விம்பபூதமுகத்தின்கண்ணே அத்திலகமுதலிய சின்னங்கள் செய்யப்படுகிறது; அந்த விம்பபூத முகத்திற்செய்த திலகமுதலிய சின்னங்கள் தாமே அந்தப்பிரதிவிம்ப முகத்திற் பிரதீதியாகின்றன: விம்பபூதமுகத்தில் திலகமுதலியவற்றைச் செய்யினல்லாமல் பிரதிவிம்பத்தில் அத்திலகமுதலியவற்றை யடைவிக்கும்படியான வுபாயம் வேறொன்றும் எப்படியில்லையோ அப்படி விம்பபூதனான ஈசுரனிடத்துச் சமர்ப்பணஞ்செய்த தர்மமுதலிய புருஷார்த்தங்களையே பிரதிவிம்பரூபனான சீவனடைகின்றனன். விம்பபூத ஈசுரனிடத்துத் தர்மாதிகளின் அர்ப்பணஞ் செய்யினல்லாமல் பிரதிவிம்ப ரூபனான சீவனுக்குப் புருஷார்த்தப் பிராப்தியில் வேறே யாதொரு உபாயமுமில்லையென்று பிரகலாதர் கூறியிருக்கின்றனர்; இவ்வாறு சர்வத்திர பரிபூரணமான பகவான் வாசுதேவனை ஆராதனஞ்செய்யும் அதிகாரியினுடைய அந்தக்கரணம் எப்போது ஞானத்திற்குப் பிரதிபந்தமான பாவத்தினின்றும் விடுபட்டு ஞானத்திற்கநுகூலமான புண்ணியங்களோடு கூடினதாகவாகிறதோ அப்போது அத்தியந்தம் நிர்மலதர்ப்பணத்தில் முகமானது நன்றாகப் பிரதீதியாகிறதுபோலச் சர்வகர்மங்களையுந் தியாகபூர்வகமாகவும், சமதமாதி பூர்வகமாகவும் பிரமத்தை யறிந்திருப்பவரான குருவின் சமீபமடைந்து செய்யுஞ் சிரவண, மனன, நிதித்தியாசனங்களாற் பக்குவமான அத்தியந்தஞ் சொச்சமாகிய அந்தக்கரணத்தில்நான் பிரமரூபமாகிறேனென்றிவ்வாறான சாட்சாத்காரரூபவிருத்தி உற்பந்நமாம்; இப்படிப்பட்ட சாட்சாத்காரரூபமான விருத்தியில் பிரதிவிம்பித்த சைதந்நியம் அப்போதே

சுவாசிரய சுவவிஷயமான அவித்தையை நாசஞ்செய்கிறது; அது நாசமானபின் அவ்விருத்தியோடுகூடச் சர்வகாரியப்பிரபஞ்சமும் நாசமாமென்னும் இந்தச் சர்வார்த்தங்களையும் ஸ்ரீ பகவான் 'என்னையேயெப்பொழுது, மெய்வகையோடடைகின்றமனமிலரோ, லென்மாயையினாற் றிகைப்பொழிந்திங், குய்வகைய தரிதெவர்க்கும்' என்னும் இவ்வளவு வாக்கியங்களால் அருளிச்செய்தனரென்றறிக. 'என்னையே' என்னுந் தேற்றேகாரம், பிரத்தியகபின்னபிரமத்தில் சர்வவுபாதிகளு மில்லாதிருக்குந்தன்மையை உணர்த்துகின்றது. 'எவர்க்கு மனமிலரோல்' என்னும் பன்மைவசனம் தேகேந்திரியாதிரூபசங்காதங்களின் பேதத்தாற் கற்பனைசெய்துள்ள ஆன்மாவின் பேதப்பிராந்தியை அநுவாதஞ்செய்ததேயல்லாமல் வாஸ்தவமாக ஆன்மாவின் பேதத்தை உணர்த்தவில்லை. சாட்சாத்காரத்தாலல்லாமல் கர்மோபாசனைகளால் மாயாநிவிர்த்தி கூடாதாதலால், 'என்னையே யெப்பொழுது, மெய்வகையோ டறிகின்ற மனமிலரோல்' என்று சொல்லவேண்டியவிடத்தில், 'அடைகின்றமனமிலரோல்' என்று சொன்னது, எவ்வதிகாரிபுருஷன் ஓர் பரமேசுரனான என்னைச் சரணடைந்து என்னைச் சிந்திப்பவனாய்க் காலத்தைப் போக்குவனோ அவ்வதிகாரிபுருஷன் பரமேசுரனான எனது பிரேமையினால் ஐசியாநின்ற மகாநந்தசமுத்திரத்தில் மக்கினமான மனமுடையவனாதலால் எனது மாயையின் சம்பூர்ணமான குணவிகாரங்களும் அவனை அநாதரஞ்செய்யாது; பின்னையோ நமது விலாசவிநோதத்தில் இவன் குசலனாயிருத்தலால் நம்மை நாசம்பண்ணுவதிற் சமர்த்தனாகுமென்றெண்ணித் தானே நிவிர்த்தியாய்விடுமென்னுங் குறிப்பு. (௧௦)

[பகவானே இவ்வாறு பரமேசுரரான உம்மைச் சரணடைந்து உம்முடைய நிரந்தரசிந்தனத்தால் இம்மாயை நிவிர்த்தியாகுமானால் சர்வாநர்த்தங்கட்கும் மூலபூதமாகிய இம்மாயையை நாசஞ்செய்யும்பொருட்டுச் சகலரும் உம்மை ஏன்சரணடையவில்லையென்னும் அருச்சுனன் சங்கைக்கு அநேக ஜநநங்களிற் சம்பாதித்த பாவரூபமான பிரதிபந்தவசத்தால் என்னைச் சரணடையவில்லையென்று ஸ்ரீபகவான் உத்தரமருளிச்செய்கின்றார்.]

ஊழாலே வருமிந்த மாயையினா லேயுள்ளம்
பாழாக வறிவிங்கே பறியுண்டு நெறிநின்றோர்
வீழாத தீவினையே வினையாக விளைக்கின்றார்
கீழானோ ரெனையடையா ரடைவாருஞ் சிலருளர்கேள்.



(இ - ள்.) ஊழாலே வரும் இந்த மாயையினாலே=ஊழின்வலியினால் வாராநிற்கும் (சரீரேந்திரியாதி சங்காதங்களிற் றாதான்மியப்பிராந்திரூபமாகப் பரிணாமமடைந்த) மாயையினாலே—உள்ளம் பாழ் ஆக = அந்தக்கரணமானது சூனியமாகும்படி—அறிவு இங்கே பறியுண்டு =(இன்னகாரியம் நமக்கர்த்தசாதனம், இன்னகாரியம் நமக்கநர்த்தசாதனமென்னும் விவேகசாமர்த்தியரூப) ஞானமானது இவ்வுலகிற் பிரதிபந்தம் பண்ணப்பட்டு—நெறி நின்றோர் = அதன்வழி நிற்பவரும், (* ஆசுரபாவத்தில் நிற்பவருமென்றபடி)—வீழாத தீவினையே வினை ஆக விளைக்கின்றார்=(அநுபவியாமற்) கெடாததாயுள்ள பாவத்தையே தமக்குத் தொழிலாகச் செய்கின்றவரும்,—(இதனால்) கீழானோர்=நராதமரும் (ஆகிய இவர்)—எனை அடையார்=பரமேசுரனான என்னைப் பஜியார்கள்;—அடைவாரும் =(என்னைப்) பஜிப்பவரும்—சிலர் உளர் கேள்=சிலபேருளர்; (அவரை இனிக்கூறுவேன்) கேட்பாய்.—எ-று.

பாவவினை செய்பவரை நராதமர் என்றது, இகத்தில் பெரியோரால் நிந்திக்கப்படுவதாலும், பரத்தில் அநேக அநர்த்தங்களை யடைவதாலும் என்க. 'ஊழாலேவருமிந்த மாயையினாலேபறிவிங்கே பறியுண்டு'' என்றதனால் மாயையின் ஆவரணசக்தியும், 'நெறிநின்றோர்' என்றதனால், மாயையின் விட்சேபசக்தியுங் கொள்ளற்பாலனவாம்; கொள்ளவே, மாயையானது சொரூபாநந்தத்தை ஆவரணஞ்செய்து உற்பந்நமாக்கிய தேகத்தின்கண் ஆன்மத்வபுத்திரூபமான யாதொரு பிரமமுண்டோ அத்தேகாபிமானத்தால் அதைப் புஷ்டிசெய்தற்பொருட்டு எப்புருஷர் அநேக பிரகாரமான பாவங்களைச் செய்கின்றனரோ அந்தப் பாவகர்மங்களால் மூடராயும், சர்வமநுஷரிலும் அதமராயுமுள்ள அப்புருஷர் பரமேசுரனான என்னை ஆராதனஞ் செய்யாரென்பது பெறப்படுகின்றதென்பாருமுளர். (௧௧)

[எந்தப் புருஷர் ஆசுரபாவத்தினின்றும் விடுபட்டுப் புண்ணிய கர்மஞ்செய்பவராய் இஷ்டாநிஷ்டவஸ்து விவேகமுடையரோ அந்தப் புருஷர் புண்ணியகர்மத்தின் றாரதம்மியத்தால் நான்குவகையராய்ப் பரமேசுவரனான என்னை ஆராதிக்கின்றனர்; அப்படியே அவரவர் தமக்குத் தக்ககிரமமாகக் காமம் விட்டவராய் எனது பிரசாதத்

* ஆசுரபாவம்=அசுரனாகிய விரோசனனது சித்தத்தின் அபிப்பிராயம்; இது இனிப்பதினாரு மத்தியாயத்திற் கூறப்படும்.

தால் மாயையைக் கடக்கின்றனரென்னும் பொருளை ஸ்ரீ பகவான் இப்போது அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

செல்வம் விரும்பினர் செல்ல லடைந்தோ
ரல்லல் கெடுக்கவெ னன்புசெய் வோர்க
ணல்ல தறிந்தமெய்ஞ் ஞானியிந் நால்வர்
வல்லதி லென்னை வணங்கு தவத்தோர்.

(இ-ள்.) செல்வம் விரும்பினர் = ஐசுவரியமடைய இச்சித்தவரும்;—செல்லல் அடைந்தோர்=ஆபத்தை யடைந்தவரும்,—அல்லல் கெடுக்க என் அன்பு செய்வோர்கள் = ஜநநத்துன்பத்தைக் கெடுத்தற்பொருட்டு (ஆன்மஞானத்தை யடையவேண்டி) என்விஷயமான ஆராதனஞ்செய்யுஞ் சிஞ்ஞாசை யுடையோரும்,—நல்லது அறிந்த மெய்ஞ்ஞானி=(பரிபூர்ணமாய், அத்துவிதீயமான எனது) வாஸ்தவ சொரூபத்தைச் சாட்சாத்கரித்த தத்துவஞானியும் (ஆகிய);—இந்நால்வர்=இந்நான்குவிதமான சுகிருதிக்களும்—வல்லதில்=தமது சக்தியளவில்—என்னை வணங்கு தவத்தோர்=(பரமேசுரனை) என்னை ஆராதிக்குந் தவத்தினராம்.—எ-று.

இங்கே 'செல்வம்' என்றது, தனம், ஸ்திரீ, புத்திராதிகளான போகசாதனங்களை. 'செல்லல்' என்றது, சத்துரு, வியாக்கிராதி ரூபமான ஆபத்தை. முதல் மூவருஞ் சகாமராம்; ஞானியொருவன் நிஷ்காமனும். செல்வமடைய விரும்பி ஈசுரனை யாராதித்ததற்கு உதாரணம்;—இகலோக போகசாதனங்களையிச்சித்து ஈசுரனையாராதித்த சுக்கிரீவன், விபீஷணன்முதலினோரும், பரலோகபோகசாதனங்களை யிச்சித்து ஈசுரனையாராதித்த துருவன்முதலினோருமாம். செல்லலடைந்து ஈசுரனையாராதித்ததற்கு உதாரணம்;—யாகத்திற்குப் பங்கம் வந்தபோது குரோதமடைந்த இந்திரன் முல்லைநிலத்திற் பெருமழைபெய்விக்க அதனால் துக்கமடைந்த அம்முல்லைநிலத்துள்ளோர் ஈசுரனை யாராதித்ததும், சராசந்தனென்னும் அரசனது சிறைச்சாலையி லடைக்கப்பட்டு ஆர்த்தராயிருந்த சர்வராஜாக்களும் ஈசுரனை யாராதித்ததும், துரியோதனனது சபையில் துகிலுரிடப்பட்டு ஆர்த்தையாய்த் திருபதை ஈசுரனை யாராதித்ததும், முதலையினாற் கவரப்பட்ட கஜேந்திரன் ஆர்த்தனாய் ஈசுரனை யாராதித்ததும் மற்றுமாம். சிஞ்ஞாசையுடையராய் ஆன்மஞானத்தை



யடைதற்பொருட்டு ஈசுரனை யாராதித்ததற்கு உதாரணம்;—முசுகுந்தர், ஜனகர், உத்தவர்முதலிய சிஞ்ஞாசுச்சனங்களாம். தத்துவஞானி மாயையைக் கடப்பதுபோல ஆர்த்தன், சிஞ்ஞாசு, அர்த்தார்த்தி இம்மூவரும் பகவத்பஜனத்தால் மாயையைக் கடப்பர்; அம்மூவருள்ளும், சிஞ்ஞாசு ஆன்மஞானோற்பத்தியால் நேரே மாயையைக் கடப்பன். ஆர்த்தன், அர்த்தார்த்தி இருவரும் சிஞ்ஞாசையுடையோரின் றன்மையை யடைந்தே மாயையைக் கடப்பர். ஆர்த்தனுக்கும், அர்த்தார்த்திக்கும் சிஞ்ஞாசுத்தன்மை பொருந்தக்கூடும். சிஞ்ஞாசுவுக்கும் ஆபத்துத்தன்மையும், ஆன்மஞானத்தின் சாதனரூபமான அர்த்தங்களின் விருப்பும் பொருந்தக்கூடும்; இக்காரணத்தால், ஸ்ரீ பகவான் ஆர்த்தன், அர்த்தார்த்தி என்னும் இவ்விருவரின் மத்தியில் சிஞ்ஞாசுவை மூலசுலோகத்தில் அருளிச்செய்தனர். ஆர்த்தன், சிஞ்ஞாசு, அர்த்தார்த்தி இம்மூவரும் சகாமபக்தர். நான்காமவனை ஞானி நிஷ்காமபக்தன். சநகாதியர், நாரதர், பிரகலாதர், பிருதுமகாராஜா, சுகதேவர் முதலிய யாவரும் நிஷ்காம ஞானிகளாகிய பக்தர். முல்லைநிலத்துவாசிகளான கோபிகாஸ்திரீகளும், அக்குரூரர், சர்மபுத்திராதியரும் நிஷ்காமமான சுத்த பிரேமபக்தர். கம்சன், சிசுபாலன் முதலியோர் பயத்தினாலும், துவேஷத்தினாலும் நிரந்தரம் பகவத்சிந்தனஞ் செய்திருந்தனர்; அப்படியிருந்தும் அவர் பக்தரென்று சொல்லப்படவில்லை. (கஉ)

[பூர்வஞ்சொன்ன நால்வரையும், 'வல்லதிலென்னை வணங்கு தவத்தோர்' என்று ஸ்ரீ பகவான் அருளிச்செய்ததால் அவற்கு அந்நால்வரும் சமானமாமென் றபிமதமாங்கொலென அருச்சுனனுக்கெழுஞ் சங்கைக்கு அற்றன்று; ஞானியே சிரேஷ்டனுமென்று ஸ்ரீ பகவான் உத்தரமருளிச்செய்கின்றார்.]

இன்னவர் தங்களி லென்னொடும் வேறா
யுன்ன லிலாமையின் ஞானி யுயர்ந்தோ
னன்னவ னல்ல னெனக்கவ னுக்கே
நன்னல னாகுவ னானு நலத்தோய்.

(இ-ள்.) நலத்தோய்=நன்மையையுடைய அருச்சுனா—இன்னவர் தங்களில் = முன்சொல்லிய நால்வருள்ளே—என்னொடும் வேறாய் உன்னல் இலாமையின்=(பரமான்மாவாகிய) என்னோடும் (பிரத்தியகான்மாவான தன்னை) அந்நியமாய் உன்னுதலில்லாமையால்—

ஞானி உயர்ந்தோன்=ஞானியே சிரேஷ்டனும்;—அன்னவன் எனக்கு நல்லன் = அந்த ஞானியானவன் (எனது ஆன்மரூபமாவதால்) எனக்கத்தியந்தம் பிரியனாவன்.—அவனுக்கு நானும் நல் நலன் ஆகுவன்=அந்த ஞானிக்கு (ஆன்மரூபமாவதால்) நானும் அத்தியந்தம் பிரியனாவேன்.—எ-று. ஏ-அசைநிலை.

சர்வவிட்சேபங்களின பாவத்தால் பிரத்தியகபின்ன பரமான்மாவின்கண் சர்வதா சமாகிதசித்தனும், அதனாலே ஏகமான பக்தியுடையவனுமாதலால் ஞானிசிரேஷ்டனாமென்பார், 'என்னொடும் வேறா யுன்னலிலாமையின் ஞானியுயர்ந்தோன்' என்றார். "அன்னவனல்லனெனக்கவனுக்கே,நன்னல னாகுவ னானும்' என்றது, ஏகமான பக்தித்தன்மையில் ஏது கூறினது. பிரீதி இருவகைத்து; ஒன்று சோபாதிகப் பிரீதி, மற்றொன்று நிருபாதிகப் பிரீதியாம்; அவற்றுள், யாதொரு பிரீதி ஒன்றில் அந்நியத்தின்பொருட் டுண்டாகாநிற்குமோ அந்தப்பிரீதி சோபாதிகப்பிரீதி; அது ஸ்திரீ, புத்திரன், தன முதலியவற்றி லுளதாகும் பிரீதி. யாதொரு பிரீதியானது ஒன்றில் அந்நியத்தின்பொருட் டுண்டாகவில்லையோ அது நிருபாதிகப் பிரீதி; அது தனது ஆன்மாவின்கண் ணுளதாகும் பிரீதி. அந்நியத்தின் பொருட்டுளதாகாமையின், ஆன்மவிஷயமான பிரீதி நிருபாதிகப் பிரீதியாம். ஞானிக்கும், பகவானுக்கும் பரஸ்பரமுளதாகும் பிரீதி இவ்வாறான நிருபாதிகப்பிரீதி யென்றறிக. (௧௭)

['அன்னவ னல்ல னெனக்கு,' என முற்செய்யுளிற் கூறியதால், ஞானியொருவனே ஸ்ரீ பகவானுக்குப் பிரியனல்லாமல் ஏனைய பக்தர் பிரியால்லரொன்னும் அருச்சுனன் சங்கைக்கு ஏனைய பக்தரும் எனக்குப் பிரியரோ ஆனாலும், அத்தியந்தப் பிரியால்லர்: ஞானியாகிய பக்தன் எனது ஆன்மரூபமாவதால் அத்தியந்தப் பிரியனென்று ஸ்ரீ பகவான் உத்தரமருளிச்செய்கின்றார்.]

ஓதரு ஞானியென் னுண்மையி னுள்ளே
யெய்தலி னலவ னென வேயா
மாதலு மிங்ங னனேக மெனச்சொல்
காத லிறந்த பவங்களி னலாம்.

(இ-ள்.) (அருச்சுனா ஆர்த்தன், சிஞ்ஞாசு, அர்த்தார்த்தி என்னு மூவரும் எனது பக்தியில்லாத பிராணிகளைப்பார்க்கிலும் உத்கிருஷ்டரே; ஆனாலும்,) ஓது அரு ஞானி = (ஒருவராலும்) வர்ணித்தற்



கரிய ஞானியாகிய பக்தன்—(என்னையே சர்வத்திலும் உத்கிருஷ்டமான பலரூபமாக எண்ணி) என் உண்மையினுள்ளே எய்தலினால்= (வாசுதேவனான) எனது வாஸ்தவ சொரூபத்தின்கண்ணே (சமாகிதசித்தனாய்ப்) பொருந்துதலினால்—அவன் = அந்த ஞானியாகிய பக்தன்—நான் எனவே ஆம்=எனது ஆன்மாவென்றே எனக்கு நிச்சயமாம்;—இங்ஙன் ஆதலும் = இப்படிப்பட்ட ஞானியாதலும்—அனேகம் எனச்சொல்=அநேகமென்று சொல்லும்—காதல் இறந்த பவங்களினால் ஆம்=(கர்மபலங்களில்) ஆசை யொழிந்த ஜநநங்களினந்தத்திலாம்.—எ-று.

அநேகமென்று சொல்லும் ஜநநங்களி னந்தத்திலாமெனவொட்டுக. எனது பக்தர் ஞானியானாலும், அஞ்ஞானியானாலும் எனக்குப் பிரியரோ: ஆயினும், எவர்க்கு எந்தப்பிரகாரமாக என்னிடத்துப் பிரீதியுண்டோ எனக்கும் அவரிடத்து அந்தப்பிரகாரமாகவே பிரீதியுண்டு; இது சர்வலோகத்திலுஞ் சுபாவசித்தந்தான். ஆர்த்தன், சிஞ்ஞாசு, அர்த்தார்த்தி என்னுஞ் சகாமபக்தருக்குக் கேவலம் பரமேசுரனான நானே பிரியனல்லன்; பின்னையோ அவர் காமித்த விஷய பதார்த்தங்களும் பிரியம், நானும் பிரியன். நிஷ்காமனான ஞானிக்கு என்னினந்நியமான எந்தப் பதார்த்தங்களும் பிரியமாக இல்லை: யானொருவனே நிரதிசயப் பிரீதிக்கு விஷயமாகிறேன்; இக்காரணத்தால், நிஷ்காமனான ஞானியாகிய பக்தனும் எனக்கு நிரதிசயப்பிரீதிக்கு விஷயமாகிறான்; அந்த ஞானியாகிய பக்தனிடத்து நிரதிசயப் பிரீதி செய்யேனாயின் என்னிடத்துக் கிருதக்ஞத்தன்மை சித்தியாது: கிருதக்நத்தன்மை யடையாநிற்கும்: ஆதலால், பரமேசுரனான நானும் ஞானியாகிய பக்தனிடத்து நிரதிசயப் பிரீதிசெய்கிறேனென்பது கருத்து. (௧௮)

[அந்தஞானி அத்தியந்தந்துர்லபனென்று இப்போது ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

விரிய வுணர்ந்த விழுப்பொரு ளெல்லா
முரியவெ னன்றி யிலாத வொழுக்கந்
தெரிய வறிந்தெனை யேசெறி கிற்பா
னரிய னவன்பெறு தற்கயில் வேலோய்.

(இ-ள்.) விரிய உணர்ந்த=விசாலமாகச் (சாஸ்திரங்களாலும், இந்திரியங்களாலும்) அறிந்த—விழுப் பொருள் எல்லாம்=மேன்மை

யான பொருள்கள் முழுவதும்—உரிய=(அதிஷ்டானமென்றுசொல்லுதற்கு) உரிய—என் அன்றி இலாத ஒழுக்கம்—(வாசுதேவனான) என்னையன்றியில்லாத மரியாதையை—தெரிய அறிந்து = அபரோட்சமாகவறிந்து—என்னையே செறிகிற்பான் = (வாசுதேவனாகிய) என்னையே அபேதமாகப் பொருந்துகிற்பவன் (யாவன்)—அவன்=அந்த மகான்—அயில்வேலோய்=கூர்மைபொருந்திய வேலையுடைய அருச்சுனா—பெறுதற்கு அரியன்=(அநேகமாயிரமநுடருள்ளே) அடைதற்கத்தியந்தந்துர்லபனாம்.—எ-று.

பாரமார்த்தத்தில் வாசுதேவ சொரூபமாகலின், 'விழுப்பொருள்' என்றார். 'ஒழுக்கம்' என்றது, சுருதி, யுக்தி, மகான்கள் அநுபவசித்தமாகலினென்க. ஞானியினது அரியதன்மை, "ஆயுமாநுடரனேகர்பாலொருவனே யறிந்து முடிவான்" என்று முன்னும் அருளிச்செய்யப்பட்டிருப்பது காண்க.

இங்கே பரமகிருபாலுவாகிய ஸ்ரீ பகவானது அபிப்பிராயம்; நமது ஆர்த்தன்முதலிய பக்தரிடத்தும், அந்நிய தேவதைகளின் ஆர்த்தன்முதலிய பக்தரிடத்தும் ஆயாசம், சகாமத்வம், பேததரிசித்வமுதலிய தர்மம் சமானமாகவே யிருப்பினும் பரமேசுரனான நமது பக்தர் பூமிகளின் கிரமமாகச் சர்வத்தினும் உத்கிருஷ்டமான மோட்சரூபமாகிய பயனையே அடையாநிற்பர். க்ஷுத்திரதேவதைகளின் பக்தர் மீண்டுமீண்டும் ஜநநமரணப் பிராப்திரூபமான க்ஷுத்திரப்பயனையே யடையாநிற்பர்; ஆதலால், சகலமான ஆர்த்தாதி பக்தரும் என்னைச் சரணடைந்து ஆயாசமில்லாமலே சர்வத்திலும் உத்கிருஷ்டமான மோட்சரூபபயனை அடையக்கடவீரென்பது. (௧௫)

[பரமபுருஷார்த்தரூபமான முக்திப்பயனை யடைவிக்கும்படியான எனது ஆராதனத்தையுபேட்சித்து க்ஷுத்திரப்பயனை யடைவிக்கும் க்ஷுத்திர தேவதைகளின் ஆராதனத்தில் ஜனங்களுக்குப் பிரவிர்த்தி யுண்டாவதில் பூர்வ சம்ஸ்காரரூபமான வாசனாவிசேஷமே அசாதாரணகாரணமாகவுளதென்று இப்போது ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

மற்ற வருந்த மனங்களில் வைத்த
பற்றதி லேபறி யுண்டறி வெல்லா
முற்றவை தந்திடு தெய்வ வொழுக்கா
னற்றவ நின்றவை நண்ணுவர் வேலோய்.



(இ-ள்.) வேலோய்=வேலையுடைய அருச்சுனா—மற்றவரும்=அந்நியமான க்ஷுத்திரதேவதைகளின் பக்தர்களும்—தம் மனங்களில் வைத்த = தமது அந்தக்கரணங்களில்வைத்த—பற்றதிலே=காமத்தினாலே—அறிவு எல்லாம்=(தமது) அந்தக்கரணங்கள் முழுவதும்—பறியுண்டு=பராமுகம் பண்ணப்பட்டு—உற்றவை தந்திடு=(தமக்கு) வேண்டுவனவற்றைத்தாராநிற்கும்—தெய்வ ஒழுக்கால் நல்தவம் நின்று=தெய்வவழிபாடான ஜபம், உபவாசம், பிரதட்சணம், நமஸ்காரமுதலிய நல்ல நியமங்களினின்று—அவை நண்ணுவர்=அந்த க்ஷுத்திரதேவதைகளை உபாசியாநிற்பர்.—எ-று.

இங்கே, 'பற்று' என்றது, மாரணம், மோகனம், உச்சாடனம், ஸ்தம்பனம், ஆகர்ஷணம், வசீகரணமுதலியவற்றை விஷயம்பண்ணுநின்ற அபிலாஷைரூபமான காமத்தை; அக்காமத்தின் விஷயமான மாரணமோகனாதி க்ஷுத்திரப்பயன்கள் பகவத்சேவையினால் அடைவதசக்கியமென்று பகவானிடத்தினின்றும் அந்தக்கரணம் பராமுகமாகும்படிபண்ணி அந்த க்ஷுத்திரப்பயன்களைப் பயவாநிற்பவை க்ஷுத்திரதேவதைகளேயென அந்த க்ஷுத்திரதேவதைகளிடத்து அந்தக்கரணம் அபிமுகமாகும்படி அக்காமம் பண்ணினதை, 'பற்றதி லேபறியுண்டறி வெல்லாம்' என்றார்.

அந்நியபக்தரான ஆர்த்தாதிகள் பூர்வாப்பியாசத்தாற் சநியாநின்ற தத்தம் அசாதாரண வாசனாவயத்தால் மாரணாதிகளான கீழானபலன்களை யிச்சித்துக் கீழானதேவதைகளை உபாசிக்கிறார்களென்பது கருத்து. (௧௬)

[அந்நியமாகிய க்ஷுத்திரதேவதைகளைப் பஜிப்பவர்க்கும் அவ்வத்தேவதைகளின் பிரசாதத்தால் சகலர்க்கும் ஈசுரரூபனான பகவான் வாசுதேவனிடத்தில் அவசியமாகப் பக்தியுண்டாகுமென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

யாவ னொருத்தன் யாதொரு தெய்வ
மேவ வருச்சனை யன்பின் விளைப்பா
னவல் சலிப்பறு மன்ப வனுக்கே
யாவ துமுற்று மளித்திடு வேனான்.

(இ-ள்.) யாவனொருத்தன்=யாவனொருசகாமபுருஷன்—அன்பின்=சிரத்தையினால்—யாதொரு தெய்வம்=யாதேனும் ஒரு தெய்வ

த்தை—மேவ அருச்சனை விளைப்பான்=(பூர்வஜநநங்களின் வாசனு வசத்தால்) பொருந்த அருச்சனைசெய்யப் பிரவிர்த்திப்பனே—அவனுக்கு=அச்சகாமபுருஷனுக்கு—ஆவல் சலிப்பு அறும் அன்பு=வேண்டுவதான நிச்சலமாகிய சிரத்தையை—ஆவது=(அத்தெய்வத்தினிடத்து மேன்மேலும்) உளதாவதாக—நானே முற்றும் அளித்திடுவேன்=(சர்வாந்தரியாமியாகிய) நானே முழுதுமளிப்பேன்.—எ-று.

ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. அந்நியதெய்வத்தினின்றும் அவனது சிரத்தையைமாற்றி என்னிடத்தஃதுளதாகச் செய்துகொள்ளேன் என்பது கருத்து. (கஎ)

[இதுவுமது.]

**அளித்தவவ் வன்பொடு மத்தெய்வ நாளுங்**
**களித்து வணங்கினர் காதல வெல்லாம்**
**வெளிப்பட முற்று மளித்திடு வேனு**
**னொளிப்பரி தாமுரு மஞ்ச வுடன்றோய்.**

(இ - ள்.) ஒளிப்பு அரிது ஆம்=(ஒருவரால் பிடித்து) ஒளித்தற்கரியதாகிய—உரும் அஞ்ச=இடி அஞ்சும்படிக்கு — உடன்றோய்=போர்செய்த அருச்சுனு—அளித்த அவ்வன்பொடும்=(என்னால்) கொடுக்கப்பட்ட அந்தச்சிரத்தையோடும்—அத்தெய்வம்=அவ்வந்நிய தெய்வங்களை—நாளும் களித்து=நாடோறும் (இதுவே மெய்த்தெய்வமென்று) செருக்கடைந்து—வணங்கினர் காதல எல்லாம்=ஆராதித்தவர் (பூர்வஞ் சங்கற்பித்த மாரணம், மோகன முதலிய) காமியபதார்த்தங்களை யெல்லாம்—வெளிப்பட=பிரசித்தமாக—முற்றும் = முழுதும்—நான்=(அந்தரியாமியாகிய) நானே—அளித்திடுவேன்=அளிப்பேன்.—எ-று.

பரமேசுரனுன என்னையன்றி அந்நியதெய்வங்களால் யாதொன்றையும் உண்டுபண்ணச் சாமர்த்தியமில்லை: என்னாலேயே உண்டுபண்ணப்பட்ட மாரணம், மோகனுதிகளையே அந்தச் சகாமபுருஷர் அவ்வத் தேவதைகளா லடைகின்றனர்; ஆதலால், அந்தரியாமியாகிய நானே நேரோ அல்லது, யாதானுமொரு அந்நியவாயிலாகச் சர்வகர்மங்களின் பலப்பிரதாதாவாகின்றே னென்பதாம். (கஅ)

[எப்படியும் அந்தச்சர்வதேவதைகளும் சர்வாத்மனுன எனது மூர்த்தியே; அத்தேவதைகளின் ஆராதனமும் வாஸ்தவமாக எனது ஆராதனமே; சர்வத்திரபலப்பிரதாதாவும் நானே ஆகிறேன்; அப்படியானு



லும் நேரோ எனது பக்தருக்கும், அந்நியதேவதைகளின் பக்தருக்கும் யாதொரு விஷமமான பலப்பிராப்தியுண்டாகிறதோ அது முறையே வஸ்துவின் விவேகத்தினுலும், வஸ்துவின் அவிவேகத்தினுலுமே உண்டாகின்றதென்று ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றுர்.]

**சிந்தையி னித்தெய்வ மெய்த்தெய்வ மென்றே**
**முந்த வருச்சனை செய்து முடிக்கு**
**மந்த மனத்தர் பெறும்பயன் வாளா**
**வந்த முடைத்த தனித்தமு மையா.**

(இ - ள்.) ஐயா=அருச்சுனு—சிந்தையின்=(தமது) சித்தத்தின் கண்ணே—இத்தெய்வம் மெய்த்தெய்வம் என்றே=(மாரணம், மோகனுதிகளென்னும் பயன்களைத்தரத்தக்க) இந்தத்தெய்வங்கள் மெய்யான தெய்வங்களென்றே கருதி—முந்த அருச்சனை செய்து முடிக்கும்=முன்னே ஆராதனஞ்செய்து நிறைவேற்றும்—மந்த மனத்தர்=அற்பமனமுடைய அந்நியதேவதைகளின் பக்தர்—பெறும் பயன் = அடையாநிற்கும் (மாரணம், மோகனுதிரூபமான) பயனுனது—வாளா அந்தமுடைத்து=வீணுய் நாசமுடையது;—அதுவும் அநித்தம்=(அவர்கள் ஆராதித்த) அத்தெய்வங்களும் நாசமுடையனவாம்.—எ-று.

உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது.எதார்த்தவஸ்துவின் விவேகஞ் செய்வதிற் சாமர்த்திய மின்மையின், 'மந்தமனத்தர்' என்றுர். 'அதுவு மநித்தம்' என்றது, அந்நியதெய்வங்களாலடையும் மாரணம், மோகனுதி ரூபபயன் அநித்தமென்றதற்குக் காரணங்கூறினது; இங்ஙனங் கூறியவாற்றுல், பரமார்த்தவஸ்துவின் விவேகஞ் செய்வதிற் சமர்த்தரான எனது பக்தருடைய மோட்சரூபமான பயன் நாசரகிதமாமென்பது பெறப்படுகின்றது. (கக)

[பகவானே நேரோ உமது பஜனம் ஓர்போதும் நாசமற்ற உத்தமமானபயனை யடைவிக்குமானுல் இவ்வுலகினில் விசேஷமாக இம்மநுடர் என்னகாரணத்தால் உம்மிடத்துப் பராமுகமா யிருக்கின்றனவொன்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அங்ஙனம் இருப்பதில் காரணமருளிச் செய்கின்றுர்.]

[வேறு.]

**தானந்த மிலியுவமை தரநின்று தாவரிய**
**வானந்த வுருவமென வெனையொன்று மறிவதிலர்**

**கோனந்தன் மகனரசர் குலமைந்த னிவனுமெழி**
**லானந்த மிலியொருவ னிவனென்ப ரறிவிலிகள்.**

(இ-ள்.) (அருச்சுனா) அறிவிலிகள்=விவேகசூனியரான புருஷர்கள்—தான்=பகவான்—அந்தம் இலி=நாசமில்லாத நித்தியரூபன்,—உவமை தர நின்று = ஒன்றோடொப்பிடும்படிநின்று—தாவ அரிய=(ஒருவரால்) பற்றுதற்கரிய—ஆனந்த உருவம் என=அத்துவைதாநந்தசொரூபன் என்று—எனை=(பரமேசுரனான) என்னை—ஒன்றும் அறிவது இலர்=சிறிதும் அறிந்திலர்.—[மற்றெங்ஙன் அறிகின்றன ரென்னின்?] இவன்=இந்தக் கிருஷ்ணன்—கோன் நந்தன் மகன்=நந்தகோபன்மகன்,—அரசர் குலமைந்தன் = இராசகுலத்திற் பிறந்த வசுதேவபுத்திரன்,—இவனும்=இந்தக் கிருஷ்ணனும் — எழில் ஆநந்தம் இலி = (நம்போல் நாநாவியவகாரங்களோடு கூடியிருத்தலின்) சிறந்த ஆநந்த மில்லாதவன்,—ஒருவன்=(சீவருள்ளே) ஓர் விசேஷ சீவன்—என்பர்=என்று கருதாநிற்பர்.—எ-று.

'அந்தமிலி' என்றது, சர்வஜகத்திற்குங் காரணமென்னும் நித்தியமாகிய சோபாதிகரூபம். 'உவமை தாநின்று தாவரிய' என்றது, நிரதிசயமாய், அத்துவிதீய பரமாநந்தகனமாய், தேசகாலவஸ்துபரிச்சேதசூனியமாயுள்ள நிருபாதிகசொரூபம்.

விவேகசூனியரான புருஷர் ஈசுரரூபமாக என்னைப் பஜியாமல் அந்நியசீவனைப்போல எனது லீலாமாத்திரமான காரியங்களைக்கண்டு என்னையும் ஓர் விசேஷ சீவனாகவே எண்ணுகின்றனர்; இக்காரணத்தால், அவ்வவிவேகிபுருஷர் பரமேசுரனான என்னைப் பரித்தியாகஞ் செய்து பிரசித்தமான இந்திராதி தேவதைகளையே ஆராதித்து அவ்வாராதனத்தால் அவர் அநித்தியப்பயனையே யடைகின்றனரென்பது கருத்து. ()

[யாவரிடத்துஞ் சம்பவியாத அநேக பிரகாரமான திவ்ய குணங்களோடுகூடிய ஈசுரனாகிய உம்மிடத்து அவிவேகிகட்கு மநுடத்வபுத்தியும், சீவத்வபுத்தியும் எப்படி யுளதாமென்னும் அருச்சுனன் சங்கையை நிவிர்த்திப்பிக்கிறவராய் ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

**மருவுற்ற பிரகிருதி யதிலுற்று மறைவனெழி**
**லொருவர்க்கு மறியும்வகை வெளிநிற்ப திலையுலகில்**
**வெருவுற்ற பெருமயலின் மனமுற்று விழிமறைய**
**வருவுற்ற வெனையுலக மறிகிற்ப திலையடைய.**



(இ-ள்.) (அருச்சுனா) மருவுற்ற=(பரமேசுரனான எனது * சங்கற்பத்தினநுசாரமாகப்) பொருந்தியுள்ள—பிரகிருதியதில்=மாயையில்—உற்று மறைவன்=பொருந்தி நன்றாக மறைந்தவனாகின்றேன்;—(இக்காரணத்தால்,) எழில்=(அந்தமற்றவனெனவும், ஆநந்தகனனெனவும் முற்செய்யுளிற்கூறிய எனது) அழகிய சொரூபமானது — ஒருவர்க்கும் அறியும் வகை = யாவரொருவர்க்கும் அறியும்படி—வெளி நிற்பது இலை=பிரகாசமாகிறதில்லை. — (அன்றியும்,) உலகில்=உலகின்கண் — வெருவுற்ற பெரு மயலின் = அஞ்சத்தக்கதான (ஜநநமரணரூபமாகிய) பெரிய சம்சார பிராந்தியில்—மனம் உற்று = மனமானது பொருந்தி — விழி மறைய = ஞானக்கண் மறைந்தமையின்—அருவு உற்ற எனை = ஜநநமரணரகிதனாயுள்ள என்னை—உலகம் அடைய = உலகமுழுதும்—அறிகிற்பது இலை=அறிவதில்லை.—எ-று. (௨௧)

[பரமேசுரனாகிய நான் பிரதிபந்தரகிதமான ஞானசக்தியுடையனாதலால் சர்வபூதங்களையும் அறிகிறேன்: என்னிடத்துப் பக்தியில்லாத எந்தப் பிராணிகளும் என்னை அறிகிறார்களில்லையென்னும் பொருளை ஸ்ரீ பகவான் இப்போது அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

**போனவை யினிமேற் புகுதநின் றவையிப் பொழுது**
**போகின்றவை யனைத்தும், யானறிந் திருப்ப னியாவுமா மெ**
**ன்னை யுலகின்மற் றியாவரு மறியார், மானவெஞ் சிலையாய்**
**வேண்டல்வேண் டாமை தன்னிலே வருதுண மயக்காற்,**
**றுனமைந் துருவாய்ச் சனித்திடும் பொழுதே தந்தமெய்**
**யறிவுசார்ந் திடலால்.**

(இ-ள்.) (அருச்சுனா)போனவை=முன்சென்றவைகளும்,—இனிமேல் புகுத நின்றவை = இனிமே லுண்டாமவைகளும், — இப்பொழுது போகின்றவை அனைத்தும் = இப்போது போகின்றவைகளும் (ஆகிய ஸ்தாவரஜங்கமரூபமான) சர்வப்பிராணிகளையும்—யான் அறிந்திருப்பன் = (பரமேசுரனாகிய) நான் அறிந்துளேன்; — யாவும் ஆம் என்னை = சர்வான்மகமாகிய என்னை—உலகில்=உலகத்தில்—மற்று யாவரும் அறியார்=என்னிடத் தன்பில்லாத யாவரும் அறியார்கள்.—

---

* சங்கற்பம்=எனது பக்தியில்லாத பிராணிகள் பரமேசுரனை என்னை வாஸ்தவசொரூபமாக அறியாதொழிக என்பது.

[பரமேசுரனது வாஸ்தவசொரூபஞானத்திற்கு யாதொரு பிரதிபந்த முண்டோ அந்தப் பிரதிபந்தத்தில் பூர்வம் யோகமாயையை ஏதுவாக வருளிச்செய்தனர்; இப்போது அந்தப் பிரதிபந்தத்தில் தேகேந்திரிய ரூபசங்காதத்தின் அபிமானாதிசயபூர்வகமான போகத்தில் அபினிவேச ரூபமாகிய மற்றோர் ஏதுவையு மருளிச்செய்கின்றார்.] மான வெம் சிலையாய்=மாட்சிமைபொருந்தியகொடியதனுசையுடைய அருச்சுனா— (சர்வப்பிராணிகளும்) உருவு ஆய் அமைந்து சனித்திடும் பொழுது= தூலசரீரமாய்ப் பொருந்தி ஜநநமாகும்போது—வேண்டல் வேண்டாமை தன்னில் வரு=*இச்சை, † துவேஷமென்னும் இரண்டினால் வருகின்ற—குணமயக்கால்=சீதோஷ்ணம், சுகதுக்கம், பசிதாகமுதலிய துவந்துவ நிமித்தமாக நான் சுகி, துக்கி என்பனமுதலிய விபர்யயரூப மோகத்தால்—தம் தம் மெய் அறிவு சார்ந்திடலால்=தத்தம் தேகபாவனையைப் பொருந்துவதால் (அந்தரான்மாவாகிய என்னை அறியார்கள்.) —எ-று. தான் - அசைநிலை.

இதன்றாற்பரியம்; — இராகத்துவேஷங்களால் வியாகுலமுற்ற அந்தக்கரணத்தை யுடைத்தாயிருத்தலின் சர்வப்பிராணிகளும் பரமேசுரனாகிய என்னைத் தமது ஆன்மரூபமாக அறிகிறார்களில்லை; இக்காரணத்தால், ஆராதித்தற் குரியவனான என்னை ஆராதித்தில ரென்பதாம்.

[“இந் நால்வரும் வல்லதிலென்னை வணங்கு தவத்தோர்” என்று முன்னேகூறிப் பின்னே, “எழிலொருவர்க்கு மறியும்வகை வெளி நிற்பதிலை” எ-ம், துவந்துவ மோகத்தால் மோகத்தை யடைதலின், “யாவருமென்னை யறியார்” எ-ம் கூறியவாற்றால், விரோதந் தோன்றுகிறதேயென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீபகவான் உத்தரமருளிச் செய்கின்றார்.]

**வியக்கமேன் முயன்ற நல்வினை மாந்தர் விரும்பல ராகி முன் செய்த, பயக்கமே வியதீ வினையெலா மறவே பற்றறப் பறிந்துமுன் போனாற், றுயக்கமே புரியுஞ் சோகமே முதலாந் துவந்துவ குணங்களிற் றொடர்ந்த, மயக்கமே வலரா யொழுக் கமே நிலைநின் றென்னையே மனத்திடை வைப்பார்.**

(இ-ள்.) வியக்க=(யாவருந்) துதிக்கும்படி—விரும்பலர் ஆகி = (யாதொரு பயனையும்) விரும்பாதவர்களாய்—மேல் முயன்ற=பூர்வம் (அநேக ஜநநங்களில்) முயற்சித்துச் சம்பாதித்த—நல் வினை மாந்தர்= புண்ணிய கர்மங்களையுடைய அதிகாரிகளாகிய புருஷர், — (தமது புண்ணிய கர்மங்களால்) முன்செய்த = முற்சநநங்களிற் செய்த—பயக்கமேவிய = (துன்பங்களைப்) பயக்கும்படி பொருந்திய — தீ வினை எலாம்=(ஞானத்திற்குப் பிரதிபந்தமான)பாவகர்மங்கள் முழுவதும்— அறவே=மிகவும்—பற்று அறப் பறிந்து=பற்றாமல் (தம்மை)விட்டு— முன்போனால் = முன்னே போமாயின் — துயக்கமே புரியும்=சோர்வைத்தானே செய்யாநிற்கும்—சோகமே முதல்ஆம்=துன்பமுதலிய— துவந்துவ குணங்களில் தொடர்ந்த=துவந்துவ குணங்களினாற் பொருந்திய—மயக்கம் மேவலராய்=(நான்சுகி, நான்துக்கி என்னும்) மோகத்தைப் பொருந்தாதவர்களாய்—ஒழுக்கமே நிலைநின்று=(என்னை) ஆராதிக்கும் வழியிலே (சர்வபிரகாரத்தாலும் ஆராதித்தற்குரியவர் பரமேசுரனே யென்னும்) திடசங்கற்ப முடையராய்நின்று — என்னையே மனத்திடை வைப்பார்=(பரமேசுரனாகிய) என்னையே மனத்தின்கண் வைத்துத் தியானிப்பர்.—எ-று.

“இந்நால்வரும் வல்லதிலென்னை வணங்கு தவத்தோர்” என்றது, புண்ணியகர்மங்களின் அதிசயத்தால் சர்வபாவகர்மங்களு நாசமாய்த் தன்னை ஆராதிப்பவரையே. “எழிலொருவர்க்கு மறியும்வகை வெளி நிற்பதிலை” எ-ம், துவந்துவ மோகத்தால் மோகத்தை யடைதலின், “யாவருமென்னையறியார்” எ-ம் கூறினது, புண்ணியவான்களான பக்த ஜனங்களைப் பார்க்கிலும் அந்நியப் பிராணிகளையே ஆதலின், ஒன்றற்கொன்று விரோதமின்றென்பது கருத்து. (உ௩)

[அருச்சுனனுக்கு இனி அவனால் வினவப்படும் வினாவைக் கிளப்புவித்தற்பொருட்டு ஸ்ரீபகவான் சூத்திரரூபமான இரண்டு செய்யுட்களை இப்போது அருளிச்செய்கின்றார்; இச்சூத்திரரூபமான இரண்டு செய்யுளுக்கும் இனிக்கூறப்படும் எட்டாமத்தியாயம் வியாக்கியான ரூபமாம்.]

**எறிவரும் பிணிமூப் பிறப்பொடு பிறப்பென் றிவைகெடுத் திடல்பொருட் டாகச், குறிவரும் பரிசு நினைத்துமற் றென்னையே கூடுதன் மேவிநின் றவர்க, ளறிவரும் பிரமந் தன்னையு மதனை யறியுமெய் யறிவையு மறிவி, னெறிவருங் கரும மனைத்தையு மறிவ ரறிந்தபின் னிகழ்வதுங் கேளாய்.**

(இ-ள்.) (அருச்சுனா) எறிவு அரும்=(ஞானத்தாலல்லாமல்) சேதித்தற்கரிய—பிணி மூப்பு இறப்பொடு பிறப்பு என்ற இவை=வியாதி



* இச்சை = இவ்வநுகூலவஸ்து நமக்குக் கிடைக்கவேண்டுமென்பது.
† துவேஷம் = இப்பிரதிகூலவஸ்து நமக்கு வேண்டாமென்பது.

யும், ஜரையும், மரணமும், ஜநநமும் என்றவித்துக்கங்களை — கெடுத்திடல் பொருட்டு ஆக=சேதித்தல் காரணமாக—குறி வரும் பரிசு நினைத்து=ஞானமுளதாகும்படி கருதி—எனையே=(சர்வதுக்கங்களையும் நிவிர்த்திக்கத்தக்க சகுணபரமேசுரனுன) என்னையே—கூடுதல் மேவி நின்றவர்கள்=ஆசிரயித்துச் (சாஸ்திரவிகிதமான சுபகர்மங்களைப் பலேச்சையில்லாமல் ஈசுரார்ப்பணமாகச்) செய்துநிற்கும் அதிகாரி புருஷர்—(கிரமமாகச் சுத்தமான அந்தக்காணமுடையராய்) அறிவு அரும் பிரமந்தன்னையும் = அறிதற்கரிய (தற்பதத்தின் லட்சியார்த்தரூபமான) நிர்க்குணப்பிரமத்தையும்,— அதனை அறியும் மெய் அறிவையும் = அந்நிர்க்குணப் பிரமத்தை (இதுவேயென அதிகாரி) அறியும் துவம்பத லட்சியார்த்தரூபமான ஆன்மாவையும்,—அறிவின் நெறிவரும்=புத்தியின் வழியே (அதிகாரிகளால்) அநுஷ்டித்து வரும் —கருமம் அனைத்தையும் அறிவர்=கர்மங்களனைத்தையும் அறியாநிற்பர்;— அறிந்த பின் = (இவைகளை) அறிந்தபின்னர் — நிகழ்வதும் கேளாய் = அவர்கட்குச் சம்பவிப்பதையுங் கேட்பாய்.—எ-று. மற்று - அசைநிலை. (உச)

[இதுவுமது.]

[வேறு.]

**தேடும்பழைய வதிபூத மதிதெய்வத்தோ டதியெச்சங்**
**கூடும்பரிசு நின்றவெனை யறிவாரிந்தப் புழுக்கூடு [வே**
**வீடும்பொழுது மெனைமெய்யே யறிவாரென்றுன் யாம்வெவ்**
**ருடும்பழைய மாயக்கூத் தாட்டுவிக்கு மம்மாயன்.**

(இ-ள்.) தேடும் பழைய=(அதிகாரியறிய)விசாரிக்கும் பழைமையான—அதிபூதம் அதிதெய்வத்தோடு=அதிபூதசகிதனுய், அதிதெய்வசகிதனுய்,—அதியெச்சம் கூடும் பரிசு=அதியெக்ஞசகிதனுய்—நின்ற எனை அறிவார்=நின்ற (பரமேசுரனுன) என்னைச் (சர்வதா) சிந்தியாநிற்கும் அதிகாரி புருஷர்—(சமாகித சித்தராய்) இந்தப் புழுக்கூடு வீடும் பொழுதும்=கிருமிகள் பொருந்திய இத்தேகம் அழியும்பொழுதும்—எனை மெய்யே அறிவார் என்றுன்=(சர்வான்மாவாகிய)என்னை உள்ளபடியே அறிவார்கள் என்றருளிச்செய்தனர்:—யாம் வெவ்வேறு =நாம் வேறுவேருக—ஆடும் பழைய மாயக் கூத்து = நடியாநிற்கும் பழையமாயாநடனத்தை — ஆட்டுவிக்கும் அம்மாயன் = நடிப்பிவிக்கின்ற அந்தக் கிருஷ்ணபகவான்.—எ-று.



"அதிபூத மதிதெய்வ மதியெச்சம்" என்னும் இம்மொழிப்பொருள்களை ஸ்ரீ பகவான் தாமே இனி எட்டாமத்தியாயத்தில் அருச்சுனன் வினவின்வழியே வெளிப்படையாக அருளிச்செய்வதால் ஈண்டுரைத்திலேம். இவ்வேழாமத்தியாயத்தில், ஸ்ரீ பகவான் உத்தமாதிகாரியைக்குறித்து லட்சணுவிருத்தியினுல் தற்பதத்தாற் கூறப்படும் அறிதற்குரிய பிரமமும், மத்திமாதிகாரியைக்குறித்துச் சக்திரூப முக்கியவிருத்தியினுல் தற்பதத்தாற் கூறப்படுந் தியானித்தற்குரிய பிரமமும் அருளிச்செய்தனர். மரணகாலத்தில் இந்திரியமுதலிய காணங்கள் அசாவதானமாயிருக்கினும் பரமேசுரனுன எனது கிருபையினுலும், பூர்வாப்பியாச ஜந்நியசம்ஸ்காரங்களின் திடத்துவத்தாலும் அப்புருஷனுடைய சித்தவிருத்தி பரமேசுரனுன எனதாகாரமாகவே யிருக்கும்: மற்றியாதேனும் ஓர் அநான்ம பதார்த்தங்களின் ஆகாரமாகாது; ஆதலால், அவ்வதிகாரிகள் பரமேசுரனுன எனது பக்தியோகத்தால் கிருதார்த்தராவரென்பது கருத்து. (உரு)

எழாவது,
**மாயாரூபவத்தியாயம்**
முற்றிற்று.

---

ஆக அத்தியாயம் எ-க்குத் திருவிருத்தம்-உஉஅ.

---

## அ-வது, * எழுவகை வினவுரைத்தவத்தியாயம்.

[பூர்வம் எழாமத்தியாயத்தினந்தத்தில் ஸ்ரீ பகவான் சூத்திரரூபவசனங்களால் ஞேயத்வரூபமாக வருளிச்செய்த பிரமமுதலிய எழுபதார்த்தங்களின் வியாக்கியானரூபமாக எட்டாமத்தியாயம் ஆரம்பிக்கின்றனர்.]

[பூர்வம் ஸ்ரீ பகவான் அருளிச்செய்த அச்சூத்திரரூபவசனங்களால் சாமான்யரூபமாக வறிந்த அவ்வேழுபதார்த்தங்களை மீண்டும் விசேஷரூபமாக அறிய இச்சை நண்ணினவனுய் அருச்சுனன் அவற்றை வினவுகின்றனன்.]

**அடைய ஞாலத்தை யார்த்ததி லார்ப்புணு**
**திடையர் தாம்பிடை யார்ப்ப விருப்பவ**

---

* வடநூலில், அக்ஷரபிரமயோகமென்று பெயர்.

னுடைய னாகமுன் போதின வேகொடவ்
விடைய னானவன் மீள வியம்புவான்.

(இ-ள்.) அடைய ஞாலத்தை ஆர்த்து = முழுதும் உலகைத் (தேகாபிமானரூபக்கயிற்றினாற்) பந்தித்து — அதில் ஆர்ப்புணாது = அவ்வுலகில் (ஒன்றாற் றான்) பந்தப்படாமல்—இடையர் தாம்பிடை = முல்லைநிலமாக்களின் றாமணிக்கயிற்றில் — ஆர்ப்ப இருப்பவன் = (தன் தாயாகிய யசோதை) பந்திக்க அகப்பட்டிருந்து பாலலீலை செய்தருளிய ஸ்ரீ பகவான்—உடையன் ஆக=(ஆசிரியத்தன்மை) உடையவனாக—முன்பு ஓதினவே கொடு=பூர்வாத்தியாயத்தினந்தத்தில் (சூத்திரரூப வசனங்களால்) அருளிச்செய்த பிரமமுதலிய பதார்த்தங்களைச் சங்கையாகக்கொண்டு—அவ்விடை அன்னானவன் = போரில் இடபத்தையொப்பான அவ்வருச்சுனன்—மீள இயம்புவான்=மீட்டும் வினாவுவானாயினன்.—எ-று. (க)

[வேறு.]

ஆயபிர மத்தொடத் தியாத்ம மமைக்ரும
மேயவதி பூதமதி தெய்வமதி யெச்சங்
காயமதி லுள்ளபரி சுங்கெழுமு காயம்
வீயலுறு போழ்திலுனை மெய்தெளிபு மாறும்.

(இ-ள்.) (பகவானே) ஆய பிரமம் (எது)=பூர்வம் ஞேயரூபமாகத் தேவரீர் அருளிச்செய்த அந்தப் பிரமமானது சோபாதிகமோ? அல்லது, நிருபாதிகமோ (இது முதல் வினா.)—அத்தியாத்மம் (எது) = (ஆன்மாவோடு சம்பந்தமுடைமையின் ஆன்மசப்தமாகப் பிரதிபாதிக்கப்பட்ட அத்தேகரூபமான ஆன்மாவை ஆசிரயித்துள்ளதுயாது) அஃதத்தியாத்மம்; அவ்வத்தியாத்மம் சுரோத்திரமுதலிய கரணங்களின் சமுகமோ? அல்லது, பிரத்தியக்சைதந்நியமோ (இஃதிரண்டாம் வினா.) —அமை கருமம் (எது)=(தேவரீர்) விதியாநின்ற கர்மமானது எக்ஞரூபமோ? அல்லது, அவ்வெக்ஞத்தைப்பார்க்கிலும் ஏதேனுமொரு அந்நியவஸ்துவோ (இதுமூன்றாம் வினா.)—எய=(உமது மனத்திற்கு) இயைந்த — அதிபூதம் (எது) = அதிபூதமென்பது பிருதுவி முதலிய பூதங்களை யாசிரயித்துள்ள அற்பகாரியமோ? சம்பூர்ணகாரியமோ (இது நான்காம் வினா.) — அதிதெய்வம் (எது)=(தெய்வத்தை யாசிரயித்துள்ளதுயாது) அஃததிதெய்வம்; அவ்வதிதெய்வம் தேவதா விஷயமான தியானமோ? அல்லது, தேவதைகளின் ஆதித்திய மண்



டல முதலியவற்றில் அநுசூதமான சைதந்நியமோ (இஃதைந்தாம் வினா.)—அதியெச்சம் (எது) = (எக்ஞத்தை யாசிரயித்துள்ளது யாது) அஃததியெக்ஞம்; அவ்வதியெக்ஞம் யாதானுமொரு தேவதா விசேஷமோ? அல்லது, பரப்பிரமமோ; (அவ்வதியெக்ஞம் அதிகாரியினாற் றாதான்மியரூபமாகவா? அத்தியந்த மபேதரூபமாகவா சிந்தனஞ் செய்தற்குரியது;)—(அதியெச்சம்) காயமதில் உள்ள பரிசும் (எவ்வாறு) = அவ்வதியெக்ஞம் (சர்வப்பிரகாரத்தினாலும்) தேகத்தின்கண்ணே யுள்ளதா? அல்லது, தேகத்திற்குப் புறம்பேயுள்ளதா; தேகத்தின்கண்ணுள்ளதெனின்? இத்தேகத்தின்கண் அவ்வதியெக்ஞம் புத்தியாதிரூபமோ? அந்தப்புத்தியாதிகளுக்குப் பின்னமோ (இஃதாறாம்வினா.)—கெழுமு காயம்=பொருந்துகின்ற தேகமானது—வீயல் உறுபோழ்தில்=மரணமாகுஞ் சமயத்தில்—உனை=(பரமேசுரராகிய) உம்மை—மெய்தெளியும் ஆறும் (எவ்வாறு)=உள்ளபடி அறியும் வழி எவ்வாறு? (இஃதேழாம்வினா.)—எ-று. இது குளகம். (உ)

[முற்செய்யுளில் அருச்சுனன் வினாவிய எழுவகை வினாவிற்கும் முறையே ஸ்ரீ பகவான் உத்தரமருளிச்செய்கின்றார்.]

விரியவுரை செய்தருள வேண்டுமென மீண்டவ்
வரியரவி லேதுயிலு மாயவ னுரைப்பா
னரியதழி யாமைய தனைத்திலு முரைக்கிற்
பெரியது மொழிந்தபிர மம்பிறவு நீகேள்.

(இ-ள்.) விரிய உரைசெய்தருளவேண்டும் என = (நீர் சர்வக்ஞரும், பரமகிருபாலுவுமாவதால் சரணாகதனான எனக்கு இச்சகலமான பொருள்களையும்) விரிவாகவுரைத்தருளவேண்டும் என்றருச்சுனன் வினாவ—மீண்டு = மீளவும்—அவ்வரி அரவிலே துயிலும் மாயவன் உரைப்பான்=அந்த வரியையுடைய ஆதிசேஷன்மீது அறிதுயிலமரா நிற்கும் பகவான் (எழுவகைவினாக்களுக்கும் உத்தரமருளிச்செய்யத் தொடங்கி அவ்வெழுவகைவினாக்களினுள்ளே பிரமசப்தத்தால் நிருபாதிகப்பிரமமே ஈண்டுச் சொல்லப்படுகிறது: சோபாதிகப்பிரமஞ் சொல்லப்படவில்லையென்றுமுதல்வினாவிற்கு) உத்தரமருளிச்செய்கின்றார்.—மொழிந்த பிரமம்=(நாம்) கூறிய பிரமமானது—அரியது= (ஒருவரால் அறிதற்கெளியதன்று) அரியது;—உரைக்கில் இவ்வரிய தன்மையைச்சொல்லில்—அழியாமையது=அக்ஷரம். — (ஞானத்தினாலாவது, அஞ்ஞானத்தினாலாவது, தேசகாலங்களினாலாவது, மற்றே

தேனும் அந்நியங்களினாலாவது நாசமடையாததுயாது அஃதக்ஷரம்; இவ்வக்ஷரமானது பிரகதாரணியவுபநிஷத்திலுங் கூறப்பட்டிருக்கிறது; அதில், யார்க்கு யாவரால் எவ்வாறு கூறப்பட்டிருக்கிறதோவெனின்? யாக்ஞவல்கியமுனி கார்க்கியைக்குறித்து ஏ கார்க்கி! பிரமத்தையறிந்த பிராமணர் இவ்வக்ஷரத்தைத் தூலமன்று, அணுவன்று, குறிலன்று, நெடிலன்று என்பர் என்றுபக்கிரமித்து, மத்தியில் இவ்வக்ஷரத்தினாணையிற் சூரிய சந்திரர் நியமபூர்வகமாகவுளர்; இவ்வக்ஷரத்தினும் அந்நியமாகத் திருஷ்டாவில்லையென்றுகூறி, அந்தத்தில் இவ்வக்ஷரத்தில் அவ்வியாகிருதமான ஆகாசம் ஓதப்புரோதமாகவுளதென் றருளிச்செய்தனர்; இவ்வாறான உபக்கிரம, உபசம்மாரமுதலிய லிங்கங்களால் சர்வவுபாதிகளில்லாததும், சூரியசந்திராதி சர்வஜகத்தையுந் தனதாணையினிறுத்துவதும், அவ்வியாகிருதரூபவாகாசபரியந்தமான சர்வப்பிரபஞ்சத்தையுந் தாரணஞ்செய்வதும், இச்சரீரேந்திரியாதி ரூபசங்காதங்களில் விஞ்ஞாதாவும் ஆகிய இப்படிப்பட்ட நிருபாதிகசைதந்நியமே அவ்வக்ஷரசப்தத்திற்கு அர்த்தமென்று சித்தித்தது; இப்படிப்பட்ட சைதந்நியரூபமான அக்ஷரமே இங்கே பிரமசப்தத்தாற் சொல்லப்பட்டது.)—[இவ்வர்த்தத்தை வெளியாக்கும்பொருட்டு அவ்வக்ஷரத்திற்கு விசேஷணங் கூறுகின்றனர்.] அனைத்தினும் பெரியது=சர்வத்தினும் பரமமாயுள்ளது. (சொப்பிரகாச பரமாநந்த சொரூபமாயுள்ளதென்பது பொருள்;)—(இதன்றாற்பரியம்; சூரியசந்திராதிகளைத் தனதாணையினிறுத்துவதும், ஜடமாகிய சர்வஜகத்தையுந் தாரணஞ்செய்வதும், சர்வத்திற்குந் திருஷ்டாவும் ஆகிய இவைமுதலிய எவ்வளவு லிங்கங்கள் சுருதியின்கண் அக்ஷரத்திற்குக் கூறியிருக்கின்றனவோ அவ்வளவு லிங்கங்களும் பிரமத்தின்கண்ணேயே பொருந்தியிருக்கின்றன; ஆதலால், அவ்வக்ஷரம் பிரமரூபமே. சங்கை? ஓமென்பது இவ்வக்ஷரமென்று சுருதியிலும், ஓமென்னும் ஏகாக்ஷரம் பிரமமென்று ஸ்மிருதியிலும் ஓங்காரரூபமான பிரணவத்தையே அக்ஷரமென்று கூறியிருக்கின்றது, உலகின்கண்ணும் அக்ஷரசப்தம் வர்ணங்களிடத்தே இடுகுறியாகவுள்ளது ஆதலால், அவ்வக்ஷரசப்தத்தால் ஓங்காரரூபமான பிரணவத்தையேகொள்ளல் வேண்டும், அல்லது சுருதியின்கண் அவ்வியக்தமும் அக்ஷரமென்று கூறப்பட்டிருக்கின்றது ஆதலால், அவ்வக்ஷர சப்தத்தால் அவ்வியக்தத்தையே கொள்ளல்வேண்டும் என்னின்? அக்ஷரத்திற்கு முற்கூறிய லிங்கங்கள் ஓங்காரரூபமான பிரணவத்திலும், மாயாரூபமான அவ்வியக்தத்திலும் பொருந்தவில்லை. சுருதியிலும், ஸ்மிருதியிலும், பிரணவத்திற்கும், மாயாரூபமான அவ்வியக்தத்திற்கும் நாசங்கூறியிருப்பதால் இங்



கே அக்ஷரசப்தத்தால் வர்ணாத்மகமான பிரணவத்தையும், மாயாரூபமான அவ்வியக்தத்தையுங் கொள்ளலாகாது. சுருதியிலும், ஸ்மிருதியிலும் பிரணவத்தை அக்ஷரமென்றது, அதன் நித்தியத்தன்மையைக் கொண்டன்று; பின்னையோ சத்தியமான பிரமத்தையடையும்படி பண்ணும் ஞானத்தைச் சத்தியமென்றாற்போல அக்ஷரமான பிரமத்தின் வாசகமாவதால் அப்பிரணவத்தை அக்ஷரமென்று கூறிற்று; இவ்வாறே அவ்வியக்தத்தைச் சுருதியில் அக்ஷரமென்று கூறினது அதன் நித்தியத்தன்மையைக் கொண்டன்று: பின்னையோ அதன் காரியங்களை நோக்க அது சிரகாலபரியந்த மிருப்பதால் அதை அக்ஷரமென்று கூறிற்று; ஆதலால், இங்கே அக்ஷரசப்தத்தால் உற்பத்திநாசங்களில்லாத சைதந்நியத்தையே பொருளென்று கொள்ளல்வேண்டும்: பிரணவத்தையாவது, அவ்வியக்தத்தையாவது அக்ஷரசப்தத்தாற் கொள்ளலாகாது ; அந்தப் பிரணவம், அவ்வியக்தம் இவைகளினின்றும் நீக்குதற்பொருட்டே ஸ்ரீ பகவான் அவ்வக்ஷரத்திற்கு 'அனைத்தினும் பெரியது' என்னும் விசேஷண மருளிச்செய்தனர்; இத்துணையும், 'பிரமம்' எதுவென்னும் முதல்வினாவிற்கு உத்தரங் கூறப்பட்டது. வர்ணாத்மகமான பிரணவமும், மாயாரூபமான அவ்வியக்தமும் அக்ஷரசப்தத்திற்குப் பொருளல்லவென்று மறுத்தற்பொருட்டே மொழிபெயர்த்த வாசிரியர், 'அரியது' எ-ம், மூலசுலோகத்தில் அக்ஷரமென்று கூறியிருப்பதை, 'அழியாமையது' எ-ம் கூறினரென்றுணர்க.) பிறவும் நீ கேள்=ஏனையவற்றையும் அருச்சுனா நீ கேட்பாய்.—எ-று. (௩)

[இதில், "அத்தியாத்மம்" எது, "கருமம்" எது, "அதிபூதம்" எது, "அதிதெய்வம்" எது என்னும் நான்கு வினாக்களுக்கு உத்தரமருளிச் செய்யத்தொடங்கி முன்னே, "அத்தியாத்மம்" எதுவென்னும் இரண்டாம் வினாவிற்கு உத்தரமருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

**அந்தக்கரணங் களினின்ற வறிவத்தியாத்ம மாவதுதா**
**னிந்தப்பிறவி தனையாக்கு மியாகங்கரும மென்பதுதா**
**னந்தற்கமைந்த வுடம்பதனை நானென்கின்ற ததிபூதம்**
**பந்தப்படுமிவ் வுடற்கமைந்தபுருடன்றெய்வமெனப்படுவான்.**

(இ-ள்.) (அருச்சுனா) அந்தக்கரணங்களில் நின்ற = அந்தக்கரணங்களினிற்கின்ற—அறிவு=(முற்கூறிய அக்ஷரமாகிய பிரமத்தின் சொரூபபூதமான) பிரத்தியக்சைதந்நியமானது — அத்தியாத்மம்

ஆவது = (இத்தேகரூபமான மித்தியான்மாவை ஆசிரயித்திருப்பது கொண்டு) அத்தியான்ம சப்தத்தாற் சொல்லப்படுவதாம்.—(பிரத்தியக் சைதந்நியத்தின் வேறான சுரோத்திரமுதலிய கரணங்களின் சமுகம், அத்தியாத்மசப்தத்தாற் சொல்லப்படவில்லை.) [இனி, "கருமம்" எதுவென்னும் மூன்றும் வினாவிற்கு உத்தரம் நிரூபணஞ்செய்கின்றார்] இந்தப் பிறவிதனை ஆக்கும் யாகம்=இத்தாவரஜங்கமரூபமாகிய பூதங்களின் உற்பத்தியைச்செய்கின்ற யாகமுதலியவை—கருமம்என்பது=கர்மமென்னுஞ்சப்தத்தாற் சொல்லப்படுவதாம்.—(உதாசீனமான கிரியைமாத்திரம் இங்கே, "கரும" சப்தத்தாற் சொல்லப்படவில்லை. எக்ஞம், ஓமமுதலிய கர்மங்களாலேயே சர்வபூதங்களின் உற்பத்தி, சுருதி, ஸ்மிருதிகளிற் பிரசித்தமாகக் கூறப்பட்டிருக்கின்றது.) [இனி, "அதிபூதம்" எதுவென்னும் நான்காம் வினாவிற்கு உத்தரமருளிச்செய்கின்றார்.] நந்தற்கு அமைந்த உடம்பு=கெடுதற்குரியனவாய்ப் பொருந்திய தேகமுதலிய சர்வபதார்த்தங்களும்,—அதனை நான்என்கின்றது=அப்பதார்த்தங்களை யானென்னும் அபிமானமும்—அதிபூதம்=(பூதத்தை ஆசிரயித்துப் பௌதிகமாயிருப்பதால்) அதிபூதமென்று சொல்லப்படுவதாம்.—(வேறே யாதேனும் ஓர் அற்ப பதார்த்தமும், "அதிபூத" சப்தத்தாற் சொல்லப்படவில்லை.) [இனி "அதிதெய்வம்" எதுவென்னும் ஐந்தாம் வினாவிற்கு உத்தரமருளிச்செய்கின்றார்.] பந்தப்படும்=பந்தமாகப்பொருந்துகின்ற—இவ்வுடற்கு அமைந்த புருடன்=இந்தச் சரீரரூபமான சர்வபுரங்களிலு நிறைந்திருக்கும் இரண்யகர்ப்பரூபனான புருஷன்—தெய்வம் எனப்படுவான்=(ஆதித்தன்முதலிய தேவதைகளை ஆசிரயித்துச் சட்சுமுதலிய கரணங்களின்மீது அநுக்கிரகஞ்செய்வதால்) அதிதெய்வமென்று சொல்லப்படுவான்: (தேவதாவிஷயமான தியானமுதலியவை, "அதிதெய்வ" சப்தத்தாற் சொல்லப்படவில்லை.)—எ-று. தான் இரண்டும் அசைகள். (௪)

[இனி, இதில் ஆறும்வினா, எழாம்வினாவிற்கு விடை.]

**எஞ்சு தலையி லதியெச்ச மாகின்றேனா னிறக்குங்கா, னெஞ்சுகவரு நெறிகளெலா மடைத்துநினையப் படுவதுநா, னஞ்சு புலனும் பொறியைந்து மடக்கியறிவென் பாலதாய்த், துஞ்சு மவர்க ளெனையடைவா ரெவ்வாறென்னிற் சொல்லக்கேள்.**

(இ-ள்.) எஞ்சுதலை இல் அதியெச்சம்=குறைவினையுடையனாகாத (அந்தரியாமியென்னும் விஷ்ணுரூபமாகிய) அதியெக்ஞம்—நான் ஆகின்றேன்=(வாசுதேவனான) நானே ஆகின்றேன்.—("அதியெச்சமாகின்றேனான்" என்றதால், அத்தியந்தம் அபேதரூபமாகச் சிந்திக்கத்தக்கதென்னும்பொருள் பெறப்படுகின்றது; இப்படிப்பட்ட அதியெக்ஞரூபமான விஷ்ணு மநுடதேகத்தின்கண்ணே எக்ஞரூபமாக வுளன்; அவ்விஷ்ணு சர்வத்திரவியாபகமாவதால்பரிச்சின்னமானபுத்திமுதலியவற்றினும் பின்னமாம்; இப்படிச் சொன்னதனால், அவ்வதியெக்ஞம் இத்தேகத்திலுளதா? அல்லது இத்தேகத்தினும் புறம்பேயுளதா; தேகத்திலுளதேனும் புத்தியாதிரூபமா? அல்லது, புத்தியாதிகளினும் பின்னமா என்னுஞ் சந்தேகநிவிர்த்தி பெறப்படுகின்றது.) [இனி எழாம் வினாவிற்கு விடை.] (அருச்சுனா இவ்வதிகாரி புருஷனால்) இறக்குங்கால்=மாணகாலத்திலும்—நெஞ்சு கவரும் நெறிகள் எலாம் அடைத்து = சித்தத்தைக்கவராநிற்கும் (அந்நியமான) வழிகளையெல்லாந்தடுத்து — நினையப்படுவது நான்=சிந்தனஞ்செய்யப்படுவது (அதியெக்ஞரூபமான சகுணப்பிரமம், அல்லது பரமாக்ஷரரூபமான நிர்க்குணப்பிரமமாகிய) நானே.—அஞ்சு புலனும் பொறி ஐந்தும் அடக்கி=சுரோத்திரமுதலிய ஐந்திந்திரியங்களையும், சப்தமுதலிய ஐந்து விஷயங்களையும் நிக்கிரகித்து—அறிவு என்பாலதாய் = சித்தமானது என்னிடத்திருப்பதாய் — துஞ்சுமவர்கள் = (சரீரத்தை விடுதல்ரூபமான) மாணமடைபவர்—எனை அடைவார்=(பரமேசுரனான) எனது சொரூபத்தன்மையையே அடையாநிற்பர்; (இப்பொருளில் யாதொரு சமுசயமுமில்லை.)—எவ்வாறு என்னில்=அஃதெவ்வாறென்று நீ சங்கிக்கில், — சொல்லக்கேள்=(அதற்குச் சமாதானம் இனிச்) சொல்லக்கேட்பாய்.—எ-று.

'துஞ்சுமவர்கள்' என்றதால், ஸ்ரீ பகவான் சீவான்மாவுக்கு இத்தேகத்தோடு பின்னத்தன்மையும், 'எனையடைவார்' என்றதால், ஈசுரனோடு அபின்னத்தன்மையும் அருளிச்செய்தனர். சீவேசுரரின் அபேதத்தைத் தத்துவமசியாதி மகாவாக்கியங்களுங் கூறுகின்றது. (௫)

[முன்சொன்ன பொருளையே வெளிப்படையாக்கும்பொருட்டு ஸ்ரீ பகவான் அந்நியதேவதைகளைத் தியானஞ்செய்பவர்க்கும் நியமமாக அவ்வத்தேவதாரூபப்பிராப்தி அருளிச்செய்கின்றனர்.]

**இந்தவுடலம் விடும்பொழுதி யாவனியாதொன் றினை நினைந்தா, னந்தவளவே யந்தப்பா வனையாலதனை யடையுமா, லென்றனியல்பே யெப்பொழுது மிதயத்திடைகொண் டென்பாலாஞ், சிந்தையொடும்வா ளமர்தொடங்கி லதனாலெனையே சேருதியால்.**

(இ-ள்.) (அருச்சுனா மரணகாலத்தில் பரமேசுரனான என்னை ஸ்மரணஞ்செய்யும் அதிகாரி என்னையே அடைவனென்னும் இதுவே கேவலம் நியமமாக இல்லை; பின்னரோ) இந்த உடலம் விடும்பொழுது = அம்மரணகாலத்தில்—யாவன் = யாவனொருவன்—யாதொன்றினை = யாதொருதேவதா விசேஷத்தையாவது, அந்நியமான யாதேனுமொரு பிரியாப்பிரிய பதார்த்தத்தையாவது—நினைந்தான் = ஸ்மரணஞ்செய்பவனாய் இச்சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்வனோ—(அவன் அம்மரணத்தின்பின்) அந்த அளவே = அந்தஸ்மரணத்தளவே—அந்தப் பாவனையால் = அப்பாவனாதிடத்தால்—அதனை அடையும் = அந்தப்பொருளையே யடையாநிற்பன்.— [யாதொருகாரணத்தால் பூர்வஸ்மரணத்தின் அப்பியாசஜந்நியமான மரணகாலத்தின் அந்தியபாவனையே அம்மரணகாலத்தில் பரவசமான புருஷனுக்குத் தேகாந்தரப்பிராப்தியிற் காரணமாகின்றதோ அக்காரணத்தால் நீ அவ்வந்தியபாவனையின் உற்பத்தியின்பொருட்டுச் சர்வகாலத்திலும் பரமேசுரனான என்னையே சிந்தனஞ்செய்வாயாக வென்னும்பொருளை இப்போது ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.] என்தன் இயல்பே = (பரமேசுரனான எனது சுபாவத்தையே—எப்பொழுதும் = சர்வகாலத்திலும்— இதயத்திடைகொண்டு = மனத்தின்கண்ணே (சிந்தனையாகக்) கொண்டு— என்பால் ஆம் சிந்தையொடும் = என்னிடத்துள்ள சிந்தனத்தோடும்— *வாளமர் தொடங்கில் = வாளமர் செய்யில்—அதனால் = (என்னிடத்தர்ப்பித்த மனம், புத்திகளையுடையவனாய்) யுத்தஞ்செய்வதனால்— எனையே சேருதி = என்னையே அடைவாய்; (இதிற் கிஞ்சித்துஞ் சமுசயமில்லை.)—எ-று. ஆல், ஆல்-அசைநிலைகள். (சு)

[இந்தப்படி அருச்சுனனது எழுவகைவினாக்களுக்கும் உத்தரங்கூறி மரணகாலத்தில் பரமேசுர ஸ்மரணத்திற்குப் பரமேசுரப்பிராப்திரூபமான பயனருளிச்செய்து அதைத்தானே விஸ்தாரமாக அருளிச்செய்யும்பொருட்டு ஸ்ரீ பகவான் ஆரம்பஞ்செய்கின்றார்.]

**நல்லகரும யோகத்து ஞானயோக மதுதனிலுஞ், செல்லுமனனை மிகச்செலுத்திப் பிறிதொன்றினையுஞ் சேராதார், சொல்லவரிய கதிரவன்மண் டலம்போற்றோன்றுந் தொல்லோனை யல்லதடையா ரவனியற்கை யடையும்பரிசை யறையக்கேள்.**

*வாளமர் = அஸ்திர, சஸ்திரங்கொண்டுசெய்யும் யுத்தம்.



(இ-ள்.) நல்லகருமயோகத்தும் = நல்ல அப்பியாசயோகத்திலும்,— ஞானயோகமதுதனிலும் = ஞானயோகத்திலும்—செல்லும் மனனை = செல்லும்படியான (யோக்கியதையுடைய தமது) சித்தத்தை—மிகச்செலுத்தி = மிகவுஞ்செல்லும்படியாகப்பண்ணி—பிறிது ஒன்றினையும் சேராதார் = வேறொரு விஷயத்தையு மடையாதோர்—சொல்ல அரிய = சொல்லுதற்கரிய—கதிரவன் மண்டலம்போல் = சூரியமண்டலம் போல — தோன்றும் = விளங்குகின்ற — தொல்லோனை அல்லது அடையார் = பரமான்மாவாகிய தேவனையல்லாது வேறொன்றினையடையார்கள்;—அவன் இயற்கை = அப்பரமான்மாவின் சொபாவத்தையும்,—அடையும் பரிசை = (அதனை) அடையும் விதத்தையும்— அறையக்கேள் = இனிக் கூறக்கேட்பாய்.—எ-று.

பரமதிவ்விய புருஷனையென்பார், 'கதிரவன் மண்டலம்போற்றோன்றுந் தொல்லோனை' என்றார். 'நல்ல கருமயோகம்' என்றது, பரமேசுரனிடத்து விஜாதீயவிருத்தி வியவதானரகித சஜாதீயவிருத்திப்பிரவாகத்தை; அவ்வப்பியாசயோகம் முன்னே ஆறாமத்தியாயத்தில் விஸ்தாரமாகக் கூறப்பட்டிருக்கின்றது. 'ஞானயோகம்' என்றது, நிரோதப்பிரயத்தனமன்றியும் சித்தம் அநான்மபதார்த்தங்களிற் செல்லும்படியான சொபாவமில்லாததை. (எ)

[பூர்வஞ்சொன்ன அதிகாரிகட்குச் சிந்தித்தற்கும், அடைதற்குமுரிய பரமதிவ்வியபுருஷனை மீண்டும் அநேக விசேஷணங்களால் ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

**எல்லாப்பொருளு மறிவானை யெல்லாப்பொருட்கும் பழையானை, யெல்லாரையுந்தன் னிலைநிறுத்து வானையிரம்பச் சிறியானை, யெல்லாப்பயனு மீவானை யார்க்குநினைதற் கரியானை, யெல்லாவிடத்து மிருடீர்த்த விளவெங்கதிர்போ லெழுவானை.**

(இ-ள்.) எல்லாப் பொருளும் அறிவானை = (முக்காலங்களிலுமுள்ள) சர்வ வஸ்துக்களையுமறியுஞ் சர்வக்ஞனும்,—எல்லாப்பொருட்கும் பழையானை = சர்வஜகத்திற்குங்காரணனாகலின் அநாதியும்,—எல்லாரையும் தன் நிலை நிறுத்துவானை = சூரியசந்திராதி சகலரையும் தனதாணையினிறுத்துபவனும், — இரம்பச் சிறியானை = (ஆகாசமுதலிய சகலஜகத்திற்கும் உபாதானகாரணமாகலின், ஆகாசமுதலிய சூட்சுமபதார்த்தங்களிலும்) அத்தியந்தஞ் சூட்சுமரூபனும்,—எல்லாப் பயனும்

ஈவானை=(புண்ணியபாவகர்மங்களின் எவ்வளவு பயன்களுண்டோ) அவ்வளவு பயன்களையும் (பிராணிகளின் கர்மாநுசாரமாக வெவ்வேறாகக்) கொடுப்பவனும்,—யார்க்கும் நினைதற்கு அரியானை=(அபரிமித மகிமையுடையனாகலின்,) யாவர்க்கும் சிந்தனை செய்தற்கசக்கியரூபனும்,—எல்லா இடத்தும் இருள் தீர்த்த=சர்வ இடங்களிலுமுள்ள விருளை நீக்கிய—இள வெம் கதிர் போல் எழுவானை=காலையிற்றோன்றுஞ் சூரியன்போலப் பிரகாசமுடையவனும் ஆகிய பரமதிவ்விய புருஷனை,—எ-று. இது குளகம்.

அஞ்ஞான ரூபமான தமத்திற்கு விரோதியாதலின், ‘இளவெங்கதிர்போலெழுவான்’ என்றார். ‘இரம்பச்சிறியான்’ என்றதால், வருத்தத்தால் அறியத்தக்கவனெனக் கொள்ளற்பாலது; அங்ஙனம் கொள்ளாக்கால், ‘மகத்துக்குமகத்து’ என்னுஞ்சுருதி அசங்கதமாமென்றறிக; இப்படியே வாசிட்டத்தில், “எட்டாமையினாற் பரவணுவாமிவனே நிறைவாற் பெரியகிரி” என்று கூறியிருப்பது காண்க. (அ)

[பகவானே ஈசுரசிந்தனத்தின் பிரயத்தன மிகுதியை அடிக்கடியருளிச்செய்கிறீரோ; பிரயத்தனமிகுதி எந்தக் காலத்தில் வேண்டுமென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

**மருவற்குரிய வன்புடையார் மயங்காயோக மனத்தாலே**
**புருவத்திடையே தம்முடைய புரைதீருயிரைப் புகநிறுத்தி**
**யுருவத்தினைவிட் டிடிலிந்த யோகத்தாலேயவனோடும்**[லோய்.
**பொருவப்படுவரப்பொருண்மே லின்னம்புகல்வன்பொருவே**

(இ-ள்.) மருவற்கு உரிய அன்புடையார் = பொருந்துதற்குரிய அன்பினையுடைய உபாசகர்—மயங்கா யோக மனத்தாலே=(மரண காலத்தில்)ஏகாக்கிரமும், யோகவலியுமுடையமனத்தினாலே—புருவத்திடை = புருவமத்தியிலுள்ள ஆக்ஞாசக்கரத்தில்—தம்முடைய புரைதீர் உயிரை=தமது குற்றமற்ற பிராணவாயுவை—புக நிறுத்தி=(சுழுமுனைநாடிவழியாகப்) புகுதும்படி செய்து நிறுத்தி—உருவத்தினை விட்டிடில்=சரீரத்தை விட்டு (ப் பத்தாம் வாயிலாகிய பிரமரந்திரத்தால்) வெளிப்படில்—இந்த யோகத்தாலே=இந்த யோகத்தினாலே—அவனோடும் பொருவப்படுவர்=அந்தப் பரமதிவ்விய புருஷனோடும் பொருந்தப்படுவர்; — அப்பொருள்=அவ்வர்த்தத்தை—மேல் இன்னம் புகல்வன்=மேலே இன்னமுங் கூறுவேன்:—பொரு வேலோய்=பொருதாநிற்கும் வேலையுடைய அருச்சுனா.—எ-று.

‘யோகம்’ என்பது சமாதி. (௯)



[ஓங்காரரூபப்பிரணவநாமத்தாலேயே பரமேசுரனைச் சிந்திக்கத்தக்கது: அந்நியமான மந்திரமுதலியவற்றால் சிந்திக்கலாகாதென்னும் நியமத்தை இப்போது அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

**யாதொன்றைமறைதெரிந்தோரழியாதென்றெடுத்துரைப்பர்**
**யாதொன்றை யவாவறுத்த யோகிகடா மெய்திடுவர்**
**யாதொன்றை யுறநினைந்தோர் காமமுத லியவிழப்பர்**
**யாதொன்றப்பரம்பொருளாமதைச்சுருங்க வியம்புவன்கேள்.**

(இ-ள்.) யாதொன்றை = யாதொரு ஓங்காரநாமமுடைய பிரமத்தை — மறை தெரிந்தோர்=வேதமறிந்த பெரியோர்—அழியாது என்று எடுத்து உரைப்பர்=அக்ஷரமென்று எடுத்துக்கூறுவரோ,—யாதொன்றை=யாதொரு அக்ஷரத்தை—அவா அறுத்த யோகிகள்தாம் எய்திடுவர்=(விஷயசுகங்களின்) இச்சையை யொழித்த சந்நியாசிகள் (தமதுசொரூபமாக) அடையாநிற்பரோ,—யாதொன்றை=யாதொரு அக்ஷரப்பிரமத்தை – உற நினைந்தோர்=அடையவிச்சித்த சாதகபுருஷரான நயிஷ்டிகப் பிரமசாரிகள்—காமம் முதலிய இழப்பர்=காமமுதலியவற்றை யிழந்து (குருகுலவாசஞ்செய்து பிரமசரியபூர்வகமாக) வேதாந்த சிரவண, மனனாதி செய்வரோ,—யாதொன்று=எந்தவஸ்துவானது—அப்பரம் பொருள் ஆம்=அந்த நிரதிசயப்பொருளாகுமோ—அதை=அவ்வக்ஷரத்தை—சுருங்க இயம்புவன் கேள்=(உனக்குச்) சங்கிரகமாகக் கூறுவேன் கேட்பாய்.—எ-று.

யாதொரு பிரகாரத்தால் உனக்குச் சமுசயரகிதமாக அவ்வக்ஷரப்பிரமத்தின் போதமுளதாமோ அந்தப்பிரகாரத்தால் அருளிச்செய்வேனென்பார், ‘சுருங்க வியம்புவன்’ என்றார். எவன் அகார, உகார, மகாரமென்னு மூன்று மாத்திரைகளையுடைய ஓமென்னும் அக்ஷரத்தால் பரமபுருஷனைச் சிந்தியாநிற்பனோ அவன் அப்பரமபுருஷனையேயடைவனென்னும் சுருதியின்கண் அருளிச்செய்த பிரணவவுபாசனையே இங்கே பகவானுக்கு விருப்பம்; ஆதலால், இவ்வெட்டாமத்தியாயமுடியும் பரியந்தம் யோகதாரணையோடுகூட அவ்வோங்காரவுபாசனையின் பயனும், அப்பயனால் மீண்டு பிறவாமையும், அதன் மார்க்கமும் ஆகிய இவ்வனைத்தையும் ஸ்ரீ பகவானால் அருளிச்செய்யப்படுமென்க.

[‘அதையியம்புவன்’ எனப் பூர்வம் பிரதிக்ஞைசெய்த பொருளைச் சாதனத்தோடுகூட இரண்டு செய்யுட்களால் ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

அஞ்சுபுலன் வழியவை யடைத்தய லுறாதே
நெஞ்சுதனை யிதயகம லத்திடை நிறுத்தி
யெஞ்சுதலி லுயிர்வளியை யுச்சியினி லேற்றி
யுஞ்சுபுகு நெறியிதென யோகுட னிருந்தே.

(இ-ள்.) அஞ்சு புலன் வழியவை அடைத்து=சுரோத்திராதி இந்திரியரூபமாகிய துவாரங்களைத் (தத்தம் விஷயங்களினின்றும்) தகைந்து—அயல் உறாது = அந்நியங்களைப்பொருந்தாமல் — நெஞ்சுதனை=மனத்தை—இதயகமலத்திடை நிறுத்தி = இருதயகமலத்தில் வைத்து—எஞ்சுதல் இல் உயிர் வளியை=குறைதலில்லாத பிராண வாயுவை — உச்சியினில் ஏற்றி = சிரசிலேறும்படி பண்ணி—உஞ்சு புகும் நெறி இது என=(சம்சாரத்தினின்றும்) உய்ந்து முக்தியிற் புகுதும்படியான வழி இதுவேயென்று—யோகுடன் இருந்து=யோக தாரணரூபமான தைரியத்தோடு கூடிநின்று,—எ-று. இது குளகம்.

[இதுவுமது.]

ஓதலி னியற்கையினொ டோமெனு மெழுத்தை
வாய்தனி லுரைக்கமன மானது தனித்தே
மேதகு மெனைத்தெளிய வாவிதனை விட்டோர்
வீதலி னியற்கையெனை யேயடைவர் மிக்கோய்.

(இ-ள்.) ஓதலின் இயற்கையினொடு=உச்சரிக்குஞ் சுபாவத்தோடு—ஓம் எனும் எழுத்தை = ஓமென்னும் பிரமரூபமாகிய ஏகாக்ஷரத்தை—வாய்தனில் உரைக்க=வாக்காலுச்சரிக்க(ப்பெற்று) — மனமானது தனித்து = மனமானது அந்நியங்களொன்றோடுங் கூடாமல்—மேதகும் எனைத் தெளிய=(ஓங்காரத்தின் பொருளாய்ப்) பரமேசுரனைஎன்னைச்சிந்திப்பதாக (இருந்து)—ஆவிதனை விட்டோர்=தேகத்தைப் பரித்தியாகஞ்செய்து செல்பவர்—வீதல் இல் இயற்கை=நாசமில்லாத சுபாவத்தையுடைய—எனையே=என்னையே—அடைவர் = (தேவயானமார்க்கமாக) அடையாநிற்பர் :— மிக்கோய் (யாவரினும்) மேலான அருச்சுனா.—எ-று. (கஉ)

[பகவானை முன்சொன்ன பிராணவாயுவின் நிரோதரூபமான யோகாப்பியாசமின்மையின் சாவதானமுடையராய்த் தமது இச்சையாற் றேகபரித்தியாகஞ் செய்யச் சாமர்த்தியமில்லாமல் மரணகாலத்



திற் பரவசராய்த் தேகபரித்தியாகஞ்செய்கின்ற புருஷர் என்னபயனை யடையாநிற்பரென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அப்பயனை அருளிச்செய்கின்றார்.]

இப்பரிசி னாண்டொரறு திங்களள வென்னா
தெப்பொழுது மென்றனியல் பேநினைய லுற்றார்
கைப்படுவ னியானெனியல் கைப்பட விருந்தோர்
பொய்ப்பிறவி யானது மறித்தடைதல் பூணார்.

(இ-ள்.) இப்பரிசின்=முற்கூறிய பிரகாரமாக—(ஒரு) ஆண்டு (அளவு)=ஒருவருஷமளவும்,—ஒரு அறு திங்கள் அளவு=ஓராறுமாசமளவும்—என்னாது = பரமேசுரனைச் சிந்திப்பாமென்னுங் காலவரையறைசெய்யாமல்—எப்பொழுதும்=நிரந்தரஞ் சீவிதகால பரியந்தம்—என்றன் இயல்பே=(முன்னருளிச்செய்த பரமேசுரனான) எனது சுபாவத்தையே—நினையல் உற்றார்=சிந்தியாநிற்கும் நிரந்தரசமாகித சித்தமுடையபுருஷர்—(பூர்வஞ்சொன்னபடி சுவாதீனராய்த் தேகத்தைப் பரித்தியாகஞ்செய்க, அல்லது பராதீனராய்த் தேகத்தைப்பரித்தியாகஞ்செய்க: சர்வப்பிரகாரத்தினாலும் அப்புருஷருக்கு) யான்= (பரமேசுரனான) நான்—கைப்படுவன்=சுலபமாகக்கைவசமாவேன்.— [பகவானே இவ்வாறு உம்மைச் சர்வதா சிந்தித்து உம்மையடையாநிற்கும் அதிகாரிபுருஷர் மீண்டு ஜநிப்பரோ? அல்லது, ஜநியாரோவென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் உத்தரமருளிச்செய்கின்றார்.] என் இயல்=எனது சுபாவமானது—கைப்பட இருந்தோர்= கைவசமாகும்படியிருந்தவுபாசகர் — பொய்ப்பிறவியானது=(துக்காலயமாய்) நாசமுடையதாயுள்ள ஜநநமானது—மறித்து அடைதல் பூணார் — மீண்டடைதலைப் பொருந்தார்; (சர்வத்தினும் உத்கிருஷ்டமான மோட்சத்தை யடைதலின்.)—எ-று.

உபாசகர் இராசததாமதரூபமலமில்லாத சுத்தாந்தக்கரணமுடையராய்ப் பிரமலோகத்தையடைந்து அங்கே அநேகப்பிரகாரமான திவ்வியபோகங்களைப் புஜித்து அதனந்தத்தில் பிரமஞானமடைந்து சர்வத்தினும் உத்கிருஷ்டமான கைவல்லியமுக்தி யடைவதால், 'பொய்ப்பிறவியானது மறித்தடைதல் பூணார்' என்றார்; இது கிரமமுக்தி என்றறிக. (கரு)

["எனியல்கைப்படவிருந்தோர், பொய்ப்பிறவியானதுமறித்தடைதல்பூணார்" என்று முன்னருளிச்செய்ததால் பரமேசுரனிடத்துப் பரா

முகரும், தத்துவசாட்சாத்கார மின்மையரும் ஆகிய புருஷர்க்குப் பிரமலோகத்தினின்றும் புனராவிர்த்திபொருளாலே பெறப்படுதலின் அதனை இப்போது ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

**செய்யாமுன் சார்ந்தவினை தீர்ந்தபோதே திசைமுகனு டணைந்தோருந் திரியமீள்வர், மெய்யாக வெனையடையு மவ ரோகண்டாய் மீளாத நெறியடைந்தார் வேறுகூறி, லையாகேள் சதுர்யுக மீரைஞ்ஞூறு மொருபகலா மாண்டொருநூ றயற்கு முள்ள, தெய்யாதாங் கவருக்கோர் பகலிற்றேன்றி யிராவிற க்குந் தன்மைத்தாம் யோனியெல்லாம்.**

(இ-ள்.) செய்யா முன் சார்ந்த வினை = (தம்மாற்) செய்யப்பட்டு முன்ஜநநத்தில்(தம்மைப்)பொருந்திய வினைகள்—தீர்ந்தபோது =அநுபவித்துத் தீர்ந்தகாலையில்—திசைமுகன் நாடு அணைந்தோரும் = பிரமலோகத்தோடுகூடச் சர்வபோகபூமிரூபமான உலகங்களை யடைந்தோரும்—திரியமீள்வர் = திரும்பச் சநியாநிற்பர்.—[உம்மை யடைந்தோர்க்கும் அவர்கள்போலப் புனராவிர்த்தி யுண்டோவென் னுஞ் சங்கைக்கு முன் செய்யுளிற்சொன்ன அர்த்தத்தைத்தானே மீட்டும் வலியுறுத்தற்பொருட்டு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.] ஐயாகேள்=அருச்சுனகேள்—மெய்ஆக=உண்மையாக—எனைஅடையு மவரோ=(பரமேசுரனை) என்னையடைந்(து பரமாநந்தத்தையடைந்) திருக்கும் அதிகாரிபுருஷரோ—மீளாத நெறி அடைந்தார் = மீண் டொருகாலுஞ் சநியாத வழியை யடைந்தோராவர்.—[பிரமலோகத் தோடுகூடச் சர்வலோகங்களும் காலத்தினற் பரிச்சின்னமாவதால் புனராவிர்த்தி யுடையனவென்னும் பொருளையே அருளிச்செய்கின் றார்.] வேறு கூறில் = (சூரியசந்திரரின் கதியினலறியும் பகலிரவி னும்) வேறான பிரமாவின் பகலிரவைச் சொல்லில்,—சதுர் யுகம் ஈரைஞ்ஞூறும்=சதுர்யுகமாயிரம்பரியந்தம்—ஒருபகல் ஆம்=(பிரமாவுக்கு) ஒருபகலாம்; (இப்படியே சதுர்யுகமாயிரம் பரியந்தம் ஓரிரவாம்; இப்படிப்பட்ட பகலிரவு பதினைந்தாயின் ஒருபட்சமெனப்படும்; இப்படிப் பட்ட இரண்டுபட்சம் ஒருமாசமெனப்படும்; இப்படிப்பட்ட பன்னிரண்டுமாசம் ஓர் வருஷமெனப்படும்;)—ஆண்டு ஒரு நூறு=இப்படிப் பட்ட ஒரு நூறுவருஷம்—அயற்கும் எய்யாது உள்ளது = பிரமாவுக் கும் பரமாயுளாகக் குறைவறவுள்ளது.—(முதல் ஐம்பது வருஷம் பிர



தமபரார்த்தம், மற்றை யைம்பதுவருஷம் துதியபரார்த்தம்; இப்படிப் பட்ட நூறுவருஷமான ஆயுளைப் புசித்து அந்தப்பிரமா நாசத்தை யடையாநிற்பர்; இவ்வாற்றால், அப்பிரமாவும் காலத்தாற் பரிச்சின்ன மாவதால் அநித்தியனே; ஆதலால், கிரமமுக்தியில்லாத புருஷர்க்கு அந்தப் பிரமலோகத்தினின்றும் புனராவிர்த்தியுள்ளதே.) [இந்திராதி தேவதைகள் அப்பிரமாவினுந் தாழ்ந்தோராம்; அவ்விந்திராதி தேவதைகள் அப்பிரமாவின் ஒரு பகலாகிய காலத்தினலேயே பரிச் சின்னராம்; ஆதலால், அவ்விந்திராதிதேவதைகளின் உலகங்களினின் றும் புனராவிர்த்தி யுண்டென்பதிற் சொல்லவேண்டுவ தென்னை யென்னும்பொருளை இப்போது ஸ்ரீபகவான் அருளிச்செய்கின்றார்.] அவருக்கு=அப்பிரமாவுக்கு—ஓர்பகலில் தோன்றி=(முற்கூறியஆண் டளவினையுடைய) ஓர் பகல்வரில் உற்பந்நமாய்—இரா இறக்கும் தன் மைத்து ஆம் = இராத்திரிவரில் பிரளையமாகுந் தன்மையனவாம்— யோனி எல்லாம்=எண்பத்து நான்கிலக்கம் யோனிபேதமுழுவதும். —எ-று.

கண்டாய்-முன்னிலை அசை. ஆங்கு-அசைநிலை.

'செய்யா' என்பது, இறந்தகால உடன்பாட்டு வினையெச்சம். 'அவருக்கோர் பகலிற்றோன்றி யிராவிறக்குந் தன்மைத்தாம் யோனி யெல்லாம்' என்றதால், பிரமாவின் பகலென்னுஞ் சிருஷ்டியிலும், இராத்திரியென்னும் பிரளையத்திலும் ஆகாசாதி பூதங்கள் உற்பத்தி நாசமாகாமல் தாம் இருந்தவண்ண மிருக்குமென்றே யறிக. (கச)

["திசைமுகனு டணைந்தோருந் திரியமீள்வர்" என்று முற்கூறிய வசனத்தின் பொருளை யருளிச்செய்து, இனி, "மெய்யாக வெனை யடையு மவரோகண்டாய் மீளாத நெறியடைந்தார்" என்று முற்கூறிய வசனத்தின் பொருளை யருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

**நெறியில்வரு வியத்தமுட னவ்வியத்தங் கூடாத நிலை மையென்றும், பொறியழியு மாக்கைதனி லழியாத புலமெ ன்றும் புதிதன்றென்று, மறிவரிய நெறியென்று மழியாத பொருளென்று மடைந்தோர் பின்னைப், பிறிவரிய நெறியெ ன்றும் பெரியோர்கள் பேசுவதென் பெற்றிகண்டாய்.**

(இ-ள்.) நெறியில் வரு=(முற்கூறிய ஆண்டளவுசென்ற) வழியில் வருகின்ற—வியத்தமுடன் அவ்வியத்தம் கூடாத நிலைமை என்

றும்=வியக்தாவியக்தங்களை யடையாத சத்தாரூபபாவமென்றும்,—பொறி அழியும் ஆக்கைதனில்=அறிவழியுந் தேகத்தில்—அழியாத புலம் என்றும்=அழியாத அறிவென்றும்,—புதிது அன்று என்றும்=நித்தியமென்றும்,—அறிவு அரிய நெறி என்றும்=(இந்திரியங்களால்) அறிதற்கரிய அவ்வியக்தமென்றும்,—அழியாத பொருள் என்றும்=அக்ஷரமென்றும்—அடைந்தோர் = அடைந்த வதிகாரிபுருஷர்—பின்னைப் பிறிவு அரிய நெறி என்றும்=பின்பு ஜநநமடையாத முறைமையுடையதென்றும்—பெரியோர்கள் பேசுவது=பெரியோர்கள் கூறுவது—என் பெற்றி கண்டாய் = (சர்வத்தினும் உத்கிருஷ்டமான) எனது சொரூபமாகுங் கண்டாய்.—எ-று.

இங்கே பிரமாவின் பகல்தோறுஞ் சிருஷ்டியும், இராத்திரிதோறும் பிரளயமுங் கூறும்பொருட்டே ஆரம்பித்தமையின், 'வியத்தமவ்வியத்தம்' என்பவற்றிற்குப் பிரமாவின் சாக்கிராவஸ்தையும், சுழுத்தியவஸ்தையுங் கொள்ளத்தக்கனவாம். 'என்பெற்றி கண்டாய்' என ஆறும்வேற்றுமையின்கற்பனை, இராகுவின் சிரசென்றாற்போலெனக.

["இப்பரிசி ஞண்டொரறு திங்களளவென்று, தெப்பொழுதுமென்றனியல்பேநினையலுற்றார்,கைப்படுவனியான்" என்றுமுன்னே பதின்மூன்றாஞ் செய்யுளி லருளிச்செய்த பக்தியோகமே பரமகதியின் பிராப்திக்கு உபாயமாமென்னும் பொருளை ஸ்ரீ பகவான் இப்போது அருளிச்செய்கின்றார்.]

**எப்பொருளுமி யாவன்றன் னுள்ளடங்கிற் றெங்குமாய் நிற்கின்றான்யா, ரப்பரம பரம்பொருளா யுள்ளவெனை யன்பாலே யடைவதையா, வெப்பரிசு வருங்காலத் திறந்தார்கள் பிறவாதார் பிறப்பரொன்னி, லப்பரிசு வருங்காலத் தினையறிய வுணாக்கின்றே னதனைக்கேட்பாய்.**

(இ-ள்.) ஐயா = அருச்சுனா—எப்பொருளும்=எவ்வகைப்பட்ட பூதங்களும்—யாவன்றன்—உள் அடங்கிற்று=எந்தப்புருஷனினுள்ளே அடங்கினவோ—எங்கும் ஆய் நிற்கின்றான் யார்=சர்வபூதங்களிலும் வியாபித்தவனாய் நிற்கின்றவன் யாவன்—அப்பரம பரம்பொருள் ஆய் உள்ள எனை=அந்நிரதிசய பரமான்மபுருஷனாயுள்ள என்னை—அன்பாலே அடைவது = * அநந்நியமான பக்தியினாலேயே அடையத்தக்கது.—எப்பரிசு வரும் காலத்து=எந்தப்படி வாராநிற்குங்காலத்தில்—இறந்தார்கள்=மரணமாய்ச் செல்லாநிற்பவர்—பிறவாதார்=ஆவிருத்தியடையாதவராம்,—பிறப்பர் என்னில் = ஆவிருத்தி யடைபவராம் என்றருச்சுனா நீ கேட்கில்,—அப்பரிசு வரும் காலத்தினை=அந்தப்படி வாராநிற்குங்காலத்தை—அறிய உணாக்கின்றேன்=(நீ) அறியும்படிக் கருளிச்செய்கின்றேன்; — அதனைக் கேட்பாய் = அதைக் கேட்பாயாக.—எ-று.

(கசு)

[முன்னர்த் தேவயானமார்க்கமும், அதனைத் துதித்தற்பொருட்டுப் பின்னர் பிதிருயானமார்க்கமும் ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றனர்.]

**அங்கியொளி பகல்வெண்மை யாங்கால தேவதைகளவர்களோடுந், தங்குமறு திங்களிடை யுத்தரா யணஞ்சார்வார் மறுத்துஞ்சாரார், கங்குல்புகை கறுப்பென்னுங் காலதேவதையடைந்து பிறக்குங்கண்டா, யெங்குமறு திங்களிடைத் தெக்கணா யனத்திறந்த யோகியென்பான்.**

(இ-ள்.) ஒளி அங்கி=ஜோதிரூபமான அக்கினியபிமான தேவதையும்,—பகல் வெண்மை ஆம் காலதேவதைகள் அவர்களோடும்=பகலும், சுக்கிலபட்சமுமென்னுங் காலங்களி னபிமானதேவதைகளும் ஆகிய அவர்களோடும்—தங்கும்=பொருந்துகின்ற—அறு திங்களிடை=ஷண்மாசங்களில் — உத்தராயணம் சார்வார் = உத்தராயணமென்னுந் தேவயானமார்க்கத்திற்சென்று சகுணப்பிரமத்தை யடையுஞ் சகுணப்பிரமோபாசகர்—மறுத்தும் சாரார்=மீண்டிவ் வுலகத்திற் சநியார்கள்.—புகை=தூமாபிமான தேவதையும்,—கங்குல் கறுப்பு என்னும் காலதேவதை அடைந்து=இராத்திரியும், கிருஷ்ணபட்சமு மென்னுங் காலங்களி னபிமான தேவதைகளும் ஆகிய அவர்களோடும் — அறு திங்களிடை=ஷண்மாசங்களில்—தெக்கணாயனத்து = தெட்சிணாயனத்தில்—இறந்தயோகி என்பான் = மரணமாய்ச் செல்லாநிற்குங் கர்மயோகியென்னும் புருஷன் — எங்கும் பிறக்குங்கண்டாய் = (சுவர்க்கமென்னும் பெயருடைய சந்திரலோகத்தில் புண்ணிய கர்மங்களின் போககாலபரியந்தம் வாசஞ்செய்து பின்னர்ச் சேஷமாகிய புண்ணிய பாவகர்மவசத்தால்) யாண்டும் ஜநியாநிற்பன்.—எ-று.

யாதொரு மார்க்கத்தால் பிரமலோகத்தை யடைவரோ அம்மார்க்கத்தின் கிரமம்; உபாசகபுருஷனை மரணசமயத்தில் சரீரத்தினின்றும்

* பரமேசுரனையன்றி அந்நிய விஷயங்களி லுளதாகாத பிரேமலட்சணபக்திக்கு அநந்நியபக்தியென்று பெயர்.

நீக்கி முன்னே அக்கினி யபிமானதேவதை தனது லோகத்திற்குக்
கொண்டுபோம்; அவ்வக்கினி லோகத்தினின்றும் பகலினபிமான
தேவதை தனது லோகத்திற்குக் கொண்டுபோம்; அதினின்றுஞ்
சுக்கிலபட்சத்தி னபிமானதேவதை தனது லோகத்திற்குக் கொண்டு
போம்; அதற்குமேல் உத்தராயணமென்னும் ஷண்மாசத்தி னபிமான
தேவதை கொண்டுபோம்; அதற்குமேல் சம்வத்ஸரத்தி னபிமானதேவ
தை கொண்டுபோம்; அதற்குமேல் தேவலோகத்தி னபிமானதேவதை
கொண்டுபோம்; அதற்குமேல் வாயுவினபிமானதேவதை கொண்டு
போம்; அதற்குமேல் சூரியதேவதை கொண்டுபோம்; அதற்குமேல் சந்
திரதேவதை கொண்டுபோம்; அதற்குமேல் மின்னலினபிமானதேவ
தை தனது லோகத்திற்குக் கொண்டுபோம்; அங்கே மின்னலினுலகில்
அவ்வுபாசகன்முன்னே இரண்ணியகர்ப்பரது ஆக்ஞையால் இரண்
ணியகர்ப்ப லோகவாசியும், இரண்ணியகர்ப்பனுக்குச் சமானரூபனு
மான திவ்வியபுருஷனொருவன் அவனைக் கொண்டுபோகவருவன்; அப்
புருஷன் மின்னலினுலகினின்றும் வருணலோகத்திற்குக் கொண்டு
போவன். மின்னலினபிமானதேவதை கூடவேவந்து வருணலோகத்தி
னின்றும் இந்திரலோகத்திற்குக் கொண்டுபோம். வருணதேவதையும்
இந்திரலோகபரியந்தம் இரண்ணியகர்ப்பலோகவாசியான திவ்வியபுருஷ
னோடும், உபாசகனோடுங் கூடவிருக்கும். அதற்குமேல் இந்திரதேவதை
பிரஜாபதியின் லோகபரியந்தம் அவ்விருவரோடு கூடவிருக்கும். அத
ற்குமேல் பிரஜாபதி அவ்விருவரோடுகூடப் பிரமலோகத்திற்குக் கொ
ண்டுபோவதிற் சமர்த்தனாகான்; ஆதலால், பிரமலோகத்தை அத்திவ்விய
புருஷனோடுகூட அவ்வுபாசகபுருஷன் அடையாநிற்பன். பிரமலோ
கத்தின் அதிபதி இரண்ணியகர்ப்பன்; சூட்சுமசமஷ்டியி னபிமான
சேதனம் இரண்ணியகர்ப்பனென்று சொல்லப்படும்; அவனையே காரி
யப்பிரமமென்பர். காரியப்பிரமத்தின் நிவாசஸ்தானத்தைப் பிரம
லோகமென்பர். எந்த மார்க்கத்தில் அக்கினிமுதல் பிரஜாபதி பரியந்த
மான சர்வதேவதைகளு முண்டோ அத்தேவயான மார்க்கத்திற் செல்
லாநிற்குஞ் சகுணப்பிரமத்தினுபாசகர் இரண்ணியகர்ப்பரூபமான சகு
ணப் பிரமத்தையே அடையாநிற்பர்; அச்சகுணப்பிரமவாயிலாகவே
அவ்வுபாசகர் நிர்க்குணப்பிரமத்தை யடைவர். இந்தக் கற்பத்தின் பின்
னர் மற்றோர் கற்பத்தில் பஞ்சாக்கினி வித்தையையுடைய உபாசகர்
பிரமலோகத்தினின்றும் புனராவிர்த்தி யடைவர்; அவர்களையே
ஸ்ரீபகவான், "செய்யாமுன் சார்ந்தவினை தீர்ந்தபோதே திசைமுகனு
டணைந்தோருந் திரியமீள்வர்" என் றருளிச்செய்தனர் என்றறிக.



ஸ்ரீபகவான்அக்கினி,பகல், சுக்கிலபட்சம்,உத்தராயணங்களி னபிமான
தேவதைகளையே அருளிச்செய்திருப்பினும் அவை உபலட்சணமாக
விருத்தலின், சுருதியநுசாரமாக இங்கே ஏனைய சர்வதேவதைகளுங்
கொள்ளப்பட்டன; தூமாதி நான்கு தேவதைகளும் சுருதியிற்சொல்
லிய ஏனைய தேவதைகளின் உபலட்சணமாக விருத்தலின், கர்மியா
கியபுருஷன் முன்னே தூமாபிமானதேவதையை, அதற்குமேல் இரா
த்திரியபிமானதேவதையை, அதற்குமேல் கிருஷ்ணபட்சத்தினபிமான
தேவதையை, அதற்குமேல் ஷண்மாசரூபமான தெட்சிணாயனத்தி
னபிமான தேவதையை, அதற்குமேல் பிதிர்லோகத்தி னபிமானதேவ
தையை, அதற்குமேல் ஆகாசத்தி னபிமானதேவதையை, அதற்குமேல்
சந்திரனை அடைந்து சுவர்க்கமென்னும் பெயருடைய சந்திரலோகத்
தில் புண்ணிய கர்மங்களின் போககாலபரியந்தம் நிவாசஞ்செய்து பின்
னர்ச்சேஷமாயுள்ள புண்ணியபாவ கர்மவசத்தால் மீட்டுஞ் சநியாநிற்ப
னென்றறிக. இவ்வாறு தூமத்தினபிமானதேவதைமுதல் சந்திரதே
வதைபரியந்தங் கூறியுள்ள சர்வதேவதைகளும் எந்தமார்க்கத்திலுண்
டோ அந்தப் பிதிருயான மார்க்கத்திற் செல்லாநிற்பவர் * இஷ்டம்,
† பூர்த்தம், ‡ தத்தம் என்னும் மூவகைக் கர்மங்களைச் செய்யாநிற்குங்
கர்மிபுருஷராம்; அவர் சந்திரலோகத்தில் சந்திரனுலடைவதான அக்
கர்மங்களின் சுகரூபபயனையடைந்து அக்கர்மங்கள் நசித்தபின்னர் மீட்
டும் மநுடலோகத்திற் பிறப்பர்; ஆதலால், பிதிருயானமென்னும் பெய
ருடைய ஆவிருத்தி மார்க்கத்தினும் தேவயானமென்னு நாமமுடைய
அநாவிருத்திமார்க்கம் அத்தியந்தஞ் சிரேஷ்டமாம். (கஎ)

[இப்போது தியானரூபயோகத்தில் அதிகாரிக்குச் சிரத்தையை
விருத்திபண்ணுவிக்கும்பொருட்டு ஸ்ரீபகவான் அந்தத்தியானயோக
த்தை ஸ்துதிக்கின்றார்.]

[வேறு.]

**ஏதமான தின்றியிவ் விரண்டுமாயு மியோகிதான்**
**வேதமோதி வேள்விதான மெய்த்தவங்கள் செய்துளா**

---

* இங்கே அக்கினிஹோத்திராதிகர்மங்கட்கு இஷ்டகர்மமென்று
பெயர்.

† வாவி, கூபம், தடாகம், தர்மசாலைமுதலிய கர்மங்கள் பூர்த்த
கர்மம்.

‡ சத்பாத்திரத்தில் பசு, சுவர்ணமுதலிய பொருள்களைத் தானஞ்
செய்தல் தத்தகர்மம் என்க.

**ரோதுவாய நற்பதங்க ளெய்திவீடு மெய்துவா**
**னாதலாலவ் வியோகமேசெய் யென்றுமாய னோதினான்.**

(இ-ள்.) (அருச்சுனா) இவ்விரண்டும் ஆயும் யோகிதான்=(தேவயானமென்னுஞ் * சுக்கிலமார்க்கம் கிரமமுக்தியையே அடைவிப்பது, பிதிருயானமென்னுங் † கிருஷ்ணமார்க்கம் மீண்டுச் சம்சாரத்தையே அடைவிப்பது என்றிவ்வாறு) இவ்விரண்டு மார்க்கத்தையும் ஆராய்ந்தறியுஞ் சகுணப்பிரமத்தின் தியானபராயணபுருஷன் — (இதில் பூர்வம் எழுவினாக்களின் நிருபணவாயிலாகவருளிச்செய்த அர்த்தங்களை யநுஷ்டித்து)ஏதமானது இன்றி=யாதொருமோகத்தையுமடையாமல் —வேதம் ஓதி=இருக்குமுதலிய வேதங்களை அத்தியயனஞ்செய்து— வேள்வி தானம் மெய்த் தவங்கள் செய்துளார் = அசுவமேதமுதலிய யாகங்களும், பசு, சுவர்ணமுதலிய பதார்த்தங்களின் தானங்களும், சாஸ்திரவிகிதமான கிருச்சிர, சாந்திராயணாதிதவங்களுஞ் செய்திருப்பவர்—ஏது ஆய=தங்குமிடமாகிய—நல் பதங்கள் எய்தி = நல்ல பதங்களை அதிக்கிரமணஞ்செய்து—வீடும் எய்துவான்=(சர்வத்தினும் உத்கிருஷ்டமான) மோட்சமுமடைவன்;—ஆதலால் — அவ்வியோகமே செய் என்று=அந்தத் தியானயோகத்தை அநுஷ்டிப்பாயாகவென்று— மாயன் ஓதினான்=ஸ்ரீ பகவான் அருளிச்செய்தனர்.—எ-று.

'நற்பதங்கள்' என்றது, தைத்திரீயசுருதியில் ஒன்றற்கொன்றதிகமாகக்கூறிய சார்வபௌமாதி சுகங்களை. இவ்வெட்டாமத்தியாயத்தால் ஸ்ரீ பகவான் தியானிக்கத்தக்கரூபமாகத் தற்பதார்த்தத்தை நிருபணஞ்செய்தனர் என்றறிக. (கஅ)

---

* தேவயானமார்க்கம் ஞானரூபப்பிரகாசத்தின் அதிகத்தன்மையுடைய அக்கினியாதி தேவதைகளோடு கூடினதாயும், பிரகாசரூபசகுணப்பிரமவித்தையினா லடையப்படுவதாயும், பிரகாசமயமான வுலகங்கள் அநேகங்களை யுடையதாயும், சொப்பிரகாசமான பிரமத்தின் பிராப்திக்கேதுவாவதால் உத்கிருஷ்டமாயும், ஞானரூபப்பிரகாசமாயும் இருத்தலால் அது சுக்கிலமென்று சொல்லப்படுகிறது.

† பிதுருயானமார்க்கம் ஞானரூபப்பிரகாசமின்மையால் தமோமயமாயும், அப்பிரகாசரூபமான தூமம், இராத்திரிமுதலியவைகளோடு கூடினதாயும், மீண்டுச் சம்சாரத்திற்கேதுவாவதால் நிகிருஷ்டமாயும் இருத்தலால் அது கிருஷ்ணமென்று சொல்லப்படுகிறது.

## எழுவகைவினாவுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

---

ஆக அத்தியாயம் அ-க்குத் திருவிருத்தம்-௨சகூ.

---

## கூ-வது, * மாயாவிகாரவத்தியாயம்.

[பூர்வம் எட்டாமத்தியாயத்தில் அருளிச்செய்த யோகத்தால் தனது இச்சாபூர்வகமாக அர்ச்சிராதிமார்க்கத்தால் பிரமலோகமடைந்தவுபாசகபுருஷன் அப்பிரமலோகத்திலுள்ள திவ்விய போகங்களைப் புசித்தபின் பிரமஞானமடைந்து அக்கற்பத்தினிறுதிக்கண் பரப்பிரமத்தின் பிராப்திரூபமான கிரமமுக்தியையும் அடைவனென்றருளிச்செய்ததுபற்றி அதிகாரிக்குப்பூர்வஞ்சொன்னபிரகாரமாகவே முக்தி அடையப்படுங்கொல்? ஏதேனும் அந்நிய மார்க்கத்தாலும் முக்தி அடையப்படுங்கொல் எனவுண்டாகுஞ் சங்கையைப்போக்கும்பொருட்டு இவ்வத்தியாயம் ஆரம்பிக்கின்றார்.]

[முன்னத்தியாயத்தில் தியானிக்கப்படும் பிரமத்தை நிருபணஞ்செய்து தியானபாராயணபுருஷனது கதி கூறப்பட்டது; இதில்,ஞேயப்பிரமத்தை நிருபித்து ஞானநிஷ்டா புருஷனது கதிகூறப்படுகிறது.]

**ஈர்வன்றுயர் களையும்பத மீதன்றுசொ லெனவே**
**யார்வஞ்செயும் விசயன்கொளு மாசங்கையை யறியாக்**
**கார்வந்தென வவனன்புறு களிகொண்டெழ வெளியே**
**தேர்வெண்பரி குசைகொண்டெழு பாகன்றிரு மொழிவான்.**

(இ-ள்). ஈர் வன் துயர்=(சித்தத்தை) அறுக்கும் வலியதுன்பங்களை—களையும் பதம்=நீக்கும்பதமானது—ஈது (கொல்) அன்றுகொல் என=பூர்வாத்தியாயத்திற்சொல்லிய கிரமமுக்தியோ அல்லது, அந்நியமோ என்று—ஆர்வம் செயும்=தன்னிடத் தன்புசெய்யும்— விசயன் கொளும்=அருச்சுனன் கொள்ளும்—ஆசங்கையை அறியா= சந்தேகத்தைத் தனது திருவுள்ளத்தறிந்து—(அதை நீக்குதற்பொருட்டு) கார் வந்தென=கரியமுகில் எழுந்தாற்போல—அவன்=அவ்வருச்சுனன்—அன்பு உறு களிகொண்டு எழ=அன்புமிக்கசெருக்குற்றுயர —வெளியே=(யாவர் அகத்தும் அந்தரியாமியாயிருந்தும்) புறத்தே— தேர் வெண் பரி குசைகொண்டு எழு பாகன்=(அருச்சுனனது) இரதத்திற் பூட்டிய வெண்குதிரைகளைக் கடிவாளத்தாற் கைக்கொண்டெழுந்தருளிய ஸ்ரீ பகவான்— திரு மொழிவான் = நன்கருளிச்செய்வாராயினர்.—எ-று. (க)

[பூர்வாத்தியாயத்திற் சொல்லிய சகுணப்பிரமத்தியானத்தினும் ஆன்மஞானமே சாட்சாத் மோட்சசாதனமென்பது தோன்ற அதனைத் துதிக்கின்றார்.]

---

* வடநூலில், இராஜவித்தியா ராஜகுய்யயோகமென்று பெயர்.

**அறையும்பொருள் களின்முன்பனு பவமொன்றிய வதனை**
**மறையும்பொருள் களின்முன்பற மறையும்பொரு ளினைமே**
**லிறையுந்துய ரதுவின்றிமு னியைகின்றதை யிசைவோ**
**டுறையுந்துக ளறநின்றதை மொழிகின்றன னுணர்நீ.**

(இ - ள்). அறையும் பொருள்களின்=(உலகின்கண்ணும், சாஸ்திரத்தின்கண்ணுங்)கூறுநிற்கும் ஞானங்களனைத்தினும்—முன்பு அனுபவம் ஒன்றிய அதனை = முதன்மையான அநுபவசகிதமாகிய ஞானத்தை — மறையும் பொருள்களின் = குய்யமான பொருள்களனைத்தினும்—முன்பு அற=எதிர்ப்படாமல்—மறையும் பொருளினை=அத்தியந்தங்குய்யமான பொருளை—மேல் = அநந்தரம்—இறையும் துயரது இன்றி=இறையளவாவது துன்பமில்லாமல்—முன் இயைகின்றதை=முன்னே பொருந்துகின்றதை—இசைவோடு உறையும் துகள் அறநின்றதை=(இனி) அடையப்படுவதும், அடைந்திருப்பதுமாகிய பாவங்களனைத்தும் ஒழியும்படி உத்தமமான பவித்திரமாக நிற்கின்றதை—மொழிகின்றனன் உணர் நீ=அருளிச்செய்கின்றேன் (சாவதானனாக) நீ அறிதி.—எ-று.

ஆன்மஞானமானது காரியத்தோடுகூட மூலாவித்தையை முழுதும் நாசம்பண்ணுவதாம்; ஏனைய வித்தைகளோவெனின்? தூலாவித்தையெனவும், அவஸ்தாஞ்ஞானமெனவுஞ் சாஸ்திரங்களிற் கூறும் ஏகதேச அவித்தைக்கே விரோதிகளாம்; ஆகவின், சர்வ வித்தைகளினும் ஆன்மஞானம் அத்தியந்த சிரேஷ்டமென்பார், 'அறையும்பொருள் களின்முன்பனு பவமொன்றிய வதனை' எ-ம், ஆன்ம ஞானமானது அநேக ஜநநங்களிற்செய்த நிஷ்காமபுண்ணியகர்மங்களாலேயே அடையப்படுகிறது; அப்புண்ணிய கர்மங்களைச்செய்யாத புருஷர் தமது புத்திவலியால் அநேக குய்யபதார்த்தங்களையறிந்திருந்தும் ஆன்மஞானத்தையறிகிறார்களில்லை; ஆகலின், இவ்வான்மஞானம் அந்தச் சர்வகுய்யபதார்த்தங்களினும் அத்தியந்தங் குய்யமென்பார், 'மறையும்பொருள்களின்முன்பற மறையும்பொருளினை' எ-ம், தர்மசாஸ்திரங்களில் பாவநிவர்த்தியின்பொருட்டுக் கூறியுள்ள பிராயச்சித்தங்கள் ஏதேனுமொரு பாவத்தையே நிவிர்த்திக்கின்றனவல்லாமல் சர்வபாவங்களையும் நிவிர்த்திக்கின்றனவல்ல: ஆன்மஞானமோவெனின்? அநேகமாயிரஞ் சநநங்களிற் சம்பாதித்துள்ள சர்வபாவங்களையும், இவைகளின் காரணரூபமான அஞ்ஞானத்தையும் உடனே நாசஞ்செய்கின்றது; ஆகலின், இவ்வான்மஞானம் சர்வத்தினும் உத்தமமான பவித்திரமென்பார், 'இசைவோ, டுறையுந்துக ளறநின்றதை' எ-ம் கூறினர். 'மே லிறையுந்துய,ரதுவின்றிமு னியைகின்றதை' என்றதை, "உணர்வுற்றூற் றுன்பமெலாமொழிப்பதாகிச் சதாசுகமாம் பொருளாக நீயறிந்த தேதனைச் சாற்றுகிற்பாய்" என்னும் வாசிட்டச்செய்யுளா னுய்த்துணர்க. (உ)



[இதுவுமது.]

**அழிவொன்றில தறனொன்றிய தரிதன்றிய ததன்மேல்**
**வழிவந்தமெய் யறிவன்பில ரெனையெங்கணு மருவா**
**திழிதந்திடு சனனங்கொடு மரணங்கொடு மிங்ங**
**னுழிதந்திக பரமொன்றிய வுருவங்களி லுழல்வார்.**

(இ - ள்). (அருச்சுனா இவ்வான்மஞானமானது) அழிவு ஒன்றிலது=அக்ஷயமான பலமுடையது,—அறன் ஒன்றியது=சுதர்மத்தின் பயனாகப்பொருந்தியது,—அரிது அன்றியது=(குருவின்கிருபையினாலடையாநிற்கும் விசாரத்தைச் சககாரியாகவுடைத்தாகுந் தத்துவமசியாதி மகாவாக்கியங்களால்) ஆயாசமில்லாமலே சம்பாதிக்கத்தக்கது; (ஆகலின்,இவ்வான்மஞானம்சர்வத்தினுமேலாம்.)—[இவ்வான்மஞானமானது எளிதாயடையத்தக்கதாயும், சர்வத்தினுமேலாயும், அழிவற்ற பயனையுடையதாயும் உளதேல் சர்வப்பிராணிகளும் அதிற் பிரவிர்த்தித்துச் சம்சாரநிவிர்த்தி யடையலாமே, அங்ஙன மடையாதிருப்பதற்குக் காரணமென்னையோவென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.] மெய் அறிவதன் மேல் = (இப்படிப்பட்ட) ஆன்மஞானத்தின்மீது — வழி வந்த=அதற்கு வாயிலாய் வருகின்ற—அன்பு இலர் = சிரத்தையில்லாதோர்—எனை = (பரமான்மாவான) என்னை—எங்கணும் மருவாது=எவ்விடத்து மடையாமல்—இழி தந்திடு=இழிவைத் தரப்பட்ட—சனனம் கொடும் மரணம் கொடும்=ஜநநங்கொண்டும், மரணங்கொண்டும்—இங்ஙன்=இப்படியே—உழி தந்து=சுழன்று—இக பரம் ஒன்றிய உருவங்களில் = இகபரங்களிற்பொருந்திய கீடபதங்காதியோநிகளில்—உழல்வார்=திரிவார்கள்.—எ-று.

ஆன்மஞானம் அந்தக்கரணத்தின் விருத்திரூபமாகலின் அதன்கண், 'அழிவொன்றிலது' என்னுந்தன்மை கூடாதேனும் சுருதியின்கண் சத்தியமாகியபிரமத்தை யடைவிக்கும் ஞானத்தைச் சத்தியமென்றாற்போல மோட்சரூபமான அழிவற்றபயனை யடைவித்தலால், 'அழிவொன்றிலது' என்றார்.

ஞானத்தின்கண் சிரத்தையில்லாமையே சம்சாரமார்க்கத்திற் சுழலுதற்குக் காரணமாம் என்பதாம். (ங)

[பூர்வம் பிரதிக்ஞைசெய்த ஆன்மஞானத்தை விதிமுகத்தானும், நிஷேதமுகத்தானுந் துதித்து அதன்கண் அருச்சுனனை யபிமுகமாக்கி இப்போது அவ்வான்மஞானத்தை ஸ்ரீ பகவான் இரண்டு செய்யுட்களால் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

**யாருமறியப் படாமையதே யெனக்குவடிவா யுடையநா**
**னாருமுலகங் களையடையப் பரப்பிநிற்ப னாதலினாற்**
**சாருமுலகிற் சராசரங்க ளென்னையேயவற்றை யான்சாரேன்**
**சேரும்பரிசு நின்றாற்போற் றெளியாதார்க்குத் திகழுமால்.**

(இ - ள்.) யாரும் அறியப்படாமையதே = யாவரும் (சட்சுமுதலிய கரணங்களால்) அறியப்படாமையின், அவ்வியக்த மூர்த்தியென்னுஞ் சொப்பிரகாசாத்விதீயசச்சிதாநந்தத்தன்மையதே—எனக்கு வடிவு ஆய் உடைய நான் = எனக்கு வடிவமாகவுடைய (பரமேசுரனான) நான் —ஆரும் உலகங்களை = (ஆதேயமாக என்னிற்) றங்கியபூதபௌதிகமுதலிய ஜகங்களை—அடையப் பரப்பி நிற்பன் = முழுவதும் சத்தாஸ்பூர்த்தியினால் நிறைத்துநிற்பேன்;—ஆதலினால் = ஆதலால்,—உலகில் சராசரங்கள் எனையே சாரும் = உலகின்கண்ணுள்ள சராசரங்கள் என்னையே பொருந்திநிற்கும்:—அவற்றை யான் சாரேன் = அவைகளை நான் பொருந்திநில்லேன்.—[பரிச்சின்னராய் எனது இரதத்தின்கண் எழுந்தருளியுள்ள வசுதேவபுத்திராகிய நீர் சர்வஜகத்தையும் வியாபித்திருக்கிறேனென்பது பிரத்தியட்சப்பிரமாண விரோதமாமென்னும் அருச்சுனன் சங்கையைப்பற்றி ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.] சேரும்பரிசு நின்றால் போல் = (யான் பிரபஞ்சத்திற்) பொருந்தும்படி நிற்கின்றாற்போல—தெளியாதார்க்குத் திகழும் = (முற்கூறிய எனது அவ்வியக்தசொரூபத்தை) அறியாதவர்களின் ஊனக்கண்ணிற்கு விளங்காநிற்கும்; (அதனை யறிந்தோர்க்கு அங்ஙனம் விளங்காது.)—எ-று. ஆல்-அசைநிலை.

யான் அகற்பிதரூபனாகலானும் ஜகத்து கற்பிதரூபமாகலானும் எனக்கும், ஜகத்திற்கும் யாதொரு சம்பந்தமுமில்லை; ஆதலால் ஜகத்தில் வாஸ்தவமாக ஸ்திதி எனக்குக் கூடாதென்பது கருத்து. (ச)

[உள்ளபடிக்கு நீர் அவ்வியக்தமூர்த்தியாதலால் உமக்கு வாஸ்தவமாகச்சகத்திற்றிதிகூடாதேனும் சர்வஜகத்திற்கும் உம்மிடத்தில் வாஸ்



தவமாக ஸ்திதி கூடலாமேயென்னுஞ் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

**முன்னேயொன்றுங் கலவாதியா னிற்பன்முழுது மாய்நின்ற,**
**வன்னேர்மையினா லுலகமென்னோ டங்கங்கலவா தாதலினா, லெ**
**ன்னேயென்ற னியற்கையினைப் பாராயிந்தச் சகமெல்லா, மன்**
**னேயென்றன் மாயைபெறு மாங்காரமுனாய்த் தருவன்காண்.**

(இ - ள்). முன்னே ஒன்றும் கலவாது யான் நிற்பன் = சிருஷ்டியின்முன்னே யாதொன்றையுஞ் சம்பந்தியாமலே (பரமான்மாவாகிய) நான் நிற்பேன்.—முழுதும் ஆய் நின்ற அன்னேர்மையினால் = முழுதும் (இரச்சுவிற் சர்ப்பம்போலக்) கற்பிதமாய்நின்ற அந்தத்தன்மையினால்—உலகம் = பிரபஞ்சமானது—என்னோடு அங்கம் கலவாது = என்னோடே அவயவங்கள் சம்பந்தித்துநிற்காது;—ஆதலினால் = ஆதலால்,—என்னே = இஃதென்ன அற்புதம்:—என்றன் இயற்கையினைப் பாராய் = எனது பிரபாவத்தை (ச் சூட்சுமமான விசாரதிருஷ்டியினால் நீ) பார்ப்பாய்.—மன்னே = அருச்சுனா—என்றன் மாயை பெறும் = (பரமேசுரனான) எனது மாயையானது பிரசவிக்கும்—ஆங்காரம் முன் ஆய் இந்தச் சகம் எல்லாம் = அகங்காராதியாயுள்ள இந்தச்சகமனைத்தையும்—தருவன் காண் = உற்பந்நஞ் செய்பவனும், (தாரணஞ்செய்பவனும் யானே) காண்; (ஆயினும், அவ்வுலகங்களில் ஆதேயரூபனாக யான் இருப்பவனல்லன்.)—எ-று.

எனது சச்சிதானந்த சொரூபமானது சர்வஜகத்திற்கும் உபாதானகாரணமும், நிமித்தகாரணமுமாகவிருந்தும் வாஸ்தவமாக அசங்க அத்விதீயசொரூபமாதலின், யான் அச்சகங்களிலிருக்கவில்லை: ஜகமும் கற்பிதமாகலின், வாஸ்தவமாக என்னிடத்திருக்கவில்லை என்பதாம். (ரு)

[எனக்கும், பூதங்கட்கும் வாஸ்தவமாக யாதொரு சம்பந்தமுமில்லையாயினும் அப்பூதங்களுள்ளே யானுளன், என்னுள்ளே அப்பூதங்களுளவென ஸ்ரீபகவானால் பூர்வமருளிச்செய்ததுபற்றி அங்ஙனமாயின், பரஸ்பர ஆதாராதேயபாவம் எங்ஙனங்கூடுமென் றருச்சுனனுக்குளதாகிய சங்கையை நிவிர்த்தித்தற்பொருட்டு வாஸ்தவமாகப் பரஸ்பரஞ் சம்பந்தமில்லாத பதார்த்தங்கட்கும் ஆதாராதேயபாவத்தை லோகப்பிரசித்தமான திருஷ்டாந்தத்தால் ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

என்னுருவிற் புணராதே யென்னைவிடத் தோன்றாதே
மன்னுயிர்க ளெனையென்றுஞ் சார்ந்துவரும் வகைகேட்கி
லுன்னுமிட மெங்குநிறைந் தொளிர்கின்ற வானெங்குந் [ய்.
துன்னியற்கைசெறிகாற்றின் றோற்றம்போன்ஞ்சுடர்வேலோ

(இ-ள்). சுடர் வேலோய் = ஒளிராநின்ற வேலையுடைய அருச்சுனா—என் உருவில் புணராதே = (அசங்க சுபாவமுடைய பரமேசுரனான) எனது சொருபத்தில் (வாஸ்தவமாக ஒருகாலுஞ்) சம்பந்தமாகாமலும்,—என்னை விடத் தோன்றாதே=என்னைத்தவிர (வேறொன்றனிடத்துத்) தோன்றாமலும்—மன் உயிர்கள்=மிகுந்த பூதங்கள்—எனை =என்னை—என்றும்=எப்போதும்—சார்ந்து வரும்வகை கேட்கில்= சம்பந்தித்து வருந்தன்மை எங்ஙனெனன (அருச்சுனா நீ) கேட்கில்,— உன்னும் இடம் எங்கும்=கருதாநிற்குந்தலங்களிலெங்கும்—நிறைந்து ஒளிர்கின்ற வான் = பூரணமாய் ஒளிராநிற்கும் அசங்கசுபாவமுடைய ஆகாயத்தின்கண்—எங்கும் = சர்வத்திசைகளிலும் — துன் இயற்கை செறி = நெருங்கிச் (சஞ்சரியாநிற்கும்) சலனசுபாவம் பொருந்திய— காற்றின் தோற்றம் போன்ம்=வாயுவின் ஸ்திதிபோலும்.—எ - று.

ஏகாரங்கள் இரண்டும் எண்ணுப்பொருளன. போலும் என்னும் செய்யுமென்முற்று போன்ம் எனவந்தது.

எனக்கும், பிரபஞ்சத்திற்கும் வாஸ்தவமாகச் சம்பந்த மின்றாயினும் பரமேசுரனான என்னிடத்தில் கற்பிதப்பிரபஞ்சத்தின் ஆதாரத் தன்மையும், கற்பிதப் பிரபஞ்சத்தில் எனது ஆதேயத்தன்மையும் இவ்வாகாச திருஷ்டாந்தத்தால் விசாரித்து நிச்சயிப்பாயென்பதாம். (சு)

[மேலைச்செய்யுளில் பிரபஞ்சத்தினுற்பத்திகாலத்தும், ஸ்திதிகாலத்தும் அப்பிரபஞ்சத்தோடு அசங்கமாகிய ஆன்மாவுக்குச் சம்பந்தமின்மையை அருளிச்செய்து இப்போது பிரளயகாலத்தும் அப்பிரபஞ்சத்தோடு சம்பந்தமின்மையை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

ஈண்டுபொரு ளிவையனைத்து மிறக்குங்கா லென்னிடையே
மாண்டுபுகும் பிறக்குநாண் மற்றவைதாம் வரன்முறையே
மீண்டுபுறப் படுமென்னு லாதலினான் மெய்பார்க்கில்
யாண்டுமுயிர் படைத்துக்காத் தழிக்கின்றேன் யானேகாண்.



(இ - ள்.) ஈண்டு பொருளிவை அனைத்தும் = இங்கே காணப்படுவனவான ஆகாசமுதலியபதார்த்தங்களனைத்தும்—இறக்குங்கால்= பிரளயகாலத்தில்,— என்னிடையே = எனது (திரிகுணாத்மகமான) பிரகிருதியின்கண்ணே—மாண்டு புகும்=(சூட்சுமரூபமாக) லயபாவத்தை யடையும்.—பிறக்கும் நாள் = சிருஷ்டிகாலத்தில், — மற்றவை தாம்= (பிரளயகாலத்தில் பிரகிருதியின்கண் அவிபாகமடைந்திருந்த) ஆகாசமுதலியவை — வரன்முறையே = உண்டாகுங்கிரமப்படியே— என்னால் = (பரமேசுரனான) என்னால்—மீண்டு புறப்படும்=மீண்டும் உற்பந்நமாம்;—ஆதலினால்=ஆதலால்,—மெய் பார்க்கில்=உண்மையாகப் பார்க்குமிடத்து—யாண்டும்=எவ்விடத்தும் — உயிர்படைத்து= பூதங்களைச் சிருஷ்டித்து,—காத்து = இரட்சித்து—அழிக்கின்றேன் யானே காண்=சம்மரிக்கின்றவன் சர்வசக்திசம்பந்நனும், சர்வக்ஞனுமான நானே காண்.—எ-று. பிரகிருதி என்பது, எஞ்சிநின்றது. (எ)

[சிருஷ்டி, ஸ்திதிமுதலிய கர்மங்கள் சொப்பனம்போல மித்தியாபூதமேயாகலின், அவை பரமேசுரனான எனக்குச் சொப்பனதிருஷ்டாவாகிய புருஷனுக்குப்போலப் பந்தகாரணமாகாதென்னும் பொருளை இப்போது ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

விலங்கலனையாய்பலங்களுடன் வேண்டல்வேண்டாமை
யைவிட்டுச், சலங்கொள்வினைக ளவைசெய்வ னதனாலென்னை
யவைசாரா,வுலண்டுவாயா னூற்றந்த நூலாற்கட்டுண் பதுபோ
லப்,பலங்கணினைவா ரதனாலே கட்டுண்டாங்கே பட்டுழப்பார்.

(இ-ள்.) விலங்கல் அனையாய் = பருவதத்தை யொப்பான அருச்சுனா—பலங்களுடன்=பலங்களினிச்சையோடு—வேண்டல் வேண்டாமையை விட்டு = (ஒருவனிடத்து) விருப்பையும், (ஒருவனிடத்து) வெறுப்பையும் ஒழித்து—சலங்கொள் வினைகளவை செய்வன் = மித்தியாபூதமான சிருஷ்டியாதிகர்மங்களைச் செய்யாநிற்பன்;—அதனால்= அவ்வேதுவினால்,—என்னை=(பரமேசுரனான) என்னை—அவை சாரா =அச்சிருஷ்டியாதி கர்மங்கள் பொருந்தாவாம்.—உலண்டு = கோசகாரக்கிருமியானது—வாயால் நூற்று = தன்வாயினால் நூல் நூற்று— அந்த நூலால் = அந்த நூலினால்—கட்டுண்பதுபோல=பந்தப்படுவது போல—பலங்கள் நினைவார் = (கர்த்திருத்துவாபிமானத்தோடு கூடித் தான்செய்யுங் கர்மங்களின்) பலன்களையடையக் கருதாநிற்பவர்—அத

ணாலே கட்டுண்டு = அக்கர்மங்களால் பந்திக்கப்பட்டு — ஆங்கே பட்டு உழப்பார்=அக்கர்மபலன்களில் அகப்பட்டு வருந்தாநிற்பர்.—எ-று.

ஏ - ஈற்றசை. இங்ஙனங் கூறியவாற்றால், எவ்வதிகாரி கர்த்திருத்துவாபிமானமும், பலத்தினிச்சையும் இல்லாதவனாய்க் கர்மங்களைச் செய்வனோ அவனை லௌகிக, வைதிககர்மங்கள் பந்தப்படுத்தாவாமென்பது பெறப்படுகின்றது.

'விலங்கலனையாய் பலங்களுடன் வேண்டல்வேண்டாமையைவிட்டுச், சலங்கொள்வினைக ளவைசெய்வன்' என்பதற்கு வேறுமொரு பொருள்; [பகவானே இவ்வுலகின்கண் ஒருவன் சுகியாயுளன், ஒருவன் துக்கியாயுளன், ஒருவன் தநிகனாயுளன், ஒருவன் தாரித்திரனாயுளன், ஒருவன் புத்திமானாயுளன், ஒருவன் மூர்க்கனாயுளன்; இவ்வாறு விஷம சிருஷ்டி செய்யாநிற்கும் உமக்கு விஷமத்தன்மையாகிய தோஷமும், நிர்த்தயைத்தன்மையாகிய தோஷமும் அவசியமுண்டென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.] அருச்சுனா விஷமசிருஷ்டிரூபமான கர்மமானது பரமேசுரனான என்னைப் பந்தப்படுத்தமாட்டாது; [அதில் ஏதுவைச் சொல்லுகிறார்.] மேகமானது ஓர் வித்தினிடத்து இராகமும், ஓர் வித்தினிடத்துத் துவேஷமுஞ்செய்யாமல் உதாசினமாய்ச் சலத்தை வருஷிக்கிறதால் அவ்வவ்வித்தி னநுசாரமாக வெவ்வேறான பலன்கள் பின்னர் எப்படி யுண்டாகின்றனவோ அப்படிப் பரமேசுரனான யானும் புண்ணியவானிடத்தில் இராகமும், பாவியினிடத்துத் துவேஷமுஞ் செய்யாதவனாய் இச்சகத்தைச் சிருஷ்டிக்கிறேன்: பின்னர் பிராணிகள் தத்தம் புண்ணியபாவங்களினநுசாரமாக அவ்வச்சுகதுக்காதிகளான வெவ்வேறுபலன்களை யடைகின்றன; ஆதலால், பரமேசுரனான எனக்கு விஷமத்தன்மையாகியதோஷமும், நிர்த்தயைத்தன்மையாகிய தோஷமும்இலவாம் எனக்கூறுவாருமுளர்.

[நித்திய, சுத்த, புத்த, முக்தசுபாவனாயும், சர்வப்பிராணிகளின் ஆன்மரூபனாயும், ஆநந்தகனனாயும், தேச கால வஸ்து பரிச்சேதரகிதனாயுமுள்ள பரமேசுரனாகிய என்னை அவிவேகஜநங்கள் மநுடனாகவெண்ணி ஆதரியாமல் நிந்திக்கின்றனரென் றருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

**ஊர்வன நிற்ப வாக வுலகையுண் டாக்கு மென்னை**
**யேர்பெற வறியா தார்தா மகனென்றே யிகழா நிற்பர்**
**வேரென நெஞ்சத் தாசை வினைகளை மிடையச் செய்வா**
**ராரெனி லவர்க டாமு மரக்கரோ டசுர ராவார்.**



(இ-ள்.) ஊர்வன நிற்ப ஆக = சராசரரூபங்களாக — உலகை உண்டாக்கும்=உலகைச் சிருஷ்டிக்கும்—என்னை=(பரமேசுரனான) என்னை—ஏர் பெற = சர்வத்தினும் உத்கிருஷ்டமான பாரமார்த்திக தத்துவமாக—அறியாதார் தாம்=அறியாத அவிவேக ஜநங்கள்—மகன் என்றே இகழாநிற்பர்=(இந்தக் கிருஷ்ணனும் நம்போல) மநுடனென்றே நிந்தியாநிற்பர்.—[இவ்வாறு பரமேசுரனான என்னை நிந்தை செய்வதாலுளதாகும் பெரும்பாவத்தால் பிரதிபந்தம் பண்ணப்பட்ட புத்தியையுடைய அம்மூடர்கள் நிரந்தரம் நரகின்கண்ணேயே வாசம் பண்ண யோக்கியராவரென் றருளிச்செய்கின்றார்.] வேர் என=நரகத்திற்கு மூலமென்று சொல்லும்படிக்கு — நெஞ்சத்து = சித்தத்தின் கண்ணே —ஆசை வினைகளை=ஆசையையும், கர்மங்களையும்—மிடையச்செய்வார்=நெருங்கும்படி செய்யாநிற்பர்;—அவர்கள் தாமும் ஆர் எனில்=அவர்களும் யாவரென்று நீ கேட்கில்,—அரக்கரோடு அசுரர் ஆவார்=இராக்கதரும், அசுரருமாவர்.—எ-று.

தாம் இரண்டும் அசைகள். உம்மை இழிவுசிறப்பு. இங்கே, 'ஆசை' என்றது, அந்தரியாமியாகிய ஈசுரனாலல்லாமல் கேவலங் கர்மமே நமக்குப் பயனைப் பயக்குமென்னும் நிஷ்பலமேயான பயனின் பிரார்த்தனையை. 'வினைகள்' என்றது, ஈசுரனிடத்தினின்றும் பராமுகமாவதால் கேவலம் பரிசிரமமாத்திரத்திற்கே ஏதுவான அக்கினிஹோத்திராதி கர்மங்களை. சாஸ்திரத்தால் விதியாத இம்சைக்கேதுவாகிய துவேஷம் பிரதானமான தாமதசுபாவமுடையோரை, 'அரக்கர்' எ-ம், சாஸ்திரத்தினால் விதியாத விஷய போகங்கட்கேதுவாகிய இராகம் பிராதனமான இராஜத சுபாவமுடையோரை, 'அசுரர்' எ-ம் கூறப்பட்டதென்றறிக. (கூ)

[மற்றியாவர் உம்மை ஆதரிப்பவரெனில் அதற்குக் கூறுகின்றார்.]

**அறிவினா லென்னை யாக வறிந்துகொண் டமைதி யாலே**
**பொறிவழி யடைத்தெப் போது மென்னையே போற்றி செய்**
**நெறியினால் வழுத்தி வாயா லென்னையே நினைந்து நெஞ்சாற்**
**செறிதரு மிவர்கள் கண்டாய் தேவரிற் றெரியப் பட்டார்.**

(இ-ள்.) அறிவினால்=(குருசாஸ்திரங்களாலுளதாகும்) விவேக ஞானத்தால்—என்னை ஆக அறிந்துகொண்டு=(பரமேசுரனான) என்னைச் சகல ஜகத்திற்குங் காரணரூபனாகவும், நாசரகிதனாகவும் அறிந்துகொண்டு—அமைதியாலே=அடங்கின மனத்தினாலே—பொறி வழி

அடைத்து = விஷயமார்க்கங்களைத் தகைந்து—எப்போதும் = சர்வதா—என்னையே போற்றி செய்து = (சற்குருரூபனான) என்னையே (சரீரத்தாலர்ச்சித்து)வணங்கி—வாயால் நெறியினால் வழுத்தி=வாக்கால் சுருதிகூறிய வழியினாற் றுதித்து — என்னையே நெஞ்சால் நினைந்து = (பரப்பிரமரூபனான) என்னையே மனத்தினாற் றியானித்து—செறிதரும் இவர்கள் = (பரமப்பிரேமரூபமான) பக்தியோடு கூடின இம்மகாத்மாக்களே—தேவரில் தெரியப்பட்டார்=தேவர்கள் போலக் காணப்பட்டவர்கள்.—எ-று. கண்டாய் என்றது, முன்னிலையசைச்சொல்.

‘அமைதியாலே, பொறிவழி யடைத்து’ என்றது, சிரவணாதிகளின் சாதனங்களை. ‘என்னையே போற்றிசெய்து’ என்றது, குருசேவையை. ‘நெறியினால் வழுத்தி வாயா லென்னையே நினைந்து நெஞ்சால்’ என்றது, ஞானசாதனங்களான சிரவண, மனன, நிதித்தியாசனங்களை. ‘தேவரிற் றெரியப் பட்டார்’ என்றது, தெய்வசம்பத்தென்னுஞ் சாத்துவிக சுபாவமுடையோராகலின் என்க.

அநேக ஜநநங்களிற் செய்துவந்த புண்ணிய புஞ்சபரிபாகத்தால் தெய்வசம்பத்துடைய மகாத்மாக்களே என்னைப் பஜிப்பவரென்றும், பஜநஞ் செய்யும் பிரகாரம் இவ்வாறென்றுங் கூறினதாம். (௧௦)

[மேலைச்செய்யுளில் அருளிச்செய்த தத்துவஞானத்தின் சாதனங்களான சிரவண, மனன, நிதித்தியாசனங்களைச் செய்ய அசமர்த்தரான புருஷரும் உத்தமம், மத்தியமம், மந்தமென்னும் பேதத்தால் மூவகையராய்த் தத்தம் புத்தியினநுசாரமாகப் பரமேசுரனான என்னையே சிந்தனஞ் செய்கின்றனரென்று இப்போது ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

### வேறு.

காலத்தாலும் பொருளிடத்துங் கணித்தற்கரிதா கியவென்னை
ஞாலத்தார்கள் புகழ்வரிய ஞானயாகங் களினாலே
கோலத்தால்வே றாகவுமெய்க் குறியாலொன்றா கவுங்கொண்டு
சாலத்தாழ்வா ரவருடைய தன்மையினைநான் சாற்றக்கேள்.

(இ-ள்.) காலத்தாலும் = (நித்தியனாதலால்) காலத்தினாலும்,—இடத்தும்= (வியாபகனாதலால்)தேசத்தினாலும்,—(பொருளாலும்)= (சர்வான்மாவாதலால்) வஸ்துவினாலும்—கணித்தற்கு அரிது ஆகிய என்னை=(பரிச்சின்னமாகக்)கருதுதற்கரிய (பிரமசொரூபமான) என்



னை—மெய்க் குறியால் = பரமார்த்த தரிசனத்தால்—ஒன்றாகவும் = அபேதமாகவும், — கோலத்தால் = (ஆதித்தியாதி) உருவங்களால் — வேறாகவும் = பேதமாகவும், (வெகுவிதமான விசுவரூபமாகவும்) — ஞாலத்தார்கள்=பூமியின்கண்ணுள்ள அதிகாரிகள்—கொண்டு—(மனத்திற்)கொண்டு—புகழ்வு அரிய=ஸ்துதித்தற்கரிய—ஞானயாகங்களினாலே=ஞான எக்ஞங்களினாலே—சாலத் தாழ்வார் = மிகவும் உபாசியாநிற்பர்; — அவருடைய தன்மையினை = அவ்வுபாசகரின் றன்மையை—நான் சாற்றக்கேள்=யான் அருளிச்செய்ய நீகேட்பாய்.—எ-று.

ஈதனைத்தும் வாசுதேவனென்னும் சர்வான்மதரிசனமே ஞானம்; அதுவே யாகம். சில அதிகாரிகள் மற்றொரு சாதனங்களையும் இச்சியாதொழித்து உபாசிய வுபாசகர்களின் அபேதசிந்தனையென்னும் அகங்கிரக வுபாசனாரூபமான ஞானயாகத்தால் பரமேசுரனான என்னையே சிந்தனஞ் செய்கின்றனர். இவ்வாறு அகங்கிரக வுபாசனாரூபமான ஞானயாகத்தால் என்னைச் சிந்தியாநிற்பவர் உத்தமாதிகாரிகள். வேறே சில மத்தியமாதிகாரிகள் உபாசக வுபாசியர்களின் பேதரூபமான யாதொரு பிரதீக வுபாசனையுண்டோ அந்தப்பிரதீக வுபாசனாரூபமான ஞானயாகத்தால் என்னையே சிந்தனஞ்செய்கின்றனர்; இவ்விருவகை உபாசனை செய்வதில் அசமர்த்தரான சில மந்தபுருஷர் ஏதேனுமொரு அந்நியதேவதையை உபாசிப்பவராயும், ஏதேனுமொரு கர்மத்தைச் செய்பவராயும் அவ்வந்த வெகு பிரகாரங்களாலும் விசுவரூபனான என்னையே அவ்வத்தேவதைகளின் உபாசனாரூபமான ஞானயாகங்களால் சிந்தனஞ் செய்கின்றனரென்பது கருத்து. (௧௧)

[பகவானே எப்போது முன்சொன்ன அதிகாரிபுருஷர் வெகு பிரகாரமாக வுபாசனை செய்கின்றனரோ அப்போது அவரனைவரும் பரமேசுரனான என்னையே சிந்தனஞ் செய்கின்றன ரென்றருளிச்செய்த உமது வசனம் எப்படிச் சங்கதமாமென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் நான்கு செய்யுட்களால் தனது விசுவரூபத்தன்மையை இனி வர்ணிக்கின்றனர்.]

### [வேறு.]

வேதமொழி வேள்விமிகு வேள்விபிதி ரர்க்கே
யீதலுறும் வேள்வியெரி நெய்சரு விவற்றாற்
காதலுறு வோர்கள்புரி காரிய மிதெல்லா
நாதமுத லாயபொரு ளாயவையு நானே.

(இ-ள்.) வேதம் மொழி வேள்வி=சுருதியிற் சொல்லும் அக்கிநிஷ்டோமாதி யாகங்களும், (சிரௌதகர்மமென்றபடி) — மிகு வேள்

வி=(சுருதி, ஸ்மிருதிகளில் மஹா எக்ஞமென்று கூறும் வைசுவதேவாதி ஸ்மார்த்தகர்மங்களும்,—பிதிரர்க்கே ஈதல் உறும் வேள்வி=பிதிர்களின்பொருட்டுக் கொடுக்குஞ் சிராத்தாதிகளும்,—எரி=ஆகவநீயாதிகளும்,—நெய்=ஆச்சியமும்,—சரு=அந்நமும் —இவற்ருல்=இவைகளால்—காதல் உறுவோர்கள்=சிரத்தை மிக்க அதிகாரிகளாயினோர்—புரி காரியம்=செய்யாநிற்குங் கிரியையும் (ஆகிய)—இது எல்லாம்=இவை யனைத்தும்,—நாதம் முதல் ஆய பொருளாயவையும்=(சுவாகாவென்பது முதலிய சப்தங்களை அந்தத்திலுடைய) மந்திர முதலிய பொருள்களும்—நானே=(பரமேசுரனுகிய) நானேயாம்.—எ-று.

இங்கே, 'நாதம்' என்றது, மந்திரத்தை; அது வேதசப்தரூபமாதலினென்க. (கஉ)

[இதுவுமது.]

ஆயிலுல கங்களை யளித்தொளி வளர்க்குந்
தாயினொடு தந்தையவர் தந்தைதலை களுநான்
போயின வினைப்பய னளித்தல்புரி வேனு
னேயுமறை மூன்றினுட னோமெனு மெழுத்தியான்.

(இ-ள்.) ஆயில்=(பின்னும்) ஆராயில்,—உலகங்களை=(பிராணிமாத்திரரூப) ஜகங்களை—அளித்து ஒளி வளர்க்கும்=உற்பந்நமாக்கிப் பிரகாசமாக வளரச்செய்யும்—தாயினொடு தந்தை = மாதாவும், பிதாவும்,—அவர் தந்தைதலைகளும்=பிதாமகரும்—நான்=(பரமேசுரனுன) நானே.—போயின வினைப்பயன்=முற்சநநங்களிற் செய்த புண்ணிய பாவ கர்மபலன்களான சுகதுக்கங்களை—அளித்தல் புரிவேன் நான்=கொடுத்தல் செய்யுந் தாதாவும் நானே.—எயும் மறைமூன்றினுடன் ஓம் எனும் எழுத்து யான்=(அக்கிநிஹோத்திராதி கர்மங்களின் சித்தியில் உபயோகியாயும், வேத்தியமான பிரமத்தின்கண் பிரமாணபூதமாயும்) பொருந்தும் இருக்குவேதம், சாமவேதம், எஜுர்வேதங்களோடு ஓங்காரமென்னும் அக்ஷரமும் நானே.—எ-று. (கங)

[இதுவுமது.]

[வேறு.]

எல்லார்க்குங் கதியுநா னிருவினைப்பா ரகனுநா
னெல்லார்க்குந் தலைவனு னெப்பொருட்குஞ் சான்றுநா
னெல்லார்க்கு முறைவிடநா னியார்க்குமிடர் தீர்ப்பேனு
னெல்லார்க்கு நல்லேனு னெப்பொருட்கும் வித்துநான்.



(இ-ள்.) எல்லார்க்கும் கதியும் நான் = எல்லார்க்குங் * கதிரூபனும் நான்,—இருவினைப் பாரகனும் நான் = இருவினையின் வழியே (யாவரையும்) போஷணஞ் செய்பவனும் நான்; (பர்த்தாவுமென்றபடி.)—எல்லார்க்கும் தலைவன் நான் = எல்லார்க்கும் † சுவாமியும் நான் (பிரபுவென்றபடி.)—எப்பொருட்கும் சான்றும் நான்=சர்வப்பிராணிகட்குஞ் ‡ சாட்சியும் நான்.—எல்லார்க்கும் உறைவிடம் நான் = யாவருக்கும் ¶ நிவாசஸ்தாநமும் நான்.—யார்க்கும் இடர் தீர்ப்பேன் நான்=யாவருக்குஞ் $ சரணமாகின்றவனும் நான்.—எல்லார்க்கும் நல்லேன் நான்=யாவருக்குஞ் [[ சுகிருதுவும் நான்.—எப்பொருட்கும் வித்தும் நான்=எவ்வகைப் பொருட்கும் || பீஜமும் நானே. (கச)

[இதுவுமது.]

[வேறு.]

தாங்கிப நீரையெல்லா மிரவியாய்த் தலத்துநின்று
வாங்குகின் றேனுமீள மழைகளாக் கொடுக்கின்றேனு
மீங்குமெய் யுணரில்யானே யாதலா லியாதொன்றேனு
மாங்கருச் சனைசெய்கின் ருரொன்னையே யருச்சிக்கின்ருர்.

(இ-ள்.) தாங்கிய நீரை எல்லாம்=(முன்வருஷித்ததால் பூமியின்கட்) பொருந்திய ஜலங்களையெல்லாம்—இரவி ஆய்=ஆதித்தியனுகி—தலத்து நின்று வாங்குகின்றேனும்=பூமியின்கண்ணின்று ஆகருஷணஞ்செய்கின்றவனும்,—மீள = மீண்டு—மழைகளாக் கொடுக்கின்றேனும்=மாரிகளாகக்கொடுக்கின்றவனும்—ஈங்கு மெய் உணரில்=இங்கேஉண்மையாக அறியில்—யானே=(சர்வான்மாவான)நானே;—

---

* "கதி" என்றது, கர்மத்தினு லடையப்படுஞ் சுவர்க்கமுதலிய பலன்களை.

† சுவாமி என்றது, புத்திராதிய பதார்த்தங்கள் நம்முடையவென அவற்றைச் சுவீகரிப்பவனை.

‡ சாட்சி=சர்வப்பிராணிகளின் சுபாசுபகர்மங்களைப் பார்ப்பவன்.

¶ நிவாசஸ்தாநம்=போகஸ்தாநம்.

$ எதனையடையில் துக்கநிவிர்த்தியாமோ அதற்குச் சரணமென்று பெயர்.

[[ சுகிருது=பிரதியுபகாரமபேட்சியாமல் உபகாரஞ் செய்பவன்.

|| பீஜம்=உற்பத்திக்கு யாதுகாரணம் அது.

ஆதலால் = ஆதலின்,—யாதொன்றேனும் = யாதொரு தெய்வத்தை யாவது—அருச்சனை செய்கின்றார் = ஆராதனஞ்செய்கின்றவர்—என்னையே அருச்சிக்கின்றார்=(சர்வாந்தரியாமியாகிய) என்னையே ஆராதிக்கின்றனர்.—எ-று. ஆங்கு-அசைநிலை.

இங்ஙனங் கூறியவாற்றால், பரமேசுரனாகிய என்னைச் சர்வான்மாவாக அறிந்து அதிகாரிகள் தத்தம் அதிகாரத்தினநுசாரம் பூர்வஞ் சொன்ன வெகுபிரகாரமாக என்னையே சிந்தனஞ்செய்கின்றனரொன்பது பெறப்படுகின்றது. (௧௫)

[யாதொரு பிரகாரத்தினாலும் பரமேசுரனான என்னைச் சிந்தனஞ் செய்யாமல் சகாமபுருடராய்த் தத்தங்காமத்தின் விஷயபூதமான சுவர்க்காதி விஷயசுகங்களை யடைதற்பொருட்டுக் காமியகர்மங்களையே செய்யாநிற்பவர் அந்தக்கரணசுத்திக் கேதுவாகிய நிஷ்காமகர்மத்தின் அபாவத்தால் சிரவணாதிகளான ஆன்மஞான சாதனங்களின் அயோக்கியராய் அடிக்கடி ஜநநமரணரூப சம்சாரத்தையே அநுபவியாநிற்பரொன்று இப்போது ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

**ஞானமா யொன்றாய்நின்ற வென்னையே நாநாவாகப்**
**போனதீ வினையின்மாந்தர் வேள்வியாற் பூசித்தத்தால்**
**வானமா முலகமேறி வாழ்ந்துமண் ணிடையேவீழ்ந்திட்**
**டீனமா மாசையாலே யிறப்பது பிறப்பதாவார்.**

(இ-ள்.) போன தீவினையின் மாந்தர்=இறந்துபோன பாவத்தினையுடைய புருடர்கள்—ஞானம் ஆய் ஒன்று ஆய் நின்ற என்னையே=சொப்பிரகாச ஞானரூபமாய், ஏகமாய் நிற்கின்ற (பரமேசுரனான) என்னையே—நாநா ஆக=இந்திர, வசு, ருத்திர, ஆதித்தியரூபமாக—வேள்வியால் பூசித்து=(அக்கினிஷ்டோமமுதலியகாமிய) யாகங்களால் ஆராதித்து—அத்தால்=அதனால்—வானம் ஆம் உலகம் ஏறி=சுவர்க்கமாகிய வுலகினையடைந்து—வாழ்ந்து=(அங்குள்ள*திவ்வியமானதேவ † போகங்களைப் புசித்துச்) சீவித்து—மண்ணிடையே வீழ்ந்திட்டு=(புண்ணியகர்மம் நாசமாகவே) மநுடவுலகின்கண்ணேவீழ்ந்து—ஈனம் ஆம் ஆசையாலே = (இவ்வாறேமீண்டும்) இழிவாகிய (சுவர்க்கத்திலுள்ள திவ்வியபோகங்களின்) இச்சையினாலே—இறப்பது பிறப்பது

* திவ்வியம்=மநுடர்க்கடையப்படாதபோகம்.

† தேவபோகம்=கேவலந் தேவசரீரத்தினாலேயே புஜிக்கப்படும் போகம்.



ஆவார் = (அடிக்கடி இம்மநுடலோகத்தினின்று சுவர்க்கத்திற்குப்) போவதும், (சுவர்க்கத்தினின்று மநுடலோகத்திற்கு) வருவதுமாகத் திரிவர்.—எ-று.

சோமபானத்தால் சுவர்க்கபோகத்திற்குப் பிரதிபந்தமான பாவகர்மத்தினின்றும் விடுபட்ட புருடரொன்பார், 'போனதீவினையின் மாந்தர்' என்றார். சகாமபுருடர் பரமேசுரனே இந்திராதிரூபமாமென அறியாவிடினும் தானே அவ்விந்திராதிரூபமாகலின், 'என்னையே' என்றார். (௧௬)

[மேலைச்செய்யுளால் நல்லஞான மின்மையரான சகாமபுருடரின் கதியருளிச்செய்து இப்போது நல்ல ஞானமுடைய நிஷ்காமபுருடரின் கதியை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

**மின்னையேய் வேலோயென்னை மேவுவார் வேண்டிற்றெல்லாம்**
**பின்னையே யென்னாதன்றே யளித்தவை காப்பேன் வானோர்**
**மன்னையே முதலாந்தெய்வம் வணங்குகின் றாருமற்றென்**
**றன்னையே வணங்குகின்றார் தாமறி யாததேகாண்.**

(இ-ள்.) மின்னை ஏய் வேலோய் = மின்னையொப்பான வேலையுடைய அருச்சுனா—என்னை=(பரப்பிரமரூபனான) என்னை—மேவுவார்=(பிரத்தியக்கான்மாவாகச்) சாட்சாத்கரித்து நிரந்தரஞ் சிந்தியாநிற்குந் துறவிகள்—வேண்டிற்று எல்லாம்=விரும்பின அந்நபாநாதிகளனைத்தும் — பின்னையே என்னாது =பின்னரோ கொடுப்பேமென * விலம்பஞ்செய்யாது—அன்றே அளித்து=உடனேகொடுத்து-அவை காப்பேன் = அவற்றை(ப் பரமேசுரனானயானே) இரட்சிப்பேன்.—(யோகக்ஷேமங்களை யானே வகிக்கிறேனென்பார், 'வேண்டிற்றெல்லாம், பின்னையே யென்னாதன்றே யளித்தவை காப்பேன்' என்றார்; இங்ஙனங் கூறியதற்குக் காரணம் என்னையெனின்? "அன்னவனல்லனெனக்கவனுக்கே, நன்னலனாருவ னானுநலத்தோய்" எ-ம், "ஓதருஞானியென் னுண்மையினுள்ளே, யெய்தலினாலவ னானெனவேயாம்" எ-ம் முற்கூறியிருப்பதே காரணமாம். ஏனைய பிராணிகளின் யோகக்ஷேமங்களையும் பகவானே வகித்தலால், ஞானிகளின் யோகக்ஷேமங்களைநானேவகிப்பேனென்றதில்என்னையோவிசேஷமெனின்? ஏனைய பிராணிகட்குப் பிரயத்தனத்தை முன்னே உண்டுபண்ணிப் பிரயத்தனவாயிலால் அவர்களின் யோகக்ஷேமங்களை வகிப்பதும், ஞானிகட்கோ

* விலம்பம்=தாமதம்,

பிரயத்தனத்தை யுண்டுபண்ணுமலே அவர்களின் யோகக்ஷேமங்களை வகிப்பதுமே விசேஷமாம்; இக்கருத்துப்பற்றியே மொழிபெயர்த்தவாசிரியர், 'பின்னையேயென்ருதன்றே' என்றனர். பூர்வம் பெருதவைகளான யோகபூமிகளின்பேற்றை, 'யோகம்' எ-ம், அவைகளின் பரிபாலனத்தை, 'க்ஷேமம்' எ-ம் கூறுவாருமுளர்.) [விசாரித்துப்பார்க்கில், இந்திராதியரான அந்நியதேவதைகள் உம்முடைய சொரூபமேயல்லாமல் வேறில்லை. இந்திராதிதேவதைகளைப் பூஜிப்பவரும் உம்மையேபூஜிப்பவராம்; இவ்வாற்ருல், உமது பக்தர்க்கும், அந்நியதேவதைகளின் பக்தர்க்கும் விசேஷமில்லாதிருக்க என்னுடைய பக்தர் கிருதகிருத்தியராவர், அந்நியபக்தர் கமனகமனமுறுவரொன்னும் உமதுவசனம் எப்படிச்சங்கதமாமென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்ருர்.] வானேர் மன்னையே முதல் ஆம் தெய்வம் வணங்குகின்ருரும்=இந்திரன்முதலான தேவதைகளைச் சிரத்தையோடுகூடி ஜ்யோதிஷ்டோமாதியாகங்களால் பூஜிப்பவரும்—என்றன்னையே வணங்குகின்ருர்=(உள்ளபடி அவ்வத்தேவதாரூபமாயுள்ள பரமேசுரனை) என்னையே பூஜிக்கின்றனர்;—(ஆயினும்,) தாம் அறியாததே காண்=அவ்வந்நியதேவதைகளின்பக்தர் அஞ்ஞானபூர்வகமாகவே (என்னைப் பூஜிக்கின்றனர்.)—எ-று.

மற்று-அசைநிலை. மன்னையே என்பதின் ஏகாரம் எண்ணுப்பொருளது. தன்னையே என்பதின் ஏகாரம் தேற்றப்பொருளது. காண் - முன்னிலையசை.

சர்வருடைய ஆன்மரூபமாக என்னையறியாமலும், அவ்விந்திராதி தேவதைகளை என்னினும் அந்நியமாகக் கற்பனைசெய்தும் அவ்வந்நிய தேவதைகளின்பக்தர் என்னை ஆராதனஞ்செய்கின்றனர்; இக்காரணத்தாலேயே அவ்வந்நியதேவதைகளின்பக்தர் மீண்டுமீண்டும் ஜநநமரணரூபசம்சாரத்தையடையாநிற்கின்றனரொன்பது கருத்து. (கஎ)

[இந்திரன்முதலிய அந்நியதேவதைகளை யாராதிப்பவர்க்குப் பிறவாமையாகிய பெரும்பயனில்லையாயினும் அவ்வந்தத்தேவதைகளின் ஆராதனத்தினநுசாரமாக அவ்வந்த அற்பபயன் அவசியமடையப்படுமென்னும்பொருளை யருளிச்செய்பவராய் ஸ்ரீ பகவான் நேரே பரமேசுரனை யாராதனஞ்செய்யும்பக்தர்க்கு அவ்வந்நியதேவதைகளின் பக்தரினும் விலட்சணத்தன்மையை அருளிச்செய்கின்ருர்.]

**தேவரை யடைந்தோர்தேவ ராவர்கள் பிதிர்கடம்மை**
**மேவவே யடைந்தோரந்தப் பிதிர்களாய் விளங்காநிற்பார்**



**யாவர்க ளியாவர்பாலா ரவர்களே யாவரொன்ருலாவவென் னடைந்தார்யானே யாவதற் கையமுண்டோ.**

(இ-ள்.) தேவரை அடைந்தோர்=(இந்திராதி) தேவர்களையாராதிப்பவர் — தேவர் ஆவர்கள் = அவ்விந்திராதி தேவர்களே யாவர்.— பிதிர்கள் தம்மை மேவவே அடைந்தோர் = அக்கிநிஷ்வாத்தாதிபிதிர்களைச் சிராத்தாதி கர்மங்களால் பொருந்த ஆராதனஞ்செய்தோர் — அந்தப்பிதிர்கள் ஆய் விளங்காநிற்பார்=(மரணத்தின்பின்னர்ப்)பிதிர்களாகி விளங்குவர்.— யாவர்கள் = எந்தப்புருஷர் — யாவர் பாலார்=(மாதிர்களுதிபூதங்களுள்ளே) யாதொரு பூதங்களிடத்தன்புடையராய் ஆராதனஞ்செய்வரோ—அவர்களே ஆவர் என்ருல்=(அவர்கள் அந்தத்தில்) அப்பூதங்களேயாவரொனின்,—ஆவ=ஆச்சரியம்—என் அடைந்தார்=(பரமேசுரனை) என்னை ஆராதனஞ்செய்தவர்—யானே ஆவதற்கு=(பரமாநந்தரூபனை) நானேயாவதற்கு—ஐயம் உண்டோ=ஐயமுண்டா (இல்லை.)—எ-று.

பரமேசுரனை யாராதனஞ்செய்வதிலும், இந்திராதியரான அந்நியதேவரை யாராதனஞ்செய்வதிலும் ஆயாசம் சமானமாகவிருந்தும் இந்தச்சீவர்கள் அவிநாசியானபயனைப்பயக்கும் அந்தரியாமியாகிய என்னை ஆராதனஞ்செய்யாமல் அந்நியரான இந்திராதிதேவர்களை யாராதனஞ்செய்து நாசமுடையபயனையே அடையாநின்றனராகலின், அஞ்ஞானிகளாகிய சீவர்களின் துஷ்டமான அதிருஷ்டத்தின் பிரபாவம் ஆச்சரியமாமென்பது இச்செய்யுளின்கண் ஸ்ரீ பகவானது அபிப்பிராயமாம்; இதனைக் குறிப்பித்தற்பொருட்டே மொழிபெயர்த்தோர், 'ஆவ' என்னும் அதிசயவிரக்கச்சொற்றந்துரைத்தனர் என்க. (கஅ)

[தனது பக்தர்க்கு அக்ஷயபலமுளதாமென்பதை அருளிச்செய்து தனது ஆராதனத்தில் ஆயாசமின்றெறன்பதும், அவ்வாராதனத்தின் பிரகாரமும் இப்போது அருளிச்செய்கின்ருர்.]

**போதல ரிலைகாய்நீரோ பெற்றதே கொண்டுபோற்றிக்**
**காதலாற் றாயவன்பர் தந்ததே களித்துக்கொள்வ**
**ணுதலா லீவரோற்ப வுண்பவென் றிவைகளேகொண்**
**டிதெலா மெனக்காய்த்தந்தா லென்னையே யெய்தலாமால்.**

(இ-ள்.) இலை=பத்திரம்,—போது அலர்=புஷ்பம்,—காய்=பழம்,—நீர்=ஜலம் (முதலிய சுலபமாய்க் கிடைக்கத்தக்க இவைகளுள்ளே)—பெற்றதே கொண்டு = (தாம்) அடைந்ததெதுவோ அதுகொ

ண்டு—போற்றி=(என்னை) ஆராதித்து—காதலால் = நிரதிசயபக்தியினால்—தூய அன்பர்=பரிசுத்தமான (புத்தியையுடைய) பக்தர்கள்—தந்ததே=(எனக்கு) அர்ப்பணஞ்செய்ததையே—களித்துக் கொள்வன்=(யான்) சந்தோஷித்து அங்கீகாரஞ் செய்யாநிற்பேன்;—ஆதலால்=ஆதலின்,—ஈவ நோற்ப உண்ப=ஈவனவும், நோற்பனவும், உண்பனவும்—என்ற இவைகளேகொண்டு=என்னப்பட்ட இவைகளையே (பூஜாத்திரவியமாகக்) கொண்டு—ஈது எலாம்=இவையனைத்தையும்—எனக்கு ஆய்த் தந்தால்=(பரமேசுரனான) எனக்கு (என்னிடத்து) அன்புடையனாகி அர்ப்பணஞ்செய்தால்—என்னையே எய்தல் ஆம்=(கர்மபந்தங்களினின்றும் விடுபட்டவனாய், பரப்பிரமரூபனான) என்னையே நீ அடையலாம்.—எ-று. ஆல்-அசைநிலை.

'என்ற' என்னும் பெயரெச்சத்தின் ஈறுதொக்கது. 'ஈதெலாம்' என்றது, பன்மையில் ஒருமைவிரவிய வழுவமைதி. 'காதலாற்றூய வன்பர்தந்ததே' என்றதால், பரமேசுரனான என்னிடத்திற் பக்தியில்லாத தவசிகள், பிராமணர்கள் யாதானும் மஹத்பதார்த்தங்களைக் கொடுக்கினும் நான் அப்பதார்த்தங்களைச் சுவீகாரம்பண்ணேன்; சுவீகாரம் பண்ணுவதில் பிராமணத்தன்மை, தவத்தன்மை நிமித்தமாக இல்லை; கேவலம் பரமமான பிரீதியே நிமித்தமாகவுளதென்பதைக் குறிப்பித்தனர். கொள்வேன் என்னாது, "களித்துக்கொள்வேன்" என்றதால், பக்தஜனங்கள் அத்தியந்தம் பிரியரூபமாகிய பக்தியினால் அர்ப்பணஞ் செய்யும் பத்திரபுஷ்பாதிகள் துச்சபதார்த்தங்களாயினும் மஹத்பதார்த்தங்களாகவே சுவீகாரஞ்செய்வேனென்பது பெறப்படுகின்றது. 'ஈவ' என்றது, அதிதியர், பிராமணர் முதலியோரிடத்து அந்நம், சுவர்ன முதலிய பதார்த்தங்களின் கொடையை. 'நோற்ப' என்றது, பாவ நிவிர்த்தியின் பொருட்டுச் செய்யும் சாந்திராயணவிரதமுதலிய தவத்தை, அல்லது யதேச்சாபூர்வகப்பிரவிர்த்தியை நிவிர்த்திசெய்தற்பொருட்டுச் சரீரேந்திரியாதிகளின் நிக்கிரகரூபமான தவத்தை. 'உண்ப' என்றது, தனது திருப்தியின்பொருட்டு அல்லது, கர்மங்களின் சித்தியின்பொருட்டுப் போஜநஞ்செய்யும் அந்நத்தை.

இந்திராதி தேவதைகளின் சந்தோஷத்தில் வெகு திரவியச்சிலவு, சரீரத்தின் ஆயாசமுதலியவை நிமித்தமாயிருப்பதுபோலப் பரமேசுரனான எனது சந்தோஷத்தில் அந்நிமித்தங்கள் அவசியம் அபேட்சிக்கத் தக்கதாக இல்லை; பின்னையோகேவலம் ஒருபக்தியே அபேட்சிக்கத்தக்கதாகவுளது. ஆதலால், அதிகாரிகள் மற்றைத் தேவர்களைப் பரித்தியா



கஞ்செய்து ஒருபரமேசுரனான என்னையே ஆராதானஞ் செய்யத்தக்கதென்பது கருத்து. (கக)

[பகவானே உம்முடைய பக்தர்க்கு அநுக்கிரகஞ்செய்கின்றீர்: பக்தரல்லாதவர்க்கு அநுக்கிரகஞ் செய்கின்றீரில்லை; இவ்வாற்றால், இராகத்துவேஷங்களையுடைய நீரும் எங்களைப்போல ஒருவிசேஷ சீவனேயாவீரல்லாமல் ஈசுரனாக எப்படியாவீரென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

**எப்பொரு டனக்குமியானொத் திருத்தலா லெனக்கியாரு**
**மொப்பர்க ளினியரின்னா தாரென வொருவரில்லை**
**யிப்படி யறியுமன்பர் பக்கலே யானுநிற்ப**
**னப்படி யவருமென்பா லங்ஙன மமர்ந்துநிற்பார்.**

(இ-ள்.) எப்பொருள் தனக்கும்=(என்னிடத்தன்புடைமையும், அன்பிலாமையுமுடைய) சர்வப்பிராணிகளிடத்தும்—யான்=(பரமேசுரனான) நான்—ஒத்து இருத்தலால்=சமானமாகவே இருத்தலினால்,—எனக்கு=(பரமேசுரனான) எனக்கு—யாரும் ஒப்பர்கள்=யாவருஞ் சமானர்களே (யல்லாமல்)—இனியர் இன்னாதார் என ஒருவர் இல்லை=இவர் பிரியவிஷயர், இவர் துவேஷவிஷயரென ஒருவருமில்லை;—(ஆயினும்) இப்படி அறியும் அன்பர்பக்கலே = (என்னை) இவ்வாறறிந்து (என்னிடத்துச் சர்வகர்மங்களின் அர்ப்பணரூபமான பக்தியினால்) சேவியாநிற்கும் பக்தரிடத்து—யானும் நிற்பன்=நானும் அநுக்கிரகஞ் செய்துநிற்பேன்;—அப்படி அவரும்=அப்படி என்னால் அநுக்கிரகஞ் செய்யப்படும் பக்தரும்—என்பால்= என்னிடத்து—அங்ஙனம் அமர்ந்து நிற்பார்=(முன்சொன்ன) அவ்விதமே பொருந்திநிற்பார்கள்.—எ-று.

'எப்பொருடனக்குமியானொத்திருத்தலால்' என்றது, சுவாபாவிகமான அஸ்திபாதிப்பிரியரூபத்தினாலும், ஔபாதிகமான அந்தரியாமிரூபத்தினாலும் எனக்கொள்க.

இதன்றாற்பரியம்; — அக்கினியும், கற்பகவிருட்சமும் இராகத்துவேஷ மில்லாதிருந்தும் தன்னையடைந்தவருடைய சீதத்தை அக்கினியும், தன்னையடைந்தவருடைய வறுமையைக் கற்பகவிருட்சமும் நிவிர்த்தி செய்வதால் விஷமத்தன்மையாகிய தோஷத்தை அவை பொருந்தாமைபோலப் பரமேசுரனான நானும் இராகத்துவேஷங்களில்லாதிருந்தும் சரணாகதரான பக்தஜனங்கட்கே பந்தத்தை நிவிர்த்திக்கின்றனன்.

அங்கியப் பிராணிகளின் பந்தத்தை நிவிர்த்திசெய்திலன்; இத்துணை மாத்திரத்தால் என்னிடத்தும் விஷமத்தன்மையாகிய தோஷம்பொருந்தாதென்பதாம். (உ0)

[சர்வரிடத்துஞ் சமானமாகவிருக்கும் பரமேசுரனை என்னிடத்தும் விஷமத்தன்மையைக் காட்டாநிற்கும் எனது பக்தியின் பிரபாவத்தை நீ கேட்பாயென அதனை இப்போது ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

**ஊணேயே முதலாயென்பா லொருக்கியென் னுணர்வார்நாளு**
**நாணேயே விட்டுத்தீமை புரியினு மவர்கணல்லா**
**ரேணேயேப் புயத்தாயென்றுங் கேடிலா வின்பமல்லா**
**தாணேயே யொருகேடில்லை யெங்கனு மவருக்கைய.**

(இ-ள்.) ஏணை ஏய் புயத்தாய்=வலிபொருந்திய புயத்தையுடைய அருச்சுனா—ஊணேயே முதல் ஆய்=உணவையே ஆதியாய்(த் தாம் அநுபவிக்கும் பதார்த்தங்களை)—என்பால் ஒருக்கி=(பரமேசுரனை) என்னிடத்தர்ப்பணஞ்செய்து—என் உணர்வார்=(அநந்நியமான சித்தமுடையராய்) என்னைச் சேவியாநிற்பவர் — நாளும்=(முன்னே) எப்பொழுதும்—நாணேயே விட்டு=அச்சத்தையொழித்து—தீமை புரியினும்=(அஜாமளாதியர்போல அத்தியந்தந்) துராசாரமுடையராயிருப்பினும்—அவர்கள் நல்லார்=அவர்கள் சாதுவே (என்று மதிக்கத்தக்கவராம்.)—[இவ்வாறருளியதைக் குதர்க்கவாதியர் கொள்ளாரொன்னுஞ் சங்கையினால் வியாகுலமுற்றுள்ள அருச்சுனனை ஸ்ரீ பகவான் உச்சாகப்படுத்துகிறார்.] ஐய=அருச்சுனா — அவருக்கு = (பூர்வம் வெகுகாலந் துராசாரமுடையராயிருந்த) அப்பக்தர்க்கு(ப்பரமேசுரனை எனதுபஜனத்தின்பிரபாவத்தால்)—என்றும்=எப்பொழுதும்—கேடுஇலா இன்பம் அல்லாது=கெடுதலில்லாத நிரதிசயாநந்தரூபமான மோட்சம் உளதாவதேயல்லாமல்—எங்கணும் ஒருகேடு இல்லை = எவ்விடத்தும் யாதொருதுர்க்கதியு முளதாதலில்லை;—ஆணேயே=சத்தியமே(என்று பிரதிவாதிகளின் எதிரேநின்று உயரக்கையெடுத்து இவ்வாறு பிரதிக்ஞைசெய்வாய்.)—எ-று.

இங்ஙனம் பிரதிக்ஞை செய்யில், பிரதிவாதியர் குதர்க்கம் ஒழிந்து உன்னைக் குருரூபமாகக் கொள்வரென்பது கருத்து. (உக)

[ஸ்திரீ, சூத்திரர் முதலிய பிராணிகளும் எனது பக்தியினால் பரகதியையடையின், பிராமணாதியரான உத்தமமநுடர் எனது பக்தி



யினால் பரமகதியடைவரொன்பதில் ஆச்சரிய மென்னை யென்னுங் கைமுதிகந்நியாயத்தால் ஸ்ரீபகவான் அவ்வுத்தமமநுடரைப் பக்தியின்கண் பிரவிர்த்திப்பித்தற்பொருட்டுப் பக்தியின் பிரபாவத்தை வர்ணிக்கின்றார்.]

**வணிகரு மற்றவேளாண் மாந்தரு மகளிர்தாமும்**
**பணிவொடு மென்னைப்பேணிப் பற்றறுத் திடுவரென்ற**
**லணிமுடி யரசர்மேன்மை யந்தண ரடைவராகிற்**
**றணிவரும் பிறவிதீரச் சாற்றவேண் டுவதுமுண்டோ.**

(இ-ள்.) வணிகரும் = (கிருஷி, வாணிச்சியமுதலிய லௌகிக வியாபாரத்திற்றற்பரரான) வைசியரும்,—மற்ற வேளாண்மாந்தரும்= மற்றைச் சூத்திரரும்,—மகளிர்தாமும்=ஸ்திரீகளும் — பணிவொடும் என்னைப் பேணி=பக்தியுடனே (பரமேசுரனாகிய)என்னைச் சேவித்து—பற்று அறுத்திடுவர் என்றால்=(எனது பக்தியின்பிரபாவத்தால்) பந்தம்விடுத்துப் பரமகதியடையாநிற்பரென்று சொல்லில்,—அணி முடி அரசர் = அழகுபொருந்திய கிரீடத்தையுடைய க்ஷத்திரியரும்,—மேன்மை அந்தணர்=உத்தமஜாதியுடைய பிராமணரும்—அடைவராகில் =(எனதுபக்தராய் என்னை) ஆராதனஞ்செய்வாரானால்—தணிவு அரும் பிறவி தீர = (அவர் எனது பக்தியின்பிரபாவத்தால் ஒன்றால்) நீங்குதற்கரிய பிறவியினின்றுநீங்கிப் பரமகதியடையாநிற்பரென்று—சாற்ற வேண்டுவதும் உண்டோ=சொல்லவேண்டுவதுமுண்டா? (இல்லை.) —எ-று. (உஉ)

[இப்போது பூர்வஞ்சொல்லிவந்த பஜனப்பிரகாரத்தை அருளிச்செய்பவராய் ஸ்ரீ பகவான் இவ்வத்தியாயத்தை முடிக்கின்றார்.]

**மின்னையே யனையவாழ்வி னின்றநீ விருப்பினோடு**
**மென்னையே வணங்கியென்று மென்னையே நினைதியாகி**
**லென்னையே யடைதியென்றே யியம்பினு னிலங்குவாட்கட்**
**பின்னையேப் முறுவலோடும் பேய்முலை யுண்டபெம்மான்.**

(இ-ள்.) (அருச்சுனா) மின்னையே அனைய வாழ்வில் நின்ற நீ= மின்னையொப்பான மாநுட வாழ்வில் நிற்கின்ற நீ—விருப்பினோடும்= பக்தியோடும்—என்னையே வணங்கி = (மனவாக்குக் காயங்களால் பரமேசுரனை) என்னையே நமஸ்கரித்து—என்றும்=எப்போதும்—என்னையே நினைதியாகில் = என்னையே சிந்திப்பாயானால் — என்னையே அடைதி என்றே இயம்பினான் = (பரமாநந்தரூபனை) என்னையே

அபேதமாக வடைவாயென்றே அருளிச்செய்தனன்.—இலங்கு வாள் கண்=ஒளிராநின்ற வாள்போன்ற கண்களையுடைய—பின்னை எய் முறுவலோடும்=இலக்குமியின் திருமுகத்திற்பொருந்திய மந்த ஹாசத் தோடும்—பேய்முலை உண்ட பெம்மான்=பூதகியின் முலையையு முண் டருளிய ஸ்ரீ பகவான்.—எ - று.

'மின்னையே யனையவாழ்வி னின்றநீ' என்றதால், மநுடதேகம் அநித்தியமாகலானும், மோட்சமடைதற்கு அதிகார முடைமையினும் விலம்பஞ்செய்யாது சீக்கிரமாக மிகவும் பிரயத்தனத்தால் பரமே சுரனை என்னைச் சரணடையாவிடில் இம்மநுடதேகம் நிஷ்பலமாகு மென்பதைக் குறிப்பித்தனர். 'என்னையே யடைதி' என்றது, கடா காசம் மஹாகாசத்தை யடைந்தாற்போலும், கங்கைமுதலிய நதிச் சலங்கள் சமுத்திரசலத்தை யடைந்தாற்போலும் என்க. (உங)

## கூ-வது மாயாவிகாரவத்தியாயம்

முற்றிற்று.

---

ஆக அத்தியாயம் கூ-க்குத் திருவிருத்தம்-உசுகூ.

---

## கo-வது, விபூதியோகவத்தியாயம்.

[பூர்வம் ஏழு, எட்டு, ஒன்பது என்னும் இம்மூன்றத்தியாயங் களால் தற்பதார்த்தரூபனான பரமேசுரனுடைய சோபாதிகரூபமும், நிருபாதிகசொரூபமுங் காண்பிக்கப்பட்டன ; அத் தற்பதார்த்தரூப னான பரமேசுரனுடைய விபூதிகள் சோபாதிகசொரூபத்தின் தியா னத்திலும், நிருபாதிகசொரூபத்தின் ஞானத்திலும் உபாயபூதங்க ளாம்; இப்படிப்பட்ட பரமேசுரனுடைய விபூதிகளும் ஏழாமத்தியாயத் திலும், ஒன்பதாமத்தியாயத்திலும் சஞ்சேபமாக அருளிச்செய்யப்பட் டன; அவைகளைத் தியானத்தின்பொருட்டும், ஞானத்தின்பொருட் டும் விஸ்தாரமாக அவசியமருளிச்செய்யவேண்டுமாகையால் பரமகிரு பாலுவாகிய ஸ்ரீ பகவான் அருச்சுனன் கேளாதிருக்கவும் தனது விபூதி களை விஸ்தாரமாக இதில் அருளிச்செய்கின்றார்.]

**அரியவெனது நிலைமையைமுன் பளவேசொன்னே னதுகேட்டே, யுரியமனனிற் களிகூர வுவவாநின்ற வுனக் கதனை, விரியமொழிவன் கேளென்று வேதத்தலைக்கே வீற்**



**றிருக்குங், கரியமுகிலான் செவ்வாயாற் காதல்கூரக் கட்டு ரைப்பான்.**

(இ-ள்.) அரிய எனது நிலைமையை = (யாவரானும் அறிதற்கு) அரிய (பரமேசுரனான) எனது விபூதியை—முன்பு=பூர்வம் ஏழாமத் தியாயம், ஒன்பதாமத்தியாயங்களில்—அளவே சொன்னேன் = சஞ் சேபமாகவே அருளிச்செய்தேன்;—அது கேட்டே = அங்ஙனஞ் சஞ் சேபமாக அருளிச்செய்ததைக்கேட்டே—உரியமனனில் = (உனக்கு) உரிமையாகிய மனத்தின்கண்ணே—களி கூர=களிப்பு மிகும்படி— உவவாநின்ற உனக்கு=சந்தோஷியாநின்ற உனக்கு—அதனை = அவ் விபூதியை—விரிய மொழிவன் கேள் என்று=விஸ்தாரமாக அருளிச் செய்வேன் கேட்பாயென்று—வேதத் தலைக்கே வீற்றிருக்கும் = வே தத்தின் சிரசின்கண்ணே வீற்றிருக்கும் — கரியமுகிலான் = கரிய முகில்போலும் வண்ணமுடைய ஸ்ரீ பகவான்—செவ்வாயால்=(தனது சிவந்த) திருவாக்கால் — காதல் கூரக் கட்டுரைப்பான் = (அருச்சுன னுக்கு அதில்) அன்பு மிகும்படி அருளிச்செய்வான்.—எ-று.

'வேதத்தலை' என்றது, வேதத்தினந்தமாகிய தத்துவமஸியாதி மஹாவாக்கியங்களை. வீற்றிருத்தல்=தனித்திருத்தல். (க)

[தமது பிரபாவத்தை மீண்டும் உபதேசித்தற்குக் காரணங் கூறு கின்றார்.]

[வேறு.]

**தேவர்களு முனிவர்களு மசுரர்களுஞ் சித்தர்களும்**
**யாவர்களு மறியாரென் பெருமையையென் பழைமையினாற்**
**சாவகையும் பிறப்புமிலா வெனையறியத் தருவாரப்**
**பாவவினை யறவிட்டுப் பரகதியை படைகிற்பார்.**

(இ-ள்) தேவர்களும்=இந்திரன்முதலிய தேவர்களும்,—முனிவர் களும் = பிருகுமுதலிய இருடிகளும்,—அசுரர்களும் சித்தர்களும்= அசுரரும், சித்தரும்—யாவர்களும் = (ஆகிய இவர்) யாவரும்—என் பெருமையை அறியார்=எனது பிரபாவத்தை யறியார்கள்;—[இதற் கேதுகூறுகின்றார்] என் பழைமையினால்=எனது சொரூபமானது தேவர்முதலியோருக்குக்காரணமாவதால்(காரியமானஅவர்கள் எனது கிருபையினாலல்லாமல் எனது பிரபாவத்தை யறியார்கள்.)—[தனது பிரபாவத்தை யறிந்ததனால் வரும்பயனை அருளிச்செய்கின்றார்.] சா வகையும் பிறப்பும் இலா எனை=மரணமும், ஜநநமுமில்லாத (* லோக

---

* லோகமகேசுரன்=லோகங்கட்கு மகேசுரன்.

மகேசுரனான) என்னை—அறியத் தகுவார்=(தமதான்மாவோடபேதமாக) அறியத்தக்கவர்—அப்பாவ வினை அறவிட்டு = சர்வபாவகர்மங்களையும் அறும்படிவிடுத்து — பர கதியை அடைகிற்பார் = நிரதிசயரூபமான முக்தியை யடையாநிற்பர்.—எ-று. (உ)

[இப்போது இரண்டு செய்யுட்களால் தனது லோகமகேசுரத்தன்மையை அருளிச்செய்கின்றார்.]

**புத்திபொறை தவஞானம் புகழ்பழிதீக் கொலையொழிவு**
**சத்தியநற் சமைதமைநற் செபந்தானஞ் சாவுபிறப்**
**பத்திகொடு நிறைவின்ப மிடரஞ்ச லஞ்சாமை [வாய்.**
**யித்தனையுந் தோன்றுவதென் னிடைநின்றே யெனத்தெளி**

(இ-ள்.) புத்தி=(சாராசாரங்களை விவேகம் பண்ணும்படியான) அந்தக்கரணத்தின் சாமர்த்தியம்,—பொறை=(சித்தத்தின்)நிர்விகாரத்தன்மை,—தவம் = பலவிரதங்களால் சரீரேந்திரியங்களை மெலிவித்தல்,—ஞானம்=(ஆன்மானான்மாக்களை விஷயம்பண்ணும்) ஞானம்,—புகழ்=(தர்மநிமித்தத்தாலுண்டாகாநிற்குங்) கீர்த்தி,—பழி=(அதர்மநிமித்தத்தாலுண்டாகாநிற்கும்) நிந்தை,—தீக் கொலை ஒழிவு = (மன்வாக்குக் காயங்களால் சர்வப்பிராணிகளையுஞ் சிறிதுந்) துன்புறுத்தாமை,—சத்தியம்=மெய்ம்மைகூறல்,— நல் சமை=(சப்தாதி விஷயங்களினின்றும்) அந்தக்கரணத்தை நிவர்த்தித்தல்,—தமை=சுரோத்திராதிபாகியேந்திரியங்களைச் சப்தாதிவிஷயங்களினின்றும் நிவர்த்தித்தல்,—நல் செபம்=நல்ல ஜபம்,—தானம் = (உத்தமமான தேசகாலங்களில் சத்பாத்திரத்திற் சிரத்தையோடும்) அந்நம், சுவர்ண முதலியவற்றைக் கொடுத்தல்,—சாவு=மரணம்,—பிறப்பு=ஜநநம்,—அத்தி கொடு நிறைவு = பிராரப்தவசத்தாற் கிடைத்துள்ள சிறிதுயோக்கிய பதார்த்தங்களைக்கொண்டு சந்தோஷித்தல், (அலம்புத்தி யென்றபடி.)—இன்பம்=சுகம்,—இடர்=துக்கம்,—அஞ்சல்=பயம்,--- அஞ்சாமை = பயமில்லாமை—இத்தனையும் = (லோகப்பிரசித்தமான நானாப்பிரகாரமாகிய) இவ்வளவு காரியவிசேஷங்களும் — (சர்வப்பிராணிகளுக்கும்) என்னிடைநின்றே=(பரமேசுரனான)என்னிடத்தினின்றே--தோன்றுவது என=(தத்தங்காரணங்களோடுகூட) உற்பந்நமாகின்றனவென்று—தெளிவாய்=(நீ) அறிவாய்.—எ-று. (ங)

[கேவலம் புத்தியாதிகட்குக்காரணமாவதால் என்னிடத்துச் சர்வலோகமகேசுரத்தன்மையில்லை; பின்னையோ பிருகுவாதிகட்குக் கார



ணமாவதாலும் சர்வலோகமகேசுரத்தன்மை என்னிடத்து உண்டென்னும் பொருளை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார் ]

[வேறு.]

**எனைத்து விதத்த தவத்தெழு வோரு**
**மனைத்தையு நிற்ப நடப்பன வாக**
**வனைத்த மநுக்களு நால்வரு மென்ற**
**னினைப்பி லுதித்தன ரென்பது நேர்வாய்.**

(இ-ள்.) எனைத்து விதத்த = எப்படிப்பட்ட கூறுபாடான—தவத்து எழுவோரும் = தவங்களையுடைய பிருகுமுதலிய சப்தமகாரிஷிகளும்,—அனைத்தையும் நிற்ப நடப்பன ஆக வனைத்த=சகலவுலகத்தையும் ஸ்தாவரஜங்கமரூபமாக வுண்டாக்கிய—மநுக்களும் = சுவாயம்பு முதலிய பதினான்கு மநுக்களும்,—நால்வரும்=சனகர்முதலிய நான்கு மகாரிஷிகளும் — (சிருஷ்டியினாதிகாலத்தில்) என்றன் நினைப்பில்=(இரண்ணியகர்ப்பரூபனான) எனது சங்கற்பமாத்திரத்தால்—உதித்தனர் என்பதும்=உற்பந்நமாயினரென்பதும்—நேர்வாய்=(நீ) சம்மதிப்பாய்.—எ-று.

வனந்த என்பது, 'வனைத்த' என வலித்தல் விகாரம் பெற்றது. இந்தப்படி சர்வஜகத்திற்குங் காரணரூபனான என்னில் சர்வலோகத்தின் மகேசுரத்தன்மை யுண்டென்பதிற் சொல்லவேண்டுவதென்னை யென்பதாம். (ச)

[இவ்வாறறிந்தோர் உம்மை எவ்வாறு பஜிப்பரென்னின்? அதற்கு ஸ்ரீ பகவான் கூறுகின்றார்.]

**இப்பரி சென்னை யறிந்தவ ரென்பால்**
**வைப்பர்கள் சிந்தையை மன்னுயி ரோடு**
**மப்பரி சேயறி யாரையு மாங்கே**
**யுய்ப்ப ரணைப்ப ருவப்பர் களிப்பார்.**

(இ-ள்.) இப்பரிசு என்னை அறிந்தவர்=இந்தப்படி (சர்வலோகமகேசுரனாக) என்னை (க்குருசாஸ்திரங்களின் உபதேசத்தால் உள்ளபடி) அறிந்தவதிகாரிகள் — என்பால்=(பரமேசுரனான) என்னிடத்தே—மன் உயிரோடும்=நிலைபேறுடைய பிராணனோடும்—சிந்தையை வைப்பர்கள்=(தமது) சித்தத்தை அர்ப்பிப்பர்.—அறியாரையும்=(தம்மிடத்திற் சிரத்தையுடைய) மாணாக்கரையும்—அப்பரிசே=(தாம் எப்படியோ) அப்படியே—உய்ப்பர்=(பரமேசுரனான என்னிடத்தே அவ

ரது சித்தத்தையும், பிராணனையும்) அர்ப்பணம்பண்ணும்படி செய்வர்.—உரைப்பர் = (தம்மோடொத்த அறிஞர்வரில் அந்யோந்யஞ் சுருதி, யுக்திகளால் என்னையே) போதியாநிற்பர்; (இதுவே பரமேசுரனை எனது பஜனமாம்;)—(இவ்வாறான எனது பஜனத்தினாலேயே அறிஞராயினோர்) உவப்பர்=சந்தோஷியாநிற்பர்;—களிப்பார் = (இச்சந்தோஷத்தினால்) இன்புறாநிற்பர்.—எ-று. ஆங்கு, ஏ-அசைநிலைகள்.

சித்தத்தால் பரமேசுரனை என்னையே சர்வதா சிந்தனஞ் செய்வரென்பார், 'என்பால் வைப்பர்கள் சிந்தையை' என்றார். 'மன்னுயிர்' என்றது, சட்சுஸாதிய இந்திரியங்களை. 'என்பால் வைப்பர்கள்' என்றது, அவ்விந்திரியங்களின் வியாபாரங்களைப் பரமேசுரனை தனது பஜனத்தின்பொருட்டே வைப்பதை; அல்லது வாகிய விஷயங்களினின்று நிவிர்த்தித்துப் பரமேசுரனை தன்கண்ணே லயமாக்குவதை; அன்றியும், 'மன்னுயிர்' என்றது, சீவனமெனினுமாம்; ஆகவே தமது சீவனத்தை அந்யமான யாதேனுமொரு பிரயோஜனத்தின் பொருட்டாக வையாமல் பரமேசுரனது பஜனத்தின்பொருட்டே வைப்பரெனப் பொருளுரைத்துக்கொள்க. 'உவப்பர்' என்றது, பரமேசுரனது பஜனத்தை யடைந்ததனாலேயே நாம் கிருதகிருத்தியராயினேம்: பகவத்பஜனத்தினும் அந்யமான யாதொரு பதார்த்தமும் நமக்கிஷ்டசாதனமாக இல்லையென்னும் இவ்வாறான ஞானரூபமாகிய சந்தோஷத்தை. 'களிப்பார்' என்றது, இச்சந்தோஷத்தினாலேயே அறிஞர் சர்வத்தினும் உத்தமமான சுகத்தை யநுபவியாநிற்பதை என்றறிக. அதிகாரியானோன் சந்தோஷத்தினாலேயே உத்தமமான சுகமடைவனென்று பதஞ்சலி பகவானால் அருளிச்செய்யப்பட்டிருப்பதுமன்றி வாசிட்டத்தும், "பற்றின்றித் தனியிருக்கு மனத்தைப்போற் பனிமதியும் பதுமத்தோனும், பொற்றிரள்சே ரிந்திரனுஞ் சுகமடையார்" என்று கூறியிருப்பது காண்க. (ரு)

[பூர்வமருளிச்செய்த பிரகாரமாகத் தன்னைப் பஜிக்கும் அதிகாரிகட்குத் தான்செய்யும் அவரது நிர்க்குண சொரூபத்தின் பிராப்திரூபமான பயனை இரண்டு செய்யுட்களால் ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

நிரந்தர மிப்பரி சென்னை நினைப்பார்க்
கரந்தை கெடுத்தெனை யாயு மனத்தைப்
புரந்து கொடுத்தவர் தேர்பொரு ளாயே
வரங்களு முற்ற வளித்த வரத்தால்.



(இ-ள்.) நிரந்தரம் இப்பரிசு = எப்பொழுதும் முற்செய்யுளில் அருளிச்செய்தபிரகாரம்—என்னை நினைப்பார்க்கு= (பரமேசுரனை) என்னைப் பிரீதிபூர்வகமாகப் பஜனஞ் செய்பவர்க்கு — அரந்தை கெடுத்து=ஆயாசத்தைப்போக்கி—எனை ஆயும் மனத்தை = எனது வாஸ்தவசொரூபத்தை ஆராயும் புத்தியை — புரந்து கொடுத்து = புரந்து தந்து—வரங்களும் முற்ற அளித்து = அவர் வேண்டும் வரங்களுங் குறைவறவருளிச்செய்து — அவ்வரத்தால் = அவ்வரத்தினால்—அவர் தேர் பொருள் ஆய்=அவர் அறியும்பொருளாய்—எ-று. ஏ ஈற்றசை.

இது குளகம். (சு)

மற்றவர் நெஞ்சின் மயக்கிரு ளெல்லா
மற்றமின் ஞான விளக்கொளி யாலே
பற்றறு விப்ப னெனப்பழை யோன்முன்
கொற்றவன் மற்றிது கூற வலித்தான்.

(இ-ள்.) (அவரதான்மாகார விருத்தியின்கண்ணின்று பரப்பிரமமாகிய நான்) அவர் நெஞ்சின் மயக்கு இருள் எல்லாம் = அவரது அந்தக்கரணத்தின்கண்ணுள்ள அஞ்ஞானத்தால் ஜநியாநின்ற ஆவரணமாகிய இருண்முழுவதும்—அற்றம் இல்=மறைவில்லாத—ஞான விளக்கொளியாலே = (முன்சொன்ன) விருத்திஞானரூபமான தீபத்தினாலேயே—பற்று அறுவிப்பன் என=நாசமாகும்படி பண்ணுவேனென்றருளிச்செய்ய—பழையோன் முன் = (இங்ஙனமருளிச்செய்த) பகவான்முன்—கொற்றவன் = அருச்சுனன் — மற்று இது = வேறே இதனை—கூற வலித்தான் = சொல்லக் கருதினான்.—எ-று.

மற்று - அசை.

'புரந்துகொடுத்து' என்றது, பிரதிபந்தமுறாமல் இரட்சித்துத் தந்தென்றபடி. 'விளக்கொளியாலே' என்னுந் தேற்றேகாரத்தால் அஞ்ஞான நிவிர்த்தி செய்வதில் ஆன்மஞானோற்பத்திமாத்திரமே வேண்டுமல்லாமல் அந்யமான கர்மங்களும், அப்பியாசங்களும் வேண்டுவதில்லையென்பது பெறப்படுகின்றது. தீபத்திற்குச் சமானத்தன்மைரூபமான உருவக வலங்காரத்தால், தீபத்தினால் இருள் நீங்கினபின் முன்பேயுள்ள கடமுதலிய பொருள்களே அபிவியக்தியாவதுபோல ஆன்மஞானத்தால் அஞ்ஞானம் நீங்கினபின் முன்னரேயுள்ள பிரமபாவமான மோக்ஷம் அபிவியக்தியாவதேயல்லது முன்னில்லாத மோக்ஷம் உண்டாகவில்லையென்னும் பொருளை ஸ்ரீ பகவான் குறிப்பித்தனரென்றறிக. (எ)

[இந்தப்பிரகாரம் பரமேசுரனுடைய விபூதியையும், * யோகத்தையும் சாமான்யமாகக் கேட்ட அருச்சுனன் மீட்டும் அவற்றை விசேஷமாகக் கேட்க இச்சை நண்ணி ஸ்ரீ பகவானை ஸ்துதிக்கின்றான்.]

[வேறு.]

**பேதமுடைய பிறப்பகன்றான் பிறழாநிறைவு பெருஞ்செல்வ**
**மாதிதேவன் பரப்பிரம மழிவில்லாதா னாரணங்க**
**ளோதவரிய வுத்தமனிங் கெல்லாமுயிர்ப்பா னெனவுன்னை**
**நீதிமுனிவ ருரைத்தவெலா நீயேயருளிச் செய்தனையால்.**

(இ-ள்.) பேதம் உடைய பிறப்பு அகன்றான்=நாநாபேதமுடைய ஜநநமற்றவன்,—பிறழா நிறைவு=(ஒன்றினும்) பிரிதலில்லாதவிபு,—பெரும் செல்வம் = பேரானந்தம்,—ஆதிதேவன் = (சர்வஜகத்திற்குங் காரணமாகிய சொப்பிரகாசன்,—பரப்பிரமம்,—அழிவு இல்லாதான்= நாசமற்றவன் (சாசுவதனென்றபடி,)—ஆரணங்கள் ஓத அரிய உத்தமன்=சுருதிகளாற்சொல்லுதற்கரிய புருஷோத்தமன்,—இங்கு—எல்லாம் உயிர்ப்பான் என = அனைத்தும் உயிர்ப்பவன் என்றிவ்வாறு—உன்னை = உம்மை—நீதி முனிவர் = மெய்மையான (ஞானநிஷ்டையுடைய) ரிஷிகள்—உரைத்த எலாம்=(என்னிடத்து) அருளிச்செய்தவனைத்தையும்—நீயே அருளிச்செய்தனை=நீர் நேரே (என்னிடத்து) அருளிச்செய்தீர்.—எ-று. ஆல்-அசைநிலை.

'முனிவர்' என்றது, நாரதர் அசிதர் தேவலர் வியாசர் இவர்களை.

[குருசாஸ்திரங்களால் உபதேசித்த பொருள்களில் அதிகாரி ஓர் போதும் சந்தேகமடையலாகாது சத்தியத்வ புத்தியே செய்யவேண்டுமென்னும் பொருளைக் குறிப்பிப்பவனாய் அவற்றில் தனக்குள்ள சத்தியத்வபுத்தியை அருச்சுனன் கூறுகின்றான்.]

**எல்லாப்பொருட்குந் தனிவித்தே யெல்லாப்பொருட்கு மீசனே, நல்லார்புகழுந் தேவர்கட்கு முலகங்களுக்கு நாயகனே, யல்லாலறிவா ராரொன்னை யானேயறிவ னெனவருளுஞ், சொல்லாலுளவப் பொருளெல்லா மெய்யேயானுந் துணிந்தொழிந்தேன்.**

(இ-ள்.) எல்லாப் பொருட்குந் தனி வித்தே = சர்வபூதங்கட்கும் ஒப்பற்ற காரணனே,—எல்லாப் பொருட்கும் ஈசனே = சர்வபூதங்கட்

* யோகம்=சர்வக்ஞத்வம், சர்வசக்தி சம்பந்நத்வமுதலிய ஐசுவரியம்.



கும் * நியந்தாவே,—நல்லார் புகழும் = உத்தமர்களால் ஸ்துதியாகிற்கும்—தேவர்கட்கும்=(ஆதித்தியாதி) தேவதைகட்கும்,—உலகங்களுக்கும்=ஜகங்கட்கும்—நாயகனே= இறைவனே—என்னை = (நிருபாதிகரூபனும், சோபாதிகரூபனுமான) என்னை — அல்லால் அறிவார் ஆர்=(யான்) அறிவித்தாலல்லது ஒருவரும் அறியார்:—யானே அறிவன் என அருளும்=(ஒருவர் உபதேசமின்றி என்னை) யானே அறிவனென அருளிச்செய்த—சொல்லால் உள அப்பொருள் எல்லாம்=வாக்கியங்களால் (அறியத்தக்கனவாக) உள்ள அப்பொருள்களெல்லாம்—மெய்யே=சத்தியமேயாம்;—யானும் துணிந்து ஒழிந்தேன்=யானும் (அவ்வுண்மையை) நிச்சயித்துச் சந்தேகந்தவிர்ந்தேன்.—எ-று. (கூ)

[எனது சித்தம் பகிர்முகமாகும்போது எவ்வெவ்வஸ்துக்களை உமது விபூதியென்று சிந்தித்து அந்தர்முகமாமோ அவ்வவ்வஸ்துக்களை விஸ்தாரமாக அருளிச்செய்யவேண்டுமென்று அருச்சுனன் பிரார்த்திக்கின்றான்.]

[வேறு.]

**மெய்வகைய வுலகினிடை வேறுவே றாய்நிற்ப**
**தெவ்வகைய வுருவமுனைச் சார்ந்ததென வறிகில்லே**
**னவ்வகைய வெப்பொருளு மொளியாம லடியேனுக்**
**குய்வகைய நெறியாக வுரைத்தருளென் றேயுரைப்பான்.**

(இ-ள்.) வேறு வேறு ஆய்நிற்பது=வெவ்வேறாய் நிற்பனவான= உலகினிடை = உலகின்கண்ணே—எவ்வகைய உருவம் = எப்படிப்பட்ட உருவங்கள்—மெய் வகைய உனைச் சார்ந்தது என=மெய்ம்மையான தன்மையினையுடைய உமது விபூதியென்று—அறிகில்லேன் = (தூலபுத்தியுடைய யான்) அறிந்திலேன்;—அவ்வகைய எப்பொருளும்=அப்படிப்பட்ட (உமது) சர்வவிபூதிகளையும்—ஒளியாமல்=மறைக்காமல்—அடியேனுக்கு=உம்மைத் தஞ்சமென நம்பிய எனக்கு—உய்வகைய நெறி ஆக=(சிந்தித்துப்) பிழைக்கும்படியான வழி அதுவேயாக—உரைத்தருள் என்றே=(கிருபையினால்) உபதேசித்தருள்வீராகவென்று வினவி—உரைப்பான்=பின்னுங்கூறுவான்.—எ-று. (கo)

[முன்னே ஏழாமத்தியாயத்திலும், ஒன்பதாமத்தியாயத்திலும் சஞ்சேபமாகவருளிச்செய்த விபூதியோகங்களை விஸ்தாரமாக அருளிச்செய்யவேண்டுமென்று தான் பிரார்த்தித்ததற்குக் காரணங் கூறுகின்றான்.]

* நியந்தா=நியமிப்பவன்.

பருகாநின் றேற்குனது திருவாக்காம் பராமிருத
மொருகாலு மார்கின்ற திலையடியேற் குணாயென்ன
வருகால நிகழ்காலஞ் செல்கால மென்றிவற்றிற்
பெருகாத குறையாத பெருமாயன் பேசுவான்.

(இ-ள்.) உனது திரு வாக்கு ஆம் பராமிருதம்=(மொழிக்கு மொழி தித்திப்பினையுடைய) உம்முடைய திருவாக்காகிய மேலான வமிர்தத்தை—பருகாநின்றேற்கு= (சிரவணேந்திரியரூபமானமுகத்தினல்) பானஞ்செய்யாநின்ற எனக்கு—ஒருகாலும் ஆர்கின்றது இலை= ஓர்போதும் திருப்தியுண்டாகின்றதில்லை;—(இக்காரணத்தால்,) அடியேற்கு உணா என்ன=அடியேனுக்கு (இன்னும்) உபதேசித்தருள்வீராகவென்றருச்சுனன் வினவ — வருகாலம் நிகழ்காலம் செல்காலம் என்ற இவற்றில்=பூதபவிஷிய வர்த்தமானமென்ற இம்முக்காலங்களிலும்—பெருகாத குறையாத=பெருகுதலும், அருகுதலுமில்லாத—பெருமாயன் பேசுவான் = பெருமையுடைய ஸ்ரீ பகவான் அருளிச்செய்வார்.—எ-று. (கக)

[முன் அருச்சுனன் வினவினதற்கு ஸ்ரீபகவான் விடை கூறுகின்றார்.]

[வேறு.]

இறந்தவென் விபூதிக்கோ ரெல்லை யின்மையிற்
பிறந்தன முடிவுறப் பேச வொண்ணுமோ
வறந்தரு மனத்தினை யவற்றி லேசில
சிறந்தன கூறுவ னென்று செப்புவான்.

(இ-ள்.) இறந்த என் விபூதிக்கு=விஸ்தாரமான எனது விபூதிகட்கு—ஓர் எல்லை இன்மையின்=ஓர் அந்தமின்மையின்—பிறந்தன= ஜநித்தனவான அவ்விபூதிகளை—முடிவு உறப் பேச ஒண்ணுமோ= முடிவுபெறச் சொல்லக்கூடுமோ? (கூடாது;)—(ஆதலின்,) அறந் தரும் மனத்தினய்=அறஞ்செயவிரும்பும் மனத்தினையுடைய அருச்சுனா— அவற்றிலே=விஸ்தாரமான அவ்விபூதிகளிலே—சில சிறந்தன=சில சிறந்த விபூதிகளை—கூறுவன் என்று செப்புவான்=(உனக்குக்) கூறுகின்றேன் நீ கேளென்று இனிக்கூறுகின்றனர்.—எ-று. (கஉ)

[வேறு.]

ஓதிற்பெருகும் பூதங்கட் கெல்லாமிதயத் துள்ளுயிர்நான்
பேதித்திடுமிப் பொருட்கெல்லாப் பிறப்புநிலைகே டாவேனு



னாதித்தியரில் விட்டுணுநான் மருத்துவரின்ம ரீசியுநான்
சோதிக்கதிரி லொளிரிரவி யென்றுசொல்லப் படுவேனுன்.

(இ-ள்.) ஓதில் = (பிரதான விபூதிகளிலும் முன்னே முக்கியமான யாதொருவஸ்து சிந்திக்கத்தக்கதோ அதைச்)சொல்லில்,—பெருகும் பூதங்கட்கு எல்லாம்=எங்கும் விரியாநிற்கும் பிராணிகட்கெல்லாம்—இதயத்துள் உயிர் நான்=இருதயத்தின்கண்ணுள்ள பிரத்தியகான்மா(வாகிய வாசுதேவன்) நானே ஆகிறேன்; (இங்ஙனம் அபேதமாக நீ பரமேசுரனைத் தியானிப்பாயாக.)—[இங்ஙனம் உத்தமாதிகாரி தியானிக்கும் பிரகாரமருளிச்செய்து இனி மத்தியமாதிகாரியின் தியானப்பிரகாரம் நிரூபணஞ் செய்கின்றார்.] பேதித்திடும் இப்பொருட்கு எல்லாம்=நாநாபேதமாகவிருக்கும் இப்பிராணிகட்கெல்லாம்—பிறப்பு நிலை கேடு நான் ஆவேன்=உற்பத்தியும், ஸ்திதியும், நாசமும் (பரமேசுரனை) நானே ஆகின்றேன் ;—(சர்வப்பிராணிகளின் உற்பத்தி, ஸ்திதி, நாசரூபமாகவும், அச்சர்வப்பிராணிகளின் காரணரூபமாகவும் பரமேசுரனை நானே உனக்குத்தியானிக்கத்தக்கவனென்றுபொருள்.) [இங்ஙனம் மத்தியமாதிகாரிகட்குத் தியானப்பிரகாரமருளிச்செய்து இப்படிப்பட்ட தியானத்திலும் உனக்குச் சாமர்த்தியமின்றாயின், இனி அருளிச்செய்யும் வாகியதியானமே உனக்குச்செய்ய யோக்கியமாமென்னும் இவ்வாறான அபிப்பிராயத்தால் ஸ்ரீ பகவான் மந்தாதிகாரியின் மீதநுக்கிரகஞ்செய்து அவ்வாகியதியானத்தை இவ்வத்தியாயமுடியும் பரியந்தம் விஸ்தாரமாக வருளிச்செய்கின்றார்.] ஆதித்தியரில் விட்டுணு நான் = துவாதசாதித்தியருள்ளே விஷ்ணுவென்னும் பெயருடைய ஆதித்தியன் நானாகிறேன்.—மருத்துவரில் மரீசியும் நான்=சப்த* மருத்துகளுள்ளே மரீசியென்னுமருத்துவும் நானாகிறேன்.—சோதிக்கதிரில்=அக்கினி முதலிய பிரகாசவஸ்துக்களுள்ளே — ஒளிர்=எங்கும் வியாபித்த பிரகாசமுடைய—இரவி என்றுசொல்லப்படுவேன் நான்= சூரியனென்று சொல்லப்படுகிறவன் நானாகின்றேன்.—எ-று.

துவாதசாதித்தியர், சப்தமருத்து, அக்கினிமுதலிய ஜோதிகள் இவைகள் முழுவதும் சாமான்யமாக எனது விபூதிகளேயாயினும் விஷ்ணுவென்னும் பெயருடைய ஆதித்தியனும், மரீசியென்னும்பெயருடைய மருத்துவும், இரவியென்னும் பெயருடைய ஜோதியும் அதிகப்பிரபாவமுடைமையின் விசேஷ விபூதிகளாம்; ஆகலின், இவைக

---

* மருத்து=தேவதைகளில் ஓர்பேதம்.

ளில் பரமேசுர புத்திசெய்து அதிகாரி தியானிக்கத்தக்கதாம். இனிக் கூறப்படும் ஏனையவற்றையும் இவ்வாறேயறிக. (கங)

[இதுவுமது.]

[வேறு.]

**சந்திரனா னாண்மீனிற் சாமநான் மறைகளினி**
**லிந்திரனான் றேவர்களி லிந்திரியங் களின்மனநா**
**னெந்திரமா முருவுகளிற் சேதனநா னுருத்திரரின்**
**மந்திரமாஞ் சங்கரனா னியக்கரில்வைச் சிரவணனான்.**

(இ-ள்.) நாண்மீனில்=(ஆகாயத்தின்கண்ணுள்ள) அசுவினிமுதலிய சர்வ நட்சத்திரங்களுள்ளே—சந்திரன் நான்=(சர்வ நட்சத்திரங்கட்கும் அதிபதியாகிய) சந்திரன் நானாகின்றேன்.—மறைகளினில்=(இருக்குமுதலிய நான்கு) வேதங்களுள்ளே—சாமம் நான்=(கானத்தின் மதுரத்தன்மையினால் அத்தியந்தம் ரமணியமான) சாமவேதம் நானாகின்றேன்.—தேவர்களில்=(அக்கினி, வாயுமுதலிய சர்வ) தேவதைகளுள்ளே—இந்திரன் நான் = (சர்வதேவதைகளின் அதிபதியாகிய) இந்திரன் நானாகின்றேன்.—இந்திரியங்களில்=பதினோரிந்திரியங்களுள்ளே—மனம் நான்=(சர்வேந்திரியங்களையும் பிரவிர்த்திப்பிக்கின்ற சங்கற்ப விகற்பான்மகமான) மனம் நானாகின்றேன்.—எந்திரம் ஆம் உருவுகளில் = இயந்திரம்போலுஞ் சுழல்வனவாகும் பிராணிகளின் சம்பந்திகளான காரியகாரண சங்காதங்களில்—சேதனம் நான் = (சைதந்நியத்தை * அபிவியக்தியாகப்பண்ணும் புத்திவிருத்திரூபமான) சேதனம் நானாகின்றேன்.—உருத்திரரில் = ஏகாதசருத்திரர்களுள்ளே—மந்திரம் ஆம் சங்கரன் நரன்=மந்திரரூபனான சங்கரன் நானாகின்றேன்.—இயக்கரில்=யட்ச(ர்,ராட்சதர் இவ)ருள்ளே—வைச்சிரவணன் நான்=குபேரன் நானாகின்றேன்.—எ-று. (கச)

[இதுவுமது.]

**மலைகளின்மா மேருவுநான் வசுக்களிற்பா வகனுமியான்**
**றலைவர்களி லறுமுகனான் சலநிலையிற் சாகரநா**
**னிலயமிலா யாகத்திற் செபயாக மாவேனா**
**னிலையுடைய வெனுமிவற்றி லிமவானாய் நின்றேனான்.**

(இ-ள்.) மலைகளில்=(சிகரங்களையுடைய) பருவதங்களுள்ளே—மா மேருவும் நான் = (அத்தியந்தம் † ரமணியமான) மஹாமேருவும்

---

* அபிவியக்தி=பிரத்தியட்சயோக்கியதை.

† ரமணியம்=சுந்தரம்.



நானாகின்றேன்.—வசுக்களில் = அஷ்டவசுக்களுள்ளே — பாவகனும் யான்=அக்கினியும் நானாகின்றேன்.—தலைவர்களில் = சேனாபதிகளுள்ளே—அறுமுகன் நான்=(தேவசேனாபதியான) ஷண்முகன் நானாகின்றேன்.—சலநிலையில்=தடாகங்களுள்ளே—சாகரம் நான்=சமுத்திரம் நானாகின்றேன்.—இலயம் இலா யாகத்தில் = கெடுதலில்லாத அசுவமேதம், ஜ்யோதிஷ்டோமமுதலிய சர்வயாகங்களுள்ளும்—செப யாகம் நான் ஆவேன் = (இம்சைமுதலிய சர்வதோஷங்களு மின்மையின், அத்தியந்தஞ் சுத்திசெய்வதாயுள்ள) ஜபரூபமான யாகம் நானாகின்றேன்.—நிலையுடைய எனும் இவற்றில்=(உலகில் சலனமற்று) ஸ்திதியுடையனவென்னுஞ் சர்வஸ்தாவரபதார்த்தங்களுள்ளும்—இமவானாய் நின்றேன் நான்=இமாலய பர்வதமாய் நிற்கின்றேன்யான்.—எ-று. (கரு)

[இதுவுமது.]

**பெருமுனியிற் பிருகுவுநான் புரோகிதரிற் பீதகனான்**
**மருவியவாக் கவற்றோநான் மரங்களிலே யரசதுநான்**
**பொருவரிய நாரதனான் புத்தேண்மா முனிவர்களிற்**
**றிருவியல்கந் தருவர்களிற் சித்திரத்தே ரவனுமியான்.**

(இ-ள்.) பெரு முனியில்=(பிரமாவின் புத்திரரான)மஹாரிஷிகளுள்ளே — பிருகுவும் நான் = பிருகுவென்னும் ரிஷியும் நானாகின்றேன்.—புரோகிதரில் = (சகல ராஜாக்களினுடைய) புரோகிதருள்ளே—பீதகன் நான் = (இந்திரனுடைய புரோகிதராகிய) பிருகஸ்பதி நானாகின்றேன்.—மருவிய வாக்கவற்று = அர்த்தத்தின் வாசகமென்னும்பதரூபமான சர்வவாக்குகளுள்ளும் — ஓம் நான் = (பிரமத்தின் வாசகமென்னும் யாதொரு ஏகாட்சரரூபமான ஓங்காரபதமுண்டோ) அவ்வோங்காரம் நானாகின்றேன்.—மரங்களில் = சர்வவிருட்சங்களுள்ளும்—அரசு அதுவும் நான் = அரசவிருட்சமாகிய அதுவும் நானாகின்றேன்.—புத்தேள் மா முனிவர்களில்=தேவரிஷிகளின் மத்தியில்—பொருவு அரிய நாரதன் நான்=உவமைசொல்லுதற்கரிய நாரதனென்னும் பெயருடைய தேவரிஷிநானாகின்றேன்.—திரு இயல் கந்தருவர்களில் = சிறந்த கானமுடைய கந்தருவருள்ளே—சித்திரத்தேரவனும் யான்=சித்திரரதனென்னுங் கந்தருவனும் நானாகின்றேன்.—எ-று.

[இதுவுமது.]

**சித்தர்களிற் கபிலமுனி தேசிகளிற் கடற்பிறந்த**
**வுத்தமமாம் புரவியெனு முச்சைச்சி ரவநானே**

யத்தமுடை விலங்குகளில் யானயிரா வதமாவேன்
வித்தகமா நுடப்பிறப்பில் வேல்வேந்த ராவேனுன்.

(இ-ள்.) சித்தர்களில் = * சித்தர்களின்மத்தியில் — கபிலமுனி (நான்)=கபிலமுனி நானுகின்றேன்.—தேசிகளில்=அசுவங்களுள்ளே —கடல் பிறந்த உத்தமம் ஆம் புரவி எனும்=பாற்கடலிலே யுண்டான முதன்மையாகிய அசுவமென்று சொல்லப்பட்ட — உச்சைச்சிரவம் நானே=உச்சைச்சிரவம் நானே (ஆகின்றேன்.)—அத்தமுடை விலங்குகளில்=யானைகளுள்ளே—யான் அயிராவதம் ஆவேன் = யான் ஐராவதமாகின்றேன்.—வித்தக மாநுடப்பிறப்பில் = அறிவுடைய மநுடஜநநத்தில்—வேல் வேந்தர் ஆவேன் நான்=வேலையுடைய அரசராகின்றேன் யான்.—எ-று. (௧௭)

[இதுவுமது.]

[வேறு.]

படைகளில் வச்சிரம் பாம்பில் வாசுகி
யடைவரு மனந்தனன் ஞகர் தங்களிற்
கொடைபயில் சுரபிகோ குலத்திற் கூறிய
வடைவொடு மிவையெலா மியானென் றேயறி.

(இ-ள்.) படைகளில்=ஆயுதங்களுள்ளே—வச்சிரம்=(ததீசியின் அஸ்தியினின்றுமுண்டான) வச்சிரமும்,—பாம்பில் = சர்ப்பங்களுள்ளே—வாசுகி = (சர்ப்பங்களின் அரசான) வாசுகியும்,—நல் நாகர் தங்களில்=நல்லநாகங்களுள்ளே—அடைவு அரும் அனந்தன்—உவமானித்தற்கரிய நாகராஜாவானசேஷனும்,—கோ குலத்தில் = பசுக்கூட்டத்தில்—கொடை பயில் சுரபி = வேண்டியவற்றைக் கொடுத்தல்செய்யும் (வசிட்டருடைய) காமதேனுவும் — இவை எலாம் = (ஆகிய) இவையனைத்தும்—கூறிய அடைவொடும் = சொல்லிய முறையோடும்—யான் என்றே அறி=நானென்றேயறிவாய்.—எ-று.

சர்ப்பங்கள் விஷமுடையன, நாகங்கள் விஷமின்மையனவென்னும் இத்துணைப்பேதம் இரண்டன்கண்ணு முண்மையின், இங்கே கூறியதுகூறலென்னுங் குற்றமாகாதென்க. (௧௮)

---

* சித்தர்=பிரயத்தனமில்லாமலே ஜநநமாத்திரத்திஞலே தர்மம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியத்தன்மை முதலிய குணங்களும், பரமார்த்தவஸ்து நிச்சயமும் அடைந்துள்ள புருஷர்.



[இதுவுமது.]

வருணனு மியமனும் வரைவில் காமமும்
பெருமைசெய் யசுரரிற் பிரக லாதனு
மிருமையி னெண்ணலிற் காலம் யானெனச்
செருமலி தோளினுய் தெளியத் தேறுவாய்.

(இ-ள்.) வருணனும்=(ஜலத்தின்கண்ணே சஞ்சரியாநிற்பவைகளுள்ளே அவைக்கரசனுன) வருணனும், — இயமனும் = (தண்டஞ்செய்பவருள்ளே) யமனும்,—வரைவு இல் காமமும்=(கேவலம் சம்போகமாத்திரத்தைப்பிரதானமாகவுடைய காமங்களுள்ளே)புத்திரோத்பத்திக்கேதுவான காமமும்,—பெருமைசெய் அசுரரில்=செருக்கடைகின்ற தைத்தியருள்ளே — பிரகலாதனும்,—இருமையின் = மிகுதியாக—எண்ணலில்=கணிக்கப்பட்டவைகளுள்ளே—காலம் = * காலமும்—யான் என=(பரமேசுரனுன) நானேயென்று—செருமலி தோளினுய்=போரினை மிகவுஞ்செய்யாநிற்கும் புயத்தையுடைய அருச்சுனு —தெளியத் தேறுவாய்=சந்தேகநீங்கும்படி நிச்சயிப்பாய்.—எ-று.

'வரைவில்' என்றது; சாஸ்திரீயமாதலின். (௧௯)

[இதுவுமது.]

பொராவருங் கருடனுன் புள்ளின் மாக்களில்
விராவரு மடங்கனுன் வாயு வேகநா
னிராமனு னெறிபடை வீரர் தங்களிற்
கராமுநான் மீன்களி லாற்றிற் கங்கைநான்.

(இ-ள்.) புள்ளின்=பட்சிகளுள்—பொரா வரும் கருடன் நான்=பகையைப் பொருதுவருகின்ற பட்சிராஜனுகிய கருடன் நானுகின்றேன்.—மாக்களில்=மிருகங்களுள்ளே—விராவு அரும் மடங்கல் நான் =(ஒருவரால்) கிட்டுதற்கரிய மிருகங்களின் அரசாகிய சிம்மம் நானுகின்றேன்.—வேகம்=வேகமுடைய பதார்த்தங்களுள்ளே—வாயு நான் =பவனம் நானுகின்றேன்.—எறிபடை வீரர்தங்களில் = (யுத்தத்தில் அத்தியந்தங்குசலராய்) அஸ்திரசஸ்திரங்களைத் தரித்திருப்பவரான வீரர்களுள்ளே—இராமன் நான்=தசரதபுத்திரனுன இராமன் நானுகின்றேன்.—மீன்களில்=மச்சங்களுள்ளே—கராமும் நான்=மகரமச்சமுநானுகின்றேன்.—ஆற்றில்=யமுனை, கோதாவரிமுதலிய நதிகளுள்ளே—கங்கைநான்=(அத்தியந்தஞ் சிரேஷ்டமாகிய) கங்கை நானுகின்றேன்.—எ-று.

---

* காலம்=காலகணிதம்.

'பொரா' என்றது, செய்யா என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். மகரமீனைக் கராம் என்றது, இனவழுவமைதி; மருதத்தைக் குருந்தென்றாற்போல. (உ०)

[இதுவுமது.]

**மிக்கசொற்றொகையில் வாதநானரிய விச்சையிற்பிரம விச்சைநா, னக்கரங்களி லகாரநானழிவில் காலநானதுவு மன்றியே, தக்கதொந்துவ சமாசநானிரு வினைப்பயன்கடருவேனு நான், மிக்கமன்னுயிர்களைக்கொல்வேனுமவை யுற்பவஞ்செயுவேனுநான்.**

(இ-ள்.) மிக்க சொல் தொகையில்=மேலான *வாதம், †ஜல்பம், ‡ விதண்டை என்னும் இவற்றுள்—வாதம் நான் = வாதம் நானாகின்றேன்.—விச்சையில் = வித்தைகளெல்லாவற்றுள்ளும் — அரிய பிரம விச்சை நான்=(மோட்சத்திற்கேதுவான) அரிய பிரமவித்தை நானாகின்றேன்.—அக்கரங்களில் = (வர்ணரூபமான) அட்சரங்களெல்லாவற்றுள்ளும்—அகாரம் நான்=(சர்வவாக்குகளின் உருவமாகச் சுருதியிற் கூறியுள்ள) அகாராக்ஷரம் நானாகின்றேன்.—அழிவு இல் காலம் நான்=அக்ஷயமானகாலம் நானாகின்றேன் ;— அதுவும் அன்றியே= அதுவுமல்லாமலே — தக்க தொந்துவசமாசம் நான்=(சமாசசமுகங்களுள்ளே) உத்கிருஷ்டமான துவந்துவ ¶ சமாசம் நானாகின்றேன்.— இருவினைப் பயன்கள் தருவேனும் நான்=(பயனைக்கொடுப்பவருள்ளே புண்ணியபாவமென்னும்) இருவினைகளின்பயன்களைக்கொடுப்பவனான அந்தரியாமியும் நானாகின்றேன்.—மிக்க மன் உயிர்களைக் கொல்வேனும்=(சம்ஹாரகர்த்தருள்ளே) நிலைபேறுடைய சர்வவுயிர்களையுஞ் சம்ஹாரஞ்செய்யும் மிருத்தியுவும்,—அவை உற்பவம் செயுவேனும் நான்= அவ்வுயிர்களை உற்பவஞ்செய்யாநிற்பவனும் நானாகின்றேன்.—எ-று.

---

* வாதம்=ஓர் குருவினிடத்து அத்தியயனம் பண்ணாநிற்கும் இரண்டு மாணாக்கர், அல்லது குருமாணாக்கரிருவர் இவ்விருவருடைய தத்துவநிர்ணயபரியந்தம் வினாவிடைரூபமான கதை.

† ஒருவனையொருவர் ஜயித்தற்கு இச்சையுள்ள புருஷர் தத்தம் பட்சத்தை ஸ்தாபனஞ்செய்யும்படியான கதைக்கு ஜல்பமென்றுபெயர்.

‡ ஒருவனையொருவர் ஜயிக்கும்படியான இச்சையுடைய புருஷர் தமது பட்சத்தைத் தாபனம்பண்ணாத கதைக்கு விதண்டையென்றுபெயர்.

¶ சமாசம்=பதங்களின் சந்தி.



'செயுவேனும்' என்பதில், உகரச்சாரியை விரித்தல் விகாரம். 'அழிவில்கால நான்' என்றது, கணம், கடிகைமுதலிய நாசமுடைய காலங்கட்கு அபிமானியும், சர்வகாலங்களையும் அறியாநிற்பதும், பரமேசுரனென்னு நாமமுடையதுமான அக்ஷயகாலத்தை; இதனைக் காலகாலன் எனச் சுருதியுங் கூறுகின்றது. முன்னே கக-ம் செய்யுளில், 'எண்ணலிற்கால நான்' என்றது, நாசமுடைய காலகணிதத்தை ஆதலால், கூறியது கூறலென்னுங் குற்றமாகாமை அறிக. இராமகிருஷ்ணர் என்பது, துவந்துவசமாசம்; இது உபயபதார்த்தப் பிரதானமாகலின், சர்வசமாசங்களினும் உத்கிருஷ்டமாம்; ஆகலின், 'தக்கதொந்துவ சமாசநான்' என்றார். (உக)

**பெண்களிற்புகழ் திருசொன்மேதைபொறை திண்மை பேசுநினை வென்னவே, யெண்பகுத்தவெழு வோருநானிருது வாறில்வந்தவிள வேனிலா, னண்பநற்பெரிய சாமநானுரிய சாமமேழினு நலத்தினான், மண்களிப்பவரு திங்களிற்புகழ நின்றமார்கழியு மற்றுநான்.**

(இ-ள்.) பெண்களில் = பெண்களுள்ளே — புகழ்=கீர்த்தி,— திரு=ஸ்ரீ,—சொல் = வாக்கு,—மேதை,—பொறை=க்ஷமை,—திண்மை=திருதி,—பேசும் நினைவு = சொல்லாநிற்கும்ஸ்மிருதி—என்னவே எண் பகுத்த = என்றே செவ்வெண்ணாற்பகுத்த — எழுவோரும் நான்=சப்தமாதரும் நானாகின்றேன்.—இருது ஆறில்=ஆறிருதுக்களுள்ளே—வந்த இளவேனில் நான்=(சுகந்தமுடைய புஷ்பங்கட்கு உறைவிடமாய்) வருகின்ற வசந்த இருது நானாகின்றேன். —நண்ப= (எனக்கு) நட்பான அருச்சுனா—உரிய சாமம் ஏழினும் = கானத்திற்குரியசாமம் ஏழனுள்ளும்—நல் பெரிய சாமம் நான் = சிறந்தபிருகத் சாமம் நானாகின்றேன்.—நலத்தினால் மண் களிப்ப வரு திங்களில்= தாம் செய்யும் உபசாரங்களால் மண்ணுலகத்துள்ளோர் சந்தோஷிக்கும்படி வாராநிற்கும் பன்னிரண்டு மாதங்களுள்ளே = புகழ நின்ற மார்கழியும்=யாவரும் புகழும்படியாயுள்ள மார்கழிமாதமும், = மற்றும் நான்=சிறந்த ஏனைய விபூதிகளும் நானாகின்றேன்.—எ-று.

'கீர்த்தி'=பிரக்கியாதி. 'ஸ்ரீ' = தர்மம், அர்த்தம், காமம் இவை மூன்றுமாம். 'வாக்கு' = சர்வார்த்தங்களையும் விளக்குவதான சம்ஸ்கிருத வாணீரூபமான சரஸ்வதி. 'மேதை' = அநேக கிரந்தங்களின் அர்த்தங்களைத் தாரணஞ்செய்புஞ் சக்தி. 'க்ஷமை'=சந்தோஷவிஷாதங்களிரண்டினுஞ் சித்தத்தின் அவிகாரத்தன்மை. 'திருதி'=அநேக

மானபீடைகள் வந்தடையினும் சரீரேந்திரிய ரூபசங்காதங்களை ஸ்திரத்துவமாகப் பண்ணுஞ் சக்தி; அல்லது, யதேச்சா பூர்வகமாகப் பிரவிர்த்திகளைச் செய்விக்குங் காரணங்களால் சபலத்தன்மை வந்தடையினும் அந்தப் பிரவிர்த்திகளினின்று மீளும்படி பண்ணுஞ்சக்தி. 'ஸ்மிருதி'=பூர்வம் அநுபவித்த பொருள்களை வெகுகாலத்திற்குப் பின்னரும் நினைக்கும்படி பண்ணுகிற்குஞ் சக்தி. 'பிருகத்சாமம்' என்பது, சர்வத்தையும் ஈசுவரரூபமாக இந்திரனால் ஸ்துதிக்கப்பட்டது. (உஉ)

['மற்றுநான்' என்று முற்செய்யுளின் இறுதிக்கட் கூறியவற்றை விரித்துக் கூறுகின்றார்.]

[வேறு.]

கல்லாருந் தோளுடையாய் கவிகளிற்கா யத்திரிநான்
றொல்லாயங் களிற்சூது துணிவார்பாற் றுணிவதுநான்
வெல்வார்பால் வெற்றியுநான் மிகுதிறலோர் பாற்றிறநா
னல்லார்பா னன்மையுநான் ஞானிகள்பான் ஞானமுநான்.

(இ-ள்.) கல் ஆரும் தோளுடையாய்=மலையை யொப்பான புயத்தினையுடைய அருச்சுனா—கவிகளில்=சந்தசுக்களுள்ளே—காயத்திரி நான்=காயத்திரிச் சந்தசு நானாகின்றேன்.—ஆயங்களில்=வஞ்சிப்பவைகளுள்ளே — தொல்=பழமையான —சூது (நான்)=சூது நானாகின்றேன்.—துணிவார்பால் = முயற்சி செய்பவரிடத்தில் — துணிவதும் நான் = (நியமமாகப் பயனையடைவிக்கும்படியான) முயற்சியும் நானாகின்றேன்.—வெல்வார்பால்=சத்துருக்களைச்சயிப்பவரிடத்தில்—வெற்றியும் நான் = (சத்துருஜயமென்னும்) வெற்றியும் நானாகின்றேன்.—மிகு திறலோர்பால்=மிகுந்த வல்லபமுடையோரிடத்தில்—திறம் நான்=வல்லபம் நானாகின்றேன்.—நல்லார்பால் = சாத்துவிக புருஷரிடத்தில்—நன்மையும் நான்=(சத்துவகுண காரியமாகிய) தர்மம், வைராக்கியமுதலியவையும் நானாகின்றேன்.—ஞானிகள்பால்=ஞானிகளிடத்தில்—ஞானமும் நான் = பிரமான்ம ஐக்கியரூபஞானமும் நானாகின்றேன்.—எ-று.

நியமமாக அட்சரங்களையும், பாதங்களையுமுடைய சந்தமென்பவைகளுள், இருபத்துநான்கட்சரங்களையுடைய காயத்திரி யென்னும் பெயரிய சந்தஸு நானாகின்றேனென்பார், "கவிகளிற் காயத்திரி நான்" என்றார். (உ௫)

கண்ணனுநா னியாதவரிற் கவிகளிலே யுசனுநான்
றண்ணளிசேர் பாண்டவரிற் றனஞ்சயனு னாகின்றேன்



விண்ணுலவு முனிவர்களில் வேதவியா தனுநானே
யெண்ணரிய மறைவுகளி லியம்பாமை யாவேனன்.

(இ-ள்.) யாதவரில்=யாதவர்களுள்ளே—கண்ணனும் நான் = (உனக்குப் பிரமவித்தையை உபதேசியாநின்ற வசுதேவபுத்திரனான) இந்தக்கிருஷ்ணனும் நானாகின்றேன்.—கவிகளிலே=சாஸ்திரமறிந்தவர்களுள்ளே — உசனா நான் = சுக்கிரனென்னுங் கவியும் நானாகின்றேன்.—தண் அளி சேர் பாண்டவரில்=* தண்ணளி பொருந்திய பாண்டவர்களுள்ளே—தனஞ்சயன் நான் ஆகின்றேன்=அருச்சுனனாகிய நீ நானாகின்றேன்.—விண் உலவு முனிவர்களில் = மேலுலகங்களிற் சஞ்சரிக்கின்ற வேதார்த்தமனனசீலருள்ளே—வேதவியாதனும் நானே=ஸ்ரீ வியாசமுனியும் நானே (ஆகின்றேன்.)—எண்ணு அரிய மறைவுகளில் = எண்ணுதற்கரிய கோப்பியப் பொருள்களுள்ளே — இயம்பாமை ஆவேன் நான் = (வாக்கேந்திரிய நிக்கிரகரூபமான) மௌனம் நானாகின்றேன்.—எ று.

'மறைவுகளி லியம்பாமை யாவேனன்' என்றது, வாக்கேந்திரிய நிக்கிரகமுடைய புருஷனதுள்ளபிப்பிராயம் ஒருவரும் அறியக்கூடாமையின் என்க. (உ௪)

[வேறு.]

இரும்புவன மனைத்தினுக்கும் வித்துநா னெனைப்போக்கி யாதுமில்லை, வருந்தினுமென் பெருமைக்கு வரம்புரைக்க முடியாது வகுத்துச்சொன்னேன், பெருந்திருவை யுடையன மெய்ப் பெருமுயற்சி யனவென்று பேசுமிந்த, வரும்பொருள்களனைத்துமென தொளியினால் வருவனவென் றறிதிநீயும்.

(இ-ள்.) இரும் புவனம் அனைத்தினுக்கும் = பெருமை பொருந்திய இச்சகத்தனைத்திற்கும்—வித்து நான்=(சேதனரூபமான) காரணம் நானாகின்றேன்.—எனைப் போக்கி யாதும் இல்லை=(பரமேசுரனை) என்னை யொழிந்து யாதொரு பதார்த்தமுமில்லை: (எல்லாம் எனது சொரூபமே.)—வருந்தினும்=(சர்வக்ஞராயுள்ளோர்) வருந்தினாரேனும், — என் பெருமைக்கு வரம்பு உரைக்க முடியாது = என் விபூதியின் அந்தமானதை (அறியவும்,) சொல்லவும் முற்றாது;—வகுத்துச் சொன்னேன்=(இப்படி அந்தமற்ற எனது விபூதியை) வகுத்து † உத்தேசமாகக் கூறினேன்.—(இவ்வுலகின்கண்ணே) பெரும்

* தண்ணளி=மிக்ககிருபை. † உத்தேசம்=ஏகதேசம்.

திருவை உடையன மெய்ப்பெரு முயற்சியன=பெருமைபொருந்திய திருவையுடையனவும், மெய்ம்மையான பெரிய முயற்சியுடையனவும்—என்று பேசும்=என்று சொல்லும்—இந்த அரும்பொருள்கள் அனைத்தும்=இந்த அரிய பிராணிகளெல்லாம்—எனது ஒளியினால்=எனது சக்தியின் அம்சத்தால்—வருவன என்று=உற்பந்நமாயினவென்று—நீயும் அறிதி=நீயும் அறியக்கடவாய்.—எ-று.

'திரு' என்றது, இலக்குமி, அல்லது சம்பத்து, அல்லது சோபை, அல்லது காந்தி. 'முயற்சி' என்றது, மிக்கவல்லமை முதலியவற்றை.

[இவ்வாறு ஏகதேசரூப அவயவமாக விபூதியை அருளிச்செய்து இப்போது சகலரூபமாகவும் அவ்விபூதியை அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

**பலவினி யுரைத்தென்னிந்தப் பல்லுயி ரனைத்துமெல்லா**
**வுலகமு மொடுங்கிநிற்ப தென்னிலோ ரிடத்தினுள்ளே**
**கலவல னவற்றோடென்றான் கஞ்சனா ருயிர்போய்த்துஞ்ச**
**வலைகடல் வளராதேபேர்ந் தாயர்பால் வளர்ந்தபெம்மான்.**

(இ-ள்.) பல இனி உரைத்து என்—அநேகமாக இப்போது (எனது விபூதியை) அருளிச்செய்ததால் (உத்தமாதிகாரியாகிய உனக்கு) என்ன பிரயோஜநம்:—இந்தப் பல்லுயிர் அனைத்தும் = இந்தப் பலவிதமான பிராணிகள் முழுவதும்,—எல்லா உலகமும்=சகலமான ஜகத்தும்—ஒடுங்கி நிற்பது=அடங்கி நிற்பது—என்னில் ஓரிடத்தினுள்ளே=(பரமேசுரனான) என்னில் ஏகதேசமாத்திரத்தில்;—அவற்றோடு கலவலன் என்றான்=அப்பிராணிகளோடும், அவ்வுலகங்களோடும் (யான்) சம்பந்தியேனென் றருளிச்செய்தனர். — கஞ்சன் ஆர் உயிர்போய்த்துஞ்ச = கம்சனுடைய அரியவுயிரானது நீங்கி அவன் சாகும்படி—அலைகடல் வளராதே பேர்ந்து=அலையையுடைய திருப்பாற்கடலிற் கண்வளராதே பெயர்ந்து—ஆயர்பால் வளர்ந்த பெம்மான்=நந்தகோபன் அசோதை இவர் மனையகத்து மதலையாய்வளர்ந்த ஸ்ரீ பகவான்.—எ-று.

சர்வ ஜகத்தையும் ஓரம்சத்தினால் வியாபித்து நிற்கின்றேனென்பார், 'இந்தப்பல்லுயி ரனைத்துமெல்லா, வுலகமுமொடுங்கி நிற்பதென்னிலோ ரிடத்தினுள்ளே' என்றார். இங்ஙனங் கூறியது பரமான்மாவினது ஏகபாதத்தில் சர்வவிசுவமும் உளதென்னுஞ் சுருதியால். பாடுதுறையிலும், "உலகங்கள் பதினாலு மொருகாலாலடக்கி யுணர்வேமுக்காலாகிப் பந்தாடாநின்றேன்" என்றருளிச்செய்திருப்பது காண்க.



முக்கியாதிகாரியாகிய நீ பரிச்சின்ன திருஷ்டியைப் பரித்தியாகஞ்செய்து பரமான்மாவாகிய என்னைச் சர்வஜகத்திலும் வியாபகமாகக் காண்டியென்பது கருத்து. (உசு)

## கo-வது, விபூதியோகவத்தியாயம்.

முற்றிற்று.

---

ஆக அத்தியாயம் கo-க்குத் திருவிருத்தம்-உகூடு.

---

## கக-வது, விசுவரூபவத்தியாயம்.

---

[பூர்வம் பத்தாமத்தியாயத்தில் ஸ்ரீ பகவான் நாநாப்பிரகாரமான விபூதியை யருளிச்செய்து அதன் இறுதிக்கண், "இந்தப் பல்லுயிரனைத்துமெல்லா, வுலகமு மொடுங்கிநிற்ப தென்னிலோ ரிடத்தினுள்ளே" என்னும் இவ்வசனத்தால் பரமேசுரனுடைய சர்வ விசுவான்மகசொரூபத்தை அருளிச்செய்தனர்; அதனைக் கேட்டதனால் பரமமான சந்தோஷமடைந்தவனான அருச்சுனன் பரமேசுரனுடைய சர்வ விசுவான்மக சொரூப சாட்சாத்காரத்தின் இச்சை நண்ணினவனாய்ப் பூர்வமருளிச்செய்தபொருளை வியந்து ஸ்துதிக்கின்றான்.]

**சுருளார்கின்ற துழாய்முடியாய் சொல்லுமனமுந் தொடர்வரியா, யுருளார்சகட மிறவுதைத்தா யுயிர்கட்கெல்லா முள்ளுயிரோ, யிருளார்பவத்தே கிடந்துழைக்கு மென்பாலிரங்கி நீயிசைத்த, வருளாரமுதென் செவிகளா லாரப்பருகி யயர்வொழிந்தேன்.**

(இ-ள்.) சுருள் ஆர்கின்ற துழாய் முடியாய்=சுருளாகப்பொருந்தியிருக்கின்ற துளபமணிந்தமுடியையுடையவரே,—சொல்லும் மனமும் தொடர்வு அரியாய்=வாக்கும், மனமுஞ் சென்று பற்றுதற்கரியவரே,—உருள் ஆர் சகடம் இற உதைத்தாய் = உருளைதங்கிய சகடாசுரன் மரணமாகும்படி உதைத்தவரே, — உயிர்கட்கு எல்லாம் உள்ளுயிரோ=பிராணிகட்கெல்லாம் அந்தரான்மாவா யிருப்பவரே, — இருள் ஆர் பவத்தே கிடந்து உழைக்கும் என்பால் = சோகமோகங்கள் நிறைந்த சம்சாரசாகரத்தில் மூழ்கிக்கிடந்து வருந்தாநிற்கும்(தீனனான) என்னிடத்து—இரங்கி நீ இசைத்த=கருணைகூர்ந்து (சர்வக்ஞராகிய) நீர் அருளிச்செய்த—அருள் ஆர் அமுது=(உமது) திருவாக்காகிய அரிய வமுதை—என்செவிகளால்=எனது செவிகளாகிய வாய்களால்—ஆரப்

பருகி=நிறையப்புசித்து—அயர்வு ஒழிந்தேன்=(எனது) மோகம் நீங்கினேன்.—எ-று.

'ஆரமுது' என்பதில் ஆர், அருமை என்னும் பண்புச்சொல் ஈறுகெட்டு ஆதிநீண்டது. அருளாலுபதேசிக்கும் வாக்கியங்களை இங்கே, 'அருள்' என்றார். 'துழாய்முடியா, யருளார்சகட மிறவுதைத்தாய்' என்றது, சோபாதிகரூபம். "சொல்லுமனமுந் தொடர்வரியா, யுயிர்கட்கெல்லா முள்ளுயிரோ" என்றது, நிருபாதிகரூபம். "சாவதிலையாவர்களும்" என்றதுமுதல், ஆறுமத்தியாய முடியும்பரியந்தம் துவம்பதார்த்தநிரூபகமாயும், பரமமாயும், குய்யமாயும், அத்தியான்மமென்னும் பெயரையுடையனவாயுமுள்ள அற்புதமான உமதுவாக்கியங்களென்பான், 'அருளாரமுது' என்றான். பரமம் என்றது, நிரதிசயமோட்சரூபமானபுருஷார்த்தத்தில் * பரியவசானமுடைமையின். குய்யம் என்றது, சாஸ்திரநிஷேதகர்மத்திற் பிரவிர்த்திப்பவரும், சிரத்தையின்மையரும், விஷயாசக்தருமாகிய அனதிகாரிகட்கு உபதேசிக்கற்பாலதன்மையின். அத்தியான்மம் என்னும்பெயர், ஆன்மாநான்மாக்களின் விவேகத்தை விஷயமாகவுடைய சாஸ்திரத்திற்கென்றறிக. மோகம் என்றது, பீஷ்மதுரோணாதியரை யான் கொல்லாநிற்பேன், அவர் என்னைக் கொல்லாநிற்பர் என்பது முதலிய நாநாப்பிரகாரமான விபர்யயத்தை. (க)

[விசுவரூபதரிசனத்தில் இச்சைமேலிட்ட அருச்சுனன் ஸ்ரீ பகவானை வினவுதல்.]

தெரியாவகைநீ யெங்குமாய் நின்றவந்தத் திருக்கோல
மரியாய்மெய்யே யடியேற்குங் காணலாமோ வெனவன்பாற்
பரியாநின்ற சிந்தையொடும் பார்த்தன்வினவப் பழமறைதேர்
கரியானவனுக் கப்பரிசே காட்டவேண்டிக் கட்டுரைப்பான்.

(இ - ள்.) அரியாய்=(ஒருவராலும்)காண்டற்கரியபுருஷோத்தமரானபிரபுவே—தெரியா வகை = ஒருவருடைய திருஷ்டிக்குந்தோன்றாதபடி—நீ எங்கும் ஆய் நின்ற = நீர் எவ்விடத்தும் வியாபித்தவராய் (ஞானம், ஐசுவரியம், சக்தி, வீரியமுதலியவைகளோடுகூடி) நிற்கின்ற—அந்தத் திருக்கோலம்—(அற்புதமான) அந்த உமது திருவுருவம்—மெய்யே=உள்ளபடியே—அடியேற்கும் காணலாமோ என=(தரிசிக்கும் இச்சையுடைய) எனக்கும் தரிசிக்கக்கூடுமோ (கூடுமாயின், எனது திருஷ்டிக்கு விஷயமாகச் செய்தருளவேண்டும்) என்று—அன்பால் பரியாநின்ற சிந்தையொடும்=அன்பினால் வருந்தாநின்ற மனத்தோடும்

* பரியவசானம்=முடிவு.



—பார்த்தன் வினவ=அருச்சுனன் வினவ—பழமறைதேர் கரியான்=பழையவேதங்களால் ஆராயப்பட்ட (பரமகாருணிகரான) ஸ்ரீ பகவான்—அவனுக்கு=அவ்வருச்சுனனுக்கு—அப்பரிசே காட்ட வேண்டி=அவன் வினவினபடியே (தமது திருவுருவைத்) தரிசிப்பிக்கவிரும்பி—கட்டுரைப்பான்=அருளிச்செய்வாராயினர்.—எ-று.

அடியேற்கும் என்பதில், உம்மை இழிவுசிறப்பு. (உ)

[அத்தியந்தம் பக்தனான அருச்சுனனால் பிரார்த்திக்கப்பட்ட ஸ்ரீ பகவான் அவனுக்கு அதனைத் தரிசிப்பிக்கும் இச்சை நண்ணினவராய்க் கூறுகின்றார்.]

[வேறு.]

எண்ணி லியற்கைய தெண்ணி னிறத்தது
பண்ணி யொருத்தர் படைத்தறி யாதது
விண்ணி னியற்கை சுருங்க விரிந்தது
கண்ணி னளப்பரி தாயது காணாய்.

(இ-ள்.) எண்ணில் இயற்கையது=அபரிமிதமான நாநா அவயவ விசேஷங்களையுடையது,—எண்ணில் நிறத்தது=அபரிமிதமான நீலபீதாதிநாநாவர்ணங்களையுடையது,—பண்ணி ஒருத்தர் படைத்து அறியாதது=கற்பனைபண்ணி ஒருவர் சிருஷ்டித்தறியப்படாதது, (அற்புதமானதென்றபடி)—விண்ணின் இயற்கை சுருங்க விரிந்தது=ஆகாயத்தின் சுபாவமானது (தன்னைநோக்கச்) சுருங்கும்படி விரிந்தது,—கண்ணின் அளப்ப அரிது ஆயது=சர்மசட்சுவினால் அளவிடுதற்கரிதாகியது—காணாய்=(இப்படிப்பட்ட எனது திருவுருவை அருச்சுனா நீ) காண்பாய்.—எ-று. (ங)

[மேலைச்செய்யுளிற்செய்த பிரதிக்ஞையைப் பூரணமாக்கும்பொருட்டு ஸ்ரீபகவான் இதில் கிஞ்சின்மாத்திரம் அந்தத் தமதுசொரூபத்தை அருளிச்செய்கின்றார்.]

மருத்துவர் சூரிய ரட்ட வசுக்க
ளுருத்திர ரொன்னிடை யேயுளர் யாரு
மருத்திசெ யற்புத மாய வனேகங்
கருத்துற வென்னிடை யேயுள காணாய்.

(இ - ள்.) மருத்துவர்=நாற்பத்தொன்பது மருத்துவரும்,—சூரியர்=பன்னிரண்டுசூரியரும், — அட்டவசுக்கள்=எட்டுவசுக்களும்,—உருத்திரர்=பதினொரு ருத்திரரும், (அசுவினிகுமாரர் இருவரும்)—என்னிடையே உளர்=என்னிடத்தேயுள்ளார்.—யாரும் அருத்தி செய் அற்புதம் ஆய அனேகம்=(பூர்வங்காணாமையின்) யாவருங் காண ஆசைசெய்யும் அற்புதமாகிய அநேகவுருவங்களும், (ஜய * பராஜயங்

'சாயல்' சாய் கடைக்குறைவிகாரம். அப்படிப்பட்ட தமது உருவைத் தரிசிப்பித்தானென்பது தெஞ்சிநின்றது. (எ)

[பூர்வம் ஸ்ரீ பகவான் ஆக்ஞாபித்தபிரகாரம் அநுபவித்து அவ்வநுபவாநந்தத்தால் அநந்தரம் அவ்வருச்சுனன் செய்கையைச் சஞ்சயர் கூறுகின்றார்.]

அவ்வகைய மாயனமர் கோலமத னுள்ளே
யெவ்வகைய வாயபொரு ளியாவுமெதிர் காணு
வுய்வகைய னாயின னெனாவுவகை கூரச்
செய்வதறி யாவிசய னிவ்வகைசெய் தானால்.

**இ-ள்.** மாயன் அமர் = ஸ்ரீ பகவான் கொண்டருளிய—அவ்வகைய கோலமதனுள்ளே=முன்சொல்லிய தன்மைகளை யுடைத்தான விசுவரூபத்தின் ஏகதேசத்தினுள்ளே-எவ்வகைய ஆய பொருள் யாவும்=எப்படிப்பட்ட தன்மைகளையு முடையனவாகிய பொருள்களனைத்தையும்—எதிர் காணு=நேரே தரிசித்து—உய்வகையன் ஆயினன் எனா=(இனி யான்)பிழைக்குந் தன்மையனாயினேனென்று—உவகை கூர=(இவ்வாறான) இன்பமானது மேலிட—(அதனால்) செய்வது அறியா விசயன் = (தான்) செய்யாநிற்பதை யறியாத அருச்சுனன்—இவ்வகை செய்தான்=(இனிக் கூறாநிற்கும்) இவ்வாறான செய்கைகளைச் செய்தனன்.—எ-று. ஆல்-அசைநிலை. (அ)

[இதுவுமது.]

மண்ணுற வணங்குமயிர்க் குச்சுட னிறாக்கும்
கண்ணுமன முங்கரைய நின்றுகை முகிழ்த்தே
யெண்ணுமுல கங்களையு மியாவரையு மேனாட்
பண்ணுமவன் முன்புசில நின்றுபகர் வுற்றான்.

**இ-ள்.** மண் உற வணங்கும் = (தனது சிரசானது) பூமியிற் பொருந்தும்படி (விசுவரூபங்கொண்டருளிய நாராயணனென்னுந் தேவனை) நமஸ்கரிப்பன்,—மயிர்க்குச்சு உடல் நிறாக்கும்=புளகிதமுறுவன்—கண்ணும் மனமும் கரைய நின்று=கண்ணும், மனமும் உருகும்படி நின்று—கை முகிழ்த்தே=இருகரங்களையுங் குவித்து—எண்ணும் உலகங்களையும் யாவரையும் = கருதாநிற்கும் உலகங்களையும், அவ்வுலகங்களிலுள்ள சர்வப்பிராணிகளையும் — மேல் நாள் பண்ணுமவன் முன்பு நின்று=முன்னே சிருஷ்டிகாலத்திற் சிருஷ்டியாநிற்கும் ஸ்ரீ பகவான் சந்நிதியினின்று—சில பகர்வுற்றான்=சில (இவ்வசனங்களைச்) சொல்லலுற்றான்.—எ-று. (கூ)



[அருச்சுனன் ஸ்ரீ பகவானைக் குறித்துத் தன்னநுபவத்தை வெளிப்படையாகக் கூறுகின்றான்.]

[வேறு.]

தேவரும் வணங்குதேவ நின்றிருக் கோலத்துள்ளே
யாவரு மெல்லைகாணாப் பொருளெலா மிசையக்கண்டேன்
மூவரின் முதற்புத்தேளை முனிவர்க ளோடுங்கண்டேன்
மேவரு நாகங்கண்டேன் விண்ணவர் குழாமுங்கண்டேன்.

**இ-ள்.** தேவரும் வணங்கு தேவ = (யாவரானும் வணங்குதற்குரிய) கடவுளரும் வணங்காநிற்குங் கடவுளே—நின் திருக்கோலத்துள்ளே = உம்முடைய அழகிய விசுவரூபத்தினுள்ளே — யாவரும் எல்லை காணாப் பொருள் எலாம்=யாவரும் அளவுகாணாத ஸ்தாவர ஜங்கமரூபமான பொருள்களனைத்தையும்—இசையக் கண்டேன் = (உம்மால் கொடுக்கப்பட்ட திவ்வியசட்சுவினால் மனத்துக்குச்) சம்மதமாகும்படிகண்டேன்.—மூவரில் முதல் புத்தேளை = மும்மூர்த்திகளில் ஆதியான சதுர்முகப்பிரமாவை — முனிவர்களோடும் கண்டேன்= (வசிஷ்டாதி) முனிகணங்களோடுங் கண்டேன்.—மேவ அரும் நாகம் கண்டேன் = பொருந்துதற்கரிய (வாசுகிமுதலிய) சர்ப்பங்களையுங் கண்டேன். — விண்ணவர் குழாமும் கண்டேன்=(வசு, ருத்திரர், ஆதித்தியர்முதலிய) தேவர்கூட்டங்களையுங் கண்டேன்.—எ-று. (கo)

[மேலும் பகவானது விசுவரூபதேகத்தை அநேகாற்புத விசேஷணங்களுடையதாக வர்ணிக்கின்றான்.]

கண்களும் வயிறுந்தோளு முகங்களுங் கருதிநோக்கி
லெண்பல வுடையவாய வுருவுக ளனேகங்கண்டேன்
றண்கதிர் முடியுந்தண்டுஞ் சக்கரப் படையுமேந்தி
யொண்கதிர் கனலோடொன்றா யனையநின் னுருவினுள்ளே.

**இ - ள்.** தண் கதிர் முடியும்=தண்ணியகிரணத்தையுடைய மகுடமும், — தண்டும்=கதையும், — சக்கரப்படையும் = சக்கராயுதமும் —ஏந்தி=தரித்தருளி—ஒண் கதிர் கனலோடு=அழகிய சூரியன், அக்கினியென்னும் அவைகளோடும்—ஒன்று ஆய்=ஏகமாய்—அனைய நின் உருவினுள்ளே=அவைகளின் பிரபையையொப்பான (பிரபையையுடைய) உமது விசுவரூபத்தின்கண்ணே—கண்களும்=நேத்திரங்களும்,—வயிறும்=உதரங்களும்,—தோளும்=புயங்களும்,—முகங்களும் = வதனங்களும்—கருதி நோக்கில்=கருதிப்பார்க்கில்—எண்

பலவுடைய ஆய=அநேகமாகவுடையனவாகிய—உருவுகள் அனேகம் கண்டேன்=வடிவங்கள் அநேகங்களைக் கண்டேன்.—எ-று. (கக)

[புத்திமான்களாலுந் தர்க்கித்தற்கசக்கியமான உமது நிரதிசய ஐசுவரியதரிசனத்தால் உம்மை இவ்வாறு கருதுகின்றேனெனல்.]

[வேறு.]

**இந்தவுரு வென்னவுரு வென்றறியு கில்லே**
**னந்தமறி யேனடுவு மாதியு மனைத்து**
**நந்தலறி யாததனை நான்மறையு நாடித்**
**தந்தபொரு ளாயதனை மாயைதரு சார்பை.**

(இ-ள்.) இந்த உரு என்ன உரு என்று அறியுகில்லேன்=இந்தவுருவமானதுஎன்ன உருவமென்றுயான்நிச்சயித்திலேன். (இந்தவுருவமானது அப்பிரமேயமாகவுளதென்றபடி.)—அந்தமும் நடுவும் ஆதியும் அனைத்தும் அறியேன் = அந்தமும், மத்தியும், ஆதியும் (ஆகிய இவை) அனைத்தையும் அறியேன்.—நந்தல் அறியாததனை=நழுவுதலையறியாததை, (அட்சரமானபிரமத்தை யென்றபடி.) — நான்மறையும் நாடி=நான்கு வேதங்களும் ஆராய்ந்து—தந்த பொருளாயதனை=(நிச்சயித்து முமுட்சுக்களுக் கறியும்படி) உபதேசித்த (நிர்க்குணப்பிரமரூபமாகிய)வஸ்துவை, — மாயை தரு சார்பை=மாயையா லுண்டாக்கப்பட்ட(ஜகத்துக்கு) ஆசிரயமானதை, (அதிஷ்டானத்தை யென்றபடி.) —எ-று.

இது குளகம். ஜகத்துக்கு என்பதெஞ்சிநின்றது. (கஉ)

[இதுவுமது.]

**என்றுமுள தாயதை யியற்றரும மெல்லா**
**நின்றுபிற ழாவகை நிறுத்துநெறி வாழ்வைச்**
**சென்றுகுறை யாததனை யென்பழைய தேவைக்**
**கன்றுதொட ராப்பரிசு நின்றெனெதிர் கண்டேன்.**

(இ-ள்.) என்றும் உளதாயதை=நித்தியமாகியதை,—இயல் தருமம் எல்லாம்=சாசுவதமான தர்மமுழுவதும்—நின்று பிறழாவகை=தந்நிலையினின்றும் வேறுகாதபடி—நிறுத்தும் நெறி வாழ்வை=அவற்றைப் பாலனஞ்செய்யும் நெறியுடைய செல்வத்தை,—சென்றுகுறையாததனை=ஒருகாற் பெருகி ஒருகாற் குறையாததை,—என் பழைய தேவை=எனது அநாதியான தெய்வத்தை—கன்று தொடர் ஆ பரிசு



நின்று = கன்றைத்தொடரும் பசுவின் றன்மையாய்நிற்க—என் எதிர்கண்டேன்=என்னெதிரோ (திவ்வியசட்சுவினால்) தரிசித்தேன். —எ-று.

நின்று எ-து, நிற்க என்னும் செயவெனெச்சத்திரிபு. (கந)

[இதுவுமது]

**வலந்தரு திறத்தொடு வருங்கதி ரிரண்டே**
**யலர்ந்தெழ விழிப்பதை யடுங்கன னெருப்பை**
**மலர்ந்தெழு முகத்ததை மயங்கவுல கெங்குங்**
**கலந்துசுட லுற்றதை வியந்தெனெதிர் கண்டேன்.**

(இ-ள்.) வலம் தரு திறத்தொடு = வெற்றியைத் தருகின்ற திறமையோடும்—வரும் கதிர் இரண்டே=வருகின்ற சந்திராதித்தியரையே—அலர்ந்து எழ விழிப்பதை=விரிந்தெழும்படி நேத்திரங்களாக விழியாநிற்பதை,—அடும் கனல் நெருப்பை=சேர்ந்தாரைக் கொல்லும் உஷ்ணத்தையுடைய அக்கினியை,—மலர்ந்து எழும் முகத்ததை=விரிந்தெழும் முகமாகவுடையதை,—மயங்க உலகு எங்கும் கலந்து=மயங்கும்படி உலகையெங்கும்வியாபித்து—சுடலுற்றதை=தேஜசாற்றகிக்கின்ற உமது விசுவரூபத்தை — வியந்து = ஆச்சரியமுற்று—என் எதிர் கண்டேன்=என்னெதிரோ (உம்மால் கொடுக்கப்பட்ட திவ்வியசட்சுஸால்) தரிசித்தேன்.—எ-று. (கச)

[பகவானது விசுவரூபத்தின் சர்வத்திர வியாபகத் தன்மையைக் கூறுகின்றான்.]

**நிலத்தினொடு வானுற நிமிர்ந்துதிசை நேர்போய்**
**விலக்கமற நீயுனது மேனியை விரித்தா**
**லலக்கணடை யாதவர்க ளாரடைய வையா**
**கலக்கமுறு கின்றவுல கங்களிவை காணாய்.**

(இ-ள்.) நிலத்தினொடு வான் உற நிமிர்ந்து = பூமியோடுகூட ஆகாயமும் நிறையும்படி உயர்ந்து (பூமி, சுவர்க்கங்களின் மத்தியமான அந்தரிட்சலோகத்தை வியாபித்தென்றபடி.)—திசை நேர் போய்=திக்குகளில் நேரேசென்று—விலக்கம் அற = விலகுதலில்லாமல்—நீ உனது மேனியை விரித்தால்=நீர் உமது சொரூபத்தை விரியப்பண்ணினால் — அலக்கண் அடையாதவர்கள் ஆர் = (அற்புதமாயும், உக்கிரமாயுமுள்ள உமது திருமேனியைக்கண்டு) துன்பமடையாதவர்கள் யாவர்—உலகங்கள்—அடைய கலக்கம் உறுகின்ற = முற்றும்

அச்சமுறுகின்றன;—ஐயா இவை காணுய்=இவைகளை சுவாமி நீர் பார்ப்பீராக.—எ-று. (௩௰)

[பூபாரந் தீர்க்கவந்த தமது தன்மையை வெளிப்படையாகக் காட்டாநிற்கும் ஸ்ரீ பகவானைப்பார்த்து அருச்சுனன் கூறுகின்றான்.]

வணங்கவிமை யோர்களரு மாதவர் வழுத்தக்
கணங்சொடு வியந்துபுகழ் சித்தர்தொகை கண்டே
னுணங்குமுயிர்த் தானவர்கள் கந்தருவ ருள்ளோ
ரிணங்கியின ரென்றறிகி லாரையெதிர் கண்டேன்.

(இ-ள்.) இமையோர்கள் வணங்க=தேவகணங்கள் (பயத்தினுற் சரணடைந்து உம்மை) வணங்கவும்,—அரு மாதவர் வழுத்த=அருமையான பெரிய தவத்தினையுடைய நாரதாதிரிஷிகள் (கரங்கள்கூப்பி நின்று உலகுக்கிதமுண்டாகும்படி உம்மை) ஸ்துதிக்கவும்—கணங்கொடு = கூட்டமாகக் கூடிக்கொண்டு—வியந்து புகழ்=(உம்மை) வியந்து (ஜயஜயவென்று) புகழாநிற்கும்—சித்தர்தொகை கண்டேன்=கபிலர்முதலிய சித்தர் குழாங்களையுங் கண்டேன்.—உணங்கும் உயிர்த் தானவர்கள்=சோராநிற்கும் உயிரையுடைய (விரோசனன்முதலிய) அசுரகணங்களையும்,—கந்தருவருள்ளோர் = கந்தர்வர்களாயுள்ளவர்களையும்,—இணங்கி இனர் என்று அறிகிலாரை = (மேலும்) கிட்டி இத்தன்மையரென் றறியத்தகாதவர்களையும்—எதிர்கண்டேன்=எனதெதிரே (உமது திவ்வியமான விசுவரூபத்தில்) கண்டேன்.—எ-று.

[விசுவருபத்தினநுபவங்கூறி இப்போது அதன்கண் பயத்துக்கேதுவாயுள்ள தன்மையை வெளிப்படையாக அருச்சுனன் கூறுகின்றான்.]

வானடைய விம்மிவ ருணம்பல வுடைத்தாய்ப்
பேய்நடைய வாயபிறை போலெயிறு பேழ்வாய்
தானுடைய வாயபன் முகம்பல தழைக்கும்
யானடைய லாம்வகைய தன்றிவ்வுரு வெந்தாய்.

(இ-ள்.) எந்தாய்=எமது பிதாவாகிய பகவானே—வான் அடைய விம்மி=ஆகாசமுற்றும் வியாபித்து—பல வருணம் உடைத்தாய்=அநேகவர்ணங்களை யுடையதாய்—பேய் நடை அவாய=பேயினுெழுக்கத்தை அவாவிய (இச்சித்தவென்றபடி) — பிறைபோல் எயிறு = பிறைபோன்ற வக்கிரதந்தங்களையும்,—பேழ் வாய்=பெரிய வாய்களையும்—உடையஆய=உடையனவாகிய—பல்முகம்=பற்பல முகங்கள்—பல தழைக்கும் = பலவாக வளராநிற்கும்.—(ஆதலால்,) இவ்வுரு=



(உமது) இவ் விசுவரூபமானது—யான் அடையலாம் வகையது அன்று=யான் அடையலாகுந் தன்மையதன்று.—எ-று.

தான்-அசைநிலை. 'பேய்நடையவாய' எ-து, பயத்துக் கேதுவாகலின் என்க. (௩௭)

[என்னிடத்து நீர் பிரசந்நமாக வேண்டுமென்று ஸ்ரீ பகவானை அருச்சுனன் பிரார்த்திக்கின்றான்.

[வேறு.]

தஞ்சமிவ் வுலகுக்கெல்லா மாய்நின்ற தன்மைகண்டே
னஞ்சின னெனினுமற்றுன் னுருவுறக் காணக்காண
நெஞ்சமு நடுங்காநிற்க நிலையிலை திசையுங்காணே
னஞ்சலென் றருளவேண்டு மகிலமு மாயவெந்தாய்.

(இ-ள்.) அகிலமும் ஆய எந்தாய்=சர்வான்மாவாகிய ஸ்ரீ பகவானே—இவ்வுலகுக்கு=(ஸ்தாவரஜங்கமரூபமான) இவ்வுலகுக்கு—தஞ்சம்=ஆசிரயமாயும்,—எல்லாம் ஆய்=உலகமுழுதுமாயும்—நின்ற தன்மை கண்டேன்=(நீரே) நிற்குந்தன்மையை (யான் இப்போது) கண்டேன்;—உஞ்சினன் எனினும்=(இதனுல்) உய்ந்தனனாயினும்,—மற்று உன் உருவு உறக் காணக் காண=சதுர்புஜமூர்த்திக்குவேறான உமது இவ்விசுவரூபத்தைப்பொருந்தப் பார்க்கப்பார்க்க—நெஞ்சமும் நடுங்கா=(ஒன்றுக்கும் அஞ்சாத எனது) அந்தக்கரணமும் நடுங்கி—நிற்க நிலை இலை=(தேகேந்திரியாதிகளைத்தரித்து) நிற்கத் தைரியமுமுடையதாகவில்லை, — திசையும் காணேன் = திக்குகளையுங்கண்டிலேன்; — அஞ்சல் என்று அருளவேண்டும் = பயப்படாதேயென்று கிருபைசெய்தல்வேண்டும்.—எ-று. (௩௮)

[எனது ஜயத்தையும், துரியோதனுதிகளது பாராஜயத்தையும் யான் காண்கின்றேனென் றருச்சுனன் கூறுகின்றான்.]

நூற்றுவர் தாமுந்தங்கள் சேனையு மவர்கட்காக
வேற்றெதி ரரசர்தாமு மென்படை தாமுமுன்றன்
கூற்றுற ழெயிற்றிற்பட்டுக் குறையுட லாகிநின்று
காற்றுறு தீயினன்ன முகங்களில் வீழக்கண்டேன்.

(இ-ள்.) நூற்றுவர் தாமும்=(திருதராஷ்டிரருடைய புத்திரர்களாகிய) துரியோதனுதியரும்,—தங்கள் சேனையும்=அவர்களது சேனுசமூகங்களும்,—அவர்கட்கு ஆக எற்று எதிர் அரசர்தாமும்=அத்

துரியோதனாதியரின்பொருட்டு(யுத்தத்தை) மேற்கொண்டு(எங்களை) எதிர்த்துவந்துள்ள (சல்லியன்முதலிய) அரசர்களும்,—என் படைத்தாமும்=எனது சேனைகளாகிய (சிகண்டி, திருஷ்டத்துய்மன் முதலிய) அரசர்களும்—உன்றன் கூற்று உறழ் எயிற்றில் பட்டு=உமது நமனையொப்பான வக்கிரதந்தங்களிலகப்பட்டு—குறை உடல் ஆகி நின்று=பேதப்பட்டவுடல்களையுடையவர்களாய்நின்று—காற்று உறு தீயின் அன்ன = வாயுசம்பந்தித்த அக்கினியையொப்பான—முகங்களில் வீழக் கண்டேன்=உம்முடைய முகங்களிலே விழும்படி கண்டேன்.—எ-று. (௧௯)

[துரியோதனாதிகள் பகவானிடத்துப் பிரவேசவிஷயத்தில் திருஷ்டாந்தங் கூறுகின்றான் ]

**ஓதரு நதிகளெல்லாங் கடலடைந் தாற்போ லுன்னிற்**
**போதரு பொருள்களெல்லா நின்னுளே புகுதக் கண்டேன்**
**தீதனில் விட்டில்பாய்ந்தாற் போலநின் முகங்க ளுள்ளே**
**மாதவ வுயிர்களெல்லாம் வீழ்ந்துமாய் குனவுங் கண்டேன்.**

(இ-ள்.) ஓது அரும் நதிகள் எல்லாம்=(இவ்வளவென்று)சொல்லுதற்கரிய(கங்கை, யமுனைமுதலிய) நதிகளனைத்தும்—கடல் அடைந்தால்போல்=(சமுத்திரத்தினபிமுகமாய்ச்)சமுத்திரத்தின்கண்ணேயே (அபுத்திபூர்வகமாகப்) பிரவேசித்தாற்போல—உன்னில் போதருபொருள்கள் எல்லாம்=உன்னிடத்தினின்றுமுண்டான (சூரவீரர்களென்னுந் துரியோதனாதிகளான) பிராணிகள் முழுதும்—நின்னுளே புகுதக் கண்டேன் = (பரமேசுரரான) உம்முடைய (பிரகாசரூபமான) முகங்களில் (அபுத்திபூர்வகமாகப்) பிரவேசிக்கக்கண்டேன்.—[இனி, புத்திபூர்வகப்பிரவேசத்தில் திருஷ்டாந்தங் கூறுகின்றான்.] தீதனில்=(ஜொலியாநின்ற) அக்கினியில்—விட்டில் பாய்ந்தால்போல=(அத்தியந்தம் வேகமுடையனவாய்த் தமது நாசத்தின்பொருட்டுப்) பதங்கங்கள் பிரவேசித்தாற்போலவே—மாதவ=இலக்குமிக்குநாயகரான ஸ்ரீபகவானே—நின் முகங்களுள்ளே=(ஆதித்தமண்டலம்போற் பிரகாசமாயுள்ள) உம்முடைய முகங்களிலே—உயிர்கள் எல்லாம்=(துரியோதனாதிகளென்னும்) இப்பிராணிகள் முழுதும்—வீழ்ந்து மாய்குனவும் கண்டேன் = (அத்தியந்தம் வேகமுடையனவாய்த் தமது நாசத்தின் பொருட்டுப் புத்திபூர்வகமாகப்) பிரவேசித்து இறக்கின்ற செயல்களையுங் கண்டேன்.—எ-று. (௨௦)



[முற்செய்யுளில் ஸ்ரீபகவானுடைய முகங்களில் இராஜாக்களின் பிரவேசப்பிரகாரங்கூறி இப்போது அந்தப் பிரவேசகாலத்தில் ஸ்ரீபகவானது பிரவிர்த்திப்பிரகாரத்தைக் கூறுகின்றான்.]

**ஒளியினா லுலகமெல்லா மொழித்தவை யூண்போதாமல்**
**வெளியினா நீட்டிநீட்டி வெறுஞ்சுவை கொள்ளாநின்றாய்**
**தெளிகிலே னுன்னையுன்றன் செய்கையுந் தெரிக்கமாட்டே**
**னளியினா லடியேற்குன்னை யுள்ளவா றருளிச்செய்வாய்.**

(இ-ள்.) (சர்வத்திரவியாபக விசுவரூபமான பகவானே) ஒளியினால்=(அக்கினியைப்போலப்) பிரகாசமான (உம்முடைய) முகங்களால்—உலகம் எல்லாம் ஒழித்து=(அத்தியந்தம்வேகமாக முன்சொன்ன பிரகாரம் பிரவேசித்த துரியோதனாதிகளான) பிராணிகளனைத்தையும் உணவாக வுண்டழித்து—அவை ஊண் போதாமல்=அப்பிராணிகள் உணவுக்குப் பற்றாமல்-வெளியில் நா நீட்டி நீட்டி=வெளியிலே நாவை நீட்டி நீட்டி—வெறும் சுவை கொள்ளாநின்றாய் = வெறுஞ்சுவை கொள்கின்றீர்;—உன்னைத் தெளிகிலேன் = (இப்படிப்பட்ட உக்கிரரூபமான) உம்மை இத்தன்மையொன் றறிகிலேன்.—உன்றன் செய்கையும் தெரிக்கமாட்டேன்=உம்முடைய பிரவிர்த்தியும் (இன்னதென்று) அறியமாட்டாதவனாகிறேன். (தேவசிரேஷ்டரே உமக்கு நமஸ்காரம் நீர் யார்)—அளியினால் = கருணையினால்—அடியேற்கு=(உம்மைஅறிய விரும்பிய)அடியேனுக்கு—உன்னை=உம்மை—உள்ளவாறு அருளிச்செய்வாய்=உள்ளபடி அருளிச்செய்வீராக.—எ-று.

'தெரிக்கமாட்டேன்' எ-து, தன்வினையிற் பிறவினை. (௨௧)

[இவ்வாறருச்சுனனால் பிரார்த்திக்கப்பட்ட ஸ்ரீபகவான் தமது சொரூபத்தையும், தமது பிரவிர்த்தியையும் அருளிச்செய்கின்றார்.]

**என்றவன் வணங்கிக்கேட்ப யாவுமா யெல்லையின்றி**
**நின்றவ னுரைப்பானுன்னை யொழியநின் றவரையெல்லாங்**
**கொன்றுயிர் பருகலுற்றேன் கடையுகங் குறுகலுற்ற**
**வன்றுல கடையமாய்க்கு மவனியா னறிநீயையா.**

(இ-ள்.) என்று அவன் வணங்கிக் கேட்ப=(நீர் யார்? உமது பிரவிர்த்தி யாது) என்றருச்சுனன் நமஸ்கரித்துக் கேட்க — எல்லை இன்றி யாவும் ஆய் நின்றவன் உரைப்பான்=பரிச்சின்னமின்றி, எல்லாமாய் நிறைந்துநின்ற ஸ்ரீ பகவான் அருளிச்செய்வார்;—உன்னை ஒழிய நின்றவரை எல்லாம்=அருச்சுனனான உன்னைத்தவிர பூமிக்குப்

பாரமாய் நிற்கின்ற துரியோதனுதியரை யெல்லாம்—கொன்று உயிர் பருகல் உற்றேன்=சம்மரித்து அவர்களுயிரைப் புஜிக்கப்பிரவிர்த்தித்தேன்.—கடை யுகம் குறுகல் உற்ற அன்று=யுகாந்தமானது கிட்டியவப்போது—உலகு அடைய மாய்க்கும்=உலகமுழுதையுஞ் சம்மரிக்கும்—அவன் யான்=காலரூபமான பரமேசுரன் யானுகின்றேன்;—ஐயா நீ அறி=அருச்சுன (இவ்வாருன என்னையும், எனது பிரவிர்த்தியையும்) நீ அறிதி.—எ-று. (உஉ)

[எனது யுத்தரூப வியாபாரமன்றியே துரியோதனுதியர் உம்மால் இறந்திருக்க அடிக்கடி என்னை யுத்தத்தில் ஏன் பிரவிர்த்திப்பிக்கிறீரொன்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் கூறுகின்ருர்.]

[வேறு.]

இறந்தாரோ யெனக்கருதிங் கிவர்களெலா மென்னுலே
யறந்தானு மதுநீயே யாங்கவரைக் கொன்ருயேற்
சிறந்தாய வரசினையுஞ் செயத்தினில்வாழ் திருவினையும்
பிறந்தார்கள் பெருதபெரும் புகழினையும் பேணென்ருன்.

(இ-ள்.) (அருச்சுன) இங்கு இவர்கள் எலாம்=இங்கே உனது சத்துருக்களாகிய துரியோதனுதியர் யாவரும்—என்னுலே=(காலரூபமென்னும் பரமேசுரனுன) என்னுல்—இறந்தார் எனவே கருது=மாணமானவர்களென்றே எண்ணுதி: (நீயோ நிமித்தமாத்திரமாம்;)—அவரை=(இங்ஙனம் நிமித்தமாத்திரமாய்ப்) பீஷ்மதுரோணுதியரை—நீ கொன்ருயேல்=நீ கொன்ருயாகில்—அது அறமும்=அச்சத்துருஜயமானது (உனக்குத்) தர்மமும், (இராச்சியலாபமும், சாசுவதமான கீர்த்தியுமாம்.)—(ஆகலின்,) சிறந்தாய அரசினையும்=(சகல ஐசுவரியங்களாலும்) உயர்ந்திருப்பதாகிய இராச்சிய (லாப)த்தையும்,—செயத்தினில்வாழ் திருவினையும்=ஜயலட்சுமியையும்,—பிறந்தார்கள் பெருத பெரும் புகழினையும்=பூமியின்கண் ஜநித்தோர்களா லடைதற்கரிய பெருங்கீர்த்தியையும்—பேண் என்ருன்=அடையவிரும்பி (யுத்தத்தின்கண் முயற்சியுடை)யவனுவாய் என்றருளிச்செய்தனர் ஸ்ரீ பகவான்.—எ-று.

தான், ஏ, ஏ, ஆங்கு—அசைநிலைகள். முதல் ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. (உந)

[மேல்விருத்தாந்தம் என்னையோவென்னும் திருதராஷ்டிரருக்குச் சஞ்சயர் கூறுகின்ருர்.]



[வேறு.]

இவ்வகை மொழியக்கேட்ட விசயனென் செய்தானென்னிற்
கைதலை மிசையவாகக் கட்டுரை குழறக்கண்ணீர்
பையவே நெஞ்சிற்சோரப் பயத்தொடும் பரிவினேடு
மைவரை யெடுத்தவள்ளல் பெருமையை வழுத்தலுற்ருன்.

(இ-ள்.) இவ்வகை மொழியக்கேட்ட விசயன் = இந்தப்படி ஸ்ரீ பகவான் அருளிச்செய்ய அதனைக்கேட்ட அருச்சுனன்—என்செய்தான் என்னின் = (பின்) என்ன செய்தானென்று திருதராஷ்டிரரே நீர்கேட்கில்,—கை தலைமிசைய ஆக=கைகள் சிரசின்மீதாக—கட்டுரை குழற=வார்த்தையானது தழுதழுப்புற—கண்ணீர் பையவே நெஞ்சில் சோர=கண்ணீரானது மெல்லவே மார்பில் வீழ—பயத்தொடும் பரிவினேடும்=அச்சத்தோடும், அன்பினேடும்—மை வரை எடுத்த வள்ளல் பெருமையை = மேகஞ்சூழ்ந்த கோவர்த்தனகிரியை யெடுத்த ஸ்ரீ பகவானதுபெருமையை—வழுத்தல் உற்ருன்=ஸ்துதிக்கத் தொடங்கினன்.—எ-று. (உச)

[ஸ்ரீ பகவானை அருச்சுனன் ஸ்துதித்தல்.]

[வேறு.]

ஞானமுத லிந்தியங்க ளனைத்திற்கு நாயகனே
யூனவினைத் தளையறுப்பா யுன்னுடைய புகழ்கேட்கில்
வானவருஞ் சித்தர்களு மனங்களித்து மகிழ்வெய்தத்
தானவரு மரக்கர்களுஞ் சாய்துயரப் படுவர்களால்.

(இ-ள்.) ஞானம் முதல் இந்தியங்கள் அனைத்திற்கும் நாயகனே = ஞானேந்திரியமுதலிய சர்வேந்திரியங்களையும் நடத்துபவரோ,—ஊன வினைத் தளை அறுப்பாய்=ஊனமாகிய வினைவிலங்கை அறுப்பவரோ-உன்னுடைய புகழ் கேட்கில்=உம்முடைய கீர்த்தியைச் செவிகளால் கேட்கில்,—வானவரும் சித்தர்களும்=தேவரும், சித்தர்சமுகமும்—மனம் களித்து மகிழ்வு எய்த = மனமானது களித்துச் சந்தோஷிக்க—தானவரும் அரக்கர்களும்=அசுரரும், இராக்கதரும்—சாய் துயரப்படுவர்கள்—மரணதுக்கத்தை யடைவார்கள்.—எ-று.

ஆல் - அசைநிலை. (உரு)

[இதுவுமது.]

[வேறு.]

கையும்பதமுந் திருவாயுங் கண்ணுஞ்செய்ய கருமுகிலே
யையைம்பொருளு மறிவரியா யயனுர்தாயே யந்தமிலாய்

மெய்யும்பொய்யு மில்லாதா யெல்லாமாகி விரிந்தாயே
யுய்யும்பரிசு நினைந்தவர்க ளுன்னைவணங்கா தவருளரோ.

(இ - ள்.) கையும் பதமுந் திருவாயும் கண்ணும் = திருக்கரங்களும், திருப்பாதங்களும், திருவாயும், திருக்கண்களும்—செய்ய கரும் முகிலே = சிவந்திருக்கப்பட்ட கரியமேகமே,—ஐயைம் பொருளும் அறிவு அரியாய் = இருபத்தைந்துதத்துவங்களாலும் அறிதற்கரியவரோ,—அயனூர் தாயே = பிரமாவுக்குங் காரணமானவரோ,—அந்தம் இலாய் = தேச கால வஸ்துபரிச்சேதரகிதரோ,—மெய்யும் பொய்யும் இல்லாதாய்=சத்தும், அசத்துமாக இல்லாதவரோ,— எல்லாம் ஆகி விரிந்தாயே=சத்து, அசத்தென்னும் இவைமுழுதுமாய் விரிந்திருப்பவரோ—உய்யும் பரிசு நினைந்தவர்கள் = பிழைக்கும்படிக்குக்கருதினவர்களுள்ளே—உன்னை வணங்காதவர் உளரோ = (குருரூபமாகிய) உம்மை நமஸ்கரியாதவர்களுண்டா? (இல்லை.)—எ-று.

'மெய்' உண்டென்னும் விதிமுகப்பிரதீதிக்கு விஷயம். 'பொய்' இல்லையென்னும் நிஷேதமுகப்பிரதீதிக்கு விஷயம்; அல்லது, 'மெய் பொய்'=வியக்தம், அவ்வியக்தம். (உசு)

[இதுவுமது.]

ஆதிதேவ னுவாய்நீ யாக்கைக் கமைந்த வாருயிர்நீ
யேதுமறியப் படாதவனீ யெல்லாங் கடைக்காற் புகலிடநீ
யோதினுணர்கின் றுயுநீ யுணர்வா லுணரப் படும்பொருணீ
நீதியமனு யழிப்பாய்நீ நீருங் காற்று மாவாய்நீ.

(இ - ள்.) ஆதிதேவன் ஆவாய் நீ=(ஜகத்துற்பத்திக்கேதுவாவதால்) ஆதிதேவனுகின்றவர் நீரோ,—ஆக்கைக்கு அமைந்த ஆர் உயிர் நீ=சர்வசரீரங்களிலும் நிறைந்த அரியபுருஷரும் நீரோ,—ஏதும் அறியப்படாதவன் நீ=சிறிதும் (ஒருவரால்) அறியப்படாத புராணரும் நீரோ, (அநாதியும் நீரோ என்றபடி)—எல்லாம் கடைக்கால் புகல் இடம் நீ=பிரபஞ்சமெல்லாம் முடிவிற்புகுதும் லயஸ்தானமும்நீரோ,—ஓதின் உணர்கின்றுயும் நீ=இன்னுஞ்சொல்லில், சர்வக்ஞராய்ச் சர்வஜகத்தையும் அறிகின்றவரும் நீரோ,—உணர்வால் உணரப்படும் பொருள் நீ=அறிவால் அறியப்படுந்திருசியப் பிரபஞ்சமுழுதும் நீரோ; (இக்காரணத்தால் விஷ்ணுவின் பரமபதமும் நீரோ.)—[இனி ஸ்ரீ பகவானைச் சர்வதேவதாரூபமாகத் துதிக்கின்றுன்.] நீதி யமனுய் அழிப்பாய் நீ=நீதியுடைய யமனுய் (உலகை) அழிப்பவர் நீரோ,—நீரும் காற்றும் ஆவாய் நீ=வருணனும், வாயுவுமாகின்றவர் நீரோ—எ-று.



'காற்று' எ-து, சந்திரன், சூரியன் முதலியதேவதைகளின் உபலட்சணமாக நிற்றலின் சந்திரன், சூரியன்முதலிய சர்வதேவதாரூபமும் நீரோயென்பது பெறப்படுகின்றது. 'ஆதிதேவ னுவாய் நீ, யெல்லாங் கடைக்காற்புகலிட நீ' என்று கூறியவாற்றுல், பகவானே ஜகத்துக்கு உபாதானகாரண மென்றுயிற்று; எதனுலெனின்? மண்ணின்கட் குடமுதலியவைபோல எதனிடத்துச் சகத்துண்டாய், எதனிடத்தில் லயமாகிறதோ அஃதுபாதானகாரணமாகலின் என்க; இங்ஙனம், ஈசுரனை உபாதானகாரணமாகக்கூறி சாங்கியசாஸ்திரத்திற் கற்பித்துள்ள ஜடப்பிரதானரூபகாரணத்தை மறுப்பவனுய், 'ஓதினுணர்கின்றுயுநீ' என்னுமொழியால், ஈசுரனையே நிமித்தகாரணமாகவுங் கூறினன். ஜகத்தை ஈசுரனுக்கு அந்நியமாக அங்கீகரிக்கின், அத்வைதசித்தாந்தத்திற்கு அது பங்கமாமே யென்றுவருஞ் சங்கையைப் போக்கும் பொருட்டு, 'உணர்வாலுணரப்படும்பொருணீ' என்றுன். (உஎ)

[இதுவுமது.]

ஏயும்பரிசிவ் வுலகெல்லா மென்றும்பிறப்பித் திடுகின்ற
தாயும்பிதாவு மாவாய்நீ தந்தைதந்தை தாதையுநீ
யாயும்படியே யல்லாத வையாவுன்னை யடியேனென்
மாயும்பிறவித் துயர்தீர நூறுயிரக்கால் வணங்கினேன்.

(இ-ள்.) ஏயும் பரிசு=பொருந்தும்படிக்கு—இவ்வுலகு எல்லாம்=இவ்வுலகங்களை யெல்லாம்—என்றும் பிறப்பித்திடுகின்ற = எப்போதும் உண்டுபண்ணுகின்ற—தாயும் பிதாவும் ஆவாய் நீ=மாதாவும், பிதாவுமாகிய பிரஜாபதியாகின்றவர் நீரோ,—தந்தை தந்தை தாதையும் நீ=பிரபிதாமகரும் நீரோ;—ஆயும் படியே அல்லாத ஐயா=(யான்) ஆராயும்படியே(சர்வதேவதைகளுமாகவாகியும்,)ஆகாத ஸ்ரீ பகவானே-உன்னை=உம்மை—அடியேன் என் மாயும் பிறவித் துயர் தீர=நாயடியேன் என்னுடைய மாயாநிற்கும்பிறவித்துக்கங்கள் நீங்கும்பொருட்டு—நூறுயிரக்கால் வணங்கினேன் = அநேகமாயிரந்தரம் நமஸ்கரித்தேன்.—எ-று.

பிரஜாபதி எ-து, இரண்ணியகர்ப்பர் முதலாயினோரை. பிரபிதாமகர் எ-து, இரண்ணியகர்ப்பருக்கும் பிதாவாகிய காரணப்பிரமத்தை.

[இதுவுமது.]

என்பேரிடும்பை கெடும்வண்ண மின்னங்தொழுதே னெந்தாயுன், முன்பேதொழுதே னுன்னுடைய பின்பேமுறையால் வணங்கினனு, லன்பேயடியே னுருயிரோ யகலாவிந்தப் பெரும்

பிறவி, வன்பே கெடவுன் றனையெங்கு மறித்து மறித்தும்
வணங்கினனே.

(இ-ள்.) என்பேர்இடும்பை கெடும்வண்ணம்=எனது மகத்தாகிய சம்சாரதுக்கங்கள் கெடும்படிக்கு—இன்னம் தொழுதேன் = மேலும் நமஸ்கரித்தேன்.—எந்தாய்=எமது சுவாமீ—உன் முன்பே தொழுதேன் = உம்முடைய அக்கிரபாகத்திலும் நமஸ்கரித்தேன்,—உன்னுடைய பின்பே முறையால் வணங்கினன்=உமது பிருஷ்டபாகத்திலும் விதிப்படி நமஸ்கரித்தேன்.—அன்பே = (எனது) நேசமானவரே,—அடியேன் ஆர் உயிரே = எனதரிய ஆன்மாவே — அகலா= (ஞானமன்றி மற்றியாதொரு உபாயத்தாலும்) நீங்காத — இந்தப் பெரும்பிறவி வன்புகெட=இந்தப்பெருமையாகிய பிறவியினதுகடத்தற்கரிய வலிமையானது கெடும்பொருட்டு—உன்றனை = (சர்வான்மரூபமான) உம்மை—எங்கும்=சர்வதிக்குகளிலும்—மறித்தும் மறித்தும் வணங்கினன்=மீண்டும் மீண்டும் நமஸ்கரித்தேன்.—எ-று.

ஆல், ஏ-அசைநிலைகள்.

இவ்வாறு அநேகமுறை நமஸ்காரங்கூறினது சிரத்தாபத்திகளின் அதிசயத்தால் அதில் அலம்புத்தி பிறவாமையைச் சூசிப்பித்தது. சர்வான்மாவாகிய பகவானுக்கு முன்பின் திசைகளோ பரமார்த்தமாக வில்லையாயினும் அருச்சுனனால் அவை கற்பிக்கப்பட்டனவென்றறிக.

[அநந்த * வீர்யம், † அமிதவிக்கிரமமுடைய நீர் சர்வத்தையும் வியாபித்திருக்கின்றீர்; ஆதலால், சர்வசொரூபமுமாகின்றீர் என்னும் சO-ம் சுலோகத்தின் உத்தரார்த்தத்தை மொழிபெயர்த்த வாசிரியர் விரித்தும், சில கூட்டியும் நான்கு செய்யுட்களாற் கூறுகின்றார்.]

[வேறு.]

தேவதேவ நின்னில்வேறு தேவரேது செய்திடும்
பாவமே தறங்களேது பற்றியாது விடேது
சாவதேது வாழ்வதே தனைத்துமாய தன்மைநீ
யாவதேது மொன்றுநா னறிந்திலேனென் மாயனே. (௩௦)

* வீர்யம் = சரீரத்தின்வலி.

† அமிதவிக்கிரமம் = சஸ்திராதிப்பிரயோக குசலத்தன்மை.



[இதுவுமது.]

நீதிவேதம் வானுளோர் நிலத்துளோர் நினைந்துநைந்
தோதியோதி யுட்கசிந் துணர்ந்துமுன்னை முன்னமே
சாதிபேத மாகிவாழ் சராசரங்க ளுக்கெலா
மாதிமூல மென்றுநா னறிந்திலேனென் மாயனே. (௩௧)

[இதுவுமது.]

சாயைபோலும் வாழ்வுமாடு வீடுதந்தை தாயெனும்
பேயையேறி மாறியே பிறந்திறக்கு மீதெலாந்
தூயையாகி யாதுமோர் தொடக்கிலாது நின்றநின்
மாயையாவ தென்றுநா னறிந்திலேனென் மாயனே. (௩௨)

[இதுவுமது.]

ஏறுமல்லு வென்றுகுன் றெடுத்தவண்ண மெண்ணியே
கூறுமல்ல தீரவும்பர் கூறுகின்ற கொண்டலே
வேறுமல்லை யொன்றுமல்லை மெய்ம்மைகூறு மப்பொரு
ளாறுமல்லை யென்றுநா னறிந்திலேனென் மாயனே. (௩௩)

இந்நான்கு செய்யுளும் வெளிப்படை.

[பகவானது மகிமை யறியாமல் தான்செய்த அபராதங்களைச் சகிக்கவேண்டுமென் றருச்சுனன் பிரார்த்திக்கின்றான்.]

யாதவாவென் மைத்துன வடாவசோதை யின்னுயிர்க்
காதலாய காலியாய கண்ணகண்ண வென்றுநா
னோதலாவ தன்றியே யுரைத்ததீமை யாவையு
மாதகாத தென்றுநா னறிந்திலேனென் மாயனே.

(இ-ள்.) யாதவா = அடா யாதவா—என் மைத்துன = அடா என்னுடைய மைத்துன—அடா அசோதை இன் உயிர்க் காதல் ஆய காலி ஆய=அடா அசோதைக்கு இனிய வுயிர்போலும் பிரிய புத்திரனை பசுநிரைகளை மேய்க்கும் இடையா—கண்ண கண்ண என்று= அடாகிருஷ்ண அடாகிருஷ்ணவென்று—நான் = யான்—ஓதலாவது அன்றியே உரைத்த தீமை யாவையும் = சொல்லத்தக்கனவல்லாத இவ்வார்த்தைகளைச் சொன்னதுந்தவிர, மேலும் அநேகமாகச் சொல்லிய தீமையான வார்த்தைகளெல்லாம்—ஆ=ஐயோ—தகாததுஎன்று =சொல்லக்கூடாத வார்த்தைகளென்று—என் மாயனே நான் அறிந்திலேன்=எனது தெய்வமே (முன்னம்) யான் அறிந்திலேன்.—எ-று.

[இதுவுமது.]

[வேறு.]

என்னுடைய தோழனென வேகருதி யாது
முன்னுடைய மேன்மையினை யொன்றுமுணராதே
வன்மையினி னின்மொழி மறுத்தெதி ருரைத்த
புன்மொழிக ளானவை பொறுத்தருளு கண்டாய்.

(இ-ள்.) என்னுடைய தோழன் எனவே கருதி=என்னுடைய சிநேகனென்றும், (சமானவயதுடையவனென்றும், மாமன் மகனென்றும்) மதித்து—யாதும்=எவ்வாற்ருனும்—உன்னுடைய மேன்மையினை=(பரமேசுரரான) உமது ஐசுவரியரூபமான மகிமையை—ஒன்றும் உணராதே=சிறிதுமறியாமல்—வன்மையினில்=வலோற்காரத்தால்—நின்மொழிமறுத்து=உம்முடைய திருவார்த்தைகளைத் தடுத்து—எதிர் உரைத்த=எதிர்மறையாகக் கூறிய—புன்மொழிகளானவை=அநுசிதவார்த்தைகளான இவ்வபராதங்களை—பொறுத்தருளு=க்ஷமைசெய்தருளவேண்டும்.—எ-று.

ஏகாரம்-ஈற்றசை. கண்டாய்-முன்னிலை அசை. (௩௫)

[இதுவுமது.]

உண்ணல்விளை யாடுத லுறங்குத லிருத்தல்
பண்ணலுறு போதுகளி லுன்பழைமை தன்னை
யெண்ணியறி யாமையினில் வந்தபிழை யெல்லாங்
கண்ணகரு ணாகர பொறுத்தருளு கண்டாய்.

(இ-ள்.) உண்ணல்=புசித்தல்,—விளையாடுதல்=விநோதித்தல்,—உறங்குதல்=சையையில் நித்திரைசெய்தல்,—இருத்தல்=(சிம்மாசன முதலியவற்றில்) வீற்றிருத்தல்—பண்ணல் உறு போதுகளில்=இவைகளைச் செய்யலுற்ற காலங்களில் — உன் பழைமைதன்னை=உமது பழைமையான மகிமையை—எண்ணி அறியாமையினில்=நாடி யறியாமையினால்—வந்த பிழை எல்லாம்=(என்னாற்செய்து) வந்த அநுசிதவசனரூபமான அபராதங்களனைத்தையும்—கண்ண கருணாகர=கண்ண கருணாகரா—பொறுத்தருளு = க்ஷமைசெய்தருளவேண்டும்.—எ-று. கண்டாய்-முன்னிலையசை. (௩௬)

[பகவானது அசிந்தியப்பிரபாவத்தைக் கூறுகின்ருன்.]

[வேறு.]

உண்டாய வுலகனைத்து மீன்ருய்நீயே யெவராலுமுன்
னுண்மை யுணர்ந்துகூறிக், கொண்டாடப் படுவாய்நீ மெய்ம்



மைநல்கிக் குருவாகிக் குற்றங்க டீர்க்கின்ருய்நீ, யென்ருலு
மறையனைத்து முன்னின்மிக்கா ரில்லையென நின்றேது வெடு
த்துக்காட்டக், கண்டாலு நின்பெருமை காணமாட்டார் கண்
ணிலா தவர்வேறு காண்பதுண்டோ.

(இ-ள்.) உண்டாய உலகு அனைத்தும் ஈன்ருய் நீயே=(சர்க்காதியில்) உண்டாகிய சராசரரூபமான பிரபஞ்ச முழுவதையும் (பிதாவாய்) சிருஷ்டித்தவர் நீரே;—உன் உண்மை உணர்ந்து=(இப்படிப்பட்ட) உமது உண்மைரூபத்தை அறிந்து—எவராலும் கூறிக்கொண்டாடப்படுவாய் நீ=(உமது கிருபைபெற்ற) யாவராலும் (ஈசுரனெனப்) புகழ்ந்து துதிக்கப்படுகின்றவர் நீரே,—குரு ஆகி=குருவுருவாய்—மெய்ம்மை நல்கிக் குற்றங்கள் தீர்க்கின்ருய் நீ=உண்மையை உபதேசித்து (அஞ்ஞானமுதலிய)தோஷங்களைத் தவிர்க்கின்றவரும் நீரே—என்ருலும்=என்று பெரியோர் கூறினும்,—மறை அனைத்தும்=சுருதிகள் முழுதும்—உன்னின் மிக்கார் இல்லை என=உம்மினும் மிக்கோர் இல்லையென்று—நின்று=ஒரேமுகமாகநின்று—ஏது எடுத்துக் காட்டக் கண்டாலும்=ஏதுக்களை யெடுத்துப் பலமுறைகாட்ட (அவற்றைத்தாம்) காணினும்—நின்பெருமை=உமது அசிந்தியமகிமையை—காணமாட்டார்=(உமது கிருபைபெருதவர்உள்ளபடி) அறியார்கள்;—கண்ணிலாதவர் = அந்தகராயினேர்—வேறு காண்பது உண்டோ=வேருேர் உருவங்களைக் காண்பதுண்டா? (அதுபோலும்.) — எ-று. ஏகாரம்-தேற்றப்பொருளது. (௩௭)

[க்ஷமைசெய்யவேண்டுமென்னும் பிரார்த்தனையை முடித்து வேருென்றை அருச்சுனன் வினவத் தொடங்கல்.]

அறியாத பருவத்து மகன்செய்குற்ற மருந்தாதை பொறு
த்தெனவு மாவிபோலப், பிறியாத தோழன்செய் குற்றநட்
பிற் பெரியோர்கள் பொறுத்தெனவும் பேதையேனுய்க், குறி
யாது செய்துவருங் குற்றமெல்லாங் குணமாகக் கொண்ட
ருள வேண்டுமென்றே, வெறியாரு மலர்ப்பதங்க ளிடையே
வீழ்ந்து வேண்டிக்கொண் டவையின்னும் விளம்பலுற்ருன்.

(இ-ள்.) அறியாத பருவத்து=விவரமறியாத பால்ய பருவத்தினையுடைய—மகன்செய் குற்றம்=புத்திரன் செய்யும் அபராதத்தை—அரும்தாதை பொறுத்தெனவும் = அரியபிதாவானவன் பொறுத்தாற்போலவும்,—ஆவிபோலப் பிறியாத தோழன் செய் குற்றம்=பிராண

னைப்போல நீங்காத பிரியமுடைய சிநேகன்செய்யும் அபராதத்தை—நட்பில் பெரியோர்கள் பொறுத்தெனவும்=சிநேகத்தில் மிக்கோர்கள் பொறுத்தாற்போலவும்—பேதையேனாய் = அஞ்ஞனாய் — குறியாது செய்து வரும் குற்றம் எல்லாம்=(உம்மை) மதியாமற் செய்துவந்த அபராதமுழுதும்—குணம் ஆகக் கொண்டருள வேண்டும் என்று=நிரபராதமாகக்கொள்ளல்வேண்டுமென்று—வெறி ஆரும் மலர்ப்பதங்களிடையே வீழ்ந்து = வாசனைதங்குந் தாமரைமலரையொப்பான திருவடிகளில் வீழ்ந்து—வேண்டிக்கொண்டு= இரந்துகொண்டு — இவை இன்னும் விளம்பல் உற்றான் = இவைகளை மேலுஞ் சொல்லத்தொடங்கினன்.—எ-று. ஏ-ஈற்றசை. (ரு௮)

[அருச்சுனன் இவ்வாறு தனது அபராதத்தை க்ஷமைசெய்தருளவேண்டுமென்று பிரார்த்தித்துப் பூர்வரூபந் தரிசிப்பித் தருளவேண்டுமென்று ஸ்ரீ பகவானைப் பிரார்த்திக்கின்றான்.]

[வேறு.]

பண்டு கண்டறி யாப்பழங் கோலத்தைக்
கண்டு நெஞ்சங் கலங்கிக் களிக்குமாற்
றண்டு நீண்முடி சங்கொடு சக்கரங்
கொண்ட கோலத்தை யேகொண் டருளுவாய்.

(இ-ள்.) பண்டு கண்டறியாப் பழம் கோலத்தை=முன்னே ஒருகாலுந் தரிசியாத பழைய விசுவரூபத்தை—கண்டு = (இப்போது) தரிசித்து—நெஞ்சம்=(எனது) மனமானது—கலங்கிக் களிக்கும் = (கேவலஞ் சந்தோஷியாமல்) பயத்தால் வியாகுலமுற்றுச் சந்தோஷிக்கின்றது; (ஆதலால்,என்மேல் பிரசாதஞ்செய்து)—தண்டு நீள்முடி= தண்டமும், நீண்டமுடியும்,—சங்கொடு சக்கரம்=சங்கும்,சக்கரமும்—கொண்ட கோலத்தையே கொண்டருளுவாய்=தரித்த சதுர்புஜரூபத்தையே கொண்டருளக்கடவாய்.—எ-று. ஆல் - அசைநிலை. (ரு௯)

[இவ்வாறு அருச்சுனனால் பிரார்த்திக்கப்பட்ட பகவான் பயத்தால் பீடையுற்ற அவ்வருச்சுனனைச் சமாதானப்படுத்துபவராய்க் கூறுகின்றார்.]

[வேறு.]

என்றவ னுரைத்திட லு மெவ்வுருவு மொன்றாய்
நின்றவ னுரைத்தருளு வானிறை யொளித்தாய்
முன்றரு முதற்பொருளு மாய்முழுது மாய
வென்றனுரு வத்தினைமுன் யாவரறி கிற்பார்.



(இ - ள்.) என்று அவன் உரைத்திடலும் = என்றருச்சுனன் பிரார்த்தித்தலும்—எவ்வுருவும் ஒன்று ஆய் நின்றவன் = எவ்வகைப்பட்ட உருவங்களும் ஒருருவமாய்நின்ற ஸ்ரீ பகவான்—உரைத்தருளுவான் = கூறுகின்றார். — நிறை ஒளித்தாய் = பூரணமான ஒளியையுடையதாய் — முன் தரும் முதல் பொருளும் ஆய் = (சிருஷ்டியின்) ஆதியில் (சகலஜகத்தையும்)உண்டாக்காநிற்குங் காரணவஸ்துவுமாய்—முழுதும் ஆய=முழுதுமாகிய—என்தன் உருவத்தினை=(பரமேசுரனை) எனது விசுவரூபத்தை—முன்யாவர் அறிகிற்பார்=முன்னே யாவரறிகிற்பர்; (உன்னினும் அந்நியரொருவரும்அறிந்திலர்.)—எ-று.

'முதற்பொருள்' என்றதால், ஆதியந்தரகிதமென்பது பெறப்படுகின்றது. (௬௦)

[இப்போது தமது விசுவரூபத்தின் அரியதன்மையை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

வேதநெறி யாலுமிகு வேள்விகளி னாலு
மாதவ மதாலுமகிழ் தானவகை யாலுங்
காதலர்கள் காணமுடி யாவடிவு கண்டா
யேதமறி யாவெனது யோகவலி யாலே.

(இ-ள்.) (அருச்சுனா இம்மநுடவுலகில்) வேத நெறியாலும்= வேதாத்தியயனத்தாலும்,—மிகு=மிக்க– வேள்விகளினாலும்= (பூர்வமீமாஞ்சை, கல்பசூத்திரமுதலியவற்றால் வேதங்களிற் சொல்லிய கர்மரூபமான) யாகங்களின் (அர்த்தவிசாரரூபமென்னும்) அத்தியயனத்தினாலும், — மாதவமதாலும் = (கிருச்சிரசாந்திராயணாதிகளென்னும்) உக்கிரமானதவசுகளாலும்,—மகிழ் தானவகையாலும்= பிராணிகள்) சந்தோஷித்தற்குக்காரணமான தானவிதங்களாலும் — காதலர்கள்= (தரிசிக்க) ஆசையுடையவர்களால்—காண முடியா= தரிசிக்கக்கூடாத—வடிவு=(துர்லபமான) இவ்விசுவரூபத்தை - ஏதம் அறியா=தோஷங்களிலொன்றையும்அறியாத—எனதுயோகவலியாலே=எனதுயோகமாயையின் சாமர்த்தியத்தால்—கண்டாய்=(கிருபையினால் யான் தரிசிப்பிக்க நீ) தரிசித்தாய்.- எ-று.

தானம்=துலாபுருஷதானம், கன்னியாதானம், பசு, சுவர்னம், அந்நதானமுதலியவை. (௬க)

[திருதராஷ்டிரருக்குச் சஞ்சயர் கூறுகின்றார்]

இப்பரி சுரைத்தருளி யீரிருகை யேயா
யப்பழைய கோலமது வாயருளி யங்கே

மெய்ப்பய மகற்றிவிச யற்கிசைய வேறே
யொப்பவரின் மிக்கவரி லாதவ னுரைப்பான்.

(இ-ள்.) (திருதராஷ்டிரனே) இப்பரிசு உரைத்தருளி=(வாசுதேவனை ஸ்ரீ கிருஷ்ணபகவான்) இவ்வாறு (அருச்சுனனுக்கு) அருளிச்செய்து—ஈர் இருகையே ஆய்=(சங்கு, சக்கரம், கதை, பத்மம் இவைகளைத்தரித்திருக்குஞ்) சதுர்புஜ(ம், கிரீடம், மகராகாரகுண்டலம், ஸ்ரீவத்ஸம் கௌஸ்துபம், வனமாலை, பீதாம்பரமுதலியவற்றாற் சோபாயமான)மாகிய — அப்பழைய கோலமதுவாயருளி = அந்தப்பூர்வரூபங்கொண்டருளி—அங்கே—மெய்ப்பயம் அகற்றி=(கோரமான விசுவரூபதரிசனத்தாலுண்டாகிய) சரீரவச்சத்தையொழிவித்து—விசயற்கு=அருச்சுனனுக்கு—இசைய=சம்மதமாக — வேறே=(தனக்கு) வேறே—ஒப்பவர் இல் மிக்கவர் இலாதவன் உரைப்பான்=சமானமானவரும், அதிகமானவருமில்லாத ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.—எ-று. (௫௨)

[அருச்சுனனிடத்துச் செய்த விசுவரூபதரிசனரூப அநுக்கிரகத்தின் அரியதன்மையை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்]

[வேறு.]

கண்டவ ரில்லைநீமுன் கண்டவிக் கோலங்காண
வண்டரும் விரும்பாநின்றா ராதலா லன்புகூருந்
தொண்டரு மாகியென்னை யன்றியோர் தொடக்கிலாமை
கொண்டவ ரடைவரென்றான் கோகுல மேய்த்தகோமான்.

(இ-ள்.) நீ முன் கண்ட இக்கோலம்=அருச்சுனா நீ முன்னே தரிசித்த (என்னுடைய) விசுவரூபத்தை—கண்டவர் இல்லை=(வேதாத்தியயனம், தவசு, தானம், கர்மம் இவைகளால்) தரிசித்தவர்களாக முன்னேயும் ஒருவரில்லை: (இனிமேலும் ஒருவருளராகார்;)—காண=(இங்ஙனம் அரிய எனது விசுவரூபத்தைத்) தரிசித்தற்கு—அண்டரும் விரும்பாநின்றார் = இந்திராதிதேவர்களும் இச்சைசெய்யாநின்றனர்.—(வேதாத்தியயனமுதலியவற்றால் விசுவரூபமுடைய நீர் காண்டற்கரியராயின், மற்றெவ்வுபாயத்தால் காண்டற்கெளியராவீரோவெனின்? நிரதிசயப்பிரீதிரூபமான அநந்நியபக்தியினாலேயே காண்டற்கும், வாஸ்தவரூபமாகச் சாட்சாத்கரித்தற்கும், அபேதரூபமாகவடைதற்கும் உரியனாவேனென்பது எஞ்சிநின்றது.)—[இனி, ஸ்ரீ பகவான் கீதாசாஸ்திரத்தின் சாரபூதமான அர்த்தங்கள் முழுவதுந் தொகுத்துக்



கூறுகின்றார்.] ஆதலால்=ஆதலின்,—அன்பு கூரும் தொண்டரும் ஆகி=(என்னிடத்) தன்புமிக்கபக்தருமாய்—என்னை அன்றி=(பரமேசுரனான) என்னையல்லாமல்—ஓர் தொடக்கு இலாமை=யாதொரு சம்பந்தமுமில்லாததன்மையை—கொண்டவர்=பொருந்தின அதிகாரிபுருஷர்—அடைவர் என்றான்=(பரமேசுரனான என்னை அபேதமாக) அடையாநிற்பரென் றருளிச்செய்தனர்—கோ குலம் மேய்த்த கோமான்=பசுவினம்மேய்த்த ஸ்ரீ பகவான்.—எ-று.

பரமேசுரனான எனது சந்தோஷத்தின்பொருட்டே சகலகர்மங்களைச்செய்பவரும், பரமேசுரனே அடையத்தக்க சொரூபன், சுவர்க்காதிகளல்லவென்னும் நிச்சயமுடையோரும், ஸ்திரீ, புத்திர, தனம், மனைமுதலிய அநான்ம பதார்த்தங்களின் இச்சையொழிந்தவரும், தனக்கபகாரம்பண்ணின பிராணிகளிடத்துத் துவேஷமின்மையரும் என்பார், 'என்னையன்றியோர் தொடக்கிலாமைகொண்டவர்' என்றார். ()

## கக-வது, விசுவரூபவத்தியாயம்

முற்றிற்று.

---

ஆக அத்தியாயம் கக-க்கு திருவிருத்தம்-௯௩௮.

---

## க௨-வது, பக்தியோகவத்தியாயம்.

---

[பூர்வம் பதினோராமத்தியாயத்தினீற்றில், "என்னையன்றியோர் தொடக்கிலாமை கொண்டவரடைவர்" என ஸ்ரீ பகவான் பொதுப்படவருளிச்செய்தமையின், "என்னை" என்னுமொழிக்குப்பொருள் ஸாகாரவஸ்துவோ? நிராகாரவஸ்துவோ என அருச்சுனனுக்குச் சந்தேகமுண்டாயிற்று; இங்ஙனம் சந்தேகமுண்டாதற்கு ஸ்ரீ பகவான் பூர்வம் அங்கங்கே ஸாகாரவஸ்து, நிராகாரவஸ்து இரண்டனையும் உபதேசித்திருப்பதேகாரணமாம்; இவ்வாறான இருவகை உபதேசங்களின் வியவஸ்தைகளும் அதிகாரிகளின் பேதத்தாலாமெனக் கொள்ளற்பாலனவாம் ஆதலால், முமுட்சுவாகியநான் நிராகாரவஸ்துவைச்சிந்திக்க யோக்கியனோ? ஸாகாரவஸ்துவைச் சிந்திக்க யோக்கியனோ? என்றிவ்வாறு தனது அதிகார நிச்சயத்தின்பொருட்டு ஸகுணவித்தை, நிர்க்குணவித்தைகளின் விசேஷத்தன்மையறிய இச்சை நண்ணினவனாய் அருச்சுனன் ஸ்ரீ பகவானை நோக்கி வினவுகின்றான்.]

**ஏயநா னெதிரேகண்ட வுருவமே யிசைகிற்பாரோ**
**தூயநான்மறைக்குமெட்டாப் பொருளேயேதொடர்கிற்பாரோ**
**தாயனுய் பெரியோரொன்று தனஞ்சயன் வினவத்தானே**
**ராயனுய் நிரைகண்மேய்க்கு மாயன்வே றருளிச்செய்வான்.**

(இ-ள்.) எய நான்எதிரேகண்ட=(மனத்துக்கு)இயையும்படியான் எதிரேதரிசித்த—உருவமே இசைகிற்பாரோ=(பரமேசுரரான உமது) ஸாகாரத்தையே (நிரந்தரஞ்) சிந்தியாநிற்பவரோ?—தூய நான்மறைக்கும்=சுத்தமான நான்குவேதங்கட்கும் — எட்டா=விஷயமாகாத—பொருளேயே தொடர்கிற்பாரோ=(*அட்சரமென்னும்) நிர்க்குணப் பிரமமாகிய உம்மையே நிரந்தரஞ் சிந்தியாநிற்பவரோ—தாய் அனுய்=தாயையொப்பான ஸ்ரீ பகவானே—பெரியோர் என்று = (யோகமறிந்த) பெரியோராவாரொன்று — தனஞ்சயன் வினவ = அருச்சுனன் வினவ—தான் ஓர் ஆயனுய் = தான் ஒரு நந்தனந்தனனுய்—நிரைகள் மேய்க்கும் மாயன் = பசுநிரைகளை மேய்க்கும் ஸ்ரீ பகவான் —வேறு அருளிச்செய்வான் = அவ்விருவருடைய பேதங்களை அருளிச்செய்கின்றனர்.—எ-று.

அருச்சுனன் வினவின்ருற்பரியம்; என்னல் கொள்ளற்பாலது ஸகுணபிரமமறிந்தவர்களுடைய ஞானமோ? அல்லது, நிர்க்குண பிரமமறிந்தவர்களுடைய ஞானமோ என்பது. (க)

[சர்வக்ஞராகிய ஸ்ரீ பகவான் ஸகுணவித்தையின்கண்ணேயே அருச்சுனனுக் கதிகாரமிருப்பதை யறிந்து அவனுக்கு அதில் பிரீதியுண்டாக்குவித்தற்பொருட்டு ஸாகாரபிரமவித்தையை ஸ்துதிப்பவராய் அதுவே சிரேஷ்டமாமென்று உத்தரமருளிச்செய்கின்ருர்.]

**மன்னநீ காணநான்முன் காட்டிய வடிவைநெஞ்சா**
**லுன்னல்வாய் மொழியினுலே யுரைத்தல்செய் பவர்களெல்லா**
**மென்னலாற் பிறிதொன்றெய்தா ரியாரினு நல்லரிங்குச்**
**சொன்னவ ரன்றிமற்றை யவர்கடந் துறையுங்கேளாய்.**

(இ-ள்.) மன்ன நீ காண=அருச்சுனு நீ தரிசிக்கும்படி — நான் முன் காட்டிய வடிவை = (பரமேசுரனுன) யான் முன்னே (உனக்குத்) தரிசிப்பித்த (ஸாகாரமான எனது) விசுவரூபத்தை—நெஞ்சால் உன்னல்=(ஏகாக்கிரத்தோடும், சாத்துவிக சிரத்தையோடுங்கூடி) மனத்தினுற் சிந்தித்தலும்,—வாய் மொழியினுல் உரைத்தல்=வாக்கினுல் ஸ்துதித்தலும்—செய்பவர்கள் எல்லாம்=செய்யாநிற்பவர், யாவரும்—

* அட்சரம்=நாசமில்லாதது.



என்னலால் பிறிதொன்று எய்தார் = (பரமேசுரனுன) என்னையே யடைவரல்லாமல் பிறிதொன்றினை யடையார்:—யாரினும் நல்லர் = சர்வயோகிகளினுஞ் சிரேஷ்டரொன்று (எனக்கபிமதம்;) — இங்குச் சொன்னவர் அன்றி=இங்கே சொல்லிய ஸகுணேபாசகரல்லாமல்—மற்றையவர்கள் தம் துறையும் கேளாய்=நிர்க்குணேபாசகர்களின் நெறியையுங் கேட்பாய்.—எ-று. (உ)

[அக்ஷரதத்துவத்தின் இலக்கணங்கூறி அதனை அடைந்தோரைத் துதிக்கின்ருர்.]

**உரைசெயற் கரிதாய்நெஞ்சி னுணர்விடப் படாதாயெங்கும்**
**புரையறக் கலந்துபோக்கு வரவின்றிப் பொலிந்ததொன்றைக்**
**கரைசெயற் கரியவாய புலன்களைக் கடந்துகாண்பா**
**னரசமற் றியானேயென்னி னன்னிய மென்னலாமோ.**

(இ-ள்.) உரைசெயற்கு அரிது ஆய் = (யாதாமொரு சப்தத்தினுலும்) வசனித்தற் கசக்கியமாய்,—நெஞ்சின் உணர்விடப்படாதாய்= மனத்தினுல் (விஷயமாக) அறியப்படாததாய்,—எங்கும் புரை அறக் கலந்து=எங்கும் நிரந்தரமாக வியாபித்து—போக்கு வரவு இன்றி = சலனரூப விகாரரகிதமாய்,—பொலிந்ததொன்றை = (கூடஸ்தமாய், துருவமாய்ச்) சிறந்த நிர்க்குணபிரமரூபமான அட்சரத்தை — கரை செயற்கு அரிய ஆய=(யாவரானும்) நிக்கிரகித்தற் கசக்கியமாகிய—புலன்களை =சுரோத்திராதி இந்திரிய சமுகங்களை—கடந்து=(தத்தம் சப்தாதி விஷயங்களினின்றும்) நிவிர்த்திசெய்து—காண்பான் =(சமுசயமின்றித் தனதான்மரூபமாக) அறியாநிற்பவன்—அரச = அருச்சுனு—யானே = (பிரமரூபமாகிய) நானே; — என்னின் அன்னியம் என்னலாமோ = (அவனை) என்னினும் வேறென்று சொல்லக்கூடுமோ? (கூடாது.)—எ-று. மற்று—அசைநிலை.

'அரச' எ-து, விளி. "காண்பானியானே" எனவொட்டுக. கூடம் எ-து. மாயாப்பிரபஞ்சம்; அதில் அதிஷ்டானமாக விருப்பதால் கூடஸ்தம். துருவம்=நித்தியம். 'உரைசெயற்கரிதாய்' எ-து, சப்தத்தின் சக்திவிருத்திக்கு விஷயமல்லாமையினுனும், 'நெஞ்சினுணர்விடப்படாதாய்' எ-து, சமதமாதி சாதனரகித விட்சிப்தமனத்திற்கு விஷயமாகாமையினுனும் என்க. இங்கே, 'புரையறக்கலந்து' என்ருற்போல, "நிலன்விண்கால்கிரி திசையெலாமேவியு நெடுஞ்சிலை புரையாகா" என்று வாசிட்டத்துங் கூறியிருப்பது காண்க. (ங)

[பகவானே நிர்க்குணோபாசகர், 'யானே யென்னினன்னியமென்னலாமோ' என்று கூறிடில் ஸகுணோபாசகரை, 'யாரினுநல்லர்' என்று முற்கூறிய உமது கூற்றுப் பொருந்துமா றெங்ஙனமென்னும் அருச்சுனன் சங்கையை நிவாரணஞ் செய்பவராய் ஸ்ரீ பகவான் கூறுகின்றார்.]

**காரண மிறந்தொன்றிற்குங் காட்சியிற் படாததொன்றைச்**
**சேர்பவர் வருத்தம்வேறு செப்பிட லாவதன்று**
**லோர்வரி திதுதான்வாழு முயிர்களா லாவதொன்றே**
**வாரவர் பெருமைதன்னை யளவறுப் பவர்களையா.**

(இ-ள்.) காரணம் இறந்து=(தனக்கு) ஒருகாரணமில்லாமல்—ஒன்றிற்கும் காட்சியில் படாததொன்றை=(அந்தரிந்திரிய, பகிரிந்திரியங்களுள்) ஓர் இந்திரியத்திற்கும் (தனதறிவில்) விஷயமாக வகப்படாததான நிர்விசேஷ அட்சரதத்துவத்தை—சேர்பவர் வருத்தம்=அடையாநிற்பவருடைய கிலேசமானது — வேறு செப்பிடலாவது அன்று=வேறொரு கிலேசங்களோடு சேர்த்துச் சொல்லலாவதன்று: (பின்னையோ அதிகதரகிலேசமாம்.)—ஓர்வு அரிது இதுதான்=(நேத்திராதி இந்திரியங்களினால்) அறிதற்கரிய பிரமவிஷயமான இந்நிட்டைதான்—வாழும் உயிர்களால் ஆவதொன்றே = (அகந்தை, மமதைரூப) தேகாபிமானமுடைய மநுடரால் (கிலேசமில்லாமல்) அடையலாவதொன்றோ? (அன்று.) — (அடைந்திடின்,) அவர் பெருமை தன்னை=அவரது மகிமையை—ஐயா=அருச்சுனா—அளவு அறுப்பவர்கள் ஆர்=வரையறுத்துக்கூறச் சமர்த்தர் யாவர் (ஒருவருமாகார்.)—எ-று.

ஸகுணோபாசகர்க்கும் சர்வவிஷயங்களினின்றுந் தமது மனத்தை நிவிர்த்திசெய்து சகுணப்பிரமத்திற் சேர்ப்பிப்பதுமுதலிய அதிகிலேசமோ வுண்டு; ஆயினும், நிர்க்குணோபாசகர்க்குப்போல அதிகதர கிலேசமில்லை; இக்காரணத்தினாலேயே ஸ்ரீ பகவான் ஸகுணோபாசகரை, 'யாரினுநல்லர்' என்றார். ஸகுணோபாசகர்க்கும், நிர்க்குணோபாசகர்க்கும் மோட்சரூபமாகிய பயன் ஒன்றேயாவதால் நிர்க்குணோபாசகரினும் ஸகுணோபாசகரிடத்திற் சிரேஷ்டத்வங் கூறுதல் கூடாது; அங்ஙனமாயினும், ஒரேபயனை அரியவுபாயத்தாலடையும் புருஷரை நோக்க எளிய வுபாயத்தாலடையும் புருஷர் சிரேஷ்டராமென்பது பகவானது அபிப்பிராயம். முன்னே ஒன்பதாமத்தியாயத்தின் மூன்றுவது செய்யுளில் ஞானம், "அரிதன்றியது" என்று கூறி இங்கே, 'காரணமிறந்தொன்றிற்குங் காட்சியிற்படாததொன்றைச், சேர்பவர்



வருத்தம்வேறு செப்பிடலாவதன்று' என்று கூறினது முன்னொடு பின் விரோதமாகின்றதேயெனின்? முன்னே, 'அரிதன்று' எ-து, விவேகாதி சர்வசாதனசம்பந்நரான நிஷ்காமாதிகாரிக்கு: இங்கே, 'அதிகதரகிலேசம்' எ-து, தேகாதிகளில் அகந்தை, மமதைரூப அபிமானமுடைய சகாமபுருஷர்க்கு; ஆதலால், முன்னொடுபின் விரோதமின்மை யறிக. (ச)

[எனது பக்தராயினோர் எனது கிருபையினாலே முன்சொன்ன கிலேசமின்றியே மோட்சரூபமாகிய பயனை யடையாநிற்பரென்று ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றனர்.]

**யாவர்கள் சிலவரெல்லா வினையுமென் கண்ணேவிட்டிட்**
**டியாவர்த மறிவென்பாலே யாக்குவா ரவர்கடம்மைச்**
**சாவது முதலாயுள்ள துயர்க்கட லின்றுந்தாங்கி**
**யாவர்க ளேனுங்காலஞ் சிறிதிலே யெடுக்கின்றேனன்.**

(இ-ள்.) யாவர்கள் சிலவர்=யாவர்சிலர்—எல்லாவினையும்=(நித்தியம், நைமித்திகம், சுவாபாவிகமுதலிய) சகலகர்மங்களையும்—என் கண்ணே விட்டிட்டு = (ஸகுணபரமேசுரனை) என்னிடத்தே அர்ப்பணஞ்செய்து—யாவர்—தம் அறிவு என்பாலே ஆக்குவார் = தமது சித்தத்தை (* அநந்நியரூபசமாதியோகத்தால்) என்னிடத்தே சஜாதிய விருத்திப்பிரவாக முடையதாகப் பண்ணுவரோ—அவர்கள் தம்மை=(ஸகுணபிரமத்தின் சிந்தனையுடைய) அந்தப்புருஷரை—சாவதுமுதல் ஆய் உள்ள துயர்க்கடல் நின்றும் தாங்கி=மரணமாதியாயுள்ள துக்க சமுத்திரத்தினின்றுந்தாங்கி—காலம் சிறிதிலே=சிறிதுகாலத்தினுள்ளே—யாவர்களேனும்=யாவர்களாயினும் — நான் எடுக்கின்றேன்=(பரமேசுரனை) நான் உத்தாரம்பண்ணுகின்றேன்.—எ-று.

உம்மை இழிவுசிறப்பு. 'என்கண்ணே, என்பாலே' என்னும் இரண்டிடத்தும் 'என்' என்னுமொழிக்குப் பகவான் வாசுதேவன் அல்லது, நரசிம்ம, இராகவ, வாமனாதிரூப பரமேசுரன் அல்லது, பூர்வந் தரிசிப்பித்த விசுவரூப பரமேசுரன் எனப்பொருள்கொள்க. (ரு)

[இவ்வாறு சகுணப்பிரமோபாசனையைத்துதித்து அச்சகுணப்பிரமோபாசனையை இப்போது விதிக்கின்றார்.]

---

* அநந்நியம்=பகவான்வாசுதேவனையன்றி அந்நியத்திற்பற்றின்மை. அநந்நியசமாதிரூபயோகத்தைச் சாஸ்திரங்களில் ஏகாந்தபக்தியோகமென்பர்.

[வேறு.]

**மெய்யுறவுன்னை யென்னிலேவைத்தா லென்னில்வே றின்றியொன்றுதற், கையுறவில்லை யதுசெயமுடியா தாயினப் பியாசமே பயில்வாய், பொய்யறவதுவும் புரிகிலாயெனினுன் வினைகளென் பொருட்டினாற்புரிவாய், செய்யுமவ்வினைக ளப் படிச்செயாயேல் வினைப்பயன் றவிரவேசெய்வாய்.**

(இ - ள்.) மெய் உற = உண்மையாக (அந்நியமான சப்தாதிவிஷயங்களில் வையாமலென்றபடி.)—உன்னை = உனதுசங்கற்பவிகற்பான்மகமனத்தையும், நிச்சயான்மகபுத்தியையும்—என்னிலே வைத்தால் = (சகுணப்பிரமமான) என்னிடத்தேவைக்கில்—என்னில் வேறு இன்றி ஒன்றுதற்கு = (எனது கிருபையினால் தேகாந்தத்தில் ஆன்மஞானமடைந்து நிர்க்குணசுத்தப்பிரமமான) என்னில்வேறில்லாமல் அபேதரூபமாகநிவாசம்பண்ணுதற்கு—ஐயுறவு இல்லை = கிஞ்சின்மாத்திரமுஞ் சமுசயமில்லை.—[இப்போது கூறியபடி ஸகுணோபாசனையில் அசக்தபுருஷனுக்குச்சுகமவுபாயங்களருளிச்செய்கின்றார்.] அதுசெயமுடியாதாயின் = சகுணப்பிரமமானஎன்னில் சித்தத்தை ஸ்திரமாகச்செய்வதுமுடியாவிடின்—அப்பியாசமே பயில்வாய் = * அப்பியாச † யோகத்தையே அடிக்கடி பழகுவாய்;—பொய் அற அதுவும் புரிகிலாய் எனில் = உண்மையாக அவ்வப்பியாசமுஞ்செய்யச் சக்தனாகாயென்னில்—உன் வினைகள் = உனது (காணங்களாற்செய்யுங்) கர்மங்களை—என் பொருட்டினால் புரிவாய் = (பரமேசுரனான) எனது சந்தோஷத்தின் பொருட்டான ‡ பஜநரூபகர்மங்களாகவே செய்வாய்;—செய்யும் அவ்வினைகள் = செய்யாநிற்கும் அக்கர்மங்களை—அப்படிச் செயாயேல் = அங்ஙனஞ்செய்ய உனக்குச் சக்தியில்லையாயின்,—வினைப்பயன் தவிரவே செய்வாய் = (என்னைச்சரணடைந்து மனத்தைவசமாக்கிச் சர்வ கர்மங்களின்பயனைத் தியாகஞ்செய்வாய்.—எ-று.

'வினைப்பயன்றவிரவேசெய்வாய்' என்றதன்றாற்பரியம்; அந்தரியாமிரூபமான ஈசுரனது பிரோரணையினால் நாம் கர்மஞ்செய்கின்றோம், கர்மங்களின் திருஷ்டாதிருஷ்டமான பயன் பரமேசுரனது அதீனமாமென்னும் இப்படிப்பட்ட [ஸா] பாவத்தை என்னில் ஆரோபித்துப் பலத்தின் இச்சாத்தியாகபூர்வகமான கர்மஞ்செய்வதால் எனது கிருபையினால் கிருதார்த்தனாவாயென்பது. (கூ)

[பூர்வம் அதிகாரிகளின் பேதத்தால்விதித்த ஸகுணப்பிரமோபாசனை, அப்பியாசயோகம், பாகவததர்மம், கர்மபலத்தியாகம் என்னும் நான்குசாதனங்களுள்ளே, தியாகரூபமான சாதனத்தின்கண்ணேயே ஏனையசாதனங்கள் பரியவசானமாவதால் அதன்கண் அதிகாரிகளைப் பிரவிர்த்திப்பித்தற்பொருட்டு ஸ்ரீ பகவான் அதனைத் துதிசெய்கின்றார்.]

[வேறு.]

**அத்தி ஞானம் வினைபி னதனினு**
**மெய்த்தி யான மிகுமதின் மேலதாம்**

---

* அப்பியாசம் = சுவர்ணமுதலியதாதுமயம் அல்லது, பாஷாணமயமான விஷ்ணு, சிவன் முதலியோர்களின் வாகியபிரதிமைமுதலிய ஆலம்பனத்தில் சர்வ இடங்களினின்று மீளும்படியாகப்பண்ணிய சித்தத்தை மறித்துமறித்து ஸ்தாபனம்பண்ணுவது.

† அவ்வப்பியாசபூர்வகமானசமாதிரூபம் யோகமாம்.

‡ பஜநரூபகர்மம் சாஸ்திரத்தில் ஒன்பது பிரகாரமாகக் கூறியிருக்கின்றது. சுலோகம்—ஶ்ரவணம்கீர்த்தநம் விஷ்ணோஸ்ஸ்மரணம்பாதஸேவநம் அர்ச்சநம் வந்தநம் தாஸ்யம் ஸக்யமாத்மநிவேதநம்॥ இ-ள். க-சர்வத்திரவியாபகமான விஷ்ணுபகவானது இராமகிருஷ்ணாதிநாமங்களைச் சிரவணஞ்செய்வது. உ-அவ்விஷ்ணுவின் நாமங்களைத் தனதுமுகத்தால் சொல்லுவது. ௩-தனதுமனத்தால் விஷ்ணுவைச் சர்வதா ஸ்மரணஞ்செய்வது. ௪-விஷ்ணுவின்பாதங்களைச் சேவிப்பது. ௫-சந்தனம், அட்சதை, புஷ்பம், தூபம், தீபமுதலிய பதார்த்தங்களால் விஷ்ணுவை அர்ச்சிப்பது. ௬-மனோவாக்குக்காயங்களால் விஷ்ணுவினிடத்தே நமஸ்காரரூபமான வந்தனஞ்செய்வது. ௭-விஷ்ணுவின் தாசபாவஞ்செய்வது. ௮-விஷ்ணுவின் சிநேகபாவஞ்செய்வது. ௯-விஷ்ணுவினிடத்தே சரீரரூபமான ஆன்மாவை அர்ப்பணஞ்செய்வது.—எ-று. சர்வத்திர வியாபகமான விஷ்ணுவின் பாதசேவனம், அர்ச்சனம் நேரே கூடாதாயினும், சுலோகம்-"சலமசலமிதிப்ரோக்தம் ஹரேரூபம் த்விதா புதை: சலம் ஸந்யாஸிநோ ரூபமசலம் ப்ரதிமாதிகம்" என்னும் சாஸ்திரவசனத்தில், விஷ்ணுவுக்கு இரண்டுரூபங் கூறியிருக்கின்றன; அவ்விரண்டனுள், சந்நியாசியோ விஷ்ணுவின் சலனரூபம்: சுவர்ணமுதலியதாதுமயம், பாஷாணமயம் ஆகியபிரதிமைமுதலியவை விஷ்ணுவின் அசலரூபம்; அச்சந்நியாசியின் அல்லது, விஷ்ணுவின் பிரதிமையின் பாதசேவனமும், அர்ச்சனமும் கூடுமெனக்கொள்க.

வித்தி ஞய வினைப்பயன் விடுதல்
சித்த சாந்தி யதற்பின் செறியுமால்.

(இ-ள்.) வினையின் = அப்பியாசத்தினும்,—ஞானம் அத்தி = ஞானமே சிரேஷ்டமுடையதாம்:—அதனினும் = அந்தஞானத்தினும்—மெய்த்தியானம் மிகும் = மெய்ம்மையான தியானமானது சிரேஷ்டமாம்;—அதின் = அந்தத்தியானத்தினும்—வித்தின் ஆய வினைப்பயன் விடுதல்மேலதாம் = ஜநநத்திற்குவித்தாகிய கர்மபலத்தியாகஞ் சிரேஷ்டமாம்;—அதன் பின் = அந்தத்தியாகத்தின் பின்னர்—சித்தசாந்தி செறியும் ஆல் = சம்சாரத்தின் உபசமரூபமான சாந்தி பொருந்தாநிற்கும் ஆதலால்;—எ-று.

'வினை' எ-து, ஞானத்தின்பொருட்டுச் செய்யாநிற்கும் சிரவணத்தினப்பியாசத்தை. 'ஞானம்' எ-து, சிரவணத்தினுலும், மனனத்தினுலும் உண்டாகும் ஆன்மவிஷயமான நிச்சயத்தை. சிரவணஞானமும், மனனஞானமும் நிதித்தியாசனவாயிலாக ஆன்மசாட்சாத்காரத்துக்கேதுவாம். நிதித்தியாசனரூபமான தியானமோநேரோஆன்மசாட்சாத்காரத்திற்கேதுவாம்; ஆகலின், ஞானத்தினும் தியானமானது சிரேஷ்டமென்றனர்; இவ்வாற்ருல், தியானமானது சர்வசாதனங்களினுஞ் சிரேஷ்டமாயினும் அஞ்ஞானியினுற்செய்யாநிற்கும் கர்மபலத்தியாகமானது அவ்வஞ்ஞானிக்கு அந்தத்தியானத்தினும் சிரேஷ்டமாம்; இவ்வபிப்பிராயங்கொண்டே ஸ்ரீ பகவான் கர்மபலத்தியாகத்தைத் துதிசெய்தனர். 'சித்த சாந்தி யதற்பின் செறியுமால்' எ-து, தியானத்தினும் கர்மபலத்தியாகமானது சிரேஷ்டமென்பதற்கேது கூறினது. இச்சீவரின் இருதயத்துள்ள சர்வகாமங்களும் எந்தக்காலத்தில் விடப்பட்டனவோ அந்தக்காலத்திலேயே அவர் அமிர்தராய் இத்தேகத்தின்கண்ணே பிரமபாவத்தையடையாநிற்பரொன்னும் இதுமுதலிய சுருதிவசனங்களால் சர்வகர்மங்களின் தியாகத்திற்கு மோட்சசாதனத்தன்மை அறியப்படுகிறது. இக்கீதாசாஸ்திரத்திலும் ஸ்திதப்பிரக்ஞனுடைய லட்சணத்தில், "அனைத்தவாவினையுநீக்கி" என்னும் வசனத்தால் ஸ்ரீ பகவானும் சர்வகாமங்களின் தியாகத்திற்கு மோட்சசாதனத்தன்மை அருளிச்செய்தனர். எப்படியும், சுருதியிலும் ஸ்திதப்பிரக்ஞனுடைய லட்சணத்திலும் சர்வகாமங்களின் தியாகத்தையே மோட்சத்தின் சாதனத்தன்மையதெனக் கூறப்பட்டிருக்கின்றது. கர்மபலத்தியாகத்தை மோட்சசாதனத்தன்மையதாகக் கூறப்படவில்லை; அப்படியாலுைம், கர்மபலம் காமரூபமேயாம்; ஆதலால், கர்மபலத்தியாகமும் காமத்தியாகமே; அக்காமத்தியாகரூபமான சாமான்யதர்மத்



தைக்கொண்டே ஸ்ரீ பகவான் கர்மபலத்தியாகத்தைக் காமத்தியாகமாகத்துதித்தனர்; இஃதெதுபோன்மெனின்? பூர்வம் அகஸ்தியரொன்னும் ஒருபிராமணர் சமுத்திரத்தைப்பானஞ்செய்ய அந்தப்பிராமணத்வசாமான்ய தர்மங்கொண்டு இக்காலத்துள்ள பிராமணரும் அபரிமித பராக்கிரமமுடையராகத் துதிக்கப்படுவதுபோலுமென்க. இச்செய்யுளின் மூலசுலோகத்திற்கு, நிதித்தியாசனரூபாப்பியாசத்திலும் சிரவண, மனன ஜந்நியபரோட்சஞானம் சிரேஷ்டம்; அந்தப்பரோட்சஞானத்தினும் விஷ்ணுவின் நாமசிரவண கீர்த்தனரூபத்தியானம் சிரேஷ்டம்; அந்தத்தியானத்தினும் கர்மபலத்தியாகம் சிரேஷ்டம்; தியாகத்தின் பின்னர்த் தடையின்றியே சித்தசுத்தி முதலியவற்றின் வாயிலாக மோட்சரூபமான சாந்தி அடையப்படும். எப்படியும் நிதித்தியாசனரூபாப்பியாசத்தைநோக்கப் பரோட்சஞானம் புறச்சாதனம்; அந்தப் பரோட்ச ஞானத்தைநோக்கச் சிரவணகீர்த்தனுதிரூபத்தியானம் புறச்சாதனம்; அந்தத்தியானத்தைநோக்கக் கர்மபலத்தியாகம் புறச்சாதனமாம்; ஆகலின், உட்சாதனங்களினும் புறச்சாதனங்களில் சிரேஷ்டத்தன்மை கூடாது; அப்படியாலுைம், உட்சாதனங்களினும் புறச்சாதனங்களை யநுஷ்டிப்ப தெளிதாவதால் ஸ்ரீ பகவான்வாகியசாதனங்களில் அதிகாரிகளைப் பிரவிர்த்திப்பித்தற்பொருட்டே வாகியசாதனத்தில் சிரேஷ்டத்தன்மை யருளிச்செய்தனரொன்று பொருள் கூறுவாருமுளர். (எ)

[மந்தாதிகாரிக்கு நிர்க்குண அட்சரபிரமோபாசனை அடைதற்கரியதாதலால் எளியதான ஸகுணப் பிரமோபாசனை விதித்து அச்சகுணப்பிரமோபாசனை செய்வதிலும் அசமர்த்த புருஷர்க்கு அவ்வவர் விருப்பத்தின் தாரதம்மியத்திற்கேற்க வேறேயும் அப்பியாசமுதலிய மூவகைச் சாதனங்களை விதித்தோம்; அங்ஙனம் விதித்த சர்வசாதனங்களும் நிர்க்குணபிரமவித்தியாரூபமான பயனை யடைதற்பொருட்டே. "காரணமிறந் தொன்றிற்குங் காட்சியிற்படாத தொன்றைச், சேர்பவர் வருத்தம்வேறு செப்பிடலாவதன்ருல்" என்பதுமுதலிய வசனங்களால் நிர்க்குண பிரமோபாசனையை நிந்தித்தது ஸகுணபிரமோபாசனையைத் துதித்தற்பொருட்டே யல்லாமல் நிஷேதித்தற்பொருட்டன்று; நிர்க்குண அட்சரபிரமோபாசகனே வாஸ்தவமாக யாரினும் நல்லனென்பதெனக்கபிமதம்; ஆதலால், நீயும் அதிகாரத்தைச் சம்பாதித்து நிர்க்குணபிரமத்தை அறிந்தவர்களுடைய ஞானத்தையும், அவரது சுபாவத்தையும் அநுசரிப்பாயாகவென்று அவற்றைப் போதிப்பவராய் அந்நிர்க்குணபிரமோபாசகரை ஸ்ரீ பகவான் துதிக்கின்ருர்.]

[வேறு.]

**இருவகையுயிர்க்கு மினியனாயின்ப துன்பமியா னென்ன தென்றறியா, தொருபொருளாலுங் குறைவுபாடின்றி யுள்ளமுமொருவழிப்படரப், பொருவருந்துணிவுங் கருணையும் புரிந்து புலன்றெரி யுணர்வையென்பாலே, மருவிநின்றொழுகு மியோகியென்பவன்காண் மன்னமற் றெனக்குவேறினியான்.**

(இ-ள்.) இருவகை உயிர்க்கும் இனியனாய்=ஸ்தாவர ஜங்கமரூபமான இருவகைப் பிராணிகட்கும்சிநேகமுடையவனாய்—இன்பம் துன்பம் யான் என்னது என்று அறியாது=இது சுகம், இது துக்கம், இஃதியான், இஃதென்னதென்று (தனக்கந்நியமாக) ஒன்றையுமறியாமல்—ஒருபொருளாலும் குறைவுபாடு இன்றி — (சரீரஸ்திதிக்குக் காரணங்களான அந்நவஸ்திரமுதலானபதார்த்தங்களுள்,) எந்தப்பதார்த்தங்களாலும் இலம்பாடில்லாமல் (அவற்றின்பேறிழவுகளிற் சந்தோஷமுடையவனா யென்றபடி.)—உள்ளமும் ஒருவழிப்படர = சித்தமும் ஓரோவழியிற்செல்ல (சமாகிதனாயென்றபடி.)—பொருவு அரும் துணிவும் கருணையும் புரிந்து=ஒப்பற்ற ஆன்மாவின்கண் (அசங்கசிதான்மாஹமென்னும்) திடநிச்சயமும், (துக்கிப்பிராணிகளிடத்துத்) தயையும் விரும்பி (உடையனாயென்றபடி.)—புலன் தெரிஉணர்வை=(இந்திரியவாயிலால்) விஷயங்களையாராயும் (நிச்சயரூபமான) புத்தியை—என்பாலே = (சுத்தப்பிரமமான) என்னிடத்தே—மருவி நின்று ஒழுகும்=அர்ப்பணஞ்செய்து சஞ்சரியாநிற்கும்—யோகி என்பவன் காண்=யோகியென்பவனே கண்டாய்—மன்ன = அருச்சுனா—எனக்கு=(பரமேசுரனான)எனக்கு—வேறு இனியான்=அத்தியந்தப்பிரியன்.—எ-று. மற்று-அசைநிலை.

மருவி என்னுந் தன்வினை மருவுவித்து என்னும் பிறவினைப் பொருளில் வந்தது. அத்தியந்தப்பிரியன் எ-து, பகவானது ஆன்மசொரூபமாகலின். (அ)

[இதுவு மது.]

**உலகமுந்தானும் வேறிலாமையினாற் றானொரு பொருட்குமஞ்சாதே, யலகிலாவுயிர்கட் கினியனாதலினா லவைகளுந் தன்னையஞ்சாதே, புலவரானவர்கள் புகழவே நிகழ்வான் பொறாமையு மயக்கமுங்களிப்பு, மிலகிடாநெஞ்சத் தியோகியென்பவன்கா ணியாரினு மெனக்குவேறினியான்.**

(இ-ள்.) உலகமும் தானும்—வேறு இலாமையினால்=அந்நியமாக இல்லாமையினால்—தான் ஒரு பொருட்கும் அஞ்சாதே=தான் எந்தப் பிராணிகட்கும் பயப்படாமலும்,—அலகிலா உயிர்கட்கு=எண்ணிறந்த பிராணிகளிடத்தும்—இனியன் ஆதலினால்=சிநேகமுடையனாதலால்—அவைகளும் தன்னை அஞ்சாதே = அவ்வெண்ணிறந்த பிராணிகளும் தன்னைக்குறித்துப்பயப்படாமலும் — புலவரானவர்கள் புகழவே நிகழ்வான்=அறிஞராயினோர் துதிக்கும்படி நிகழ்பவனாய்—* பொறாமையும் † மயக்கமும் ‡ களிப்பும்—இலகிடா நெஞ்சத்து=நிகழாத சித்தமுடைய—யோகி என்பவன் = யோகியென்பவனே—யாரினும் எனக்கு வேறு இனியான்=பிரியமுடைய யாவரினும் (பரமேசுரனான) எனக்கு அத்தியந்தப்பிரியன்.—எ-று.

முன்னைய ஏகாரங்கள் இரண்டும் எண்ணுப்பொருளன. பின்னையது ஈற்றசை. காண்-முன்னிலையசை. (கூ)

[இதுவு மது.]

**ஒன்றினுமாசை யின்றியிந்தியங்க டம்வழி யொழுகிடா தொருக்கி, நன்றியினோடு தீங்கினினொத்து நல்வினை தீவினை துறந்து, பொன்றினுநோவுற் றழுதல்செய்யாதே பூரித்தல் வாடுதலின்றி, யென்றுமுன்பிழந்த பொருட்கிரங்காதே வரும்பொருட் கிச்சைசெய்யாதே.**

(இ-ள்.) ஒன்றினும் ஆசை இன்றி=(தாமே வந்தடையாநிற்கும் போகசாதனங்களுள்ளே) எவற்றினும் ஆசையில்லாமல்—இந்தியங்கள் தம்வழி ஒழுகிடாது ஒருக்கி=இந்திரியங்களின்வழியே தான் போகாமல் (அவற்றைத்) தன்வசமாக்கி—நன்றியினோடு தீங்கினின் ஒத்து=(ஒருவன்செய்யும்) உபகார அபகாரங்களில் ஒருமனமாய்—நல்வினை தீவினை துறந்து=(சுகதுக்கங்களைப் பயவாநிற்கும்) சுபாசுப கர்மங்களைப் பரித்தியாகஞ்செய்து—பொன்றினும் நோவுற்று அழுதல் செய்யாது = (தேகமானது) பொன்றும்படிவரினும் துன்புற்றிரங்காமலும்—பூரித்தல் வாடுதல் என்றும் இன்றி=(பிரியவஸ்துவை யடைந்தவிடத்துச்) சந்தோஷித்தலும், (அப்பிரியவஸ்துவை யடைந்தவிடத்துக்) கிலேசித்தலும் எப்போதுமில்லாமல்—முன்பு இழந்த பொருட்கு இரங்காது=முன்னே இழந்துபோன இஷ்டவஸ்துவி(ன்வியோகத்தி)ற்கு இரங்காமலும்,—வரும் பொருட்கு இச்சை செய்யாது = இனி

---

* பொறாமை=பிறர்க்கு லாபம் வந்தவிடத்துச் சகியாமை.

† மயக்கம்=பயமுதலிய நிமித்தத்தாலுளதாகும் சித்தவிட்சேபம்.

‡ களிப்பு=தனக்கு லாபம்வந்தவிடத்து உற்சாகம்.

வாராநிற்கும் இஷ்டவஸ்துவின் (சையோகத்திற்கு) இச்சைசெய்யா மலும்—எ-று. (கo)

[இதுவுமது.]

[வேறு.]

இகழ்பவர் நட்டாரென்ப தின்றியே யின்பதுன்பந்
திகழவ மானமானஞ் சீதமோ டழலின்றீமை
புகழ்பழி யிவற்றுளொத்துப் பொருந்திவா ழிடமொன்றின்றி
நிகழ்தரு மியோகிகண்டாய் மற்றெனக் குரியனீரான்.

(இ-ள்.) இகழ்பவர் நட்டார் என்பது இன்றியே=சத்துரு, மித்திரரிடத்துச் சமமாய்—இன்பம் துன்பம்=சுகதுக்கம்,—திகழ் மானம் அவமானம்=(கர்மவசத்தால்) தோன்றுவனவான மானவமானம்,—சீதமோடு அழலின் தீமை=சீதோஷ்ணம்,—புகழ் பழி=துதி நிந்தை—இவற்றுள் ஒத்து = இவைகளில் துல்லியனாய் — பொருந்தி வாழ் இடம் ஒன்று இன்றி=பொருந்தி வாசம்பண்ணாநிற்கும் ஸ்தானம் (நியமமாக) ஒன்றில்லாமல் — நிகழ் தரும் யோகி கண்டாய் = சஞ்சரியாநிற்கும் யோகியே கண்டாய் — எனக்கு உரிய நீரான் = (பரமேசுரனை) எனக்கு அத்தியந்தப்பிரியன்.—எ-று.

ஏ, மற்று-அசைநிலைகள். இவ்விரண்டு செய்யுட்களும் ஒருதொடர். (கக)

[சீவன்முத்தரான பரமஹம்ஸ ஸந்நியாசிகளின் இலக்கணமாகக் கூறிப்போந்த தர்மங்களைச் சபலமாக உபசம்மரிக்கின்றார்.]

செயத்தகு வதுவுமாகிச் சேர்ந்தவர் செல்லறீர
வுயக்கொடு போவதாய பொருளையா னுரைத்தவண்ண
மியற்பட வுணர்கிற்பாருக் கியான்மிக வினியனென்றான்
மயக்கற வொருவராலு மறிவரி தாயமாயோன்.

(இ-ள்.) செயத் தருவதுவும் ஆகி=பிரயத்தனத்தாற் சம்பாதிக்கத்தக்கதுமாய்—சேர்ந்தவர் செல்லல் தீர உய=அடைந்தோர் சம்சார துக்க நீங்கி உய்யும்படிக்கு — கொடுபோவது ஆய பொருளை=அதினின்றும் முக்தியிற் கொண்டுபோவதாகிய (முற்கூறிவந்த தர்மரூபமான) அமிர்தத்தை—யான் உரைத்தவண்ணம்=யான் அருளிச்செய்தபடியே—இயற்பட=(தமக்குச்) சுபாவமாகப் பொருந்த—உணர்கிற்பாருக்கு=(சிரத்தையோடும் பிரயத்தனத்தால்) அறிந்து சம்பாதியாநிற்கும் (முமுட்சுக்களாகிய) பக்தஜனங்களுக்கு—யான் மிக இனியன் என்றான்=(பரமேசுரனாகிய) நான் அத்தியந்தப்பிரியனென்றருளினார்;—மயக்கு அற ஒருவராலும்=(தாம் அருளினாலல்லது) மயக்கமற யாரொருவராலும் — அறிவு அரிது ஆய மாயோன்=அறிதற்கரிதாகிய (உருவமுடைய) ஸ்ரீ பகவான்.- எ-று.

தர்மம் எ-து, "இருவகை யுயிர்க்குமினியன்" என்றதுமுதலிய குணங்களை. அமிர்தம் எ-து, மோட்சரூபமான அமிர்தத்திற்கு அவை சாதனமாவதால், அல்லது அமிர்தம்போல அநுபவஞ்செய்ய யோக்கியமாவதால் என்க. 'உணர்கிற்பாருக் கியான்மிகவினியன்' என்றிச் செய்யுளில் அருளிச்செய்த பகவானுடைய வசனமானது, "அன்னவனல்லனெனக் கவனுக்கே, நன்னலனாதவனானும்" என்று முன்னேழாமத்தியாயத்தில் பதின்மூன்றாவது செய்யுளால் சூசிப்பித்தபொருளின் உபசம்மாரரூபமாம்; ஆதலால், சோபாதிகமான சகுணப்பிரமத்தியானத்தின் பரிபக்குவத்தின்பின்னர் நிருபாதிகமான நிர்க்குணப்பிரமத்தைச் சிந்தனஞ் செய்பவனும், பிராணிகளைத் துவேஷியாமை முதலிய குணங்களோடு கூடினவனுமாய் நிரந்தரம் சிரவண, மனன, நிதித்தியாசனஞ் செய்யாநிற்கும் உத்தமாதிகாரிக்கு வேதாந்த வாக்கியங்களின் பொருளாகிய தத்துவசாட்சாத்காரம் அவசியமாக வுண்டாகாநிற்கும்; அந்தத் தத்துவசாட்சாத்காரத்தால் அவசியமாக முக்தி அடையப்படுமென்பது உபாசனாகாண்டரூபமான இம்மத்தியஷட்கத்தாற் சித்தித்தது. (கஉ)

## கஉ-வது, பக்தியோகவத்தியாயம்

முற்றிற்று.

ஆக அத்தியாயம் கஉ-க்குத் திருவிருத்தம்-நகூo.



## கந-வது, க்ஷேத்ரக்ஷேத்ரக்ஞவிபாகயோகவத்தியாயம்.

[பூர்வம் முதல் அத்தியாயந்தொடங்கி ஆறாமத்தியாயபரியந்தமான பிரதமஷட்கத்தில் துவம்பதார்த்த நிரூபணமும், ஏழாமத்தியாயந் தொடங்கிப் பன்னிரண்டாமத்தியாயபரியந்தமான துவிதீயஷட்கத்தில் தற்பதார்த்த நிரூபணமுஞ்செய்து இப்போது அந்தச்சோதிததத் துவம்பதார்த்தங்களின் அபேதரூபமான மஹாவாக்கியத்தின் பொருளை அருளிச்செய்பவராய்த் தத்துவஞானத்தைப் பிரதானமாகவுடைய பதின்மூன்றா மத்தியாயந்தொடங்கிப் பதினெட்டாமத்தியாயபரியந்தமான திருதீயஷட்கம் ஸ்ரீ பகவான் கூறத்தொடங்கினர்.]

விடம்படு பணாமுடி யரங்கின்மிசை யேறி
நடம்பயிலு நாயகன் மறித்துமிகு ஞானஞ்
சடம்படு பிணிப்பிறவி யென்றிவை தரிக்கு
முடம்பொடுயி ரானவை யுரைத்தருள லுற்றான்.

(இ-ள்.) விடம் படு பணா முடி = விஷம்பொருந்திய காளிங்கனென்னும் பாம்பின் முடியாகிய — அரங்கின்மிசை ஏறி = சபையின் மீதேறி—நடம் பயிலும் நாயகன் = நடனஞ்செய்யும் ஸ்ரீ பகவான் — மறித்தும் = மீண்டும்—மிகும் ஞானம் = மேலான ஞானமும், — சடம் = ஜடமும்,—படு பிணி = உண்டாகாநின்ற பிணியும்,—பிறவி என்ற இவை தரிக்கும் = ஜநநமும் என்ற இவைகளைத் தரித்திருக்கும்—உடம்பொடு உயிரானவை = க்ஷேத்திரம், க்ஷேத்திரக்ஞனென்னும் இவைகளை—உரைத்தருளல் உற்றான் = (இதில்) அருளிச்செய்யத்தொடங்கினர்.—எ-று.

முன் எழாமத்தியாயத்தில் அபரா, பரா என்னும் பெயரிய இருவகைப் பிரகிருதிகளை க்ஷேத்திரரூபமாகவும், க்ஷேத்திரக்ஞரூபமாகவும் சூசிப்பித்திருத்தலின், 'மறித்தும்' என்றார். 'சடம்படு பிணிப்பிறவி யென்றிவை தரிக்குமுடம்பு' என்றமையின், சுகதுக்காதி சம்சாரம் அவித்தியாகற்பிதமான அநான்மவஸ்துவுக்கே யல்லாமல் ஜீவான்மாவுக்கின்றென்பது பெறப்படுகின்றது. (க)

[இப் பதின்மூன்றாமத்தியாயத்தில் தத்துவஞானம் வர்ணிக்கப்படுகிறது. பூர்வம் பன்னிரண்டாமத்தியாயத்தில் ஐந்தாஞ் செய்யுளில், "சாவது முதலாயுள்ள துயர்க்கடனின்றுத் தாங்கி, யாவர்களேனுங் காலஞ்சிறிதிலே யெடுக்கின்றேனான்" என்று ஸ்ரீ பகவானால் பிரதிக்ஞை செய்யப்பட்டது; அதுவும் பிரமஞானத்தாலல்லாமற் கூடாது; ஆகலின், அந்தத் தத்துவஞானம் உபதேசித்தற்பொருட்டுப் பிரகிருதி புருஷவிவேகமென்னும் இவ்வத்தியாயம் ஆரம்பிக்கின்றனர். எழாமத்தியாயத்தில் அபரா, பரா என்று இரண்டுரூபமாகக் கூறப்பட்ட எந்தப்பிரகிருதிகளின் அவிவேகவசத்தால் சேதனத்தின் அம்சமானது ஜீவபாவமடைந்து சம்சாரியாயிற்றோ, எந்தப் பிரகிருதிகளிரண்டினால் ஜீவர்க்கு * உபபோகார்த்தம் பரமேசுரருக்குச் சிருஷ்டியாதிகளின் பிரவிர்த்தியுண்டாயிற்றோ அந்தப்பிரகிருதிகளிரண்டுமே க்ஷேத்திரம், க்ஷேத்திரக்ஞன் என்னுமொழிக்குப் பொருளாம். ஒன்றற்கொன்று

* உபபோகம் = போஜநாதி ஜந்நிய சுகாநுபவம்.



பின்னமான அந்தப்பிரகிருதிகளை உள்ளபடி நிரூபிப்பவராய் ஸ்ரீ பகவான் அருச்சுனனைக்குறித்துக் கூறுகின்றார்.]

உடம்பென வுரைப்பதுயி ருண்பவைக ளெல்லா
மிடம்பட விளைப்பதெதிர் காணலுறு மீதாற்
றிடம்படவு மற்றிது தெரிந்துணரு மெய்யைக்
கடம்படு முயிர்ப்பொரு ளெனப்பகர்வர் கற்றோர்.

(இ-ள்.) (அருச்சுனா)உயிர் உண்பவைகள்எல்லாம் = உயிரால் அநுபவிப்பவைகளான சுகதுக்கபோகங்கள் முழுதையும்—இடம்பட விளைப்பதால் = (பூமிரூபமான க்ஷேத்திரம்போல) விசாலமாகவுண்டாக்குவதால்—எதிர் காணலுறும் ஈது = எதிரேகாணப்படுகின்ற இச்சரீரமானது—உடம்பு என உரைப்பது = க்ஷேத்திரமென்று சொல்லப்படுகிறது; — திடம்படவும் = (சாமான்யமாகவும்,) விசேஷமாகவும்—மற்று இது தெரிந்து உணரும் மெய்யை = இச்சரீரரூபமான க்ஷேத்திரத்தை ஆராய்ந்தறியுஞ் சீவான்மாவை—கடம் படும் உயிர்ப்பொருள் என = (போகாயதநமென்னும்) இந்தக்ஷேத்திரத்தின்கட்பொருந்திய போக்தாவானக்ஷேத்திரக்ஞனென்று—பகர்வர் கற்றோர் = கூறுகிற்பர் அவ்விரண்டையுமறிந்த பெரியோர்.—எ-று.

ஆல் உருபு பிரித்துக் கூட்டப்பட்டது. 'உயிருண்பவைகளெல்லாமிடம்படவிளைப்பதால்' எ-து, உடம்பை க்ஷேத்திரமென்றதற்குக் காரணங்கூறினது. 'திடம்படவும்' என்றதால், சாமான்யமாகவும் என்பது வருவிக்கப்பட்டது. சாமான்யமாகவறிவது மநுடன் நானென்பது. விசேஷமாகவறிவது உபதேசத்தினால், "இதுதசை யிதுநெய்த்தோரீ தென்பிவை யுளவுயிர்ப்பாய்ப், பொதுளிய வாதமிங்கே யகமெனல் பொருந்திற் றெங்கே" என்று பகுத்தறிவது. (உ)

[இவ்வாறு தேகேந்திரியாதிரூபக்ஷேத்திரத்தின் விலட்சணமான சொப்பிரகாச க்ஷேத்திரக்ஞனை அருளிச்செய்து க்ஷேத்திரக்ஞனென்னும் ஜீவான்மாவினது அசம்சாரியாகிய பரமான்மாவோடுகூட ஏகத்வரூபமான பாரமார்த்திக சொரூபத்தை ஸ்ரீ பகவான் இனி அருளிச்செய்கின்றார்.

மன்னவுடல் யாவையினு மன்னியறி வாய்நின்
றுன்னுமுயி ரியானிவை யிரண்டினையு மோர்காற்
றன்மையினி னியாதறியு மற்றதனை ஞான
மென்னவுணர் வாயிது வெனக்குமிசை வாமால்.

(இ-ள்.) மன்ன=அருச்சுனா—உடல் யாவையினும்=(முன்சொன்ன) தேகேந்திரியாதி சங்காதரூபமான சர்வக்ஷேத்திரங்களிலும்—மன்னி அறிவு ஆய் நின்று=(அதிஷ்டானமாகப்) பொருந்திச்சொப்பிரகாசசைதந்நியமாய்நின்று—உன்னும் உயிர்=(அந்த க்ஷேத்திரத்தை யான், எனதென்று) கருதுகிற்கும் க்ஷேத்திரக்ஞன்—யான்=(அத்துவிதீயபிரமரூபமான) நானே; (க்ஷேத்திரக்ஞனிடத்து அவித்தையினால் ஆரோபிதமான கர்த்திருத்வ, போக்திருத்வாதி தர்மங்களைப் பரித்தியாகஞ்செய்து அத்துவிதீயபரமாநந்தரூபனாக அந்தக்ஷேத்திரக்ஞனை அறிதியென்பது கருத்து.)—இவை இரண்டினையும்=க்ஷேத்திரம், க்ஷேத்திரக்ஞனென்னும் இவ்விரண்டினையும்—ஓர்கால் = ஓர்பொழுது—தன்மையினின் யாது அறியும்=(அவற்றின்)றன்மைகளோடும் யாதொன்றறியுமோ—அதனை = அதனையே—ஞானம் என்ன உணர்வாய்=(அவித்தையின் விரோதியான) ஞானமென நீ அறியக்கடவாய்;—இது எனக்கும் இசைவு ஆம் = இது தத்துவமஸியாதி சுருதிசம்மதமாவதுமன்றி (பரமேசுரனான) எனக்கும் சம்மதமாம்.—எ-று.

மற்று, ஆல்-அசைநிலைகள். 'உடல்' எ-து, பிரமாதிஸ்தம்பபரியந்தமான சரீரங்களை. 'ஓர்கால்' எ-து, சமாதிகாலையி லென்றவாறு; ஆராயுங்காலையிலெனினுமாம். மாயையினால் கற்பிதமாகலின், க்ஷேத்திரமானது இரச்சுசர்ப்பம்போல மித்தியாரூபம்: க்ஷேத்திரரூபமான மித்தியாரூபத்திற்கு அதிஷ்டானமாகலின், க்ஷேத்திரக்ஞனென்னும் ஆன்மா பரமார்த்தசத்தியம் என்பன இரண்டின்றன்மைகளாம். அந்த ஞானமே மோட்சசாதனமாவதால் பரமேசுரனான எனக்கு ஞானரூபமாகச் சம்மதமாமென்பார், 'இதுவெனக்குமிசைவாம்' என்றார்; இங்ஙனங் கூறியவாற்றால், இந்த ஞானத்தின் வேறான லௌகிக, வைதிக ஞானங்கள்முழுவதும் அவித்தைக்கு விரோதிகளாகாமையின், அஞ்ஞானங்களாமென்பது பெறப்படுகின்றது. (௩)

[பூர்வம் இரண்டு செய்யுட்களால் சஞ்சேபமாக வருளிச்செய்த பொருளை இனிவிஸ்தாரமாக அருளிச்செய்தற்பொருட்டு ஸ்ரீ பகவான் கூறுகின்றார்.]

**மற்றிவ்வுட றன்னின்வர வுங்குணமும் வந்தாங்**
**குற்றமை விகாரமு முயிர்த்தொகுதி தானு**
**நற்றவர்கள் வேறுபட வோதினர்க ணானுஞ்**
**சொற்றொகையி னாலிவை சுருங்கமொழி வன்கேள்;**



(இ-ள்.) மற்று இவ்வுடல்தன்னின் வரவும் = தேகேந்திரியாதி ஜடவர்க்கரூபமான இந்தக்ஷேத்திரத்தினதுஉற்பத்தியும்,—குணமும்=(ஜடம், திருசியம், பரிச்சின்னமுதலிய சுபாவமும், இச்சை, துவேஷ முதலிய) தர்மமும்,—வந்துற்று அமை விகாரமும்=உற்பந்நமாய்(அந்த க்ஷேத்ரமானது) பொருந்தாநிற்கும் (இந்திரியமுதலிய) விகாரங்களும்,—உயிர்த்தொகுதிதானும்=க்ஷேத்திரக்ஞனதுசொப்பிரகாசசைதந்நியாநந்த சுபாவமும், உபாதியினாற் செய்யப்பட்ட யாதொரு சக்திரூபமான பிரபாவமுண்டோ அந்தப்பிரபாவமும்,—நல் தவர்கள் வேறுபட ஓதினர்கள்=நல்ல தவத்தினையுடைய வசிஷ்டர்முதலிய ரிஷிகள் (யோக சாஸ்திரங்களில் தாரணை, தியானாதிகட்கு விஷயமாக) நாநாப்பிரகாரமாகக் கூறினர்.—நானும்=(பரமேசுரனான) நானும்—சொல்தொகையினால்=தொகுத்த சொற்களால் — இவை சுருங்க மொழிவன் கேள்=(முற்கூறிய) இவைகளைச் சஞ்சேபமாகக் கூறுகின்றேன் நீ கேட்பாய். எ-று. ஆங்கு-அசைநிலை. (௪)

[இவ்வாறு க்ஷேத்திரசொரூபம், க்ஷேத்திரக்ஞசொரூபம் அறிவதில் அருச்சுனனுக்கு விருப்பமெழச்செய்து இப்போது ஸ்ரீ பகவான் அவனிடத்து மூன்று செய்யுட்களால் முன்னே க்ஷேத்திரத்தினது சொரூபம் அருளிச்செய்கின்றார்.]

**எப்பொருளி னும்பெருகி யெங்குமுள வாகு**
**மப்பெரிய பூதமவை யைந்துமவை யீனு**
**மொப்பரிய நானுமது வந்துமு னுதிக்கப்**
**பொய்ப்பகையில் புந்தியவி யத்தமவை தாமும்.**

(இ-ள்.) எப்பொருளினும் பெருகி = எவ்வகைப்பட்ட தமது விகாரங்களினும்வியாபித்து—எங்கும் உளவாகும்=எவ்விடத்துமிருக்கும்—அப்பெரிய பூதமவை ஐந்தும்=அம்மகா பூதங்களைந்தும்—ஒப்பு அரிய அவை ஈனும்=ஒப்பிடுதற்கரிய அப்பூதங்களை உண்டாக்காநிற்கும்—நானும்=அபிமான லட்சணமுடைய அகங்காரமும்,—அது=அவ்வகங்காரமானது—வந்து முன் உதிக்க=உண்டாகிப் பூதங்கட்கு முன்னே தோன்றுதற்கு—பகை இல் பொய் புந்தி அவியத்தம் அவை தாமும்=விரோதமாக இல்லாத மித்தையான(* அத்தியவசாயலட்சணமுடைய மகத்தத்துவமென்னும்)புத்தியும், (அம்மகத்தத்துவமென்னும் புத்திக்குக் காரணரூபமாகிய பிரதானரூபமான) அவ்வியக்தமும் என்னும் அப்பதார்த்தங்களும்—எ-று. (௫)

* அத்தியவசாயம் = நிச்சயம்.

[இதுவுமது.]

காதலிலிவ் வெட்டும்வினைக் காரணம தொன்று
மோதலரி தாயபுல னைந்துமவை யுண்ணு
மாதலறி யாதபொறி யைந்துமவை யாலே
யேதவினை செய்கரண மூன்றினொ டிரண்டும்.

(இ-ள்.) காதல் இல் இவ்வெட்டும்=(பந்தமாகலின்) விரும்பத்
தக்கனவாக இல்லாத இவ்வெண்வகைப்பிரகிருதிகளும்,—வினைக் கார
ணமது ஒன்றும்,=புண்ணியபாவவினைக்குக்காரணமான அந்தக்கரண
மொன்றும்,—ஓதல் அரிது ஆய புலன் ஐந்தும் —(வியஷ்டியாதலின்
ஒன்றென்று) சொல்லக்கூடாத ஞானேந்திரியங்களைந்தும், — அவை
உண்ணும்=அவ்விந்திரியங்களால் அநுபவிக்கப்படுகின்ற—ஆதல் அறி
யாத = (தம்மால்) உளவாகுஞ்சுகதுக்கங்களை யறியாத (ஜடமாகிய
வென்றபடி)—பொறி ஐந்தும் = சப்தாதிவிஷயங்களைந்தும்,—அவை
யாலே ஏத வினை செய்=ஞானேந்திரியங்களாலும், சப்தாதிவிஷயங்
களாலும் குற்றம்பொருந்திய கிரியைகளைச் செய்யாநிற்கும்—கரணம்
மூன்றினொடு இரண்டும்=கர்மேந்திரியங்களைந்தும்—எ-று. (௬)

இற்றிவை யனைத்துமிட ரின்பமுதல் யாவுந்
துற்றமை விகாரதை தொடர்ந்ததொகை கண்டாய்
நற்றவ வுடம்பென வியம்புவது நல்லோ
ருற்றவுட லுக்குரிய ஞானமு முரைப்பாம்.

(இ-ள்.) இற்றிவை அனைத்தும்=இவ்வாறு கூறியபஞ்சமகாபூத
முதல் கர்மேந்திரியபரியந்தமான இவைமுழுதும்,—(அன்றியும்) இடர்
இன்பம் முதல் யாவும்=இச்சை, துவேஷம், சுகம், துக்கம், இந்திரி
யங்களோடுகூடிய சரீரம், ஞானரூபமான மனோவிருத்தி, தைரியம்
இவை முழுதுமாய்—துற்று அமை=நெருங்கிப் பொருந்தியுள்ள—
விகாரதை தொடர்ந்த=விகாரத்தன்மைகளோடுகூடிய—தொகை கண்
டாய்=இத்தொகையைத்தான் கண்டாய்—நல் தவ=நல்ல தவத்தை
யுடைய அருச்சுனா—நல்லோர் = பெரியோர்—உடம்பு என=க்ஷேத்
திரமென்று—இயம்புவது=கூறுநிற்பது;—உற்ற உடலுக்கு உரிய=
இவ்வாறாகப் பொருந்திய க்ஷேத்திரத்துக்குரித்தாகிய — ஞானமும்
உரைப்பாம்=அமானித்துவாதிகளான ஞானசாதன குணங்களையும்
இனிக் கூறுவாம்.—எ-று.

இம்மூன்று செய்யுட்களும் ஒருதொடர். "எப்பொருளினும்
பெருகி" என்னுஞ்செய்யுளில் அவ்வியக்தம், புத்தி, அகங்காரம் என்



னும் இம்மொழிகட்கு இங்ஙனம் பொருள்கூறியது சாங்கியமதானு
சாரமாம். வேதாந்தசித்தாந்தத்தில், "அவ்வியக்தம்" என்னுமொழிக்கு
அநிர்வசனீயமான அவ்வியாகிருதமென்றுபொருள்; இவ்வவ்வியாகிரு
தத்தை ஸ்ரீ பகவான் ஏழாமத்தியாயத்தில், "இவ்வகையகுணமூன்றி
னியற்கைத்தாயாராலுஞ்,செய்வகைய தல்லாவென்மாயையினாற்றிகைப்
பொழிந்திங், குய்வகையதரிதெவர்க்கும்" என்று மாயையென்னும்
பெயருடைய பரமேசுரசக்திரூபமாக அருளிச்செய்தனர். 'புத்தி' என்
னுமொழிக்குச் சிருஷ்டியினாதிகாலத்தில் சிருஷ்டிக்கத்தக்க பிரபஞ்ச
த்தை விஷயமாகவுடைய மாயையின் விருத்திரூபமான ஈட்சண
மென்றுபொருள். 'அகங்காரம்' என்னுமொழிக்கு அவ்வீட்சணத்தின்
பின்னர் வெகுவாய்ப்பிரபஞ்சமுளவாகுகவென்னும் மாயாவிருத்திரூப
மான பரமேசுரனுடைய சங்கற்பமென்றுபொருள். அகங்காராதி மூன்
றற்கும் இங்ஙனம் பொருள்கொள்ளலே சிரேஷ்டமாம்; எதனாலெ
னின், சாங்கியசாஸ்திரத்திற் கற்பித்துள்ள பிரதானாதிகளைச் சூத்திரத்
தின் வியாக்கியானத்தில் ஸ்ரீ பாஷியகாரர் வெகுவிஸ்தாரமாகக்கண்ட
னஞ்செய்திருத்தலின் என்க. எண்விதமான பிரகிருதி, ஞானேந்திரி
யம் ஐந்து, கர்மேந்திரியம் ஐந்து, சப்தாதிவிஷயம் ஐந்து, மனம் ஒன்று
இவையனைத்தையுஞ் சாங்கியமதஸ்தர் இருபத்துநான்கு தத்துவமென்
பர். 'இடரின்பமுதல்' என்றதால், இச்சைமுதலியவை வருவிக்கப்பட்
டன. பஞ்சமகாபூதமுதல் தைரியபரியந்தமான சர்வஜடபதார்த்தங்
களும் க்ஷேத்திரக்ஞனென்னுஞ் சாட்சியினால் விளங்குவனவாம் ஆத
லால் க்ஷேத்திரக்ஞனென்னுஞ் சாட்சியினும் பின்னமாம்; இவ்வாறான
சர்வபதார்த்தங்களும் க்ஷேத்திரமென்று சஞ்சேபமாகக் கூறப்பட்டன.
க்ஷேத்திரரூபமான இச்சர்வ பதார்த்தங்களும் அசேதனரூபமேயாம்;
சங்கை;— சரீரேந்திரியாதிகளின் சங்காதமே சேதனரூபமாவதால்
க்ஷேத்திரக்ஞனென உலகாயதரும், சேதனரூபமான க்ஷணிகவிக்ஞான
மே ஆன்மாவெனச்சுகதரும், இச்சை, துவேஷம், பிரயத்தனம், சுகம்,
துக்கம், ஞானம் இவை ஆன்மாவின் லிங்கமென நையாயிகரும் ஒப்பி
யுளர்; ஆகலின், பஞ்சமகாபூதமுதல் தைரியபரியந்தமான சர்வமும்
க்ஷேத்திரரூபமாமெனல் எவ்வாறு கூடும்? என்றுவரும் சங்கையைத்
தொலைவித்தற்பொருட்டு, 'துற்றமைவிகாரதை தொடர்ந்ததொகை
கண்டாய்' என ஸ்ரீ பகவான் க்ஷேத்திரலட்சண மருளிச்செய்தனர்
பஞ்சமகாபூதமுதல் தைரியபரியந்தமான சர்வபதார்த்தங்களும் ஸவிகார
ரூபமாவதால்அச்சர்வபதார்த்தங்களும் அவ்விகாரங்கட்குச் சாட்சியாகா;
என்னை? தமது உற்பத்தி, நாசங்கள் தம்மாலே காணக்கூடா; அன்றி

யும் உற்பத்தி, நாசங்களின்வேருக எவ்வளவு தமது தர்மங்களுண்டோ அவ்வளவு தர்மங்களின் தரிசனமும் தமது தரிசனத்தாலல்லாமற் கூடா. இதற்குக் காரணமென்னையெனின்? தர்மியின் தரிசனத்தின் பின்னரோ தர்மம் தரிசனமாவதால் என்க. அற்றன்று; தம்மாலேயே தமது தரிசனமாமென் றொப்பிடில், தரிசனரூபமான கிரியைக்குக் கர்த்தாவும், கர்மமும் தாமேயென்றுவரும்; வரவே, ஒரோ வஸ்துவில் ஒரோகாலத்தில் ஒரோகிரியைக்குக் கர்த்திருத்தன்மையும், கர்மத்தன்மையும் அத்தியந்தம் விருத்தமாம்; இங்ஙனங்கூறியவாற்ருல், ஸவிகாரவஸ்துக்கள் அவ்வுற்பத்திநாசமுதலிய விகாரங்கட்குச் சாட்சியாகா: மற்றியாது சாட்சியென்னின்? நிர்விகாரவஸ்துவே சர்வவிகாரங்கட்கும் சாட்சியாமென்பது பெறப்படுகின்றது. (எ)

[இவ்வாறு க்ஷேத்திரத்தின் சொரூபமருளிச்செய்து அந்த க்ஷேத்திரத்தின் சாட்சிரூபமான க்ஷேத்திரக்ஞனை க்ஷேத்திரத்திலும் வேருக விஸ்தாரமாக வருளிச்செய்யும்பொருட்டு க்ஷேத்திரக்ஞனை அறியத்தக்கனவான ஞானசாதனகுணங்களை முன்னே ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்ருர்.]

[வேறு.]

மானமும் பிறர்தனை மதிக்கப் பண்ணலு
மூனமும் பிறவுயிர்க் குறுகண் செய்கையும்
யானெனுஞ் செருக்குமிவ் விகப ரங்களி
லானபே ராசையோ டறுக்கு மாற்றலும்.

(இ-ள்.) மானமும் = (தனதுகுணங்களைச்) சிலாகிப்பதும்,— பிறர்தனை மதிக்கப்பண்ணலும் = பிறர் தன்னை நன்குமதிக்கும்படி தனது தர்மத்தைக்காட்டாநிற்குந்தம்பமும், — ஊனமும் = (மோட்ச மார்க்கத்திற் பிரவிர்த்தியாத) குறைபாடும்,—பிற உயிர்க்கு உறுகண் செய்கையும் = அந்நியப்பிராணிகட்குத் துன்பஞ்செய்வதும், — யான் எனும் செருக்கும் = நானென்னும் அகங்காரமும்,—இவ்விகபரங்களில் ஆன பேர் ஆசையோடு = இவ்விகலோக பரலோகவிஷயபோகங்களில் உளதாவதான பேராசையும்—அறுக்கும் ஆற்றலும் = (ஆகிய இவைகளைக்) கெடுக்கும்படியான வலியும்,—எ-று.

'அறுக்குமாற்றல்' என்றதால், மானமில்லாமையும், தம்பமில்லாமையும், மோட்சமார்க்கப்பிரவிர்த்தி ஒன்றிலேயே தற்பரத்தன்மையும், அஹிம்ஸையும், அகங்காரமில்லாமையும், இகபரவிஷயபோகங்



களில் வைராக்கியமும் ஆகிய இவைகளும், இனிக்கூறப்படுமவைகளும் ஞானசாதனமாவதால் ஞானமெனப்படும் எனக்கொள்க. (அ)

[பின்னும்,]

பெற்றநன் மனையொடு பெண்டிர் பாலர்பா
லுற்றெழு மவாவிட லுடம்பின் றாய்மையு
மற்றவைம் பொறிகளில் வாயில் வாழ்க்கையுஞ்
செற்றமுஞ் சிறியவர் குழுவுந் தீர்தலும்.

(இ-ள்.) பெற்ற நல் மனையொடு = (தான்) அடைந்திருப்பதான நல்லகிரகத்துடனே—பெண்டிர் பாலர்பால் = தார,புத்திராதியரிடத்து —உற்று எழும் அவா விடல் = பொருந்தியெழாநிற்கும் ஆசைப்பெருக்கத்தைவிடுதலும்,—உடம்பின் தூய்மையும் = சரீரத்தின்வாகியாந்தர சௌசமும்,—மற்ற = மோட்சத்திற்குப்பிரதிகூலங்களான—ஐம்பொறிகளில் = சப்தாதிவிஷயங்களில்—வாயில் வாழ்க்கையும் = தேகேந்திரியங்கள் சுபாவமாகப்பிரவிர்த்திக்கும் பிரவிர்த்தியும்,—செற்றமும் = (துஷ்டபுருஷராற்பண்ணப்பட்ட அபராதத்திலெழுந்) துவேஷமும்,— சிறியவர் குழுவும் = மூடசங்கமும் (ஆகிய இம்மூன்றையும்)—தீர்தலும் = விடுதலும்,—எ-று.

புத்திர தாராதி பதார்த்தங்களில் இவை நம்முடையவென்னும் அபிமானமாத்திரமான ஆசையையும், அப்பதார்த்தங்கள் நாமேயென்னும் அபேதபாவனாரூபமான ஆசைப்பெருக்கையும் விடலென்பார், 'பெற்றநன்மனையொடு பெண்டிர்பாலர்பா, லுற்றெழுமவாவிடல்' என்ருர். இங்கே, 'வாயில்' எ-து, விஷயங்களிற் பிரவிர்த்தித்தற்கு வாயிலாகவுள்ள தேகேந்திரியங்களை. (க)

[பின்னும்,]

ஒருபெரும் பொருளையே யுளத்துள் வைத்தலு
மிருவினை கடப்பவ ரிடங்க ளெய்தலுங்
குருவினை வழிபடு குணமுங் குற்றமி
லுருவினை யுள்ளவா றுணரு முண்மையும்.

(இ-ள்.) ஒரு பெரும் பொருளையே உளத்துள் வைத்தலும் = ஒப்பற்ற வாசுதேவனான என்னையே சர்வத்திலும் உத்கிருஷ்டமாகவும், பரமகதியாகவும் நிச்சயித்துச் சித்தத்தின்கண்ணே வைக்கும் நிரதிசயப் பிரீதிரூபமான பக்தியும்,—இருவினைகடப்பவர் இடங்கள் எய்தலும் = புண்ணியபாவமென்னும் இருவினைகளைக் கடப்பவர்வசிக்கும் நதிதீரம்,

பருவதக்குகைமுதலிய ஸ்தானங்களையடைதலும்,—குருவினை வழிபடு குணமும்=குருவை வழிபடாநிற்குஞ் சுபாவமும்,—குற்றம் இல் உருவினை=குற்றமற்ற ஆன்மா, அநான்மாக்களை—உள்ளவாறு உணரும் உண்மையும்=உள்ளபடி பகுத்தறியும் விவேகமும்,—எ-று. (௧௦)

[பின்னும்,]

முன்றிகழ் பிறப்பொடு மூப்பி றப்பினாற்
சென்றடை யிடும்பையைச் சிந்தை செய்கையு
மென்றிவை யனைத்துமற் றிவற்றி னாலினிச்
சென்றடை பொருளினைத் தெரிந்து கேளெனா.

(இ-ள்.) முன் திகழ் பிறப்பொடு மூப்பு இறப்பினால்=முன்னே தோன்றாநிற்கும் ஜன்மம், ஜரை, மரணங்களால்—சென்றடை இடும்பையை=வந்து பொருந்தாநிற்குந் துக்கங்களை—சிந்தை செய்கையும்=அடிக்கடி சிந்தித்தலும்—என்ற இவை அனைத்தும்—என்ற இவை முழுதும் (ஞானசாதனமாதலால் ஞானமாம்;)—இவற்றினால்=இந்த ஞானசாதன குணங்களால்,—சென்று அடை பொருளினை=முமுட்சுக்கள் பூமிகாக்கிரமமாகச் சென்றடையாநிற்கும் ஞேயவஸ்துவை—இனித்தெரிந்து கேள் எனா=இனி ஆராய்ந்து கேட்பாயாகவென்று அதன்சொருபத்தை இனி அருளிச்செய்கின்றார்.—எ-று.

மற்று-அசைநிலை. இந்நான்குசெய்யுட்களும் ஒருதொடர். கூறிய இவற்றிற்கந்நியங்கள் அஞ்ஞானமாமென்பது அர்த்தாபத்தியாற்பெறப்படுகின்றது. (௧௧)

[வேறு.]

ஆதியந்த மிலதழி யாதுநின்ற பெருமைய
தோதிலுண்ட திலையெனு மூனமின்றி யொளிர்வது
நீதியின்க ணகிலமு மாகியெங்கு நிறைதலி
னோதருங்கை செவிதலை கால்களெங்கு முடையது.

(இ-ள்.) (அருச்சுனா) அது=அந்தஞேயவஸ்துவானது—ஆதி அந்தம் இலது=உற்பத்தி, நாசம் இல்லாதது:—அழியாதுநின்ற பெருமையது=ஒழிவறநின்ற மாட்சிமையது;—ஓதில்=(இன்னும் அந்த ஞேயவஸ்துவினைச்) சொல்லில்,—உண்டு இலை எனும் ஊனம் இன்றி ஒளிர்வது=சத்து, அசத்து என்று கூறுங்குறைபாடில்லாமல் ஒளிராநிற்பது.—[அசத்தல்லவென்று சாமான்யமாகக்கூறியதை இனி விரித்துக் கூறுகின்றார்.] நீதியின்கண்=உண்மையாகப் பார்க்குமிடத்து—அகிலமும் ஆகி எங்கும் நிறைதலின்=(தான்) முழுதுமாய் முழுதிலும் நிறைந்திருத்தலின்,—ஓத அரும்=(இவ்வளவென்று வரையறுத்துச்) சொல்லுதற்கரிய—கை செவி தலை கால்கள் எங்கும் உடையது=அஸ்தம், சுரோத்திரம், சிரசு, பாதங்களை எங்குமுடையதாயிருக்கிறது.—எ-று.

'ஆதி' எ-து, காரணம்: அல்லது, உற்பத்தி; அவை இன்மையின் அநாதி. பரம்பிரமமென்பார், 'அழியாதுநின்றபெருமையது' என்றார். பரம் = நிரதிசயம். பிரமம்=தேசகாலவஸ்து பரிச்சேதரகிதம். 'அந்தமிலது' எ-து, மொழிபெயர்த்தோர் கருத்து: இங்ஙனங் கூறியவாற்றால், ஆதியந்தமுடைய தேகாதிகட்கும், சவிசேஷ விஷ்ணுவாகிய எனக்கும் பரமாகிய நிர்விசேஷப்பிரமமே ஞேயமென்பது பெறப்படுகின்றது; அந்த நிர்விசேஷத்தன்மையை 'ஓதிலுண்டதிலை யெனுமூனமின்றியொளிர்வது' என்னு மொழிகளால் அருளிச்செய்தனர். உண்டு என்னும் விதிமுகமாகப் பிரமாணத்துக்கு விஷயம் யாது அது சத்து: இல்லை என்னும் நிஷேதமுகமாகப்பிரமாணத்துக்கு விஷயம் யாது அது அசத்து; இப்படிப்பட்டபாவதர்மம், அபாவதர்மங்கட்கு ஞேயப்பிரமமானது ஆசிரயமாக இல்லாமையின், சப்தங்களின் சக்திரூபமுக்கியவிருத்திக்கு விஷயமன்றென்க. இங்ஙனம் ஞேயரூபப்பிரமமானதுசதசத்துவிலட்சணமென்னின்? "பிரமமல்லவாவீதனைத்தும்" என்னுஞ்சுருதிக்கு விருத்தமன்றோவென்றுவருஞ் சங்கையைப்பற்றி, சக்தியினால் அங்ஙனம்சுருதிகூறிற்றென்பார், 'நீதியின்கணகிலமுமாகி யெங்குநிறைதலி, னோதருங்கை செவிதலை கால்களெங்கு முடையது' என்றார்.

இதன் கருத்து; சர்வப்பிராணிகளிடத்துமுள்ள கரசரணாதியுபாதிகளால் சர்வவியவகாராஸ்பதமாக ஞேயவஸ்துவானதுஉளதென்பது.()

[ஆயின், ஞேயவஸ்துவுக்கு வாஸ்தவமாகப் பாணி, பாதாதிகள் உண்டுகொலோவெனின்? உபாதிபூதமாக அவை ஆரோபிக்கப்பட்டன வல்லாமல் வாஸ்தவமாக அதற்கு இல்லையென்றருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

காணும்புலன்க ளனைத்தினுக்குங் கண்ணாய்நின்று காட்டுவது
பேணும்புலன்க டனக்கொன்று மில்லாதியன்ற பெற்றியது
பூணும்பற்றுத் தனக்கின்றி யெல்லாந்தானே பொறுப்பதது
மாணுங்குணங்க ளின்றியவை மன்னியனுப விப்பதது.

(இ-ள்.) (அந்தஞேயவஸ்துவானது) காணும் புலன்கள் அனைத்தினுக்கும் = (விஷயங்களைக்) காணாநிற்கும் * இந்திரியங்களனைத்திலும்—கண் ஆய்நின்றுகாட்டுவது=அறிவாய்நின்று (அவ்வவ்விந்திரிய வியாபாரங்களையுடையதாகத் தன்னைத்) தோற்றுவிப்பது,—பேணும் புலன்கள் = விரும்பப்பட்ட இந்திரியங்கள் — தனக்கு ஒன்றும் இல்லாது இயன்ற பெற்றியது = (வாஸ்தவமாகத் தனக்கு யாதொன்றுமில்லாமலே பொருந்துகின்ற தன்மையது, (சர்வேந்திரிய விவர்ஜிதமென்றபடி.)—பூணும்பற்றுத் தனக்கு இன்றி=(எவ்வித பதார்த்தங்களோடுஞ்) சம்பந்தியாநிற்குஞ் சம்பந்தமானது (அசங்கமாகலின்,) தனக்கு (வாஸ்தவமாக) இல்லாமலே—எல்லாம் தானே பொறுப்பது அது=சர்வகற்பிதப் பிரபஞ்சங்களையும் ஞேயவஸ்துவானது தானே (தனது சத்ரூபத்தினால்) தரிக்கின்றது,— மாணும் குணங்கள் இன்றி =மாட்சிமைபொருந்திய சத்வரஜஸ்தமோகுணங்கள் (வாஸ்தவமாகத் தனக்கு) இல்லாமலே—அவை மன்னி அனுபவிப்பது அது = அச்சத்வ ரஜஸ் தமோகுணங்களைப் பொருந்தி அநுபவியாநிற்பது அந்த க்ஷேத்திரக்ஞன்; (சப்த ஸ்பரிசாதி விஷயவாயிலாகச் சுகதுக்க மோகாகாரபரிணாமமாகும் சத்வரஜஸ்தமோகுணங்களை அநுபவிப்பதாக வுளதென்றபடி.)—எ-று.

'காணும்புலன்க ளனைத்தினுக்குங் கண்ணாய்நின்று காட்டுவது, பேணும்புலன்க டனக்கொன்று மில்லாதியன்ற பெற்றியது' என்று இங்கே கூறியிருப்பதுபோலவே ஈசுரகீதையில், "கண்ணின்றி யெல்லாங் காண்பன் காலின்றி யெங்குஞ் செல்வன், விண்ணின்ற வோசையெல்லாஞ் செவியின்றி விரைந்து கேட்பன், பண்ணின்ற கையதின்றிப் பற்றுவன் விடுவன்" என்று கூறியிருப்பது காண்க. (௧௩)

[இன்னும் அந்த ஞேயவஸ்து எப்படிப்பட்டதெனின்? கூறுகின்றார்.]

[வேறு.]

**பூதமைந்தி னகத்தினோடு புறத்தினும் பொலிகின்றதிங்**
**கேதமின்றி நடப்பநிற்பன வாயிருப்ப ததின்னதென்**
**றோதரும்படி நுண்ணிதாகிய தொன்றதாகி யிருந்துமெய்ப்**
**பேதம்வந்தது போலநின்று பிறங்கவும் படுகின்றதே.**

* "இந்திரியங்கள்" எ-து, ஞானேந்திரியம், கர்மேந்திரியம், அந்தக்கரணரூபமான மனம், புத்தி இவைகளை.



(இ-ள்.) (அந்தஞேயவஸ்துவானது) இங்கு = இவ்வியவகாரதசைக்கண்—பூதம் ஐந்தின் அகத்தினோடு புறத்தினும் பொலிகின்றது =(காரியமாகிய) பஞ்சபூதபௌதிகங்களின் உள்ளினும், புறம்பினும் (சுவர்ணமானது கடகாதிகளிற்போலவும், ஜலமானது தரங்காதிகளிற்போலவும் அந்தஞேயவஸ்துவானது காரணரூபமாக) வியாபித்திருக்கின்றது;—ஏதம் இன்றி நடப்ப நிற்பன ஆய் இருப்பது=(தனது சொரூபத்திற்) கெடுதலில்லாமலிருந்தபடி இருந்தே ஜங்கமரூபமாயும், ஸ்தாவரரூபமாயும் இருப்பது.—[இங்ஙனம் ஞேயவஸ்து சர்வான்மாவாயின், சாதாரணமாக எல்லாராலும் ஏன்அறியப்படவில்லையெனின்? அதற்குக் கூறுகின்றார்.] அது இன்னது என்று ஓத அரும்படி நுண்ணிதாகியது—அந்த ஞேயவஸ்துவானது (சர்வத்தின் ஆன்மாவாக இருந்தும்) இத்தன்மையதென்று சொல்லவும், அறியவும்கூடாதபடிக்குச் சூட்சுமமாகியது;—அது = அந்தஞேயவஸ்துவானது—மெய் = வாஸ்தவமாக — ஒன்று ஆகி இருந்தும் = (ஸ்தாவரஜங்கமரூபமான பிராணிகளிடத்தில்) ஏகமாகியிருந்தும்—பேதம் வந்ததுபோல நின்று பிறங்கவும் படுகின்றது = (தேகங்களோடு தாதான்மியத்தால்) பேதமுண்டானதுபோலச் சரீரங்கடோறுநின்று விளங்கவும்படுகின்றது.—எ - று.

'ஒன்றதாகி யிருந்துமெய்ப், பேதம்வந்தது போலநின்று பிறங்கவும் படுகின்றது' என்றதற்கு, ஸ்தாவரஜங்கமரூபமான பூதசமூகங்களில் காரணரூபத்தால் அபின்னமாயிருந்தும், காரியரூபத்தால் சமுத்திரமும், பேனமும்போலப் பின்னமாகவுளதென்பாருமுளர். 'பேதம் வந்ததுபோல நின்றுபிறங்கவும்படுகின்றது' என்றதால், தேகங்கடோறும் ஆன்மாவைப் பேதமாகக்கொள்ளும் வாதியரை மறுத்தனரென்பதும், தேகாதி உபாதிகளாலுளதாகும் மித்தையாகிய பேதப்பிரதீதியால் பரமான்மதேவதையின் வாஸ்தவமான ஏகத்வமானது நீங்காதென்பதும் பெறப்படுகின்றன. (௧௪)

[பின்னும்.]

**அருவமாயதி தூரமாய தணித்துமாய தனைத்துமா**
**யுருவம்யாவு மளித்துமீள வொழிக்குநாளி லொழிப்பது [திங்**
**பொருவிலாவொளி கட்குமுள்ளொளி யாகியேபொலி கின்ற**
**திருமைவீடிய ஞானமோடதன் ஞேயமாகி யிசைந்தது.**

(இ-ள்.) அருவம் ஆய் அதி தூரமாயது = உருவமில்லாததாய் (விவேக, வைராக்கியாதிசாதனரகிதபுருஷர்க்கு ஆயிரங்கோடி வரு

ஷங்களாலு மடையப்படாமையின், அப்பகிர்முகபுருஷர்க்கு இலக்ஷங் கோடியோஜனை மார்க்கமுடையதேசம்போல) அத்தியந்தந் தூரமாகியது.—அணித்தும் ஆய் அணித்துமாயது = (விவேகவைராக்கியாதி சாதனங்கள்நிறைந்த புருஷர்க்கு) எல்லாந்தானாய்(த்தமது ஆன்மரூபமாகலின்,) அத்தியந்தஞ் சமீபமுமாகியது.—உருவம் யாவும் அளித்து = (ஸ்தாவரஜங்கமமான) உருவங்களனைத்தையுஞ் சிருஷ்டித்து — மீள ஒழிக்கும் நாளில் ஒழிப்பது = மீண்டு சம்மரிக்குங்காலையிற் சம்மாரஞ் செய்வது.—[இங்ஙனம் ஞேயப்பிரமத்திற்குச் சகத்தின் உற்பத்தி, ஸ்திதி, லயங்களின் கர்த்திருத்துவரூபமான தடஸ்தலட்சணங் கூறி இனி, அதன் சொரூபலட்சணம் அருளிச்செய்கின்றார்.] (அந்தஞேயப் பிரமமானது) பொருவ இலா ஒளிகட்கும் உள் ஒளியாகியே பொலிகின்றது = ஒன்றோடுவமிக்கும்படிக்கில்லாத (ஆதித்தியன், சந்திரன், அக்கினி, மின்னல்முதலியவாகிய ஜோதிகளும், மனம், புத்திமுதலிய அந்தர்ஜோதிகளும் ஆகிய) சர்வஜோதிகட்கும் உள்ளே ஜோதியாகியே ஒளிர்கின்றது.—இங்கு = பிராணிகளின் புத்திவிருத்தியின்கண்ணே —இருமை வீடிய ஞானமோடு அதன் ஞேயம் ஆகி இசைந்தது = பேதம்விடுத்தஞானரூபமாகியும், அதன் விஷயமாயும் பொருந்தியது.—எ-று.

'ஒளிகட்குமுள்ளொளியாகியே பொலிகின்றது' என்று ஸ்ரீ பகவான் அருளியபடியே சுருதியும், "இலங்கிரவியிந்துவன ருரகைமினெல்லா, நலம்பெற விளங்குவது ஞானவொளி கொண்டே, புலம்படு மனைத்தையும் விளக்குபர போதந், துலங்குவது தன்னுடைய சோதியதனாலே" என்று கூறுகின்றது; இங்ஙனங் கூறியவாற்றால், ஞேயப்பிரமத்தின்கண்ணே அஞ்ஞானம் லேசமும் இல்லையென்பது பெறப்படுகின்றது. (௧௭)

[பூர்வப் பிரசங்கத்தை உபசம்மாரம் பண்ணுகின்றார்.]

**ஆனவிப்பொருண் முன்புரைத்த வவற்றினாலறி யும்பொரு**
**ளூனமற்ற மனத்தினாய்நல் லுடம்புமற்ற வுடம்புசேர்**
**ஞானமுற்று மவற்றினாலறி யப்படும்பொரு ணன்மையு**
**மீனமற்ற திறத்தினோடு சுருக்கமாக வியம்பினேன்.**

(இ-ள்.) ஆன இப்பொருள் = இவ்வாறான இந்த ஞேயப்பிரமமானது—முன்பு உரைத்த அவற்றினால் அறியும் பொருள் = முற்கூறிய அமானித்துவாதிகளான ஞானசாதனகுணங்களால் (அதிகாரிகளானோர்) சாட்சாத்கரிக்கும் பொருளாம்.—ஊனம் அற்ற நல் மனத்தினாய் = குறைபாடற்ற நல்ல சித்தத்தையுடைய அருச்சுனா—உடம்பு = மகாபூதமுதல் தைரியபரியந்தமான க்ஷேத்திரசொரூபமும்,—மற்ற உடம்பு சேர் ஞானம் முற்றும் = (தனக்கு) வேறான க்ஷேத்திரத்தின் கட்பொருந்திய அமானித்துவாதிகளான ஞானசாதன குணங்கண் முழுவதும்,—அவற்றினால் அறியப்படும் பொருள் நன்மையும் = அவ்வமானித்துவாதி ஞானசாதனகுணங்களால் சாட்சாத்கரிக்கப்படும் ஞேயப்பிரமத்தின் நல்ல இலக்கணமும்—ஈனம்அற்ற திறத்தினோடு சுருக்கம் ஆக இயம்பினேன் = குறைவற்ற கூறுபாடனே சஞ்சேபமாக உனக்கருளிச்செய்தேன்.—எ-று. (௧௮)

[முன் பன்னிரண்டா மத்தியாயத்திற் கூறிய இலக்கணமுடைய எனது பக்தரோ அதிகாரிகளாமென் றருளிச்செய்கின்றார்.]



**எள்ளலான திகந்துயான்மு னுரைத்தவிப்பொரு ளீதெலா**
**முள்ளவாறெனதன்பர்தாந்தெரிந் துற்பவங்களென்றோதிடுங்**
**கள்ளமார்தரு மாயைவேலை கடந்துகாதல்செய் யின்பமாம்**
**வெள்ளமாமெனை யெய்துவாரென வேறுகூற விரும்பினான்.**

(இ-ள்.) எள்ளலானது இகந்து = (என்னிடத்தகுயையினால் எனது வாக்கை) இகழாநிற்பதையொழித்து—யான் முன் உரைத்த = யான் முன்னர் அருளிச்செய்த—இப்பொருள் ஈது எலாம் = க்ஷேத்திரம், ஞானம், ஞேயம் என்னும் இப்பொருள்கண் மூன்றனையும்—உள்ளவாறு = உள்ளபடி—எனது அன்பர் தாம் = (பூர்வாத்தியாயத்திற் சொல்லிய இலக்கணமுடைய) எனது பக்தர்களே—தெரிந்து = உணர்ந்து — உற்பவங்கள் என்று ஓதிடும் = உற்பவங்களென்று சொல்லப்பட்ட—கள்ளம் ஆர் தரு = குற்றம் நிறைந்துள்ள—மாயை வேலை கடந்து = மாயையாகிய கடலைக்கடந்து—காதல் செய் இன்பம் ஆம் வெள்ளம் ஆம் எனை = (பிறவிக்கஞ்சினோரடைய) ஆசை செய்யாநிற்கும் நிரதிசயாநந்தரூபனான என்னை — எய்துவார் என = அடையாநிற்பரென் றருளிச்செய்து—வேறு கூற விரும்பினான் = இன்னும் வேறொன்றையருளிச்செய்ய ஸ்ரீ பகவான் கிருபைகூர்ந்தனர்.—எ-று. (௧௯)

[முன் ஏழாமத்தியாயத்தில் க்ஷேத்திரரூபமாகவும், க்ஷேத்திரக்ஞனென்னுஞ் சீவரூபமாகவும் அருளிச்செய்த அபரா, பரா என்னும் பிரகிருதிகளிடத்து அநாதித்தன்மை அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

**ஓதிய வுடம்பிற்கு முயிர்க்கு முண்மையா**
**யாதிகண் டறிபவ ரியாரு மில்லையாற்**

றீதிலிவ் விரண்டனின் செய்கை யென்னெனி
னீதியி னிவற்றையு நிகழக் கூறுவாம்.

(இ - ள்.) ஓதிய உடம்பிற்கும் = (முன்னே இதில் ஐந்தாஞ் செய்யுண்முதல் எட்டாவது செய்யுள்வரையிற்) கூறிய க்ஷேத்திரத்திற்கும்,—உயிர்க்கும்=க்ஷேத்திரக்ஞனுக்கும்—உண்மை ஆய் = வாஸ்தவமாக—ஆதி கண்டு அறிபவர்=காரணத்தை ஆராய்ந்தறிபவர்—யாரும் இல்லை=ஒருவருமில்லை; (ஆகலின், அவ்விரண்டனையும் அநாதியெனவும், *விகாரங்களும் † குணங்களும் க்ஷேத்திரமென்னும் பிரகிருதியினின்றே உற்பந்நமாயினவெனவும் நீ அறிதி.)—தீது இல் இவ்விரண்டனின் = குற்றமற்ற பிரகிருதியும், புருஷனும் ஆகிய இவ்விரண்டினது—செய்கை என் எனின் = செய்கை என்னையென்று நீ கேட்பாயாயின்—நீதியில் = சுருதியின்வழியாக—இவற்றையும் = இவ்விரண்டன் செய்கைகளையும்—நிகழக் கூறுவாம்=உனக்குத் தோன்ற இனிக் கூறுகிற்பாம்.—எ-று. ஆல்-அசைநிலை.

பிரகிருதிக்கும், புருஷனுக்கும் ஆதியில்லையெனவே விகாரங்கட்கும், குணங்கட்கும் ஆதியுண்டென்பது அர்த்தாபத்தியினுற் பெறப்படுதலின், இவை மாயாரூபப்பிரகிருதியினின்றே உற்பந்நமாயினவென்னும் மூலசுலோகத்தின் உத்தரார்த்தத்தை மொழிபெயர்த்தோர் கூறுதொழித்தனர். மாயையைப் பிரகிருதியென்றறி என்னுஞ் சுருதியானது மாயாரூபப்பிரகிருதியைத்தானே சர்வஜகத்திற்குங் காரணமாகக் கூறிற்று; இங்ஙனம், சர்வஜகத்திற்குங் காரணரூபப் பிரகிருதியின்கண் அநாதித்தன்மையுக்தமாம்; அப்படியன்று, மாயாரூபப்பிரகிருதிக்கும் வேறேயாதானுமொருகாரண முண்டெனக்கொள்ளின், அநவஸ்தாதோஷமாம்; ஆகலின், மாயாரூபப்பிரகிருதியின்கண் அநாதித்தன்மைகொள்ளற்பாலதே. மாயாரூபப்பிரகிருதியின்கண் அநாதித்தன்மை யுக்தியினுலும், சுருதியினுலும் சித்தித்ததுபோலச் சீவான்மாவென்னும்புருஷனிடத்தும் அவ்வநாதித்தன்மை யுக்தியினுலும்,சுருதியினுலும் சித்திக்கின்றது. என்னை? சர்வப்பிராணிமாத்திரத்திற்கும் ஜநநகாலத்திலேயே சந்தோஷம், கிலேசம், பயம், சுகம், துக்கம், பிர

* ஆகாசமுதலிய பஞ்சமகாபூதங்களும், சுரோத்திராதிஞானேந்திரியங்களும், வாக்காதி கர்மேந்திரியங்களும், மனமும் ஆகிய இவை பதினாறும் விகாரங்களாம்.

† சுகதுக்கமோகரூபமாகிய சத்துவம், ரஜஸு, தமஸு என்னும் இவை மூன்றும் குணங்களாம்.



விர்த்தி முதலியவை உண்டாகின்றன; அவற்றில் இச்சநநத்தின் தர்மாதர்ம சம்ஸ்காரமோ காரணமாக இல்லை: பூர்வஜநநத்தின் சம்ஸ்காரங்களினுலேயே அவை யடையப்படுகின்றன. தர்மாதர்மமுதலியவை ஆசிரயமின்றிப் பொருந்தா; ஆதலால், இச்சநநத்திற்குப் பூர்வஜநநங்களிலும் ஜீவான்மா வுண்டெனக் கொள்ளல்வேண்டும்; இவ்வாற்றால், தர்மாதர்மமுதலியவற்றின் ஆசிரயத்தன்மைரூபமாகச் சீவான்மாவின்கண் அநாதித்தன்மை சித்திக்கின்றது; அன்றியும், ஜீவான்மாவை அநாதியாகக்கொள்ளாமல் உற்பத்தியுடையதாகக்கொள்ளின் * கிருதநாசம், † அகிருதாப்பியாகமம் என்னும் இவ்விருவகைத் தோஷங்கள் உளவாம்; இவ்விருவகைத் தோஷங்களி னிவிர்த்தியின்பொருட்டும் ஜீவான்மாவை அநாதியாகவே கொள்ளல்வேண்டும்; சுருதிகளும் ஜீவான்மாவை அநாதியாகவே கூறுகின்றன என்றறிக. (௧௮)

நண்ணிய குணத்தின்வே றின்மை நாட்டலாற்
கண்ணிய வினைகளுக் குடம்பு காரண
மெண்ணிய துன்பமோ டின்ப மென்றிவை
யுண்ணிய காரண முயிரொன் கின்றதே.

(இ-ள்.) நண்ணிய குணத்தின் வேறு இன்மை நாட்டலால்= (சுகதுக்கமோகரூபமாகப்) பொருந்திய சத்துவமுதலிய குணங்களின் சாமியாவஸ்தையையே பிரகிருதியெனக்கூறப்படுவதால்—கண்ணியவினைகளுக்கு=கருதிய ‡ காரிய $ காரணுகாரபரிணமங்கட்கு — உடம்பு காரணம்=மாயாரூபப்பிரகிருதியே காரணம் (எனக் கபிலாதிரிஷிகளாற் கூறப்பட்டிருக்கின்றது.)—எண்ணிய துன்பமோடு இன்பம் என்ற இவை = (பிரகிருதிஜந்யமாகக்) கருதிய துன்பம், இன்பம் என்ற இவைகளை—உண்ணிய காரணம் = உண்ணுநிற்கும் ஏதுவானது—உயிர் என்கின்றது=புருஷனென்று சொல்லப்படுகிறது.-எ-று.

ஏகாரம் - ஈற்றசை. என்ற இவை என்பதில் அகரவிகுதி தொக்கது. அசேதனமான பிரகிருதிக்குப் புருஷனது சந்நிதானத்தால் கர்த்திருத்துவமும், நிர்விகாரியாகிய புருஷனுக்குப் பிரகிருதியின் சந்நிதானத்தால் போக்திருத்துவமும் கூறப்பட்டனவென்றறிக. (௧௯)

* செய்தகன்மங்க ளநுபவியாமல் நாசமாயிற்றென்னுந்தோஷம்.
† செய்யாதகன்மங்க ளநுபவிக்கும்படி வந்ததென்னுந்தோஷம்.
‡ காரியம்=சரீரம்.
$ காரணம்=சுகதுக்க சாதனங்களான இந்திரியங்கள்.

நீதிலிவ் விரண்டனின் செய்கை யென்னெனி
னீதிபி னிவற்றையு நிகழக் கூறுவாம்.

(இ - ள்.) ஓதிய உடம்பிற்கும் = (முன்னே இதில் ஐந்தாஞ் செய்யுண்முதல் எட்டாவது செய்யுள்வரையிற்) கூறிய க்ஷேத்திரத்திற்கும்,—உயிர்க்கும்=க்ஷேத்திரக்ஞனுக்கும்—உண்மை ஆய் = வாஸ்தவமாக—ஆதி கண்டு அறிபவர்=காரணத்தை ஆராய்ந்தறிபவர்—யாரும் இல்லை=ஒருவருமில்லை; (ஆகலின், அவ்விரண்டனையும் அநாதியெனவும், *விகாரங்களும் † குணங்களும் க்ஷேத்திரமென்னும் பிரகிருதியினின்றே உற்பந்நமாயினவெனவும் நீ அறிதி.)—நீது இல் இவ்விரண்டனின் = குற்றமற்ற பிரகிருதியும், புருஷனும் ஆகிய இவ்விரண்டினது—செய்கை என் எனின் =செய்கை என்னையென்று நீ கேட்பாயாயின்—நீதியில் = சுருதியின்வழியாக—இவற்றையும் = இவ்விரண்டன் செய்கைகளையும்—நிகழக் கூறுவாம்=உனக்குத் தோன்ற இனிக் கூறுகிற்பாம்.—எ-று. ஆல்-அசைநிலை.

பிரகிருதிக்கும், புருஷனுக்கும் ஆதியில்லையெனவே விகாரங்கட்கும், குணங்கட்கும் ஆதியுண்டென்பது அர்த்தாபத்தியினாற் பெறப்படுதலின், இவை மாயாரூபப்பிரகிருதியினின்றே உற்பந்நமாயினவென்னும் மூலசுலோகத்தின் உத்தரார்த்தத்தை மொழிபெயர்த்தோர் கூறுதொழித்தனர். மாயையைப் பிரகிருதியென்றறி என்னுஞ் சுருதியானது மாயாரூபப்பிரகிருதியைத்தானே சர்வஜகத்திற்குங் காரணமாகக் கூறிற்று; இங்ஙனம், சர்வஜகத்திற்குங் காரணரூபப் பிரகிருதியின்கண் அநாதித்தன்மையுக்தமாம்; அப்படியன்று, மாயாரூபப்பிரகிருதிக்கும் வேறேயாதானு மொருகாரண முண்டெனக்கொள்ளின், அநவஸ்தாதோஷமாம்; ஆகலின், மாயாரூபப்பிரகிருதியின்கண் அநாதித்தன்மைகொள்ளற்பாலதே. மாயாரூபப்பிரகிருதியின்கண் அநாதித்தன்மை யுக்தியினாலும், சுருதியினாலும் சித்தித்ததுபோலச் சீவான்மாவென்னும்புருஷனிடத்தும் அவ்வநாதித்தன்மை யுக்தியினாலும்,சுருதியினாலும் சித்திக்கின்றது. என்னை? சர்வப்பிராணிமாத்திரத்திற்கும் ஜநநகாலத்திலேயே சந்தோஷம், கிலேசம், பயம், சுகம், துக்கம், பிர

* ஆகாசமுதலிய பஞ்சமகாபூதங்களும், சுரோத்திராதிஞானேந்திரியங்களும், வாக்காதி கர்மேந்திரியங்களும், மனமும் ஆகிய இவை பதினாறும் விகாரங்களாம்.

† சுகதுக்கமோகரூபமாகிய சத்துவம், ரஜஸு, தமஸு என்னும் இவை மூன்றும் குணங்களாம்.



விர்த்தி முதலியவை உண்டாகின்றன; அவற்றில் இச்சநநத்தின் தர்மா
தர்ம சம்ஸ்காரமோ காரணமாக இல்லை: பூர்வஜநநத்தின் சம்ஸ்காரங்
களினாலேயே அவை யடையப்படுகின்றன. தர்மாதர்மமுதலியவை
ஆசிரயமின்றிப் பொருந்தா; ஆதலால், இச்சநநத்திற்குப் பூர்வஜநநங்
களிலும் ஜீவான்மா வுண்டெனக் கொள்ளல்வேண்டும்; இவ்வாற்றால்,
தர்மாதர்மமுதலியவற்றின் ஆசிரயத்தன்மைரூபமாகச் சீவான்மாவின்
கண் அநாதித்தன்மை சித்திக்கின்றது; அன்றியும், ஜீவான்மாவை
அநாதியாகக் கொள்ளாமல் உற்பத்தியுடையதாகக்கொள்ளின் *கிருத
நாசம், † அகிருதாப்பியாகமம் என்னும் இவ்விருவகைத் தோஷங்கள்
உளவாம்; இவ்விருவகைத் தோஷங்களி னிவிர்த்தியின்பொருட்டும்
ஜீவான்மாவை அநாதியாகவே கொள்ளல்வேண்டும்; சுருதிகளும்
ஜீவான்மாவை அநாதியாகவே கூறுகின்றன என்றறிக. (௧௮)

நண்ணிய குணத்தின்வே றின்மை நாட்டலாற்
கண்ணிய வினைகளுக் குடம்பு காரண
மெண்ணிய துன்பமோ டின்ப மென்றிவை
யுண்ணிய காரண முயிரொன் கின்றதே.

(இ-ள்.) நண்ணிய குணத்தின் வேறு இன்மை நாட்டலால்= (சுகதுக்கமோகரூபமாகப்) பொருந்திய சத்துவமுதலிய குணங்களின் சாமியாவஸ்தையே பிரகிருதியெனக்கூறப்படுவதால்—கண்ணியவினைகளுக்கு=கருதிய ‡ காரிய $ காரணகாரபரிணமங்கட்கு — உடம்பு காரணம்=மாயாரூபப்பிரகிருதியே காரணம் (எனக் கபிலாதிரிஷிகளாற் கூறப்பட்டிருக்கின்றது.)—எண்ணிய துன்பமோடு இன்பம் என்ற இவை = (பிரகிருதிஜந்யமாகக்) கருதிய துன்பம், இன்பம் என்ற இவைகளை—உண்ணிய காரணம் = உண்ணுநிற்கும் ஏதுவானது—உயிர் என்கின்றது=புருஷனென்று சொல்லப்படுகிறது.-எ-று.

ஏகாரம் - ஈற்றசை. என்ற இவை என்பதில் அகரவிகுதி தொக்கது. அசேதனமான பிரகிருதிக்குப் புருஷனது சந்நிதானத்தால் கர்த்திருத்துவமும், நிர்விகாரியாகிய புருஷனுக்குப் பிரகிருதியின் சந்நிதானத்தால் போக்திருத்துவமும் கூறப்பட்டனவென்றறிக. (௧௯)

* செய்தகன்மங்க ளநுபவியாமல் நாசமாயிற்றென்னுந்தோஷம்.
† செய்யாதகன்மங்க ளநுபவிக்கும்படி வந்ததென்னுந்தோஷம்.
‡ காரியம்=சரீரம்.
$ காரணம்=சுகதுக்க சாதனங்களான இந்திரியங்கள்.

[பகவானே, "துன்பமோடின்ப மென்றிவை யுண்ணிய காரண முயிரொன்கின்றது" எனப் பூர்வம் க்ஷேத்திரக்ஞனை புருஷனிடத்துச் சுகதுக்கங்களின் போக்திருத்துவரூபமான சம்சாரித்தன்மை யருளிச்செய்தீர்; புருஷனது அச்சம்சாரித்தன்மையில் ஏதேனுமொரு நிமித்தமுண்டா? அல்லது, இல்லையா? இல்லையெனின்? அப்புருஷனிடத்து அச்சம்சாரித்தன்மை முத்திகாலத்தும் உளதாதல்வேண்டும். இத்தோஷ நிவிர்த்தியின்பொருட்டு ஏதேனும் நிமித்தம் அங்கீகரித்தல்வேண்டும்; ஆதலின், அந்நிமித்தம் யாதென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அதனை யருளிச்செய்கின்றார்.]

இவ்வுயி ரிவ்வுடம் பிதனி லேயிருந்
தவ்வுடல் பயத்திடுங் குணங்க ளானவை
துவ்விடு மிறந்திடுந் தோன்று மிக்குண
மெவ்வகா னுடையன வென்றி ருத்தலால்.

(இ-ள்.) இவ்வுயிர்=இந்த க்ஷேத்திரக்ஞனென்னும் புருஷனானவன்—இவ்வுடம்பிதனிலே இருந்து=இம்மாயாரூபப் பிரகிருதியின் கண்ணே (மித்தியாதாதான்மியபாவமுடையனாய்) நின்று — அவ்வுடல் பயத்திடும் குணங்களானவை=அந்தப் பிரகிருதியினால் ஜநிப்பிக்கப்பட்டசுகதுக்காதிகுணங்களை— துவ்விடும்=அநுபவியாநிற்பன்,—இக்குணம் எவ்வம் = இப்பிரகிருதியான்மகமான * குண † தோஷங்களில்—நான் உடையன என்று இருத்தலால்=(இவை)நான் (இவை) என்னுடையனவென்றிருக்குந்தாதான்மியரூபமான சங்கநிமித்தத்தால்—தோன்றும் இறந்திடும்=சதசத்துரூபமான யோனிகளில் ஜநித்து, மரியாநிற்பன்.—எ-று.

இங்கே கூறினதுபோலவே வாசிட்டத்தில், "சங்கமடியாப் பொருளுண்டாஞ் சங்கமடியா வாபத்தாஞ், சங்கமடியா வாசைவருஞ் சங்கமடியாப் பிறப்புண்டாஞ், சங்கமறுத்தல் வீடென்பர் சங்கமறுத்தல் பிறப்பறுத்தல், சங்கமறுத்துப் பொருள்களினீ தனிச்சீவனின்முத் திலைப்பெறுவாய்" எ-ம், "சாற்றுமலின வாதனையே சங்கமாம்" எ-ம் கூறியிருப்பது காண்க.

தேகேந்திரியாதிகளில் அபிமானரூபமான சங்கமே சம்சாரித்தன்மைக்கு நிமித்தமாமென்பது கருத்து. (உ0)

* 'குணம்' எ-து, சத்துவத்தை.

† 'தோஷங்கள்' எ-து, ரஜஸ்-, தமஸ்-களை.



[முற்செய்யுளில் பிரகிருதியின் மித்தியாதாதான்மியத்தினாலேயல்லாமல் சொரூபமாகப் புருஷனிடத்துச் சம்சாரித்தன்மை யில்லையென்றருளிச்செய்து இப்போது அப்புருஷனுடைய வாஸ்தவசொரூபமானது எவ்வாறுளதென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அப்புருஷனுடைய சொரூபத்தை நேரே காண்பிப்பவராய் அருளிச்செய்கின்றார்.]

உண்பன யாவையு முண்கின் றானுமெய்க்
கண்கொடெப் பொருளையுங் காண்கின் றானுமென்
னண்பவெப் பொருட்குமொத் திருக்கு நாதனு
மெண்செய்திவ் வுடம்பிலே நின்ற வீசனே.

(இ-ள்.) என் நண்ப = எனது தோழனான அருச்சுனா—எண் செய்து இவ்வுடம்பிலே = வலியுடையதாகச்செய்து இத்தேகத்தின் கண்ணே—நின்ற ஈசன் = ஜீவரூபமாகி இதற்கு வேறாய்நிற்கின்ற க்ஷேத்திரக்ஞனென்னும் புருஷனானவன்—உண்பன யாவையும் உண்கின்றானும்=புஜிப்பவைகளான சுகதுக்காதிகளனைத்தையும் புஜியாநிற்கும் போக்தாவும்,—மெய்க் கண் கொடு=மெய்ம்மையான தனது திருஷ்டியைக்கொண்டு—எப்பொருளையும் காண்கின்றானும்=தேகேந்திரியாதிகளனைத்தையுஞ் சமீபத்திருந்து பார்க்கின்ற உபதிருஷ்டாவும், (அநுமந்தாவும், பர்த்தாவும்,) — எப்பொருட்கும் ஒத்திருக்கும் நாதனும் = எவ்வகைப்பட்ட பொருளுக்கும் அதுவதுவாக இருக்கும் மஹேசுரனும், பரமான்மாவென்பவனும் ஆம்.—எ-று.

ஈசனே என்பதில் ஏகாரம் ஈற்றசை.

'ஈசன்' என்பதற்கு, ஈசுரனது உருவமான ஜீவனெனினுமாம். ஜீவரூபமான புருஷன் இத்தேகத்திருப்பினும் சர்வத்திற்கும் அந்நியனாய் உபதிருஷ்டா, அநுமந்தா, பர்த்தா, போக்தா, மஹேசுரன், பரமான்மா என்பவனும் என ஸ்ரீ பகவான் மூலசுலோகத்திற் கூறியிருப்பதை மொழிபெயர்த்த ஆசிரியர், 'உண்கின்றானும், காண்கின்றானும், நாதனும்' என ஏனைய மூன்றனை இம்மூன்றனுளடக்கிக் கூறினர்; இவ்வறுவகை விசேஷணங்களின் பொருள்; எக்ஞரூபகர்மம் நிறைவேற்றுதற்பொருட்டு வியாபாரமுடையரான இருத்விக், எஜமானரின் சமீபத்திலுள்ள அந்நியனான ஓர் புருஷன் எக்ஞத்தின் அநுகூலவியாபார மின்மையனாயினும் எக்ஞவித்தையிற் குசலனாதலால் அவ்விருத்விக், எஜமானரின் வியாபாரங்களிலுள்ள குணதோஷங்களைப்

பார்ப்பதுபோல க்ஷேத்திரக்ஞனான புருஷன் தேகேந்திரியாதிகளின் வியாபாரத்தில் தான் வியாபாரமுடையனாகாமல் விலட்சணனாய் வியாபாரமுடைய தேகேந்திரியாதிகளைப் பார்க்கின்றனன்: தேகேந்திரியாதிகளைப்போலத் தான் கர்த்தாவாக இல்லை; ஆதலால், இவ்வான்மதேவனான புருஷன், உபதிருஷ்டாவாம்; அல்லது, தேகம், சட்சுஸு, மனம், புத்தி, ஆன்மா இவ்வைந்து திருஷ்டாக்களுள்ளே, வாகியமான தேகமுதலிய நான்கு திருஷ்டாக்களை நோக்க அவ்வியவகிததிருஷ்டாவாகிய புருஷன் உபதிருஷ்டாவாம். உபதிருஷ்டாவென்னு மொழியில், உப என்னும் பதத்திற்குச் சமீபத்தன்மையென்று பொருள். அவ்வியவதானரூப சமீபத்தன்மையதென்னும் பொருள் பிரத்தியகான்மாவின்கண்ணேயே பொருந்தும்; அந்நியமான யாதோர் அநான்மாவின் கண்ணும் பொருந்தாது. தேகேந்திரியங்களின் பிரவிர்த்தியில் தான் பிரவர்த்தனாகாதிருந்தும் பிரவர்த்தனானவன்போலச் சமீபத்தன்மை மாத்திரத்தால் அவைகட்கநுகூலமாவதால், க்ஷேத்திரக்ஞனான புருஷன், அநுமந்தா வெனப்படுவன்; அல்லது, தத்தம் வியாபாரங்களிற் பிரவிர்த்தித்துள்ள தேகேந்திரியாதிகளை ஓர்போதும் தத்தம் வியாபாரங்களினின்றும் நிவிர்த்தமாகச்செய்யாத அத்தேகேந்திரியாதிகளின் சாட்சிரூபனான புருஷன், அநுமந்தாவெனப்படுவன். சைதந்நியத்தினாபாசத்தோடுகூடிச் சங்காதமான தேகேந்திரியாதிகளை க்ஷேத்திரக்ஞனான புருஷன் தனது சத்தாஸ்புரணங்களால் தாரணஞ்செய்வதனாலும், போஷணஞ்செய்வதனாலும் பர்த்தாவாம். புத்தியின் சுகதுக்க மோகரூபமாகிய விருத்திவிசேஷங்களைச் சொரூப சைதந்நியத்தால் பிரகாசஞ் செய்பவனான இவ்வான்மதேவன் நிர்விகாரனானாலும் அச்சுகாதிகளின் உபலப்தாவாம்; ஆகலின், போக்தாவாம். மஹானாயும், ஈசுரனாயும் யாவனுளன் அவன் மஹேசுரன். சர்வத்திற்கும் ஆன்மரூபமாவதால் க்ஷேத்திரக்ஞனான புருஷன் மஹான் எனப்படுவன். சுதந்தரனாவதால், ஈசுரன் எனப்படுவன்; அல்லது, காந்தக்கல்லின் சமீபத்தால் இரும்பு சேஷ்டிப்பதுபோல எதனுடைய சமீபமாத்திரத்தால் புத்திமுதலிய சர்வஜடபதார்த்தங்களும் நாநாப்பிரகாரமான சேஷ்டை செய்யாநின்றனவோ அந்த க்ஷேத்திரக்ஞனான ஆன்மா ஈசுரன் எனப்படுவன். அவித்தியாவசத்தால் ஆன்மசொரூபமாகக் கற்பனை செய்துள்ள தேகமுதல் புத்திபரியந்தமான சர்வஜடபதார்த்தங்களின் மேலாயுள்ளதைப் பரமமென்பர்; இவ்வாறு, பரமமான முன்சொன்ன உபதிருஷ்டாமுதலிய விசேஷண விசிஷ்டான்மா யாது அது பரமான்மாவாம் என்றறிக. (௨௧)



[பிரகிருதிபுருஷவிவேகஞானியை ஸ்துதிக்கின்றார்.]

இப்படி யுயிரையு மியாக்கை தன்னையு
மெய்ப்பட வறிந்தவன் வேட்ட வேநுகர்ந்
தொப்புர வன்றியே யொழுகி வாழினும்
பொய்ப்படு பிறவியின் மறித்தும் போகலான்.

(இ-ள்.) இப்படி உயிரையும் = முற்கூறியபடி உபதிருஷ்டாமுதலியரூபனான க்ஷேத்திரக்ஞனையும்,—யாக்கை தன்னையும் = (சுகதுக்காதிகுணசகித) பிரகிருதியையும்—மெய்ப்பட அறிந்தவன் = (குரு சாஸ்திரங்களின் உபதேசத்தால்) உள்ளபடியே சாட்சாத்கரித்தவன்—வேட்டவே நுகர்ந்து = (அதிப்பிரபலமான பிராரப்தகர்மவசத்தால்) தன்னால் விரும்பப்பட்ட போகங்களைப் புஜித்து—ஒப்புரவு அன்றியே = சாஸ்திரவிதியை அநுசரியாமலே—ஒழுகி வாழினும் = சஞ்சரித்துச்சீவிப்பினும்—பொய்ப்படு பிறவியில் = பொய்யாகிய ஜநநத்தின்கண்—மறித்தும் போகலான் = மீண்டுஞ் செல்லான்.—எ-று.

மெய்ப்படவறிதலாவது, க்ஷேத்ரக்ஞனான பொருளினை நான் எ-ம், க்ஷேத்ரரூபமான பிரகிருதியை மித்தை எ-ம் அறிதலாம். அவித்தையினாலே புருஷனுக்கு ஜநநமுளதாகலின், பிரமவித்தையினால் அவ்வவித்தியாரூபகாரணம் நாசமாம்; ஆகவே, அதன் காரியமான ஜநநமுதலியவையும் அபாவமாம்; அன்றியும், புண்ணியபாவ கர்மங்களாலேயே புருஷனுக்கு ஜநநம் உளதாகலின், புண்ணியபாவகர்மங்கள் ஞானிக்கு ஆன்மஞானத்தினாலேயே நாசமாகின்றன; அக்காரணத்தினாலும் ஆன்மஞானிக்கு மீண்டு ஜநநம் உளதாகாதென்க. 'ஒப்புர வன்றியே யொழுகி வாழினும்' என்ற உம்மையால், சாஸ்திரவிதியை உல்லங்கநஞ்செய்யாமல் தன்னுடைய சிரேஷ்டமான ஆசாரத்திலுள்ள தத்துவஞானி மீண்டு ஜநநமடையானென்று சொல்லவேண்டுவதென்னை யென்னுங் கைமுதிகந்நியாயம் ஸ்ரீ பகவான் சூசிப்பித்தனர். ()

[பூர்வமருளிச்செய்துள்ள பலத்தோடு கூடின ஆன்மஞானத்தில் அதிகாரிகளின் பேதத்தால் சாதனங்களின் விகற்பங்களை இப்போது இரண்டு செய்யுட்களால் ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

செறியுமிப் பொருளினைச் சிலர்தி யானமாங்
குறியினாற் றம்முளே காண் குவார்சில
ரறிவருஞ் சாங்கிய யோக மாகிய
நெறியினா லெங்குமாய் நிற்பக் காண்பரால்.

(இ-ள்.) செறியும் இப்பொருளினை = பிரமாதிஸ்தம்பபரியந்தமான சகலசரீரங்களிலும் நிறைந்திருக்கும் பிரத்தியக்சைதந்யமாகிய இவ்வான்மாவை—சிலர்=சில உத்தமாதிகாரிகள்—தியானம் ஆம் குறியினால் = தியானரூபமான ஆன்மசிந்தனத்தினால் — தம் உள்ளே காண்குவார்=தமது புத்தியின்கண்ணே சாட்சாத்கரிப்பர்.—சிலர்=சில மத்தியமாதிகாரிகள் — அறிவு அரும் சாங்கியயோகம் ஆகிய நெறியினால்=அறிதற்கரிய சாங்கியயோகமாகிய மார்க்கத்தால்—எங்கும் ஆய் நிற்பக் காண்பர்=(பிரத்தியகான்மாவைச்) சர்வத்திரவியாபகமாய்நிற்க(த்தமதுபுத்தியின்கண்ணே தியானத்தினுற்பத்திவாயிலாக)ச் சாட்சாத்கரியாநிற்பர்.—எ-று. ஆல்-அசைநிலை.

தியானமாவது, தைலதாரைபோலும் ஸஜாதீயவிருத்திப் பிரவாகரூபமான ஆன்மசிந்தனமாம்; இவ்வான்மசிந்தனம் சிரவணமனனங்களின்பலரூபமாம். இதனால் தேகாதிகளில் ஆன்மபுத்திரூபமான விபரீதபாவனைநிவிர்த்தியாம். சாங்கியயோகமாவது, பூர்வஞ்சொன்ன நிதித்தியாசனரூபமான தியானத்திற்குப் பூர்வஞ்செய்யாநிற்குஞ் சிரவண, மனனரூபமான ஆன்மசிந்தனம்; இவைகளால்முறையே பிரமாணகத அசம்பாவனையும், பிரமேயகத அசம்பாவனையும் நிவிர்த்தியாம் என்க.

[இதுவுமது.]

இருமையு மறிவதற் கிடமி லாதவ
ரொருமகன் றெய்வமென் றுரைத்த வொன்றையே
யருமையி லருச்சனை செய்வ ராலதன்
பெருமையி லவர்களும் பிறவி மேவிடார்.

(இ-ள்.) இருமையும் அறிவதற்கு இடம்இலாதவர்=(முற்செய்யுளிற்கூறிய தியானம், சாங்கியயோகம் என்னும்) இருவகை உபாயங்களாலும் (பிரத்தியகான்மாவைச்) சாட்சாத்கரித்தற்கு விசாலமானபுத்தியில்லாத சிலமந்ததராதிகாரிகள்—ஒரு மகன்=(பரமகாருணிகனான) ஒரு ஆசாரிபுருஷன்—தெய்வம் என்று உரைத்த=இதுவே தெய்வம், (இதனை இவ்வாறு சிந்தனஞ்செய்மின்) எனவுபதேசித்த—ஒன்றையே =ஒரு ஆன்மாவையே—அருமையில்=அத்தியந்தஞ் சிரத்தையினால்—அருச்சனை செய்வர்=சிந்தனஞ் செய்யாநிற்பர்.—அதன் பெருமையில் =அவ்வான்மசிந்தனத்தின் மகிமையினால்—அவர்களும்=(குருவினுபதேசசிரவணமாத்திரபராயணரான) அவ்வதிகாரிகளும்—பிறவி மேவிடார்=சம்சாரத்தை அதிக்கிரமணஞ் செய்வார்.—எ-று.

ஆல் - அசைநிலை.



இதன்றாற்பரியம்; தியானத்தின்கட் பிரவிர்த்தித்த அதிசயத்தன்மையால் இவர்க்குச் சித்தசுத்தியின்பொருட்டுக் கர்மங்களினபேட்சையுமில்லை. வேதத்திற்சொன்ன தத்துவத்தின்கண்ணே திடநிச்சயமிருப்பதால் அசம்பாவனை நிவிர்த்தியின்பொருட்டுச் சிரவணமனனங்களின் அபேட்சையுமில்லை என்பதாம்.

'இருமையும்' எ-து, மூன்றும் வேற்றுமைத்தொகை. 'அவர்களும்' என்ற இழிவுசிறப்பும்மையால், விசாரத்தின்கட் சாமர்த்தியமுடையபுருஷர் சம்சாரத்தை அதிக்கிரமணஞ்செய்யாநிற்பரென்று சொல்லவேண்டுவதென்னையென்னுங் கைமுதிகந்நியாயம் ஸ்ரீ பகவான் சூசிப்பித்தனரென்றறிக. இங்கே ஆன்மசிந்தனத்தை அருச்சனையென்று கூறியிருப்பதுபோலவே வாசிட்டத்தும், "அறிவுசம பாவனை சந்தோடமெனு மலர்களா லந்தத்தேவாம், பிறிவரிய வான்மதத் துவத்தையருச் சிப்பதே பெரியபூசை" என்று கூறியிருப்பது காண்க. ()

[அதிஷ்டானப்பிரமத்தினாசிரிதமாய், அவ்வதிஷ்டானப்பிரமத்தை விஷயம்பண்ணும் அநிர்வசனீயமான அவித்தையினாலேயே இச்சம்சாரம் உற்பந்நமாயிற்று. ஆதலால், அதிஷ்டானப்பிரமத்தை விஷயம்பண்ணுவதாயுள்ள ஆன்மஞானரூபமான பிரமவித்தையினாலே அவ்வவித்தை நீங்கிய அதிகாரிக்கு மோட்சமானது உளதாமென்னும் பொருளை நிச்சயித்தற்பொருட்டு இவ்வத்தியாய முடியும்பரியந்தம் சம்சாரத்தையும், சம்சாரநிவர்த்தகமான ஆன்மஞானத்தையும் விஸ்தாரமாக ஸ்ரீ பகவான் நிரூபணஞ்செய்யத்தொடங்கி இப்போது அபிமானரூபமான குணசங்கமே சம்சாரத்துக்குக் காரணமாமென்று பூர்வம் அருளிச்செய்த பொருளினையே வெளிப்படையாக நிரூபணஞ் செய்கின்றார்.]

போவன நிற்பவா மியாக்கை பூண்டுகொண்
டியாவருந் துயர்ப்படு கின்ற வீதெலா
மேவரு முடலுயிர் வேறு பாட்டினை
யாவகண் டறிவதோ ரறிவி லாமையே.

(இ - ள்.) போவன நிற்ப ஆம் யாக்கை பூண்டு கொண்டு = சரமும், அசரமும் ஆகிய உடல்களைத் தரித்துக்கொண்டு—யாவரும் = சர்வஜீவரும் — துயர்ப்படுகின்ற ஈது எலாம் = துன்பப்படுகின்ற இவையனைத்தும்—மேவ அரும்உடல்உயிர் வேறுபாட்டினை=பொருந்துதற்கரிய க்ஷேத்திரம், க்ஷேத்திரக்ஞரது விலட்சணத்தன்மையை—ஆவ கண்டறிவது ஓர் அறிவு இலாமையே = (மாயாவசத்தால்) விசாரித்தறியாத ஓரவிவேகமே.—எ-று.

'ஆவ' எ-து, ஆ ஆ என்னும் இரக்கக் குறிப்புச்சொல் ஆவ என மருவியது. அவித்தை, அதன் காரியங்களான அநிர்வசனீய திருசியப் பிரபஞ்சமுழுவதும் க்ஷேத்திரம்; அந்த க்ஷேத்திரத்தின் விலட்சணமாயும், க்ஷேத்திரத்தின் பிரகாசகமாயும், சொப்பிரகாசபரமார்த்த சத்தாயும், அசங்கோதாசீனமாயும், சர்வதர்மங்களும் விடுபட்டதாயுமுள்ள அத்துவிதீய சைதந்நியம் யாது அது க்ஷேத்திரக்ஞனும் என்க. (உ௫)

[அவிவேகத்தால் சம்சாரத்தினுற்பத்தி அருளிச்செய்து இப்போது சம்சாரநிவிர்த்திநிமித்தம் பிரகிருதியின் விலட்சணரூபமான ஆன்மாவின் சோபனதரிசனம் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

**கெடுகின்ற பூதங்க டோறுங் கெடாதே**
**வடுவின்றி நின்ற மறைப்பொரு டன்னை**
**நடுவென்று கண்டவ னல்லன வெல்லாங்**
**கடுகின்ற ணையொழி யாவகை கண்டான்.**

(இ-ள்.) கெடுகின்ற பூதங்கள் தோறும்=நாசமாகின்ற பூதங்கடோறும்—கெடாதே = நாசரகிதமாய்,—வடு இன்றி நின்ற=சகல தோஷங்களுமில்லாமற் சமமாய், நிர்விகாரரூபமாயுள்ள—மறைப்பொருள்தன்னை = சுருதியின் பொருளான (பரமேசுரரூபமென்னும்) ஆன்மாவை—நடு என்று கண்டவன்=சர்வபூதங்களிலும் ஏகரூபமாய்ச் சகல விகாரங்களும் விடுபட்டுள்ளது எதுவோ அதுவே நானென்று சாஸ்திர திருஷ்டியினாற் சாட்சாத்கரித்த வித்துவானானவன்—நல்லன எல்லாம்=மங்கலங்களனைத்தும்—கடுகின் துணை ஒழியாவகை கண்டான்=கடுகளவாவது தவிராது கண்டவனும்.—எ-று.

நல்லன=அநர்த்தநிவிர்த்தி, ஆநந்தப்பிராப்தி முதலியவை. (உ௬)

[முற்கூறிய ஆன்மதரிசனத்தைப் பலத்தோடுகூட ஸ்ரீபகவான் துதிக்கின்றார்.]

**ஒத்தெங்கு மாய வொருமைப் பொருளினை**
**யத்தன் மையினா லறியு மவனே**
**செத்தும் பிறந்துந் திரியா வகைதனை**
**மெய்த்தன் மையிலே புகவிடு கின்றான்.**

(இ-ள்.) ஒத்து எங்கும் ஆய=(ஸ்தாவரஜங்கமரூபமான) சர்வபூதங்களிலுஞ் சமமாய் நிறைந்திருப்பதாகிய—ஒருமைப் பொருளினை=



சகலபவவிகாரங்களும் விடுபட்ட ஈசுரரூபமான ஆன்மாவை — அத்தன்மையினால் அறியும் அவனே = அத்தன்மையாகச் சாட்சாத்கரிக்கும் அவ்வறிஞனே—செத்தும் பிறந்தும் திரியாவகை = மரித்தும், ஜனித்தும் சுழலாதபடி—தனை=(தன்னாலே) தன்னை—மெய்த் தன்மையிலே புக விடுகின்றான்=மெய்ம்மையான மோட்சகதியிலே புக விடுகின்றவனும்.—எ-று.

ஏகாரமிரண்டில் முன்னது பிரிநிலை. பின்னது ஈற்றசை. இங்ஙனங் கூறியவாற்றால், ஆன்மாவை யறியாதோர் தம்மாலே தம்மை அதோகதியிற் புகவிடுகின்றவரென்பது பெற்றாம். (உ௭)

[சுபாசுபகர்மங்களைப் பண்ணுகிறவனும், தேகந்தோறும் வேறு வேறாய் அவ்வச் சுகதுக்காதிரூபமான விசித்திரபயனைப் புஜிக்கிறவனுமுள்ள விஷமசுபாவமுடைய ஆன்மாவைச் சர்வபூதங்களிலும் ஏகமாகக்காண்கை எவ்வாறு கூடுமென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

**உணர்வவி காரியென் றும் வினையெலா முடம்பினோடே**
**புணர்வன வென்றுங்கண்டான் பொய்யிலா மெய்யைக்கண்டா**
**னிணர்மலர் முடியாயெல்லா வினைகளுஞ் செயினுமான்மா**
**குணமிலி யாதலாலே யவற்றொடுங் கூடிநில்லான்.**

(இ-ள்.) உணர்வு அவிகாரி என்றும்=க்ஷேத்திரக்ஞனை புருஷன் விகாரமற்றவனென்றும்,—வினை எலாம்=லௌகிக, வைதிகமான சர்வகர்மங்களும்—உடம்பினோடே புணர்வன என்றும் = (தேகேந்திரியாதி ஆகார பரிணாமமுடைய) பிரகிருதியினுடனே சம்பந்தமுடையனவென்றும்,—கண்டான்=(சாஸ்திரரூபமான சட்சுவினாற்) கண்ட விவேகிபுருஷனே—பொய் இலா மெய்யைக் கண்டான் = பரமார்த்ததரிசியாம். (ஆகாசத்தில் கடமடாதி உபாதிதிருஷ்டியினாற் பேதமேயல்லாமல் ஆகாசத்தின் சொரூபதிருஷ்டியினாற் பேதமில்லாததுபோல, ஆன்மாவின்கண்ணும் சரீரவுபாதி திருஷ்டியினாலல்லாமல் சொரூபதிருஷ்டியினால் பேதமும், கர்த்திருத்வ போக்திருத்வமும் இல்லையென்பது கருத்து.) [ஆன்மா சுபாவத்தால்அகர்த்தாவாயினும் சரீர சம்பந்தரூப உபாதியினால் கர்த்தாவாகலாமே யென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.] இணர் மலர் முடியாய்=கொத்தாகிய மலர்களாற் றொடுத்தமாலையை யணியப்பெற்ற கிரீ

அருச்சுனா—எல்லா வினைகளும் செயினும்—(சரீரமா
டத்தையுடைய அருச்சுன) சர்வகர்மங்களையுஞ்செய்யினும்—ஆன்மா
னது லௌகிக வைதிகமான) சர்வகர்மங்களையுஞ்செய்யினும்—ஆன்மா நிர்க்குணனாதலால்—அவற்றொடும்
குணம் இலி ஆதலால்=ஆன்மா நிர்க்குணனாதலால்—அவற்றொடும்
கூடி நில்லான்=அக்கர்மங்களோடுஞ்சம்பந்தித்திரான்.—எ-று.

அநாதியாகலானும், நிர்க்குணனாகலானும் பரமான்மா அவ்விய
யன்; இப்படிப்பட்ட ஆன்மா சரீரத்தின்கண்ணிருப்பவனானாலும் கர்
மங்களைச்செய்பவனுமல்லன், கர்மபலன்களிற் சம்பந்தமுடையனுமல்
லன் என்பார், 'எல்லா வினைகளுஞ் செயினுமான்மா, குணமிலி யாத
லாலே யவற்றொடுங் கூடிநில்லான்'என்றார். எது உற்பத்தியுடையதோ
அதற்கவசியம் ஆதியுண்டு. குணங்களோடுகூடியவஸ்து யாது அது
குணநாசத்தால் ரூபாந்தரப்பிராப்திரூப விகாரமுமுடையதாம். பரமா
ன்மா அநாதி,நிர்க்குணன் என்னுமேதுவினால் அவ்வியயன். யாதொரு
காரணத்தால் இவ்வான்மதேவன் ஜன்மம், அஸ்தி, விர்த்தி, விபரி
ணமம், அபட்சயம், விநாசம் என்னும் ஷட்பாவ விகாரரகிதனோ அக்
காரணத்தினால் ஆத்தியாசிகசம்பந்தத்தால் இச்சரீரத்திலிருப்பவனானா
லும் இச்சரீரம் கர்மங்களைப்பண்ணுமிடத்துக் கர்மங்களைப்பண்ணுகிற
வனும், கர்மபலன்களோடு சம்பந்திப்பவனுமல்லன் என்பதாம். (௨௮)

[ஆன்மா சரீரத்தின்கண்ணிருந்தும் அசங்கனாதலால் அச்சரீரத்
தின் கர்மங்களோடு சம்பந்தமுடையனாகான் எனப் பூர்வம் அருளிச்
செய்தபொருளில் இப்போது திருஷ்டாந்தம் அருளிச்செய்கின்றார்.]

உன்னிய வானமெங்கு மொழிவற நிறைந்ததேனுந்
தன்னுடை நுண்மையாலே பிறவொடுஞ் சார்தலுண்டோ
பன்னிய விதுபோலெங்கும் பரந்துள னெனினுமங்கு
மன்னிய வீசனந்த வுடம்பொடு மருவமாட்டான்.

(இ-ள்.) உன்னிய வானம்=கருதிய ஆகாயமானது—எங்கும்
ஒழிவற நிறைந்ததேனும்=கடமடமுதலிய தீயன, நல்லனவான மூர்
த்த திரவியங்களில் உள்ளும், புறம்பும் வியாபித்திருப்பதானாலும்—
தன்னுடை நுண்மையாலே=தனது அசங்க சுபாவத்தினாலே—பிற
வொடும் சார்தல் உண்டோ = அந்நியமான மூர்த்ததிரவியங்களின்
(சுகந்தம், தூர்க்கந்தம், மழை, வெய்யில், அக்கினி, புகைமுதலிய குண
தோஷங்களோடு) சம்பந்தித்தலுண்டா — பன்னிய இதுபோல்=
சொல்லிய இவ்வாகாசம்போல—எங்கும் பரந்துளன் எனினும்=தேவ,
மநுட, பசு, பட்சியாதிகளென்னும் உயர்வு தாழ்வான தேகங்களில்



உள்ளும், புறம்பும் வியாபித்திருப்பவனானாலும் — மன்னிய ஈசன்=
நிலைபேறுடைய ஆன்மதேவன் (அசங்க சுபாவமுடையனாதலால்,)—
அந்த உடம்பொடு மருவமாட்டான்—அத்தேகங்க(ளாற் செய்யாநிற்
குஞ் சுபாசுபகர்மங்க)ளோடு சம்பந்தப்படான்.—எ-று. (௨௯)

[அன்றியும், பிரகாசத்தன்மைரூபவேதுவினாலும் இவ்வான்ம
தேவனிடத்து ஒன்றோடுஞ் சம்பந்தமின்மையுளதென்னும் பொருளைத்
திருஷ்டாந்தத்தோடும் அருளிச்செய்கின்றார்.]

இரவிதா னொருவனேயாய் நின்றிந்த வுலகத்தெங்கும்
விரவிய விருளைநீக்கி விளக்குறு மாறுபோலத்
தரவியா வருமுன்னில்லாச் சராசர வுடம்புதோறும்
பரவியா னுரைத்தமாயோ னொருவனே பரந்துநிற்பான்.

(இ-ள்) இரவி=சூரியனானவன்—தான் ஒருவனே ஆய் நின்று
=தானொருவனேயாகிநின்று—இந்த உலகத்து எங்கும்=(இவ்வுல
கில் உருவமுடைய தேகமுதலிய) சர்வவஸ்துக்களிலும் — விரவிய
இருளை நீக்கி=பொருந்திய அந்தகாரத்தையகற்றி—விளக்குறும் ஆறு
போல=(அவைகளைப்) பிரகாசிப்பிக்குந் தன்மைபோல—தர யாவரும்
முன் இல்லா=(தம்மை) யுண்டாக்குதற்கு யாவரொருவரையும் முன்
னேயுடையராகப்பெறாத—சர அசர உடம்புதோறும்=நடப்பன நிற்
பனவான சரீரங்கடோறும்—பரவி யான் உரைத்த=புகழ்ந்து யான்
முன்னருளிச்செய்த—மாயோன் ஒருவனே=க்ஷேத்திரக்ஞனான ஆன்
மாவொருவனே—பரந்துநிற்பான்=வியாபித்து அவைகளைப் பிரகாசிப்
பித்துநிற்பன்.—எ-று.

இங்ஙனங் கூறியவாற்றால், பகவான் இவ்வநுமானஞ் சூசிப்பித்
தனர்; அவ்வநுமானமாமாறு: க்ஷேத்திரக்ஞனான ஆன்மா க்ஷேத்திர
த்தின் தர்மங்களோடு சம்பந்தப்படான்; அப்படியே க்ஷேத்திரத்தின்
பேதத்தால் பேதத்தையுமடையான். அந்த க்ஷேத்திரங்களின் பிரகாசக
மாவதால்; யாதொன்று யாதொரு வஸ்துவின் பிரகாசகமாமோ அது
அந்தப்பிரகாசியவஸ்துக்களின் தர்மங்களோடு சம்பந்தப்படமாட்டாது;
அப்படியே அந்தப் பிரகாசியவஸ்துக்களின் பேதத்தால் பேதத்தையு
மடையமாட்டாது; சூரியன்போல என்க. (௩௦)

ஸ்ரீ பகவான் இவ்வத்தியாய அர்த்தத்தைப் பலத்தோடுகூட உப
சம்மாரஞ் செய்கின்றார்.]

ஓரின்மே லாகிநின்ற வுயிரினோ டெம்புக்குள்ள
பேரினோ டிறப்புமூப்பு பிறப்பெனு மிவற்றைவேறாய்ப்

பாரின்மே லறிவார்வீடு பற்றினா ரென்றான்பார்த்தன்
றேரின்மே னின்றேவேத சிரத்தின்மே லிருக்குஞ்சீரோன்.

(இ-ள்.) ஓரின் = ஆராயுமிடத்து—மேல் ஆகி நின்ற = (தேகேந்திரியாதிகளனைத்திற்கும்) அதீதமாய் நிற்கின்ற — உயிரினோடு = க்ஷேத்ரக்ஞனோடு—உடம்புக்கு உள்ள பேரினோடு பிறப்பு மூப்பு இறப்பு எனும் இவற்றை = க்ஷேத்ரத்தையும் அதற்குரிய நாமகற்பனையோடு ஜன்மஜராமரணமென்னுந் தர்மங்களையும்—வேறு ஆய் = விலட்சணமாய்—பாரின்மேல் அறிவார் = பூமியின்கண் (ஞானரூபமான சட்சுவினால்) அறியாநிற்பவர்—வீடு பற்றினார் என்றான் = கைவல்லியமுத்தியைப் பொருந்தினவராவர் என்றருளிச்செய்தனர்—பார்த்தன் = அருச்சுனனது—தேரின்மேல் நின்றே = இரதத்தின்மீது (திவ்வியமங்களமூர்த்தமாய்) நின்றே—வேத சிரத்தின்மேல் இருக்கும் சீரோன் = வேதத்தின் சிரசாகிய தத்துவமஸியாதிவாக்கியங்களில் அவற்றின் பொருளாய் வீற்றிருக்கும் ஸ்ரீ பகவான்.—எ-று. (௩௧)

## ௧௩-வது. க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞவிபாகயோகவத்தியாயம்

முற்றிற்று.

ஆக அத்தியாயம் ௧௩-க்குத் திருவிருத்தம்-௩௧௧.

---

## ௧௪-வது * குணாதீதவத்தியாயம்.

[பூர்வம் பதின்மூன்றாமத்தியாயத்தில் க்ஷேத்திரம், க்ஷேத்திரக்ஞனென்னும் இரண்டன்சம்யோகத்தால் சர்வஸ்தாவரஜங்கமபூதங்களினுற்பத்தி அருளிச்செய்ததால் ஈசுரனை அங்கீகாரஞ்செய்யாத நிரீசுரசாங்கியமதத்தைக் கண்டித்து அந்த க்ஷேத்திரம், க்ஷேத்திரக்ஞரது சம்யோகத்திற்கு ஈசுராதீனத்தன்மை யுளதென்பதும், அதில் குணசங்கத்தையே ஜன்மத்திற்குக் காரணமென் றருளிச்செய்ததால் இந்த இந்தக்குணத்தில் இந்த இந்தப்பிரகாரமாகச் சங்கமுளதென்பதும், அக்குணங்கள் இவையென்பதும், அக்குணங்கள் இந்தப்பிரகாரமாகச் சீவனைப் பந்திக்கின்றனவென்பதும், சத்துவாதி குணங்களினின்றும் அதிகாரிக்கு இவ்வாறு முத்தியுளதாமென்பதும், முத்தனான புருஷனுக்கு லட்சணம் இவையென்பதும் அவசியமாகவருளிச்செய்ய வேண்டும் ஆகலின், இவைகளை விஸ்தாரமாகவருளிச்செய்யும்பொருட்டு ஸ்ரீ பகவான் இப்பதினான்காமத்தியாயம் ஆரம்பிக்கின்றார்.]

* வடமொழியில், குணத்திரயவிபாகயோகமென்று பெயர்.



[மொழிபெயர்த்தோர் அத்தியாய ஆரம்பத்திற்கடியிடல்.]

செய்ய மாமலர் மேலுறை செல்வியும்
வைய மாமட வாளு மகிழ்ந்ததோ
ளையன் மெய்யையன் பாலடி யோமெலா
முய்ய மீள வுரைக்கத் தொடங்கினான்.

(இ-ள்.) செய்ய மா மலர்மேல் உறை செல்வியும் = அழகிய தாமரைமலரின்கண்ணே வீற்றிருக்குஞ் சீதேவியும்,—வையம் ஆம் மடவாளும் = பூதேவியும்—மகிழ்ந்ததோள் ஐயன் = அணைந்து சந்தோஷிக்கப்பட்ட திருப்புயங்களையுடைய ஸ்ரீபகவான்—மெய்யை = மெய்ம்மையான ஞானத்தை—அன்பால் = கருணையினால்—அடியோம் எலாம் = யாங்களெல்லாம் — உய்ய = பிழைக்க—மீள உரைக்கத் தொடங்கினான் = மீட்டும் அருளிச்செய்யவாரம்பித்தனர்.—எ-று. (௧)

[அருச்சுனனுக்கு ருசியுண்டாக்குவித்தற்பொருட்டு இனிக்கூறப்படும்பொருளை இப்போது இரண்டுசெய்யுட்களால் ஸ்ரீ பகவான் ஸ்துதிக்கின்றார்.]

நல்ல வாறறி வியாதினு நல்லது
வல்ல றீர்தவத் தோர்க்கறி வாவது
மல்லு லாவிய தோண்முடி மன்னயான்
சொல்லன் மேய வதன்றுணி வாயதே.

(இ-ள்.) நல்ல ஆறு அறிவு யாதினும் நல்லது = மகம், தவமுதலிய ஞானத்தின் பகிரங்கசாதனங்களனைத்தினுள்ளும் உத்தமமானது,—அல்லல் தீர் தவத்தோர்க்கு அறிவாவது = துன்பநீங்கிய தவத்தினையுடைய முனிவர்கட்கு அறிவாயிருப்பது;—மல் உலாவிய = வலிபொருந்திய—தோள் முடிமன்ன = புயத்தையும், கிரீடத்தையுமுடைய அருச்சுனா—யான் சொல்லன் மேய = யான் சொல்லத்தொடங்கிய—அதன் துணிவாயது = அந்தஞானத்தின் துணிவானது.—எ-று.

'தவத்தோர்க்கறிவாவது' என்று இங்கே கூறினதுபோலவே பிரமகீதையில், 'அரிக்குமுனிகட்குமரனுக்குமறிவீதே' என்று கூறியிருப்பதுகாண்க. (௨)

[சாதனரூபமான ஞானமடைந்த புருஷர்க்கு மோட்சரூபமான பாமசித்தி அவசியமாகவுளதாமென்னுநியமத்தை இப்போது ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

இன்ன தன்மையின் ஞானத் தியற்கையா
லென்னை வந்தடைந் தாரிவ் வுலகினிற்

பின்னை வந்தடை யாரிற வாரிதன்
றன்மை யாதெனி லாங்கதுஞ் சாற்றுவாம்.

(இ-ள்.) இன்ன தன்மையின் = இப்படிப்பட்ட தன்மையையுடைய—ஞானத்து இயற்கையால்=ஞானத்தின் சுபாவாநுஷ்டானத்தால்—என்னை வந்து அடைந்தார்=(அத்துவிதீய நிர்க்குண சொரூபனை) என்னை (அத்தியந்தம்) அபேதமாக அடைந்த வித்துவான்களான புருஷர் — இவ்வுலகினில்= இவ்வுலகின்கண் — பின்னைவந்து அடையார்=மீண்டு (சிருஷ்டிகாலத்திலும்) உற்பன்னமாகார்:—இறவார்=(பிரளயகாலத்திலும்) லயமாகார்; — இதன் தன்மை யாது எனில்=இப்படிப்பட்ட ஞானத்தின் சுபாவம் ஏதென்று நீ வினவில், —அதுவும் சாற்றுவாம்=அதனையும் இனிக்கூறுவாம்.—எ-று. ஆங்கு-அசைநிலை. (௩)

[இவ்வாறு இரண்டு செய்யுட்களால் ஞானத்தைத்துதித்துக் கேட்பவனை அதில் அபிமுகமாக்கி இப்போது பரமேசுரனது அதீனமாயுள்ள அந்தப்பிரகிருதி, புருஷர் என்னும் இரண்டிற்குமே சர்வபூதங்களினுற்பத்தியின் காரணத்தன்மையுண்டு. சாங்கிய சாஸ்திரத்திற்போலச் சுதந்திரமானபிரகிருதி, புருஷரிடத்திற் சர்வபூதங்களின் காரணத்தன்மை இல்லையென்று இரண்டு செய்யுட்களால் ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

மூத வாவென் குணமவை மூன்றினும்
பேத மாகும் பிரகிருதி தன்னிலே
காதலால் வைப்பன் யான்கரு வக்கருப்
பூதம் யாவும் புலப்படு கின்றவே.

(இ-ள்.) மூதவா = முதிர்ந்ததவத்தையுடைய அருச்சுனா—குணமவைமூன்றினும் பேதம் ஆகும்=(இனிக்கூறப்படுஞ்) சத்துவாதிமுக்குணங்களாற் பேதமாகப் பரிணமங்களையடையும்—என் பிரகிருதிதன்னிலே=(கர்ப்பாதாநத்துக்கு ஸ்தானமான) எனது மாயையின்கணே—காதலால்=(உலகைச்சிருஷ்டிப்பாமென்னும்) இச்சையினால்—யான் கரு வைப்பன்=யான் சங்கற்பரூபமானகருப்பத்தைத் தரிப்பிப்பேன்;—அக்கரு = அக்கர்ப்பாதாநத்தினாலேயே — பூதம் யாவும் = பூதங்களனைத்தும்—புலப்படுகின்றவே=உற்பந்நமாகின்றன.—எ-று.

ஏகாரம்-ஈற்றசை. இவ்வுலகின்கண்ணே ஓர்பிதாவானவன் புண்ணியபாவத்தோடுகூடினவனும், நெல்முதலிய ஆகாரரூபமாகத் தன்னிடத்து லீனமாயுள்ளவனுமானபுத்திரனைத் தூலசரீரத்தோடு சம்பந்திப்



பிக்கும்பொருட்டுத் தனது ஸ்திரீயினுடைய யோநியில் வீரியத்தை விடுவதுவாயிலாகக் கருப்பத்தைத்தரிப்பிக்க அக்கர்ப்பாதாநத்தால்அந்தப்புத்திரன் தூலசரீரத்தோடு சம்பந்தமுடையவனாக எப்படி ஆகின்றனனோ சரீரசம்பந்தத்தின்பொருட்டு மத்தியில்*கலிலம், புற்புதமுதலிய அநேக அவஸ்தைகள் எப்படி உண்டாகின்றனவோ அப்படி பிரளயகாலத்தில் பரமேசுரனிடத்தே லீனமாகிய அவித்தை காமகர்மங்களையுடைய க்ஷேத்திரக்ஞானசீவர்க்குச் சிருஷ்டிகாலத்தில் காரியகாரண சங்காதரூப போக்கியமான க்ஷேத்திரத்தோடுகூடச் சம்பந்திப்பிக்கும்பொருட்டுப் பரமேசுரனான நான் சிதாபாசரூபமான வீரியத்தை விடுவதுவாயிலாக மாயாவிருத்திரூபமான கருப்பத்தைத் தரிப்பிக்கிறேன்; சரீரசம்பந்தத்தின்பொருட்டே மத்தியில் ஆகாசம், வாயு, அக்கினி, ஜலம், பிருதுவி முதலியவற்றின் உற்பத்திரூபமான அவஸ்தை உண்டாகின்றது. மாயாரூபமானயோநியின்கண் பரமேசுரனான என்னாற்செய்யப்பட்ட கருப்பாதாநத்தினாலேயே இரணியகர்ப்பன்முதலிய சர்வபூதங்கட்கும் உற்பத்தி உண்டாகின்றதென்பதாம். (௪)

[பகவானே தேவர்முதலிய தேகவிசேஷங்கட்கு வேறேயுங்காரணங்களுண்மையின், மாயாரூபமான யோநியின்கண் உம்மால் பண்ணப்பட்ட கருப்பாதாநத்தால் சர்வபூதங்களினுற்பத்தி எவ்வாறு கூடுமென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீபகவான் அருளிச்செய்கின்றார்.]

இந்த வண்ணத்தி னாலிவ் வுலகிடை
வந்த யோனி யெலாம்வரு வித்திடுந்
தந்தை யானவை யீன்றளிக் கின்றதா
யந்த வென்னுடை மாயைய தாகுமால்.

(இ-ள்.) இந்த வண்ணத்தினால்=முன்சொல்லியவிதத்தினால்—இவ்வுலகிடை=இவ்வுலகின்கண்—யோனி=(தேவர், பிதுரர், மநுடர், பசுமுதலிய) சர்வயோநிகளிலும்—வந்த எலாம்=உற்பந்நமானமூர்த்திகளனைத்தையும்—வருவித்திடும் தந்தை யான்=உற்பந்நமாக்குங் கருப்பாதாநகர்த்தாவாகிய பிதாபரமேசுரனான நான்;—அவை ஈன்று அளிக்கின்ற தாய்=அம்மூர்த்திகளைப்பெற்று வளர்க்கின்ற மாதாவானவள் —அந்த என்னுடை மாயையது ஆகும்=முன்சொல்லிய பரமேசுரனான என்னுடைய அவ்வியாகிருதமென்னும் மாயையாம்.—எ-று. ஆல்-அசைநிலை.

இப்படியே ஈசுரகீதையில், "எந்தயோ னியிற்பிறப்பா ரியார்க்குந்தா யென்மாயை, தந்தையா னெனவறிவார் சனனவினை தப்புவரா,

* கலிலம்=கலங்குதல்.

லெந்தையா யெனையறியா திருப்பவனென் மாயையினுற், பந்தமாமி யோனிதொறுற் பவித்திறந்து பதைப்பர்களால்" என்று கூறியிருப் பதுகாண்க.

மூர்த்திகள் எ-து, சராயுஜ, அண்டஜ, சுவேதஜ, உத்பிஜபேதத் தால் நாநாப்பிரகாரமான ஆகாரமுடைய சரீரங்களை; இங்ஙனங்கூறிய வாற்ருல், தேவாதி சரீரங்கட்கு லோகப்பிரசித்தமாக எவ்வெக்காரணங் கள் தோன்றுகின்றனவோ அவ்வக்காரணங்கண்முழுதும் அவ்வியா கிருதமென்னும் பெயருடைய மாயையின் அவஸ்தா விசேஷங்களே யென்பது பெறப்படுகின்றது. (ருa)

[மேல் இரண்டுசெய்யுட்களால் பரமேசுராதீனமான பிரகிருதி, புருஷரின் வாயிலாகப் பிராணிகளின் உற்பத்தி நிரூபணஞ்செய்து இப்போது பிரகிருதியின் சங்கத்தால் புருஷனுக்குச் சம்சாரமாகிய அவஸ்தையுளதாமென்பதை இதுமுதல் ஐந்துசெய்யுட்களால் விஸ்தார மாக வருளிச்செய்கின்ருர்.]

ஏன்று முன்னங் குணமென் றியம்பிய
மூன்று மூலப் பிரகிருதி தன்னிலே
தோன்றி யுள்ளன தொல்லறி வைப்பற்றி
யூன்றி நிற்ப வவற்றை யுணர்த்துவாம்.

(இ-ள்.) குணம் என்று முன்னம் ஏன்று = குணமாக முன்னே நான்காஞ்செய்யுளில் அங்கீகரித்து—இயம்பிய மூன்றும் = யான் அரு ளிச்செய்த மூன்றும்—மூலப்பிரகிருதி தன்னிலே = (ஈசுரனதுமாயை யென்னும்) மூலப்பிரகிருதியினின்றே — தோன்றி உள்ளன = உண் டாயிருக்கின்றன:—தொல் அறிவைப்பற்றி ஊன்றி நிற்ப = அவ்விய ரூபமான ஜீவான்மாவைப்பிடித்து (இத்தேகத்தின்கண்ணே) பலமாகப் பந்தித்துள்ளன;—அவற்றை உணர்த்துவாம் = இனி அக்குணங்களின் நாமங்களையும், அவை ஜீவான்மாவைப் பந்திக்கும் பிரகாரத்தையும் அறிவிப்பாம்.—எ-று. (௬)

[அக்குணங்களின் நாமம் இவை எனக் கூறுகின்ருர்.]

சத்து வமரச சோடு தமசென
வுய்த்து வந்த பெயரா யுடையன
வெத்து வந்துவ முந்தரு கிற்பன
மெத்து வந்தவற் றின்செயல் வேறுகேள்.

(இ-ள்.) (ஜீவான்மாவைப் பந்தித்துநிற்குங்குணங்கள்) சத்து வம் ரசசோடு தமசு என = சத்துவமெனவும், ரஜஸெனவும், தமஸென வும்—உய்த்து வந்த பெயரை உடையன = (பெரியோர்களால்) இடப் பெற்று வந்த நாமங்களையுடையன:—எத் துவந்துவமும் தருகிற்பன = சுகதுக்காதிகளான எவ்வகைப்பட்ட துவந்துவங்களையும் ஜீவான் மாவுக்குக் கொடுப்பனவாம்;—மெத்து வந்த அவற்றின் = மிகுதியாய் வந்த அச்சத்துவாதி குணங்களின்—செயல் வேறு கேள் = செய்கை யின் வேறுபாட்டைக் கேட்பாய்.—எ-று.



சத்துவமுதலிய முக்குணங்களும் சைதந்நியனை புருஷனைக்குறி த்து நித்தியம் பரதந்திரமுடையன: ஓர்போதுஞ் சுதந்திரமுடையன வாகா. நையாயிகர் உருவமுதலிய குணங்களைப் பிருதுவிமுதலிய திரா வியங்களினுசிரிதமாக எப்படிக் கொண்டனரோ அப்படிச் சத்துவமுத லிய குணங்கள் யாதேனுமொரு திரவியத்தினுசிரிதமாக இல்லை. நையாயிகர் பிருதுவிமுதலிய குணியாகிய திரவியத்தினும் உருவமுத லியகுணங்களை எப்படிப் பின்னமாகக்கொண்டனரோ அப்படி சித்தாந் தத்தில் சத்துவாதிகுணங்களை மாயாரூபமான பிரகிருதியினும் பின்ன மாகச்சொல்லவில்லை.என்னை? சித்தாந்தத்தில் மாயாரூபமானபிரகிருதி சத்துவமுதலிய முக்குணரூபமாகவேயுள்ளதாகலின்; அங்ஙனம், சத்து வாதி முக்குணங்களும் பிரகிருதிரூபமேயாயின், "மூலப்பிரகிருதிதன் னிலே தோன்றியுள்ளன" என்னும் வசனத்தால் பிரகிருதியினின் றும் அம்முக்குணங்களின் உற்பத்தி என்ன நிமித்தங்கூறப்பட்டதென் னின்? சத்துவமுதலிய முக்குணங்களின் சாமியாவஸ்தைக்குப் பிரகி ருதியென்றுபெயர்; இப்படிப்பட்ட மாயாரூபமான பிரகிருதியினின் றும் சத்துவமுதலிய முக்குணங்களும் பரஸ்பரம் அங்காங்கிபாவமாக வும், விஷமத்தன்மையாகவும் பரிணாமமடைகின்றன; இக்காரணத்தால் அச்சத்துவமுதலியகுணங்கள் மூலப்பிரகிருதியினின்றும் உண்டாயின வென்று கூறப்பட்டதென்றறிக. வாஸ்தவமாக நிர்விகாரரூபமான ஜீவான்மாவைச் சத்துவமுதலிய குணங்கள் தமது விகாரங்களோடு கூடினவன்போலக் காட்டாநிற்பதே சத்துவாதிகுணங்களால் ஜீவான் மாவிடத்துப் பண்ணப்பட்ட பந்தமாம்; இவ்வாறே இனிவருஞ் செய் யுட்களிலும் அறிக. (எ)

[அக்குணங்களுள்ளே, சத்துவகுணத்தின் சொரூபமும், அது பந் திக்கும் பிரகாரமுங் கூறுகின்ருர்.]

பற்று மாசின்மை யாற்பளிங் கொப்பது
வுற்ற நல்லறி வானதுண் டாக்குவ
தெற்று மின்பமல் லாற்றுன்ப மென்பது
சற்று மில்லது சத்துவ மாவதே.

(இ-ள்.) சத்துவமாவது = சத்துவகுணமாவது,—பற்றும் மாசு இன்மையால் = நிர்மலத்தன்மையினால்— பளிங்கு ஒப்பது = ஸ்படிக மணிபோலப் பிரகாசமாயுள்ளது:—உற்ற நல் அறிவானது உண்டாக்குவது = அநுகூலமான நல்ல ஞானத்தை யுண்டுபண்ணுவது;—எற்றும் இன்பம் அல்லால் = என்றும் சுகாபிவியஞ்சகமாவதல்லாமல்—துன்பம் என்பது சற்றும் இல்லது = துக்கமென்பது கொஞ்சமுமில்லாததாம்.—எ-று.

இவ்வாறான சுகசங்கத்தினாலும், ஞானசங்கத்தினாலும் சத்துவகுணமானது ஜீவான்மாவைப் பந்திக்கிறதென்பது எஞ்சிநின்றது. இங்கேசுகமென்றும், ஞானமென்றுங்கூறினது ஆன்மசொரூபமான சுகத்தையும், ஞானத்தையுமல்ல; அந்தக்கரணத்தின் பரிணாமங்களை. என்னை? இவைகளை க்ஷேத்திரதர்மங்களாக முற்கூறப்பட்டிருத்தலின் என்க. (அ)

[இரஜோகுணசொரூபமும், அது புருஷனைப்பந்திக்கும் பிரகாரமும் அருளிச்செய்கின்றார்.]

ஓது ராக வுருவ முடையது
தாது கற்புனை யுண்ணிறஞ் சார்ந்தது
பேது செய்வினை யோடறி வைப்பின்னற்
கேது வாய திராசத மென்பதே.

(இ-ள்.) இராசதம் என்பது = இரஜோகுணமென்று சொல்லப்படுவது—ஓது ராக உருவமுடையது = (* திருஷ்ணை, † ஆசங்கமென்னும் இரண்டும் தன்னிடத்துண்டாவதால்) சொல்லாநின்ற இராகரூபமுடையது.—தாது கல் புனை உள் நிறம் சார்ந்தது = காவிக்கற்போன்ற உண்ணிறம் பொருந்தினது —பேதுசெய் வினையோடு = மதிமயக்கஞ் செய்யும் லௌகிக, வைதிககர்மங்களோடு—அறிவைப் பின்னற்கு = ஜீவான்மாவைப் பந்தித்தற்கு—ஏது ஆயது = ஏதுவாயிருப்பதாம்.—எ-று.

திருஷ்ணை, ஆசங்கமென்னும் இவைகளால் ரஜோகுணமானது வாஸ்தவத்தில் அகர்த்தாவாகிய புருஷனைச் சகலகர்மங்களிலும் ஆசக்தியுடையவனாகப்பண்ணுகிறதே பந்திக்கிறதென்றறிக. (கூ)

* திருஷ்ணை = கிடையாதவஸ்து கிடைக்கவேண்டுமென்னும் அபிலாஷை.

† ஆசங்கம் = கிடைத்தவஸ்துவில் பிரீதி.



[தமோகுணசொரூபமும், அது புருஷனைப்பந்திக்கும்பிரகாரமும் அருளிச்செய்கின்றார்.]

குறியு நீல மயக்கமுங் கோதிலா
நெறிக டம்மை யிகழ்தலு நித்திரை
செறித லானது மற்றிவற் றாற்றிண்ணென்
றறிவை மாய்க்கு மதுதம மாவதே.

(இ-ள்.) தமம் ஆவது = தமோகுணமென்று சொல்லப்படுவது—குறியும்நீலம் = அறிகுறியும் கருநிறமுடையதாய்,—மயக்கமும் = பிரமாதமும்,—கோது இலா நெறிகள்தம்மை இகழ்தலும் = குற்றமற்ற நல்லொழுக்கங்களை இகழாநிற்கும் ஆலசியமும்,—நித்திரை செறிதலானதும் = நித்திரையும்—இவற்றால் = (ஆகிய) இவைகளால் — திண்என்று = திடமாக—அறிவை மாய்க்குமது = ஜீவனைப்பந்தித்து வருத்துவதாம்.—எ-று.

மற்று, ஏ-அசைநிலைகள். ஆவரணசக்திரூபமான அஞ்ஞானத்தினின்றும் உற்பந்நமானதால், 'குறியுநீலம்' என்றார். இக்காரணத்தினாலேயே தமோகுணமானது சர்வஜீவர்களையும் மோகம் பண்ணுவதாயுள்ளது. பிரமாதம் = விவேகசாமர்த்தியமில்லாமை. ஆலசியம் = நன்னெறிக்கண்முயலும் வலியின்மை. நித்திரா = லயரூபமான விருத்திவிசேஷம் என்றறிக. (௧0)

[மீண்டும் குணங்களின் வியாபாரங்களைத் தொகுத்தருளிச்செய்கின்றார்.

[வேறு.]

உரைசெய் சத்துவ மின்பத் துய்த்திடு
மிரசதம் வினைகளோ டறிவை யார்த்திடும்
புரைசெய்திவ் வழுக்கையே பொருந்திப் போர்த்திடுந்
தரைசெறி புகழினாய் தமமென் கின்றதே.

(இ-ள்.) தரை செறி புகழினாய் = பூமியின்கண் நிறைந்தகீர்த்தியினையுடைய அருச்சுனா—உரைசெய் சத்துவம் = முன்சொன்னசத்துவகுணமானது—(அறிவை) இன்பத்து உய்த்திடும் = தேகியைச்சுகாபிமுகமாகும்படிபண்ணும்.— இரசதம் = ரஜோகுணமானது — வினைகளோடு அறிவை ஆர்த்திடும் = லௌகிக, வைதிககர்மங்களோடு தேகியைக் கூடும்படிபண்ணும்.—தமம் என்கின்றது = தமோகுணமானது —புரை செய்து = *பிரமாதத்தைச்செய்து—அழுக்கையே பொருந்தி

* பிரமாதம் = அவசியமாக அறியவேண்டுவதை அறியாமை.

=ஆவரணஜன்மகமாய்—(அறிவைப்) போர்த்திடும்=பெரியோர் சங்கத்தாலுண்டான ஞானத்தை மறைக்கும்.—எ-று. (கக)

[பூர்வமருளிச்செய்த சத்துவாதிகுணங்கள் தத்தம் காரியங்களை எந்தக்காலத்திற் செய்யுமென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

**வாழுஞ் சத்துவ மற்றைய விரண்டையு மறைத்துத்**
**தாழு மற்றைய விரண்டுமத் தமோகுணந் தழைப்பின்**
**வீழுஞ் சத்துவ தமங்களவ் விரசதம் விளைவி**
**னூழின் மற்றிவை யிரண்டுந்தாழ்ந் தொன்றுமிக் குளதாம்.**

(இ-ள்.) மற்றைய இரண்டையும் மறைத்து சத்துவம் வாழும்=ஏனைய ரஜோகுண, தமோகுணங்கள் இரண்டனையும் எழவொட்டாமலடக்கிச் சத்துவகுணமானது விருத்தியடையாநிற்கும்.—தமோகுணம் தழைப்பின் மற்றைய இரண்டும் தாழும்=தமோகுணமானது விருத்தியடையின் ரஜோகுண, சத்துவகுணங்கள் இரண்டும் அடங்கிவிடும்.—அவ்விரசதம் விளைவின் சத்துவ தமங்கள் வீழும் = அந்த ரஜோகுணமானது விருத்தியாயின் சத்துவகுண, தமோகுணங்கள் இரண்டும் அடங்கிவிடும்.—ஊழின்=ஜீவர்களின் ❋ அதிர்ஷ்டவசத்தால்—மற்றிவை இரண்டும் தாழ்ந்து = இங்கே கூறியபடி ஏனையவிரண்டுகுணங்களும் அடங்கி—ஒன்று மிக்குளது ஆம்=ஒருகுணம் அதிகரித்திருக்கும்.—எ-று.

இங்கே கூறியபடி ஏனைய இரண்டு குணங்களையடக்கி ஒவ்வொருகுணங்கள் மேலிடுங்காலையில் தத்தம்காரியங்களை அவைசெய்யுமென்றறிக. (கஉ)

[சத்துவாதி குணங்களின் விருத்தியைப் புருஷன் அறிந்தாலல்லது அவற்றை யகற்றுதல் கூடாதாகலின், விருத்தியடையாநிற்கும் அக்குணங்களின் லிங்கங்களை இரண்டு செய்யுட்களால் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

**ஒத்துநல் லறிவுமிக்க தியாதொரு போதப்போது**
**சத்துவந் தழைத்ததாகுந் தாங்கரும் வினைகளேகொண்**
**டுய்த்துவந் தாசைகூர லோபம்வந் துற்றபோது**
**மத்திம குணமேசால வளர்ந்ததென் றறிநீமன்னு.**

❋ அதிர்ஷ்டம்=புண்ணியபாவம்.



(இ-ள்.) மன்னு=அருச்சுனா—யாதொருபோது=யாதொருகாலத்தில்—ஒத்து நல் அறிவு மிக்கது=சமமாய் (ச்சுரோத்திரமுதலிய சர்வேந்திரியங்களிலும்) நல்ல ஞானரூபப்பிரகாசமானது மிகுந்துண்டாகின்றதோ—அப்போது=அந்தக்காலத்தில்—சத்துவம் தழைத்தது ஆகும்=சத்துவகுணமானது விருத்தியடைந்ததாம்.—தாங்கு அரும் வினைகளே கொண்டு உய்த்து=தாங்குதற்கரிய பிரவிர்த்தி, ஆரம்பம், கர்மம் இவைகளை உண்டுபண்ணிக்கொண்டு (புருஷனை) அவற்றிற் பிரவிர்த்திப்பித்து—ஆசை வந்து கூர=ஆசையானது உண்டாகி அதிகரிக்கும்படி—லோபம் வந்து உற்றபோது=லோபமானது வந்தடைந்த காலத்தில்—மத்திம குணம்=மத்திமமான ரஜோகுணமானது—சால வளர்ந்தது என்று=மிகவும் விருத்தியடைந்ததென்று—நீ அறி=நீ யறிவாய்.—எ-று.

பிரகாசம் எ-து, தீபமானது தனது விஷயரூபமான கடாதி பதார்த்தங்களின் அந்தகாரரூபமான ஆவரணத்திற்கு விரோதியாவதுபோலத் தமது சப்தாதிவிஷயங்களின்ஆவரணத்திற்கு விரோதியென்னும் அச்சப்தாதி விஷயாகாரபுத்தியின் விருத்திரூபபரிணாமவிசேஷம். பிரவிர்த்தி - சதாவியாபாரத்தில் மனத்தைக் கொடுத்திருத்தல். கர்மம்=காமியம், நிஷித்தமுதலிய வியாபாரம். ஆரம்பம்=அவற்றின் முயற்சி. பிரவிர்த்தி, ஆரம்பம், கர்மம் இவைகளை 'வினைகள்' என்றார்.

[இதுவுமது.]

**தக்கது தகாதென் றொன்றைத் தானறி யாதபோது**
**மெக்கரு மங்கண் மாட்டு மிகழ்ச்சியோ டிருக்கும்போது**
**மொக்கமெய் மயக்கத் தோடு முறக்கம்வந் துற்றபோது**
**மிக்கது தமமே யென்று விசயநீ யறியவேண்டும்.**

(இ-ள்.) ஒன்றை=யாதானுமொரு பதார்த்தத்தை—தக்கது=இது தகுதியானது,—தகாது என்று=இது தகுதியல்லாததென்று—தான் அறியாதபோதும்=தான் அறியாதகாலத்தும், (விவேகநாசகாலத்து மென்றபடி)—எக்கருமங்கள்மாட்டும் இகழ்ச்சியோடு இருக்கும்போதும்=எவ்வகைப்பட்ட கர்மங்களிடத்தும் பிரவிர்த்தியாத காலத்தும்,—ஒக்க=பொருந்த—மெய் மயக்கத்தோடும் = மெய்ம்மயக்கத்தோடுங்கூட—உறக்கம் வந்து உற்றபோதும்=நித்திரைவந்தடைந்தகாலத்தும்—தமம் மிக்கது என்று=தமோகுணம் அதிகரித்ததென்று—விசயநீ அறியவேண்டும்=அருச்சுனாநீ அறியத்தக்கது.—எ-று. (கச)

[இனி மரணகாலத்தில் விருத்தியடைந்துள்ள சத்துவாதி குணங்களின் பலவிசேஷத்தை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

**தக்கசத்துவமே நிகழ்ந்தபோதிறந்தோர் தெய்வயோனிகளிலேசார்வார், மக்களிற்பிறப்பா ரிராசதகுணமே வளர்ந்தபோ துடம்பினைத் துறந்தோர், மிக்கெழுந்தமமே விளைந்தபோதிறந்தோர் விலங்குச்சா திகளிலேவீழ்வா, ரொக்கமற்றிவற்றின் பலன்களுந்தெரிய வுரைக்கின்றே னிவற்றையு முணர்வாய்.**

(இ-ள்.) தக்க சத்துவமே நிகழ்ந்தபோது = மேலான சத்துவகுணமே விருத்தியடைந்தபோது—இறந்தோர்=மரணமாயினோர்,—தெய்வ யோனிகளிலேசார்வார் = தேவயோனிகளிலேஜநியாநிற்பர்.—இராசதகுணமே வளர்ந்தபோது = இரஜோகுணந்தானே விருத்தியடைந்தபோது—உடம்பினைத் துறந்தோர்=சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்தோர்,—மக்களில் பிறப்பார் = *கர்மசங்கிகளான மநுடயோநிகளிற் சநியாநிற்பர்.—மிக்கு எழும் தமமே விளைந்தபோது=மிகுந்தெழாநிற்குந் தமோகுணந்தானே விருத்தியடைந்தபோது—இறந்தோர்=மரணமாயினோர்,—விலங்குச் சாதிகளிலே வீழ்வார்=பசுவாதி மூடயோநிகளிலே உற்பந்நமாவர்.—ஒக்க மற்று இவற்றின் பலன்களும்=சம்மதமாக வேறே இச்சத்துவாதி குணங்களின் பயன்களையும் —தெரிய உரைக்கின்றேன்=(உனக்கு)விளங்கஅருளிச்செய்கின்றேன்;—இவற்றையும் உணர்வாய்= இவைகளையும் நீயறிவாய்.—எ-று. (௧௫)

[இப்போது சத்துவாதி முக்குணங்களில் தமதநுசாரகர்மவாயிலாக விசித்திரபலத்தின் ஏதுத்தன்மையை ஸ்ரீ பகவான் தொகுத்தருளிச்செய்கின்றார்.]

**அருங்குணமாய சத்துவபலமா மழுக்கற லிராசதபலமாம்,பெருந்துயருழத்தறமோபலமாகும் பேதைமை பேசிய முறையே, பொருந்தியவிந்தக் குணங்கண்மூன்றாலும் பூதசாலங்களுக்கெல்லாம், வருந்திருவாய ஞானமோடுலோப மயக்கமென் றின்னனவருமால்.**

(இ-ள்.) அரும் குணம் ஆய சத்துவ பலம் = அடைதற்கரிய குணமாகிய சாத்துவிக தர்மத்தின்பலம்—அழுக்கு அறல் ஆம் = நிர்மலமாம்.—இராசதபலம்=ராஜஸதர்மத்தின்பலம்—பெருந்துயர் உழத்தல் ஆம்=பெரியதுன்பத்தை யநுபவித்தலாம்.—தமோபலம்=தாமஸதர்மத்தின்பலம் — பேதைமை ஆகும் = அஞ்ஞானமாம்.—(இங்கே சத்துவம், ராஜஸம், தாமஸம் எ-து, காரியகாரணங்களை அபேதமாக்கிக் கூறினது. சாத்துவிகமுதலிய கர்மங்களின் இலக்கணம், "வீதலில்" என்பதுமுதலிய செய்யுட்களால் பதினெட்டாமத்தியாயத்தில் ஸ்ரீ பகவான் தாமே அருளிச்செய்வர்: ஆண்டறிக.) [இவ்வாறானபலத்தின் விசித்திரத்தன்மையில் பூர்வஞ்சொன்னஏதுவையேஅருளிச்செய்கின்றார்.] பேசிய முறையே=முன்சொல்லிய வொழுங்கின்படியே—பொருந்திய இந்தக்குணங்கள் மூன்றாலும் = (அதிர்ஷ்டவசத்தாற்) பொருந்திய இச்சத்துவமுதலிய முக்குணங்களாலும் — பூதசாலங்களுக்கு எல்லாம்=பிராணி சமுகங்களனைத்திற்கும்—வரும் திரு ஆய= (சுரோத்திராதி இந்திரியத்துவாரங்களால்) வரும் அழகாகிய—ஞானமோடு உலோபம் மயக்கம் என்ற=ஞானம், உலோபம், அஞ்ஞானம் என்றுசொல்லப்படுகிற—இன்னனவரும்=இத்தன்மையவானபயன்களுளவாம்.—எ-று.

சத்துவகுணத்தால் ஞானம் உளதாதலால் சாத்விககர்மத்திற்குப் பிரகாசபாகுள்ளியமான சுகமும், ரஜோகுணத்தால் உலோபம் உளதாவதால் உலோப பூர்வகமாகச்செய்யும் ராஜஸகர்மத்திற்குப் பிரசித்தமான துக்கமும், தாமதகுணத்தால் பிரமாதம், மோகம், அஞ்ஞானம் இவையுளவாதலின், தாமதகர்மத்திற்கு அஞ்ஞானமாத்திரமான பலமுமுளதாம் என்றவாறு. (௧௬)

[பூர்வம் பதினைந்தாஞ்செய்யுளி லருளிச்செய்த சத்துவாதிகுணங்களின்பயனையே ஊர்த்துவபாவமாகவும், மத்தியபாவமாகவும், அதோபாவமாகவும் இப்போது அருளிச்செய்கின்றார்.]

**சத்துவமாந்தர் பரகதியடைவர் தமத்துளோ ரதோகதிசார்வார், மத்திமகுணத்தோ ராயினோர்நடுவின் மாநுடப் பிறவியாய் வாழ்வா, ரித்திறமாய வுருவமேவிகாரி யானவி காரியென்றிவற்றை, மெய்த்திறனாக வறிந்தவனறிந்த பொழுதிலே வீட்டின்ப மடைந்தான்.**

(இ-ள்.) சத்துவமாந்தர் பரகதி அடைவர்=சத்துவகுணப்பிரதானமநுடர் (பிரமலோகபரியந்தமான) பரலோகத்தையடையாநிற்பர்.—தமத்துளோர் அதோகதி சார்வார்=(நித்திரை, ஆலசியாதிரூப

* கர்மசங்கிகள்=கர்மங்களிலும், அவற்றின் பலன்களிலும் அதிகாரிகளாகிய மநுடர்.

மான) தமோகுணவிருத்தியிற் பிரீதியுடைய தாமஸபுருஷர் பசுவாதி யோநிகளில் உற்பந்நமாவர்.—மத்திம குணத்தோராயினோர்=மத்திமமான ரஜோகுணப்பிரதானமுடைய புருஷர்—நடுவில் மாநுடப்பிறவி ஆய் வாழ்வார்=மத்தியவுலகில் மாநுடஜன்மமாய் வாழ்வார்கள்.—[பூர்வம் பிரகிருதியின் குணசங்கத்தால் சம்சாரம் உளதாமென்பதை விஸ்தாரமாக வருளிச்செய்து இப்போது பிரகிருதி புருஷரின் விவேகத்தினாலேயே மோட்சம் உளதாமென்று தரிசிப்பிக்கிறார்.] இத்திறம் ஆய உருவமே விகாரி=இப்புத்தியாதிஆகாரங்களாகப்பரிணாமமடைந்திருப்பனவான சத்துவாதி குணரூபங்களே (லௌகிக, வைதிகமான சர்வகர்மங்களின்) கர்த்தாவாம்: (அவைகளின் அந்நியமாக ஒருகர்த்தாவுமில்லை,)—யான்அவிகாரி என்று=(அவைகளின் சாட்சிபூதனான) நான் அகர்த்தாவாமென்று (இவ்வாறு) —இவற்றை=இச்சத்துவாதி குணங்களையும், அவைகளின் விலட்சணனான தன்னையும்—மெய்த்திறன் ஆகஅறிந்தவன்=உள்ளபடிவிலட்சணமாக அறிந்த புருஷனானவன்—அறிந்தபொழுதிலே = உடனே—வீட்டின்பம் அடைந்தான்=முத்தியின்பமடைந்தவனாகின்றான்.—எ-று. (கஎ)

[எப்படி வீட்டின்பமடைவனென்னில்? அதற்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

**உடம்புடனிருந்தே யுரைத்த விக்குணங்கண் மூன்றையு முள்ளவாறறிந்து, கடந்தவன்பிறப்பு மூப்பிறப்பாதி யாகவே கட்டுரைக்கின்ற, விடம்புரையிடும்பை யாவையுங்கடந்து வீட்டின்பம் விளைபவனென்றான்,றடங்கடலிடையே வளர்ந்தவனவற்கு வேறிது தனஞ்சயனுரைப்பான்.**

(இ-ள்.) தடம் கடல் இடையே வளர்ந்தவன்=விசாலமான திருப்பாற்கடலின்கண்ணே கண்வளர்ந்த ஸ்ரீ பகவான்;—உடம்புடன் இருந்தே=தேகத்தோடுகூடிச்சீவிப்பவனாகவிருந்தே—உரைத்த இக்குணங்கள் மூன்றையும்=(தேகோற்பத்திக்குப்பீஜமாகச்) சொல்லிய சத்துவாதி முக்குணங்களையும்—உள்ள ஆறு அறிந்து கடந்தவன்=உள்ளபடியே மாயாமயமென்றறிந்து பரித்தியாகஞ்செய்தவன் — பிறப்பு மூப்பு இறப்பு ஆதி ஆகவே கட்டுரைக்கின்ற—ஜன்ம, ஜரா, மரணாதிகளாகவே உறுதிப்படச்சொல்லாநின்ற—விடம்புரை இடும்பை யாவையும் கடந்து=விஷத்தையொப்பானதுக்கங்களனைத்தையும் பரித்தியாகஞ்செய்து—வீட்டின்பம் விளைபவன் என்றான்=மோட்சசுகம் உண்டாகப்பெறுபவனுமென் றருளிச்செய்தனர்;—அவற்கு=அந்தப்பகவானிடத்து—தனஞ்சயன்=அருச்சுனன்—வேறு இது உரைப்பான்=வேறே இதனை வினவுவானாயினன்.—எ-று.



அவற்கு, வேற்றுமைமயக்கம். (கஅ)

[குணங்களைக்கடந்தவன், "இடும்பையாவையுங்கடந்து வீட்டின்பம் விளைபவன்" என்று பூர்வமருளிச்செய்ததைக் கேட்ட அருச்சுனன் குணாதீதனுடையலட்சணமும், ஆசாரமும், குணங்களைக்கடக்கும் உபாயமும் அறிய இச்சைகொண்ணினவனாய் ஸ்ரீ பகவானைநோக்கி வினவுகின்றான்.]

**கண்ணிய வுலகிற் கடப்பரி தாய குணங்கண்மூன் றையுங் கடந் துயர்ந்த, புண்ணிய ரியல்புங் கடந்துறு நெறியுங் குறியையும் புகன்றரு ளென்ன, வெண்ணிய வுலகு முலகில்வா ழுயிரு மிருவினை யாக்கையு மாகப், பண்ணியு மழித்து மேவிளையாடும் பரமன்வே றிவ்வகை பணிப்பான்.**

(இ - ள்.) கண்ணிய உலகில் — (வீடடைவதற்குக் காரணமாகக்) கருதிய இவ்வுலகில்—கடப்ப அரிது ஆய=ஒருவரால் கடத்தற்கரிதாகிய—குணங்கள் மூன்றையும் கடந்து உயர்ந்த = சத்துவாதி முக்குணங்களையுங்கடந்து அவற்றிற்கதீதமான—புண்ணியர் இயல்பும்=புண்ணியமூர்த்திகளின் ஆசாரத்தையும்,—கடந்துறும் நெறியும் = (அவர் குணங்களைக்) கடந்திருக்கும் உபாயத்தையும்;—குறியையும்=(அவர்களின் இலக்கணரூபமான) லிங்கத்தையும்—புகன்றருள் என்ன =உபதேசித்தருள்கவென் றருச்சுனன் வினவ—எண்ணிய உலகும்=பதினான்காக எண்ணியவுலகங்களும்,—உலகில் வாழ் உயிரும் = அவ்வவ்வுலகங்களில் வாழாநிற்கும் பிராணிகளும்,—இருவினை யாக்கையும்=இருவினைக்கீடாகிய சரீரங்களும்—ஆகப் பண்ணியும் அழித்தும் =உண்டாகும்படி படைத்தும், துடைத்தும்—விளையாடும் பரமன்=விநோதியாநிற்கும் ஸ்ரீ பகவான்—வேறு இவ்வகை பணிப்பான்=வேறே இந்தப்பிரகாரம் அருளிச்செய்வாராயினர்.—எ-று.

முன்னே இரண்டாமத்தியாயத்தில் திடப்பிரக்ஞனது இலக்கண முதலியவற்றை அருச்சுனன் வினவியும், அதற்கு ஸ்ரீ பகவான் விடைகூறியுமிருத்தலின், இப்போது அருளிச்செய்யப்புக்கது பிரகாராந்தரமாகவென்னும் பொருள்தோன்ற, 'வேறிவ்வகைபணிப்பான்' என்றார்.

[எவ்வகைப்பட்ட இலக்கணலிங்கத்தோடு கூடியுளனென்னும் வினாவிற்கு உத்தரமருளிச்செய்கின்றார்.]

**வாய்மைய வல்லாக் குணமவை மூன்றின் காரிய மாய்வருகின்ற, தூய்மையுந் தொழிலு மயக்கமு மென்று சொல்லிய**

துறையிவை மூன்றுஞ், சேய்மைய வென்று பெருதபோ
தவாவல் பெற்றபோ திரங்கல்செய் யாதா, ஞய்னொது மலன்
போற் குணங்களோ டிருந்தே யவற்றினுற் சலித்திடான
ன்றே.

(இ-ள்.) வாய்மைய அல்லாக் குணமவை மூன்றின்=மாயாமய
மாகிய சத்துவாதி குணங்கண் மூன்றினுடைய—காரியம் ஆய் வருகி
ன்ற=காரியங்களாய் வருகின்ற — தூய்மையும் தொழிலும் மயக்க
மும் என்று சொல்லிய = பிரகாசமும், பிரவிர்த்தியும், மோகமும்
என்று கங-கச-ம் செய்யுளிற்கூறிய—துறை இவை மூன்றும்=இம்
மூவகையும்—சேய்மையஎன்று= தூரமாய் நீங்கினவென்று—பெருத
போது=அடையாதபோது—அவாவல்=(சுகபுத்தியினுல் அவைகளை)
இச்சித்தலும்,—பெற்றபோது = (அந்தப்பிரகாசாதிகளை) அடைந்த
போது—இரங்கல் செய்யாதான் = (துக்கபுத்தியினுல் அவைகளைத்)
துவேஷித்தலுஞ் செய்யாதோன் (குணதீதனென்று சொல்லப்படு
கிருன்.) (இங்கேஅருளிய குணதீதனதிலக்கணம் அவனுக்கே பிரத்தி
யட்சமல்லாமல் அந்நியனுக்குப் பிரத்தியட்சமாவதில்லை. எதனுலெ
னின்? ஓர் புருஷனது அந்தக்கரணத்தின்கணுள்ள துவேஷமும்,
அதன் அபாவமும் இராகமும், அதன் அபாவமும் அந்நியனுலறியப்
படவில்லை; ஆதலால், இந்தக்குணதீதனுடைய இலக்கணம் சுவார்த்த
விலக்கணமே: பரார்த்த விலக்கணமன்று. யாதோரிலக்கணம் கேவ
லம் தன்னுலே அறியப்படுமோ அது சுவார்த்தவிலக்கணமெனப்படும்.
யாதோரிலக்கணம் மற்றொருவனுலும் அறியப்படுமோ அது பரார்த்த
விலக்கணமெனப்படும். சுவார்த்தவிலக்கணத்தைச் சுவசம்வேத்தியம்
எ-ம், பரார்த்தவிலக்கணத்தைப் பாசம்வேத்தியம் எ-ம் சாஸ்திரங்க
ளிற் கூறுவர்.—[குணதீதனுடைய ஆசாரம் என்னை யென்னும் விஞ
விற்கு உத்தரமருளிச்செய்கின்ருர்.] ஆய்னொதுமலன்போல்=(தான்)
உதாசீன புருஷன்போல இராகத்துவேஷங்களை யடையாதவனுய்(ச்
சாட்சியாய்)—குணங்களோடு இருந்தே=(சுகதுக்காதி ஆகாரபரிணு
மங்களை யடையாநிற்குஞ்) சத்துவாதி குணங்களோடு கூடியிருந்தே—
அவற்றினுல் = அச்சத்துவாதி குணங்களினுல் — சலித்திடான் =
(தனது நிலையினின்றும்) அசைக்கப்படாதவன் (குணதீதனென்று
சொல்லப்படுகிருன்.)—எ-று.

அன்று, எ-அசைநிலைகள். பரஸ்பரம் விவாதஞ்செய்யும் இரு
வரின் மத்தியில் ஒருவனுடைய பட்சத்தையு மங்கீகரியாதவன் உதா



சீன புருஷன்; அவ்வுதாசீனபுருஷன்போல எந்தப்புருஷன் இராகத்
துவேஷங்களில்லாமல் சாட்சியின்கண் ஸ்திதியடைந்து சுகதுக்காதி
ஆகாரங்களாகப் பரிணுமமடைந்துள்ள சத்துவாதி குணங்களால் தனது
ஸ்திதியினின்றுஞ் சலிப்பிக்கப்படாதவனுய்த்தேகேந்திரிய விஷயாதி
ஆகாரங்களாகப் பரிணுமமடைந்துள்ள சத்துவாதி குணங்களே தம்
மிற் சாதகபாதகமாகவும், கிராகக்கிராகியபாவமாகவும், உபகாரியோப
காரகபாவமாகவும்உள்ளன; இப்படிப்பட்ட சர்வகுணங்களின் பிரகாசக
மான ஆன்மாவே நான்: ஆன்மாவான எனக்கு யாதொரு பிரகாசிய
வஸ்துக்களின் தர்மங்களோடுஞ் சம்பந்தமில்லை என்னும் இப்படிப்
பட்ட நிச்சயமுடையனே அவன் குணதீதனென்றறிக. (உ௰)

[இதுவுமது.]

[வேறு.]

மானமவ மானம்வரு மின்பமிடர் மண்பொன்
ஞனமகிழ் வப்பிரிய மன்பர்பகை யானே
ருனவுரை யோடுபுக ழுற்றபொழு தொப்பா
னினமுறு கின்றகுண மானவை யிகந்தான்.

(இ-ள்.) மானம் அவமானம் = மானுவமானங்களிலும்,—வரும்
இன்பம் இடர் = வாராநின்ற சுகதுக்கங்களிலும்,—மண் பொன் =
மண்ணிலும், பொன்னிலும்,—ஆன மகிழ்வு அப்பிரியம்=சுகதுக்கங்
கட்குச் சாதனங்களான பிரியாப்பிரிய பதார்த்தங்களிலும்,— பகையா
னேர் அன்பர்=சத்துரு மித்திரரிடத்தும்,—ஊன உரையோடு புகழ்
உற்றபொழுது=ஸ்துதி, நிந்தைகள் பொருந்தினகாலையிலும் — ஒப்
பான்=சமனுயிருப்பவன்—ஈனம் உறுகின்ற குணமானவை இகந்தான்
= குணதீதனும்.—எ-று.

மானம்=சத்காரம். அவமானம்=திரஸ்காரம். உலகின்கண் இவ
ற்றை ஆதரம், அநாதரம் என்பர். இதற்கு முதற்செய்யுளின் நான்காம்
பாதத்தினுலும், இச்செய்யுளினுலும் அருளிச்செய்த உபேட்சைமுத
லியதர்மங்கள் ஞானத்திற்குப்பூர்வம் பிரயத்தனத்தாற் சாதிக்கத்தக்க
வையாம்; ஆன்மஞானத்தின் பின்னர் பிரயத்தனமின்றி லட்சணமா
கச் சித்தித்திருப்பனவாம் என்றறிக. (உக)

[இப்போது எவ்வுபாயத்தினுல் குணங்களை அதிக்கிரமிக்கின்ற
னன் என்னும் விஞவிற்கு உத்தரமருளிச்செய்கின்ருர்.]

இப்பரிசி னுல்வரு குணங்களை யிகந்தே
மெய்ப்பருவ மாயபெரு வீடுபெறு கிற்பா

றொப்பரிசி னாலுமிடை யின்றியெழு மன்பா
லொப்பவ ரிலாதவெனை யுன்னுமவர் கண்டாய்.

(இ-ள்.) இப்பரிசினால் வரு குணங்களை இகந்தே=முற்கூறிய தன்மைகளோடுகூடி உதியாநிற்குஞ் சத்துவாதிகுணங்களை அதிக்கிரமணஞ்செய்து (கடந்தென்றபடி)—மெய்ப் பருவம் ஆய=மெய்த்தன்மையதாகிய—பெரு வீடு பெறுகிற்பார் = பெரியவீட்டினை யடைகிற்பவர்,—எப்பரிசினாலும்=எவ்வாற்றானும்—இடை இன்றி எழும் அன்பால்=அநந்நியபக்தியோகத்தினால்—ஒப்பவர் இலாதஎனை=சமானாதிகமில்லாத(பரமான்மாவென்னும் வாசுதேவனான)என்னை—உன்னுமவர் கண்டாய்=சிந்தனஞ்செய்பவரோ கண்டாய்.—எ-று.

சர்வகாலத்திலும் பரமேசுரனான எனது சிந்தனமே குணாதீதத் தன்மைக்கு உபாயமாமென்பதாம். (௨௨)

[பரமான்மாவாகிய என்னைச் சிந்தனஞ் செய்பவர் மோட்சத்தையேயடைவரென்று பூர்வஞ்சொன்ன அர்த்தத்தில் தமது மஹத்துவரூபமான எதுவையருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

ஒழியாதென்று மியாவர்க்கு மியானேயுணர்த்தி வருதலாற்,
கிழியாவறிவுங் கெடாவீடுங் கேடிலின்ப மானதுவு, மழியா
வறமு மென்னுள்ளே யுளவாகாநின் றனவென்றான், சுழியா
நின்ற பெருவெள்ளத் திடையேபண்டு துயில்கொண்டான்.

(இ-ள்.) ஒழியாது என்றும்=ஒழியாமலெப்போதும்—யாவர்க்கும்—யானே உணர்த்தி வருதலால்=நானே போதித்து வருவதால்—கிழியா அறிவும்=கெடாதஞானமும், — கெடா வீடும்=அமிர்தமான மோட்சமும்,—கேடில் இன்பமானதுவும்=நிரதிசயமான சுகமும்,—அழியா அறமும்—சாசுவதமான தர்மமும்—என்னுள்ளே=என்னிடத்தினின்றே—உளவாகாநின்றன என்றான்=உண்டாகாநின்றன (ஆதலால், பரமேசுரனான எனது பக்தியினால் அதிகாரிக்கு மோட்சம் உளதாதல்கூடும்) என்றருளிச்செய்தனர்.—சுழியாநின்ற பெரு வெள்ளத்திடையே=சுழித்துநின்ற மகோததியின்கண்ணே — பண்டு துயில் கொண்டான்=முன்னே பள்ளிகொண்டருளிய ஸ்ரீ பகவான்.—எ-று.

## ௧௪-வது குணாதீதவத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம் ௧௪-க்குத் திருவிருத்தம்-௩௦௪.

## ௧௫-வது, *பிரபஞ்சவத்தியாயம்.



[பூர்வம் பதினான்காமத்தியாயத்தினிறுதிக்கண் ஏகாந்தமானபக்தியினால் பரமேசுரனான என்னைச் சிந்தனஞ்செய்யாநிற்பவர் எனது இருபையினால் ஞானவர்பிலாக முக்தராவரென ஸ்ரீபகவான் அருளிச்செய்ததால் அவ்வேகாந்தமான பக்தியும், ஞானமும் சம்சாரத்தினின்றும் விரக்தியடைந்த புருஷனுக்கேயுளவாமன்றி மற்றையர்க்குளவாகாவாதலின், வைராக்கிய பூர்வகமாக ஞானோபதேசஞ்செய்யும் மனோரதத்தால் இவ்வத்தியாயத்தில் முன்னர்ச் சம்சாரத்தை விருட்சரூப உருவகவலங்காரமாக வர்ணிக்கின்றார்.]

[மொழிபெயர்த்தவாசிரியர் ஸ்ரீபகவானது ஸ்துதி பூர்வகமாக இவ்வத்தியாயம் ஆரம்பித்தற்கு அடியிடுகின்றார்.]

சாயை யன்னவென் வினைத்தளை யறுக்கவோ தகவில்
பேயை யின்னுயிர் செகுக்கவோ பிள்ளையாய் வளர்ந்தான்
வேயை யொன்றிய வரிசிலை விசயற்கு மீள
மாயை தன்னையோர் மரமொக்க வருணிக்க லுற்றான்.

(இ-ள்.) சாயை அன்ன=(தேகத்தின்) சாயைபோல விட்டு நீங்காத—என் வினைத்தளை அறுக்கவோ=(புண்ணியபாவரூபமான) என்னுடைய வினையாகிறவிலங்கைச் சேதிக்கவோ,—தகவு இல் பேயை=கிருபையில்லாத பூதகியை—இன் உயிர் செகுக்கவோ=இனியவுயிரையழிக்கவோ—பிள்ளை ஆய் வளர்ந்தான்=நந்தகோபன் திருமனையில் மதலையாய்வளர்ந்த ஸ்ரீ கிருஷ்ணபகவான்—வேயை ஒன்றிய வரிசிலை விசயற்கு=மூங்கிலாற் பொருந்திய வரிந்தநாசையுடைய அருச்சுனனுக்கு—மீள=(பூர்வாத்தியாயங்களில் அங்கங்கே சொன்னதுந்தவிர) மீண்டும் இவ்வத்தியாயத்தில் — மாயை தன்னை=சம்சாரரூபமான மாயையை—ஓர் மரம் ஒக்க வருணிக்கல் உற்றான்=ஓர் விருட்சத்தையொப்பாகச் சிறப்பிக்கத்தொடங்கினார்.—எ-று. (௧)

வேர்மேலது தலைகீழது வீவில்லது வேதத்
தேர்மேவிய விலைமேவிய தியாவும்புக ழலினா
லார்மேவிய வசுவத்தம தெனவேயர சதனின்
பேர்மேயது பெருமாயைசெய் பிறவிப்பெரு மரமே.

(இ-ள்.) பெரு மாயைசெய்=மஹாமாயையினாற்பண்ணப்பட்ட—பிறவிப் பெரு மரம்=சம்சாரரூபமான பெரிய விருட்சமானது—வேர்

---

* வடமொழியில், புருஷோத்தமயோகமென்று பெயர்.

மேலது=மேலானதை மூலமாகவுடையது,—தலைகீழது=கீழானவை களைச் சாகைகளாகவுடையது,—வீவு இல்லது = நாசமாகாதது,—வேதத்து ஏர் மேவிய இலை மேவியது=வேதத்தினது கர்மகாண்ட வாக்கியங்களைப் பொருந்திய பர்ணங்களாகவுடையது,—ஆர் மேவிய= நிறைந்த—அசுவத்தமது எனவே = அசுவத்தமென்று—யாவும் புகல்தலினால்=* சுருதி ¶ ஸ்மிருதிகளனைத்தும் வர்ணித்தலால்—அரசதனின் பேர் மேயது = அரசினது பெயரைப் பொருந்தியது.—எ-று. ஏ-அசை

---

* பிரமகீதை. "அரசமொன் றும்பர்வே ராகிகீள் சாகைகீழ், நிரை செய்தெங் கணுநிறைந் தென்றுநின் றுள்ளதாற், கனையிலண் டங்களெல் லாமதன் கண்ணதா, மொருபரம் பொருள்கடந் திடவொணாதொருவரால்" இது கடவல்லிசுருதி.

¶ சுவ்ருக்ஷோர்த்வமூலோ வாக்சாகோ ஹ்யச்வத்த: ஸநாதந:। ஊர்த்வமூல மவாக்சாக மச்வத்தம் ப்ராஹு ரவ்யயம்॥ க॥ பாசிஸம் ஸுக்த... வதுவாம்ஹயா। ...ஸாஜ விஷவிஷ்டப: வது வாம்ஹயா। ...ஹத விஸாவ ஸ்வி ஷெபெ: ... ॥உ॥ ஜீவ்யஸ ... ஸநாதந: । ... ஸாக்ஷிவத்॥௩॥ ... தஸ்ய ... ॥௪॥

(க) சூ-ள். அவ்வியாகிருதமென்னு நாமமுடைய மாயாவிசிட்ட பிரமத்திற்கு அவ்வியக்தமென்று பெயர்; அவ்வவ்வியக்தமே மூலமென்னுங் காரணரூபமாம்; இப்படிப்பட்ட அவ்வியக்தமான மூலத்தினின்றும் யாது உற்பத்தியாமோ அதற்கு அவ்வியக்தமூலபிரபவமென்று பெயர்; இப்படிப்பட்டது சம்சாரரூபமான விருக்ஷமாம். அப்படியே அவ்வவ்வியக்தரூபமான மூலத்தின் அநுக்கிரகத்தினாலேயே இந்தச் சம்சாரவிருக்ஷமானது உத்திதமாயிற்று; (அவ்வவ்வியக்தரூபமான மூலத்தின் திடத்தன்மையினாலேயே இந்தச் சம்சாரரூபவிருக்ஷமானது மிகவும் விருத்தி யடைந்துளதென்றபடி.) எப்படி லோகப்பிரசித்தமான விருக்ஷத்தின் சாகைகள் ஸ்கந்தத்தினின்றும் உற்பந்நமாமோ அப்படி புத்தியினின்றே இந்தச் சம்சாரத்தின் நாநாப்பிரகாரமான பரிணாமங்கள் உற்பந்நமாயின; இவ்வாறான சமானதர்மத்தன்



[இங்ஙனந் தொகுத்துக் கூறியதை வகுத்துக்கூறத் தொடங்கி 'வேர்மேலது' என்பதற்கு வியாக்கியானஞ் செய்கின்றார்.]

இவ்வாறித னியல்பாகிய வகையாவெனி லியாது
மொவ்வாவகை பெரிதாகிய பிரமத்துரு விடையே
வைவாள்வலி யுழவாவரன் முறையேவரன் முறையே
மெய்வான்முதல் வருமாதலின் மேலானது வேரே.

---

மையினாலே இந்தப் புத்தியே ஸ்கந்தரூபமாம்; இப்படிப்பட்ட புத்திரூபமான ஸ்கந்தமுடையதாகலின், இந்தச்சம்சாரவிருக்ஷமானது புத்திஸ்கந்தமய மெனப்படும். எப்படி பிரசித்தமான விருக்ஷத்தினுள்ளே சித்திரரூபமான கோட்டரமுண்டோ அப்படி இந்தச் சம்சாரவிருக்ஷத்தில் சுரோத்திரமுதலிய இந்திரியங்களின் சித்திரமே கோட்டரரூபமாம்.—எ-று.

(உ) சூ-ள். எப்படி பிரசித்தமான விருக்ஷமானது அநேக சாகைகளையுடையதா யிருக்கிறதோ அப்படி இந்தச் சம்சாரரூபவிருக்ஷமும் ஆகாசமுதலிய பஞ்சமஹாபூதரூபநாநாப்பிரகாரங்களான சாகைகளையுடையதாம். எப்படி லோகப்பிரசித்த விருக்ஷமானது பத்திரங்களையுடையதாயிருக்கிறதோ அப்படி இந்தச் சம்சாரரூபவிருக்ஷமும் சப்தஸ்பரிசமுதலிய பத்திரங்களை யுடையதாம். எப்படி லோகப்பிரசித்தமான விருக்ஷத்தில் புஷ்பங்களுண்டா யிருக்கின்றனவோ, அப்படியே அப்புஷ்பங்களினின்றும் பலங்களுற்பந்நமாகின்றனவோ அப்படி இந்தச் சம்சாரவிருக்ஷமும் தர்மாதர்மரூபமான புஷ்பங்களையுடையதாம்; அப்படியே அந்தத் தர்மாதர்மரூபமான புஷ்பங்களினின்றும் உற்பந்நமாகுஞ் சுகதுக்கரூபங்களான கனிகளையுடையதாம்.—எ-று.

(௩) சூ-ள். எப்படி லோகப்பிரசித்தமான விருக்ஷமானது பக்ஷிமுதலியவற்றிற்கு உபஜீவியமாகவுள்ளதோ அப்படி இந்தச் சம்சாரரூபவிருக்ஷமும் சர்வபூதப் பிராணிகட்கும் உபஜீவியமாம். எதனால் உபஜீவனமாமோ அதற்கு உபஜீவியமென்று பெயர்; இந்தச் சம்சாரவிருக்ஷத்தைப் பரமான்மதேவனென்னும் பிரமமானது ஆசிரிதஞ் செய்திருக்கிறது; ஆதலால், இந்தச் சம்சாரவிருக்ஷத்தைப் பிரமவிருக்ஷம் என்பர்; இந்தச் சம்சாரமானது ஆன்மஞானத்தாலல்லாமல் மற்றோருபாயங்களால் சேதிக்கப்படுகிறதாகவில்லை; ஆதலால், இந்தச் சம்சாரவிருக்ஷமானது சநாதநமெனப்படும்; மற்றும் இந்தச் சம்சாரரூபவிருக்ஷமானது ஜீவான்மரூபபிரமத்திற்குப் போக்கியமாம்; ஆதலால்,

(இ-ள்.) வை வாள் வலி உழவா = கூர்மைபொருந்திய வாளாயுதத்தையும், வலிமையையுமுடைய வீரா—இவ்வாறு = இந்தப்பிரகாரம் (சுருதி, ஸ்மிருதிகளிற் கூறிய)—இதன் இயல்பு ஆகிய=இச்சம்சார விருட்சத்தின் சுபாவமாகிய—வகை யாவெனில்=கூறுபாடுகள் எவையென்றால்—யாதும் ஒவ்வா வகை=யாதொரு பொருளும் தனக்குச் சமானமாகாதபடி—பெரிது ஆகிய = மஹத்தாகிய—பிரமத்து உருவிடையே = பிரமத்தின் சொரூபத்தின்கண்ணின்றே — வரன் முறையே வரன் முறையே=உண்டாகுங் கிரமப்படியே—மெய் வான் முதல் வரும் ஆதலின்=உண்மைபோல ஆகாசமுதல் (தூலதேகபரியந்தமான ஜகத்தனைத்தும்) உண்டாகின்றனவாதலால்—மேலானது வேர் = (சொப்பிரகாசமாய், நித்தியமாய், சர்வகாரணங்கட்கும்) மேலான காரணமான அந்தப் பிரமமானது மூலமாம்.—எ-று. (௩)

["தலைகீழதுவீவில்லது" என்னுமொழிகளுக்குரைசெய்கின்றார்.]

**ஊழால்வரு முலகாகியு முயிராகியு மெழலாற்**
**கீழானது தலையாவுறு முதலீறிடை கிளர்வாய்ச்**
**சூழாகிய பிறவித்தொட ரொருகாலமு மடையப்**
**பாழாம்வகை யழியாமையி லழியாததோர் படியே.**

(இ-ள்.) (இச்சம்சார விருட்சமானது,) ஊழால் = (பிராணிகளின்) அதிர்ஷ்டவசத்தால்—வரும் உலகு ஆகியும் உயிர் ஆகியும் எழலால்=வாராநின்ற உலகங்களாகியும், உயிர்களாகியும் எழுவதால்—கீழானது=காரியவுபாதிகளையுடைய இரண்ணியகர்ப்பாதிகளை—தலையா உறும்=சாகைகளாகப்பொருந்தும்.—முதல் இடை ஈறு கிளர்வாய் =தோற்றம், ஸ்திதி, நாசங்கள் பெருக்கமாய்—சூழாகிய=பந்தரூபமா

---

இந்தச் சம்சார ரூபவிருக்ஷத்தைப் பிரமவனம் என்பர். சம்சாரரூப விருக்ஷத்தில் சுத்தப்பிரமமோ சாக்ஷிபோல விளங்குகின்றது; (இந்தச் சம்சாரத்தின் குணதோஷங்களோடு அந்தப் பிரமமானது சம்பந்தப் படமாட்டாதென்றபடி.)—எ-று.

(௪) சு-ள். இப்படிப்பட்ட சம்சார விருக்ஷத்தை அகம்பிரமாஸ்மி என்னும் திரட ஆன்மஞானரூபமாகிய கட்கத்தினால் சேதனஞ்செய்தும், பேதனஞ்செய்தும் (மூலத்தோடுகூட நாசஞ்செய்தென்றபடி.) இவ்வதிகாரிபுருஷனானவன் ஆன்மரூபமான கதியையடைந்து அவ்வான்மரூபமான மோக்ஷத்தினின்று மீண்டு ஜன்மத்தையடையான்.—எ-று. இதுமுதலிய அநேக ஸ்மிருதிகள் இந்தச் சம்சாரத்தை விருக்ஷரூபமாக வர்ணித்திருக்கின்றன.



கிய—பிறவித்தொடர்=அந்தச்சம்சாரவிருட்சத்தின் பிரவாகமானது—ஒருகாலமும்=யாதொருகாலத்தும் — அடைய = முழுவதும்—பாழ் ஆம் வகை=சூனியமாகும்படி — அழியாமையில்=அபாவமாகாமையின்—அழியாதது ஓர்படியே=அவ்வியயமான ஒருதன்மையதே.—எ-று.

இரண்யகர்ப்பாதிகளை, 'கீழ்' எ-து, பிரமத்தைநோக்கத் தாழ்வினராகலின். 'கீழானது' என்பதற்கு, மகதகங்கார தன்மாத்திராதிகள் என்றும் பொருள் கூறுவர். (௪)

["வேதத்தோர்மேவியவிலைமேவியது, அசுவத்தம்" என்பவற்றிற் குரைசெய்கின்றார்.]

**கருநாண்முதல் வினையாலது வளர்காதல்செய் தலினா**
**லருநான்மறை யவையேயிலை யவையாமென வறிநீ**
**வருநாள்களி னொருநாள்பெறும் வகையின்மையி னாலே**
**பெருநாடறி யசுவத்தம தெனலாயது பெயரே.**

(இ-ள்.) கரு நாள் முதல்=கர்ப்பத்திலுண்டான நாண்முதலாக—வினையால்=புண்ணியபாவ ரூபகர்மங்களால்—அது=அச்சம்சாரவிருட்சமானது—வளர் காதல் செய்தலினால்=வளராநிற்கும் அபேட்சையுடையதாயிருத்தலால் — அரு நான் மறையவையே = அரியநான்கு வேதங்களே—இலையவை ஆம் என நீ அறி=(தர்மாதர்மங்களைப் பிரகாசிப்பிக்கும் வழியாக அதற்குப்) பர்ணங்களாமென நீ அறிதி.—வரும் நாள்களின்=வாராநின்ற தினங்களுள்ளே—ஒரு நாள் பெறும் வகை இன்மையினாலே=ஒருநாளிருக்குமென விசுவசிக்கும்படி யில்லாமையினாலே—பெரு நாடு அறி=பெரியவுலகப்பிரசித்தமான — அசுவத்தமது எனலாயது பெயர்=அசுவத்தமென்று சொல்லலாயிற்று அதனது நாமமானது.—எ-று.

பிரசித்தமானபர்ணங்கள் விருட்சத்தின் பரிரட்சணத்தின்பொருட்டே இருப்பனபோலக் கர்மகாண்டரூபமானவேதங்களும் இச்சம்சாரரூபவிருட்சத்தின் பரிரட்சணத்தின் பொருட்டேயுள்ளன. எதனாலெனின்? அக்கர்மகாண்டரூபமான வேதங்கள் தர்மம், அதர்மம் அவற்றின் காரணம், அவைகளின்பலம் என்னும் இந்நான்கையுமே பிரகாசஞ்செய்வதால்; இதனால், கர்மகாண்டங்களான வேதங்களில் சம்சாரரூபவிருட்சத்தின் பர்ணரூபத்தன்மை பொருந்துமாறறிக. (௫)

[மூலத்தோடுகூடச் சம்சாரவிருட்சத்தின் ஞானத்தை ஸ்ரீபகவான் ஸ்துதிசெய்கின்றார்.]

மற்றிப்படி நிகழ்கின்றவிம் மாயாமர மிதனின்
பெற்றித்திற மிதுவல்லது பிறிதின்மையி னாலே
யுற்றிப்படி யுணர்வார்பொரு ளெல்லாமு முணர்ந்தா
ரிற்றிப்பெரு மரத்தின்திற மின்னுஞ்சில வுளகேள்.

(இ-ள்.) இப்படி நிகழ்கின்ற=இவ்வாறாகவிளங்காநின்ற—இம் மாயா மரம் இதனின்=இச்சம்சாரவிருட்சத்தினுடைய — பெற்றித் திறம்=தன்மையாகிய கூறுபாடுகள் - இது அல்லது=இவையேயல் லாமல்—பிறிது இன்மையினாலே=வேறொருதன்மைகளில்லாமையி னாலே—இப்படி=இங்கே கூறியபடியே—உற்றுணர்வார்=(இதனை) நுட்பமாயறியாநிற்பவர்—பொருள் எல்லாமும் உணர்ந்தார்=வேதார்த் தங்கண்முழுதும் அறிந்தோராவர்.—இற்று இப்பெருமரத்தின் திறம் =இத்தன்மையதான இப்பெரிய சம்சாரவிருட்சத்தின் கூறுபாடான அவயவகற்பனைகள்—இன்னும் சில உள=மேலுஞ் சிலவுள—கேள்= நீ கேட்பாயாக.—எ-று. மற்று அசைநிலை.

பிரபஞ்சரூபமான சம்சாரவிருட்சத்தின்மூலம் பரமேசுரன்: பர மேசுரனது அம்சரூபமானபிரமாதிகள் சாகைகள்; அவ்விருட்சமானது நசுவரமானாலும் பிரவாகரூபத்தால் நித்தியம். வேதவிகிதமான கர்மத் தின்வாயிலாக அச்சம்சாரவிருட்சத்தினது விருத்தியுங் கூறப்பட்டது; இவ்வளவே வேதத்தினது நிச்சயமான பொருளாதலால் இதனை இவ் வாறறிந்தோனை, வேதார்த்தமறிந்தவனென்றார். (௬)

[முற்கூறிய சம்சார விருட்சத்தின் அவயவங்களை மற்றொருவித மாக இனிக் கற்பனை செய்கின்றார்.]

கண்ணேயெனையனை யாய்பல பிறவிக்கதி வழியே
மண்ணேமுதற் கீழாமுல கிடையேவளர் வனவும்
விண்ணேமுதன் மேலாமுல கிடையேமிடை வனவு
மெண்ணேறிய பவமாகிய பணையாலிசை தருமே.

(இ-ள்.) கண்ணே எனை அனையாய்=எனது கண்மணியும், என் னையொப்பானவனுமான அருச்சுனா—(சம்சாரவிருட்சமானது) பல பிறவிக் கதி வழியே=நாநாவித யோநிகளாகிய கதிகளின்வழியே— மண்ணே முதல் கீழ் ஆம் உலகிடையே=பூமிமுதலிய கீழுலகத்து— வளர்வனவும்=வளராநிற்பனவும்,—விண்ணே முதல் மேல் ஆம் உல



கிடையே=விண்முதலிய மேலுலகத்து—மிடைவனவும் = நெருங்கி நிற்பனவும் (ஆகிய)—எண் ஏறிய=அளவிறந்த—பவம் ஆகிய பணை யால் இசைதரும்=பிறவிகளாகிய பணைகளோடு கூடிநிற்கும்.—எ-று.

'கீழாமுல கிடையேவளர் வனவு, மேலாமுல கிடையே மிடை வனவும்' எ-து, பாவபுண்ணியவசத்தால் அதோயோநி, ஊர்த்துவ யோநிகளை யடைந்துள்ள சீவர்களை. (௭)

[இதுவுமது.]

நெறியால்வரு தருவேர்பல நிலமாமுல கிடையே
யறியாமையொ டுறவீழ்தலில் வேர்கீழினு முளதாம்
பிறியாதெழு குணமாகிய பெருநீர்மையில் வளரும்
பொறியாகிய விவைதாந்தளிர் போன்மேயது பொலிவே.

(இ-ள்.) நெறியால் வரு தரு வேர் = (ஊர்த்துவ லோகங்கள், அதோலோகங்களிற் புஜித்த நாநாவித போகாநுபவ) வாயிலாலுண்டா கின்றஇராகத்துவேஷாதி வாசனைகளென்னும்வேரானது—பல நிலம் ஆம் உலகிடையே=பல மநுடவுலகின்கண்ணே—அறியாமையொடு உற வீழ்தலில் = அஞ்ஞானத்தோடுகூடத் திடதரமாய் வீழ்ந்திருத்த லால்—வேர் கீழினும் உளது ஆம் = (சம்சார விருட்சத்திற்கு) மூல மானது கீழேயுமுளதாம்.—பிறியாது எழு=நீங்காதெழுகின்ற—குணம் ஆகிய=சத்துவாதி குணங்களாகிய—பெரு நீர்மையில்=உபாதானத் தன்மைகளால்—வளரும் = (ஜலத்தால் விருட்சம்போல) வளராநிற் கும்.—பொறி ஆகிய இவைதாம் = (இந்திரியங்களால் ஜநியாநின்ற விருத்திகளோடு சம்பந்தமான) சப்தாதி விஷயங்களானவை—தளிர் போல்=பல்லவங்கள்போன்று—பொலிவு மேயது=அழகாகப் பொரு ந்தியது.—எ-று. தாம், ஏ-அசைகள்.

சம்சார விருட்சத்திற்கு மூலமாக முன்னே கூறிய மாயாவிசிஷ் டப்பிரமம் முக்கிய மூலம், இங்கே கூறிய இராகத்துவேஷாதி வாச னைகள் அவாந்தரமூலமாம் ஆகலின், கூறியதுகூறலென்னுங் குற்ற மின்றாம். கர்மாநுபந்தீநியென்பார், 'நெறியால்வருதரு' என்றார். முன் னே தானுற்பந்நமாய்ப் பின்னே தர்மாதர்மரூபகர்மங்களை உற்பந்நமாக்கு வது கர்மாநுபந்தீநி; அவ்வாசனாமூலம் யாண்டுளதென்னின்? மநுட லோகத்திலென்பார், 'பல நிலமாமுலகிடையே' என்றார். பிராமணாதி மநுடதேகத்தையே இங்கே மநுடலோகம் என்றது. மநுடருக்கே கர்மாதிகாரம் சாஸ்திரங்களிற் கூறியிருத்தலால் பிராமணாதி சரீரங் களிலேயே வாசனாரூபமான மூலமானது தர்மாதர்மரூபகர்மஜநகமாக வுளதென்பது கருத்து. (௮)

[முற்கூறிய சம்சாரத்தின்கண் அநிர்வசனீயத்தன்மை அருளிச்செய்கின்றார்.]

கனவுந்திகழ் கழுதாழியு மிகுகந்தர்வ நகரு
மெனவந்தழி தலினாலுரு வதுவின்றிய தியாது
முனம்வந்திடு முதனாளொடு முடிவின்மையி னாலே
தனதந்தமு முதலுந்தெரி தரவில்லது தானே.

(இ-ள்.) (இச்சம்சாரவிருட்சமானது) கனவும்=சொப்பனபதார்த்தமும்,—திகழ் கழுதாழியும் = பொய்யாய்விளங்குகின்ற பேய்த்தேரும்,—மிகு கந்தர்வ நகரும் என = மேலான கந்தருவநகரமும்போல—வந்து அழிதலினால்=தோன்றியழிவதால்,—யாதும் உருவது இன்றியது=சிறிதுந் தனக்கென உருவமில்லாதது.—முனம் வந்திடும்=முன்னே தானில்லாதிருந்து உண்டாகும்—முதல் நாளொடு முடிவு இன்மையினாலே = ஆதிகாலமும், பின்னர்த் தானபாவமாகும் அந்தகாலமும் இல்லாமையினாலே—தனது அந்தமும் முதலும் = சம்சாரவிருட்சத்தினது அந்தமும், ஆதியும் — தெரிதர இல்லது = (எந்தப் பிராணிகளாலும்) அறியும்படிக்கில்லாதது.—எ-று.

தான், ஏ-அசைநிலைகள். ஆதி, அந்தங்கள் இரண்டைப்பற்றியே மத்தியம் குறிக்கப்படுவதால் அவை சித்தியாமையினாலேயே மத்தியமுஞ் சித்தியாதென்பது. (௯)

[அதனைச் சேதிக்கும் உபாயமருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

மந்திர மாயவிந்த மரத்தினைத் துறவென்கின்ற
தந்திர வாளால்வெட்டித் தற்பர மாகிநின்றே
யிந்திர சாலமென்ன யாவையுங் காட்டுகிற்கு
மந்தமி லாதவென்னை யடைகையே யடுப்பதையா.

(இ-ள்.) மந்திரம் ஆய = (அச்சுவத்தமென்று வேதத்திற்சொல்லும்) இரகசியமாகிய—இந்தமரத்தினை = இச்சம்சாரவிருட்சத்தை—தம் திர துறவு என்கின்ற வாளால் = தமதத்தியந்தந் திடவைராக்கியமென்னுஞ் சஸ்திரத்தால்—வெட்டி = சேதித்து (அதன்பின்னர் அதிகாரியாயினோர் பிரமபதமறியவேண்டியது.)—[எவ்வுபாயத்தினால்பிரமபதமறியத்தக்கதென்னிற் கூறுகின்றார்.] தற்பரம் ஆகிநின்றே=பிரமசொரூபமாயிருந்தவண்ணமிருந்தே—இந்திரசாலம் என்ன = இந்திரசாலம்போல—யாவையும் காட்டுகிற்கும் = மாயாமயமான இப்பிரபஞ்சமனைத்தையும் தோற்றுவிக்கின்ற—அந்தம் இலாத என்னை = அந்தமற்றவென்னை—அடைகையே=சரணடைதலே—ஐயா = அருச்சுனா—அடுப்பது=(அதிகாரிகள்) பிரமபதத்தை யறிதற்குரிய உபாயமாம்.—எ-று.



'துறவு' எ-து, புத்திரவித்தாதி ஈஷணாத்தியாகத்தை; அல்லது, அகந்தை, மமதைகளின் தியாகத்தை. வைராக்கியமாத்திரத்தால் கிருதகிருத்தியத்தன்மைஉளதாகாதாதலின், அநந்தரம்கர்த்தவ்யவுபாயங்கூறப்பட்டதென்றறிக. சரணடைதல், நிரந்தரசிந்தனாரூப அநந்யபக்தி; இதுவே பரப்பிரமரூபமான விஷ்ணுபதத்தின் சாட்சாத்காரத்திற்கு உபாயமாமென்க. (௧௦)

[இதில் அத்துவிதீயநிர்க்குணப்பிரமரூபமான வைஷ்ணவபதமடைதற்கேதுவானமற்றோருபாயமும், அவ்வைஷ்ணவபதத்தின் விசேஷணமும் அருளிச்செய்கின்றார்.]

துன்னிய வாசைகோபங் கடந்தவர் காணத்தோன்று
மென்னுரு வியற்கைகேட்கி லியாவையுங் காட்டுகின்ற
மன்னிய வொளிகள்காணா வகையதாய் வந்துசேர்ந்தார்
பின்னியல் வேறொன்றாகாப் பெற்றிய னென்றுபேசும்.

(இ-ள்.) துன்னிய ஆசை கோபம் = (ஊழ்வசத்தால் தம்மைக்) கிட்டாநின்ற (பிரியாப்பிரியவிஷயங்களாலுளவாகும்) இராகத்துவேஷமுதலியவற்றை—கடந்தவர்=பரித்தியாகஞ்செய்த ஞானிகள்—காணத்தோன்றும் = காணும்படிக்குத் தோன்றாநிற்கும்—என் உரு இயற்கை கேட்கில்—(அப்படிப்பட்ட வைஷ்ணவபதமான) எனது சொரூபசுபாவத்தை நீ கேட்கில்,—யாவையும் காட்டுகின்ற=சர்வஜகத்தையும் பிரகாசிப்பிக்கின்ற—மன்னிய ஒளிகள் = நிலைபெறுதலையுடைய சூரியன், சந்திரன், அக்கினி என்னும் ஒளிகளினால்—காணா வகையது ஆய் — பிரகாசிப்பிக்கப்படாததன்மையுடைய சொப்பிரகாச சொரூபமாய்,—வந்து சேர்ந்தார்=வந்தடைந்தோர்கள்—பின் இயல் வேறு ஒன்று ஆகா = (சமுத்திரத்தையடைந்த நதிகள்போலப்) பின்னர்த்தமது சுபாவமானது வேறொருவிதமாகவாகாத—பெற்றியன் என்று பேசும்=தன்மையனென்று (என்னைச்சுருதிகள்) சொல்லும்.—எ-று.

'துன்னியவாசைகோபம்' என்பதை, மொழிபெயர்த்தோர் உபலட்சணமாக வைத்தலின் மானம், மோகம், சீதோஷ்ணமுதலிய துவந்துவம் ஆகிய இவற்றையுங் கொள்ளத்தக்கனவாம். மானம்=அகங்காரம். மோகம்=அவிவேகம்; அல்லது, விபர்யயம். பரப்பிரமரூபமான

பதத்தை, சர்வஜகத்தையும் பிரகாசிப்பிக்குஞ் சக்தியுடைய சூரியனும் பிரகாசிப்பிக்கமாட்டான், சூரியன் அஸ்தமித்திடினும் சந்திரப்பிரகாசமிருத்தலின், அஃது பிரகாசிப்பியாதோவென்னின்? அதுவும் பிரகாசிப்பிக்கமாட்டாது, சூரியசந்திரர் அஸ்தமித்திடினும் அக்கினிப்பிரகாசமிருத்தலின் அது பிரகாசிப்பியாதோவென்னின்? அதுவும் பிரகாசிப்பிக்கமாட்டாது என்னும் இவ்வாறான பிரதிக்ஞைமாத்திரத்தால் அர்த்தசித்தியாகாது; ஆகுமேல், வந்தியாபுத்திரன் உளனென்னும் பிரதிக்ஞைமாத்திரத்தால் வந்தியாபுத்திரனுஞ் சித்தித்தல்வேண்டும்; அங்ஙனஞ் சித்தியாமையின் பிரதிக்ஞைசெய்த வர்த்தசித்தியில் யாதானுமொரு ஏது கூறல்வேண்டும்; அவ்வேது என்னையோவெனின்? சொப்பிரகாச சொரூபமாமென்பார், 'மன்னியவொளிகள் காணுவகையது' என்றார். 'பின்னியல் வேறொன்றாகா' என்றதற்கு மீண்டு ஜநியாதொன்று பொருள். (௧௧)

[சுவர்க்காதிகளையடைந்த கர்மிகள் அவசியம் மீளாநிற்பதும், சுழுத்தி, பிரளயங்களில் ஆன்மபாவத்தையடைந்த பிராணிகள் மீளாநிற்பதும், பிரசித்தமாவதால் உமதுபதத்தை யடைந்தோர் ஏன் மீளாரொன்னின்? அதற்குக்காரணம் அருளிச்செய்கின்றார்.]

**குடந்தொறுந் தோன்றுகின்ற காயமுங் குலைதற்கேற்பத்**
**தடம்புனறோறுந்தோன்றுஞ் சந்திரன் றானுமென்ன**
**வுடம்புக டோறும்வேறா யுயிரென நின்றேயந்த**
**விடம்படு புலன்களாறு மியல்பினி லியற்றுவேனன்.**

(இ-ள்.) குடந்தொறும் தோன்றுகின்ற காயமும் = கடங்கடோறும் அவச்சின்னமாய்த் தோன்றாநின்ற கடாகாயமும், — குலைதற்கு ஏற்ப = அசைதற்கேற்க — தடம் புனல்தோறுந் தோன்றும் = தடாக ஜலங்கடோறும் பிரதிபிம்பித்துத் தோன்றும் — சந்திரன் தானும் என்ன = பிரதிபிம்ப சந்திரனும்போல — உடம்புகள்தோறும் = சரீரங்கடோறும் — வேறு ஆய் = அந்நியமாய் — உயிர் என நின்றே = ஜீவன் போலநின்றே — அந்த இடம் படு = அந்தச் சரீரங்களில் (அஞ்ஞான ரூபமான பிரகிருதியின்கண்ணே சூட்சுமரூபமாக) அடங்கியுள்ள — புலன்கள் ஆறும் = இந்திரியங்கள் ஆறினையும் — (போகத்திற்கேதுவான கர்மமானது உதயமாயின் அப்போகத்தின்பொருட்டு) இயல்பினில் = அவ்வவ்விந்திரியங்களின் சுபாவவிஷயங்களில் — நான் இயற்றுவேன் = (பரமான்மதேவனான) நான் பிரேரிப்பிப்பேன். — எ-று.



புலன்களாறாவன = சுரோத்திரம், சட்சு, சிங்ஙுவை, கிராணம், துவக்கு. மனம் என்னும் இவைகளாம். லிங்கதேகத்தின் ஏனையதத்துவங்களும் இவற்றில் அந்தர்ப்பாவமாம். 'உடம்புகடோறும் வேறாயுயிரென நின்றே' என்று இங்ஙனங் கூறினது பரமான்மாவாகிய தேவனே இச்சரீரத்தின்கண் ஜீவரூபமாகப் பிரவேசித்துளனென்னுஞ் சுருதியால்; இங்ஙனங் கூறியவாற்றால் கட, தடாகஜலவுபாதிகளின் நாசத்தில் கடாகாசமும், பிரதிவிம்பசந்திரனும்போல ஆன்மஞானத்தால் அஞ்ஞானம் நீங்கிடில் இச்சீவான்மா தனது சொரூபபூதமான பிரமத்தையடைந்து பின் பிரமத்தினின்றும் ஆவிர்த்தியடையானென்பது பெறப்படுகின்றது. 'அந்த விடம்படு புலன்களாறு மியல்பினி லியற்றுவேனன்' என்பதன் கருத்து ஆன்மஞானத்தால் ஜீவான்மாவுக்கு அனாவிர்த்தி யுளதேனும், அஞ்ஞானத்தால் ஆவிர்த்தியுளதாமென்பது. (௧௨)

[இச்சீவான்மா எந்தக்காலத்தில் மனமுதலிய ஆறிந்திரியங்களையும் * ஆகர்ஷணஞ் செய்கிறானென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

**பூக்கமழ் நாற்றங்கொண்டு பொருவளி போகுமாபோற்**
**றீக்கனல் கின்றவேலோய் சீவனென் கின்றசீரோ**
**னாக்கையை யெய்தும்போது மதனைவிட் டேகும்போதும்**
**போக்கரி தாயவாறு புலன்களைக் கொண்டுபோமால்.**

(இ - ள்.) தீக் கனல்கின்ற வேலோய் = அக்கினியைப்போல ஒளிராநின்ற வேலையுடைய அருச்சுனா — பொரு வளி = பொருந்திய வாயுவானது — பூக்கமழ் நாற்றம் = புஷ்பத்தினின்றும்பரிமளியாநின்ற கந்தத்தை — கொண்டு போகுமாபோல் = கிரகித்துக்கொண்டு செல்லாநிற்குந் தன்மைபோல — சீரோன் என்கின்ற சீவன் = (தேகாதிசங்காதங்கட்குச் சுவாமியாவதால்) ஈசுவரரூபனென்னுஞ் சீவான்மா — ஆக்கையை எய்தும்போதும் = (கர்மவசத்தால் ஓர்சரீரத்தினின்றுஞ்) சரீராந்தரத்தை யடையும்போதும், — அதனை விட்டு ஏகும்போதும் = அச்சரீரத்தை விடுத்துப் (பரலோகத்திற்குச்) செல்லும்போதும் — போக்க அரிது ஆய = போக்குதற்கரியனவான — ஆறு புலன்களைக் கொண்டுபோம் = மனமுதலிய ஆறிந்திரியங்களையுங் கிரகித்துக்கொண்டு செல்லுவன். — எ-று. ஆல்-அசைநிலை. (௧௩)

---

* ஆகர்ஷணம் = இழுத்தல்.

[எப் பிரயோஜனத்தின்பொருட்டு இச்சீவான்மா ஆறிந்திரியங்களையுங் கிரகித்துக்கொண்டு செல்கின்றனனென்னின்? அப் பிரயோஜனத்தை யருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

**மின்னே யனைய வுடம்புதனை விடுவதடைவ தாய்விடயந்**
**தன்னே ரில்லா தான்றானே யார்கின்றானத் தன்மையினை**
**யென்னே காணா ரறியாதா ரறிவாரியோகத் தாலேதம் [ள்.**
**முன்னே காண்ப ரிதனியற்கை தெளிநீயின்னு மொழிவன்கே**

(இ-ள்.) மின்னே அனைய உடம்புதனை = மின்னைப்போலத்தோன்றி யழிந்துபோகின்ற சரீரத்தை—விடுவது அடைவது ஆய் = பரித்தியாகஞ் செய்வதும், கிரகிப்பதுமாகி—தன் நேர் இல்லாதான் = தனக்கு யாதொன்றும் இணையில்லாத ஜீவான்மாவானவன்—விடயம் = சப்த ஸ்பரிசாதி விஷயங்களை—ஆர்கின்றான் = (முன்சொன்ன இந்திரியங்களை ஆசிரயமாகக்கொண்டே) புஜிக்கின்றான்.—[இந்தப்படி தரிசன யோக்கியமான ஆன்மாவை அவிவேகிகள் காணார், விவேகிகளே காண்பரென்னும் பொருளை இப்போது அருளிச்செய்கின்றார்.] அத்தன்மையினை = (தமது புத்தியின்கண்ணுள்ள ஆன்மாவினது) அப்படிப்பட்ட தன்மையை — அறியாதார் காணார் = (அசுத்தாந்தக்கரணமுடைய) அவிவேகிகள் (பிரயத்தனஞ்செய்தும்) அறியார்;—என்னே = இஃதாச்சரியம் !—அறிவார் = (சுத்தாந்தக்கரணமுடைய) விவேகிகள்—யோகத்தாலே = தியானுதியுபாயங்களாலே—தம் முன்னே காண்பர் = தமதெதிரே அறியாநிற்பர்;—இதன் இயற்கை = (முன்சொன்ன பிரகாரமாக) இவ்வான்மாவின் சுபாவத்தை—நீ தெளி = நீ அறிதி—இன்னும் மொழிவன் கேள் = மேலுங் கூறுகின்றேன் கேள்.—எ-று. (௧௪)

தான், ஏ-அசைநிலைகள்.

[௧௧-ம் செய்யுண்முதல், ௧௪-ம் செய்யுள்வரையும் பரமேசுரனை தனது பதமானது சூரியாதியொளிகளாற் பிரகாசிப்பிக்கப்படாத சொப்பிரகாச சொரூபமென்பதும், அதனை யடைந்தோர் மீண்டு ஜநியாரென்பதும், ஜநியாமைக்குக் காரணம் இதுவென்பதும், தேகத்திற் கந்நியமாய்ச் சம்சாரி இன்ன சொரூபனாயுள்ளன், அவனை அங்ஙனம் விவேகிகளன்றி அவிவேகிக ளறியாரென்பதும் அருளிச்செய்து இனித்தனது சர்வான்மத் தன்மையையும், சர்வவியவகாரங்களின் சாதனத்தன்மையையுந் தரிசிப்பிக்கு மிச்சைநண்ணித் தனது விபூதிகளைச் சங்க்ஷேபமாக ஐந்துசெய்யுட்களால் அருளிச்செய்கின்றார்.]



[வேறு.]

**இந்தியங் களுக்குங்கண்ணா னிரவிதீ யிந்துவின்பால்**
**வந்தெழு கதிருநானே மாநில மாகிநின்றே**
**கந்தியன் றனையதோளாய் கந்தமே முதலாந்தன்மை**
**தந்துரந் தரித்தீதெல்லாந் தாங்குகின் றேனுநானே.**

(இ-ள்.) கந்து இயன்ற அனைய தோளாய் = தூணியைந்தாற்போன்ற புயத்தினையுடைய அருச்சுனா, — இந்தியங்களுக்கும் கண்ணான் = சட்சுமுதலிய இந்திரியங்கட்கும், (மனத்துக்கும், வாக்குக்கும் தத்தம் விஷயங்களைப் பிரகாசிப்பிக்குஞ் சாமர்த்தியரூபமான) தேஜஸுமாநாகிறேன்.—இரவி இந்து தீயின்பால் = (இந்திரியங்களினிடத்து அநுக்கிரகஞ் செய்யாநிற்குஞ்) சூரியன், சந்திரன், அக்கினி என்னும் இவைகளிடத்து—வந்து எழு கதிரும் நானே = உதித்தொளிராநிற்குந் தேஜஸும் நானாகிறேன்.—மா நிலம் ஆகி நின்று = பிருதுவி தேவதாரூபமாகிநின்று — கந்தமே முதல் ஆம் தன்மை தந்து = கந்தமுதலிய குணங்களை அதற்குத்தந்து—உரம் தரித்து = எனது பலத்தையும் அதில்வைத்து (அத்தியந்ததிடமாக்கி)—ஈது எல்லாம் தாங்குகின்றேனும் நானே = அதிலுள்ளஸ்தாவரஜங்கமரூபமான இப்பூதங்களனைத்தையுந் தரிக்கின்றவனும் (பரமேசுரனான) நானேயாம்.—எ-று. ()

[இதுவுமது.]

[வேறு.]

**மூந்து வான்சுவை மூர்த்த மாகிய**
**விந்து வாகிநின் றுணவி யாவினுந்**
**தந்து சேர்சுவை தகவ வற்றிலே**
**நந்தி டாவகை வளர்க்கின் றேனுநான்.**

(இ-ள்.) முந்துவான் = முதன்மையான ஆகாயத்தின்கண்ணே—சுவை மூர்த்தம் ஆகிய = சர்வரசங்களின் ஆகாரமான—இந்து ஆகி நின்று = சந்திரரூபமாய்நின்று—உணவு யாவினும் = உண்ணத்தக்கவைகளான விரீஹி, யவைமுதலிய ஔஷதிகளனைத்திலும்—தக சேர் சுவை தந்து = அவ்வவற்றிற்குரியனவாய்ப் பொருந்துகின்ற இரதங்களைக் கொடுத்து—அவற்றிலே = அவ்வவ்வோஷதிகளிலே—நந்திடாவகை = (அவ்விரதங்கள்) கெடாதபடிக்கு—வளர்க்கின்றேனும் நான் = விருத்திசெய்கின்றவனும் (பரமேசுரனான) நானேயாம்.—எ-று. (௧௫)

[இதுவுமது.]

தின்ப நக்குவ சுவைப்ப வுண்பவாய்
நன்ப யன்செயு நால்வகை யுண்டியு
மின்ப மாம்வகை யாக்கைக டோறுநின்
றன்ப வங்கியா யறுக்கின் றேனுநான்.

(இ - ள்.) அன்ப=அருச்சுனா—தின்ப நக்குவ சுவைப்ப உண்ப
வாய்=தின்பனவும், நக்குவனவும், சுவைப்பனவும், உண்பனவுமாய்—
நன் பயன் செயும்=நல்ல பயனைச் செய்யாநின்ற—நால்வகை உண்டி
யும்=நான்கு கூறுபாடுடைய அந்நத்தையும்—இன்பம் ஆம் வகை=
சுகத்திற் கேதுவாகும்படி—ஆக்கைகள்தோறும் = பிராணிகளின் சரீ
ரங்கடோறும்—அங்கி ஆய் நின்று=ஜாடராக்கினிரூபமாய்(ப் பிராண
பானன்களோடுகூடி) நின்று—அறுக்கின்றேனும் நான்=பரிபாகஞ்
செய்கிறவனும் (பரமேசுரனான) நானேயாம்.—எ-று. (கஎ)

[இதுவுமது.]

நல்ல மாந்தர்நல் லறிவு நன்கிலாப்
புல்லர் தங்கள்புல் லறிவும் போர்திகழ்
வில்ல மைந்ததோள் வீரர் வீரயா
னல்ல தில்லையென் றறிய வேண்டுமே.

(இ-ள்.) போர் திகழ்=யுத்தத்தின்பொருட்டு விளங்காநின்ற—
வில் அமைந்த = தநுசுபொருந்திய—தோள் வீரர் வீர=புஜத்தை
யுடைய வீரரில் அதிவீரனான அருச்சுனா—நல்லமாந்தர் நல் அறிவும்=
புண்ணிய கர்மங்களையுடைய மநுடரின் பேரறிவும்,—நன்கு இலாப்
புல்லர்தங்கள் புல்லறிவும்=நன்மையில்லாத பாவிகளுடைய சிற்றறிவும்
—யான் அல்லது இல்லை=பரமேசுரனான நானேயல்லாமல் வேறில்லை
—என்று அறியவேண்டுமே=என்று நீ அறியத்தக்கதே.—எ-று.

பிரமாமுதல் ஸ்தாவரபரியந்தம் உயர்வு, தாழ்வாயுள்ள சர்வப்
பிராணிகளின் புத்தியின்கண் பரமேசுரனான நானே ஜீவான்மரூபமா
ய்ப் பிரவேசித் திருத்தலால் சர்வப்பிராணிகளின் ஸ்மிருதியும், ஞான
மும் நானே யென்பதாம்.

ஸ்மிருதி=பூர்வம் அநுபவித்தபொருளை விஷயமாகவுடையது;
ஞானம் = விஷயேந்திரிய சம்யோகத்தாற் சநியாநிற்பது; இவ்விரண்
டையும் இங்கே, 'அறிவு' என்றார். (கஅ)



[இதுவுமது.]

அசைவி னன்மறை யறிவ னனதன்
வசையி லாதமெய்ப் பொருளும் வாய்மைசே
ரிசையி னாலெடுத் தோது வேனுநான்
விசைய கேளினும் வேறு மொன்றையே.

(இ-ள்.) அசைவு இல் = அபாதிதமான—நால் மறை அறிவன்
நான் = நான்கு வேதங்களின் பொருள்களையும் அறியாநிற்பவனும்
நானே.—அதன் வசை இலாத = அந்த வேதங்களினுடைய நிந்தை
யற்ற—மெய்ப்பொருளும்=உண்மைப்பொருளும் (வேதவேத்தியனு
மென்றபடி)—வாய்மை சேர் இசையினால்=மெய்ம்மையாகிய சுரங்க
ளினால் — எடுத்து ஓதுவேனும் நான்=எடுத்துப் போதியாநிற்குஞ்
சம்பிரதாயப் பிரவர்த்தகனான குருவும் நானே.—இனும் வேறும் ஒன்
றை=இன்னும் வேறொரு பொருளையும்—விசைய கேள்=அருச்சுனா
நீ கேட்பாய்.—எ-று. (க௯)

[இவ்வாறு தமது சோபாதிகசொரூபத்தை ஸ்ரீ பகவான் அரு
ளிச்செய்து அருச்சுனனிடத்துக் கிருபைகூர்ந்து க்ஷராக்ஷரமென்னும்
பெயருடைய காரியகாரணரூபமான இரண்டு உபாதிகளுமில்லாத நிரு
பாதிகயான தமது சுத்தசொரூபத்தை யருளிச்செய்கின்றார்.]

மருவு கின்றவிவ் வுலகின் மாய்தலே
யுருவ மாகமுன் புடைய தோன்றுமே
யருவ மொ[illegible]றினா லழிவ தின்மையே
பொருவ நின்[illegible]தோர் பொருளு முண்டரோ.

(இ-ள்.) மருவுகின்ற இவ்வுலகில்=பொருந்துகின்ற இவ்வுலகின்
கண்—மாய்தலே = அழிதலை[illegible]தானே — உருவம் ஆக முன்பு உடை
யது=வடிவமாக எதிரேயுள்ளதா[illegible]—ஒன்றும் = ஓர்பொருளும்,—
அருவம்=அருவமாய்—ஒன்றினால்=[illegible]தாவினாலும்—அழிவது இன்
மையே=அழிவில்லாமையைத்தானே—[illegible]ருவ நின்றது=பொருந்
தும்படி நிற்பதாகிய—ஓர் பொருளும் உண்டு.—எ-று.

ஏ, அரோ-அசைநிலைகள். சம்சாரதசைக்கண[illegible]க்ஷரம் எ-ம், அக்ஷ
ரம் எ-ம் இரண்டு பொருளுண்டு என்றவாறு. (௨௦)

[அவைகளின் சொரூபத்தை ஸ்ரீ பகவான் தாமே [illegible]ளிப்படை
யாக வருளிச்செய்கின்றார்.]

மொழிசெய் கின்றவிவ் விரண்டு முற்றவே
விழியி னாலுற நோக்கின் மெய்ம்மையே

யழிவ தாக்கையாங் கழிவு பாடிலா
தொழிவ தென்னெனி னுயிரொன் கின்றதே.

(இ-ள்.)மொழிசெய்கின்ற இவ்விரண்டும்=க்ஷரம், அக்ஷரமென்று
கூறுகின்ற இவ்விரண்டு பொருள்களேயும் — முற்ற = முழுதும்—
விழியினுல் = அறிவினுல்—மெய்ம்மையே = உள்ளபடியே — உற
நோக்கில்=அழுந்தவாராய்ந்திடில், — அழிவது=க்ஷரமென்று சொல்
லப்படுவது—ஆக்கை=பிரமாமுதல் ஸ்தாவரபரியந்தமான சரீரங்கள்.—
அழிவுபாடு இலாது ஒழிவது என்னெனின்=அக்ஷரமாவதேதென்றால்
—உயிர் என்கின்றது=(சரீரமழியினுமழியாமல் நிர்விகாரமாயுள்ள)
சேதனமான போக்தாவென்று சொல்லப்படுகின்றது.—எ-று.

ஏ, ஏ, ஆங்கு-அசைநிலைகள். க்ஷரம், அக்ஷரமென்பவைகட்கு இங்
ஙனம் பொருள் கூறியது ஸ்ரீதரசுவாமிகளின் வியாக்கியானத்தின்
படி. சங்கரபாஷியத்திலோவெனின்? காரியரூபமான சர்வ பூதங்களும்
க்ஷரம் எ-ம், காரணரூபமானமாயை அக்ஷரம் எ-ம் இவ்வாறருளிச்செய்
திருக்கின்றது. இச்செய்யுட்கு இவ்வாறு பொருள்கொள்ளில், 'உயிர்'
என்னும் மொழிக்குக் காரியசமூகங்கட்குப் பீஜமான மாயாசக்தியெ
ன்று பொருளுரைத்துக்கொள்க. (உக)

[இனி க்ஷரம், அக்ஷரமென்னும் இரண்டு உபாதிகட்கும் விலட்
சணுய் அவ்விரண்டு உபாதிகளின்றோஷங்களோடுங்கூடாத நித்திய,
சுத்த, புத்த, முத்தசுபாவனுன பரமான்மாவை ஸ்ரீ பகவான் அருளிச்
செய்கின்றூர்.]

இவையி ரண்டையுங் கடந்தி யாதுமோர்
நவையு மின்றியே நாச மின்றிய
யெவையு மின்றியே யிழி மின்றியே
குவையி னின்றதோர் குறியி லின்பமே.

(இ-ள்.) இவை இரண்டையும் கடந்து=முன்சொன்ன க்ஷரம்,
அக்ஷரங்களிரண்டிற்கும் அந்நியமாய்—யாதும் ஓர் நவையும் இன்றி=
(அவ்விரண்டின்கண்ணுள்ள) எதுவுமொருதோஷமில்லாமல்,—நாசம்
இன்றி=உற்பத்திநாசமுதலிய விகாரங்களில்லாமல்;—எவையும் இன்
றி=எவையும் தன்கண் பரமார்த்தமாக இல்லாமல்,— இழிவும் இன்றி
=யாதொரு குறைவுபாடுமில்லாமல்,—குவையில்=லோகத்திரயங்களி
லும்—நின்றது=(தனதுசக்தியால்வியாபித்துத் தனது சத்பாவத்தால்
அவைகளைத்தரித்து) நின்றது,— ஓர் குறியில் இன்பம் = யாதொரு
விசேஷணமுமில்லாதஆநந்தவுருவமானபரமான்மாவென்பது.—எ-று.



இங்கே 'குறியிலின்பம்' என்று கூறியிருப்பதுபோலவேவாசிட்
டத்தில், "உயர்வுறு மதற்குநாமங் கற்பனே யொருமைபன்மை, வியன்
மகத் தணுவென்றேதும் விதமுறு குறிகள்காணேன்" என்று கூறி
யிருப்பது காண்க. (உஉ)

[இவ்வாறுன தன்மையையறிந்ததனுல் வரும்பயனையருளிச்செய்
கின்றூர்.]

இந்த வின்பமா மென்னே யுள்ளவா
சிந்தை யின்கணே தெளிதன் மேயினுர்
பந்த மொன்றிலார் பழைய விப்பொருட்
கந்த மாதிவே றறிய வொண்ணுமோ.

(இ-ள்.) இந்த இன்பம் ஆம் என்னே=முன்சொன்ன சர்வவிகா
ரங்களு மிறந்த நிரதிசயாநந்தரூபமாகிய என்னே—உள்ளவா=உள்ளபடி
யே—சிந்தையின்கணே=தமதுபுத்தியின்கண்ணே—தெளிதல் மேயி
னுர்=அறிதலைப்பொருந்தினேர்—பந்தம் ஒன்றிலார்=பந்தமடையார்;—
[அதற்கேதுகூறுகின்றூர் ] பழைய இப்பொருட்கு=எவற்றிற்கு முன்
னேயுள்ள இப்பரமான்மவஸ்துவிற்கு—அந்தம் ஆதி வேறு அறியவொ
ண்ணுமோ=அந்தமும், ஆதியும் வேறேயுண்டென் றறியக்கூடுமோ?
(கூடாது.)—எ-று. (உங)

[தமது ஞானத்தின் அரியதன்மையை யருளிச்செய்கின்றூர்.]

வேத நாலுநின் றுரைசெய் தாலுமொன்
றேத லாவதன் றுல கறிந்ததோ
காத லாலெனக் கினிய தோழனீ
யாத லாலுனக் கறிய வோதினேன்.

(இ-ள்.) வேதம் நாலும்=இருக்குமுதலிய நான்குவேதங்களும்—
—நின்று உரைசெய்தாலும் = ஒரோமுகமாகநின்று சொல்லத்தொடங்
கினும் -- ஒன்று ஓதலாவது அன்று=சிறிதுஞ்சொல்லலாவதன்று:—
உலகு அறிந்ததோ=உலகுதானறிந்ததோ? (அன்று.)—நீ=அருச்சுன
நீ—எனக்கு=(ஈசுரனுன) எனக்கு—இனிய=பிரியமாகிய—தோழன்
ஆதலால்=சிநேகனுதலால் — காதலால் = கருணையினுல் — உனக்கு
அறிய ஓதினேன்=உனக்கறியும்படி (அதிரகசியமான எனது சொரு
பத்தை) உபதேசித்தேன்.—எ-று.

'உலகு' எ-து. உயர்ந்தோரை. "அப்படி யிருந்தயோகி யநுபவத்
தன்மைதானுமெப்படியென்றுகாணுன்" என்று பிரமகீதையிற் கூறி
யிருப்பது காண்க. (உச)

[அத்தியாயத்தை உபசம்மரிக்கின்றார்.]

[வேறு.]

**கண்ணேயோ ரிடத்துமின்றி யதனிலே வைக்கிற்காதற்**
**பண்ணேயோ டாக்குகின்ற வினையெலாம் பயக்குமென்றான்**
**வெண்ணேயோ விதுரனிட்ட விருந்தையோ வேலைசூழ்ந்த**
**மண்ணேயோ வுண்டுமுன்னாள் வருபசி தீர்ந்தமாயோன்.**

(இ-ள்.) கண்ணை = புத்தியை — ஓரிடத்தும் இன்றி = எந்த விஷயங்களிலும் வையாமல் — அதனிலேவைக்கில் = நிரதிசயாநந்தரூபமான பரமான்மாவின்கண்ணேயே ஸ்திதியடையப்பண்ணில் — காதல் பண்ணேயோடு ஆக்குகின்ற = ஆசாசமூகங்களோடு கூடிச்செய்கின்ற — வினை எலாம் = சாஸ்திரவிகிதமான கர்மங்களனைத்தும் — பயக்கும் என்றான் = செய்து முடிந்தனவாகவே ஆகும் என்றருளிச்செய்தனர். — வெண்ணேயோ = இளங்கோபிகா ஸ்திரீகள் கொடுக்கப்பெற்ற நவநீதத்தையோ, — விதுரன் இட்ட விருந்தையோ = விதுரரால் கொடுக்கப்பெற்ற விருந்தையோ, — வேலை சூழ்ந்த மண்ணேயோ = சமுத்திரஞ்சூழ்ந்தபூமியையோ — உண்டு = திருவமுதுசெய்து — முன்னாள் = (நந்தகோபன் திருமனையில் மதலையாய்) அவதரித்த ஞான்று — வருபசி தீர்ந்த மாயோன் = வாராநின்ற பசியொழிந்த ஸ்ரீகண்ணபிரான். — எ-று.

## கரு-வது, பிரபஞ்சவத்தியாயம்

முற்றிற்று.

ஆக அத்தியாயம் கரு-க்குத் திருவிருத்தம்-௬௨௯

## கசு-வது தேவாசுரசம்பத்து விபாகயோக வத்தியாயம்.



[பூர்வாத்தியாயத்தில் ஸ்ரீ பகவான் மநுடதேகத்தின்கண்ணே பூர்வஞ்செய்துள்ள சுபாசுபகர்மங்களின் அநுசாரமாக வுளவாகுஞ் சுபாசுபவாசனைகளைச் சம்சார விருட்சத்திற்கு அவாந்தரமூலரூபமாக வருளிச்செய்தனர்; அவ்வாசனைகளைத்தானே பூர்வம் ஒன்பதாமத்தியாயத்திலும் தேவசம்பத்து, அசுரசம்பத்து, இராட்சதசம்பத்து என மூவகையாகச் சூசனஞ்செய்தனர்; இவ்வத்தியாயத்தில் அத்தேவசம்பத்தைத் தெய்வசம்பத்து எ-ம், இராட்சதசம்பத்து, அசுரசம்பத்து



இரண்டனையு மொன்றாக்கி அசுரசம்பத்து எ-ம் வாசனைகளை இருவித பேதமாகக்கொண்டு அவ்விரண்டனுள், தெய்வசம்பத்தென்னுஞ் சுபவாசனை மோட்சத்திற் கேதுவாகலானும், அசுரசம்பத்தென்னும் அசுபவாசனை பந்தத்திற் கேதுவாகலானும் அதிகாரிகளாயினோர், சுபவாசனையைக் கொள்ளல்வேண்டும், அசுபவாசனையைத் தள்ளல்வேண்டும் என்னுங் கருத்தினராய்ச் சுபவாசனையைக் கொள்ளலும், அசுபவாசனையைத் தள்ளலும் அவைகளின்சொரூப மறிந்தாலல்லாமற்கூடாது ஆதலால், அச்சுபாசுபவாசனைகளின் சொரூபங்களை அருளிச்செய்கின்றார்.]

[மொழிபெயர்த்த வாசிரியர் ஸ்ரீ பகவானது பெருங்கருணையை வியந்து இவ்வத்தியாயம் ஆரம்பித்தற் கடியிடுகின்றார்.]

**மறந்திருந்த மனத்திரு ணீங்கிடத்**
**திறந்திறப்படச் செப்புதன் மேயினா**
**னறந்திறந்தெரிந் தாக்குதற் காகவே**
**பிறந்திறந்துழல் கின்றபே ராளனே.**

(இ-ள்.) மறந்து இருந்த = (பிரத்தியகபின்ன பரமான்மாவாகிய தன்னை) அறியாதிருந்த — மனத்து இருள் நீங்கிட = அகத்திருளொழியும்படி — திறம் திறப்பட = சுத்தவாசனாரூபமாகிய ஞானசாதன குணங்கள் அதிகாரிக்குத் திடப்பட — செப்புதல் மேயினான் = (இப்பதினாறுமத்தியாயங்) கூறத்தொடங்கினார்; — அறம் திறம் தெரிந்து = (நல்லோர்) வேதவிகிதமான தர்மவிதங்களையறிந்து — ஆக்குதற்கு ஆகவே = அநுஷ்டித்துய்தற்பொருட்டே — பிறந்து இறந்து = ஆவிர்ப்பவித்தும், திரோபவித்தும் — உழல்கின்ற பேராளன் = நடியாநின்ற கீர்த்தியையுடைய ஸ்ரீ பகவான். — எ-று.

'அறந்திறந்தெரிந் தாக்குதற்காகவே' என்றதனால், ஜீவர்களைப் போல ஈசுரன் கர்மபயனை யநுபவித்தற்பொருட்டுப் பிறந்திறந்திலனென்பது பெறப்படுகின்றது. (க)

[இதுவுமது.]

**தெய்வ வாசுர வொன்றித் திறத்தராய்**
**வையமாந்தரெல் லார்களும் வாழ்வரிங்**
**கைய கேளவர் தந்திற மென்றுதன்**
**செய்ய வாய்திறந் திவ்வணஞ் செப்புவான்.**

(இ-ள்.) தெய்வ ஆசுரர் என்று = தேவாசுரரென்று — இத்திறத்தராய் = இவ்விரு தன்மையராய் — வையம் மாந்தர் எல்லார்களும் =

இவ்வுலகின்கண்ணுள்ள மநுடர்களெல்லோரும்—வாழ்வர் = வாழா நிற்பர்;—ஐய=அருச்சுநா—அவர் தம் திறம்=அத்தேவாசுர சுபாவங் களை—இங்கு கேள் என்று=இவ்வத்தியாயத்திற்(கூறக்) கேட்பாயாக வென்று—தன்செய்ய வாய் திறந்து=தமது திருவாய்திறந்து—இவ் வணம் செப்புவான்=இந்தப்படி அருளிச்செய்வாராயினர்.—எ-று.(௨)

[தெய்வசம்பத்தை யருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

அஞ்சுத லின்மையு மறிவை யாக்கலு
நெஞ்சினை யடக்கலு நிலைகெ டாமையு
வெஞ்சின மின்மையு மெய்ம்மை கூறலுந்
தஞ்சென வேள்வியுந் தவமு மாக்கலும்.

(இ-ள்.) அஞ்சுதல் இன்மையும்=பயமில்லாமையும்,—அறிவை ஆக்கலும் = அந்தக்கரணத்தைச் சுத்தியாகும்படி செய்தலும்,—நெஞ் சினை அடக்கலும் = சித்தத்தை ஆன்மாவின்கண் ஏகாக்கிரமாகும்படி பண்ணும் யோகமும்,—நிலை கெடாமையும் =(அத்தியான்மசாஸ்தி ரத்தாலுளதாகும்) ஆன்மசொரூப நிச்சயமானது ஒன்றாலழியாமை யும்,—வெம் சினம் இன்மையும்=கொடிய குரோதமில்லாமையும்,— மெய்ம்மை கூறலும்=சத்தியமும்,—தஞ்சென=(மறுமைக்குத்)துணை யாமென—வேள்வியும் தவமும் ஆக்கலும்=யாகஞ்செய்தலும், தவஞ் செய்தலும்,—எ-று.

பயமில்லாமை=சாஸ்திரங்களால் உபதேசிக்கப்பட்ட பொருளில் சமுசயாகிதனுப் அதனையநுஷ்டிப்பதிற்றற்பரத்தன்மை. அந்தக்கரண சுத்தி=பரமேசுரசொரூபத்தை யறியும்படியான யோக்கியதை. சின மின்மை=ஒருவர் நிந்தித்தபோதும், அடித்தபோதும் குரோதம் எழா மை. மெய்ம்மைகூறல்=கண்டதைக் கேட்டதை அந்தப்படியே சொல் லுதல். தவசு=பதினேழாமத்தியாயத்தில் இனிக்கூறப்படும். யாகம்= சாஸ்திரவிகிதகர்மவிசேஷங்கள். தஞ்சமெனற்பாலது, 'தஞ்சென'அம் விகுதிகுன்றி விகாரமாய்நின்றது. (௩)

[பின்னும்,]

மறைபயி றலுந்தனை மதித்தி ராமையுங்
குறளைக டவிர்தலுங் கொல்கை மாற்றலும்
பிறர்பிழை பொறுத்தலும் பே ரொழுக்கமு
மறன்வலித் தானமோ டருளை யாக்கலும்.



(இ-ள்.) மறை பயிறலும்=வேதாத்தியயனமும்,—தனை மதித்து இராமையும்=தன்னைப் பூஜ்யனாகப்பாவித்திராமையும், — குறளைகள் தவிர்தலும்=கோட்சொல்லாமையும்,—கொல்கை மாற்றலும் = பிரா ணிகளை இம்சைசெய்யாமையும்,—பிறர் பிழை பொறுத்தலும்=அந்நி யப்பிராணிகள் செய்யும் அபராதங்களைச் சகித்தலும்,—பேர் ஒழுக்க மும்=பெருமையுடைய (தியாகம், ஆர்ஜவம், சாந்தி, அலோலுத்து வம், மார்த்தவம், ஹ்ரீ:, அசாபலம், தேஜஸ், அத்துரோகம், திருதி என்னும் (இவ்வொழுக்கங்களும்,)—அறன் வலித்தானமோடு அருளை ஆக்கலும்=தர்மமென்னும் வலியுடைய தானத்தோடு துக்கிப்பிராணி களின்மீது கருணைசெய்தலும்,—எ-று.

தியாகமுதல், திருதிபரியந்தமான தர்மங்களைத் தொகுத்து, 'பேரொழுக்கம்' என்றனர். தியாகம்=சந்நியாசம். ஆர்ஜவம் = சிர த்தையோடு கேட்பவனிடத்தில் நிச்சயித்தபொருளை மறையாமை. சாந்தி = அந்தக்கரணத்தின் உபசமம். அலோலுத்துவம்=விஷயங் கள் சமீபத்திலடையப்பட்டிருந்தும், அவற்றைப்புஜிக்குஞ் சாமர்த்திய மிருந்தும் இந்திரியங்களின் அவிக்கிரியத்தன்மை. மார்த்தவம் = குரூரசுபாவமில்லாமை. ஹ்ரீ: = செய்யத்தகாதவைகளில் இலச்சை. அசாபலம்=வாக்கு, பாதம், பாணிகளால் வியர்த்தமான கிரியைகளைச் செய்யாமை; தேஜசு=பெண்டிர், பாலர்முதலிய மூடஜநங்களால் அவ மானம் பண்ணப்படாமை; அல்லது புதிதுபுதிதாய் மேன்மேலும் விள க்கமுள்ள பிரக்ஞையுடையவனாயிருத்தல். அத்துரோகம் = யாதேனு மொரு பிராணியைக்கொல்ல விச்சித்து ஆயுதமெடாமை. திருதி= வியாகுலமடையினும் தேகேந்திரியங்களை ஸ்திரமாகப்பண்ணுவிக்கும் பிரயத்தனவிசேஷம். தானம்=அந்நம், சுவர்ணம், பசு, பூமி, மனை முதலியவற்றைத் தன் சக்தியளவில் அதிதி, பிராமணாதிகளுக்குக் கொடுத்தல். (௪)

[பின்னும்,]

இருவகைத் தூய்மையு மிந்தி யங்களை
யொருவழிப் படுத்தலு முளளிட் டன்னவை
செருவருஞ் சிலையினாய் தெய்வத் தன்மையோர்
மருவிய தொழிலென மதிக்க வேண்டுமே.

(இ-ள்.) இருவகைத் தூய்மையும்=வாகியாந்தரசௌசமும்,— இந்திரியங்களை ஒருவழிப் படுத்தலும்=சுரோத்திராதிபாகியேந்திரியங் களைத் (தத்தம் விஷயங்களினின்றுமீள்வித்து) ஏகாக்கிரப்படுத்துவ

தும்—உள்ளிட்ட அன்னவை=உள்ளடங்கிய அவைமுழுதும்—தெய்வத் தன்மையோர் = தெய்வத்தன்மையராய்ப் பிறந்தோர்—மருவிய தொழில் என= பொருந்திய தொழில்களாமென்று—செரு அரும் சிலையினாய் = யுத்தத்தின்பொருட்டு அரியகாண்டீபமென்னும் வில்லையுடைய அருச்சுனா—மதிக்கவேண்டும்=நிச்சயிக்கத்தக்கது.—எ-று.

இம்மூன்றுசெய்யுட்களும் ஒருதொடர். (௫)

[இம்மூன்று செய்யுட்களால் கொள்ளற்பாலனவான தெய்வசம்பத்தையருளிச்செய்து இப்போது ஸ்ரீ பகவான் தள்ளற்பாலனவான அசுரசம்பத்தை யருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

**தீமைசெய் யசுரரானோர் செய்கையைத் தெரிக்கிலொன்றை**
**யாம்வகை யெனமற்றாகா தனவென வறிதலில்லார்**
**தூய்மையுந் தூயவாய வொழுக்கமுந் தொடக்குவிட்டார்**
**வாய்மையொன் றானுமில்லார் மயக்கமே மருவாநின்றார்.**

(இ-ள்.) தீமை செய் அசுரரானோர் = தீமையானசெய்கைகளைச் செய்யாநிற்கும் அசுரசுபாவமுடையர்களாய்ச்சநித்த மநுடர்களின்—செய்கையைத் தெரிக்கில்=தொழில்களைச் சொல்லில்,=ஒன்றை ஆம் வகை என = (தர்மாதர்மங்களுள்ளே,) தர்மத்தைச்செயற்பாலதென்றும்,=மற்று ஆகாதன என=அதர்மத்தைச் செயற்பாலதன்றென்றும்—அறிதல் இல்லார்= அறியாதவர்;—(இக்காரணத்தினாலேயே) தூய்மையும் = வாகியாந்தர சௌசங்களையும்,— தூய ஆய ஒழுக்கமும்=(மநுமுதலியோரால் தர்மசாஸ்திரங்களிற்சொல்லிய) புனிதமாகிய ஆசாரங்களையும்—தொடக்கு விட்டார்=தொடங்குதல் விட்டவர்:—வாய்மை ஒன்றானும் இல்லார் = சத்தியவார்த்தையொருவாற்றானும் வசனியாதவர்:—மயக்கமே மருவா நின்றார்=அவிவேகமே பொருந்ாநின்றவர்.—எ-று.

தர்மாதர்மப்பிரவிர்த்திகளில் மோகமுடையரும், உள்ளிலும் வெளியிலும் அசுசியுடையரும், அநாசாரமுடையரும், அசத்தியவாதியரும், அவிவேகமுடையரும் ஆசுரசுபாவமுடைய மநுடரென்பதாம்.

[வேதவிகிதமான தர்மாதர்மங்களின் பிரவிர்த்தி, நிவிர்த்திகளை ஆசுரசுபாவமுடையமநுடர் ஏனறியார்கள்? தர்மாதர்மங்களையங்கீகரியாவிடில் ஜகத்திற் சுகதுக்காதிவியவஸ்தை எப்படியுளவாம்? சௌசம், ஆசாராதிகளில் ஈசுரனுடைய ஆக்ஞையை எப்படிக் கடக்கின்றனர்?



ஈசுரனை யங்கீகரியாமல் ஜகத்துற்பத்தி எதனாற் கூறுகின்றனர் என்னுஞ்சங்கைக்கு ஸ்ரீபகவான் உத்தரமருளிச்செய்கின்றனர்.]

[வேறு.]

எண்ணிய வுலகமு முலகிற் கீசனும்
புண்ணிய பாவமும் பொய்யென் றேகொள்வர்
பெண்ணினோ டாண்புணர் கின்ற பெற்றியா
னண்ணிய யாவையு மென்று நாட்டுவார்.

(இ-ள்.) (அசுரசுபாவமுடையமநுடர் வேதமுதலியபிரமாணங்களை யங்கீகரியாமையின்,) எண்ணிய உலகமும் = பிரமாணங்களால் உளதெனக்கருதிய ஜகத்தும்,—உலகிற்கு ஈசனும்=ஜகத்திற்கு நியந்தாவான ஈசுரனும்,—புண்ணிய பாவமும்=(ஜகத்தினதுவியவஸ்தைக்குக் காரணங்களான) தர்மாதர்மங்களும்—பொய் என்றே கொள்வர் = அசத்தியமென்றே அங்கீகரியாநிற்பர்.—[ஈசுரனையும், சுகதுக்காதி வியவஸ்தைக்குக் காரணங்களான தர்மாதர்மங்களையும் அங்கீகரியாத நாஸ்திகஜனங்கள் மற்றெதனை இச்சகத்திற்குக் காரணமாகக் கூறுவரோவென்னின்? அதற்குக் கூறுகின்றார்.]பெண்ணினோடுஆண் புணர்கின்ற பெற்றியால்=(விஷயசுகத்தினபிலாஷைரூபமான காமனால்பிரேரணை செய்யாநின்ற) ஸ்திரீயும், புருஷனும் அந்நியோந்நியம் புணர்கின்றதன்மையினால்—யாவையும் நண்ணிய என்று நாட்டுவார்= ஜகத்துமுழுவதும் உற்பந்நமாயின (ஆதலால், இச்சகத்திற்குக்காமமே காரணமாம்) என்று ஸ்தாபிப்பர்.—எ-று.

காமமே சர்வப்பிராணிகளுக்குங் காரணம்; காமத்தின்வேறாகத் தர்மாதர்மரூபமான அதிருஷ்டம், அல்லது ஈசுரன் முதலியவை காரணமல்லவென்னும் இவ்வாறான திருஷ்டி தேகான்மவாதியரான உலகாயதருடைய திருஷ்டியென்றறிக. (எ)

[முற்கூறிய உலகாயதருடைய திருஷ்டியும் சாஸ்திரீயதிருஷ்டிபோல இஷ்டாந்தானோவென்னும்அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீபகவான் அந்தத்திருஷ்டியின்கண் அநிஷ்டத்தன்மையை யருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

**விரும்பலராகி யொழுக்கங்கடந்தார் மெய்ம்மையுஞ்செம்மையும்விட்டா, ரிரும்பயனான வறிவுமாய்ந்துள்ளா ரிடம்படாமனத்தினோடிசைந்தார், பெரும்பழியான தொழில்களே புரிவார் பிழைப்புவாய்ப் பொன்றறியாதா, ரரும்பகையாயிவ் வுலகினையெல்லா மழிப்பதன் பொருட்டவதரித்தார்.**

(இ-ள்.) (முற்செய்யுளிற் கூறிய உலகாயதருடைய திருஷ்டியை யாசிரயித்து அசுரசுபாவமுடையபுருஷர்) விரும்பலராகி=விரும்பாதவர்களாய்—ஒழுக்கங்கள் துறந்தார்=சாஸ்திரங்களிற் சொல்லிய வருணாச்சிரமாசாரங்களை வெறுத்துவிட்டனர்.—மெய்ம்மையும் செம்மையும் விட்டார்=சத்தியத்தையும், சௌசத்தையும் ஒழித்தார்கள்.—இரும்பயன் ஆன அறிவு மாய்ந்துள்ளார்=(காமம், குரோதம், லோபம், மோகமுதலியரூபமான ராஜஸ, தாமஸ தோஷங்களால்) பெரும்பேருன விவேகபுத்தியானது நஷ்டமாயுளர்.—இடம் படா மனத்தினோடு இசைந்தார்=அற்பபுத்தியோடு கூடியுள்ளார்.—பெரும் பழி ஆன தொழில்களே புரிவார்=நிஷித்தகர்மங்களையே சர்வதாய்ச் செய்யாநிற்பர்.—பிழைப்பு வாய்ப்பு ஒன்று அறியாதார்=(தாம் செய்யாநிற்குந் தொழில்களால் வரும்) நஷ்ட, லாபங்களில் ஒன்றையு மறியாதவர்.—அரும்பகைஆய்=அரிய சத்துருக்களாய்—இவ்வுலகினைஎல்லாம் அழிப்பதன்பொருட்டு = சர்வப்பிராணிகளையும் நாசஞ்செய்யும்பொருட்டே—அவதரித்தார்=(வியாக்கிர, சர்ப்பாதிரூபங்களாக) உற்பவித்தனர்.—எ-று.

அத்தியந்தந் துச்சமான மாலை, சந்தனம், வனிதைமுதலிய விஷயபோகங்கட்கு அற்பமென்றுபெயர்; இவற்றில் பற்றுள்ளபுத்தி அற்பபுத்தி; அல்லது மலம், மாமிசம், உதிரம்,அஸ்தி,மச்சைமுதலிய நிந்திதபதார்த்தங்களின்சமூகரூபமான இத்தேகத்திற்கு அற்பமென்றுபெயர்; இப்படிப்பட்ட அற்பதேகத்தில் நானென்னும் புத்தி அற்பபுத்தி.

முற்கூறிய உலகாயதருடைய திருஷ்டியே அத்தியந்தம் அதோகதிக் கேதுவாதலால் தமக்குறுதி வேண்டினோர் சர்வப்பிரகாரங்களாலும் அதனைப் பரித்தியாகஞ் செய்யவேண்டு மென்பதாம். (அ)

[இந்தப்பிரகாரம் வியாக்கிரம், சர்ப்பமுதலிய தாமதயோநிகளில் வெகுகாலஞ் சுழன்றவர்களாகி அவ்வாசுரபுருஷர் எப்போது ஓர் கர்மவசத்தால் மீண்டு மநுடயோநியை யடைவரோ அப்போதும் அவர் தமக்கு நன்மைபயக்கத்தக்க வுபாயங்களிற்புகாமல் தீமைபயக்கத்தக்க வுபாயங்களிலேயே புகுவரென்று ஸ்ரீபகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

நிறைவிலாக் காமபோகந் தன்னையே நிறைக்கவேண்டி
மறைவிலா மானத்தோடு மதங்களை மருவிநின்றுங்
குறைவிலா மயக்கத்தோடு கோபத்தை யடைந்துநின்றும்
பொறையிலா விரதம்பூண்டு பொய்த்தவம் புரியாநிற்பார்.



(இ-ள்.) நிறைவு இலா=(சதகோடிவருஷங்களானாலும் விஷயபோகங்களாற்)பூரணமாகாத—போக காமந்தன்னையே=போகேச்சையைத்தானே—நிறைக்க வேண்டி = பூரணமாக்க விரும்பி—மறைவு இலா=மறைவற்ற—மானத்தோடு மதங்களை மருவி நின்றும்=மானம், மதம், (தம்பங்களைப்) பொருந்திநின்றும்,— குறைவு இலா மயக்கத்தோடு கோபத்தை அடைந்து நின்றும்=குறைவில்லாத அவிவேகத்தோடு துவேஷத்தை யடைந்துநின்றும் — பொறை இலா விரதம் பூண்டு= தரிக்கத்தகாதவசுசிவிரதத்தைத்தரித்து—பொய்த் தவம் புரியாநிற்பார்= அசத்தானதவங்களையே செய்யாநிற்பர்.—எ-று.

மானம்=வாஸ்தவமாகப் பூஜிக்கத்தக்கவனல்லாதிருந்தும் உலகர் முன்னே தன்னைப் பூஜ்யத்தன்மையனாகக்காட்டுவது. மதம்=அதிகத்தன்மையனல்லாத தன்னில் அதிகத்தன்மையினாரோபணம்; இம்மதம் பெரியோரையவமானித்தற்கேதுவாம்.தம்பம்=தர்மநிஷ்டனாயில்லாதிருந்தும் வெளியே தர்மநிஷ்டனாகத் தன்னைக்காட்டுவது. அசுசிவிரதம்=மயானமுதலியதேசம், உச்சிஷ்டத்தன்மைமுதலியவவஸ்தை, மது,மாம்சாதிபட்சணம் இவைமுதலிய அசுத்தங்களைக்கொண்டு நிறைவேற்றாநிற்கும் வாமதந்திரத்திற்சொல்லிய விரதம்; வேதவிருத்தமாதலால், 'பொய்த்தவம்' என்றார். (௯)

[முற்கூறியவாசுரபுருஷரையே மீட்டும் அசுரசம்பத்துரூபமான அநேகவிசேஷணங்களோடுகூட வருளிச்செய்கின்றார்.]

இறந்துபோ மளவுமெய்தாப் பொருளையே யெண்ணாநிற்பார்
மறந்துமோர் பொருள்வேறில்லை வருபய னன்றியென்பார்
சிறந்தபோ கங்கட்காகத் தீமையாற் பொருளைச்சேர்ப்பார்
பிறந்துபே ராசையாய பாசத்தாற் பிணிக்கப்பட்டார்.

(இ-ள்.) (முற்கூறியவசுரசுபாவமுடையபுருஷர்) இறந்துபோம் அளவும்=மரணகாலபரியந்தம் — எய்தாப் பொருளையே எண்ணாநிற்பார்=(அடைந்தனவும்,) அடையாதனவுமான வஸ்துக்களையே சிந்தியாநிற்பர்.—வரு பயன் அன்றி=அனுபவிக்கும்படி யுண்டாகின்றமாலை, சந்தனம்,வனிதைமுதலிய (திருஷ்டமான விஷய)போகங்களையல்லாமல்—மறந்தும்=மறந்துங்கூட—ஓர்பொருள் வேறு இல்லை என்பார்=தர்மமென்றாவது, மோட்சமென்றாவது ஒரு பொருளானது வேறேயில்லையென்று கூறுவர்;—பிறந்து=பூமியின்கண்ணேஜநித்து—பேராசை ஆய பாசத்தால்=பேராசையாகிய கயிற்றினால் — பிணிக்கப்பட்டார் = கட்டுண்ட ஆசுரபுருஷராயினோர்,—சிறந்த போகங்கட்கு ஆக

=மிகுந்த மாலை, சந்தனம், வனிதைமுதலிய விஷயபோகங்களின் பொருட்டே—தீமையால் பொருளைச் சேர்ப்பார் = அநியாயத்தினால் தனமுதலிய பதார்த்தாதங்களைக் கூட்டுவர்,—எ-று.

'எய்தாப்பொருள்' எனவே, எய்தியபொருளென்பது வருவிக்கப் பட்டது; இதனால், யோகக்ஷேமவுபாயசிந்தனம் அபரிமேயமாகவுடைய ரென்பது கருத்து. அடையாதவஸ்து அடையப்படுவதுயோகம்: அடைந் ததைப் பரிபாலனஞ்செய்வது க்ஷேமம். இவ்வளவெண்ணிக்கையுடை யனவென்று நிச்சயிக்கப்படாதவை அபரிமேயம். 'மறந்துமோர் பொ ருள்வேறில்லை வருபயனன்றி யென்பார்' எ-து, சைதந்நியரூப தர்ம விசிஷ்டதூலசரீரமே போக்தாவாகிய ஆன்மாவல்லாமல் அந்நியமாகப் போக்தா இல்லையென்னும் உலகாயதமதநிச்சயத்தாரென்க. இலக்ஷங் கபடத்தினாலும், பலாத்காரத்தினாலும் தனமுதலியவற்றைச் சம்பாதித்த லின், 'தீமையாற்பொருளைச்சேர்ப்பார்' என்றார். (௧௦)

[இப்படிப்பட்ட மநுடருடைய மனோரதத்தையும், நரகப்பிராப்தி யையும் மூன்று செய்யுட்களால் இனி அருளிச்செய்கின்றார்.]

இப்பொருளடைந்தோம்வேறு பொருளினியடைவோ
மென்று, மிப்பகை செகுத்தோம்வேறு பகையினிச் செகுப்
போமென்றுந், துய்ப்பவ ரெம்மிற்றுய்க்க வல்லவ ரில்லை
யென்று, மொப்பவ ரெம்மின்மிக்கா ருளர்கொலென் றுணரா
நிற்பார்.

(இ-ள்.) இப்பொருள் அடைந்தோம் = இந்தத்தனத்தை இவ் வுபாயத்தினால்(இப்போது) அடைந்தோம்,—வேறு பொருளினி அடை வோம் என்றும் = இத்தனத்தினும் வேறே (மனத்தைச் சந்தோஷிப் பிக்கத்தக்கதான) தனத்தைச் சீக்கிரமாக இனியடைவோம் என்றும்,— இப்பகை செகுத்தோம் = (இப்போது) இந்தச் சத்துருவைக் கொன் றோம்,=வேறு பகை இனிச் செகுப்போம் என்றும் = மற்றச்சத்துருக் களையும் இனிக்கொல்லுவோம் என்றும்,—துய்ப்பவர் = விஷயங்களை யநுபவிப்பவருள்ளே,—எம்மில் துய்க்க வல்லவர் இல்லை என்றும் = எம்மைப்போல் விஷயங்களை யநுபவிக்கத்தக்கசமர்த்தர் வேறொருவரு மில்லையென்றும்,—எம்மின் ஒப்பவர் மிக்கார் = எமக்குச் சமானமான வரும், அதிகமானவரும்—உளர்கொல் என்று = (இவ்வுலகின்கண்ணே யாவரேனும்) உளரோ? (இலர்) என்றும்—உணராநிற்பார் = (ஆசுர புருஷர் இவ்வாறு) கருதாநிற்பர்.—எ-ம். (௧௧)



[முற்கூறினதற்குக் காரணங் கூறுகின்றார்.]

இனம்வலி யின்பம்பெற்றோ மெம்மின்மிக் கார்களில்லைத்
தனமிக வுடையேமென்று தம்மையே வியவாநிற்பார்
மனமகிழ்யாகஞ்செய்வோ மழையெனக்கொடுப்போமென்று
தினமவை தோறுஞ்சிந்திப் பதுவலாற் செய்வதில்லார்.

(இ-ள்.) இனம் வலி இன்பம் பெற்றோம் = ஜனக்கூட்டமும், வல்லமையும், சுகமும் அடைந்திருக்கின்றோம்,—தனம் மிக உடை யேம் = தனத்தை மிகவுமுடையராயிருக்கின்றோம்,—எம்மின் மிக்கார் கள் இல்லை என்று = எம்மினுமதிகரொருவருமில்லை, (யாமே ஈசுரன்) என்று—தம்மையே வியவா நிற்பார் = தங்களையே தாம் ஸ்துதியாநிற் பர்.—மனம் மகிழ் யாகம் செய்வோம் = எமது மனமானது சந்தோ ஷிக்கும்படியான யாகத்தைச்செய்வோம் —மழை எனக் கொடுப்போம் என்று = மேகம்போலத் தானங்களை வழங்குவோம் என்று — தின மவை தோறும் = (இந்தப்படி) நாடோறும்—(அவ்வாசுரபுருஷர்) சிந் திப்பது அலால் செய்வது இல்லார் = மனோராச்சியஞ்செய்வதேயல்லா மல் (வேதத்திற் சொல்லியபடி) செய்யார்கள் —எ-று. (௧௨)

[இதுவுமது.]

[வேறு.]

தொடக்கறவில்லா நினைவெனப்பட்ட சூழலைப்பற்றியே
சுழல்வா, ரடக்கரிதாய மயக்கமென்கின்ற வலையுளே யகப்
பட்டுநின்றா, ருடற்குடில் வாழ்வாம்புன்னுனிப்பனிநீ ருலர்ந்
திடி னுயிர்நடுக்கெய்திக், கடப்பரிதாய நரகமென்கின்ற கடல்
களில் வீழவேகடவார்.

(இ-ள்.) தொடக்கு அறல் இல்லா = பந்தமறுதலில் காரணமாக இல்லாத—நினைவு எனப்பட்ட = அநேகவித துஷ்ட சங்கற்பங்களெ ன்று முன்சொல்லப்பட்ட—சூழலைப் பற்றியே சுழல்வார் = சுழியைப் பொருந்தியே சுழலாநிற்பவரும்,—அடக்க அரிது ஆய—அடக்குதற் கரிய—மயக்கம் என்கின்ற = மோகமென்று சொல்லாநின்ற—வலை உளே அகப்பட்டு நின்றார் = ஜாலத்தினுள்ளே அகப்பட்டுநிற்பவரும் (ஆகியவாசுரபுருஷர்)—உடல் குடில் வாழ்வு ஆம் = சரீரமாகிய சிற் றில்லினது ஆயுளாகிய—புல் நுனிப் பனி நீர் உலர்ந்திடின் = புன் னுனியின் பனிநீரானது கூற்றாகிய வெய்யிலால்வற்றிடில்,—உயிர் நடு க்கு எய்தி = உயிர் நடுக்குற்றிறந்து—கடப்ப அரிது ஆய = கடத்தற்

கரியவாகிய — நரகம் என்கின்ற கடல்களில்=அசுசிநரகங்களென்று சொல்லுகின்ற கடல்களிலே—வீழவே கடவர்=விழக்கடவர்.—எ-று.

மோகம்=இதாகித அவிவேகம். 'பனிநீருலர்ந்திடில்' என்றதால், கூற்றுன வெய்யிலாலென்பது வருவிக்கப்பட்டது. உலகில் பிரசித்தமான கயிற்றினாலமைத்த வலையானது மீன்முதலிய ஜந்துக்களை பரவசமாக்குவதுபோல மோகமானதும் ஆசுரபுருஷரைப் பரவசமாக்குதலின் அதனை, 'வலை' என உருவகஞ்செய்தனர். அசுசிநரகங்கள் எ-து மலம், மூத்திரம், சிலேஷ்மம், உதிரமுதலிய மலினபதார்த்தங்களினாற் பூரணமாயுள்ள வைதரணி முதலியவற்றை.

மோகமானது ஆசுரபுருஷரைப் பரவசமாக்குங் காரணத்தினாலேயே அநிஷ்டசாதனமானாலும் அவ்விஷயபோகங்களிலேயே அத்தியந்தம் ஆசக்தராய் இவ்வாசக்தியினால் கணந்தோறும் பாவங்களைச் சம்பாதித்து அசுசிநரகங்களில் அவ்வாசுரபுருஷர் வீழ்கின்றனரென்பதாம். (௧௬)

[ஆசுரபுருஷர்களுள்ளும் சிலர்க்கு யாகாதிகர்மங்களிற் பிரவிர்த்தி காணப்படுதலின், அவர்க்கு நரகத்தின்கண்ணே பதனஞ்சொல்லுகை கூடாதென்னுஞ்சங்கைக்கு ஸ்ரீபகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

**வியந்துதங் களையேமேலாப் பார்த்துமெய்ம் மாந்தர்தம்மை**
**நயந்துகொண் டாடலில்லார் நல்லவை செய்தாரென்று**
**பயன்றொடர்ந் துரைத்தற்காகப் பாடிய பழையநூல்க**
**ளியம்பிய படிசெய்யாதே யாகங்க ளியற்றுநிற்பார்.**

(இ-ள்.) (அருச்சுனா அவ்வாசுரபுருஷர்) தங்களையே=(மற்றோர் சாதுக்களாலல்லாமல்) தங்களைத் தாமே—மேலாப் பார்த்து=சர்வகுணங்களோடுங் கூடினவர்களாக மதித்து—வியந்து=அதிசயித்து—மெய் மாந்தர் தம்மை=மெய்ம்மையுடைய சாதுக்களை—நயந்துகொண்டாடல் இல்லார்=சிரேஷ்டராக மதித்துப் பாராட்டுதல் செய்யார்.—பயன் தொடர்ந்து நல்லவை செய்தார் என்று=பயன்களையிச்சித்து நல்ல எக்ஞமுதலியவற்றைச் செய்த தீக்ஷிதர், சோமயாஜி என்று—உரைத்தற்கு ஆக=பிறர் ஸ்துதித்தற்பொருட்டே—பாடியபழையநூல்கள்=ஈசுரனாலருளிய பழையவேதங்கள்—இயம்பியபடி செய்யாதே=விதித்தபடி (திரவியம், தேவதை, மந்திரம், தக்ஷிணைமுதலிய அங்கங்களோடுகூடச்) செய்யாமலே—யாகங்கள் இயற்றுநிற்பார்=யாகங்களைச் செய்யாநிற்பர்.—எ-று.



இங்ஙனம் அவிதிபூர்வமாகச் செய்யாநிற்கும் யாகத்திற்கு நாமயாகமென்றுபெயர். மெய்ம்மாந்தர் தம்மை நயந்து கொண்டாடாமைக்குக் காரணம் தம்பம், மானம், மதங்களோடு கூடியிருத்தலே என்க.

ஆசுரபுருஷர் இங்ஙனம் சிரத்தையில்லாமற் செய்யாநிற்கும் இக்காரணத்தால் அவ்வெக்ஞத்தின் பயனை அடையாரென்பதாம். (௧௭)

[முற்கூறிய வாசுரபுருஷர்க்குப் பகிரங்கசாதனரூபமான யாகதானமுதலிய கர்மங்களே சித்தியாதபோது விசாரம், வைராக்கியம், பகவத்பக்திமுதலிய அந்தரங்கசாதனங்கள் எப்படிச் சித்திக்கும்: ஓர்போதும் இவைசித்தியாவென்று ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

**மன்னிய களிப்பொடு வலியுங் காமமுந்**
**துன்னியா னெனும்பெரு மயக்கஞ் சேர்ந்துளா**
**ரென்னியல் பிணைத்தமி லியாவர் மாட்டினு**
**மன்னிய மெனக்கொடு பொறாமை யாக்குவார்.**

(இ-ள்.) மன்னிய=நிலைபெறுதலையுடைய—களிப்பொடு வலியும் காமமும் துன்னி=களிப்பும், பலமும், காமமுநிறைந்து—யான் எனும் பெரு மயக்கம் சேர்ந்துளார்=நானென்னுங்காஹங்காரமாகிய மயக்கம் பொருந்தியுள்ள ஆசுரபுருஷர்—தமில் யாவர்மாட்டினும் என் இயல்பினை=தம்முடையதேகங்களிலும், புத்திரபாரியாதியரான சர்வருடைய தேகங்களிலும் (புத்தியாதிகட்குச் சாட்சியாயும், நிரதிசயப்பிரீதிக்கு விஷயமாயுமுள்ளபரமேசுரனை) எனது சுபாவத்தை—அந்நியம் எனக்கொடு=அந்நியமாகக் கருதிக்கொண்டு—பொறாமை ஆக்குவார்=(எனது விஷயமான) துவேஷத்தையே செய்யாநிற்பர்.—எ-று.

'களிப்பு'=பெரியோரை அநாதரஞ்செய்தற்குக் காரணமான சித்தத்தின் ரேஷவிசேஷம். 'வலி'=அந்நியப்பிராணிகளை அபஜயம் பண்ணும்பொருட்டுச் சரீரத்தின்கண்ணுள்ள சாமார்த்திய விசேஷம். 'காமம்' = இஷ்டவஸ்து விஷயமான அபிலாஷை. 'யானெனும் பெருமயக்கம்' எ-து, சர்வப்பிராணிகளிடத்துஞ் சாதாரணமாயுள்ள அகங்காரத்தையன்று; பின்னையோ, தன்னிடத்திலில்லாத குணங்களைத் தன்னிடத்தாரோபித்து அவ்வாரோபிதகுணங்களால் தன்னைப் பெருந்தன்மையனென அபிமானித்தலை. பரமேசுரனுடைய ஆக்ஞாரூபமாகிய சுருதி, ஸ்மிருதிரூபமான சாஸ்திரத்திற்சொல்லிய அர்த்தங்களையநுஷ்டியாமல் சாஸ்திரரூபமான அவ்வீசுராக்ஞையைக் கடந்திரு

ப்பதே பரமேசுர விஷயமானதுவேஷம். "என்னியல் பிணைத்தமிலியாவர் மாட்டிலு மன்னிய மெனக்கொடு பொருமையாக்குவார்" என்பதற்கு ஆசுரபுருஷர் தம்முடைய தேகங்களிலும்,பசுமுதலியவற்றின் தேகங்களிலும் சைதந்நியாம்சமாயுள்ள எனது சுபாவத்தை அந்நியமாகக் கொண்டு பசுவாதிகளையும் அவிதிபூர்வகமாக இம்சை செய்யாநிற்பரென வேறுமொருபொருள் கூறுவாருமுளர். 'அந்நிய மெனக்கொடு பொருமை யாக்குவார்' என்பதற்கு, ஒன்பதாமத்தியாயத்தில், "ஊர்வனநிற்பவாகவுலகையுண்டாக்குமென்னை, யேர்பெறவறியாதார்தாமகனென்றேயிகழாநிற்பர்" என்னும் கூ-ம் செய்யுளின்படி பொருள்கொள்ளினுமமையும். ஆசுரபுருஷர் குருமுதலியோரிடத்துள்ள கருணை முதலிய குணங்களில் வஞ்சனைமுதலிய தோஷங்களையே ஆரோபணஞ்செய்வதால் குருவசனத்திற் சிரத்தையே அவர்க்கு உளதாவதில்லை; ஆதலால், குருவும் அவ்வாசுரபுருஷர்க்குச் சிட்சைசெய்வதில்லை. இவ்வாறு பகிரங்கசாதன, அந்தரங்கசாதன சூனியர்களானவர்கள் கேவலம் நரகின்கண்ணேயே வீழாநிற்பரென்பதாம். (கரு)

[பரமேசுரரான உமது கிருபையினால் அவ்வாசுரபுருஷர்க்கும் ஓர்போதுய்வுண்டாகாதோவென்னும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

மற்றவர் தம்மையிந்த மாநுட ரானோரியார்க்குங்
கொற்றவ கீழானோனைக் கொடுமையா லரவொப்பானை
யற்றமி லிடும்பைசேரு மாசுர யோனியாய
புற்றவை தோறுமியானே புகப்புக விழுத்துகின்றேன்.

(இ-ள்.) கொற்றவ = அரசனான அருச்சுனா—இந்த மாநுடரானோர் யார்க்கும்=இம்மநுடரானோர் யாவர்க்கும்—கீழானோனை=அதமரும்,—கொடுமையால் அரவு ஒப்பானை=(பிராணிகளை இம்சியாநிற்குங்) குரூரத்தன்மையினால் சர்ப்பம்போன்றவரும் (ஆகிய)—மற்றவர் தம்மை = ஆசுரபுருஷனை—அற்றம் இல் இடும்பை சேரும் = சோர்வில்லாத துன்பங்கள் பொருந்தாநிற்கும்—ஆசுரயோனி ஆய புற்றவை தோறும்=வியாக்கிர, சர்ப்பாதி அசுரயோநிகளாகிய புற்றுகடோறும்—யானே=(பரமேசுரனான)யானே—புகப்புக விழுத்துகின்றேன்= அடிக்கடி புகுதும்படி வீழ்த்துகின்றேன்.—எ - று.

ஆசுரபுருஷர் பரமேசுரனான எனதாஜ்ஞையைப் பரிபாலனஞ் செய்யாமையின், அவர்களிடத்து எனக்குக் கிருபையுளதாகாது; அவ்



வப் பிராணிகளின் கர்மத்துக்கிடாக நன்மை, தீமைகளை யானடையப் பண்ணுதலின், விஷமத்தன்மையும், நிர்த்தயைத்தன்மையும் பரமேசுரனான எனக்கில்லை என்பதாம். (௧௬)

[ஆசுரபுருஷர்க்கும் கிரமமாக வெகு ஜநநங்களினந்தத்திலாவது உய்வுண்டாகாதோவென்னும் அருச்சுனன் சங்கைக்கு அவர்க்கோர் போதும் உய்வுண்டாகாதென்று ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

இவ்வகை யாசுர யோனி யடைந்தோர்
மெய்வகை யாமறி வின்மையி னாலே
நைவர்க ளுநர கக்கதி தோறு
முய்வகை யின்றி யுழன்று திரிந்தே.

(இ - ள்.) இவ்வகை ஆசுரயோனி அடைந்தோர் = இந்தப்படி வியாக்கிர, சர்ப்பாதிரூபங்களான ஆசுரயோனியை யடைந்தபுருஷர்—மெய் வகை ஆம் அறிவு இன்மையினாலே = (அச்சநநங்கடோறும்) மெய்த்தன்மையான விவேகஞானத்தை யடையும்படிக் கில்லாமையினாலே — உய் வகை இன்றி = உய்தற்கேதுவான வேதமார்க்கத்தை யடையாமல்—தீநரகக்கதிதோறும்=(முன்னடைந்த கதியினுந் தீமையான கிருமி, கீடாதி அதோகதிகடோறும்—உழன்று திரிந்து நைவர்கள்=சுழன்றுதிரிந்து வருந்தாநிற்பர்.—எ-று. ஏ, ஏ-அசைநிலைகள். ()

[பூர்வம் அநேகப்பிரகாரமாகவருளிச்செய்த அசுரசம்பத்தனைத்தும் தனதாயுள்பரியந்தம் பிரயத்தனஞ்செய்யினும் நிவிர்த்தி செய்யக் கூடுங்கொலெனும் அருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அவ்வசுரசம்பத்தைச் சஞ்சேபமாகவருளிச்செய்கின்றார்.]

ஒருவ னசிக்க வியற்றுவ தென்று
மருநர கத்தி லடைப்பது தானும்
வரும்வழி மூன்றுள மற்றவை தம்மை
யொருமுறை கூறி யுணர்த்திடு வன்கேள்.

(இ - ள்.) ஒருவன் நசிக்க இயற்றுவது = ஓர்புருஷனை அத்தியந்தம் அதமயோநிகளையடையும்படிசெய்யாநிற்பதும்,—என்றும்= சதாகாலமும்—அரு நரகத்தில் அடைப்பதுதானும்—கடத்தற்கரிய நரகத்தின்கண்ணடைவிப்பதும் (ஆக)—வரும் வழி மூன்று உள= வாராநின்றவழிகள்மூன்றுண்டு;—அவைதம்மை = அவைமூன்றனையும் —ஒரு முறை கூறி உணர்த்திடுவன் கேள்=ஒருகிரமமாகப்போதித்தறிவிப்பேன் கேள்.—எ-று. தான், தம், மற்று-அசைநிலைகள். (௧௮)

[இதுவுமது.]

காதலி னாகிய காம முலோபங்
கோதுற வேசுடு தீநிகர் கோப
மாதலி னாலிவை மூன்று மகன்றார்
வேதனை தீர்பெரு வீடு விளைந்தார்.

(இ-ள்.) காதலின் ஆகிய=விஷயப்பிரீதியினாலுண்டாகிய—காமம்=(விஷயபரவசரூபமான) காமமும்,—உலோபம்=லோபமும்—கோது உறவே சுடு தீ நிகர் கோபம் = குற்றம்பொருந்தச் சுடுகின்ற அக்கினியையொப்பான குரோதமுமே (ஒருவனுக்கு நரகத்திற்கும், நாசத்திற்குங்காரணமாம்;)—ஆதலினால்=அக்காரணத்தினால்—இவை மூன்றும் அகன்றார்=இக்காமாதி மூன்றனையும் பரித்தியாகஞ்செய்தோர்—வேதனை தீர் பெரு வீடு விளைந்தார் = சகலவனர்த்தங்களுமொழிந்த நிரதிசயாநந்தரூபமோட்சம் தமக்குளதாகப் பெற்றவராவர். (கக)—எ-று.

[காமாதிகளைப்பரித்தியாகஞ்செய்வதும் சுதர்மத்தின் ஆசரணத்தாலல்லாமற்கூடாதென் றருளிச்செய்கின்றார்.]

கூறின நூல்வழி சேர்குறி பேணா
தேறின வாறுசெய் வாரிக லோகம்
வேறிய லார்பர லோகம் விளைக்கும்
பேறின வானவை பேறு பெறாரால்.

(இ-ள்.) கூறின நூல் வழி=(இவ்வதிகாரிக்கு இது காரியம், இஃதகாரியம் என) விதித்த சாஸ்திரமார்க்கத்தில் — சேர் குறி பேணாது=பொருந்தாநிற்கும் எண்ணத்தை விரும்பாதொழிந்து — ஏறின ஆறு செய்வார்=மனத்துக்கேறினவழியே செய்யாநிற்பவர்—இக லோகம்=இகலோகமும்,—வேறு இயல் ஆர் பரலோகம்=இதற்கு வேறான இயல்பைப்பொருந்திய பரலோகமும் — விளைக்கும்=உண்டாகப்பண்ணும்—பேறு இன ஆனவை=சுகங்களென்னும் இப்படிப்பட்ட பயன்களையும்,—பேறு பெறார்=அந்தக்கரண சுத்தியையும், இதனாலடையப்படுமுக்தியையும் அடையார்கள்.—எ-று. (உ௦)

இனவென்பது இடைக்குறை.

[சாஸ்திரத்திற்பராமுகராய்த் தமதிச்சையின்வழியே செல்லும் புருஷர் சர்வபுருஷார்த்தங்களினின்றும் பிரஷ்டராவர்; ஆதலால், அதிகாரியானோன் சாஸ்திரவிதிப்படியே கர்மங்களைச் செய்யவேண்டுமென்னும்பொருளை அருளிச்செய்பவராய் ஸ்ரீ பகவான் இவ்வத்தியாயத்தை உபசம்மரிக்கின்றார்.]



[வேறு.]

ஆதலி லனைத்துமறி கைக்குவழி யான
வேதமுத னூலவை விதித்தநெறி யாலே
யேதநினை யாதுன்வினை யேயிசைக வென்றான்
பூதமுத லானவை பொறுத்தருளு கின்றான்.

(இ-ள்.) ஆதலில்=முற்கூறியகாரணத்தால்,—அனைத்தும் அறிகைக்கு=(காரியாகாரியங்கள்) அனைத்தையுமறிதற்கு — வழியான=பிரமாணமாகிய—வேதம் முதல் நூலவை=சுருதி, ஸ்மிருதி, புராண இதிகாசாதிரூபங்களான சாஸ்திரங்கள்—விதித்த நெறியாலே=சொல்லிய வழியினாலேயே—ஏதம் நினையாது=தோஷங்கருதாமல் (சித்தசுத்திபரியந்தம்)—உன் வினையே இசைக என்றான்=உனது யுத்தமுதலியகர்மங்களையே (அருச்சுனா நீ) பொருந்துவாயாகவென்றருளினார்;— பூதம் முதலானவை பொறுத்தருளுகின்றான்=பூதமுதலிய ஜகத்தனைத்தையும் தம்மிடத்தே தரித்தருளாநிற்கும் ஸ்ரீ பகவான்.—எ-று. (உக)

## கசு-வது தேவாசுரசம்பத்துவிபாகயோகவத்தியாயம்

முற்றிற்று.

ஆக அத்தியாயம் கசு-க்குத் திருவிருத்தம்-சடு௦.

## கஎ-வது * குணவிகாரவத்தியாயம்.

[பூர்வாத்தியாயத்தினீற்றில், சாஸ்திரவிதியைப் பரித்தியாகஞ்செய்து தனது இச்சைமாத்திரத்தால் சிறிதுகர்மங்களை யநுஷ்டியாநிற்பவர்க்குத் தத்துவஞான முளதாகாதென்றதால் சாஸ்திரவிதியை ஆலசியமுதலிய தோஷவசத்தால் பரித்தியாகஞ்செய்து தமது பிதா, பிதாமகன்முதலிய விருத்தருடைய வியவகாரமாத்திரத்தால் சிரத்தாபூர்வகமாக விகிதகர்மமாத்திரம் அநுஷ்டிக்கும் புருஷர்க்கு அதிகாரமுளதோ? இலதோ என்னும் நிர்ணயமறியவேண்டி அருச்சுனன் ஸ்ரீ பகவானை நோக்கி வினவுகின்றான்.]

* வடமொழியில், சிரத்தாத்திரயவிபாகயோகமென்றுபெயர்.

[மொழிபெயர்த்தோர் இனி அத்தியாயம் ஆரம்பித்தற்கடியிடுகின்றார்.]

உண்டு மீள வொளித்துல கியாவையுங்
கண்டு காப்பவன் கட்டுரைத் திட்டதே
கொண்டு பார்த்தனக் கொண்டல்வண் ணன்றனைத்
தொண்டு கூறிப் பணிந்திது சொல்லுவான்.

(இ - ள்.) உலகு யாவையும் = உலகனைத்தையும்—உண்டு ஒளி த்து = திருவமுதுசெய்து மறைத்து—மீள = மீட்டும்—கண்டு காப்ப வன் = சிருஷ்டித்து, இரட்சியாநிற்கும் ஸ்ரீ பகவான்—கட்டுரைத்திட் டதேகொண்டு = (பூர்வாத்தியாயத்தினீற்றில், "கூறின நூல்வழி" என்னும் உ௰ம் செய்யுளில்) உறுதிப்பட அருளிச்செய்ததையே சங் கையாகக்கொண்டு — பார்த்தன் = அருச்சுனனானவன் — அக்கொண் டல் வண்ணன்தனை = அந்தமேகவண்ணனான கண்ணபிரானை — தொண்டுகூறிப் பணிந்து = உமதடிமையென்றுசொல்லி நமஸ்கரித்து —இது சொல்லுவான் = இதனை விண்ணப்பஞ்செய்வானாயினன்.— எ-று. (க)

[அருச்சுனன் வினா.]

வேத மேமுத னூல்விதி யின்றியே
காத லாலுல கோர்செயுங் காரிய
மேத மாங்குண மூன்றினு மேதென
வோத மாக்கடல் வண்ணனு மோதுவான்.

(இ - ள்.) வேதமே முதல் நூல் விதி இன்றியே = வேதமுதலிய சாஸ்திரவிதியைப் பரித்தியாகஞ்செய்து—காதலால் = சிரத்தையோடு (கூடினவர்களாய்)—உலகோர் செயும் காரியம் = உலகிலுள்ள சிலபுரு ஷர்கள் செய்யாநிற்கும் தேவபூஜைமுதலிய கர்மங்கள்—ஏதம் ஆம் குணம் மூன்றினும் = தோஷத்தையுடையனவான சத்துவமுதலிய மூன்று குணங்களிலும் = ஏது என ஓத = சாத்துவிகமா? ராஜஸமா? தாமஸமா என்றருச்சுனன் வினவ—மாக்கடல் வண்ணனும் ஓதுவான் =பெரியகடல்போன்ற திருவுருவுடைய ஸ்ரீ பகவான் அதற்கு உத்தர மருளிச்செய்கின்றார்.—எ-று.

அருச்சுனன் வினாவின்கருத்து; சாஸ்திரவிதியை எந்தப்புருஷர் ஆலசியாதிகளால் பரித்தியாகஞ்செய்து விருத்தபுருஷருடைய வியவ காரமாத்திரத்தால் சிரத்தையோடுகூடித் தேவபூஜை, எக்ஞமுதலிய வற்றைச் செய்யாநின்றனரோ! அந்தப்புருஷர் பூர்வாத்தியாயத்திற் சொல்லிய தேவாசுரரென்னும் இருவரினும் விலட்சணராதலால் சாஸ்



திரங்களிற்சொல்லிய சாதனங்களில் அவர்க்கு அதிகாரமுளதா? அல் லது, இலதா என்பது. (உ)

[அருச்சுனன் வினாவுக்கு ஸ்ரீ பகவான் விடையருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

யாவர்க ளாசைப்பாடு மியம்பிடி லியம்பப்பட்ட
மூவகைக் குணமுமாகி யல்லது முடிந்துநில்லா
மேவரு மவற்றினாய வேறுபா டவற்றையெல்லாங்
காவல தெரியக்கூறக் கேளெனக் கழறலுற்றான்.

(இ-ள்.) யாவர்கள் ஆசைப்பாடும் இயம்பிடில் = (தேகாபிமான முடைய) சகலபுருஷரின் (பூர்வசம்ஸ்காரவசத்தாலுண்டாகாநின்ற) சிரத்தையின் வேறுபாடு முழுவதுஞ் சொல்லிடின்,—இயம்பப்பட்ட = சாத்துவிகி, ராஜஸி, தாமஸி என்று சொல்லப்பட்ட (இப்பேதத்தால்) —மூவகைக்குணமும் ஆகி அல்லது முடிந்துநில்லா = சத்துவாதிமூவித குணங்களுமாய் நிற்குமல்லாது வேறொன்றாகமுற்றி நிற்காவாம்;— மேவ அரும் அவற்றின் ஆய = பொருந்துதற்கரிய அக்குணவேறுபாடு களாலுளவாகிய — வேறுபாடு அவற்றை எல்லாம் = சிரத்தையின் வேறுபாடுகண்முழுவதும்—காவல = அரசனான அருச்சுனா—தெரியக் கூறக் கேள் என = (உனக்குத்)தோன்றும்படிக்கு (யாம்) அருளிச்செ ய்யக் கேளென்று—கழறல் உற்றான் = அருளிச்செய்யத் தொடங்கி னார் ஸ்ரீ பகவான்.—எ-று. (ங)

[சாத்துவிகாதி பேதங்களையே காரியபேதத்தால் விஸ்தாரமாக அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

சாத்துவிகர் தேவரையே சரண்புகுவர் தாமதர்கள்
காத்தல்புரி வனபேயும் பூதமுமாக் கடைப்பிடிப்ப
ரேத்தரிய குணமிவற்றி லிராசதமாங் குணமுடையோ
ராத்தரென வியக்கரையு மரக்கரையு மடைகுவரால்.

(இ-ள்.) சாத்துவிகர் = சாத்துவிகபுருஷர்—தேவரையே சரண் புகுவர் = வசு, ருத்திராதியரான (சாத்துவிக) தேவர்களையே சரண டைவர்.—தாமதர்கள் = தாமஸபுருஷர் — காத்தல் புரிவன = தம்மை இரட்சிக்கின்றவைகள்—பேயும் பூதமுமா = (தமோகுணமுடைய) பிரே தங்களும், பூதங்களுமாக—கடைப்பிடிப்பர் = உறுதியாகப்பற்றிப் பூஜிப் பர்—ஏத்த அரிய குணம் இவற்றில் = ஸ்துதித்தற்கரிய சத்துவாதி

குணங்களில் — இராசதம் ஆம் குணம் உடையோர் = ராஜஸகுணமுடையபுருஷர்—ஆத்தர் என = தம்மை இரட்சிக்கத்தக்க கடவுளரென்று—இயக்கரையும் அரக்கரையும் அடைகுவர் = ரஜோகுணமுடைய குபேரன்முதலிய இயக்கரையும், நிருதிமுதலிய இராக்சதரையும் பூஜியாநிற்பர்.—எ-று. ஆல்-அசைநிலை. (ச)

[இந்தப்பிரகாரம் சுருதி, ஸ்மிருதிரூபமான சாஸ்திரங்களைப் பரித்தியாகஞ்செய்தபுருஷரின் சாத்துவிகாதிரூபநிஷ்டையைத் தேவவழிபாடாகியகாரியத்தால் நிர்ணயஞ்செய்து சிலராஜஸ, தாமஸ புருஷரும் பூர்வஞ்செய்த புண்ணியகர்மபரிபாகத்தால் சாத்துவிகமுடையராய்ச் சாஸ்திரத்திற்சொன்ன சாதனங்களில் அதிகாரித்தன்மையையடையாநிற்பர். எந்தப்புருஷர் தமது துராக்கிரகத்தாலும், பூர்வஞ்செய்த பாவகர்மத்தின் பரிபாகத்தாலடையாநின்ற துற்சனசங்கமுதலிய தோஷங்களாலும் இராஜஸ, தாமஸங்களைப் பரித்தியாகஞ் செய்யவில்லையோ அந்தப்புருஷர் சாஸ்திரத்திற்சொல்லிய சன்மார்க்கத்தினின்றுந் தவறினவராய்ச் சாஸ்திர நிஷித்தமான அசன்மார்க்கத்தை யநுசரித்து இகலோகத்திலும், பரலோகத்திலும் கேவலம் துக்கத்திற்கே உரியராவரென்னும் பொருளை இப்போது ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

அடங்கிட லகங்கர மாதி யின்றியே
யிடம்படு நூல்களி னியல்ப தின்றியே
யுடம்பையு முயிரையு மாய்க்கு மாதவந்
தொடங்கின ரசுரயோ னியினிற் றோன்றினர்.

(இ-ள்.) அகங்கரம் ஆதி = அகங்காரம், தம்பம், காமம், இராகம், பலம் (என்னும் இவை) — அடங்கிடல் இன்றியே = அடங்காதவர்களாய்—இடம்படும் நூல்களின் இயல்பது இன்றியே = விசாலமாகப் பொருந்திய சாஸ்திரங்களின் விதியை யநுசரியாமலே—உடம்பையும் = (பூதசமூகமான) தேகத்தையும்,—உயிரையும் = சரீரத்தினுள்ளே போக்திரூபமாயுள்ள பரமேசுரனென என்னையும் — மாய்க்கும் = (வீணன உபவாசாதிகளால்) மெலிவிக்கின்ற—மாதவம் தொடங்கினர் = கோரமான தவத்தினை முயலாநிற்பவர் — அசுரயோனியில் தோன்றினர் = அசுரரே.—எ-று.

அசுரஜாதியரல்லரான மநுடரிடத்துச் சாட்சாத் அசுரத்தன்மை இல்லையாயினும் ஆசுரநிச்சயமுடைமையினாலும், துஷ்டகர்மங்களைச்



செய்வதனாலும், 'அசுரயோ னியினிற் றோன்றினர்' என்றார். ஆசுரநிச்சயம் எ-து, வேதார்த்தங்கட்கு விரோதமான நிச்சயம். காமம் = விஷயங்களில் அபிலாஷை. இராகம் = அதிக ஆசக்தி. பலம்—விஷயங்களைச் சம்பாதிப்போமென்னும் ஆக்கிரகம். கோரதவம் = ஜீவர்க்குப் பயங்கரரூபமான தவம். (ரு)

[யாவர் சாத்துவிகரோ அவர் தேவர், யாவர் இராஜஸ, தாமஸரோ அவர் விபரீதபுத்தியுடையராகலின், அசுரர் என்னும் பொருளானது பூர்வம் நிர்ணயஞ் செய்யப்பட்டது. இப்போது ஸ்ரீ பகவான் சாத்துவிகங்களைக் கிரகணஞ் செய்வித்தற்பொருட்டும், இராஜஸ, தாமஸங்களைப் பரித்தியாகஞ்செய்வித்தற்பொருட்டும் ஆகாரம், எக்ஞம், தவம், தானம் இந்நான்கின் திரிவிதத்தன்மையை அருளிச்செய்கின்றார் ]

[வேறு.]

உண்பன யாகமாரு முறுதவந் தானமென்ன
வொண்பட வுரைத்தநான்கு மோரொன்று மூன்றாய்நின்ற
பண்படு குணங்களாலே கேளெனப் பற்றுவீடு
நண்பொடு பகையுமில்லான் முறையினா னவிற்றலுற்றான்.

(இ-ள்.) உண்பன = (சர்வப்பிராணிகட்கும் பிரியமான) ஆகாரமும்,—யாகம் = யாகமும்,—ஆரும் உறு தவம் தானம் என்ன = யாவருஞ்செய்யாநிற்குந்தவமும், தானமும் என்று—ஒண்பட உரைத்த நான்கும் = விளங்கக்கூறிய இந்நான்கும்—பண்படு குணங்களாலே = சீர்திருந்திய சத்துவமுதலிய குணபேதங்களாலே—ஓரொன்றும் மூன்று ஆய் நின்ற = ஒவ்வொன்றும் மூவகையாய்நின்றன;—கேள் என = அவற்றைக்கேளென்று—பற்று வீடு நண்பொடு பகையும் இல்லான் = பந்தமும், மோக்ஷமும், உறவும், பகையும் இல்லாத ஸ்ரீ பகவான்—முறையினால் = (முன்சொல்லிய) ஒழுங்கின்படியே — நவிற்றல் உற்றான் = சொல்லத்தொடங்கினான்.—எ-று. (சு)

[ஆகாரத்தின் சாத்துவிகாதிபேதங்களை மூன்றுசெய்யுட்களால் அருளிச்செய்கின்றார்.]

சத்துவ குணத்தோருண்டி யுரைத்திடி லழகுசார்ந்து
தித்தித்த சுவையவாகி நெய்த்துச்சிக் கெனவுசேர்ந்து
வத்தித்து வலிநோயின்மை யறிவுநல் லாயுவின்பம்
வத்திக்கச் செய்யுமிந்த வுணவுகண் மடங்கலன்னாய்.

(இ - ள்.) மடங்கல் அன்னாய்=(யுத்தத்தில்) சிம்மத்தையொப்பான அருச்சுனா — சத்துவகுணத்தோர் உண்டி உரைத்திடில்=சாத்துவிகபுருஷர்(க்குப்பிரியமாகிய) உணவைச்சொல்லின்,—அழகு சார்ந்து=(பார்வைமாத்திரத்தினாலே சித்தத்திற்குப் பிரியத்தையுண்டுபண்ணும்படியான) அழகினைப்பொருந்தி—தித்தித்த சுவைய ஆகி==மதுரமான இரதங்களையுடையனவாய்—நெய்த்து=(ரசாம்சத்தால் சரீரத்திற் *சிரகாலபரியந்தம்) பசையாயிருப்பனவாய் — சிக்கெனவுசேர்ந்து =சினேகத்தோடுகூடி—வலி நோய் இன்மை வத்தித்து=சரீரசாமர்த்தியத்தையும், அரோகத்தையும் பெருக்கி — அறிவு நல் ஆயு இன்பம் வத்திக்கச்செய்யும்=உச்சாகத்தையும், நல்ல ஆயுளையும், இன்பத்தையும் பெருகும்படிசெய்கின்ற—இந்த உணவுகள்=இப்படிப்பட்ட ஆகாரங்களாம்.—எ-று.

சினேகம்=பொடிமுதலியவற்றைத் திரட்டுதற்கேதுவாயகுணம். இன்பம்=போஜனத்தின்பின் உளதாகுந்திருப்தி. (எ)

[இதுவுமது.]

இப்படி யன்றிவேறா மிராசத ருணவுகேட்கிற்
கைப்பன புளிப்புவர்ப்புக் கூர்ப்பன கடியவெய்து
நெய்ப்பயி னெருப்புப்போலச் சுடுவன விவற்றினாலே
மெய்ப்படு நோயுநெஞ்சத் திடும்பையும் விளைவவேலோய்.

(இ-ள்.) வேலோய்=வேலாயுதத்தையுடைய அருச்சுனா — இப்படி அன்றி வேறு ஆம்=இப்படிப்பட்ட உணவல்லாமல் இவற்றிற்கு வேறாகிய—இராஜதர் உணவு கேட்கில்=இராஜஸபுருஷர்க்கே பிரியமாயுள்ளஆகாரங்களை நீகேட்கில்—கைப்பன=கைப்பனவும்,—புளிப்பு =புளிப்பனவும்,—உவர்ப்பு=உவர்ப்பனவும், — கூர்ப்பன=உறைப்பனவும், — கடியவெய்து = கொடியவெம்மையுள்ள—நெய்ப்பயில் = நெய்யோடுகூடிய—நெருப்புப்போலச் சுடுவன=அக்கினியைப்போலச் சுடுகின்றவைகளும் (ஆம்;)—இவற்றினாலே=இவ்வுணவுகளினாலே— மெய்ப்படு நோயும்=சரீரத்தின்கண்ணே வாத, பித்த, சிலேஷ்மமுதலிய தாதுக்களின் விஷமத்தன்மைவாயிலாகப்பொருந்தாநின்ற வியாதியும்;—நெஞ்சத்து இடும்பையும்=சித்தத்தின்கண்ணே துன்பமும்— விளைவ=விளைவனவாம்.—எ-று.

கைப்பு=கசப்பு. உவர்ப்பு=உப்பு. (அ)

---

* சிரகாலம்=வெகுகாலம்.



ஆசினை யடைந்தநெஞ்சிற் றாமத ருணவுகேட்கி
னூசின பழஞ்சோறெச்சி லும்பர்பூ சனைக்காகாமை
யேசின வெந்திலாத வினையன விவற்றினாலே
காய்சின முதலாயுள்ள துயரெலாம் விளைவகண்டாய்.

(இ-ள்.) ஆசினை அடைந்த நெஞ்சின்=இராகாதிதோஷங்களையடைந்துள்ள சித்தத்தினையுடைய—தாமதர் உணவு கேட்கில்=தாமஸபுருஷர்களுக்கே பிரியமாயுள்ள ஆகாரங்களை நீ கேட்கில்,—ஊசின பழஞ்சோறு=ஊசிப்போன புராதன அந்நமும்,—எச்சில்=உச்சிஷ்டமும்,—உம்பர் பூசனைக்கு ஆகாமை=தேவர்களின் ஆராதனத்துக்காகாதனவும்,—ஏசின=நிந்திக்கப்பட்ட மாம்சமுதலியனவும், — வெந்து இலாத=(அக்கினியினால் முழுதும்) பக்குவமாகாதனவும் (ஆகிய)— இனையன = இப்படிப்பட்ட உணவுகளாம்; — இவற்றினாலே=இவ்வுணவுகளாலே—காய் சினம் முதலாய் உள்ள துயர் எலாம்=பிறரைவெறுக்குஞ் சினமுதலாயுள்ள துன்பமுழுவதும்—விளைவகண்டாய்=விளைவனவாம் கண்டாய் அருச்சுனா.—எ-று. (கூ)

[இனிச் சாத்துவிகமுதலிய மூவிதயாகங்களைக் கிரமமாக இரண்டு செய்யுட்களால் அருளிச்செய்கிறார்.]

செயத்தகு வனவென்றல்லாற் சேர்பயன் சிந்தியாதே
தயக்கநூன் முறைசெய்யாகஞ் சாத்திகஞ் சாரியாகம்
பயத்தையே வேண்டியாதல் பலர்புகழ் வேண்டியாத
லியற்றுறும் யாகமெல்லா மிராசத யாகமாமே.

(இ-ள்.) அல்லால் சேர் பயன் சிந்தியாதே=அஞ்ஞான விருளாலடையப்படும்பயன்களை இச்சியாமலே—செயத்தகுவன என்று=அவசியம் நம்மாற்செய்யத்தக்கனவாமென்று மனத்தின்கண்ணே நிச்சயித்து—தயக்க நூல் முறை செய் யாகம்=விளங்கச் சாஸ்திரவிதிப்படி செய்யாநின்ற யாகங்கள்—சாத்திகம் சார் யாகம் = சாத்துவிகமாகப் பொருந்திய யாகங்களாம்;—பயத்தையே வேண்டியாதல்=சுவர்க்காதி பயன்களையே உத்தேசித்தாவது—பலர் புகழ் வேண்டியாதல்=இடம்பத்தின்பொருட்டாவது—இயற்றுறும் யாகம் எல்லாம்=செய்கின்ற யாகங்கண் முழுதும் — இராசத யாகம் ஆம்=ராஜஸ யாகங்களாம்.— எ-று.

தயங்க எனற்பாலது, "தயக்க" என எதுகைநோக்கி வலித்தல் விகாரம் பெற்றது. (க0)

[இதுவுமது.]

நூற்படு நெறியுமின்றி நுனித்தவவ் வினையின்மேலோர்
தாற்பரி யமுமேயின்றித் தக்கமந் திரமுமின்றி
யேற்பவர்க் கீதலின்றி யியற்றுறு கின்றயாகந்
தார்ப்பொலி கின்றமார்பா தாமத யாகமாமே.

(இ-ள்.) நூல் படும் நெறியும் இன்றி=சாஸ்திரங்களிற்கூறிய விதியுமில்லாமல்,—அவ்வினையில் = அந்தயாகத்தொழிலில்—நுனித்த மேலோர் = நுட்பமானதேர்ச்சியுடைய இருத்துவிக்குகளின்—தாற்பரியமும் இன்றி=தாற்பரியமும்இல்லாமல், (இருத்துவிக்குகளாகிய பிராமணவிஷயமான துவேஷமுதலியவற்றால் சிரத்தையும் இல்லாமலென்றபடி.)—தக்க மந்திரமும் இன்றி=(முறைமைப்படி) ஜபிக்கத் தக்க மந்திரமும் இல்லாமல்,—ஏற்பவர்க்கு ஈதல் இன்றி=வந்துயாசிப்பவர்க்குக் கொடுக்கும் அந்நதானம், தக்ஷிணைகள் இல்லாமல்—இயற்றுறுகின்ற யாகம்=செய்யாநின்ற யாகங்கள்—தார்ப் பொலிகின்ற மார்பா=மாலை விளங்காநின்ற மார்பையுடைய அருச்சுனா—தாமத யாகம் ஆம்=தாமதயாகங்களாம்.—எ-று. ஏ, ஏ-அசைநிலைகள்.

பூர்வஞ்சொன்ன ராஜஸ எக்ஞத்தில் அந்தக்கரணசுத்தி இல்லாவிடினும் சாஸ்திரவிதிப்படி அநுஷ்டிப்பதால் சுவர்க்கமுதலியபலன்களை யடைவிக்குந் தர்மரூபமான அபூர்வமானது அவசியமாக உளதாம். தாமஸ எக்ஞமோ சாஸ்திரவிதியின்றி அநுஷ்டித்தலின் அதனால், யாதொருதர்மரூபமான அபூர்வமும் உளதாகாதென்றறிக. (௧௧)

[சாத்துவிகம், ராஜஸம், தாமஸம் என மூவகையாகத் தவத்தை யருளிச்செய்தற்பொருட்டு வாக்கு, மனம், சரீரம் என்னும் இப்பேதங்களால் தவத்தை மூவகையாகக் கூறுகின்றார்.]

[வேறு.]

தீக்குலாம் வேலினாய் தவத்தின் செய்கைதான்
வாக்கினாற் பேசுதன் மனத்தி னாக்குத
லாக்கையா லியற்றுத லாயி ருப்பது
நோக்கினா னிவற்றினை நுனித்துக் கூறுவாம்.

(இ-ள்.) தீக் குலாம் வேலினாய்=அக்கினியைப்போலப் பிரகாசியாநின்ற வேலையுடைய அருச்சுனா — தவத்தின் செய்கைதான்=தவத்தின்றொழிலானது—வாக்கினால் பேசுதல்=வாக்கால் வசனித்தலும்,—மனத்தின் ஆக்குதல்=மனத்தினாற்செய்தலும்,—ஆக்கையால் இயற்றுதல் ஆய் இருப்பது=சரீரத்தாற்செய்தலுமாய் (இப்படி மூவகையாய்) உள்ளது;—நோக்கினான்=அறிவினால்—இவற்றினை நுனித்துக் கூறுவாம்=இம்மூவகைக் காரணங்களாலுளவாகுந் தவங்களை நுட்பமாகத் தேர்ந்து இனிக்கூறுவாம்.—எ-று.

குலாவும் என்பது, 'குலாம்' என விகாரமாய்நின்றது. (௧௨)



[வாக்கின்தவத்தை அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

தீர்த்த யார்க்குஞ் செவிக்கினி தாயின
வார்த்தை மாமருந் தேயென லாவதா
மோர்த்து மெய்ம்மொழி கூறுத லோதுதல்
வார்த்தை யாற்பண்ணு மாதவ மாவதே.

(இ-ள்.) தீர்த்த=பரிசுத்தனான அருச்சுனா—யார்க்கும்=(கேட்பவர்) யாவர்க்கும்—செவிக்கு இனிது ஆயின=சுரோத்திரேந்திரியத்திற்குப் பிரியமான—மாமருந்தே எனலாவது ஆம்=மாட்சிமைபொருந்திய அமுதமேயென்று சொல்லலாவதான—வார்த்தை = வார்த்தையும்,—ஓர்த்து மெய் மொழி கூறுதல்=ஆராய்ந்து சத்தியவசனத்தை வசனித்தலும்,—ஓதுதல் = வேதத்தை அப்பியாசித்தலும்—வார்த்தையால் பண்ணும் மாதவம் ஆவது=வாக்காற்செய்யும் மாதவமென்று சொல்லப்படுகிறது.—எ-று.

ஏகாரம்-ஈற்றசை. ஓர்ந்து "ஓர்த்து" வலித்தல் விகாரம். தனது உச்சாரணகாலத்திலே கேட்பவனுக்குத் துக்கத்தைப் பண்ணாததும், அவனுடைய சுரோத்திரேந்திரியத்திற்குச் சுகத்தைப் பண்ணுவதும், பின்னை அந்தத்திலும் அவனுக்குச் சுகத்தையே உண்டுபண்ணுவதுமான வார்த்தை என்பார், 'செவிக்கினி தாயின, மாமருந் தேயென லாவதாம் வார்த்தை' எ-ம், பிரமாண மூலமுடையதும், அந்நியப் பிரமாணங்களால் வாதிக்கப்படாததுமான சத்தியவசனமென்பார், 'ஓர்த்து மெய்ம்மொழி கூறுதல்' எனவுங் கூறினார். மைந்தா நீ சாந்தனாய் வேதாப்பியாசத்தையும், சித்தநிரோதமான யோகத்தையுஞ்செய்; அதனால், உனக்கு நலனுண்டாமென்னும் வசனத்திற்போலத் துக்கத்தைப் பண்ணாமல் சத்தியமாய்ப் பிரியமாய் இதமாயுள்ள வசனோச்சாரணமே வாசிகதவம். நியமபூர்வகமாகச் செய்யும் வேதாப்பியாசமும் வாசிகதவமாம் என்றறிக.

(௧௩)

[மானததவத்தை அருளிச்செய்கின்றார்.]

தெளிவி னெஞ்சைத் தெளியப் பிடித்தலுங்
களிசெ யும்முளத் தைக்களி மாற்றலுங்
குளிர்வி லாமை யுளத்திற் கொளாமையு
மெளிதின் மானத மாதவ மென்பரே.

(இ-ள்.) தெளிவு இல் நெஞ்சைத் தெளியப் பிடித்தலும் = தெளிவில்லாத மனத்தைத் தெளியும்படிக்கு (ஆன்மாவின் சிந்தனரூபமான நிதித்தியாசனத்தால்) வசமாக்குதலும்,—களி செயும் உளத்தை = (விஷயங்களில்) செருக்கைச் செய்யும் மனத்தை—களி மாற்றலும் = அச்செருக்கினின்று நீக்குதலும்,—குளிர்வு இலாமை = குரூரவிருத்தியை — உளத்தில் கொளாமையும் = மனத்திற் பொருந்தாதிருத்தலும்—எளிது இல் மானத மாதவம் என்பது = அரியமானதமாதவமென்று சொல்லப்படுகிறது.—எ-று. ஏ-ஈற்றசை.

தெளிவின்மை = விஷயங்களின் சிந்தனத்தாற் பண்ணப்பட்ட வியாகுலத்தன்மை. (௧௪)

[சரீரதவத்தினை அருளிச்செய்கின்றார்.]

தலைமை யந்தணர் தேவர் குரவர்பான்
மலைத லின்றி வழிபடு வாழ்க்கையுங்
கொலை துறத்தலுங் காமங் குறைத்தலுந்
தலைவ காயத் தவமெனப் பட்டதே.

(இ-ள்.) தலைமை அந்தணர் (பால்) = (சதாசாரத்தோடுகூடிய) பிராமணரிடத்தும்,—தேவர் (பால்) = (சிவவிஷ்ணுவாதி) தேவர்களிடத்தும்—குரவர் (பால்) = பிதா, மாதா, ஆசாரியர்முதலிய முதியோரிடத்தும். (பிராக்ஞரிடத்தும்)—மலைதல் இன்றி = மயக்கமில்லாமல்—வழிபடு வாழ்க்கையும் = வழிபடாநிற்குஞ் செல்வமும்,—கொலை துறத்தலும் = பிராணிகளை இம்சைசெய்யாமையும்,—காமம் குறைத்தலும் = சாஸ்திர நிஷித்தமான மைதுன நிவிர்த்தியும், (மண் ஜலங்களால் சரீரசுத்திரூபமான சௌசமுதலியனவும்)—தலைவ = அரசனை அருச்சுன — காயத் தவம் எனப்பட்டது = சரீரதவமென்று சொல்லப்படுகிறது.—எ-று.

பிராக்ஞர் = பிரமநிஷ்டர்; இவர் சூத்திராதியரினுமுளராகலின், இவரும் பூஜிதற்குரியரோ யென்னும்பொருளை ஸ்ரீ பகவான் உணர்த்தும்பொருட்டு இருபிறப்பாளரினும் வேறாக அருளிச்செய்தனர்; மொழிபெயர்த்தோர் இவரைக் குரவருளடக்கிக்கூறினர். (௧௫)



[“தீர்த்த” என்னுஞ் செய்யுண்முதல் மூன்று செய்யுட்களால் வாக்கு, மனம், சரீரம் என்னும் இப்பேதங்களால் மூவகைத்தவங்களை யருளிச்செய்து இனி அம்மூவகைத் தவங்களைச் சாத்துவிகாதிபேதங்களாலும் மூவகைப் பேதங்களாமென்று மூன்று செய்யுட்களால் ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[சாத்துவிகதவம்.]

[வேறு.]

தீத்தவழும் வடிவேலோய் செப்பியவிம் மூன்றாலுஞ்
சாத்துலக மகிழ்வெய்தச் செய்கின்ற வருந்தவத்தி
லார்த்துவரும் பயன்வேண்டா தாகின்ற வருந்தவந்தான்
சாத்துவிக தவமென்று சாற்றுவது தக்கோரே.

(இ-ள்.) தீத் தவழும் வடி வேலோய் = அக்கினியைப்போல ஒளிராநிற்கும்கூர்மைபொருந்தியவேலையுடைய அருச்சுன—செப்பிய இம் மூன்றாலும் = முற்கூறிய வாக்கு, மனம், காயம் என்னுந் திரிகரணங்களாலும்—சாத்து உலகம் மகிழ்வு எய்த = சொல்லாநின்ற உலகமானது சந்தோஷமடையும்படி—செய்கின்ற அரும் தவத்தில் = செய்யாநின்ற அரியதவங்களில்—ஆர்த்துவரும் பயன் வேண்டாது = (மமத்துவாபிமானத்தால் தன்னைப்) பந்திப்பித்து மேல் உளவாகாநிற்கும் பயன்களை இச்சியாமல்—ஆகின்ற அரும் தவம்தான் = செய்யாநின்ற அரிய தவந்தான்—சாத்துவிக தவம் என்று = சாத்துவிக தவசென்று—தக்கோர் சாற்றுவது = மேலோர்களாற் சொல்லப்படுகிறது.—எ-று.

ஏகாரம்-ஈற்றசை. (௧௬)

[இராஜஸதவம்.]

வசையிறவ முடையரென மாநுடர்கொண் டாடுகைக்கு
நசையினொடு பொருள்பெறவுஞ் செய்கின்ற நற்றவத்தை
விசயவுனக் குரைசெய்தேன் மிகப்பெரியோர் செய்திடினு
மிசையவறி மற்றிதனை யிராசதமாந் தவமென்றே.

(இ-ள்.) வசையில் தவம் உடையர் என மாநுடர் கொண்டாடுகைக்கும் = நல்ல தவத்தினையுடைய சாதுவென்று ஜனங்கள் ஸ்துதித்தற்பொருட்டும்,—நசையினொடு பொருள் பெறவும் = (அவிவேக ஜனங்களாற்செய்யும் பாதப்பிரட்சாளன முதலியவற்றின்) ஆசையோடு தனமுதலிய பதார்த்தங்களை (அந்நியரிடத்தில் தானமாக) அடைதற்பொருட்டும்—செய்கின்ற நல்தவத்தை = (டம்பமாகச்) செய்யாநின்ற நல்ல

தவத்தை—விசய=அருச்சுனு—உனக்கு உரை செய்தேன்=உனக்கு அருளிச்செய்தேன்;— மிகப் பெரியோர் செய்திடினும் = மிகவும் மேன்மையுடையோர் செய்யினும்—இதனை இராசதம் ஆம் தவம் என்றே=இதை ராஜஸதவமென்றே—இசையஅறி=சம்மதமாக நீஅறிதி. —எ-று. மற்று-அசைநிலை. ஏகாரம்-தேற்றம். (கஎ)

[தாமஸதவம்.]

பேதைமையை மிகவுடைத்தாய்த் தன்னுயிர்க்கும் பிறவுயிர்க்
மேதமுறு பெருந்துயருங் கேடுமே யியற்றுவதா [து
யாதவனும் பனியுமுழன் ருற்றுகின்ற வருந்தவந்தான்
ருதலரு நெடுமுடியாய் தாமதமாந் தவமாமே.

(இ-ள்.) பேதைமையை மிக உடைத்து ஆய் = அவிவேகத்தை மிகவும் உடைத்தானதாய்—தன் உயிர்க்கும் பிற உயிர்க்கும் = தனக்கும், அந்நியர்க்கும் — ஏதம் உறு பெரும் துயரும் கேடுமே இயற்றுவது ஆய்=குற்றமிகுந்த பெரிய துன்பத்தையும், நாசத்தையுமே செய்வதாய் — ஆதவனும் பனியும் உழன்று = பகலில் சூரியகிரணத்தின் வெப்பத்தினுலும், இரவில் பனியின் சீதளத்தினுலும் உடலம் வருந்தி—ஆற்றுகின்ற அரும் தவம்தான் = செய்கின்ற அரியதவமானது —தாது அலரும் நெடும் முடியாய்=பூந்தாதுக்கள் விரிகின்ற பூமாலையை அணிந்த நீண்ட முடியையுடைய அருச்சுனு—தாமதம் ஆம் தவம் ஆம்=தாமதமாகிய தவமாம்.—எ-று. தான், ஏ-அசைநிலைகள்.

'ஆதவனும் பனியும்' என்பவை மூன்ருவதன்ருெகை. 'பேதைமையை மிகவுடைத்தாய்' என்று தவமுடையோன் றன்மையைத் தவத்தின்மே லேற்றினுர். (கஅ)

[தானவிஷயமும் சாத்துவிகாதி மூவிதபேதமாகக் கூறுகின்ருர்.]

[சாத்துவிகதானம்.]

முன்செய்கா ரியப்பொருட்டு மின்றியே முடித்திதனுற்
பின்பொருநற் பொருள்விளையு மென்பதுவும் பேணுதே
நன்குடைய காலத்தே நல்லிடத்தே நல்லவர்க்குத்
தன்பொருளைக் கொடுக்குமது சாத்துவிக தானமே.

(இ-ள்.) முன் செய் காரியப் பொருட்டும் இன்றியே = முன்னே தனக்கொரு காரியஞ் செய்ததன்பொருட்டும் இல்லாமலே— முடித்து=தானத்தைச் செய்துமுடித்து — இதனுல்=இந்தத் தானத்தினுல்—பின்பு ஒரு நல் பொருள் விளையும் என்பதுவும் பேணுதே=



மறுமைக்கண்ணே சுவர்க்கம், பசு, புத்திராதிகளான ஒப்பற்ற நல்ல பொருள்களானவை உண்டாகாநிற்குமென்பதையும் விரும்பாமலே (நமக்கவசியஞ் செய்யத்தக்கதேயென்று இவ்வாறு நிச்சயித்து)—நன்கு உடையகாலத்தே=உத்தமகாலத்திலே—நல் இடத்தே=உத்தமதேசத்திலே—நல்லவர்க்கு=உத்தமர்க்கு—தன் பொருளைக் கொடுக்கும் அது =சுவர்ணம், அந்நம், பூமி, பசுமுதலிய தன்பதார்த்தங்களைக் கொடுக்கு மதுவே—சாத்துவிக தானம்=சாத்துவிகதானமாம்.—எ-று.

'நன்குடைய காலம்'=சூரியகிரகணமுதலியகாலம். 'நல்லிடம்'= குருக்ஷேத்திரமுதலியவை. 'நல்லவர்'=வித்தை, தவம் இவை இரண்டனையுமுடைய புருஷர்; அல்லது தம்மையும், தாதாவையும் ரட்சணை செய்யாநிற்பவர்; இவரையே தானத்துக்குரிய பாத்திரமென்று நூல்களிற் சொல்லுகின்றனர். அநுபகாரியானபாத்திரத்தில், உத்தமமான தேசகாலங்களில் நிஷ்காமனுய்ச் சாஸ்திரவிதிப்படி கொடுக்குந்தானம் சாத்துவிகதானமாமென்றறிக. (கக)

[இராஜஸதானம்.]

கொண்டுசெயத் தருங்கரும மெனுங்குறிப்பொன் றின்றியே
பண்டுசிலர் செய்ததற்காப் பரிவோடு பண்ணினவு
முண்டிதனுன் மேல்விளைவென் றுணர்வோடிச் செய்வனவு
மெண்டிசையு நிறைபுகழா யிராசதமாந் தானமே.

(இ-ள்.) எண் திசையும் நிறை புகழாய் = எட்டுத்திக்குநிறைந்த புகழினையுடைய அருச்சுனு—கொண்டு=இந்தத்தனமுதலியவற்றைக் கொண்டு—செயத் தகும் கருமம் எனும் = அவசியம் நாம் செய்யத்தக்ககாரியம் இதுவென்னும்—குறிப்பு ஒன்று இன்றியே=கருத்தொன்றும் இல்லாமலே — பண்டு சிலர் செய்ததற்கா = பூர்வஞ்சில பிராமணர் தமக்கு உபகாரம் செய்ததற்குப் பிரதியுபகாரமாக—பரிவோடு பண்ணினவும்=பிரியத்தோடு செய்தனவும்,—இதனுல் மேல் விளைவு உண்டு என்று=இந்தத்தானஞ்செய்வதனுல் மறுமைப்பயன்கள் உளவாமென்று—உணர்வு ஓடிச் செய்வனவும்=அறிவானது சுவர்க்காதி பயன்களினீண்டு செய்யாநிற்பனவும்—இராசதம் ஆம் தானம்=ராஜஸமாகியதானமாம்.—எ-று. ஏ-ஈற்றசை. (உ०)

[தாமஸதானம்.]

வாயாத தொருபொருளை வழங்காத காலத்தே
யேயாத நிலத்திடையே யிழிந்தகுலத் தவர்களுக்கே

யாயாத வறிவினெடு மப்பிரியத் தொடுங்கொடுத்தல்
சாயாத பெருந்திறலோய் தாமதமாந் தானமே.

(இ-ள்.) சாயாத பெரும் திறலோய்=அழியாத மிகுந்தவலியை யுடைய அருச்சுன—வாயாதது ஒரு பொருளை=தனக்கு நியாயமாகக் கிடையாததான ஒரு பொருளை—வழங்காத காலத்தே=ஆசௌசாதி சமயத்திலே—ஏயாத நிலத்திடையே=அசுசியானஸ்தானத்திலே—இழிந்த குலத்தவர்களுக்கே=(நடர், விடர்முதலிய) அபாத்திரர்க்கே—ஆயாத அறிவினெடும் அப்பிரியத்தொடும் கொடுத்தல் = அவிவேகத்தோடும், அப்பிரியத்தோடுங் கொடுக்குந்தானமானது — தாமதம் ஆம் தானம்=தாமஸதானமாம்.—எ-று.

அன்றியும் உத்தமதேசம், உத்தமகாலம், உத்தமபாத்திரமாயிருப்பினும், ‘ஆயாத வறிவினெடு மப்பிரியத் தொடுங்கொடுத்தல், தாமதமாந் தானம்’=பாதப்பிரட்சாளநமுதலிய சற்காரமில்லாமலும், ஆதரமில்லாமலும் ஈதல் தாமததானமாமென்று பெரியோர் கூறுவர்.—எ-று. நடர்=கூத்தர். விடர்=தூர்த்தர். (உக)

[ஸ்ரீ பகவான் தாம் கூறியவற்றை அநுவாதஞ்செய்கின்றார்.]

[வேறு.]

ஒப்பரிதாய வுண்டியோ டியாக முறுதவந் தானமென்றுரைத்த, வப்படியெல்லா மறிவகையுனக்கு முரைத்தன னடையமற்றையா, மெய்ப்படியாமற் றிவற்றினைச் செய்து வீடுபேற் றுயர்நெறியாவ, தெப்படியென்னி லதனையு முனக்குத் தெரிவகை யுணர்த்துவன்கேணீ.

(இ-ள்.) ஒப்பு அரிது ஆய=(குணவேறுபாட்டால் ஒன்றற்கொன்று) சமனக இல்லாத—உண்டியோடு=ஆகாரத்தோடு — யாகம்=எக்ஞம்—உறு தவம்=பொருந்தாநின்றதவம்,—தானம் என்று உரைத்த=தானமென்று பெரியோர்களாற் கூறப்பட்ட—அப்படி எல்லாம் அறிவகை=அந்தவகைகளெல்லாம் அறியும்படிக்கு—ஐயா உனக்கும்=அருச்சுன உனக்கும்—அடைய உரைத்தனன்=“சத்துவகுணத்தோருண்டி” என்னுஞ்செய்யுண்முதல், கடு-செய்யுட்களால் முழுதுமருளிச்செய்தேன்.—மெய்ப்படி ஆம்=உள்ளபடி சுருதி சம்மதமும், பெரியோர் சம்மதமுமாகிய—மற்று இவற்றினைச் செய்து=ராஜஸ, தாமஸங்கட்கு வேறான சாத்துவிகமான எக்ஞம், தவம், தானங்களைச்செய்து—வீடுபேற்று உயர்நெறியாவது=வீடுபேற்றிற்குயர்ந்த தர்மமான



துளதாவது—எப்படி என்னில்=எவ்விதமென்று கேட்கில்,—அதனையும்—(அந்த எக்ஞாதிகள் தோஷம்விடுபட்டுத் தர்மோத்பத்திவாயிலாகப் பயன்களைப் பயவாநிற்கும்) அந்தவிதத்தையும் — உனக்குத் தெரிவகை—உனக்குத் தெரியும்படிக்கு — உணர்த்துவன் நீ கேள்—இனி அருளிச்செய்வேன் நீ கேட்பாய்.—எ-று. மற்று-அசை.

அவசியம் கொள்ளற்பாலனவான சாத்துவிக ஆகாராதிநான்கனுள், ஆகாரமோ கேவலம் பசிநிவிர்த்திரூபமான திருஷ்டபலனையே சித்திக்கப்பண்ணுவதன்றி எக்ஞம், தவம், தானங்களைப்போலத் தர்மோத்பத்திவாயிலாகச் சுவர்க்காதிரூப அதிருஷ்டபலன்களைச் சித்திக்கப்பண்ணாமையின், ‘உண்டியோடு’ என்று ஒடுக்கொடுத்து அதனை வேறு பிரித்தனர். “‘மற் றிவற்றினைச் செய்து வீடுபேற் றுயர்நெறியாவ, தெப்படியென்னில்’ என்னும் வினவின் கருத்து; சாத்துவிகமானாலும் எக்ஞம், தவம், தானங்களை யநுஷ்டியாநிற்குமநுடர் பிரமாதபாகுள்ளியத் தன்மை யுடையராதலால் அவசியமாக ஏதேனும் மந்திராதிரூப அங்கவைகல்லியம் அவ்வெக்ஞாதிகளில் உளவாம்; ஆகவே, தர்மோத்பத்திவாயிலாக அந்தக்கரணசுத்தி, அல்லது சுவர்க்காதிரூப அதிருஷ்டபலன்கள் இவைகளைப்பயவாதே என்பது. (உஉ)

[பரமகிருபாலுவான ஸ்ரீ பகவான் சாமான்யப்பிராயச்சித்தத்தை உபதேசிக்கின்றார்.]

[வேறு.]

ஓமென்கின்ற தனியெழுத்து முரைத்தற்கரிய தற்பதமுந், தாமங்கமழுந் தார்மார்பா சத்தென்கின்ற தனிப்பதமு, மாமென்கின்ற விவைமூன்று மறிவின்பெயர்மற் றிவற்றாலே, யாமுன்புணரு மறைமறையோர் யாகந்தோன்றிற் றெனவறிவாய்.

(இ-ள்.) தாமம் கமழும் தார் மார்பா = மணிவடமும், மணம் பொருந்திய பூமாலையும் அணிந்துள்ள மார்பையுடைய அருச்சுன—ஓம் என்கின்ற தனி எழுத்தும்=ஓம் என்னும் ஏகாட்சரமும்—உரைத்தற்கு அரிய தற்பதமும்=ஸ்துதித்தற்கரிய தத் என்னும் பதமும்,—சத்து என்கின்ற தனிப் பதமும்=ஸத் என்றுகூறுகின்ற ஒப்பற்ற பதமும்—ஆம் என்கின்ற இவை மூன்றும்=ஆகுமென்று சொல்லப்பட்ட இம்முப்பதங்களும்—அறிவின் பெயர்=பரப்பிரமத்தின் நாமங்களாம்;—இவற்றாலே=இந்நாமங்களாலேயே — மறையோர்=பிராமணர்முதலிய கர்த்தாவும்,—யாம் முன்பு உணரும்=நாம் முன்னமே அறியாநிற்

ரும் — மறை = காணரூபமான வேதமும்,—யாகம் = கர்மரூபமான எக்ஞமும் —தோன்றிற்று என அறிவாய் = சிருஷ்டியினுதிகாலத்தில் பிரமாவினுல் உற்பந்நமாயின வென்றறிவாய்.—எ-று. மற்று-அசை.

'தோன்றிற்று' எ - து, பன்மையிலொருமைவந்த வழுவமைதி. அகார, உகார, மகாரமென்னும் இம்மூன்றவயவங்களேயுடைய பிரணவமானது ஒரோ நாமமாய்ப் பிரமத்திற்கு எப்படியுள்ளதோ அப்படி ஓம், தத், சத் என்னுமூன்றவயவங்களும் ஒரோநாமமாய்ப் பரப்பிரமத்திற்கு வேதாந்தமறிந்த மகரிஷிகளால் பூர்வம் ஸ்மரணஞ்செய்யப்பட்டிருக்கிறது; ஆதலால், இக்காலத்துள்ள வேதாந்தமறிந்த புருஷராலும் ஓம், தத், சத் என்னும் பரப்பிரமத்தின் நாமம்அவசியமாக ஸ்மரணஞ்செய்ய வேண்டும்; இப்படிப்பட்ட நாமத்தை ஸ்மரணஞ்செய்வதால் இவ்வதிகாரிபுருஷனுக்கு எக்ஞம்,தவம்,தானமுதலியகர்மங்களில்விகுணத்தன்மையென்னுந் தோஷம் உண்டாகமாட்டாது; இவ்வார்த்தை ஸ்மிருதியிலுங் கூறியிருக்கின்றது; ஸ்மிருதிவசனம்;—எக்ஞமுதலிய கர்மங்களேச் செய்யாநிற்கும் புருஷர்க்குப் பிரமாதவசத்தால் அவ்வெக்ஞமுதலிய கர்மங்களில் மந்திராதிரூபாங்கங்கள் பங்கமாயின் அம்மந்திராதிரூபாங்கங்கள் விஷ்ணுபகவானது ஸ்மரணத்தினுலேயே பரிபூரணமாய் விடுமென்பது. வேதமறிந்த பெரியோரும் எந்த எந்த வைதிககர்மங்களே ஆரம்பஞ்செய்வரோ அந்த அந்தக் கர்மங்களின் ஆரம்பத்தில் இந்த நாமத்தை ஸ்மரணஞ்செய்தே அந்த அந்தக் கர்மங்களேச் செய்கின்றனர்; ஆதலால், சிஷ்டாசாரரூபப்பிரமாணத்தாலும் அந்த நாமஸ்மரணத்திற்கு விகுணதை யென்னுந் தோஷநிவிர்த்திரூபமான பலம் சித்தமாயுள்ளதேயாம்; 'இவற்ருலே, யாமுன்புணரு மறைமறையோர் யாகந்தோன்றிற் றெனவறிவாய்' எ-து, இந்த நாமஸ்மரணத்தில் எக்ஞாதி கர்மங்களில் விகுணத்தன்மையென்னுந் தோஷநிவிர்த்தி செய்வதின் சாமர்த்திய மருளிச்செய்தற்பொருட்டுத் துதித்ததாம். 'மறையோர்' என்னுமொழி பிராமணர், க்ஷத்திரியர், வைசியர் என்னும் மூன்று வருணத்தினர்க்கும் உபலட்சணம். பூர்வஞ்சிருஷ்டியினுதிகாலத்தில் பிரமாவினுல் எக்ஞமுதலானவைகளேச் சிருஷ்டித்தற் கேதுவானமையின் இம்மகாப் பிரபாவமுடைய பிரமத்தின் நாமமானது விகுணதையென்னுந் தோஷத்தை நிவிர்த்திசெய்வதிற் சாமர்த்தியமுடையதே யென்க. (௨௩)

[ஓங்காராதிகளின் உத்தமத்தன்மையைத் தரிசிப்பிக்குமனோரதத்தால் அவைகளேத் தனித்தனியே ஸ்துதிக்கின்ருர்.]

ஓமென் றுரைத்தே வினைசெய்வார் வீடுற்றவர்வீ டுறுமவர்க
டாமுன் புரைத்த தற்பதத்தை யுரைத்தேசெய்வர் சத்தென்
யாமென் கின்ற யாசமுதன் மூன்றிற்றிதியு மவற்றினமுந்[றே
காமர் வினையின் மேலுமது கழறுகிற்பார் கதிர்வேலோய்.



(இ-ள்.) ஓம் என்று உரைத்தே=ஓமென்னுஞ் சப்தத்தை உச்சாரணஞ்செய்தே—வீடு உற்றவர் = மோட்சமடைந்த அறிஞர்கள்—வினை செய்வார்=எக்ஞம், தவம் தானரூபமானகிரியைகளே நிரந்தரஞ் செய்யாநிற்பர். — வீடு உறும் அவர்கள்தாம் = மோட்சமடையும் படியான யோக்கியதையுடைய முமுட்சுக்கள் — முன்பு உரைத்த தற்பதத்தை உரைத்தே — முற்கூறிய தற்பதத்தை உச்சாரணஞ் செய்தே—(வினை) செய்வர்—(பலத்தை இச்சியாமல் நாநாப்பிரகாரமான) எக்ஞம், தவம், தானரூபமாகிய கிரியைகளேச் செய்யாநிற்பர்.—யாகம் முதல் மூன்றில் திதியும் — எக்ஞத்திலும், தவத்திலும், தானத்திலுந் தாற்பரியமான அவஸ்தானமும்—அவற்று இனமும்=அவ்வெக்ஞாதிகளின் அநுகூலமான கர்மங்களும்—சத்து என்றே ஆம் என்கின்ற= சத்தென்றே ஆருமெனக் கூறப்படுகின்றனவாம்;—(அன்றியும்,)காமர் வினையின் மேலும்=விவாகமுதலிய மங்களகர்மங்களிலும் (சத்பாவத்திலும், சாதுபாவத்திலும்)—அது கழறுகிற்பார்=சத்தென்னும் அந்நாமத்தைப் பிரயோகிப்பர்—கதிர் வேலோய்=கதிர்விட்டிலங்காநின்ற வேலேயுடைய அருச்சுன.—எ-று.

'என்கின்ற' அஃறிணைப்பலவின்பாற் படர்க்கைச் செயப்பாட்டு வினைமுற்று. சத்பாவம், சாதுபாவமென்னும் இரண்டும் எஞ்சிநின்றன; இங்ஙனங்கூறியவாற்ருல் ஓம் தத் சத் என்னும் பிரமத்தினுடைய நாமத்தின் ஒவ்வொரு ஓங்காராதி அவயவத்திற்கும் இவ்வாருன மஹாத்மியம் உண்டென்ருல் அவ்வோங்காரமுதலிய மூன்றவயவங்களின் சமுதாயரூபமான இந்நாமத்திற்கு அத்தியந்தம் அற்புதமான மாஹாத்மியம் உண்டென்பதிற் சொல்லவேண்டுவதென்னே யென்பது பெறப்படுகின்றது. (௨௪)

[ஸ்ரீ பகவான் முன்னர்க்கூறிய நாமோச்சாரணத்தால் எக்ஞாதிகளின் அங்கவைகல்லியதோஷநிவிர்த்தியும், எக்ஞாதிகள் விகுணதை யென்னுந்தோஷம் நீங்கிச் சகுணமாவதும் சிரத்தையோடுகூடினஅதிகாரிக்கேயல்லாமல் அந்நியர்க்கின்றென்றுஅத்தியாயத்தை உபசம்மரிக்கின்ருர்.]

[வேறு.]

காதலாலிந்தப் பதங்கண்மூன்றினேயுங் கற்றுணர்ந் தவர்
கடங்கருத்தா, லோதலாம்வகையா லுரைத்தலாற்றவமுந் தா
னமுமுதலியவொழியா, ராதலாலிந்தப் பதங்களேயுரைத்தே
வினைசெயத் தகுவதென்றுரைத்தான், றீதிலாவுலகந் தன்னு
ளேயுதிப்பத் தேவகி திருவயிற்றுதித்தோன்.

(இ - ள்.) கற்று உணர்ந்தவர்கள்=ஞானநூல்களைக்கற்று அவற்றின்பொருள்களை உணர்ந்த அதிகாரிகள்—காதலால்=சிரத்தையினுல்—இந்தப்பதங்கள் மூன்றினையும்=ஓம், தத், சத் என்னும் இம்மூன்று பதங்களையும்—தம் கருத்தால்=அவற்றின்பொருளோடும்,—ஓதல் ஆம் வகையால்=உச்சரிக்குங்காரணத்தோடும் — உரைத்தலால்=உச்சரித்தலால்—தவமும் தானமும் முதலிய ஒழியார்=எக்ஞம், தவம், தானங்களை அசத்தாகவிடார்; (பின்னையோ பிரமத்தின் அந்நாமோச்சாரண மான்மியத்தால் அங்கவைகல்லியதோஷ நீங்குதலின், சாத்துவிகமான சகுணங்களாகவே அவ்வெக்ஞ, தவ தானங்களைப் பெறுவர்;) — ஆதலால்=ஆதலின்,—இந்தப் பதங்களை உரைத்தே=பிரமத்தின் நாமங்களான இப்பதங்களை உச்சரித்தே—வினை செயத்தகுவது என்று=தத்தம் வருணத்திற்குரிய கர்மங்களைச்செய்யவே தக்கதென்று — உரைத்தான்=அருளிச்செய்தனன் — தீது இலா உலகம் தன் உளே உதிப்ப=குற்றமற்ற உலகமானது சச்சிதாநந்தான்மகமான தன்னிடத்தே உதிக்க —தேவகி திருவயிற்று உதித்தோன் (தான் ஒரு) சீமானுன வசுதேவன் மனைவியின் திருவயிற்றுதித்த ஸ்ரீ பகவான்.—எ-று.

உலகுக்குக்குற்றமற்றஎன்னும்விசேஷணந்தந்ததுபகவானதுவிபூதியாதலின் என்க. 'காதலாலிந்தப் பதங்கண்மூன்றினையுமுரைத்தலாற்றவமுந் தானமுமுதலியவொழியார்' என்று இங்ஙனங் கூறியவாற்ருல், சிரத்தையில்லாமற்செய்யும் எக்ஞம், தவம், தானமுதலியவை இகபரங்களின் பயன்களைப் பயவாவென்பது பெறப்படுகின்றது. இவ்வத்தியாயத்தில் ஆலசியாதிதோஷங்களால் சாஸ்திரவிதியைப் பரித்தியாகஞ்செய்து பிதா, பிதாமகன்முதலிய விருத்தபுருஷர்களின் வியவகாரமாத்திரத்தால் எக்ஞமுதலிய கர்மங்களிற் பிரவிர்த்தியாநிற்கும் புருஷரிடத்துச் சாஸ்திரவிதியின் பரித்தியாகரூபமான அசுரதர்மமும், சிரத்தாபூர்வக கர்மாநுஷ்டானரூபமான தேவதர்மமுங் காணப்படுதலின், அப்புருஷர் அசுரரா? அல்லது, தேவரா என்றிவ்வாருன அருச்சுனன் சமுசயத்திற்கு விஷயபூதரான புருஷருள்ளே யாவர் இராஜஸ, தாமஸ சிரத்தாபூர்வகமான இராஜஸ, தாமஸரூப எக்ஞமுதலிய கர்மங்களையே செய்கின்றனரோ அவர் அசுரர் எ-ம், இப்படிப்பட்ட அவர் சாஸ்திரங்களிற் பிரதிபாதிக்கின்ற ஞானசாதனங்களின் அதிகாரிகளல்லர் எ-ம், யாவர் சாத்துவிகசிரத்தாபூர்வகமாகச் சாத்துவிகஎக்ஞமுதலியவற்றைச் செய்கின்றனரோ அப்புருஷர் தேவர் எ-ம், அவர்சாஸ்திரங்களிற் பிரதிபாதியாநின்ற ஞானசாதனங்களின் அதிகாரிகளாவர் எ-ம் இவ்வாருன நிர்ணயம் ஸ்ரீ பகவானுல் அருளிச்செய்யப்பட்டதென்றறிக. (உரு)

## கஎ-வது குணவிகாரவத்தியாயம் முற்றிற்று.

---

ஆ அத்தியாயம்-கஎ-க்குத் திருவிருத்தம் - சஅரு.

---

## கஅ-வது * சஞ்சேபவத்தியாயம்.

[இவ்வத்தியாயத்தில் இக்கீதாசாஸ்திரார்த்தங்கண் முழுதையுஞ் சங்கிரகித்து இதுவே பரமார்த்தமாமென நிர்ணயஞ் செய்தற்பொருட்டுச் சந்நியாசம், தியாகம் என்னும் இவைகளைப் பிருதக்காக ஸ்ரீ பகவானருளிச்செய்கின்ருர்.]

[பூர்வாத்தியாயங்களில் அங்கங்கே கர்மசந்நியாசமும், பலமாத்திரத்தியாகத்தால் கர்மாநுஷ்டானமும் சர்வக்ஞரும், பரமகாருணிகருமாகிய ஸ்ரீ பகவானுல் உபதேசிக்கப்பட்டமையின் அக்கர்மசந்நியாசம், கர்மாநுஷ்டானங்களின் அவிரோதப் பிரகாரமறிய இச்சை நண்ணின அருச்சுனன் ஸ்ரீ பகவானை நோக்கி விணுவுகின்றனன்.]

ஏகமே கருதுவா ரிதயமே விளைவதோர்
போகமே யுலகிலோர் பொருவிலா வொருவனே
நாகமே யமளியாய் நளினமே மலர்வதோர்
மேகமே பணியெனு விசயன்மேல் வினவுவான்.

(இ-ள்.) ஏகமே கருதுவார்=பிரமான்ம ஐக்கியரூபனுன உன்னையே (நிரந்தரம் ஆதரவோடு) தியானியாநிற்கும் யோகிகளின்—இதயமே விளைவதோர் போகமே=இருதயத்தினுள்ளே விளைவதான ஒப்பற்ற ஆநந்தமே, — உலகில்=உலகின்கண்ணே—ஓர் பொருவு இலா ஒருவனே—ஒருவமையற்ற ஏகனே,—நாகமே அமளி ஆய்=ஆதிசேஷனே திருவமளியாய்—நளினமே மலர்வதோர் மேகமே=(திருப்பதங்களும் திருக்கரங்களும், திருநயனங்களும், திருவுந்தியுமாகிய) தாமரைமலர்கள் மலர்ந்திருப்பதான ஒரு கருமுகிலே—பணி எனு=விடையருளிச்செய்கவென்று—விசயன் = அருச்சுனனுனவன் — மேல் வினவுவான்=இனி விணுவுகின்ருன்.—எ-று. (க)

[வேறு.]

சந்நியாச மாவதுந் தகுந்தியாக மாவது
மென்னியாய மாகவெம் பிரானியம்பு கென்னவே
வன்னிவாயு வானமாகி மண்ணுநீரு மாகியோன் [னுன்.
ரெுன்மையாம் பொருட்டொகைத் திறஞ்சொலத் தொடங்கி

(இ - ள்.) சந்நியாசம் ஆவதும்=சந்நியாசமென்று சொல்லப்படுவதும்,—தகும் தியாகம் ஆவதும்=(அதிகாரிகளாற்) செய்தற்குரிய தியாகமென்று சொல்லப்படுவதும்—என்=என்ன சொரூபம்? (அவை

---

* வடமொழியில், சந்நியாசயோகம் என்று பெயர்.

களைப் பிருதக்காகவறிய யான் இச்சிக்கிறேன்;)—நியாயம் ஆக=உள்ளபடியே—எம்பிரான்=எமது கடவுளே—இயம்புக என்ன=(அவைகளைக்கிருபையினால்) அருளிச்செய்வீராகவென் றருச்சுனன் வினவ—வானம் வாயு வன்னி ஆகி நீரும் மண்ணும் ஆகியோன்=பஞ்சபூத (பௌதிக) ரூபமான பிரபஞ்சமுழுதுந் தானாகிய ஸ்ரீ பகவான்—தொன்மை ஆம் பொருள் தொகைத் திறம்=(பூர்வாத்தியாயங்களில் அங்கங்கே வகுத்துபதேசித்துவந்த) பழைமையான சந்நியாச, தியாகசப்தங்களின் பொருள்களைச் சஞ்சேபத்திறமாக—சொலத் தொடங்கினான்=உபதேசித்தருள வாரம்பித்தனர்.—எ-று. (௨)

[அருச்சுனன் வினவிற்கு ஸ்ரீ பகவான் விடையருளிச்செய்கின்றார்.]

காமமென்றி டும்பலன்செய் கன்மமான யாவையுந்
தாமடங்க வேயிகத்தல் சந்நியாச மாவதிங்
கேமமின்றி யெவ்வினைப் பயன்களான யாவையுந்
தீமையென் றறத்துடைத் திருத்த றியாகமாவதே.

(இ-ள்.) காமம் என்றிடும்=(புருஷருடைய)அபீஷ்டவிஷயங்களென்று சொல்லப்படும்--பலன் செய்=(சுவர்க்கம், புத்திரன், பசு முதலிய) பயன்களைப் பயவாநிற்கும்—கன்மம் ஆன யாவையும்=அசுவமேதாதி கர்மங்களனைத்தையும்—அடங்க இகத்தல்=(பலத்தோடு கூட) முழுதும் பரித்தியாகஞ் செய்வது—சந்நியாசமாவது=சந்நியாசசப்தத்தின் பொருளாம்.—இங்கு ஏமம் இன்றி=இங்கே யாதொரு மயக்கமுமில்லாமல்—எவ் வினைப் பயன்களான யாவையும்=நித்திய, நைமித்திக கர்மங்களின் பயன்களனைத்தையும்—தீமையென்று=தீமையாமென்று—அறத் துடைத்து இருத்தல்=முழுதும் பரித்தியாகஞ்செய்திருத்தல்—தியாகம் ஆவது=தியாக சப்தத்தின் பொருளாம்.—எ-று. தாம்—அசைநிலை. ஏகாரம் இரண்டும் ஈற்றசை. (௩)

[இப்போதருளிச்செய்தவற்றை வற்புறுத்தும்பொருட்டு மதாந்தரங்களை நிஷேதஞ் செய்பவராய் மதபேதங்களைத் தரிசிப்பிக்கின்றார்.]

தீங்கியற்று கின்றதீ வினைத்திறங்கள் போலவே
யீங்கியற்று கின்றநல் வினைத்திறங்க ளியாவையு
மாங்கியற்ற லின்றிவிட் டிருத்தலே யருத்தமாச்
சாங்கியத்தை யோதிடுந் தவத்துளோ ருரைப்பரால்.

(இ-ள்.) தீங்கு இயற்றுகின்ற—தீமைகளைச் செய்வனவான—தீவினைத் திறங்கள் போலவே—பாவவினைகளின் விதங்களைப்போலவே—ஈங்கு இயற்றுகின்ற=இங்கே (கர்மாதிகாரிகளானபுருஷராற்) செய்யப்படுவனவான—நல்வினைத் திறங்கள் யாவையும்=புண்ணிய வினைகளின் விதங்களனைத்தையும்—இயற்றல் இன்றி விட்டு இருத்தலே அருத்தமா=(பந்தவேதுவாவதால் அந்தக்கரண சுத்தியில்லாத கர்மாதிகாரிகளாகிய புருஷரும்) அநுஷ்டியாமற் பரித்தியாகஞ் செய்திருத்தலே(சந்நியாச, தியாகசப்தங்களின்)பொருளாக—சாங்கியத்தை ஓதிடும்—சாங்கியசாஸ்திரத்தைப்படிக்கும்--தவத்துளோர் உரைப்பர்=தவத்தினையுடைய விவேகிகள் கூறுவர்.—எ-று.

ஆங்கு, ஆல்-அசைநிலைகள். 'நல்வினைத்திறங்கள்'—நித்தியம், நைமித்திகம், காமியம், பிராயச்சித்தமுதலியவை. (௪)



[இனிப் பூர்வமீமாஞ்சகருடையபட்சங் கூறுகின்றார்.]

ஞானகார ணங்களாத லாலியாக நற்றவந்
தானமோ டிகத்தலைத் தகாமைகூறு வாருள
ரானகார ணத்தினா லறிந்தடங்கி னார்க்கலா
லீனமாகு மேனையோர்க் கிவற்றைவிட் டிருத்தலே.

(இ-ள்.) ஞானகாரணங்கள் ஆதலால்=(அந்தக்காண சுத்திவாயிலாகவிவிதிஷைக்கும்,)ஞானத்திற்குங் காரணங்களாமாதலால்—யாகம் நல் தவம் தானமோடு இகத்தலை=எக்ஞம், தவம், தானரூபங்களான கர்மங்களின் பரித்தியாகத்தை—தகாமை கூறுவார் உளர்=தகாததென்றுகூறுவாருமுளர்.—[இரண்டாவதுபட்சமே எனதுநிச்சயமென ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.] ஆன காரணத்தினால்=(பூர்வமீமாஞ்சகர்) அங்ஙனங் கூறுமேதுவினால்,—அறிந்து அடங்கினார்க்கு அலால்=அறியவேண்டுவதை யறிந்து கிருதகிருத்தியராயினோர்க்குக் கூடுமேல்லாமல்—ஏனையோர்க்கு=மற்றையருக்கு—இவற்றை விட்டு இருத்தல் ஈனம் ஆகும்=எக்ஞம், தவம், தானங்களைப் பரித்தியாகஞ் செய்திருத்தல் கூடாது.—எ-று. ஏகாரம்-ஈற்றசை. (௫)

[மேலும் தமது மதத்தையே ஸ்ரீ பகவான் வற்புறுத்துகின்றார்.]

[வேறு.]

தியாக மூன்று வகைப்படுஞ் செப்பக்கே
ளியாக முந்தவந் தானமு மென்றிவை
மயா லறுக்கு மனத்தினை யாதலா
லயா வுரைக்கில் விடுகை யடாததால்.

(இ-ள்.) தியாகம் மூன்று வகைப்படும்=தியாகமானது மூவித மாகச் சொல்லப்படும்;—செப்பக் கேள்=(அந்தத் தியாகவிஷயமான) மூவகையை இனி ௮-வது, ௯-வது செய்யுட்களிலருளிச்செய்ய நீகேட்பாய்.—யாகமும் தவம் தானமும் என்ற இவை=எக்ஞம், தவம், தானம் என்றுசொல்லப்படுகின்றவிவை—மனத்தினை மயால் அறுக்கும் =(பயனைவிழைதலில்லாத புருஷரின்) அந்தக்கரணத்தைப் பாவனஞ் செய்யாநிற்கும்; -ஆதலால் = அக்காரணத்தினால், — அய்யா=அருச்சுனா—உரைக்கில்=சொல்லில்,—விடுகை அடாதது=(கர்மங்களைப்) பரித்தியாகஞ்செய்தல் கூடாது.—எ-று. ஆல்-அசைநிலை.

மயல் எ-து, தொடைநோக்கி, 'மயால்' என நீட்டல் விகாரம் பெற்றது. ஐயா எ-து, போலியாய் இடைகுறைந்து, 'அயா' எனவும் நின்றது. 'தியாக மூன்றுவகைப்படும்' எ-து, தாமஸ, ராஜஸ, சாத்துவிகபேதத்தால் என்க. (௬)

[பிரதிக்ஞைசெய்த விஷயத்தை உபசம்மரிக்கின்றார்.]

**என்ன செய்வ தெனிலிவ் வினைகளாற்**
**பின்னை யெய்தும் பெரும்பய னாவது**
**தன்னை விட்டுச் செயத்தகு மென்பது**
**முன்னை யோர்க்கு மெனக்கு முடிவரோ.**

(இ-ள்.) என்ன செய்வது எனில்=பின்னை எத்தன்மையாகஅவ் வெக்ஞாதிகளை அதிகாரிகள் செய்யவேண்டுவதென்று நீ கேட்கில்,—இவ்வினைகளால் = இவ்வெக்ஞாதி கர்மங்களால்—பின்னை எய்தும்= மறுமைக்கண்ணே பொருந்தாநிற்கும்—பெரும் பயனாவது தன்னை விட்டு = சுவர்க்காதிபலன்களையும், (கர்த்திருத்துவாபிமானத்தையும்) பரித்தியாகஞ்செய்து—செயத்தகும் என்பது=(அவ்வெக்ஞாதிகர்மங்கள்) செய்ய யோக்கியமாமென்பது — முன்னையோர்க்கும் எனக்கும் முடிவு = பூர்வாசாரியர்கட்கும், பரமேசுரனான எனக்கும் அபிமதசித்தாந்தமாம்.—எ-று. அரோ-அசைநிலை. (௭)

[இவ்வத்தியாயத்தின் ஐந்தாஞ் செய்யுளிற் பூர்வமருளிச்செய்த தமது பட்சத்தை இதுபரியந்தம் நாட்டி இனி நான்காஞ் செய்யுளிற் பூர்வமருளிச்செய்த பரபட்சத்தை நிஷேதஞ் செய்தற்கு ஸ்ரீ பகவான் ஆரம்பிக்கின்றார்.]

**நித்த மாய வினையி னெறியினை**
**மத்தர் போல வொருவன் மயக்கினாற்**



**பித்த னாய்விடு கின்றவப் பெற்றியைச்**
**சித்த தாமதத் தியாகமென் கின்றதே.**

(இ-ள்.) நித்தம் ஆய வினையின் நெறியினை=நித்தியமாகிய கர்மத்தினெறியை—மத்தர்போல = உன்மத்தனைப்போல—ஒருவன் மயக்கினால்=ஓர் புருஷனானவன் அஞ்ஞானத்தினால்—பித்தன் ஆய் விடுகின்ற அப்பெற்றியை= * பிராந்திஞானமுடையவனாய்ப் பரித்தியாகஞ்செய்கின்ற வத்தன்மையை—சித்த = கீர்த்தியையுடைய அருச்சுனா—தாமதத்தியாகம் என்கின்றது = தாமஸத்தியாகமென்று சாஸ்திரங் கூறுகிறது.—எ-று.

இப்படிப்பட்ட விபரீதஞானமானது சாங்கியநூலோர்க்குளதாம்; அவர்களதபிப்பிராயம்; நித்தியகர்மமும் இம்சாரூபமான தோஷமுடைமையின் துஷ்டமே: சர்வபூதங்களின் இம்சையைச் சுருதி நிஷேதித்திருத்தலால், எக்ஞஸ்தலத்தில் பசுவின் இம்சையும் நிஷித்தமே: அந்தக்கரணத்தின் சுத்தியோ இம்சையைப் பிரதானமாகவுடைய நித்திய கர்மத்தாலல்லாமற் காயத்திரிமுதலிய மந்திரஜபங்களாலேயே உளதாதல்கூடும்: மகாபாரதத்தும், மநுஸ்மிருதியிலும் இவ்வாறே கூறியிருக்கின்றதென்பது; இஃதத்தியந்தம் விருத்தமாம்; என்னை? சர்வபூதங்களையும் இம்சியாதேயென்னுஞ் சுருதி எக்ஞம், யுத்தமுதலியவையல்லாத ஸ்தலங்களில் சீவர்களின் இம்சையை நிஷேதித்தது. பாரத வசனமும், மநுவின் வசனமுமோ கேவலம் ஜபஎக்ஞத்தின் ஸ்துதி பரமாம். யாதொருவசனத்திற்கும் எக்ஞசம்பந்தியான இம்சை அதர்மரூபமென்னும் பொருளிற் றாற்பரியமில்லை; பின்னையோ, கேவலம் ஜபத்தின் ஸ்துதியிலேயே தாற்பரியமாம்;ஆதலின், சாங்கியர்க்கு வேத விகிதமான அக்கினிஹோத்திரமுதலிய நித்தியகர்மங்களில் நிஷித்தமென்பதுமுதலிய ஞானமானது விபரீதரூபமானமோகமே; இப்படிப்பட்டமோகவசத்தால் நித்தியகர்மங்களைப் பரித்தியாகஞ்செய்வது தாமஸத்தியாகமென்று சொல்லப்படும். மோகம் தமரூபமேயாகலின்என்க.

[இவ்வாறு தாமஸத்தியாகத்தை யருளிச்செய்து இனி ஸ்ரீ பகவான் இராஜஸத்தியாக மருளிச்செய்கின்றார்.]

---

* பிராந்திஞானம் = வேதவிகிதமான நித்தியகர்மத்தில் நிஷித்தமென்னும் ஞானமும், அநர்த்தத்திற் கேதுவல்லாததில் அநர்த்தவேதுவென்னும் ஞானமும், தர்மத்தில் அதர்மத்துவஞானமும், அநுஷ்டானஞ்செய்தற்பாலதன்கண் அநுஷ்டானஞ்செய்தற்பாலதன்றென்னும் ஞானமும் ஆம்.

**மெய் வருத்தமுண் டென்று விடுவதிங்**
**கைய மின்றி யிராசதத் தியாகமாங்**
**கை வரும்பல மாசைகை மாறவே**
**செய்வ செய்வது சத்துவத் தியாகமே.**

(இ - ள்.) மெய் வருத்தம் உண்டு என்று விடுவது=(நித்தியகர்மங்களைச் செய்வதாற்) சரீரவருத்தம் உளதாமென்று அவற்றைப் பரித்தியாகஞ் செய்வது—இங்கு ஐயம் இன்றி இராசதத் தியாகம் ஆம்= இங்கே சந்தேகமில்லாமல் ராஜஸத்தியாகமென்று சொல்லப்படும்; (இப்படிப்பட்ட ராஜஸத்தியாகத்தாற் புருஷனானவன் இனிக் கூறப் படுஞ்சாத்துவிகத்தியாகத்தின் ஞானநிஷ்டாரூபமான பயனை ஓர்போது மடையான் என்பதெஞ்சிநின்றது.)—[இப்போது சாத்துவிகத்தியா கத்தின் சொரூபமருளிச்செய்கின்றார்.] கைவரும் பலம் ஆசை கைமாறவே=(மறுமைக்கண்ணே) சித்தியாநிற்குஞ்சுவர்க்கமுதலிய பயனும், (கர்த்திருத்துவாபினிவேசரூபமான) சங்கமும் ஒழியும்படி பரித்தியாகஞ்செய்து—செய்வ செய்வது=செய்தற்பாலனவாகிய நித்தியகர்மங்களைச் செய்யாநிற்பது — சத்துவத்தியாகம் = சாத்துவிகத்தியாகம் (என்று பெரியோர்கள் அபிமதமாம்.)—எ-று. (௯)

[இவ்வாறான சாத்துவிகத்தியாகத்தில் மிகவும் நிஷ்டையுடைய புருஷனது இலக்கண மருளிச்செய்கின்றார்.]

**யாதின் மாட்டினு மையமொன் றின்றியே**
**தீதின் ஞானியுந் தியாகியு மானவன்**
**கோதி லின்பமுந் துன்பமுங் கூர்வினை**
**மீது வேண்டல்வேண் டாமையும் விடுமால்.**

(இ - ள்.) யாதின் மாட்டினும் = (வேதத்திற்சொன்ன விதி நிஷேதங்களுள்ளே) யாதொன்றனிடத்தும்—ஐயம் ஒன்று இன்றியே=சந்தேகஞ் சிறிதுமில்லாமலே—தீது இல் ஞானியும் தியாகியும் ஆனவன்=(குற்றமற்ற தத்துவஞானியும், சாத்துவிகத்தியாகியுமான புருஷன்—கோது இல்=குற்றமில்லாத — இன்பமும் = சுகமும்,— துன்பமும்= துக்கமும்,—கூர் வினைமீது=மிகுந்த (சோபனாசோபன) கர்மங்களில்—வேண்டல் வேண்டாமையும் விடும்=(முறையே) பிரியமும், அப்பிரியமும் விட்டிருப்பன்.—எ-று. ஆல்-அசைநிலை.

அந்தக்கரணசுத்திவாயிலாக ஆன்மசாட்சாத்காரத்திற் கேதுவாவதால் நித்தியகர்மத்தைச் சோபனகர்மம் எ-ம், அஞ்ஞானிக்குப் பந்தத்



திற்கேதுவாவதாற் காமியகர்மத்தையும், நிஷித்தகர்மத்தையும் அசோபனகர்மம் என்றுங்கூறுவர்; அல்லது, 'கோதிலின்பமுந்துன்பமுங்கூர் வினை' எ-து, உஷ்ணகால, சீதகாலத்திற்செய்யும் பிராதக்கால, மத்தியானகால ஸ்நானாதிகர்மங்களை எனினுமமையும். (௧௦)

[கர்மப்பிரவிர்த்திக்கேதுவான இராகத்துவேஷாதிகளில்லாமையினால்ஞானிக்குச்சர்வகர்மங்களின்பரித்தியாகங்கூடும்;அஞ்ஞானிக்குச் சர்வகர்மங்களின்பரித்தியாகங்கூடாதென்பதில் ஸ்ரீ பகவான் ஏதுவை யருளிச்செய்கின்றார்.]

**யாக்கை யோடு மிசையி லிருவினை**
**நீக்க லாவன வல்ல நிலத்திடை**
**வீக்க மாய வினைப்பயன் வீடினார்**
**போக்க லாவினை யாவையும் போக்கினார்.**

(இ-ள்.) நிலத்திடை=இப்பூமியின்கண்ணே (ஒருவர்)—யாக்கையோடும் இசையில்=தேகத்தோடுங் கூடியிருப்பாராயின்,—இருவினை நீக்கலாவன அல்ல=(புண்ணியபாவமென்னும்) இருவினைகளும் (அவரால் நிச்சேஷமாகப்) பரித்தியாகஞ் செய்யப்படுவனவல்ல;—(இக்காரணத்தினால்) வீக்கம் ஆய வினைப்பயன் வீடினார்=பந்தத்திற்கேதுவாகிய கர்மத்தின்பலனைத் தியாகம்பண்ணின அஞ்ஞானிகளும்—போக்கலா வினை யாவையும் போக்கினார்=தியாகஞ்செய்யக்கூடாத கர்மங்களனைத்தையுந் தியாகஞ்செய்தவர் (என்றே சொல்லப்படுவர்.)—எ-று.

'யாக்கை யோடு மிசையி லிருவினை, நீக்க லாவன வல்ல' என்று இங்கே கூறினதுபோலவே, ௩-ம் அத்தியாயத்தில் ௬-ம் செய்யுளில், "ஒருவருமொருபொழு தினுமோர்காலமு, மிருவகை வினைசெயாதவர் களில்லை" என்று கூறியிருப்பதுகாண்க. கர்மகர்த்தாவாய், அஞ்ஞானியாகிய புருஷனைத் தியாகியென்று சொன்னது தியாகசப்தத்தின் கௌணவிருத்தியினால் எ-ம், தேகாபிமானரகிதனான பரமார்த்ததரிசியைத் தியாகியென்று சொல்லுவது தியாகசப்தத்தின் முக்கிய விருத்தியால் எனவுங்கொள்க. (௧௧)

[கௌணசந்நியாசி, முக்கியசந்நியாசி இருவர்க்குங் கர்மபலத்தியாகத்தன்மையானது சமமாகவே இருக்க கௌணத்தன்மை, முக்கியத்தன்மை வேறே என்ன பலவிசேஷத்தால் அவரிடத்துண்டென்னும் அருச்சுனன் சங்கைக்கு அவ்விருவரிடத்துமுளவாகும் பலவிசேஷத்தை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

இன்னாதனவு மினியனவு மிரண்டுங்கூடி யிசைந்தவுமாய்
முன்னாநின்ற வினைமூன்று மவற்றால்வந்த முடிபொருளும்
பொன்னானதுவும்பணியும்போலிருக்குமிந்தப் பொய்ம்மெய்யை
யுன்னாதவர்க்கேயுள்ள திவையுணர்ந்தோர்க்குளவா யுதியாவால்.

(இ - ள்.) இன்னாதனவும் = பாவமும்,—இனியனவும் = புண்ணியமும்,—இரண்டுங்கூடி இசைந்தவும் ஆய் = மிசிரமுமாய்—முன்னாநின்ற வினை மூன்றும் = கருதாநின்ற மூவிதகர்மங்களும், - அவற்றால் வந்த = அக்கர்மங்களாலுளவாகின்ற—முடி பொருளும் = முடிந்த பயனாகிய அநிஷ்டம், இஷ்டம், மிசிரங்களான சரீரப்பிராப்திகளும்—பொன்னானதுவும் பணியும் போல் இருக்கும் = பொன்னும், பூஷணமும்போல (க்காரியகாரணரூபங்களாக) இருக்கும்;—இந்தப் பொய் = இம்மூவகைக் கர்மங்களின்பயனான அநிஷ்டம், இஷ்டம், மிசிரமென்னும் இந்திரஜாலம்போன்ற சரீரப்பிராப்திகளானவை—மெய்யை உன்னாதவர்க்கே உள்ளது = ஆன்மாவைச் சாட்சாத்காரமாக வறியாத கௌணசந்நியாசிகட்கே (* காரணநசியாமையின் மரணத்தின் பின்னர்) உள்ளனவாம்.—உணர்ந்தோர்க்கு = (ஆன்மாவைச் சாட்சாத்காரமாக) அறிந்த முக்கிய சந்நியாசிகட்கு—இவை உளவாய் உதியாவால் = (காரணநசித்துப்போனமையின்) அநிஷ்டாதிரூபச் சரீரப்பிராப்திகள் மீண்டுள்ளனவாய்த் தோற்றாவாம்.—எ-று. ஆல்-அசை.

அநிஷ்டபயன் எ-து, நரகம், திரியக்காதிசரீரப்பிராப்தி. இஷ்டபயன் எ-து, தேவாதிசரீரப்பிராப்தி. மிசிரபயன் எ-து, மநுடசரீரப்பிராப்தி. அநிஷ்டம், இஷ்டம், மிசிரங்களானசரீரங்கள் அவித்தையினாற்பண்ணப்பட்டு இந்திரஜாலம்போலப் பிரதீதிமாத்திரத்திருப்பன ஆதலால், 'பொய்' எ-ம், அவை அவித்தையினாலுண்டாய் அவித்தையாசிரிதமாயிருத்தலானும், ஆன்மாசிரிதமாய் வாஸ்தவமாக இல்லாமையினானும், 'மெய்யை, யுன்னாதவர்க்கே யுள்ளதிவை யுணர்ந்தோர்க்குளவா யுதியாவால்' என்றுங் கூறினார். (௧௨)

[அஞ்ஞானிக்குக் கர்மத்தியாகங் கூடாதென்பதில் ஏது என்னையோவென்னும் அருச்சுனன் சங்கைக்கு கர்மத்திற் கேதுக்களாகிய அதிஷ்டான்முதலிய ஐந்தன்கணுள்ள தாதான்மியாபிமானமே ஏதுவாமென்னும் பொருளை ஸ்ரீ பகவான் அருளிச்செய்யத் தொடங்கிக் கர்மங்களினேதுக்களான அதிஷ்டானாதிகளை முன்னாருளிச்செய்கின்றார்.]

* காரணம் = அவித்தை, காம, கர்மங்கள்.



[வேறு.]

ஓங்கிய வுலகினி லுயர்ந்த நன்மையுந்
தீங்கின வாம்வினை யாவுஞ் செய்தற்குச்
சாங்கிய நூலிலே யுரைத்த சாதன
மீங்கிவை யைந்தையு மெடுத்துக் கூறுவாம்.

(இ - ள்.) ஓங்கிய உலகினில் = (தேவருமனிதராய்வர விரும்பும் படியான) உயர்ச்சிபொருந்திய இவ்வுலகின்கண்ணே — உயர்ந்த நன்மையும் = மேன்மையான புண்ணியமும்,—தீங்கின ஆம் வினை யாவும் = தீமையான பாவமுமாகிய அனைத்தும்—செய்தற்கு = செய்வதற்கு—சாங்கிய நூலிலே = (சர்வகர்மங்களின் சமாப்தியுடைய) வேதாந்தசாஸ்திரத்திலே—உரைத்த சாதனம் இவை ஐந்தையும் = கூறிய சாதனங்களாகிய இவ்வைந்தனையும்—ஈங்கு எடுத்துக் கூறுவாம் = இங்கே நீ அறியும்படி இனி எடுத்துக்கூறுவாம்.—எ-று.

அத்துவிதீயமான ஆன்மப்பிரதிபாதனத்திலேயே தாற்பரியமுடைய வேதாந்தசாஸ்திரத்தில் உலகப்பிரசித்தமான கர்மத்தின் ஐந்து காரணங்களைப் பிரதிபாதிப்பது அசங்கமான ஆன்மாவினிடத்திற்கர்ம சம்பந்தமின்மையைப் பிரதிபாதித்தற்பொருட்டு அநுவாதஞ்செய்ததென்றறிக. (௧௩)

[அந்த ஐந்துகாரணங்கள் எவையென்னும் அருச்சுனன் சங்கைக்கு அவற்றின் சொரூபங்களை அருளிச்செய்கின்றார்.]

இருப்பிட மாமுடம் பியற்று மாருயிர்
கருத்தினை முதலிய கரணங் காற்றினால்
விருப்பொடு வருந்தொழி லிவற்றின் மேலரு
ளருத்தமாந் தெய்வமொன் றாக வைந்தரோ.

(இ-ள்.) இருப்பிடம் ஆம் உடம்பு = அதிஷ்டானமாகிய தூலசரீரமும்,—இயற்றும் ஆர் உயிர் = (கர்மங்களைச்) செய்யாநிற்கும் அகங்காரரூபமான கர்த்தாவும்;—கருத்தினை முதலிய கரணம் = மனமுதலிய நாநாப்பிரகாரமான கரணங்களும்,— காற்றினால் விருப்பொடு வரும் தொழில் = பிராணாதிவாயுக்களால் விருப்பத்தோடு வேறுவேறாக வருஞ்சேஷ்டைகளும்,—இவற்றின்மேல் அருள் = இவைகளிடத்து (அததற்குத்தக்கபடி கிரமமாக) அநுக்கிரகம் பண்ணுகின்ற—அருத்தம் ஆம் தெய்வம் ஒன்று = பொருள்களாகிய தெய்வங்களின் வகையொன்றும்—ஆக ஐந்து = ஆக இவ்வைந்துங் (கர்மங்களின் காரணங்களாம்.) —எ-று. அரோ-அசைநிலை.

இச்சை, துவேஷம், சுகம், துக்கம், ஞானமுதலிய தர்மங்களின் அபிவியக்திக்காசிரயமான தூலசரீரத்திற்கு அதிஷ்டானமென்று பெயர். நான் கர்த்தாவென்னும் அபிமானமுடைய ஞானசக்திப்பிர தானமான அபஞ்சீகிருதபஞ்சமகாபூதங்களின் காரியரூபமான அகங் காரத்திற்குக் கர்த்தாவென்றுபெயர். அபஞ்சீகிருதபஞ்சமகாபூதங்களி னின்றும் உற்பந்நமாய்ச் சப்தாதிவிஷயங்களின் உபலப்திக்குச் சாதன ரூபமான சுரோத்திராதி ஞானேந்திரியங்களைந்தும், வாக்காதி கர்மேந் திரியங்களைந்தும், மனம், புத்தி இரண்டும் ஆகப் பன்னிரண்டிற்குங் கரணமென்றுபெயர். கிரியாரூபமான பிராணாதிகட்குச் சேஷ்டையெ ன்றுபெயர். பிராணாதிரூபமான சேஷ்டைகள் எப்படி உள்ளனவெனின் ஸ்தானபேதத்தாலும், கிரியாபேதத்தாலும் வேறுவேறாயுள்ளன. பூர்வஞ்சொன்ன சரீரரூப அதிஷ்டானமும், அகங்காரரூபமான கர்த் தாவும், பன்னிரண்டு பிரகாரமான கரணங்களும், பிராணாதிரூபமான சேஷ்டைகளும் ஆகிய இவைகளிடத்தநுக்கிரகம்பண்ணாநிற்குந் தேவ தைகள் எவையென்னில்? சரீரரூபமான அதிஷ்டானத்திற்குப் பிருதி வியேதேவதை. கர்த்தாரூபமான அகங்காரத்திற்கு உருத்திரன் தேவ தையென்று புராணாதிகளிற்பிரசித்தம். இந்தப்பிரகாரம், சுரோத்திர முதலிய கரணங்கட்கு அதிஷ்டானதேவதைகளும் பிரசித்தமே; அவற் றில், சுரோத்திரம், துவக்கு, சட்சு, ரசனம், கிராணம் என்னும் ஞா னேந்திரியங்களைந்திற்கும் முறையே திக்கு, வாயு, சூரியன், வருணன், அசுவநி என்னும் இவர்கள் தேவதைகள். வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் என்னுங் கன்மேந்திரியங்களைந்திற்கும் முறையே அக்கினி, இந்திரன், உபேந்திரன், மித்திரன், பிரஜாபதி என்னும் இவர்கள் தேவதைகள். மனம், புத்தி இரண்டிற்கும் முறையே சந்திரன், பிரு கஸ்பதி என்னும் இவர்கள் தேவதைகள். பிராணன், அபானன், வியா னன், உதானன், சமானன் என்னுஞ் சேஷ்டாரூபமான பஞ்சப்பிரா ணன்கட்கும் முறையே சத்தியோஜாதன், வாமதேவன், அகோரன், தற் புருஷன், ஈசானன் என்னும் இவர்கள் தேவதைகள்; இவை புராணாதி களிற் பிரசித்தமே. (கச)

[முற்செய்யுளில் அதிஷ்டானமுதலிய ஐந்துகாரணங்கள் அருளிச் செய்யப்பட்டன. இனி இச்செய்யுளில் ஸ்ரீ பகவான் அவ்வைந்தனிட த்தே சர்வகர்மங்களின் காரணத்தன்மையை அருளிச்செய்கின்றார்.]

வாக்கினா லாதன்மெய் மனத்தி னாதறம்
யாக்கையா லாதலிவ் வுலகில் யாவரும்



வீக்குவார் சிலையினாய் வினை யிரண்டிலொன்
றாக்குநா ளிங்கிவை யைந்தும் வேண்டுமால்.

(இ-ள்.) வீக்கு வார் சிலையினாய் = (சத்துருக்களின் வலியை) அழிக்கும் நீண்டவில்லையுடைய அருச்சுனா—வாக்கினாலாதல் = வாக் கினாலாவது,—மெய் மனத்தினாதல் = மெய்ம்மையான மனத்தினாலா வது,—தம் யாக்கையாலாதல் = தமது சரீரத்தினாலாவது—இவ்வுல கில் யாவரும் = இவ்வுலகின்கண்ணே மநுடர்யாவரும்—வினை இரண் டில் ஒன்று ஆக்கும் நாள் = (புண்ணியபாவமென்னும்) இரண்டு வினை களில் ஒன்றை ஆரம்பிக்குங்காலையில்—இங்கு இவை ஐந்தும் வேண் டும் = இவ்விடத்து முன் சொல்லிய அதிஷ்டானமுதலிய ஐந்துகார ணங்களும் வேண்டும்.—எ-று. ஆல்-அசைநிலை. (கரு)

[அதிஷ்டானமுதலிய ஐந்தனிரூபணத்தின் பலத்தை இப்போது ஸ்ரீ பகவான் ஆன்மாவைக் கர்த்தாவாக எண்ணாநிற்குமூடனை நிந்திப் பதுவாயிலாக வருளிச்செய்கின்றார்.]

இவ்வகை யேவரும் வினை யிரண்டையு
மெய்வகை யாகயா னன்றி வேறிலை
செய்வகை யானெனச் சிந்தை மேயினா
னுய்வகை யுணர்கிலா னுணர்வு மாய்ந்துளான்.

(இ-ள்.) இவ்வகையே வரும் = முன்னேசொல்லியபடியே (அதி ஷ்டானமுதலிய ஐந்துகாரணங்களால்) உண்டாகாநின்ற—வினை இர ண்டையும் = புண்ணியபாவங்களிரண்டனையும் — செய் வகையான் = செய்யாநிற்குந்தன்மையுடையவன்—மெய் வகை ஆக = உண்மையாக —யான் அன்றி வேறு இலை என = யானேயல்லாமல் அந்நியமில்லை யென்று — சிந்தை மேயினான் = (அசங்கோதாசீனமாத்திரமான ஆன் மாவைக் கர்த்தாவாக) அறியாநிற்பவனானவன் — உய்வகை உணர்கி லான் = தான் உய்யும்படிக்கு (உள்ளபடியே ஆன்மாவை) அறியான்; —(ஏனெனில்) உணர்வு மாய்ந்துளான் = (குருவினாலும், சாஸ்திரத்தி னாலும் உளதாகாநிற்கும்) விவேகஞானமின்மையன் (ஆதலின்.)—எ-று.

'உணர்வு மாய்ந்துளான்' எ-து, வாஸ்தவமாக ஆன்மாவை அறி யாததற்கேது கூறினது.

ஜலத்திற் பிரதிபிம்பித்துச் சலமுதலியவற்றைப் பிரகாசிப்பிக்குஞ் சூரியன் அவைகட்கு வேறாக இருப்பினும் அச்சலத்தோடுகூட அச் சூரியனது தாதான்மியபாவகற்பனைசெய்து மூடபுருஷர் எப்படிச்

சலத்தின் சலனத்தாற் சூரியனைச் சலிப்பவனாகப் பார்க்கின்றனரோ அப்படி அதிஷ்டானாதிகளைப் பிரகாசிப்பியாநிற்கும் அசங்காத்விதியமான ஆன்மாவிற்கும் அவ்வதிஷ்டானாதிகளோடுகூடத் தாதான்மியபாவத்தைக் கற்பனைசெய்து அதிஷ்டானாதிகளின் கர்மங்களை அசங்கமாகிய ஆன்மாவின்கண்ணே ஆரோபணஞ்செய்து யாவனொருவன் நானே கர்மங்களின் கர்த்தாவாகிறேனென்று சர்வத்திற்குஞ் சாட்சிரூபமான ஆன்மாவையும், கிரியையின் ஆசிரயரூபமாகப் பார்க்கின்றனனோ அவன் ஜநநமரணங்களையடைந்து அநிஷ்டம், இஷ்டம், மிசிரம் என்னுங் கர்மபலன்களையே அநுபவியாநிற்பனென்பது கருத்து. (௧௬)

[“ஓங்கிய வுலகினில்” என்பதுமுதலிய நான்கு செய்யுட்களால் “இன்னதனவுமினியனவு மிரண்டுங்கூடியிசைந்தவுமாய், முன்னாநின்ற வினைமூன்று மவற்றால்வந்தமுடிபொருளும், பொன்னானதுவும்பணியும்போ லிருக்குமித்தப்பொய்மெய்யை, யுன்னாதவர்க்கேயுள்ளது” என்னுஞ் செய்யுளின் முன்றொடருக்கு வியாக்கியானஞ்செய்து இப்போது, ‘இவையுணர்ந்தோர்க் குளவாயுதிபாவால்’ என்னும் பின்றொடருக்கு ஸ்ரீபகவான் இந்தஒருசெய்யுளால் வியாக்கியானஞ்செய்கின்றார்.]

[வேறு.]

யாவனொருவன் றன்னுடம்பை யானென்றிருக்கு மியல்
பொழிந்தான், யாவனொருவன் றன்கரணம் யாதொன்றோடும்
விழைதலிலா, னவனவனிவ் வுலகத்தை யடையக்கொன்றா
னாயினுமோர், பாவமில்லை யவன்கொன்ற பழியுமில்லை பார்
மன்னா.

(இ-ள்.) யாவனொருவன் = எந்த வித்துவானானபுருஷன்—தன் உடம்பை = தனதுதேகத்தை—யான் என்று இருக்கும் இயல்பு ஒழிந்தான் = நானென்றுகருதாநிற்கும் இலக்கணமான (கருத்திருத்துவாபினிவேசம்) நீங்கினனோ,—யாவனொருவன் = எவனொருவன்—தன் கரணம் = தன்னுடைய அந்தக்கரணமானது — யாதொன்றோடும் = எவ்வகைப்பட்ட கர்மங்களோடும்—விழைதல் இலான் ஆவன் = சம்பந்தப்படுதலில்லாதவனாவனோ — அவன் = அந்த வித்துவானான புருஷன்—இவ்வுலகத்தைஅடையக்கொன்றானாயினும் = (லௌகிகதிருஷ்டியால்) இவ்வுலகமுழுதுஞ் சம்மரித்தானானாலும்—ஓர் பாவம் இல்லை = (ஆன்மா அசங்கனென்னும் பரமார்த்ததிருஷ்டியாற் சம்மரித்திலனாதலால் அதனாலுளதாகும்) ஒரு பாவமுமில்லை,—அவன் கொன்ற பழியும் இல்லை = அவன் கொன்றதனாலுளதாகும் நிந்தையுமில்லை:—



பார் மன்னா = (இப்படிப்பட்ட ஞானத்தின் மகிமையை) அருச்சுனா காண்பாய்.—எ-று.

‘யாவனொருவன்’ எ-து, முற்செய்யுளிற்கூறிய துன்மதிபுருஷனினும் விலட்சணனான பிரமான்மசாட்சாத்காரமுடைய புருஷனை. ‘தன்னுடம்பை யானென்றிருக்கு மியல்பொழிந்தான்’ எ-து, பிரமான்மசாட்சாத்காரமுடைய புருஷனுக்கு நான் கர்த்தாவென்னும் விருத்தி ஓர்போதும் எழாமலிருப்பதை. எப்படியும் விவகாரகாலத்தில் [வ] பாதிதாநுவிருத்தியாகக் கர்த்திருத்துவப்பிரதீதியுளதாம்; அப்படியானாலும் தத்துவசாட்சாத்காரமுடையவன் விசாரத்தால் தனதான்மாவின்கண்ணே அக்கர்த்திருத்துவத்தை அங்கிகரியான்; பின்னையோ, பூர்வஞ்சொன்ன அதிஷ்டானமுதலிய ஐந்தன்கண்ணேயே அக்கர்த்திருத்துவத்தை அங்கிகரிப்பன். அவ்விசாரமாவதெவ்வாறேயெனின்? சர்வான்மரூபமான என்னிடத்தே அவ்வதிஷ்டானாதிகளைந்தும் மாயாகற்பிதங்கள்: கற்பித சம்பந்தத்தால் சொப்பிரகாச அசங்கசைதந்நியனான என்னாற்பிரகாசியாநின்ற அவ்வதிஷ்டானாதிகளைந்துமே சர்வகர்மங்களின் கர்த்தாவாம்: அசங்கனான நான் ஓர்போதும் அக்கர்மங்களின் கர்த்தாவன்று; பின்னையோ, ஆன்மதேவனான நான் அதிஷ்டானாதி ஐந்து கர்த்தாக்களுக்கும், அந்த வியாபாரங்களுக்கும் சாட்சிரூபன், கிரியாசக்தியுடைய பிராணரூபவுபாதியினின்றும், ஞானசக்தியுடைய அந்தக்கரணரூபவுபாதியினின்றும் விடுபட்டவன், சுத்தன், சர்வகாரியகாரணசம்பந்தரகிதன், கூடஸ்தநித்தியன், சர்வதோஷரகிதன், ஜநநமரணாதி சர்வவிகாரங்களுமின்மையன்; இவ்வாறான நமது சொரூபத்தைச் சுருதி, ஸ்மிருதிகளும் பிரதிபாதனஞ்செய்கின்றன; இதனால் அசங்கனான நான் கர்மங்களின் கர்த்தாவல்லன் எனல் ஆம்; இவ்வாறான விசாரத்தால் தத்துவசாட்சாத்காரமுடைய புருஷன் அசங்கமான ஆன்மாவைக்கர்த்தாவாகக்கருதுகிலன்; பின்னையோ, பூர்வஞ்சொன்ன அதிஷ்டானாதிகள் ஐந்தையுமே சர்வகர்மங்களின் கர்த்தாவாகக் கருதுகின்றனன். இக்காரணத்தினாலேயே தத்துவசாட்சாத்காரமுடைய புருஷனது அந்தக்கரணமானது இந்தக்கர்மத்தை நான் செய்வேன், கர்மபலனைப்புஜிப்பேன் என்றிவ்வாறு கர்த்திருத்துவ, போக்திருத்துவவாசனாரூபநிமித்தத்தாற் சநியாநின்ற அநுசந்தானரூபமான பற்றற்றிருத்தலின், ‘யாவனொருவன் றன்கரணம் யாதொன்றோடும் விழைதலிலானவன்’ என்றார். கர்த்திருத்துவ, போக்திருத்துவாநுசந்தானரூபமான பற்றினால் புண்ணியகர்மத்திற் சந்தோஷமும், பாவகர்மத்திற் பச்சாத்தாபமும் உளவாம். ஆன்மாவானது அகர்

சலத்தின் சலனத்தாற் சூரியனைச் சலிப்பவனாகப் பார்க்கின்றனரோ அப்படி அதிஷ்டானாதிகளைப் பிரகாசிப்பியாநிற்கும் அசங்காத்விதீய மான ஆன்மாவிற்தம் அவ்வதிஷ்டானாதிகளோடுகூடத் தாதான்மிய பாவத்தைக் கற்பனைசெய்து அதிஷ்டானாதிகளின் கர்மங்களை அசங்க மாகிய ஆன்மாவின்கண்ணே ஆரோபணஞ்செய்து யாவனொருவன் நானே கர்மங்களின் கர்த்தாவாகிறேனென்று சர்வத்திற்குஞ் சாட்சி ரூபமான ஆன்மாவையும், கிரியையின் ஆசிரயரூபமாகப் பார்க்கின்றனனே அவன் ஜநநமரணங்களையடைந்து அநிஷ்டம், இஷ்டம், மிசிரம் என்னுங் கர்மபலன்களையே அநுபவியாநிற்பனென்பது கருத்து. (கசு)

[“ஓங்கிய வுலகினில்” என்பதுமுதலிய நான்கு செய்யுட்களால் “இன்னதனவுமினியனவு மிரண்டுங்கூடியிசைந்தவுமாய், முன்னாநின்ற வினைமூன்று மவற்றால்வந்தமுடிபொருளும், பொன்னனதுவும்பணி யும்போ லிருக்கு மிந்தப்பொய்மெய்யை, யுன்னுதவர்க்கேயுள்ளது” என்னுஞ் செய்யுளின் முன்ளுடருக்கு வியாக்கியானஞ்செய்து இப்போது, ‘இவையுணர்ந்தோர்க் குளவாயுதிபாவால்’ என்னும் பின்றொடருக்கு ஸ்ரீபகவான் இந்தஒருசெய்யுளால் வியாக்கியானஞ்செய்கின்றார்.]

[வேறு.]

**யாவனொருவன் றன்னுடம்பை யானென்றிருக்கு மியல் பொழிந்தான், யாவனொருவன் றன்கரணம் யாதொன்றோடும் விழைதலிலா, னவனவனிவ் வுலகத்தை யடையக்கொன்றா னாயினுமோர், பாவமில்லை யவன்கொன்ற பழியுமில்லை பார் மன்னா.**

(இ-ள்.) யாவனொருவன் = எந்த வித்துவானானபுருஷன் — தன் உடம்பை = தனதுதேகத்தை — யான் என்று இருக்கும் இயல்பு ஒழிந்தான் = நானென்றுகருதாநிற்கும் இலக்கணமான (கருத்திருத்துவா பினிவேசம்) நீங்கினனே, — யாவனொருவன் = எவனொருவன் — தன் கரணம் = தன்னுடைய அந்தக்கரணமானது — யாதொன்றோடும் = எவ்வகைப்பட்ட கர்மங்களோடும் — விழைதல் இலான் ஆவன் = சம்பந்தப்படுதலில்லாதவனாவனோ — அவன் = அந்த வித்துவானான புருஷன் — இவ்வுலகத்தைஅடையக்கொன்றானாயினும் = (லௌகிகதிருஷ்டியால்) இவ்வுலகமுழுதுஞ் சம்மரித்தானானாலும் — ஓர் பாவம் இல்லை = (ஆன்மா அசங்கனென்னும் பரமார்த்ததிருஷ்டியாற் சம்மரித்திலனாதலால் அதனாலுளதாகும்) ஒரு பாவமுமில்லை, — அவன் கொன்ற பழியும் இல்லை = அவன் கொன்றதனாலுளதாகும் நிந்தையுமில்லை: —



பார் மன்னா = (இப்படிப்பட்ட ஞானத்தின் மகிமையை) அருச்சுனா காண்பாய். — எ-று.

‘யாவனொருவன்’ எ-து, முற்செய்யுளிற்கூறிய துன்மதிபுருஷனினும் விலட்சணனான பிரமான்மசாட்சாத்காரமுடைய புருஷனை. ‘தன்னுடம்பை யானென்றிருக்கு மியல்பொழிந்தான்’ எ-து, பிரமான்மசாட்சாத்காரமுடைய புருஷனுக்கு நான் கர்த்தாவென்னும் விருத்தி ஓர்போதும் எழாமலிருப்பதை. எப்படியும் விவகாரகாலத்தில் [வ] பாதிதாநுவிருத்தியாகக் கர்த்திருத்துவப்பிரதீதியுளதாம்; அப்படியானாலும் தத்துவசாட்சாத்காரமுடையவன் விசாரத்தால் தனதான்மாவின்கண்ணே அக்கர்த்திருத்துவத்தை அங்கீகரியான்; பின்னையோ, பூர்வஞ்சொன்ன அதிஷ்டானமுதலிய ஐந்தன்கண்ணேயே அக்கர்த்திருத்துவத்தை அங்கீகரிப்பன். அவ்விசாரமாவதெவ்வாறோவெனின்? சர்வான்மரூபமான என்னிடத்தே அவ்வதிஷ்டானாதிகளைந்தும் மாயாகற்பிதங்கள்: கற்பித சம்பந்தத்தால் சொப்பிரகாச அசங்கசைதந்நியனான என்னாற்பிரகாசியாநின்ற அவ்வதிஷ்டானாதிகளைந்துமே சர்வ கர்மங்களின் கர்த்தாவாம்: அசங்கனான நான் ஓர்போதும் அக்கர்மங்களின் கர்த்தாவன்று; பின்னையோ, ஆன்மதேவனான நான் அதிஷ்டானாதி ஐந்து கர்த்தாக்களுக்கும், அந்த வியாபாரங்களுக்கும் சாட்சிரூபன், கிரியாசக்தியுடைய பிராணரூபவுபாதியினின்றும், ஞானசக்தியுடைய அந்தக்கரணரூபவுபாதியினின்றும் விடுபட்டவன், சுத்தன், சர்வகாரியகாரணசம்பந்தரகிதன், கூடஸ்தநித்தியன், சர்வதொய்தரகிதன், ஜநநமரணாதி சர்வவிகாரங்களுமின்மையன்; இவ்வாறான நமது சொரூபத்தைச் சுருதி, ஸ்மிருதிகளும் பிரதிபாதனஞ்செய்கின்றன; இதனால் அசங்கனான நான் கர்மங்களின் கர்த்தாவல்லன் எனல் ஆம்; இவ்வாறான விசாரத்தால் தத்துவசாட்சாத்காரமுடைய புருஷன் அசங்கமான ஆன்மாவைக்கர்த்தாவாகக்கருதுகிலன்; பின்னையோ, பூர்வஞ்சொன்ன அதிஷ்டானாதிகள் ஐந்தையுமே சர்வகர்மங்களின் கர்த்தாவாகக் கருதுகின்றனன். இக்காரணத்தினாலேயே தத்துவசாட்சாத்காரமுடைய புருஷனது அந்தக்கரணமானது இந்தக்கர்மத்தை நான் செய்வேன், கர்மபலனைப்புஜிப்பேன் என்றிவ்வாறு கர்த்திருத்துவ, போக்திருத்துவவாசனாரூபநிமித்தத்தாற் சநியாநின்ற அநுசந்தானரூபமான பற்றற்றிருத்தலின், ‘யாவனொருவன் றன்கரணம் யாதொன்றோடும் விழைதலிலானவன்’ என்றார். கர்த்திருத்துவ, போக்திருத்துவாநுசந்தானரூபமான பற்றினால் புண்ணியகர்மத்திற் சந்தோஷமும், பாவகர்மத்திற் பச்சாத்தாபமும் உளவாம். ஆன்மாவானது அகர்

த்தா, அபோக்தா என்னுஞ் சாட்சாத்காரத்தால் கர்த்திருத்துவ, போக்திருத்துவமாகிய அபிமானம் நிவிர்த்தியானமையின் தத்துவத்தையறிந்த புருஷனுடைய புத்தியானது புண்ணியகர்மத்தாற் சந்தோஷத்தையும், பாவகர்மத்தாற் பரிதாபத்தையுமடையாதிருக்கிறது. எந்தத்தத்துவவித்தான புருஷனுக்கு அகம்பாவமில்லையோ? எந்தத் தத்துவவித்தினுடைய புத்தியானது பற்றுடையதாகவில்லையோ அவன் பூர்வஞ்சொன்ன துன்மதி புருஷரினும் விலட்சணன் எ-ம், சுமதி எ-ம், பரமார்த்ததரிசி என்றுஞ் சொல்லப்படுகிறான். ஆன்மாவைக் கேவலம் அகர்த்தாவாகவே பார்க்கிறான்: ஓர்போதும் ஆன்மாவைக் கர்த்தாவாகக் கருதுகிலன்; இப்படிப்பட்ட தத்துவவித்தான புருஷன் கர்த்திருத்துவாதி அபிமானத்தினபாவத்தால் அநிஷ்டம், இஷ்டம், மிசிரம் என்னும் மூவகையான கர்மத்தின்பயனை ஓர்போதுமடையான். இவ்வளவான கீதாசாஸ்திரத்தின்பொருளை ஸ்ரீ பகவான் இச்செய்யுளின் முற்பாதியாலருளிச்செய்து பிற்பாதியால் தத்துவஞானத்தின் மகிமை தோன்றத் தத்துவவித்தைத் துதிசெய்தனர்; அதில், 'இவ்வுலகத்தையடையக்கொன்றானாயினும்' என்று தத்துவவித்தினிடத்துக் கொலைக்கிரியையின் கர்த்திருத்துவமருளிச்செய்தது லௌகிகதிருஷ்டியினால். 'பாவமில்லை' என்று கர்த்திருத்துவம் நிஷேதஞ்செய்தது சாஸ்திரீயமான பாரமார்த்ததிருஷ்டியினால்; ஆதலால், 'கொன்றானாயினும் பாவமில்லை' என்னும் வசனங்கள் தம்மில் விரோதமாகா. இக்கீதாசாஸ்திரத்தினாதியில், "அறிவதுதான் கொல்லாதழி கொலையானது குறுகாது" என்னும் வசனங்களால் ஆன்மாவின்கண் கர்மத்தின் பற்றில்லாத தன்மையைப் பிரதிக்ஞைசெய்து, "ஊறுபடவொன்றினுளேபிறத்தல்பிறந்துளவாதல்" என்பனமுதலிய எதுரூபவசனங்களால் அந்தப்பிரதிக்ஞைசெய்த பொருளை உறுதிப்படுத்தி, "நில்லாவுடற்கேநின்றேயு நித்தியமாகியது நாசமில்லாதது" என்பனமுதலிய வசனங்களால் வித்துவானுக்குச் சர்வகர்மங்களின் அதிகாரநிவிர்த்தியைத் தொகுத்தருளிச்செய்யப்பட்டது; அந்தச் சர்வகர்மங்களின் அதிகாரநிவிர்த்தியையே மத்தியில் அவ்வப்பிரசங்கங்களால் விஸ்தாரமாகப் பிரதிபாதனஞ்செய்யப்பட்டது. இங்கே இவ்வளவே கீதாசாஸ்திரத்தின் பொருளென்பதைக் காட்டுதற்பொருட்டு, 'பாவமில்லையவன்கொன்றபழியுமில்லை' என்னும் வசனங்களால் சர்வகர்மாதிகாரநிவிர்த்தியை உபசம்மாரஞ்செய்தனர் என்றறிக. (௧௭)

[பூர்வம் அதிஷ்டானாதிகள் ஐந்திற்குமே சர்வகர்மங்களின் எதுத்துவமுண்டு எ-ம், ஆன்மாவுக்கு எவ்விதகர்மங்களின் சம்பந்தமுமில்லை



எ-ம் அருளிச்செய்து இப்போது பூர்வமருளிச்செய்த பொருளையே அதற்கு விலட்சணரீதியாக வர்ணிக்கின்றார்.]

**அறிவுமறியப் படும்பொருளு மறிவானொருவன் றானும்மாய்**
**நெறியில்வினைகள் விதிக்கின்ற விதியினிலைமை நிற்பதுதான்**
**செறியுங்கருமஞ் செய்வானுஞ் செய்தற்குரிய கரணமுமாய்க்**
**குறியில்வினைகண் முடிவிருப்ப தின்னுஞ்சிலயாங் கூறக்கேள்.**

(இ-ள்.) அறிவும் = ஞானமும், — அறியப்படும் பொருளும் = ஞேயமும், — அறிவான் ஒருவன் தானும் ஆய் = பரிக்ஞாதாவுமாய் — நெறியில் = (இம்மூன்று) வழியில் — வினைகள் விதிக்கின்ற = கர்மங்களைவிதியாநின்ற — விதியின் நிலைமை நிற்பது = விதியினியல்பானது நிற்கின்றது. — செறியும்கருமம் = (கர்த்தாவுக்குக்கிரியையினால்) பொருந்தும்படியான கர்மமும், — செய்வானும் = (கிரியைகளைச் செய்பாநிற்கும்) கர்த்தாவும், — செய்தற்கு உரிய கரணமும் ஆய் = செய்தற்குரியனவான கரணங்களுமாய் — குறியில் = (இம்மூவகைக்) குறியில் — வினைகள் முடிவு இருப்பது = கர்மங்கண் முடிந்திருக்கின்றன; — இன்னும் சில யாம் கூறக் கேள் = மேலும் (நீ நுண்மையாக அறியத்தக்கவை) சிலவுள; அவற்றையும் யாங்கூறக்கேட்பாய். — எ-று.

தான், இரண்டிடத்தும் அசைநிலைகள். ஞானம் = இஃதிஷ்டசாதனமென்னும்போதம். ஞேயம் = இஷ்டசாதனரூபமான கர்மம். பரிக்ஞாதா = ஞானத்திற்காசிரயம். ஞானமுதலிய மூன்றுமே கர்மப்பிரவிர்த்திக்கேதுவாமென்பார், 'நெறியில்வினைகள் விதிக்கின்ற விதியினிலைமை நிற்பது' என்றார்; இது செய்யுளின் முற்பாதியின்பொருள். இனிப் பிற்பாதியின்பொருள்; 'கரணம்' எ-து, சுரோத்திரமுதலிய புறக்கரணங்களையும், மனம், புத்திமுதலிய உட்கரணங்களையுமாம்; இந்தக் கரணம், கர்மம், கர்த்தா என்னு மூன்று காரகங்களுள், சம்பிரதானம், அபாதானம், அதிகரணம் என்னு மூன்று காரகங்களையும் அடக்கி ஸ்ரீ பகவான் இங்கே கர்த்தா, கர்மம், கரணம் எனமூவகையாக வருளிச்செய்தனர்; இக்காரகங்கள் நான்காமத்தியாயத்தின் ௧௮-ம் செய்யுளின் உரையிற்காண்க. சம்பூர்ண கர்மங்களையுந் தம்முளடக்கி இம்மூன்றும் சூசனை செய்வித்தலால், 'குறியில்' என்றார். கர்த்தா, கர்மம், கரணம் என மூவகையாகக்குவிந்த அறுவகைக்காரகங்களே சர்வகிரியைகளுக்கும் ஆசிரயமாம்: கூடஸ்தான்மா எந்தக்கிரியைகளுக்கும் ஆசிரயமில்லை என்க.

இச்செய்யுளின்றாற்பரியம், — எவை எவை கர்மங்களின் பிரோரகங்களாமோ? எவை எவை கர்மங்களின் ஆசிரயங்களாமோ அவை முழு

வதும் காரகரூபமும், திரிகுணன்மகமுமாம். ஆன்மதேவனே காரகரி தனும், குணாகிதனுமாதலால் சர்வகர்மங்களின் சம்பந்தாகிதனும் என் பது. (௧௮)

[கிரியாகாரகபலன்கண் முழுவதுங் குணன்மகமாதலால் சத்துவ, ரஜஸு, தமஸு என்னுங்குணபேதத்தால் மூவிதபேதமாகவருளிச்செய்யவேண்டுமென்று இனி ஆரம்பிக்கின்ருர்.]

**ஆன்றவறிவுங் கருமமுமக் கருமங்களையாக் கிடுவானு,**
**மூன்றவுணரும் புத்தியொடு திருதியென்ன வுரைப்பனவுங்,**
**தோன்றவிளையு மின்பமுமுன் சொன்னகுணத்தின் றொடர்பா**
**லே, மூன்றுவகையா மொரோவொன்றிங் கவற்றின் றிறநான்**
**மொழியக்கேள்.**

(இ-ள்.) ஆன்ற அறிவும்=மாட்சிமைபொருந்திய அந்தக்கரண விருத்திரூபஞானமும்,—கருமமும் = எக்ஞாதிரூபகிரியையும்,—அக் கருமங்களை ஆக்கிடுவானும்=கர்த்தாவும்,—ஊன்ற உணரும் புத்தி யொடு=அழுந்தவறியாநிற்கும் புத்தியும்,—திருதி என்ன உரைப்பன வும்=திருதியுமென்று சொல்வனவும்,—தோன்ற விளையும் இன்ப மும்=விளங்கவுண்டாகாநிற்குஞ் சுகமும்—முன்சொன்ன குணத்தின் தொடர்பாலே=முன்னே ௧௪-ம் அத்தியாயத்திற் சொன்ன சத்துவம், ரஜஸு, தமஸு என்னு முக்குணங்களின் சம்பந்தத்தாலே—ஒரோ வொன்று = ஒவ்வொன்றும் — மூன்றுவகை ஆம் = மூவிதமாம்;— இங்கு அவற்றின் திறம்=இங்கே அவைகளின்றன்மைகளை — நான் மொழியக் கேள்=யான் அருளிச்செய்யக்கேட்பாய்.—எ-று.

திருதி=தைரியம். பூர்வம் ௧௪-ம் அத்தியாயத்திலும், ௧௭-ம் அத் தியாயத்திலும் ஸ்ரீ பகவானால் சத்துவாதிகுணங்களையும், அக்குணங் களாற் செய்யப்பட்ட சாத்துவிகாதிபேதங்களையுங் கூறிப்போந்தமை யின், மீண்டும் இங்கே அவைகளைக் கூறுவதால் கூறியதுகூறலென் னுங் குற்றம் பொருந்துமாலோவெனின்? முன்னே ௧௪-ம் அத்தியா யத்தில், "பற்றுமாசின்மையாற் பளிங்கொப்பது" என்பதுமுதலிய வசனங்களால் சத்துவாதிகுணங்களில் பந்தத்திற்கேதுத்தன்மையின் பிரகாரம் நிரூபணஞ்செய்யப்பட்டது. குணதீதனுடைய சீவன்முக் தத்தன்மையை நிரூபணஞ்செய்தற்பொருட்டு, ௧௭-ம் அத்தியாயத் தில், "சாத்துவிகர் தேவரையே சரண்புகுவர்" என்பதுமுதலிய வச னங்களால் சத்துவாதிகுணங்களாற் செய்யப்பட்ட மூவித சுபாவத்தை நிரூபணஞ்செய்து அதிகாரியானவன் அசுரரூபமான ராஜஸ, தாமஸ



சுபாவங்களைப் பரித்தியாகஞ்செய்து சாத்துவிகாதி ஆகாராதிகளைச் சேவித்துத் தெய்வரூபமான சாத்துவிகசுபாவத்தையே சம்பாதிக்க வேண்டுமென்னும் பொருளை யருளிச்செய்யப்பட்டது. இவ்வத்தியா யத்தில் சுபாவமாகக் குணதீதனுப், அசங்கனுயுள்ள ஆன்மாவுக்குக் கிரி யாகாரகபலம் என்னு மூன்றேடுகூடக் கிஞ்சின்மாத்திரமுஞ் சம்பந்த மில்லையென்னும் பொருளைப் போதித்தற்பொருட்டுக் கிரியாகாரக பலன்கட்குத் திரிகுணரூபத்தன்மையே உண்டு: வேறே யாதொரு சொரூபமும் அவைகட்கில்லை; எதனால் இக்கிரியாகாரகாதிகட்கு ஆன் மாவின் சம்பந்தித்தன்மையுளதாம் என்னும் பொருளை அருளிச்செய் தனர் ஆதலால் இங்கே கூறியதுகூறலென்னுங் குற்றம் பொருந்தா தென்க. (௧௯)

[முன்னர்ப் பிரதிக்ஞைசெய்தவற்றுள், ஞானத்தை மூவிதமாக வருளிச்செய்யத்தொடங்கி இப்போது சாத்துவிகஞானத்தை யருளிச் செய்கின்ருர்.]

**நன்ருய்ஞானத் திரளாகி நாநாவிதமாய் விரிந்தெங்கும்**
**பொன்ருநின்ற பூதங்க டோறும்பொன்ருப் பொருளாகி**
**யொன்ருய்நிற்ப தொன்றினையப் படியேயுணரு முணர்வதனை**
**யன்ருமென்னர் சாத்துவிக ஞானமெனவே யமைப்பாரால்.**

(இ-ள்.) நன்ருய் = ஆநந்தமாய்,—ஞானத் திரள் ஆகி = ஞான கனமாய்,—எங்கும்=எவ்விடத்தும்—நாநாவிதம் ஆய் விரிந்து=அநே கப்பிரகாரமாய் விரிந்து—பொன்ரு நின்ற = அழிகின்ற—பூதங்கள் தோறும் = பிரமாதி ஸ்தாவராந்தமான பூதங்களனைத்திலும்—பொன் ருப் பொருள் ஆகி=கூடஸ்தநித்தியமாய்,—ஒன்று ஆய் நிற்பதொன் றினை=ஏகரசமாய்நிற்கும் அத்துவிதீயமான பிரத்தியகான்மாவை— அப்படியே=அங்ஙனமே — உணரும் உணர்வதனை = சாட்சாத்கரிக் கும் ஞானத்தை — அன்று ஆம் என்னர் = சாத்துவிகஞானமன்றெ ன்று சொல்லார்;—(பின்னையோ,) சாத்துவிகஞானம்எனவே அமைப் பார்=சாத்துவிகஞானமென்றே விதிப்பர் பெரியோர்.—எ-று.

ஆல்-அசைநிலை. இந்த அத்துவிதான்மசாட்சாத்காரத்திற்கு வே ருன தொய்தஞானங்கண்முழுதும் ராஜஸ, தாமஸங்களாதலால் சம் சாரத்திற்குக் காரணமாம் என்க. (௨0)

[இராஜஸஞானத்தின் சொரூபமும், தாமஸஞானத்தின் சொரூப மும் அருளிச்செய்கின்ருர்.]

ஊனப்படுமிவ் வுடலூறு முள்ளபொருளை யுணராதே
யீனப்படக்காண் கின்றதிரா சதமாஞான மதுவன்றி [யோர்
ஞானத்திரளாய் நின்றதையோ ருடம்பினிடையு நாட்டிடை
தானத்திடையு மடங்கக்காண் பதுதாமதமா ஞானமே.

(இ-ள்.) ஊனப் படும்=ஒன்றற்கொன்று விலட்சணமாகக்காணப்படும்—இவ்வுடல்தோறும்=இத்தேகங்கடோறும்—உள்ள பொருளை உணராதே=அகண்டைகரசமாயுள்ள ஆன்மாவை அங்ஙனமறியாமல்—ஈனப்படக் காண்கின்றது=சுகதுக்காதிரூபவேறுபாட்டால் சரீரங்கடோறும் வேறுவேறாகக் குதார்க்கிக புருஷாலறியப்படும் ஞானமானது—இராசதம் ஆம் ஞானம்=ராஜஸஞானமாம்;—அது அன்றி=அங்ஙனமறிவதுமன்றி—ஞானத் திரள் ஆய் நின்றதை=(சர்வதேகங்களிலும்) ஞானகனமாய், அகண்டைகரசமாயுள்ள ஆன்மாவை—ஓர் உடம்பினிடையும்=ஓர் தேகரூபமான காரியத்திலும்,—நாட்டிடை ஓர் தானத்திடையும்=ஒரூரில் பிரதிமாதிரூபமான ஓர் காரியத்திலும்—அடங்கக் காண்பது=முறையே இவ்வளவுமாத்திரமே ஆன்மா, இவ்வளவுமாத்திரமே ஈசுரன்: இதைப்பார்க்கிலும் ஓரான்மா வில்லை, இதைப்பார்க்கிலும் ஓர் ஈசுரனில்லை என்றிந்தப்பிரகாரம் அபினிவேசமாக அறியப்படும் ஞானமானது—தாமதம் ஆம் ஞானம்=தாமஸஞானமாம்.—எ-று.

'அதுவன்றி' எ-து, முற்கூறிய ராஜஸஞானத்தினும் இத்தாமஸ ஞானத்தில் விலட்சணத்தன்மை உணர்த்துதற்பொருட்டெனக. சாவயவமாய்த் தேகபரிமாணமாய் ஆன்மாவை யறியாநிற்பவர் திகம்பரர். ஸ்தூலதேகமே ஆன்மாவென்பது சார்வாகருடைய ஞானம். பாஷாணம், காஷ்டமுதலிய ரூபபிரதிமைமாத்திரமே ஈசுரன், வேறே ஈசுரனில்லை என்னும் ஞானம் சாஸ்திரசம்ஸ்காரரகிதரான மூடருடைய ஞானம்; இந்தஞானம் யுக்திரகிதமும், அற்பமுமாம். அநித்தியமாயும், பரிச்சின்னமாயுமுள்ள தேகாதிகளில் ஆன்மத்துவாபிமானரூபமான சார்வாகாதிகளின்ஞானமானது ஆன்மாவும், ஈசுரனும் நித்தியம், விபு, தேகாதிசங்காதங்களினும் பின்னம் என்னுந்தார்க்கிகாதி ஞானத்தினும் அத்தியந்தம் விலட்சணமாம்; அந்தஞானத்தைப் புத்திமானுன புருஷர் தாமதஞானமென்பர் என்றவாறு. (உக)

[அத்துவிதீயான்மவிஷயமான சாத்துவிகஞானமோ முமுட்சுக்களாற் கொள்ளற்பாலது: அநேகான்மவிஷயமான ராஜஸஞானமும், பரிச்சின்னதேகாதிரூப ஆன்மாவை விஷயம்பண்ணுந் தாமஸஞான



மும் தள்ளற்பாலனவென்னும் பொருளைப் பூர்வமருளிச்செய்து இப்போது கர்மங்களின் மூவிதத்தன்மையை அருளிச்செய்யத்தொடங்கிச் சாத்துவிககர்மத்தின்சொரூபத்தை வர்ணிக்கின்றார்.]

[வேறு.]

வீதலிற் பற்றுமேலோர் வினைப்பயன் வேண்டல்வேண்டாக்
காய்தலொன் றின்றிச்செய்யுங் கருமஞ்சாத் துவிககன்ம
மாய்வரும் பலத்தினோடு மகங்கார மத்தினோடு
மேய்தருங் கருமமெல்லா மிராசத கருமமாமே.

(இ-ள்.) பற்று=(எனக்குச்சமானம் வேறொருவரு மில்லையென்னும்) அகங்காரமும்,—மேல் ஓர் வினைப்பயன்=இனி (அநுபவிப்பேமென்று) கருதாநிற்குங் கர்மபலத்தினிச்சையும்,—வேண்டல்=(புத்திராதிகளிடத்துப்)பிரீதிரூபமான இராகமும்,—வேண்டாக் காய்தல்=(சத்துருக்களிடத்து)வெறுப்புரூபமான துவேஷமும்—ஒன்று இன்றி=(ஆகிய இவற்றுள்,) ஒன்றுமில்லாமல்—செய்யும்=(நிஷ்காமபுருஷனால்) ஆரம்பிக்கப்படும்—வீதல் இல் கருமம்=(எக்ஞம், தானம், ஓமமுதலிய) கேடில்லாத நித்தியகருமம் (யாது அது)—சாத்துவிக கன்மம்=சாத்துவிககர்மம் (என்று சொல்லப்படும்.)—[இனி ராஜஸகர்மத்தின் சொரூபம் வர்ணிக்கின்றார்.] ஆய் வரும் பலத்தினோடும்=இனிஉளதாய்வருஞ் (சுவர்க்காதி) பலன்களினிச்சையோடும்,—அகங்காரமத்தினோடும்=(பூர்வஞ்சொன்ன ஸ்வரூபமான) அகங்காரத்தோடும்—எய்தரும் கருமம் எல்லாம்=(ஸகாமபுருஷனால் வெகு கிலேசத்தோடுகூடி) ஆரம்பிக்கப்படுங் காமியகர்மங்களனைத்தும்—இராசத கருமம் ஆம்=ராஜஸகர்மமென்று சொல்லப்படும்.—எ-று.

ஏகாரம்-ஈற்றசை. (உஉ)

[இனித் தாமஸகர்மத்தின் சொரூபம் வர்ணிக்கின்றார்.]

குலைபெறும் பற்றுமேலோர் கூறிய நீதியோடுங்
கலைதெரிந் துணர்ந்துமெய்ம்மை கடைப்பிடி யாமையார்க்கு
மலைவுறுங் கேடுநாசம் வலியிவை யவிவேகத்தாற்
றலைதவச் செய்வதெல்லாந் தாமத கருமமாமே.

(இ-ள்.) குலை பெறும் பற்று=தான் நடுங்கும்படி பின் அடையாநிற்கும் அசுபரூபமான பயனும்,—யார்க்கும்=பிராணிகள் யாவர்க்கும்—அலைவு உறும் கேடு=வருத்தும்படி பொருந்துகின்ற பிடையும்,—நாசம்=(தனமுதலியவற்றின்) நாசமும்,—வலி=(தனது) சாம

**ஊனப்படுமிவ் வுடறோறு முள்ளபொருளை யுணராதே**
**யீனப்படக்காண் கின்றதிரா சதமாஞான மதுவன்றி [யோர்**
**ஞானத்திரளாய் நின்றதையோ ருடம்பினிடையு நாட்டிடை**
**தானத்திடையு மடங்கக்காண் பதுதாமதமா ஞானமே.**

(இ-ள்.) ஊனப் படும்=ஒன்றற்கொன்று விலட்சணமாகக்காணப்படும்—இவ்வுடல்தோறும்=இத்தேகங்கடோறும்—உள்ள பொருளை உணராதே = அகண்டைகரசமாயுள்ள ஆன்மாவை அங்ஙனமறியாமல் — ஈனப்படக் காண்கின்றது = சுகதுக்காதிருபவேறுபாட்டால் சரீரங்கடோறும் வேறுவேறாகக் குதார்க்கிக புருஷாலறியப்படும் ஞானமானது—இராசதம் ஆம் ஞானம் = ராஜஸஞானமாம்;—அது அன்றி = அங்ஙனமறிவதுமன்றி — ஞானத் திரள் ஆய் நின்றதை= (சர்வதேகங்களிலும்) ஞானகனமாய், அகண்டைகரசமாயுள்ள ஆன்மாவை—ஓர் உடம்பினிடையும்=ஓர் தேகரூபமான காரியத்திலும்,—நாட்டிடை ஓர் தானத்திடையும் = ஒரூரில் பிரதிமாதிருபமான ஓர் காரியத்திலும்—அடங்கக் காண்பது=முறையே இவ்வளவுமாத்திரமே ஆன்மா, இவ்வளவுமாத்திரமே ஈசுரன்: இதைப்பார்க்கிலும் ஓரான்மாவில்லை, இதைப்பார்க்கிலும் ஓர் ஈசுரனில்லை என்றிந்தப்பிரகாரம் அபினிவேசமாக அறியப்படும் ஞானமானது—தாமதம் ஆம் ஞானம்= தாமஸஞானமாம்.—எ-று.

'அதுவன்றி' எ-து, முற்கூறிய ராஜஸஞானத்தினும் இத்தாமஸ ஞானத்தில் விலட்சணத்தன்மை உணர்த்துதற்பொருட்டென்க. சாவயவமாய்த் தேகபரிமாணமாய் ஆன்மாவை யறியாநிற்பவர் திகம்பரர். ஸ்தூலதேகமே ஆன்மாவென்பது சார்வாகருடைய ஞானம். பாஷாணம், காஷ்டமுதலிய ரூபபிரதிமைமாத்திரமே ஈசுரன், வேறே ஈசுரனில்லை என்னும் ஞானம் சாஸ்திரசம்ஸ்காரரகிதரான மூடருடைய ஞானம்; இந்தஞானம் யுக்திரகிதமும், அற்பமுமாம். அநித்தியமாயும், பரிச்சின்னமாயுமுள்ள தேகாதிகளில் ஆன்மத்துவாபிமானரூபமான சார்வாகாதிகளின்ஞானமானது ஆன்மாவும், ஈசுரனும் நித்தியம், விபு, தேகாதிசங்காதங்களினும் பின்னம் என்னுந்தார்க்கிகாது ஞானத்தினும் அத்தியந்தம் விலட்சணமாம்; அந்தஞானத்தைப் புத்திமானான புருஷர் தாமதஞானமென்பர் என்றவாறு. (உக)

[அத்துவிதீயான்மவிஷயமான சாத்துவிகஞானமோ முமுட்சுக்களாற் கொள்ளற்பாலது: அநேகான்மவிஷயமான ராஜஸஞானமும், பரிச்சின்னதேகாதிருப ஆன்மாவை விஷயம்பண்ணுந் தாமஸஞானமும் தள்ளற்பாலனவென்னும் பொருளைப் பூர்வமருளிச்செய்து இப்போது கர்மங்களின் மூவிதத்தன்மையை அருளிச்செய்யத்தொடங்கிச் சாத்துவிககர்மத்தின்சொரூபத்தை வர்ணிக்கின்றார்.]



[வேறு.]

**வீதலிற் பற்றுமேலோர் வினைப்பயன் வேண்டல்வேண்டாக்**
**காய்தலொன் றின்றிச்செய்யுங் கருமஞ்சாத் துவிககன்ம**
**மாய்வரும் பலத்திேனாடு மகங்கர மத்திேனாடு**
**மேய்தருங் கருமமெல்லா மிராசத கருமமாமே.**

(இ-ள்.) பற்று=(எனக்குச்சமானம் வேறொருவரு மில்லையென்னும்) அகங்காரமும்,—மேல் ஓர் வினைப்பயன் = இனி (அநுபவிப்பேமென்று) கருதாநிற்குங் கர்மபலத்தினிச்சையும்,—வேண்டல்= (புத்திராதிகளிடத்துப்)பிரீதிருபமான இராகமும்,—வேண்டாக் காய்தல்=(சத்துருக்களிடத்து)வெறுப்புரூபமான துவேஷமும்—ஒன்று இன்றி=(ஆகிய இவற்றுள்,) ஒன்றுமில்லாமல்—செய்யும் = (நிஷ்காமபுருஷனால்) ஆரம்பிக்கப்படும்—வீதல் இல் கருமம் = (எக்ஞம், தானம், ஓமமுதலிய) கேடில்லாத நித்தியகருமம் (யாது அது)—சாத்துவிக கன்மம்=சாத்துவிககர்மம் (என்று சொல்லப்படும்.)—[இனி ராஜஸகர்மத்தின் சொரூபம் வர்ணிக்கின்றார்.] ஆய் வரும் பலத்தினோடும்=இனிஉளதாய்வருஞ் (சுவர்க்காதி) பலன்களினிச்சையோடும்,—அகங்கரமத்தினோடும்=(பூர்வஞ்சொன்ன கர்வரூபமான) அகங்காரத்தோடும்—எய்தரும் கருமம் எல்லாம்=(ஸகாமபுருஷனால் வெகு கிலேசத்தோடுகூடி) ஆரம்பிக்கப்படுங் காமியகர்மங்களனைத்தும்—இராசத கருமம் ஆம்=ராஜஸகர்மமென்று சொல்லப்படும்.—எ-று.

ஏகாரம்-ஈற்றசை. (உஉ)

[இனித் தாமஸகர்மத்தின் சொரூபம் வர்ணிக்கின்றார்.]

**குலைபெறும் பற்றுமேலோர் கூறிய நீதியோடுங்**
**கலைதெரிந் துணர்ந்துமெய்ம்மை கடைப்பிடி யாமையார்க்கு**
**மலைவுறுங் கேடுநாசம் வலியிவை யவிவேகத்தாற்**
**றலைதவச் செய்வதெல்லாந் தாமத கருமமாமே.**

(இ-ள்.) குலை பெறும் பற்று=தான் நடுங்கும்படி பின் அடையாநிற்கும் அசுபரூபமான பயனும்,—யார்க்கும்=பிராணிகள் யாவர்க்கும்—அலைவு உறும் கேடு = வருத்தும்படி பொருந்துகின்ற பீடையும்,—நாசம்=(தனமுதலியவற்றின்) நாசமும்;—வலி=(தனது) சாம

ர்த்தியமும்,—இவை=(ஆகிய) இவற்றை—மேலோர் கூறிய நீதியோடும்=பெரியோர் சொல்லிய நியாயத்தோடும்—கலை தெரிந்து உணர்ந்து = நூல்களை நாடியாராய்ந்து—மெய்ம்மை கடைப்பிடியாமை = உள்ளபடியறியாமல்—அவிவேகத்தால் = மோகத்தினால் — தலை தவ செய்வது எல்லாம்=பெருமை குன்றும்படி ஆரம்பிக்கப்படுகின்ற கர்மங்களனைத்தும்—தாமத கருமம் ஆம்—தாமஸகர்மமென்று சொல்லப்படும்.—எ-று. ஏ-ஈற்றசை.

இதற்குத் துரியோதனனே இலக்கியமாம். (௨௩)

[சாத்துவிககர்த்தாவின் சொரூபம் வர்ணிக்கின்றார்.]

பற்றுமாங் காரந்தானும் பழுதறத் துறந்தியாவு
முற்றெழு முயற்சியோடு நிலைமையி னோடுமொன்றி
யெற்றுமோ ரிழவுபேற்றிற் றுன்பமீ தின்பமென்று
சற்றுமோர் சலிப்பிலாத தலைவன்சாத் துவிகனென்பான்.

(இ-ள்.) பற்றும் = கர்மபலத்தினிச்சையையும்,—ஆங்காரம்தானும்=கர்வவசனத்தையும்—பழுது அறத் துறந்து=குற்றமறப் பரித்தியாகஞ்செய்து—யாவும் உற்று எழும்=சர்வகர்மங்களிலும் பொருந்தி எழுகின்ற—முயற்சியோடும் = உற்சாகத்தோடும்,— நிலைமையினோடும்=தைரியத்தோடும்—ஒன்றி = பொருந்தி—எற்றும் = என்றும்—ஓர் இழவு பேற்றில்=(தான் செய்யாநிற்குங் கர்மபலன்களின்) ஓர் ஆனி, லாபங்களில்—ஈது துன்பம் (ஈது) இன்பம் என்று=இது துன்பமென்றும், இஃதின்பமென்றுங் (கருதி)—ஓர் சற்றும் = ஒரு சிறிதும்—சலிப்பிலாத தலைவன் = விகாரமடையாத கர்த்தா யாவன் அவன்—சாத்துவிகன் என்பான் = சாத்துவிகனென்று சொல்லப்படுவான்.—எ-று.

இங்கே, 'சலிப்பிலாத' எ-து, துன்ப, இன்பங்கள் காரணமாக முறையேவரும் முகத்தின் மலினத்தன்மையும், முகத்தின் விகாசத்தன்மையும் இல்லாத நிர்விகாரத்தன்மையை. (௨௪)

[இனி ராஜஸகர்த்தாவின் சொரூபம் வர்ணிக்கின்றார்.]

[வேறு.]

வினைப்பயன்றனை வேண்டலு வேட்கையு
மெனைத்திடாமையுந் தூய்மை யிலாமையு
நினைப்பின்வாட்டமு நீடு மகிழ்தலு
மினைத்தின்வாழ்வ ரிராசத மாந்தரே.



(இ-ள்.) வினைப்பயன் தனை வேண்டலும்=கர்மபலன்களை இச்சித்தலும்,—வேட்கையும் = (புத்திராதிகளிடத்திற்) சிநேகமும்,—எனைத்து இடாமையும் = எவ்வளவாவது (ஒருவர்க்கும் ஒன்றைக்) கொடாத லுப்தத்தன்மையும்,—தூய்மை இலாமையும் = சௌசமில்லாமையும்,—நினைப்பின் வாட்டமும் நீடு மகிழ்தலும் = மனத்தின்கண்ணே (ஆனி, லாபங்களில் முறையே) வாடுதலும், மிகச் சந்தோஷித்தலும் (ஆகிய)—இனைத்தின் வாழ்வர்=இவ்வித தன்மைகளோடு கூடி வாழாநிற்பவர் (யாவர் அவர்)—இராசத மாந்தர்=ராஜஸகர்த்தாவென்று சொல்லப்படுவர்.—எ-று. (௨௫)

[இனித் தாமஸகர்த்தாவின் சொரூபம் வர்ணிக்கின்றார்.]

மன மொருக்கலும் வான்கலை நூல்களைத்
தனமெனக் கொடு கற்கலுந் தக்கவ
ரினம கிழ்த்தலு மின்றி முடிப்பதோர்
தின முடித்திடார் தாமதஞ் சேர்ந்துளார்.

(இ-ள்.) மனம் ஒருக்கலும் = மனத்தை (ச்செய்யத்தக்க கர்மங்களிற் சாவதானமாகும்படி) அடக்குதலும்,—வான் கலை நூல்களை = பெருமைபொருந்திய ஞானசாஸ்திரங்களை—தனம் எனக் கொடு கற்கலும்=(இதுவே நமக்குப் பெருஞ்) செல்வமென்று மனத்துட்கொண்டு கற்குதலும்,—தக்கவர் இனம் மகிழ்த்தலும்=பெரியோர் குழாஞ் சந்தோஷிக்கும்படியான வணக்கமும் — இன்றி=(ஆகிய இவைமுதலிய குணங்களில் ஒன்றும்) இல்லாமல்—ஓர் தினம் முடிப்பது = ஓர் தினத்தில் முடிக்கத்தக்க காரியத்தை—முடித்திடார் = (ஓர் மாசத்தினுலுங்கூட) முடிக்கமாட்டாதவர் (யாவர் அவர்)—தாமதம் சேர்ந்துளார்=தாமஸகர்த்தாவென்று சொல்லப்படுவர்.—எ-று.

மகிழ்த்தல்=பிறவினைத் தொழிற்பெயர். (௨௬)

[சாத்துவிகபுத்தியின்சொரூப மருளிச்செய்கின்றார்.]

ஈன மற்ற துறவற மில்லற
ஞானம் பற்றொடு நல்வினை தீவினை
யான வஞ்சுவ வஞ்சத் தகாவெனத்
தா னறிந்தது சத்துவ புத்தியே.

(இ-ள்.) ஈனம் அற்ற=இழிவற்ற—துறவறம் இல்லறம்=(இப்படிப்பட்டது) துறவறம், (இப்படிப்பட்டது) இல்லறம்,—ஞானம்

ர்த்தியமும்,—இவை=(ஆகிய) இவற்றை—மேலோர் கூறிய நீதியோடும்=பெரியோர் சொல்லிய நியாயத்தோடும்—கலை தெரிந்து உணர்ந்து = நூல்களை நாடியாராய்ந்து—மெய்ம்மை கடைப்பிடியாமை = உள்ளபடியறியாமல்—அவிவேகத்தால் = மோகத்தினுல் — தலை தவ செய்வது எல்லாம்=பெருமை குன்றும்படி ஆரம்பிக்கப்படுகின்ற கர்மங்களனைத்தும்—தாமத கருமம் ஆம்—தாமஸகர்மமென்று சொல்லப்படும்.—எ-று. ஏ-ஈற்றசை. (உங)

இதற்குத் துரியோதனனே இலக்கியமாம்.

[சாத்துவிககர்த்தாவின் சொரூபம் வர்ணிக்கின்ருர்.]

**பற்றுமாங் காரந்தானும் பழுதறத் துறந்தியாவு**
**முற்றெழு முயற்சியோடு நிலைமையி ேேடுமொன்றி**
**யெற்றுமோ ரிழவுபேற்றிற் றுன்பமீ தின்பமென்று**
**சற்றுமோர் சலிப்பிலாத தலைவன்சாத் துவிகனென்பான்.**

(இ-ள்.) பற்றும் = கர்மபலத்தினிச்சையையும்,—ஆங்காரம்தானும்=கர்வவசனத்தையும்—பழுது அறத் துறந்து=குற்றமறப் பரித்தியாகஞ்செய்து—யாவும் உற்று எழும்=சர்வகர்மங்களிலும் பொருந்தி எழுகின்ற—முயற்சியோடும் = உற்சாகத்தோடும்,— நிலைமையிேேடும்=தைரியத்தோடும்—ஒன்றி = பொருந்தி—எற்றும் = என்றும்—ஓர் இழவு பேற்றில்=(தான் செய்யாநிற்குங் கர்மபலன்களின்) ஓர் ஆனி, லாபங்களில்—ஈது துன்பம் (ஈது) இன்பம் என்று=இது துன்பமென்றும், இஃதின்பமென்றுங் (கருதி)—ஓர் சற்றும் = ஒரு சிறிதும்—சலிப்பிலாத தலைவன் = விகாரமடையாத கர்த்தா யாவன் அவன்—சாத்துவிகன் என்பான் = சாத்துவிகனென்று சொல்லப்படுவான்.—எ-று.

இங்கே, 'சலிப்பிலாத' எ-து, துன்ப, இன்பங்கள் காரணமாக முறையேவரும் முகத்தின் மலினத்தன்மையும், முகத்தின் விகாசத்தன்மையும் இல்லாத நிர்விகாரத்தன்மையை. (உச)

[இனி ராஜஸகர்த்தாவின் சொரூபம் வர்ணிக்கின்ருர்.]

[வேறு.]

**வினைப்பயன்றனை வேண்டலு வேட்கையு**
**மெனைத்திடாமையுந் தூய்மை யிலாமையு**
**நினைப்பின்வாட்டமு நீடு மகிழ்தலு**
**மினைத்தின்வாழ்வ ரிராசத மாந்தரோ.**



(இ-ள்.) வினைப்பயன் தனை வேண்டலும்=கர்மபலன்களை இச்சித்தலும்,—வேட்கையும் = (புத்திராதிகளிடத்திற்) சினேகமும்,—எனைத்து இடாமையும் = எவ்வளவாவது (ஒருவர்க்கும் ஒன்றைக்) கொடாத லுப்தத்தன்மையும்,— தூய்மை இலாமையும் = சௌசமில்லாமையும்,—நினைப்பின் வாட்டமும் நீடு மகிழ்தலும் = மனத்தின்கண்ணே (ஆனி, லாபங்களில் முறையே) வாடுதலும், மிகச் சந்தோஷித்தலும் (ஆகிய)—இனைத்தின் வாழ்வர்=இவ்வித தன்மைகளோடு கூடி வாழாநிற்பவர் (யாவர் அவர்)—இராசத மாந்தர்=ராஜஸகர்த்தாவென்று சொல்லப்படுவர்.—எ-று. (உரு)

[இனித் தாமஸகர்த்தாவின் சொரூபம் வர்ணிக்கின்ருர்.]

**மன மொருக்கலும் வான்கலை நூல்களைத்**
**தனமெனக் கொடு கற்கலுந் தக்கவ**
**ரினமகிழ்த்தலு மின்றி முடிப்பதோர்**
**தின முடித்திடார் தாமதஞ் சேர்ந்துளார்.**

(இ-ள்.) மனம் ஒருக்கலும் = மனத்தை (ச்செய்யத்தக்க கர்மங்களிற் சாவதானமாகும்படி) அடக்குதலும்,—வான் கலை நூல்களை = பெருமைபொருந்திய ஞானசாஸ்திரங்களை—தனம் எனக் கொடு கற்கலும்=(இதுவே நமக்குப் பெருஞ்) செல்வமென்று மனத்துட்கொண்டு கற்குதலும்,—தக்கவர் இனம் மகிழ்த்தலும்=பெரியோர் குழாஞ் சந்தோஷிக்கும்படியான வணக்கமும் — இன்றி=(ஆகிய இவைமுதலிய குணங்களில் ஒன்றும்) இல்லாமல்—ஓர் தினம் முடிப்பது = ஓர் தினத்தில் முடிக்கத்தக்க காரியத்தை—முடித்திடார் = (ஓர் மாசத்திலுங்கூட) முடிக்கமாட்டாதவர் (யாவர் அவர்)—தாமதம் சேர்ந்துளார்=தாமஸகர்த்தாவென்று சொல்லப்படுவர்.—எ-று.

மகிழ்த்தல்=பிறவினைத் தொழிற்பெயர். (உசு)

[சாத்துவிகபுத்தியின்சொரூப மருளிச்செய்கின்ருர்.]

**ஈன மற்ற துறவற மில்லற**
**ஞானம் பற்றொடு நல்வினை தீவினை**
**யான வஞ்சுவ வஞ்சத் தகாவெனத்**
**தா னறிந்தது சத்துவ புத்தியே.**

(இ-ள்.) ஈனம் அற்ற=இழிவற்ற—துறவறம் இல்லறம்=(இப்படிப்பட்டது) துறவறம், (இப்படிப்பட்டது) இல்லறம்,—ஞானம்

பற்று=(இப்படிப்பட்டது) மோட்சம், (இப்படிப்பட்டது) பந்தம்,—நல் வினை தீ வினை=இதுகாரியம், இஃதகாரியம்,—ஆன் அஞ்சுவ அஞ்சத்தகா என=இவை அஞ்சத்தக்கவை, இவை அஞ்சத்தகாதவை என்று—அறிந்தது=(இவைகளை உள்ளபடியே) அறியாநின்ற புத்தி யாது அது—சத்துவ புத்தி = சாத்துவிக புத்தியென்று சொல்லப்படும்.—எ-று. தான், ஏ-அசைநிலைகள்.

மோட்சத்தை ஆகுபெயரால், 'ஞானம்' என்றார். 'துறவறம்'=மோட்ச ஏதுவான நிவிர்த்திமார்க்கம். 'இல்லறம்'=பந்த ஏதுவான பிரவிர்த்திமார்க்கம். மோட்சம்=அஞ்ஞானம், அதன் காரியம் இவைகளின் அபாவம். பந்தம் = கருத்திருத்துவாதி அபிமானம். காரியம், அகாரியம்=தேசகாலங்களையபேட்சித்த கர்த்தவ்வியம், அகர்த்தவ்வியம். அஞ்சத்தக்கவை = கர்ப்பவாசமுதலியதுக்கங்கள். அஞ்சத்தகாதவை=அவைகளின் அபாவம் என்க. புத்தியாகிய கரணத்திற் கர்த்திருத்துவஞ்சொன்னது உபசாரம். இந்தரீதி இனி வருவனவற்றினுங் காண்க. (௨௭)

[ராஜஸபுத்தியின்சொரூபம் வர்ணிக்கின்றார்.]

தருமம் பாவந் தனக்குச் செயத்தகுங்
கருமஞ் செய்யத் தகாத கருமங்க
ளருமை யாலறி யாத வறிவதே
யிருமை யாய விராசத புத்தியே.

(இ-ள்.) தருமம்பாவம்=தர்மாதர்மங்களையும்,—தனக்குச் செயத்தகும் கருமம்=தனக்குச்செய்யத்தக்கனவாகுங் காரியங்களையும்,—செய்யத் தகாத கருமங்கள்=செய்யத்தகாதனவாகுங்காரியங்களையும்—அருமையால்=அருமையாக—அறியாத=(உள்ளபடி) அறியாத—அறிவு அது=அறிவானது](யாது)அது—இருமைஆய=சந்தேகரூபமான—இராசத புத்தி=ராஜஸபுத்தியென்று சொல்லப்படும்.—எ-று. (௨௮)

[தாமஸபுத்தியின் சொரூபம் வர்ணிக்கின்றார்.]

பாவமாகத் தருமத்தைப் பார்த்தலு
மாவ தாமென் றடாதது நோக்கலுந்
தீமை செய்கின்ற சிந்தனை தீங்கிலே
போவ தாவதுந் தாமத புத்தியே.

(இ-ள்.) பாவம் ஆகத் தருமத்தைப் பார்த்தலும் = அதர்மமாகத் தர்மத்தைப் பாவித்தலும்,—அடாதது = செய்யத்தகாதனவான காரியங்களை—ஆவது ஆம்என்று நோக்கலும்=செய்யத்தகுங் காரியமாமென்று பாவித்தலும்,—தீமைசெய்கின்ற=துன்பத்தைப் பயவாநின்ற—சிந்தனை=சிந்தனையானது—தீங்கிலே=மற்றத் தீங்கான சர்வவிஷயங்களிலும்—போவது ஆவதும்=செல்லுதலுமுடையது (யாது அது) தாமத புத்தியே=தாமஸபுத்தியென்று சொல்லப்படும்.—எ-று.



ஏகாரங்கள்-அசைநிலைகள். தமசினான் மூடப்பட்டமையின், தர்மமுதலிய சர்வபதார்த்தங்களையும் உள்ளபடி அறியாமல் விபரீதமாக அறியும் புத்தியே தாமஸபுத்தி என்க. (௨௯)

[புத்தியின் மூவகைத்தன்மையை மூன்று செய்யுட்களா லருளிச்செய்து இனித் திருதியின் மூவகைத்தன்மையை அருளிச்செய்யத் தொடங்கி இதிற்சாத்துவிகதிருதியின்சொரூப மருளிச்செய்கின்றார்.]

மனஞ்செ யுந்தொழின் மன்னுயி ரின்றொழி
லினஞ்செ யிந்தியஞ் செய்தொழி லென்றிவை
கனஞ்செய் தேறிலுங் கண்டு பொறுத்தலுஞ்
சினஞ்செ யாமையுஞ் சாத்திக திருதியே.

(இ-ள்.) மனம் செயும் தொழில்=மனத்தினாற் செய்யுங்கிரியைகள்,—மன் உயிரின் தொழில்=நிலைபேறுடைய பிராணவர்க்கங்களினாற் செய்யுங் கிரியைகள்,—இனம் செய் இந்தியம் செய் தொழில்=கூட்டமாகிய இந்திரியங்களினாற்செய்யுங்கிரியைகள்—என்றஇவை=என்று சொல்லுகின்ற இச்சேஷ்டைகள்—கனம் செய்து ஏறிலும்=பாரமாய் அதிகரித்தாலும்—கண்டு பொறுத்தலும்=(அவ்வக்காரணங்களின் நிஷ்டமாகக்) கண்டு (சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மையால் அவற்றைத்) தரித்தலும்,—சினம் செயாமையும் = துவேஷியாமையும்—சாத்திக திருதி=சாத்துவிகதைரியமென்று சொல்லப்படும்.—எ-று.

[இனி ராஜஸதிருதி, தாமஸதிருதிகளின் சொரூபங்களை வர்ணிக்கின்றார்.]

பண்ணிக் காமந் தரும்பயன் கைக்கொள்வா
னெண்ணித் தாங்குந் திருதி யிராசதங்
கண்ணிற் சோகங் களிப்புறக் கம்பய
நண்ணித் தாங்கும் பொறைதம நாளுமே.

(இ-ள்.) காமம் தரும் பயன் = ஆசையினாற்றரப்பட்ட சுவர்க்கமுதலிய பலன்களை—கைக் கொள்வான் = அடையும்பொருட்டு—பண்

ணி = (அவைகட்கேதுவான தர்மங்களைச்) செய்து — எண்ணித் தாங்கும் திருதி = (தர்மம், காமம், அர்த்தம் இம்மூன்றுமே தமக்காவசியகமாகச் சம்பாதிக்கத் தக்கனவென்று) எண்ணி (அவைகளைத்) தரியாநிற்குந்திருதியானது — இராசதம் = ராஜஸதைரியமென்று சொல்லப்படும். — கண்ணில் = புத்தியில் — சோகம் களிப்பு உறக்கம் பயம் (இவைகளை) — நாளும் நண்ணி = எப்பொழுதும் விடாமற்பொருந்தி — தாங்கும் பொறை = தரியாநிற்குந் தைரியமானது — தமம் = தாமஸதைரியமாம். — எ-று.

தர்மம் = எக்ஞாதி கர்மங்களாலுளதாகும் புண்ணியரூபமான அபூர்வம். காமம் = விஷயஜந்யசுகம். அர்த்தம் = தனமுதலிய பதார்த்தங்கள். 'சோகம்' = இஷ்ட வஸ்துக்களின் வியோகத்தாலுளதாகுஞ் சந்தாபம். 'களிப்பு' = அநுபவித்தற்பொருட்டுளதாகுஞ் சாஸ்திர நிஷித்த விஷயங்களினபிமுகமென்னுமதம். 'உறக்கம்' = நித்திரை. 'பயம்' = பிரதிகூல வஸ்துக்களின் றரிசனத்தாலுளதாகும் அச்சம். (௩௧)

[பூர்வம் குணபேதத்தாற் கிரியாகாரகங்களை மூவிதமாக வருளிச்செய்து இனி அக்கிரியாகாரகங்களால் உளவாகாநிற்குஞ் சுகரூபமாகியபலத்தின் மூவிதத்தன்மையை ஸ்ரீ பகவான் இதுமுதன் மூன்று செய்யுட்களால் அருளிச்செய்யத்தொடங்கி இதில் சாத்துவிகசுகத்தை யருளிச்செய்கின்றார்.]

துன்ப மாய்விடம் போன்று தொடக்கத்தி
லின்ப மாகி விளைவிட மியாவர்க்கு
மன்ப வாரமு தேயென லாவதா
மென்ப சாத்து விகந்தரு மின்பமே.

(இ-ள்.) அன்ப = அன்பனான அருச்சுனா — யாவர்க்கும் = (அதிகாரிகள்) யாவருக்கும் — தொடக்கத்தில் = (ஞான, வைராக்கிய, தியான, சமாதிகளின்) ஆரம்பகாலத்தில் (அத்தியந்தம் ஆயாசசாத்தியமாவதால்) — விடம் போன்று துன்பம் ஆய் = பிரசித்தமான விஷத்தைப்போற் றுக்கான்மகமாய் = விளைவு இடம் = (ஞான, வைராக்கியாதிகள்) பரிபாகமாகுமிடத்து — இன்பம் ஆகி = சுகமாய் — ஆர் அமுதே எனலாவது = அரியவமுதமேயென்று சொல்லத்தக்கது (யாது அது) — சாத்துவிகம் தரும் இன்பம் ஆம் என்ப = சாத்துவிகசுகமாமென்று கூறுவர் யோகிகள். — எ-று.

ஆன்மவிஷயமான புத்தியின் பிரசாதத்தா லுளதாவதென்பது செய்யுளில் எஞ்சிநின்றது. புத்தியின் பிரசாதமாவது, ராஜஸதாமஸங்களினின் றுநீங்கிப் புத்தியானது நிர்மலமாயிருத்தல்; இங்ஙனங்கூறிய வாற்றால், சமாதியின்கண்ணுளதாகுஞ்சுகம் யாது அது சாத்துவிக சுகமாமென்க. (௩௨)



[இனி ராஜஸசுகத்தின்சொரூபம் வர்ணிக்கின்றார்.]

பொருத்த மாய்ப்புல னோடு பொறியிலே
யருத்த மாயெழுந் தாரமு தென்னலாய்
விருத்த மாய்முடி வில்விட மாகியே
யிருத்த லாகு மிராசத வின்பமே.

(இ-ள்.) புலனோடு பொறியிலே பொருத்தம் ஆய் = இந்திரியங்களுடனே விஷயங்களிற்சம்பந்தமாய் — அருத்தம் ஆய் எழுந்து = அநுகூலமாகவெழுந்து — ஆர் அமுது என்னல் ஆய் = (பிரதமக்ஷணத்தில்) அரியவமுதமென்று சொல்லலாவதாய், — முடிவில் = (போகத்தின்) அந்தத்தில் — விருத்தம் ஆய் = வெறுப்பாய் — விடம் ஆகியே இருத்தல் = விஷம்போற்பிரதிகூலமாகியே இருக்குஞ்சுகம் (யாது அது) — இராசத இன்பம் ஆகும் = ராஜஸசுகமாம். — எ-று.

மனமுதலிய இந்திரியநிக்கிரகரூபமான கிலேசமின்மையின், 'அருத்த மாயெழுந் தாரமு தென்னலாய்' எ-ம், இகலோக, பரலோக துக்கத்துக்கேதுவாயிருத்தலால், 'விருத்த மாய்முடி வில்விட மாகியே, யிருத்தல்' என்றுங் கூறினர். இது வனிதாதிவிஷயங்களாலுளதாகுஞ் சுகமென்க. (௩௩)

[இனித் தாமஸசுகத்தின்சொரூபம் வர்ணிக்கின்றார்.]

தொட ருறக்க மயக்கொடு சோம்பினாற்
பட வுதித்ததாய்ப் பண்ணும் பொழுதினுங்
கடன் விளைந்து முடிந்தகா லத்தினு
மிடர் விளைப்பது தாமத வின்பமே.

(இ-ள்.) தொடர் = (முன்னைவினைவசத்தாற்) றொடராநின்ற — உறக்கம் மயக்கொடு சோம்பினால் = நித்திரை, பிரமாதம், ஆலசியமென்னும் இவைகளால் — பட உதித்ததாய் = பொருந்தத்தோன்றினதாய் — பண்ணும் பொழுதினும் = ஆரம்பகாலத்திலும், — விளைந்து முடிந்த காலத்தினும் = விளைவாய் முடிந்தகாலத்திலும் — கடன் = தனக்குக் கடனாக — இடர் விளைப்பது = மோகத்தைச்செய்யாநிற்குஞ்சுகமாவது (யாது அது) — தாமத இன்பம் = தாமஸசுகமாம். — எ-று. ஏ-அசை.

பிரமாதம் = சித்தத்தின் அசாவதானம். இங்கே, 'இடர்' எ-து, மோகத்தை. நித்திரைமுதலியவை க்ஷணிகமாதலின், 'விரைந்து முடிந்தகாலத்திலும்' என்றார். (ந.ச)

[இப்போது திரிகுணபேதங்களாற்பூர்வாத்தியாயங்களில் ஓரிடத்தும் அருளிச்செய்யாத பதார்த்தங்களையுஞ்சங்கிரகஞ்செய்பவராய்ப் பூர்வஞ்சொன்ன பிரகாரணர்த்தங்களைச் செய்யுளின் ஓர்பாதத்தால் உபசம்மரித்துக் கிரியாகாரகபலரூபமான பிரபஞ்சமுழுவதுந் திரிகுணன்மகமாயின்; பிராணிகட்கு முக்தி எங்ஙனுளதாமென்று வருஞ்சங்கையானது நீங்குதற்பொருட்டுத் தத்தம் அதிகாரத்துக்குத் தக்கபடி கர்மாநுஷ்டானவாயிலாகப் பகவதாராதனத்தாலுளதாகும் அவரது கிருபையினால் அடையப்படுந் தத்துவஞானத்தினாலேயே முக்தியுளதாமென்னுங் கீதார்த்தசாரத்தைச் சங்கிரகித்துத் தரிசிப்பிப்பவராய் இதுதொடங்கி அத்தியாய முடியும்பரியந்தம் வேறொருபிரகாரம் ஆரம்பிக்கின்றார்.]

[வேறு.]

**இந்தவியற் கையினுமிக் குணங்களைவிட் டவரில்லை**
**யந்தணர்க்கு மரசர்க்கும் வணிகர்க்குஞ் சூத்திரர்க்குந்**
**தந்தமியற் கையவாய குணமூன்றின் றன்மையினில்**
**வந்தவினைத் திறமவற்றை யுரைப்பன்கேண் முடிமன்னா.**

(இ-ள்.) இந்த இயற்கையின் ஆம் = முன்னே கச-ம் அத்தியாயத்திற்சொன்ன (சுபாவமென்னும்) பிரகிருதியினாலுண்டாகாநிற்கும்—இக்குணங்களை விட்டவர் இல்லை = இந்தச் சத்துவம், ரஜஸ், தமஸென்னும் மூன்றுகுணங்களையும் விட்டவர்கள் (இந்தப் பிருதுவியிலாவது, சுவர்க்கத்திலாவது ஒருவரும்) இல்லை.—அந்தணர்க்கும் = பிராமணருக்கும்,—அரசருக்கும் = க்ஷத்திரியருக்கும்,—வணிகர்க்கும் = வைசியருக்கும்,—சூத்திரர்க்கும் = சூத்திரருக்கும்—தம் தம் இயற்கைய ஆய = தத்தம் சுபாவங்களாலுண்டாகிய—குணம் மூன்றின் தன்மையினில் = சத்துவமுதலிய முக்குணங்களின் றன்மையினால்—வந்த வினைத்திறம் அவற்றை = உளவாகாநிற்குங்கர்மங்களின் கூறுபாடுகளை—முடிமன்னா = கிரீடத்தையுடையஅருச்சுனா—உரைப்பன் கேள் = இனிஅருளிச்செய்வேன் கேட்பாய்.—எ-று.

'இந்தவியற்கையினும்' என்று சத்துவாதி குணங்கட் குற்பத்தி கூறினது குணங்களின் சாமியாவஸ்தாரூபமான பிரகிருதியினின்றுஞ் சத்துவாதிகுணங்களின்வைஷம்மியாவஸ்தையை; இதுமுன்னே கச-ம்



அத்தியாயத்தில், எ-வதுசெய்யுளின்விசேஷவுரையில் விரித்து உரைசெய்யப்பட்டிருக்கிறது; ஆண்டுக்காண்க. "இக் குணங்களைவிட் டவரில்லை" என்று உயர்திணையாற்கூறியிருப்பினும், "ஒருமொழியொழிதன் னினங்கொளற்குரித்தே" என்பதால், பிராணி, அப்பிராணிரூபங்களான சர்வபதார்த்தங்களையுங் கூறினதென்றறிக. 'இயற்கை' என்று கூறினது, மாயாரூபமான பிரகிருதியை; அல்லது, ஜன்மாந்தரங்களின் தர்மாதர்மசம்ஸ்காரங்களையெனினுமமையும். சத்துவகுணப்பிரதானர் பிராமணர். அற்பஞ்சத்துவகுணங்கலந்த ரஜோகுணப்பிரதானர் க்ஷத்திரியர். அற்பந் தமோகுணங்கலந்த ரஜோகுணப்பிரதானர் வைசியர். அற்பம் ரஜோகுணத்தோடு தமோகுணப்பிரதானர் சூத்திரர் ஆம். ஜன்மாந்தரசம்ஸ்காரத்தாலுளவாகும் இவ்வாறான குணவேறுபாட்டால் நான்குவருணத்தினர்க்குங் கர்மவேறுபாடுளவாதலால், 'தந்தமியற் கையவாய குணமூன்றின் றன்மையினில், வந்தவினைத் திறம்' என்றார்.()

[பிராமணாதிகளின் சுபாவிககர்மங்களை, ந-செய்யுட்களால் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

**கறைசெயைம் புலன்களைக் கரண நான்குடன்**
**முறைதுறை யடக்கலுந் தவமுந் தூய்மையும்**
**பொறையொடு கல்வியும் பொருந்து ஞானமும்**
**மறையவர் தொழிலென வகுக்கப் பட்டதே.**

(இ-ள்.) கரணம் நான்குடன் = அந்தக்கரணங்கள் நான்கினுடனே—கறை செய் ஐம்புலன்களை = குற்றத்தை விளைப்பவைகளான சுரோத்திரமுதலிய பாகியேந்திரியங்களைந்தையும்—துறை துறை அடக்கலும் = அவைகளின் கோளகைகளில் நிக்கிரகஞ்செய்யுஞ் சமதமங்களும்,— தவமும் = (பூர்வம் கஎ-ம் அத்தியாயத்திற் கூறிப்போந்த சாரீரம், மானசம், வாசிகம் என்னு மூவித) தவங்களும்,— தூய்மையும் = (மண், ஜலங்களாற்) சரீரசுத்தியும், (மைத்திரியாதி குணங்களால்) அந்தக்கரணசுத்தியும், — பொறையொடு = (பிறர்செய்யும் அவமானத்தாற்) குரோதாதி விகாரங்களையடையாத தன்மையும்,—கல்வியும் = சாஸ்திரஞானமும்,—பொருந்தும் ஞானமும் = (அநுபவபரியந்தம்) பொருந்தாநிற்கும் விஞ்ஞானமும், (ஆர்ஜவமும், ஆஸ்திக்கியமுங் கூட்டி ஆக இவ்வொன்பதும்,—மறையவர் தொழில்என = பிராமணரது சுபாவஜந்நியகர்மங்களென்று—வகுக்கப்பட்டதே = சாஸ்திரங்களில் வகுத்துச்சொல்லப்படுகின்றன.—எ-று.

ஆர்ஜவம் = குடிலத்தன்மையில்லாமை. ஆஸ்திக்கியம் = பரலோகம் உண்டென்னும் நிச்சயம். (க.சு)

பிரமாதம்=சித்தத்தின் அசாவதானம். இங்கே, 'இடர்' எ-து, மோகத்தை. நித்திரைமுதலியவை க்ஷணிகமாதலின், 'விரைந்து முடிந்தகாலத்தினும்' என்றார். (ருச)

[இப்போது திரிகுணபேதங்களாற்பூர்வாத்தியாயங்களில் ஓரிடத்தும் அருளிச்செய்யாத பதார்த்தங்களையுஞ்சங்கிரகஞ்செய்பவராய்ப் பூர்வஞ்சொன்ன பிரகாரணர்த்தங்களைச் செய்யுளின் ஓர்பாதத்தால் உபசம்மரித்துக் கிரியாகாரகபலரூபமான பிரபஞ்சமுழுவதுந் திரிகுணான்மகமாயின், பிராணிகட்கு முக்தி எங்ஙனுளதாமென்று வருஞ்சங்கையானது நீங்குதற்பொருட்டுத் தத்தம் அதிகாரத்துக்குத் தக்கபடி கர்மாநுஷ்டானவாயிலாகப் பகவதாராதனத்தாலுளதாகும் அவரது கிருபையினால் அடையப்படுந் தத்துவஞானத்தினாலேயே முக்தியுளதாமென்னுங் கீதார்த்தசாரத்தைச் சங்கிரகித்துத் தரிசிப்பிப்பவராய் இதுதொடங்கி அத்தியாய முடியும்பரியந்தம் வேறொருபிரகாரம் ஆரம்பிக்கின்றார்.]

[வேறு.]

இந்தவியற் கையினுமிக் குணங்களைவிட் டவரில்லை
யந்தணர்க்கு மரசர்க்கும் வணிகர்க்குஞ் சூத்திரர்க்குந்
தந்தமியற் கையவாய குணமூன்றின் றன்மையினில்
வந்தவினைத் திறமவற்றை யுரைப்பன்கேண் முடிமன்னா.

(இ-ள்.) இந்த இயற்கையின் ஆம்=முன்னே கச-ம் அத்தியாயத்திற்சொன்ன (சுபாவமென்னும்) பிரகிருதியினா லுண்டாகாநிற்கும்—இக்குணங்களை விட்டவர் இல்லை=இந்தச் சத்துவம், ரஜஸு, தமஸென்னும் மூன்றுகுணங்களையும் விட்டவர்கள் (இந்தப் பிருதுவியிலாவது, சுவர்க்கத்திலாவது ஒருவரும்) இல்லை.—அந்தணர்க்கும்=பிராமணருக்கும்,—அரசருக்கும் = க்ஷத்திரியருக்கும்,—வணிகர்க்கும்=வைசியருக்கும்,—சூத்திரர்க்கும்=சூத்திராருக்கும்—தம் தம் இயற்கைய ஆய=தத்தம் சுபாவங்களாலுண்டாகிய—குணம் மூன்றின் தன்மையினில்=சத்துவமுதலிய முக்குணங்களின் றன்மையினால்—வந்த வினைத்திறம் அவற்றை=உளவாகாநிற்குங்கர்மங்களின் கூறுபாடுகளை—முடிமன்னா=கிரீடத்தையுடையஅருச்சுனா—உரைப்பன் கேள்=இனிஅருளிச்செய்வேன் கேட்பாய்.—எ-று.

'இந்தவியற் கையினும்' என்று சத்துவாதி குணங்கட் குற்பத்தி கூறினது குணங்களின் சாமியாவஸ்தாரூபமான பிரகிருதியினின்றுஞ் சத்துவாதிகுணங்களின் வைஷம்மியாவஸ்தையை; இதுமுன்னே கச-ம்



அத்தியாயத்தில், எ-வதுசெய்யுளின்விசேஷவுரையில் விரித்து உரை செய்யப்பட்டிருக்கிறது; ஆண்டுக்காண்க. "இக் குணங்களைவிட் டவரில்லை" என்று உயர்திணையாற்கூறியிருப்பினும், "ஒருமொழியொழி தன்னினங்கொளற்குரித்தே" என்பதால், பிராணி, அப்பிராணிரூபங்களான சர்வபதார்த்தங்களையுங் கூறினதென்றறிக. 'இயற்கை' என்று கூறினது,மாயாரூபமான பிரகிருதியை; அல்லது,ஜன்மாந்தரங்களின் தர்மாதர்மசம்ஸ்காரங்களையெனினுமமையும். சத்துவகுணப்பிரதானர் பிராமணர். அற்பஞ்சத்துவகுணங்கலந்த ரஜோகுணப்பிரதானர் க்ஷத்திரியர். அற்பந் தமோகுணங்கலந்த ரஜோகுணப்பிரதானர் வைசியர். அற்பம் ரஜோகுணத்தோடு தமோகுணப்பிரதானர் சூத்திரர் ஆம். ஜன்மாந்தரசம்ஸ்காரத்தாலுளவாகும் இவ்வாறான குணவேறுபாட்டால் நான்குவருணத்தினர்க்குங் கர்மவேறுபாடுளவாதலால், 'தந்தமியற் கையவாய குணமூன்றின் றன்மையினில், வந்தவினைத் திறம்' என்றார்.()

[பிராமணாதிகளின் சுபாவீககர்மங்களை, ரு-செய்யுட்களால் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

கறைசெயைம் புலன்களைக் கரண நான்குடன்
றுறைதுறை யடக்கலுந் தவமுந் தூய்மையும்
பொறையொடு கல்வியும் பொருந்து ஞானமும்
மறையவர் தொழிலென வகுக்கப் பட்டதே.

(இ-ள்.) கரணம் நான்குடன் = அந்தக்கரணங்கள் நான்கினுடனே—கறை செய் ஐம்புலன்களை =குற்றத்தை விளைப்பனவைகளான சுரோத்திரமுதலிய பாகியேந்திரியங்களைந்தையும்—துறை துறை அடக்கலும்=அவைகளின் கோளகைகளில் நிக்கிரகஞ்செய்யுஞ் சமதமங்களும்,— தவமும் = (பூர்வம் கஎ-ம் அத்தியாயத்திற் கூறிப்போந்த சாரீரம், மானசம், வாசிகம் என்னு மூவித) தவங்களும்,— தூய்மையும் =(மண், ஜலங்களாற்) சரீரசுத்தியும், (மைத்திரியாதி குணங்களால்) அந்தக்கரணசுத்தியும், — பொறையொடு=(பிறர்செய்யும் அவமானத்தாற்) குரோதாதி விகாரங்களையடையாத தன்மையும்,—கல்வியும்=சாஸ்திரஞானமும்,—பொருந்தும் ஞானமும்= (அநுபவபரியந்தம்)பொருந்தாநிற்கும் விஞ்ஞானமும், (ஆர்ஜவமும், ஆஸ்திக்கியமுங் கூட்டி ஆக இவ்வொன்பதும்,—மறையவர் தொழில்என = பிராமணரது சுபாவஜந்நியகர்மங்களென்று—வகுக்கப்பட்டதே = சாஸ்திரங்களில் வகுத்துச்சொல்லப்படுகின்றன.—எ-று.

ஆர்ஜவம்=குடிலத்தன்மையில்லாமை. ஆஸ்திக்கியம் =பரலோகம் உண்டென்னும் நிச்சயம். (ரு.சு)

பிரமாதம் = சித்தத்தின் அசாவதானம். இங்கே, 'இடர்' எ-து, மோகத்தை. நித்திரைமுதலியவை க்ஷணிகமாதலின், 'விரைந்து முடிந்தகாலத்தினும்' என்றார். (நுச)

[இப்போது திரிகுணபேதங்களாற்பூர்வாத்தியாயங்களில் ஓரிடத்தும் அருளிச்செய்யாத பதார்த்தங்களையுஞ்சங்கிரகஞ்செய்பவராய்ப் பூர்வஞ்சொன்ன பிரகரணார்த்தங்களைச் செய்யுளின் ஓர்பாதத்தால் உபசம்மரித்துக் கிரியாகாரகபலரூபமான பிரபஞ்சமுழுவதுந் திரிகுணான்மகமாயின், பிராணிகட்கு முக்தி எங்ஙனுளதாமென்று வருஞ்சங்கையானது நீங்குதற்பொருட்டுத் தத்தம் அதிகாரத்துக்குத் தக்கபடி கர்மாநுஷ்டானவாயிலாகப் பகவதாராதனத்தாலுளதாகும் அவரது கிருபையினால் அடையப்படுந் தத்துவஞானத்தினாலேயே முக்தியுளதாமென்னுங் கீதார்த்தசாரத்தைச் சங்கிரகித்துத் தரிசிப்பிப்பவராய் இதுதொடங்கி அத்தியாய முடியும்பரியந்தம் வேறொருபிரகாரம் ஆரம்பிக்கின்றார்.]

[வேறு.]

இந்தவியற் கையினுமிக் குணங்களைவிட் டவரில்லை
யந்தணர்க்கு மரசர்க்கும் வணிகர்க்குஞ் சூத்திரர்க்குந்
தந்தமியற் கையவாய குணமூன்றின் றன்மையினில்
வந்தவினைத் திறமவற்றை யுரைப்பன்கேண் முடிமன்னா.

(இ-ள்.) இந்த இயற்கையின் ஆம் = முன்னே கச-ம் அத்தியாயத்திற்சொன்ன (சுபாவமென்னும்) பிரகிருதியினா லுண்டாகாநிற்கும்—இக்குணங்களை விட்டவர் இல்லை = இந்தச் சத்துவம், ரஜஸ், தமஸென்னும் மூன்றுகுணங்களையும் விட்டவர்கள் (இந்தப் பிருதுவியிலாவது, சுவர்க்கத்திலாவது ஒருவரும்) இல்லை.—அந்தணர்க்கும் = பிராமணருக்கும்,—அரசருக்கும் = க்ஷத்திரியருக்கும்,—வணிகர்க்கும் = வைசியருக்கும்,—சூத்திரர்க்கும் = சூத்திரருக்கும்—தம் தம் இயற்கைய ஆய = தத்தம் சுபாவங்களாலுண்டாகிய—குணம் மூன்றின் தன்மையினில் = சத்துவமுதலிய முக்குணங்களின் றன்மையினால்—வந்த வினைத் திறம் அவற்றை = உளவாகாநிற்குங்கர்மங்களின் கூறுபாடுகளை—முடி மன்னா = கிரீடத்தையுடையஅருச்சுனா—உரைப்பன் கேள் = இனிஅருளிச்செய்வேன் கேட்பாய்.—எ-று.

'இந்தவியற்கையினும்' என்று சத்துவாதி குணங்கட் குற்பத்தி கூறினது குணங்களின் சாமியாவஸ்தாரூபமான பிரகிருதியினின்றுஞ் சத்துவாதிகுணங்களின்வைஷம்மியாவஸ்தையை; இது முன்னே கச-ம்



அத்தியாயத்தில், எ-வதுசெய்யுளின்விசேஷவுரையில் விரித்து உரை செய்யப்பட்டிருக்கிறது; ஆண்டுக்காண்க. "இக் குணங்களைவிட் டவரில்லை" என்று உயர்திணையாற்கூறியிருப்பினும், "ஒருமொழியொழி தன்னினங்கொளற்குரித்தே" என்பதால், பிராணி, அப்பிராணிரூபங்களான சர்வபதார்த்தங்களையுங் கூறினதென்றறிக. 'இயற்கை' என்று கூறினது, மாயாரூபமான பிரகிருதியை; அல்லது, ஜன்மாந்தரங்களின் தர்மாதர்மசம்ஸ்காரங்களையெனினுமமையும். சத்துவகுணப்பிரதானர் பிராமணர். அற்பஞ்சத்துவகுணங்கலந்த ரஜோகுணப்பிரதானர் க்ஷத்திரியர். அற்பந் தமோகுணங்கலந்த ரஜோகுணப்பிரதானர் வைசியர். அற்பம் ரஜோகுணத்தோடு தமோகுணப்பிரதானர் சூத்திரர் ஆம். ஜன்மாந்தரசம்ஸ்காரத்தாலுளவாகும் இவ்வாறான குணவேறுபாட்டால் நான்குவருணத்தினர்க்குங் கர்மவேறுபாடுளவாதலால், 'தந்தமியற் கையவாய குணமூன்றின் றன்மையினில், வந்தவினைத் திறம்' என்றார்.()

[பிராமணாதிகளின் சுபாவீககர்மங்களை, ந-செய்யுட்களால் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

கறைசெயைம் புலன்களைக் கரண நான்குடன்
றுறைதுறை யடக்கலுந் தவமுந் தூய்மையும்
பொறையொடு கல்வியும் பொருந்து ஞானமும்
மறையவர் தொழிலென வகுக்கப் பட்டதே.

(இ-ள்.) கரணம் நான்குடன் = அந்தக்கரணங்கள் நான்கினுடனே—கறை செய் ஐம்புலன்களை = குற்றத்தை விளைப்பவைகளான சுரோத்திரமுதலிய பாகியேந்திரியங்களைந்தையும்—துறை துறை அடக்கலும் = அவைகளின் கோளகைகளில் நிக்கிரகஞ்செய்யுஞ் சமதமங்களும்,— தவமும் = (பூர்வம் கஎ-ம் அத்தியாயத்திற் கூறிப்போந்த சாரீரம், மானசம், வாசிகம் என்னு மூவித) தவங்களும்,— தூய்மையும் = (மண், ஜலங்களாற்) சரீரசுத்தியும், (மைத்திரியாதி குணங்களால்) அந்தக்கரணசுத்தியும், — பொறையொடு = (பிறர்செய்யும் அவமானத்தாற்) குரோதாதி விகாரங்களையடையாத தன்மையும்,—கல்வியும் = சாஸ்திரஞானமும்,—பொருந்தும் ஞானமும் = (அநுபவபரியந்தம்) பொருந்தாநிற்கும் விஞ்ஞானமும், (ஆர்ஜவமும், ஆஸ்திக்கியமுங் கூட்டி ஆக இவ்வொன்பதும்,—மறையவர் தொழில்என = பிராமணாது சுபாவஜந்நியகர்மங்களென்று—வகுக்கப்பட்டதே = சாஸ்திரங்களில் வகுத்துச்சொல்லப்படுகின்றன.—எ-று.

ஆர்ஜவம் = குடிலத்தன்மையில்லாமை. ஆஸ்திக்கியம் = பரலோகம் உண்டென்னும் நிச்சயம். (க.சு)

[க்ஷத்திரியாது சுபாவீககர்மங்களை யருளிச்செய்கின்றார்.]

தலைமையுங் கொடையொடு தறுக ணாண்மையு
நிலைமையுங் கீழ்ப்படா நெஞ்சி னீட்டமுங்
கொலைபயில் போர்களிற் புறங்கொ டாமையுஞ்
சிலைமலி தோளினுக் கரசர் செய்கையே.

(இ-ள்.) தலைமையும்=ஈசுரபாவமும்,—கொடையொடு தறுகண் ஆண்மையும்=தானமும், ஒன்றிற்கும் அஞ்சாத சாமர்த்தியமும்—நிலைமையும் = தைரியமும்,—கீழ்ப்படா நெஞ்சின் நீட்டமும் = ஒருவர்க் கடங்காதமனத்தினுயர்ச்சியும்,—கொலை பயில் போர்களில்=கொல்லுதலைப்பொருந்திய யுத்தங்களில்—புறம் கொடாமையும்=தோற்றோடாமையும் (ஆகிய இவை)—சிலை மலி தோளினுக்=மலைபோற் பருத்த புயத்தினையுடைய அருச்சுனா—அரசர் செய்கை=க்ஷத்திரியரின்விகித கர்மங்களாம்.—எ-று.

ஈசுரபாவம்=பிரஜைகளைப் பாலனஞ்செய்தற்பொருட்டுத் தனது சேவகர்முதலியோரின் சமீபத்திற் றனது பிரபுசக்தியைப் புலப்படுத்தல்; அல்லது, சாஸ்திரநிஷித்தமார்க்கத்திற் பிரவிர்த்தியாநிற்குந் துஷ்டப்பிராணிகளை நியமனஞ் செய்யாநிற்குஞ் சக்தி. தானம்=சுவர்ணம், பசு, அந்நம், பூமிமுதலிய தனங்களைப் பிராமணர் முதலியோருக்குக் கொடுத்தல். அஞ்சாத சாமர்த்தியம்=அத்தியந்தம் பலமுடைய புருஷனையும் அடிப்பதிற் பிரவிர்த்திரூபமான விக்கிரமம். தைரியம் = பெரிய விபத்தானது வந்தடையினுந் தேகேந்திரியாதிரூபசங்காதங்கள் வியாகுலமடையாததன்மை. ஒருவர்க்கடங்காத மனத்தினுயர்ச்சி= அந்நிய சத்துருக்களினால் அவமானமடையாத சாமர்த்தியம். (௩௭)

[வைசிய, சூத்திரரின் சுபாவீககர்மங்களை யருளிச்செய்கின்றார்.]

உழுதொழில் பசுக்களை யோம்பல் வாணிகம்
வழுவறச் செய்கையே வணிகர் வாழ்க்கையாம்
பழுதற விவர்களைப் பாது காத்தலே
விழுமிய தொழில்கள்வே ளாளர்க் கென்பவே.

(இ-ள்.) உழுதொழில்=பூமியை உழுது பயிர்செய்தலும்,—பசுக்களை ஓம்பல்=கோக்களை இரட்சித்தலும்,—வாணிகம் வழுவு அறச் செய்கையே = (கிரய, விக்கிரயரூப) வியாபாரம் வழுவாமற் செய்தலுமே—வணிகர் வாழ்க்கை ஆம்=வைசியரது சுபாவஜந்நிய கர்மங்களாம்.—பழுது அற=குற்றமற—இவர்களைப் பாதுகாத்தலே=(பிராமணர், க்ஷத்திரியர், வைசியர் என்னும்) இம்மூவருணத்தினரைச் சிசுருஷையினாற் பாதுகாத்தலே — வேளாளர்க்கு = சூத்திரர்க்கு—விழுமிய தொழில்கள் என்ப=(சுபாவஜந்நியமான) சிறந்தகர்மங்களாமென்று கூறுவர் பெரியோர்.—எ-று.



'வழுவற' எ-து, கொள்வது அதிகம், கொடுப்பது குறைவுமாகாமல் ஒப்ப நாடிச்செய்தலை. (௩௮)

[இவ்வாறான பிராமணாதிவர்ணங்களின் சர்வகர்மங்கட்கும் ஞானத்திற் கேதுத்தன்மையை ஸ்ரீபகவான் இப்போதருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

தீரா வகைதஞ் செயலே செயவே
நாரா யணனா முதனா யகனுக்
காரா தனையா மதனா லவனே
வாரா வழியாம் வரமே தருமால்.

(இ-ள்.) தீரா வகை = (சுருதி, ஸ்மிருதிரூபமான சாஸ்திரங்களில் வருணங்களைக் குறித்து விதானஞ் செய்திருப்பதால்) விடாதபடிக்கு—தம் செயலே செயவே=தமது வருணத்திற்குரிய முன்சொன்ன கர்மங்களையே அநுஷ்டிக்க (அதுவே)—நாராயணன் ஆம் முதல் நாயகனுக்கு—நாராயணனென்னுங் காரணப்பிரமத்திற்கு—ஆராதனை ஆம்=பூஜனையாம்;—அதனால் = அந்தப் பூஜனையினால்—அவனே= அந்த நாராயணனே—வாரா வழி ஆம் வரமே தரும் = (தமது கர்மங்களில் நிஷ்டையுடைய புருஷர்க்குப்) பிறவாநெறியாகிய வரந்தருவன்.—எ-று. ஆல்-அசைநிலை.

'செயலே' என்றதின் ஏகாரம் ஈற்றசை. 'வரம்' எ-து, பிரமான்ம ஐக்கிய ஞானநிஷ்டைக்கு யோக்கியதைரூபமான அந்தக்கரண சுத்தியை. (௩௯)

[தத்தம் வருணாச்சிரமதர்மமே மூடர்க்குப் பரமேசுரப் பிரசாதத்திற் கேதுவாவதால் அதிகாரிகளாகிய மநுடர் சுதர்மாநுஷ்டானமே செய்யவேண்டுமென்னும்பொருளை இப்போது ஸ்ரீபகவான் அருளிச் செய்கின்றார்.]

அல்லா வினைதா னழகாய் வரினுஞ்
செல்லார் பெரியோ ரவைசெய் வதனிற்
றொல்லார் குலமே தொடருந் தொழிலே
பொல்லா வெனினுஞ் செயலே பொருளே.

[க்ஷத்திரியரது சுபாவீககர்மங்களை யருளிச்செய்கின்றார்.]

தலைமையுங் கொடையொடு தறுக ணாண்மையு
நிலைமையுங் கீழ்ப்படா நெஞ்சி னீட்டமுங்
கொலைபயில் போர்களிற் புறங்கொ டாமையுஞ்
சிலைமலி தோளினா யரசர் செய்கையே.

(இ-ள்.) தலைமையும்=ஈசுரபாவமும்,—கொடையொடு தறுகண் ஆண்மையும்=தானமும், ஒன்றிற்கும் அஞ்சாத சாமர்த்தியமும்—நிலைமையும் = தைரியமும்,—கீழ்ப்படா நெஞ்சின் நீட்டமும் = ஒருவர்க்கடங்காதமனத்தினுயர்ச்சியும்,—கொலை பயில் போர்களில்=கொல்லுதலைப்பொருந்திய யுத்தங்களில்—புறம் கொடாமையும்=தோற்றோடாமையும் (ஆகிய இவை)—சிலை மலி தோளினாய்=மலைபோற் பருத்த புயத்தினையுடைய அருச்சுனா—அரசர் செய்கை=க்ஷத்திரியரின் விகித கர்மங்களாம்.—எ-று.

ஈசுரபாவம்=பிரஜைகளைப் பாலனஞ்செய்தற்பொருட்டுத் தனது சேவகர்முதலியோரின் சமீபத்திற் றனது பிரபுசக்தியைப் புலப்படுத்தல்; அல்லது, சாஸ்திரநிஷித்தமார்க்கத்திற் பிரவிர்த்தியாநிற்குந் துஷ்டப்பிராணிகளை நியமனஞ் செய்யாநிற்குஞ் சக்தி. தானம்=சுவர்ணம், பசு, அந்நம், பூமிமுதலிய தனங்களைப் பிராமணர் முதலியோருக்குக் கொடுத்தல். அஞ்சாத சாமர்த்தியம்=அத்தியந்தம் பலமுடைய புருஷனையும் அடிப்பதிற் பிரவிர்த்திரூபமான விக்கிரமம். தைரியம் = பெரிய விபத்தானது வந்தடையினுந் தேகேந்திரியாதிரூபசங்காதங்கள் வியாகுலமடையாததன்மை. ஒருவர்க்கடங்காத மனத்தினுயர்ச்சி= அந்நிய சத்துருக்களினால் அவமானமடையாத சாமர்த்தியம். (௩௭)

[வைசிய, சூத்திரரின் சுபாவீககர்மங்களை யருளிச்செய்கின்றார்.]

உழுதொழில் பசுக்களை யோம்பல் வாணிகம்
வழுவறச் செய்கையே வணிகர் வாழ்க்கையாம்
பழுதற விவர்களைப் பாது காத்தலே
விழுமிய தொழில்கள்வே ளாளர்க் கென்பவே.

(இ-ள்.) உழுதொழில்=பூமியை உழுது பயிர்செய்தலும்,—பசுக்களை ஓம்பல்=கோக்களை இரட்சித்தலும்,—வாணிகம் வழுவு அறச் செய்கையே = (கிரய, விக்கிரயரூப) வியாபாரம் வழுவாமற் செய்தலுமே—வணிகர் வாழ்க்கை ஆம்=வைசியரது சுபாவஜந்நிய கர்மங்க



ளாம்.—பழுது அற=குற்றமற—இவர்களைப் பாதுகாத்தலே=(பிராமணர், க்ஷத்திரியர், வைசியர் என்னும்) இம்மூவருணத்தினரைச் சிசுரூஷையினாற் பாதுகாத்தலே — வேளாளர்க்கு = சூத்திரர்க்கு—விழுமிய தொழில்கள் என்ப=(சுபாவஜந்நியமான) சிறந்தகர்மங்களாமென்று கூறுவர் பெரியோர்.—எ-று.

‘வழுவற’ எ-து, கொள்வது அதிகம், கொடுப்பது குறைவுமாகாமல் ஒப்ப நாடிச்செய்தலை. (௩௮)

[இவ்வாறான பிராமணாதிவர்ணங்களின் சர்வகர்மங்கட்கும் ஞானத்திற் கேதுத்தன்மையை ஸ்ரீபகவான் இப்போதருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

தீரா வகைதஞ் செயலே செயவே
நாரா யணனா முதனா யகனுக்
காரா தனையா மதனா லவனே
வாரா வழியாம் வரமே தருமால்.

(இ-ள்.) தீரா வகை = (சுருதி, ஸ்மிருதிரூபமான சாஸ்திரங்களில் வருணங்களைக் குறித்து விதானஞ் செய்திருப்பதால்) விடாதபடிக்கு—தம் செயலே செயவே=தமது வருணத்திற்குரிய முன்சொன்ன கர்மங்களையே அநுஷ்டிக்க (அதுவே)—நாராயணன் ஆம் முதல் நாயகனுக்கு—நாராயணனென்னுங் காரணப்பிரமத்திற்கு—ஆராதனை ஆம்=பூஜனையாம்;—அதனால் = அந்தப் பூஜனையினால்—அவனே= அந்த நாராயணனே—வாரா வழி ஆம் வரமே தரும் = (தமது கர்மங்களில் நிஷ்டையுடைய புருஷர்க்குப்) பிறவாநெறியாகிய வரந்தருவன்.—எ-று. ஆல்-அசைநிலை.

‘செயலே’ என்றதின் ஏகாரம் ஈற்றசை. ‘வரம்’ எ-து, பிரமான்மஐக்கிய ஞானநிஷ்டைக்கு யோக்கியதைரூபமான அந்தக்கரண சுத்தியை. (௩௯)

[தத்தம் வருணாச்சிரமதர்மமே மூடர்க்குப் பரமேசுரப் பிரசாதத்திற் கேதுவாவதால் அதிகாரிகளாகிய மநுடர் சுதர்மாநுஷ்டானமே செய்யவேண்டுமென்னும்பொருளை இப்போது ஸ்ரீபகவான் அருளிச்செய்கின்றார்.]

அல்லா வினைதா னழகாய் வரினுஞ்
செல்லார் பெரியோ ரவைசெய் வதனிற்
றொல்லார் குலமே தொடருந் தொழிலே
பொல்லா வெனினுஞ் செயலே பொருளே.

(இ-ள்.) அல்லா வினை தான்=(தமக்குரியன) வல்லாத பரதர்மங்களானவை—அழகு ஆய் வரினும்=எவ்வித தோஷங்களு மில்லாதன வாய் அநுஷ்டிக்க வருமாயினும்,—செல்லார் பெரியோர்=(பயத்துக் கேதுவாதலால், அந்தப்பரதர்மங்களிற்) செல்லார் பெரியோர்கள்;—அவை செய்வதனில்=அந்தப் பரதர்மங்களை யநுஷ்டிப்பதைப் பார்க்கிலும்—தொல் ஆர் குலமே = தொன்றுதொட்டு அநுஷ்டித்துவரும் (க்ஷத்திரிய) குலத்திற்கே — தொடரும் தொழில் = உரிமையாகிய யுத்தமுதலிய கர்மங்கள்—பொல்லா எனினும் = (பந்துஜனங்களின்) இம்சையோடு கூடினவென்று சொல்லினும்,—செயல் பொருளே=(வேதவிகிதமாதலால் அவைகளை)அநுஷ்டியாநிற்பது (அதர்மமன்று:) தர்மமே.—எ-று.

பாதர்மம்=பிட்சாடனுதி யதிதர்மம். (௩0)

[சாமான்யதோஷங்களோடுகூடியே சர்வகர்மங்களுமுள்ளனவாதலால், ஆன்மஞானமில்லாமல் வருணுச்சிரமாபிமானமுடையபுருஷர் சுபாவஜந்நியவிகிதகர்மங்களை ஓர்போதும் பரித்தியாகஞ்செய்யலாகாதென்னும்பொருளை இப்போது ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

**கனையெரி புகையோடன்றிக் காணமுன் படாமைபோல**
**வினைகளுங் குற்றந்தன்னை விட்டிரா வாதலாலே**
**யனையவென் றிகழ்தலாகா தடுத்தகா ரியங்கடம்மை**
**நினைவருந் தருமமென்று செய்கையே நீதியெல்லாம்.**

(இ-ள்.) கனை எரி=ஒலிக்கின்ற அக்கினியானது—புகையோடு அன்றி=புகையோடல்லாமல்—முன் காணப்படாமைபோல=எதிரே காணப்படாததுபோல — வினைகளும் = சர்வதர்மங்களும் — குற்றந் தன்னை விட்டு இரா=தோஷங்களை விட்டிராமற் றோஷங்களோடு கூடியேயுள்ளன; — ஆதலால்=அக்காரணத்தால், — அனைய என்று இகழ்தல் ஆகாது=அப்படித் தோஷமுடையனவென்று கருதி அசுத்தாந்தக்கரணமுடைய அஞ்ஞானி பரித்தியாகஞ்செய்தல் கூடாதாம்;—(பின்னையோ,) அடுத்த காரியங்கள் தம்மை=(தமது வணுச்சிரமத்திற்கு) உரியகாரியங்களை—நினைவு அரும் தருமம் என்று=நினைத்தற்கரிய தர்மமாமென்று கருதி—எல்லாம் செய்கையே=முழுதும் அநுஷ்டியாநிற்பதே—நீதி=நியாயமாம்.—எ-று.

தூமத்தினுல் ஆவிருதமான அக்கினியானது தோஷத்தோடுகூடியிருப்பினும் உலகமானது தூமரூபமான தோஷத்தை நாடாமல் அந்த



காரம், சீதம் இவைகளினிவிர்த்தியின்பொருட்டு அதனைச் சேவிப்பது போலவே சுதர்மமும் தோஷத்தோடு கூடியிருப்பினும் அத்தோஷத்தை நாடாமல் குணமாகிய அம்சமாத்திரத்தை நாடி அந்தக்காணசுத்தியின்பொருட்டுச் சேவிக்கத்தக்கதென்பது கருத்து. (௩௧)

[அசுத்தாந்தக்கரணமுடைய அஞ்ஞானி சர்வகர்மபரித்தியாகத்திற் சமர்த்தனுகாவிடில் அதில் யாவன்? சமர்த்தனுவனென்னும் அருச்சுனன் சங்கைக்குச் சுத்தாந்தக்கரணமுடைய முமுக்ஷுபுருஷனே சமர்த்தனுவனென ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

**வெல்லப்பட்ட மனத்தினனாய் வேறொன்றினையும் வேண்**
**டாதே, யல்லற்படுக்கு முடற்பற்று மறவேயறுத்தான் வினைய**
**டையச், செல்லச்செல்ல வறுத்தானு மதனாற்சித்த முடிவாகச்,**
**சொல்லப்பட்ட கரணங்க ணான்குந்தூய்தாய் விடுமன்றே.**

(இ-ள்.) வெல்லப்பட்ட மனத்தினன் ஆய்=வசீகிருதமான அந்தக்கரண முடையவனாய் (அதனால்)—வேறு ஒன்றினையும் வேண்டாதே=(புத்திர, தாராதிகளான) அந்நியங்களில் யாதொரு பதார்த்தத்தையும் இதற்கு நான், இஃதெனக்கென அபிமானியாமலே—அல்லல்படுக்கும் உடல் பற்றும்=துன்பப்படுத்தாநிற்குந் தேகத்தின் (ஜீவனத்திற் கேதுபூதமான அந்நபானுதிபோகங்களில்) இச்சையும்—அறவே அறுத்தான் = ஒழியும்படியாகவே நிவிர்த்தித்த (* சுத்தாந்தக்கரணமுடைய) அதிகாரிபுருஷன்—வினை அடைய=(சிகை, எக்ஞோபவீதமுதலியவைகளோடுகூடக்) கர்மங்கண் முழுதும் — செல்லச் செல்ல அறுத்தான் ஆம்=ஒழிந்துபோகும்படி பரித்தியாகஞ் செய்தவனும்;—அதனல் = அச்சந்நியாசபூர்வகமான வேதாந்த விசாரத்தினுல் — சித்தம் முடிவு ஆகச் சொல்லப்பட்ட கரணங்கள் நான்கும்=மனமுதற் சித்தமீறாகச் சொல்லப்படுகின்ற அந்தக்கரணங்களுன்கும் — தூய்து ஆய்விடும்=சுத்தமாய்விடும்;—எ-று. அன்று, ஏ-அசைநிலைகள்.

இங்கே, 'தூய்து'எ-து, பிரமசாட்சாத்காரத்தின் யோக்கியதாரூபமான பரமசுத்தியை. (௩௨)

* சுத்தம் எ-து, நிஷ்காமகர்மாநுஷ்டானத்தா லுண்டாகப்பட்ட சுத்தியை; இதனை அபாமசுத்தியென்பர்

[முன்சொன்ன பரமாம்சசந்நியாசிக்கு ஞானநிஷ்டையின் கிரமத்தால் பிரமப்பிராப்தியின்பிரகாரம் இனி அருளிச்செய்கின்றார்.]

**சொன்னகரண மவைநான்குந் தூய்தாய்விடவத் தூய்மையினா**
**லுன்னவரியபெரும்பொறையை யுடையனாகுமப்பொறையா**
**லின்னல்செய்யும்பொறியைந்துமிராகத்துவேடமெனுமிரண்டு**
**மன்னதன்னை நலியாமை மாற்றுமவற்றை மாற்றினால்.**

(இ-ள்.) சொன்ன கரணமவை நான்கும்=முன்னே சொல்லிய அவ்வந்தக்கரணங்கணான்கும்—தூய்து ஆய்விட=சுத்தியாய்விடவே,—அத் தூய்மையினால்=அவ்வந்தக்கரண சுத்தியினால்—(இவ்வதிகாரி புருஷன்) உன்ன அரிய = கருதுதற்கரிய — பெரும் பொறையை உடையன் ஆகும் = மகத்தான சாத்துவிக * தைரியத்தையுடையனாவன்;—அப் பொறையால்=அச்சாத்துவிகதைரியத்தால்—இன்னல் செய்யும் பொறி ஐந்தும்=(ஞானநிஷ்டைக்கு) விக்கினஞ்செய்யாநிற்குஞ் சப்தாதிவிஷயங்கள் ஐந்தனையும்,—இராகம் துவேடம் எனும் இரண்டும்=† இராகமும், துவேஷமும் என்று சொல்லப்படுகின்ற இரண்டனையும் — மன்ன = அருச்சுனா — தன்னை நலியாமை மாற்றும்=தன்னைவருத்தாதொழியும்படி பரித்தியாகஞ்செய்வன்;—அவற்றை மாற்றினால்=அவைகளைப் பரித்தியாகஞ்செய்தால்,—எ-று. (௬௩)

[இதுவுமது.]

**காடுமலையு மலைமுழைஞ்சுங் கடுமாமுதல நலிவில்லா**
**வோடும்புனலா றுள்ளிட்ட விடமேயுறையு ளாக்கொண்டு**
**தேடும்பொருளொன் றின்றியே சிறிதேயுண்டு சென்றெங்கு**
**மாடுமனம்வாய் மொழியாக்கை யடங்கப்பெறுமா லவனையா.**

(இ-ள்.) காடும்=வனமும்,—மலையும்=பருவதமும்,—மலைமுழைஞ்சும்=மலைக்குகையும்;—கடு மா முதல நலிவு இல்லா = கொடுமையுள்ள மிருகமுதலியவை(தியானத்திற்கு விரோதமாக) வருத்துதலில்லாத—ஓடும் புனல் ஆறு உள்ளிட்ட இடமே = ஓடாநின்ற நீரையுடைய நதியுள்ளடங்கிய இடமுமே — உறையுளாக்கொண்டு=(தான் வசிக்கும்) ஸ்தானமாகக்கொண்டு—தேடும் பொருள்=(யாவராலுஞ் சம்பாதிக்கத்தக்க (இகலோக பரலோகங்களிலுள்ள) பொருள்களுள்,—ஒன்று இன்றி=ஒன்றிலும் (ஆசை) யில்லாமல் (வைராக்கியத்தை ஆசிரயித்து) — சிறிதே உண்டு = (நித்திரை, ஆலசியமுதலியவற்றிற்குக் காரணங்களான அன்னங்களைப் புஜியாமல் இதமாயும், பவித்திரமாயுமுள்ள அன்னங்களை) அற்பமாகப் போஜனஞ்செய்து (நித்தியம் * தியான † யோகபராயணனாய்) — சென்று எங்கும் ஆடும்=(பகிர்முகமாகச் சென்று எங்குஞ் சலியாநிற்கின்ற—மனம் வாய்மொழி யாக்கை அடங்கப் பெறும் = மனம், வாக்கு, சரீரங்கள் தன்வசமாகப் பெறுவன்—அவன் ஐயா=அவ்வதிகாரியானவன் அருச்சுனா.—எ-று. ஆல்-அசை. (௬௪)

தியான, யோகமென்பவை எஞ்சிநிற்றலால் வருவித்தாம்.

[இதுவுமது.]

**சொன்ன விவைபோ யடங்கிடவே தோன்றுங்களிப்**
**புங் காமமுமுன், பென்ன தியானென் கின்றதுவு மெரிபோல்**
**வெகுளி யொடுவலியு, முன்ன றவிர்ந்து சாந்திபெறுஞ் சாந்தி**
**பெறவே யோரிடத்தும், பின்ன மடையா தொன்றாகி நின்ற**
**பொருளின் பேருருவாம்.**

(இ-ள்.) சொன்ன இவை போய் அடங்கிடவே=சொல்லிய இம்மனோவாக்குக்காயங்கள் நிரோதமாய் வசமாகவே—தோன்றும் களிப்பும் = (தர்மத்தையதிக்கிரமணஞ்செய்து) சந்தோஷத்தாற்றோன்றும் மதமும்,—காமமும் = விஷயாபிலாஷையும்,—முன்பு என்னது யான் என்கின்றதுவும்=முன்பேயுள்ள மமகாராகங்காரங்களும்,—எரிபோல் வெகுளியொடு வலியும் = அக்கினியைப்போற் றுபப்படுத்தாநிற்குங் குரோதமும், (சுருதி, ஸ்மிருதிரூப சாஸ்திரவிருத்தமான) அசத்தாக்கிரகமும் (ஆகிய இவற்றை)—உன்னல் தவிர்ந்து சாந்திபெறும்=கருதுதலொழிந்து சாந்தியடைவன்;—சாந்திபெறவே=சாந்தியடையவே,—ஓரிடத்தும் பின்னம் அடையாது=யாதோரிடத்தும்வேறுபாடடையாமல்—ஒன்று ஆகிநின்றபொருளின்=ஏகரசமாயுள்ள பிரமத்தின்—பேர் உரு ஆம் = பூரணரூபமான அவஸ்திதிக்குச் சமர்த்தனாவன்;—எ-று. (௬௫)

[பிரம்மாஹமென்னும் நிச்சலரூபமான அவஸ்தானத்தின்பயனை யருளிச்செய்கின்றார்.]

**அந்தவுருவா னவன்பின்னை யாதேவரினு மழிவுறா**
**னிந்தவுலகத் துயிர்க்கெல்லா மொத்தேயிருக்கு மீங்கிவனும்**

* தைரியம்=சரீரேந்திரிய சங்காதங்களைச் சாஸ்திர நிஷித்தமார்க்கப் பிரவிர்த்தியினின்றும் நிவிர்த்திசெய்யுஞ் சாமர்த்தியம்.

† இராகத்துவேஷம்=சரீரஸ்திதிமாத்திரத்தில் உபயோகமான சப்தாதிவிஷயங்களிலுளவாகும் இராகத்துவேஷங்கள்.

* தியானம்=ஆன்மாகார ஸஜாதீயவிருத்திப்பிரவாகம்.

† யோகம்=சித்தவிருத்திநிரோதம்.

**பந்தமறவிட் டெனையறியும் பத்திபெறுமப் பத்தியினுற்**
**சிந்தையிடையே யெனைத்தெளியு மதனுலெனையே சேருமால்.**

(இ-ள்.) அந்த உரு ஆனவன்=அந்தப் பிரமபாவமடைந்த பிரசந்நசித்தமுடைய புருஷன்--பின்னை = பின்னர், — யாதே வரினும் அழிவு உருன்=(தேகாதிகளில் அபிமானமின்மையின் சம்சாரவிஷயங்களில்) யாதொரு நஷ்டம்வரினுந் துன்பமடையான்.—இந்த உலகத்து உயிர்க்கு எல்லாம்=இவ்வுலகின்கண்ணுள்ள பிராணிகளனைத்திற்கும்—ஒத்தே இருக்கும் = ஒத்தேயிருப்பன். (ஒருவர்க்குச் சுகம் வந்தவிடத்து அது தனக்குவந்ததுபோலவும், ஒருவர்க்குத் துக்கம் வந்தவிடத்து அது தனக்குவந்ததுபோலவும் பார்ப்பனென்றபடி.)—ஈங்கு இவனும்=இவ்வாறுன ஞானநிஷ்டையினையுடைய சந்நியாசியும்—பந்தம் அற விட்டு = பந்தரூபமான வாசனைகண் முழுதுமொழித்து—எனை அறியும் பத்தி பெறும்=பரமான்மதேவனுன என்னைச் சாட்சாத்கரித்தற்குக் காரணமாகிய (ஞானலட்சணமான எனது)பக்தியை யடையாநிற்பன்;—அப்பத்தியினுல் = நிதித்தியாசனரூபமான அந்தப் பக்தியினுல் — சிந்தையிடையே = (தனது) சித்தத்தின்கண்ணே — எனைத் தெளியும்=பரமான்மதேவனுன என்னை (உள்ளபடியே அகண்டைகரச அத்துவிதியாநந்தரூபப்பிரமம் நானேயென்று) சாட்சாத்கரிப்பன்;—அதனுல்=அந்த எனது சாட்சாத்காரத்தினுல் — எனையேசேரும்=(தேகபாதத்தினநந்தரம் பரப்பிரமரூபனுன) என்னையே (அபேதமாக) அடையாநிற்பன்.—எ-று. ஆல்-அசைநிலை. (சஎ)

[சுதர்மாநுஷ்டானமான ஈசுராராதனத்தால் முக்தி உளதாமென்று முற்கூறிப்போந்ததை உபசம்மரிக்கின்ருர்.]

**என்னைப்பற்றிக் கொடுநின்றே யெல்லாவினையு மியற்றி**
**னுற், பின்னைப்பிறவாப் பெரும்பதமென் னருளினுலே பெறு**
**ங்கண்டாய், நின்னைத்தொடரும் வினையெல்லா மென்னைநினைந்**
**தே செயில்வினைக, டன்னைக்கடத்தற் கருந்துன்ப மெல்லாங்**
**கடக்கத் தகுதியால்.**

(இ-ள்.) என்னைப் பற்றிக் கொடுநின்றே=(பரமேசுரனுன) என்னை ஆசிரயித்துக்கொண்டுநின்றே—எல்லா வினையும் இயற்றினுல்—(நித்திய, நைமித்திகமாகிய) சர்வகர்மங்களையும் அநுஷ்டித்துவருவனுயின்,—(அவ்வதிகாரிபுருஷன்) பின்னைப் பிறவாப் பெரும் பதம்=மீண்டுஞ் சநநமாகும்படிக்கில்லாத விஷ்ணுபதத்தை—என் அருளினுலே பெறும்=(பரமேசுரனுன) எனது கிருபையினுலே அடைவன்.—(ஆகலின்,) நின்னைத் தொடரும் வினை எல்லாம் = (க்ஷத்திரியனுன) உன்னைச் சம்பந்தித்தவைகளாயுள்ள யுத்தமுதலிய கர்மங்கள் எவற்றையும்—என்னைநினைந்தே செயில்=(விவேகபுத்தியினுற்பரமேசுரனுன) என்னிடத் தர்ப்பணஞ்செய்வாயாகில் (என்னிடத்தே சித்தமுடைய அருச்சுனு என்னுடைய பிரசாதத்தால்)—வினைகள் தன்னை=சர்வ கர்மங்களையும்,—கடத்தற்கு அரும் துன்பம் எல்லாம்=துஸ்தரமான சம்சாரதுக்கங்கண்முழுதையும் — கடக்கத் தகுதி=நீ கடத்தற்குரியவனுவாய்.—எ-று. ஆல்-அசைநிலை.



'என்னைப்பற்றிக் கொடுநின்றே' என்னுந் தேற்றேகாரத்தால் சுவர்க்கமுதலியபயன்களை விழையாமலென்பது பெறப்படுகின்றது.()

[இங்ஙனங்கூறிப்போந்ததற்கு விபரீதபட்சத்திற் றோஷமருளிச் செய்கின்ருர்.]

[வேறு.]

**ஒன்றிய மனத்தினுலே யானுரைக் கின்றவுண்மை**
**நன்றிதென் றுணராயாயி னுசமே யடைதிமற்றீ**
**தன்றியு மரசர்க்கெல்லா மடுத்தகா ரியமாயுள்ள**
**வென்றியை யடையாநிற்கு வேறினி விளைவகேளாய்.**

(இ-ள்.) ஒன்றிய மனத்தினுலே=குவிந்தமனத்தினுலே—யான் உரைக்கின்ற உண்மை=(பரமேசுரனுன) நான் அருளிச்செய்த மெய்ம்மையான வாக்கியார்த்தத்தை—இது நன்று என்று உணராயாயின்=இதுவே நல்லதென்றறிந் தநுஷ்டானஞ் செய்யாயாளுல்—நாசமே அடைதி=நஷ்டமேயடைவாய்;—ஈது அன்றியும்=இஃதன்றியும்—அரசர்க்கு எல்லாம்=க்ஷத்திரியர் யாவருக்கும்—அடுத்த காரியம் ஆய் உள்ள=கிட்டிய தொழிலாயுள்ள—வென்றியை அடையாநிற்கு=சத்துருஜயத்தையடைய இச்சியாத உனக்கு—வேறு இனிவிளைவகேளாய்=வேறே இனி உண்டாகுந் துன்பங்களையுங் கேட்பாய்.—எ-று.

மற்று - அசைநிலை. உம், எதிரதுதழீஇய எச்சவும்மை. யுத்தமுதலிய சுதர்மங்களைப் பரித்தியாகஞ்செய்து சந்நியாசமுதலிய பரதர்மங்களை யநுஷ்டிக்கவருவதாற் சர்வபுருஷார்த்தங்களினின்றும் பிரஷ்டனுவாயென்பார், 'நாசமேயடைதி' என்ருர். (சஅ)

[தர்மத்தினின்றும் பிரஷ்டனுவேனுயினும் பந்து ஜனங்களோடு யுத்தஞ்செய்யேனென்னும் அருச்சுனனுக்கு ஸ்ரீ பகவான் கூறுகின்ருர்.]

[வேறு.]

விளைசெய் தார்மன்ன வேண்டலை யாயினுங்
களைசெய் மாயையுங் காலுற வாழ்த்திடு
மரசர் தங்குண மாகிய வாண்மையே
புளைசெய் வாளமர்க் கேபுகு விக்குமால்.

(இ-ள்.) விளை செய் தார் மன்ன = வாசனையைத்தரப்பட்டமாலை யணியப்பெற்ற அருச்சுன — வேண்டலை ஆயினும் = (பந்துஜனங்களோடு கூடிச்செய்யும் உனது சுதர்மமான யுத்தத்தை நீ செய்ய) விரும்பவில்லையானாலும் — களை செய் மாயையும் = (க்ஷத்திரியர்க்குரியதென்று) வளையறைசெய்த (இரஜோகுணசொரூபப்) பிரகிருதியும் — கால் உற ஆழ்த்திடும் = (யுத்தத்தில் உன்னைக்) காலால் அவசியமழுத்தாநிற்கும் (பிரேரியாநிற்குமென்றபடி.)—[இனி ஸ்ரீ பகவான் அருச்சுனனுக்கு அவனது பிரகிருதியின் அதீனத்தன்மையை நிரூபணஞ்செய்கின்றார்.] அரசர்தம் குணம் ஆகிய ஆண்மையே = க்ஷத்திரியரின் சுபாவஜந்யமாகிய சௌரியாதிகளே—புளைசெய் = குற்றத்தைச்செய்கின்ற — வாள் அமர்க்கே = வாண்முதலிய ஆயுதங்கொண்டு செய்யப்பட்ட யுத்தத்தில்—புகுவிக்கும் = க்ஷணத்திற் பிரேரணைசெய்யும்.—எ-று.

ஆல் - அசைநிலை. ஏகாரம் இரண்டில், முன்னது தேற்றம்: பின்னது ஈற்றசை. (௪௯)

[மேலைச்செய்யுளிற் சாங்கியாதிமதாநுசாரமாகப் பிரகிருதியின் பாரதந்திரியமும், சுபாவபாரதந்திரியமும் அருளிச்செய்து இப்போது தமது மதமருளிச்செய்கின்றார்.]

பொறிக ளுண்ணின் றவற்றின் புணர்ப்பெலா
மறிய வாட்டினன் போலாக் கைகடொறு
மறைவி னின்றுதன் மாயையி னால்வினைக்
குறிகள் செய்விப்ப னீசனென் றேகொள்வாய்.

(இ-ள்.) பொறிகள் உள் நின்று = (தாருவினாற் செய்யப்பட்ட யானைமுதலிய) பிரதிமைகளினுள்ளே (மறைந்து) நின்று—அவற்றின் புணர்ப்பு எலாம் = அவைகளின் சம்பந்தங்களான (கை, பாத, கன்ன முதலியவற்றின்) செய்கைகண்முழுவதும்—அறிய = (உலகில் யாவரும்) அறிய—ஆட்டினன் போல் = (செய்விக்குஞ்) சூத்திரதாரியைப் போல—ஈசன் = அந்தரியாமியாகிய ஈசுரனும்—ஆக்கைகள்தோறும் =



(சர்வப்பிராணிகளின்) லிங்கதேகமென்னும் இருதயங்கடோறும்— மறைவில் நின்று = மறைந்து நின்று—தன் மாயையினால் = தனது மாயாசக்தியினால்—வினைக் குறிகள் = அவ்வப்பிராணிகளின் சுபாசுப கர்மங்களாகிய வெண்ணங்களை—செய்விப்பன் என்றே கொள்வாய் = செய்விப்பனென்றே அருச்சுன நீ மனத்திற்கொள்ளுதி.—எ-று.

சூரியன் சொச்சத்திரவியத்திற்போல அந்தரியாமியாகிய ஈசுரன் சாமான்யத்தால் சர்வத்திர வியாபகமாக இருந்தாலும் அந்தக்கரணங்களில் விசேஷமாக அபிவியக்தியாவதால் அவற்கு இருதயதேசத்தில் ஸ்திதி கூறினர். (௫0)

[இப்போது சர்வகீதாசாஸ்திரார்த்தங்களையும் உபசம்மாரஞ் செய்பவராய் ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

வேறப் பாலொரு வர்க்கும் விளம்புதன்
மாறப் பட்ட பொருளின் வகையெலாங்
கூறப் பட்ட துனக்கிக் குறிகளை
யேறப் பார்த்துனக் கேறிய வாசெய்வாய்.

(இ-ள்.) வேறு ஒருவர்க்கும் = மற்றொருவருக்கும்—அப்பால் = இனி—விளம்புதல் மாறப்பட்ட = உபதேசிக்கத்தகாத — பொருளின் வகை எலாம் = மந்திரயோகாதி இரகசியார்த்தங்களினும் அதிரகசியமான ஞானார்த்தங்கண் முழுதையும் — உனக்குக் கூறப்பட்டது = அருச்சுன உனக்கு (எனது கருணையினால்) உபதேசிக்கப்பட்டது; = இக்குறிகளை = என் கருத்தாயுள்ள இவைகளை—ஏறப்பார்த்து = நன்றாக விசாரித்து — உனக்கு ஏறியவாசெய்வாய் = உனக்கிச்சையானபடிசெய்வாய்.—எ-று. ஆறு என்றதின் ஈறு தொக்கது. (௫க)

[அத்தியந்தம் கெம்பீரமான கீதாசாஸ்திரார்த்தங்கண் முழுதையும் விசாரணை செய்வதாலுளதாகும் பரிசிரமநிவிர்த்தியின்பொருட்டு ஸ்ரீ பகவான் தாமே கிருபையினால் கீதாசாஸ்திரத்தின் சாரார்த்தங்களைத் தொகுத்தருளிச்செய்கின்றார்.]

[வேறு.]

தீதகலா தெனவுளவோ விவன்வேண்டி லெனத்தேறி
யோதலினா னினைத்தலினா லெனைப்போக்கி யொன்றறியா
யாதலினால் யாவர்களு மறியாத வொருபொருளைக்
காதலினா லுனக்கின்னு முரைக்கின்றேன் கடைப்பிடிநீ.

(இ - ள்.) இவன் வேண்டில் = இப்பகவான் கிருபை செய்திடில்,—தீது அகலாது என உளவோ = தீமைகணீங்காவென்றுண்டோ?—எனத் தேறி = என்றுநிச்சயித்து—ஓதலினால் = வாக்காற்றுதித்தலினாலும்,—நினைத்தலினால் = மனத்தாற் சிந்தித்தலினாலும்—எனைப் போக்கி = (பரமேசுரனான) என்னைத் தவிர்த்து—ஒன்று அறியாய் = வேறொரு தெய்வத்தையும் அறிந்திலை;—ஆதலினால் = அக்காரணத்தினால்—பாவர்களும் அறியாத = யாவர்களாலுமறியப்படாத—ஒருபொருளை = அத்தியந்தரகசியத்தை—காதலினால் = கிருபையினால்— உனக்கு = அருச்சுனனாவுனக்கு—இன்னும் உரைக்கின்றேன் = மீட்டும் அருளிச்செய்கின்றேன்;—நீ கடைப்பிடி = நீ உறுதியாக மனதிற்பற்றுதி.—எ-று. (௫௨)

[சர்வ ஹிதங்களிலும் பரமமான ஹிதத்தை ஸ்ரீ பகவான் இப்போதருளிச்செய்கின்றார்.]

**என்னையே நினைந்தெழவுன் மனத்தினையென் னிடையேவை**
**யென்னையே நினைந்திருநீ மற்றெனக்கே பூசனைசெ**
**யென்னையே குருவாக்கொள் ளெப்போது மிதுசெய்யி**
**லென்னையே வந்தடைதி யிதுமெய்யே யிதுமெய்யே.**

(இ-ள்.) நீ = அருச்சுனா நீ—என்னையே நினைந்து எழ = (* வாசுதேவனான) என்னையே நினைந்தெழும்படி—உன் மனத்தினை என்னிடையே வை = உனதுமனத்தை என்னிடத்தே † அநுராகமுடையதாக வைத்து—என்னையே நினைந்து இரு = சர்வகாலமும் என்னையே சிந்தனஞ்செய்துநிற்பாய்;—[இதற்குபாயமென்னையோவெனின்? அதற்குக் கூறுகின்றார்.] எனக்கே பூசனை செய் = (என்னிடத்து அநுராகபக்தியானது உனக்குக் கிடைத்தற்பொருட்டுச்) சர்வகாலமும் என்னிடத்தே பூஜாபராயணனாவாய்.—[பூஜனைக்குரிய சாமக்கிரியைகள் கிடையாவிடில், அவ்வநுராகபக்தியானது கிடைத்தற்பொருட்டுச் செய்யத்தக்கவுபாயமென்னையோவெனின்? அதற்குக் கூறுகின்றார்.] என்னையே குருவாக்கொள் = (பரமேசுரனான) என்னையே சற்குருமூர்த்தியாகக்கொண்டு ‡ நவவிதமான பாகவததர்மங்களால் வழிபடுவாய்;—

* சர்வபூதங்களும் எவரிடத்தில் வசிக்கின்றனவோ, எவர் சர்வபூதங்களிலும் அந்தரியாமியாக வசிக்கின்றனரோ அவர் வாசுதேவர்.

† அநுராகம் = தொடர்ந்தவிருப்பம்.

‡ நவவிதபக்தி = ௨௮௮-வது பக்கம் டிப்பணத்திற் காண்க.



எப்போதும் இது செய்யில் = சர்வதா இப்பாகவததர்மங்களை யநுஷ்டிக்கில்,—என்னையே வந்து அடைதி = (என்னிடத்து அநுராகபக்தியுடையவனாய் வேதாந்தவாக்கியங்களா லுண்டாகப்பட்ட ஆன்மசாட்சாத்காரத்தால் அபேதரூபமாக அத்விதீயநிர்க்குண பரப்பிரம்மரூபனான) என்னையேவந்தடைவாய்.—[இப்போதருளிச்செய்த பொருளில் அருச்சுனனுக்குத் திடவிசுவாசம் உண்டாக்குவித்தற்பொருட்டுச் சபதஞ்செய்கின்றார்.] இது மெய்யே இது மெய்யே = இது சத்தியம் இது சத்தியம்.—எ-று. (௫௩)

[பூர்வமருளிய இரகசியத்திலும் அதிரகசியத்தை இப்போது ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.]

**இருவேறு வகையாய வெவ்வேறு வினைகளையு**
**மருவேனென் றறவிட்டு மாயையினான் மறைப்பரிய**
**வொருவனையே பற்றுதியப் பற்றினா லுனைப்பிறவிக்**
**கருவேலை கடந்தேறக் கைதருவேன் கதிர்வேலோய்.**

(இ - ள்.) கதிர் வேலோய்—ஒளிபொருந்தியவேலையுடைய அருச்சுனா — இருவேறு வகை ஆய = தர்மம், அதர்மம் என்னும் இரண்டு கூறுபாடுடையனவாகிய—வெவ்வேறு வினைகளையும் = வேறுவேறான சர்வகர்மங்களையும்—மருவேன் என்று = இனிப்பொருந்தேனென்று—அறவிட்டு = அவற்றின் ஆதரமொழியப்பரித்தியாகஞ்செய்து—மாயையினால் மறைப்பு அரிய = மாயையான் மறைத்தற்கரிய—ஒரு வனையே = அத்துவிதீயனான என்னையே—பற்றுதி = நானே நீயென்று * சரணமடைதி;—அப்பற்றினால் = இவ்வாறென்னைச் சரணமடைந்ததனால்—பிறவிக் கருவேலை கடந்து ஏற = ஜநநரூபமாகிய மகோததியைத் தாண்டிக் கரையேறும்படி—உன்னைக் கை தருவேன் = உனக்குக் கிருபை செய்யாநிற்பேன்; (ஆதலால், நீ சோகத்தையொழிதி.)—எ-று.

'உனை' எ-து, வேற்றுமைமயக்கம். சொரூபமாகத் தர்மங்களிருந்தும் இந்தத்தர்மங்களே நமக்குச் சரணமென்று சுவீகரியாமல் சர்வதர்மங்களின் அதிஷ்டானரூபனும், சர்வதர்மங்களின் பலப்பிரதாதாவும் ஆகிய அத்விதீயஈசுரரூபமான சரணத்தையடைதி; அல்லது, அந்நியவபேட்சையுடைய தர்மங்களால் பிரயோஜனம் என்னை: அந்நியவபேட்சையில்லாத பகவானுடைய அநுக்கிரகத்தினாலேயே நான் கிருதார்த்தனாவேன் என்னும் நிச்சயத்தால் தர்மங்களிற் பெரும்பாலும்

* சரணம் = அடைக்கலம்.

ஆதரமில்லாமல் பரமாநந்தகனமூர்த்தியாகிய ஸ்ரீ பகவான் வாஸுதேவ னையே நிரந்தரம் பாவனைசெய்து பஜிப்பாய்; அல்லது, பரமான்மதேவ னது சிந்தனமே பரமதத்துவமாம்; இந்தப்பரமான்மாவினும் அதிகதத் துவம் வேறொன்றுமின்றென்னும் விசாரபூர்வகமான விருப்ப மிகுதி யினால் தயிலதாரைபோல அநவச்சிந்நமனோவிருத்திகளால் பரமான்ம தேவனான என்னை நிரந்தரஞ் சிந்தனஞ்செய்தி என்பார், 'இருவேறு வகையாய வெவ்வேறு வினைகளையு, மருவேனென் றறவிட்டு மாயையி னூன் மறைப்பரிய, வொருவெனையே பற்றுதி' என்றார். 'ஒருவெனை யே பற்றுதி' என்னும் வசனத்தால் ஒருபகவத் சரணத்தன்மை மாத்தி ரமே விதானஞ்செய்தனர். 'வினைகளை யறவிட்டு' என்னும் வசனமா னது கேவலம் அநுவாதமாத்திரமேயாம்: கர்மத்தியாகத்தின் விதா னம் இன்றாம். சர்வசாஸ்திரங்களின் பரமமான ரகசியமானது ஈசுர சரணத்தன்மையேயாம் ஆகலின், ஸ்ரீ பகவான் ஈசுரசரணத்தன்மையி லேயே இந்தக் கீதாசாஸ்திரத்தின் பரிசமாப்திசெய்தனர் என்றறிக.

[ஸ்ரீ பகவான், "இருவேறு" என்னும் மேலைச்செய்யுள்பரியந் தஞ் சர்வகீதாசாஸ்திரார்த்தங்களையுஞ் சமாப்திசெய்து இப்போது இந் தப் பிரமவித்தியாரூப கீதாசாஸ்திரத்தின் சம்பிரதாயவிதியை யரு ளிச்செய்கின்றார்.]

**மற்றுனக்குச் சொல்லியவிம் மறைப்பொருண்மா தவமிலர்க்**
**குற்றமறுத் தறிவருளுங் குருவழிபா டிலாதவர்க்குஞ் [குஞ்**
**செற்றமனச் சழக்கர்க்கு மெனைநினையாத் திறத்தவர்க்**
**மற்றமறத் தெரிந்துரைக்கை யடாதென்றே யறிகண்டாய்.**

(இ-ள்.) மற்று உனக்குச் சொல்லிய=அருச்சுனா உனக்குபதே சித்த—இம்மறைப் பொருள்=இக்கீதாசாஸ்திரத்தின் இரகசியார்த்தங் களை—மா தவம் இலர்க்கும் = இந்திரியநிக்கிரகரூபமான அல்லது, சுதர்மரூபமான தபசில்லாதவர்க்கும்,—குற்றம் அறுத்து அறிவு அரு ளும் = சர்வதோஷங்களையு நிவிர்த்தித்துப் பிரமான்ம ஐக்கிய ஞானத் தை உபதேசித்தருளுகின்ற—குரு வழிபாடு இலாதவர்க்கும் = குரு சேவைசெய்யாதவர்க்கும்,—செற்றம் மனச்சழக்கர்க்கும்=(என்னிடத் தசூயையினால்) துவேஷமனமுடைய அறிவிலிகட்கும்,—எனை நினை யாத் திறத்தவர்க்கும் = என்னிடத் தன்பில்லாதவர்க்கும் — அற்றம் அறத் தெரிந்து உரைக்கை = அச்சம் அறத் தெரிந்துபதேசித்தல்— அடாது என்றே அறி=கூடாதென்றே அறிவாய்.—எ-று.

கண்டாய்-முன்னிலை அசை. (௫௫)



[இந்தப்பிரகாரம் இந்தப் பிரமவித்தியாரூபமான கீதாசாஸ்திரத் தின் சம்பிரதாயவிதியையருளிச்செய்து இப்போது ஸ்ரீபகவான் அச் சம்பிரதாயப் பிரவர்த்தகபுருஷரின்பயனை யருளிச்செய்கின்றார்.]

**எல்லாப்பொருட்கும் பரமாமிப் பொருளையென்னன்**
**பர்க்கிசையச், சொல்லாற்றெரிவிப் பவரென்பா லன்புதுன்னி**
**யெனையடைவர், நல்லார்களின்மற் றெனக்கினிய நன்மைசெய்**
**கின் றாருமவ, ரல்லாதவரிப் பொழுதுமிலை மேலுமவர்க**
**ளுளராகார்.**

(இ-ள்.) எல்லாப் பொருட்கும்=சகலமான இரகசியார்த்தங்களி லும்—பரம்ஆம் இப்பொருளை=பரமரகசியமான இக்கீதார்த்தத்தை— என் அன்பர்க்கு=(பரமேசுரனான) எனது பக்தர்களுக்கு—இசைய= (மனத்திற்) பொருந்தும்படி—சொல்லால் தெரிவிப்பவர் = (தமது) வாக்காற் போதித்தறிவிப்பவர்—என்பால் அன்பு துன்னி=என்னிடத் துப்பரமமான பக்தி நிறைந்து—எனை அடைவர்=(வாசுதேவனான)என் னையே அடையாநிற்பர். (ஜநநமரணரூப சம்சாரத்தினின்றுஞ் சீக் கிரம் முக்தரோயாவரென்றபடி.)—நல்லார்களில்= நல்ல மநுடர்களுள் ளே;—எனக்கு = (பரமேசுரனான) எனக்கு—இனிய நன்மை செய் கின்றாரும் அவர் = சந்தோஷமாகிய நன்மையைச் செய்கின்றவரு மவரே.—அல்லாதவர் = இக்கீதையை என்னன்பர்க்கு உபதேசியாத வர்—இப்பொழுதும் இலை=வர்த்தமானகாலத்தும் (என்னைச் சந்தோ ஷப்படுத்துகிறவர்களாக) இல்லை;—மேலும் அவர்கள் உளராகார்= இனிமேலும் அவர்கள் (என்னைச் சந்தோஷப்படுத்துபவர்களாக) ஆகார்.—எ-று. மற்று-அசைநிலை. (௫௬)

[முற்செய்யுளில் இந்தப் பிரமவித்தியாரூபமான கீதாசாஸ்திரத் தை ஓதுவிப்பவர்க்குளதாகும் பயனை யருளிச்செய்து இப்போது இதனை ஓதாநிற்பவனுக்குளதாகும் பயனையும், கேட்பவனுக்குளதாகும் பயனையும் அருளிச்செய்கின்றார்.]

**ஏயவிருவோம் பேசியவிவ் வறநூலினையே யெடுத்துரைப்பா**
**னையஞான யாகத்தா லெனையேயாரா திக்கின்றான்**
**மேயபொருளை தனைவிட்டு விருப்பாலிதனைக் கேட்பானுந்**
**தீயவினைக ளறவிட்டுத் தேவருலகஞ் சேருமால்.**

(இ-ள்.) ஏய இருவோம் பேசிய = பொருந்த நாம் இருவருஞ் சம்வாதித்த — இவ்வற நூலினை = தர்மரூபமான இக்கீதாசாஸ்திரத்

தை—எடுத்துஉரைப்பான்=குருமுகமாகப்பெற்றுநியமமாகப்படிக்கும் அதிகாரிபுருஷன்—ஆய ஞான யாகத்தால்=(ச-ம் அத்தியாயத்திற் கூறிய திரவிய எக்ஞமுதலிய சர்வ எக்ஞங்களினுஞ்) சிரேஷ்டமாகிய ஞான எக்ஞத்தால்—எனையே ஆராதிக்கின்ருன் = (பரமேசுரனுன) என்னையே ஆராதனஞ் செய்கின்றனன் (என்று எனது நிச்சயம்.)—மேய பொருமைதனை விட்டு = (படிப்பவன்பேரில் ஆரோபணஞ்) செய்யும் அசூயை விடுத்து—விருப்பால் இதனைக் கேட்பானும்=(ஆஸ்திகபுத்திரூபமான) சிரத்தையோடும் இக்கீதாசாஸ்திரத்தைக் கேட்பவனும்—தீய வினைகள் அற விட்டு = சர்வபாவங்களினின்றும் முக்தனுய்—தேவர் உலகம் சேரும் = (அசுவமேதமுதலிய புண்ணியகர்மங்களைச் செய்யாநிற்பவரா லடையப்படும்) உத்தமலோகங்களை யடையாநிற்பன்.—எ-று. ஏ, ஆல்-அசைநிலைகள்.

'விருப்பாலிதனைக் கேட்பானும்' என்றவும்மையால், கீதாசாஸ்திரத்தை அர்த்தஞான மின்மையனுய்க் கேவலம் அக்ஷரமாத்திரத்தைக் கேட்கும் புருஷனும் உத்தமலோகத்தை யடைவனுனல் இதனை அர்த்தஞான பூர்வகமாகச் சிரவணஞ்செய்யாநிற்கும் புருஷன் அவ்வுத்தமலோகத்தை யடையாநிற்பனென்பதிற் சொல்லவேண்டுவதென்னையென்னுங் கைமுதிகந்நியாயத்தை ஸ்ரீ பகவான் குறிப்பித்தனரொன்றறிக.

[சமுசயாதிரகிதஞானம் உண்டாகவில்லையானுல் மீட்டும் உபதேசிப்பாமென்னும் அபிப்பிராயங்கொண்டு ஸ்ரீ பகவான் வினவுகின்ருர்.]

[வேறு.]

**என்னது மொழியினுலியா னியம்பிய ஞானத்தாலே**
**மன்னவ வுனக்குவந்த மயக்கெலாங் கெட்டதோயான் [ன்று**
**சொன்னவிப் பொருள்களெல்லாந் துணிந்தனை கொல்லோவெ**
**நன்னகை கூரநின்று நாயக னருளிச்செய்தான்.**

(இ-ள்.) மன்னவ = அருச்சுன — என்னது மொழியினுல்=(பிரமவித்தியாரூபமான) எனதுகீதையினுல்—யான் இயம்பியஞானத்தாலே = (பரமேசுரனுன) என்னுல் உபதேசிக்கப்பட்ட ஞானத்தினுலே—உனக்கு வந்த = உனக்கு (அஞ்ஞானத்தால்) உண்டான—மயக்கு எலாம்= * விபர்யயரூபமான மோகங்கண்முற்றும் — கெட்டதோ=(அஞ்ஞானரூபமான காரணத்தோடுகூட) நஷ்டமாயினவோ

* விபர்யயம் எ-து, அநான்மரூபமான தேகாதிகளில் ஆன்மத்துவபுத்தியும், சுதர்மரூபமான யுத்தத்தில் அதர்மத்துவபுத்தியும் ஆகிய இவற்றை.



—யான் சொன்ன இப்பொருள்கள் எல்லாம்=என்னுல் உபதேசிக்கப்பட்ட இந்த அர்த்தங்களையெல்லாம்—துணிந்தனை கொல்லோ என்று =ஏகாக்கிரசித்தத்தால் நிச்சயஞ்செய்தனையோ என்று—நல் நகைகூர நின்று=புன்னகைகொண்டு நின்று — நாயகன் அருளிச்செய்தான்= ஸ்ரீ பகவான் வினவினர்.—எ-று. (௬அ)

[ஸ்ரீ பகவான் வினவியதற்கு அருச்சுனன் உமது கிருபையினுல் சமுசயாகிதஞானம் உதித்ததெனல்.]

[வேறு.]

**மன்னவவென் மாயமது சூதமறை நாலின்**
**முன்னவ மொழிந்ததிரு வாய்மொழிக ளாலே**
**யென்னகுறை யுண்டினி யெனக்கென வியம்பித்**
**தன்னக மகிழ்ந்திவை தனஞ்சய னுரைப்பான்.**

(இ-ள்.) மன்னவ=அரசனே,—என் மாய=எனதுமாயனே,—மதுசூத=மதுசூதன, — மறை நாலின் முன்னவ=நான்குவேதங்களின் சம்பிரதாய கர்த்தாவே—மொழிந்த திருவாய்மொழிகளாலே= தேவரீர் உபதேசித்தருளிய சிறந்த வாக்கியங்களால்—இனி எனக்கு என்ன குறை உண்டு=(உமதுபக்தனுன) எனக்கு இனிச் செய்யவேண்டும், அறியவேண்டும் என்பனமுழுதும் இலவாயின—என இயம்பி = என்று பகவானிடத்திற்கூறி—தனஞ்சயன்=அருச்சுனனுனவன்—தன் அகம் மகிழ்ந்து=தனது மனமகிழ்ந்து—இவை உரைப்பான்= மேலும் இவைகளைக் கூறுவான்.—எ-று. (௬௯)

[கிருதார்த்தனுயினேனுதலால் எனக்கு மீண்டுபதேசத்தினபேட்சை யின்றென்னு மபிப்பிராயத்தைக் கூறுகின்ருன்.]

**வையமுழு துண்டதிரு வாய்மலர் திறந்திட்**
**டுய்யவடி யேன்முனுரை செய்தவுரை யாலே**
**யையமொடு மோகமற விட்டெனறி வுற்றேன்**
**செய்வதினி யுன்றனரு ளின்செயல்க ளன்றே.**

(இ-ள்.) வையம் முழுது உண்ட = பூமிமுழுதையுந்திருவமுது செய்த—திரு வாய் மலர் திறந்திட்டு=உமது திருவாக்கைத்திறந்து—

அடியேன் உய்ய=நாயடியேன் பிழைத்தற்பொருட்டு — முன் உரை
செய்த=முன்னே கிருபையினாலருளிச்செய்த — உரையாலே=கீதா
சாஸ்திரத்தினாலே — ஐயமொடு மோகம் அற விட்டு = சர்வசமுசயங்
களும், சர்வவிபர்யயங்களும் நீங்கும்படி ஒழித்து—என் அறிவுற்றேன்
=ஆன்மஞானரூபமான எனது ஸ்மிருதியும் அடையப்பெற்றேன்.—
இனிச் செய்வது=இனி (எனது ஜீவனமுள்ளபரியந்தம்) யான் செய்
யாநிற்பது—உன்தன் அருளின் செயல்கள் அன்றே=உமது ஆக்ஞை
யின் பரிபாலனமன்றே.—எ-று. (௬௰)

[அருச்சுனன் மீண்டும் ஸ்ரீ பகவானது ஸ்துதிபூர்வகமாகத் தன
தநுபவத்தையும், தனது உடன்பாட்டினையும் மூன்றுசெய்யுட்களால்
கூறுகின்றான்.]

பையரவி லேயினிது பள்ளியமர் வோனே
வையமுமிவ் வையமதின் மன்னுயிர்க ளியாவுஞ்
செய்யும்வகை யுற்றது சிதைத்தலது தானும்
மெய்தெரியி னீமுன்விளை யாடும்வகை யன்றே.

(இ-ள்.) பை அரவிலே=படத்தையுடைய ஆதிசேஷன்மீது—
இனிது பள்ளி அமர்வோனே=சந்தோஷமாக அறிதுயிலமராநிற்கும்
ஸ்ரீ பகவானே—நீ முன்=நீர் அநாதிகாலந்தொடங்கி— வையமும்=
உலகங்களையும்,—இவ்வையமதில் மன் உயிர்கள் யாவும் = இவ்வுலகங்
களில் நிலைபேறுடைய பிரமாமுதல், ஸ்தம்பபரியந்தமான பிராணிக
ளனைத்தையும்—செய்யும் வகை உற்றது=சிருஷ்டிப்பதும்,—சிதைத்
தல் அதுதானும்=சம்மரிப்பதும் (ஆகிய இவற்றை)—மெய்தெரியில்=
உண்மையாக ஆராயின்—விளையாடும் வகை அன்றே=வினோதிக்குந்
தன்மையேயல்லவா.—எ-று. (௬௧)

அணித்தகைய சோதியம லாவுனரு ளாலே
கணித்தலரி தாயபிற விக்கடல் கடந்தேன்
பிணித்தபெரு மாயைமயல் கெட்டது பிரானே
பணித்தபணி யல்லது செயத்தகுவ துண்டோ.

(இ-ள்.) அணித் தகைய சோதி=அழகாகிய பெருமையுடைய
சோதியே,—அமலா=நிர்மலரூபரே—உன் அருளாலே=உமது கிரு



பையினாலே—கணித்தல் அரிது ஆய=அளவிடுதற்கரிதாகிய—பிறவிக்
கடல் கடந்தேன்=ஜநநமாகிய சமுத்திரத்தை நீந்தினேன்.—பிணித்த=
(என்னை அநாதிகாலந்தொடங்கிப்) பந்தித்துவந்த—பெருமாயை மயல்
கெட்டது=மஹாமாயாமோகமானது நஷ்டமாய்விட்டது;—பிரானே
=(எனது) கர்த்தாவே—பணித்த பணி அல்லது = தேவரீர் ஆக்ஞா
பித்த ஆக்ஞையையல்லாமல் — செயத்தகுவது உண்டோ = (வேறே
எனக்குச்) செய்யத்தக்கதுண்டோ? (இல்லை.)—எ-று. (௬௨)

[வேறு.]

பிணித்தபிறவிப் பெருந்தளையைப் பெயர்த்தென்பே
ரும் பேதைமைநோயைத், தணித்தவரசே யெனக்குத்தான்
றகுமேயாகத் தகாதாகத், துணித்ததிறல்வான் போரினையே
தொடங்குகென்று நீயிங்குப், பணித்தபணியான் செய்வனெ
னப் பார்த்தனவனு முடன்பட்டான்.

(இ-ள்.) பிணித்த பிறவிப் பெரும் தளையைப் பெயர்த்து=
(அநாதிகாலந்தொடங்கி என்னைப்) பந்தித்த ஜநநமாகிய பெரிய விலங்
கினைத் தறித்தொழித்து—என் பெரும் பேதைமை நோயை=எனது
கனமான அறியாமையாகியவியாதியை—தணித்த அரசே=குறைத்த
இறைவனே — எனக்குத்தான்—தகுமே ஆகத் தகாது ஆக=தக்கதாக
(அல்லது) தகாததாக—துணித்த திறல் வான்போரினையே=(சுருதிக
ளானவை) நிச்சயித்த வலியபெருமைபொருந்திய யுத்தத்தை—தொடங்
குக என்று=ஆரம்பிப்பாயென்று—நீ இங்குப் பணித்த பணி=தேவரீர்
இங்கே ஆக்ஞாபித்த ஆக்ஞையையே—யான் செய்வன் என = நான்
செய்யக்கடவேனென்று — பார்த்தனவனும் உடன்பட்டான் = அருச்
சுனனுஞ் சம்மதித்தான்.—எ-று.

துணிந்த எ-து, 'துணித்த' என எதுகைநோக்கி வலித்துநின்றது.

[சஞ்சயரே நீர் தூரதேசத்திலுள்ள கிருஷ்ணார்ச்சுனசம்வாதத்தை
ஈண்டிருந்து எப்படியறிந்தீரென்னுந் திருதராஷ்டிரர் சங்கைக்குச் சஞ்
சயர் கூறுகின்றார்.]

[வேறு.]

மாதவனுந் தனஞ்சயனுந் தங்களிலே மகிழ்ந்துரைத்த
வோதரிய பொருளினைநீ யுணர்ந்தவா றெங்ஙனெனில்

வேதவியா தன்னுடைய மெய்யருளை மிகவுடையே
னாதலினு லறிந்தனன்வே றறியலாம் வகையுண்டோ.

(இ-ள்.) மாதவனும் தனஞ்சயனும்=ஸ்ரீ கிருஷ்ணபகவானும், அருச்சுனனும்—தங்களிலே மகிழ்ந்து உரைத்த = ஒருவரிடத்தொருவர் சந்தோஷித்துச்சொல்லிய—ஓத அரிய பொருளினை=பரமகுய்யமான யோகத்தை—நீ உணர்ந்த ஆறு=சஞ்சயரோ நீர் அறிந்தவழி—எங்ஙன் எனில்=எப்படியென்று திருதராஷ்டிரரோ நீர் கேட்பீராகில்—வேதவியாதன்னுடைய=ஸ்ரீ வியாசபகவானுடைய—மெய் அருளை =மெய்ம்மையாகிய பிரசாதத்தை—மிக உடையேன்=மிகவும் யானுடையேன்;—ஆதலினுல்=அக்காரணத்தினுல், — அறிந்தனன்= (அக்கிருஷ்ணார்ச்சுன சம்வாதத்தை ஈண்டிருந்தே) உணர்ந்தனன்.—வேறு அறியல் ஆம் வகை உண்டோ = அந்த வியாசபகவானுடைய பிரசாதமன்றி வேறே அறியும்படியான ஏது எனக்குண்டோ? (இல்லை.)—எ-று.

இங்ஙனங் கூறியவாற்றுல், சஞ்சயர் தமது மஹாபாக்கியத்தைக் குறிப்பித்தனர். (சுசு)

[இப்போது சஞ்சயர் அந்தச் சம்வாதத்தின் ஸ்மரணையினுற்சநியா நின்ற சந்தோஷத்தைக் கூறுகின்ருர்.]

அப்பொருளை நினைதோறு மற்புதமா மகமகிழ்வு
மெய்ப்புளகும் வருமவன்ரு னிருக்கின்ற வகைவிரித்த
வொப்பரிய திருக்கோல முணர்தோறு முணர்தோறுஞ்
செப்பரிய பெருங்களிப்பென் சிந்தையுளே திகழுமால்.

(இ - ள்.) அப்பொருளை நினைதோறும் = அந்தப்புண்ணியரூபமான அற்புதசம்வாதத்தை நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும்—அற்புதம்ஆம் அகம்மகிழ்வும்=அதிசயமாகியஅகமகிழ்ச்சியும்,—மெய்ப்புளகும் வரும் = சரீரப்புளகமும் அடிக்கடிவருகின்றன.—[தியானஞ்செய்தற்பொருட்டு அருச்சுனனுக்குக்காட்டிய சகுணரூபமான விசுவரூபத்தை ஸ்மரணஞ் செய்பவராய்ச் சஞ்சயர் திருதராஷ்டிரரை நோக்கிச் சொல்லுகின்ருர் ] அவன் தான் இருக்கின்ற வகை=அக்கிருஷ்ணபகவான் தான் எல்லாமாகியிருக்கின்ற தன்மையை—விரித்த= அருச்சுனனுக்கு விரித்துக்காட்டிய—ஒப்பு அரிய திருக்கோலம்=அதியற்புதமான விசுவரூபத்தை—உணர்தோறும் உணர்தோறும்=நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும்—செப்ப அரிய பெருங்களிப்பு=சொல்லுதற்கரிய மகாசந்தோஷமானது என் சிந்தையுளே=(அடிக்கடி)எனது சித்தத்தின்கண்ணே—திகழும்=விளங்குகின்றது.—எ-று.



(சுடு)

ஆல்-அசைநிலை.

[திருதராஷ்டிரரோ நீர் உம்முடைய புத்திரர்க்கு விஜயமுதலியவை உளவாகுமென்னும் ஆசையொழிந்து பாண்டவரோடுகூடச் சேர்ந்துவிடு மென்னும்பொருளை இப்போது சஞ்சயர் திருதராட்டிரரை நோக்கிச் சொல்லுகின்ருர்.]

எஞ்சலிலாப் பொருளனைத்து மிப்படியே புகுந்ததெனச்
சஞ்சயனன் றெடுத்துரைத்து நூற்றுவர்க்குந் தாதையோய்
வஞ்சனையே கண்ணுக வாழ்கின்ற மற்றவர்க்குப்
பஞ்சவரோ வலியவரென் றிவ்வண்ணம் பகர்வுற்ருன்.

(இ-ள்) எஞ்சல் இலாப் பொருள் அனைத்தும் = குறைவற்ற கிருஷ்ணார்ச்சுனசம்வாதரூபமான கீதையின் அர்த்தங்கண் முழுதும்—இப்படியே புகுந்தது என=முன்சொன்ன வியாசபகவானது பிரசாதத்தினுலேயேஎனக்கறியும்படி வந்தனவென்று —சஞ்சயன் அன்று எடுத்து உரைத்து=சஞ்சயர் அப்பொழுதெடுத்துபதேசித்து—நூற்றுவர்க்கும் தாதையோய்=துரியோதனன்முதலிய நூறுபுத்திரர்க்கும் பிதாவாகிய திருதராஷ்டிரரோ (கேளும்:)—வஞ்சனையே கண்ணுக வாழ்கின்ற = பிறரைவஞ்சிக்கும் வஞ்சனையே தமக்குக் கண்களாக வாழாநின்ற — மற்றவர்க்கு = உமது புத்திரராகிய துரியோதனுதியரைப் பார்க்கிலும்—பஞ்சவரோ வலியவர் என்று=பாண்டுமக்களே வலியவராமென்றுசொல்லி--இவ்வண்ணம் பகர்வுற்ருன்=பின்னும் இந்தப் பிரகாரஞ் சொல்லத்தொடங்கினுர்.—எ-று. (சுசு)

[இதுவுமது.]

[வேறு.]

திருவற நீதி செயம்புக ழெல்லா
மருவரு மாயைசெய் மாதவன் வாய்மை

சருமம் விடாத தனஞ்சய னென்னு
மிருவரு நின்ற விடத்தன வென்றான்.

(இ-ள்.) திரு = இராச்சியலெட்சுமியும்,—அறம் = தர்மமும்,—நீதி = நியாயமும்,—செயம் = சத்துருஜயமும்,—புகழ் = கீர்த்தியும்—எல்லாம் = (ஆகிய) இவையனைத்தும்—மருவ அரும் மாயை செய் = பொருந்துதற்கரிய மாயையைப்பண்ணும்—மாதவன் = ஸ்ரீ கிருஷ்ண பகவானும்,—வாய்மை தருமம்விடாத = சத்தியத்தையும், தர்மத்தையும் விட்டுநீங்காத—தனஞ்சயன் = அருச்சுனனும்—என்னும் இருவரும் = என்ற இருவரும்—நின்ற இடத்தன = நிற்கின்ற பட்சத்திலுள்ளனவாம் (என்பது எனது நிச்சயம்)—என்றான் = என்று திருதராஷ்டிரர்க்குச் சஞ்சயர் அருளிச்செய்தனர்.—எ-று.

எனது நிச்சயம் எதார்த்தமே யாதலால், நீர் உமது புத்திரர்க்கு விஜயமுண்டாகுமென்னும் ஆசையைப் பரித்தியாகஞ்செய்து உதிஷ்டிரர்முதலிய பாண்டவர்களோடுகூடச் சேர்வீராகவென்பது கருத்து.

[மொழிபெயர்த்தவாசிரியர் முடிந்ததை முடிக்கின்றார்.]

என்ற பொருட்டிற மிப்படி யேயாக்
குன்ற மெடுத்தருள் கொண்டல் பணிப்பான்
வென்ற புலத்து வியாதன் விரிப்பா
னின்ற வருக்கிது நேர்பட வற்றோ.

(இ-ள்.) என்ற பொருள் திறம் = என்று யான் மொழிபெயர்த்த கீதார்த்த ரகசியங்களை—இப்படி = இந்தச் சோபானக்கிரமமாக—ஏயா = (ஒருவராலெடுக்க) இயையாத—குன்றம் எடுத்து அருள்கொண்டல் பணிப்பான் = கோவர்த்தனகிரியைக் குடையாகவெடுத்து (க்கோக்களையும், கோபாலர்களையும்) இரட்சித்தமேகவண்ணரான ஸ்ரீ பகவானே உபதேசிக்கவல்லவர்;—வென்ற புலத்து வியாதன் விரிப்பான் = ஜிதேந்திரியராகிய ஸ்ரீ வியாசபகவானே (பின்னதைச் சுலோகரூபத்தால்) விளக்கவல்லவர்;—நின்றவருக்கு = அவரிருவரொழிந்த மற்றவர்க்கு—இது = (இரகசியங்களுள்ளே, அதிரகசியமான) இக்கீதையானது—நேர்படவற்றோ = செம்மையாகமொழிபெயர்க்கவும், பாடவுங் கூடுமோ? (கூடா.)—எ-று.



சர்வக்ஞசிகாமணியாகிய ஸ்ரீ பகவானாலும், அவரது ஆவிர்ப்பாவமான ஸ்ரீ வியாசராலும் அருளிச்செய்தகீதையை மொழிபெயர்க்க வல்லவன் யானோவென்று அவையடக்கத்தோடு அதன் அருமை, பெருமைதொன்றக் கூறினதாம். (கூஅ)

[ஆனால், நீ எந்தவலிகொண்டு மொழிபெயர்த்தனையென்னுமதற்கு, உ-செய்யுட்களாற் சமாதானங் கூறுகின்றார்.]

வேதநூல்களின் முடிவினை வியாதனிற் பின்னா
ளோதமாக்கட லுலகிலுண் டாக்கிய வுரவோன்
கோதிலாநெறி யுணர்ந்தகோ விந்தமா முனிவன்
பாததாமரை பற்றிவீட் டின்பமே படைத்தான்.

(இ-ள்.) வேத நூல்களின் முடிவினை = வேதசாஸ்திரங்களினந்தத்தை—வியாதனின் பின் நாள் = ஸ்ரீ வியாசபகவானுக்குப் பிற்காலத்து—ஓதம் மாக் கடல் உலகில் = அலையையுடைய பெருமையாகிய சமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகின் கண்ணே—உண்டாக்கிய உரவோன் = (பாஷியரூபமான வியாக்கியானத்தால் விருத்தியாகும்படி) பண்ணிய சர்வக்ஞர், அல்லது சமர்த்தரானவர்—கோது இலா நெறி உணர்ந்த = குற்றமற்ற சம்பிரதாயநெறியை அறிந்துயர்ந்த—கோவிந்தமாமுனிவன் = கோவிந்தயோகீந்திரருடைய—பாத தாமரை பற்றி = பாதாம்போருகத்தைச் சம்பிரதாயத்தை விளக்குதற்பொருட்டுப் பிடித்து—வீட்டின்பமே படைத்தான் = நிரதிசயாநந்தரூபமானமோட்சசுகத்தை (யாவர்க்கும்) உண்டாக்கிய பூஜ்யசங்கரபகவத்பாதாசாரியர்.—எ-று. (கூகூ)

[வேறு.]

ஆற்றியல் வழுவிய புலன்க ளைந்தையும்
பாற்றிய சங்கர பகவற் பாதனென்
றேற்றிய பெயரினா னருளி னாலியான்
சாற்றின னிப்பெருந் தரும நூலையே.

(இ-ள்.) ஆற்று இயல் வழுவிய = வேதமார்க்கத்தினின்றுந் தவறிய—புலன்கள் ஐந்தையும் = (என்னுடைய) இந்திரியங்களைந்தனையும்—பாற்றிய = (பாஷியஞானத்தால்) நிரோதமாகும்படிபண்ணிய—

சங்கரபகவத்பாதனென்று = சங்கரபகவற்பாதாசாரியனென்று — எற்றிய பெயரினன் அருளினால்=(ஆன்றோரால்) உயர்த்திச் சொல்லப்பட்ட திருநாமமுடைய குருவினது கிருபையினால்—யான்=யானும்—இப்பெரும் தருமநூலைச் சாற்றினன்=பெரிதாகிய தர்மரூபமான இக்கீதாசாஸ்திரத்தை மொழிபெயர்த்தேன்.—எ-று.

ஏ-அசைநிலை. கேட்பவர்க்குப் புண்ணியத்தை யுண்டாக்குவதால், ‘தர்மநூல்’ என்றார்.

சங்கரபகவற்பாதாசாரியனென்னுங் குருவின் அருள்வலிகொண்டு இந்நூலை மொழிபெயர்த்தேனன்றி எனது கல்விவலி, புத்திவலி கொண்டு மொழிபெயர்த்திலனென்பது கருத்து. (எ0)

## கஅ-வது சஞ்சேபவத்தியாயம்

முற்றிற்று.

---

ஆக அத்தியாயம் கஅ-க்குத் திருவிருத்தம்-ருசரு.



பரமார்த்ததரிசனமென்னும்

## பகவற்கீதைமூலமும்,

கூடார்த்ததீபிகையென்னும்

அதன் உரையும்

முற்றின.



உ

கணபதிதுணை.

# பாட்டுமுதற்குறிப்பகராதி.

---

## பாட்டுமுதற்குறிப்பகராதி

முற்றிற்று.



உ

கணபதிதுணை.

# பரிசோதனப் பத்திரம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| கச | ,, | ந | சென்ற | சென்று |
| ஷை | ,, | நஉ | ஸ்ரீ க | ஸ்ரீபக |
| கஅ | ,, | க0 | சர்ம | தர்ம |
| உக | ,, | உக | அசர்ம | அதர்ம |
| உந | ,, | உஉ | வரோ | வரோ |
| ஷை | ,, | கந | ளாகிப | ளாகிய |
| ந0 | ,, | உஎ | தனித் | தணித் |
| நந | ,, | கஎ | லாரா | லாரா |
| நஎ | ,, | க | வா ; | வாம். |
| நஅ | ,, | அ | உழவ | உழவா |
| ஷை | ,, | உஎ | அ த்து | அசத்து |
| ஷை | ,, | உஅ | ஓாதி | ஓாதி |
| ச0 | ,, | உகூ | சீதோ | (சீதோ |
| சஉ | ,, | நச | அவித் | (அவித் |
| சந | ,, | கச | னவனே | னனே |
| சஎ | ,, | உரு | ள ல் | ளால் |
| ஷை | ,, | உசு | அ வா | அவ்வா |
| ஷை | ,, | ஷை | ெ ரிங் | தெரிங் |
| ஷை | ,, | உகூ | யான | யான் |
| ஷை | ,, | நந | பி ாணி | பிராணி |
| ருந | ,, | க | சித் சு | சித்தசுத் |
| ருஎ | ,, | உ | மயே ாக | மயோக |
| ஷை | ,, | ஷை | யோரக | யோக |
| ஷை | ,, | கஅ | லொடு | உடலொடு |
| ஷை | ,, | ஷை | கததோ | கத்தோ |
| அரு | ,, | நக | யாநற் | யாநிற் |
| கூரு | ,, | ஷை | டிககூ | டிக்கூ |
| க0கூ | ,, | நஉ | சூபமோ | ரூபமோ |
| கநஎ | ,, | க | ெ ய்ய | செய்ய |
| கசக | ,, | ந | னெறுன் | னென்று |
| கசசு | ,, | ஷை | ரா ன | ராநின் |



| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| கரு0 | ,, | உசு | சி ார் | சிடார் |
| ஷை | ,, | உஅ | ததிக | த்திக |
| கருசு | ,, | கூ | பிரததி | பிரத்தி |
| கசுக | ,, | கஅ | மொன் | மென் |
| கசுச | ,, | நக | ந்தர்க் | ந்தர்க |
| கசுஅ | ,, | ச | இரஜா | இராஜா |
| கஅக | ,, | உச | ஜிகம் | ஜிதம் |
| ஷை | ,, | உஎ | வத ல் | வதால் |
| ககூஉ | ,, | கசு | ஆபாச | ஆயாச |
| உருஎ | ,, | உசு | உபசா | உபகா |
| ஷை | ,, | நஉ | வாணீ | வாணி |
| உசுந | ,, | நசு | ❋ பராஜயங் | பின்பக்கம் பார்க்க |
| உஅஉ | ,, | க | அபரர் | அபரா |
| உஅந | ,, | உந | பிராணிகள்) | (பிராணிகள்) |
| உகூஎ | ,, | உஉ | நசு0 | நரு0 |
| நகஅ | ,, | ச | உள்ளே | உளே |
| நஉந | ,, | நக | ஸ்ரீபக | [ஸ்ரீபக |
| நஉச | ,, | கஅ | நகூக | நஅக |
| நநச | ,, | எ | விலகு | விலங்கு |
| நசஅ | ,, | உந | ம கிரி | மாகிரி |
| நருஎ | ,, | உ | நாமங்க | நாமக |
| நசுக | ,, | உகூ | முளளி | முள்ளி |
| நசுரு | ,, | உஎ | யார் | பார் |
| நசுசு | ,, | ந | த்தாதங் | த்தங் |
| ஷை | ,, | நந | எ-ம்— | எ-று. |
| நஎ0 | ,, | கச | இவா | இவ்வா |
| ஷை | ,, | உ0 | ற்ற ர் | ற்றவர் |
| நஎரு | ,, | ந0 | தம்ன | தம்மை |
| நஎஅ | ,, | எ | ருப் ன | ருப்பன |
| ச00 | ,, | நக | பட் ன | பட்டன |
| ச0உ | கஎ | க | மில் | மியல் |
| சககூ | ,, | உச | அரசரு | அரசர் |
| சஉஅ | ,, | எ | பாவர் | யாவர் |
| சநச | ,, | க | பேன் | யேன் |
| சநசு | ,, | உரு | சியு , | சியும், |

பரிசோதனப் பத்திரம் முற்றிற்று.